# கம்ப ராமாயண சாரம்

## தொகுதி 1

பால, அயோத்தியா காண்டங்கள்




*ஆசிரியர் :*

இராவ் சாகிப்

தமிழ்ப் பெருங்கவி முதுபெரும் புலவர்

**வெ. ப. சுப்பிரமணிய முதலியார், G. B. V. C.**

*பதிப்பாசிரியர் :*

இராவ் சாகிப்

**கு. அருணசலக் கவுண்டர்**

**மதுரைத் திரவியம் தாயுமானவர் இந்துக் கல்லூரி**

**திருநெல்வேலி-4.**

# உரிமையுரை

திருப்பனந்தாள் மடத்துத் தலைவர்களாக எழுந்தருளியுள்ள ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத தம்பிரான் சுவாமிகள், தமிழ் வளர்ச்சியின் பொருட்டு, சென்னைப் பல்கலைக் கழகத்தார் வருடந்தோறும் நடத்திவரும் வித்துவான் பரீட்சையில் முதல்வராகத் தேர்பவருக்குப் பரிசாக ஆயிரம் வெண்பொன் அளித்தும், ஆன்றோர் மரபொடு முரணுமல் புதுச் செய்யுள் நூல்களும் புத்துரை நூல்களும் இயற்றுவோர்களுக்கும், ஐரோப்பிய அறிவியல் நூல் மொழிபெயர்ப் பாளர்களுக்கும், காலவரையறையின்றி எப்போதும் பொருளுதவி புரிந்தும், தமிழ் மொழியைப் பேணி வளர்த்துவரும் பெரு வள்ளன்மை கண்டு கழிபெருங் களிகூர்ந்து, சுவாமிகளுக்குத் திடமான உடல் நலமும் தீர்க்காயுளும் அருளும் வண்ணம் எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சி, இந்நூலை உள்ளன்போடு கூடிய வணக்கத்துடன் உரிமையாகச் சமர்ப்பிக்கிறேன்.

வெள்ளகால்
26—6—36

வெ. ப. சுப்பிரமணிய முதலியார்

# வெளியீட்டுரை

வெள்ளகால், இராவ்சாகிப் வெ. ப. சுப்பிரமணிய முதலி யாரவர்கள் ஜி. பி. வி. ஸி. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு மேற் பட்ட காலமாக மதுரைத் தமிழ்ச் சங்கத்துச் செந்தமிழ்ப் பத்திரிகையில் தொடர்ந்து வெளியிட்டுவந்த 'கம்பராமாயண இன்கவித் திரட்'டின் புத்தக வடிவமே 'கம்பராமாயணசாரம்'. கம்பனுடைய இனிய கவிகளைத் தெரிந்தெடுத்துத் தொகுத் துத் தெளிவாக உரைவகுத்தும், ஏனைய செய்யுட்களின் கருத் துக்களைக் கதைத் தொடர்ச்சியிலே அமைத்தும், தமது முது பெரும் புலமையால் முதலியாரவர்கள் ஆக்கித் தந்த இந்த நூல், நமது தலைமுறையிலே தமிழில் வெளியான இலக்கிய ஆராய்ச்சி நூல்களில் அருமையும் பெருமையும் வாய்ந்தது.

முதலியாரவர்கள் இயற்றிய நூல்களையும், சேர்த்து வைத்திருந்த அரிய புத்தகங்களையும் எங்கள் கல்லூரிக்கே உரிமையாக்கித் தந்த அவர்களுடைய அருமை மக்களும் என் னுடைய இனிய நண்பர்களும் ஆன திருவாளர்கள் வெ. சு. பழனியப்ப முதலியார், பி. ஏ. அவர்களையும், வெ. சு. தீர்த்தா ரப்ப முதலியாரவர்களையும் நான் பாராட்டுகிறேன்; இவர் களுடைய பொதுநல உணர்ச்சியை நான் போற்றுகின்றேன். இவர்கள் உதவியால் இன்று அயோத்தியா காண்டம் இரண் டாம் பதிப்பு வெளியாகிறது; யுத்தகாண்டம் முதற்பதிப்பு அச்சிலிருக்கிறது; எஞ்சிய வற்றின் இரண்டாம் பதிப்பும் விரைந்து வெளியிடப்பெறும்.*

கலாசாலை கல்லூரி அனைய கல்வி நிலையங்கள் மாண வர்க்குரிய வெறும்போதனை அல்லது சோதனைக் கூடமாய் இருத்தல் கூடா; பொதுமக்கள் திளைத்தற்குரிய அறிவுச் சுனையாகவும் அமைதல் வேண்டும் என்று, பல ஆண்டுகளா கவே, நான் கல்விப் பணியில் முயன்று வந்திருக்கின்றேன். இந்த என் முயற்சியின் முதற்படியாக, எங்கள் கல்லூரியின் பழைய மாணவரும் தமிழ்ப் பாவலரும் ஆகிய முதலியாரவர் களுடைய நூல்களைக் கல்லூரி வெளியீடாக வெளியிடும் பேறு பெற்றமைக்கு நான் மிகவும் மகிழ்கின்றேன். அவர்கள் புகழ் வாழ்க!

1—3—53,
திருநெல்வேலி.

**எஸ். இராமசாமிக் கோனர்**
அமைச்சர், செயற்குழு,
ம. தி. தா. இந்துக்கல்லூரி

---

தற்போது ஆறு காண்டங்களும் வெளிவந்திருக்கின்றன.*

## பதிப்புரை

'கம்பராமாயண இன்கவித்திரட்டு' என்ற தலைப்பின் கீழ், செந்தமிழ்ப் பத்திரிகையில் 1922-ம் ஆண்டு முதற்கொண்டு இந்தக் கம்பராமாயண சாரம் வெளியிடப்பட்டு வந்தது. (சுந்தர காண்டத்தின் முதற் பகுதி மட்டும் 'பஞ்சாமிர்தம்' 'தமிழர் நேசன்' என்ற பத்திரிகையில் வெளியாயிற்று.) இதன் முதலைந்து காண்டங்களின் முதற் பதிப்பு 15 வருடங்களுக்கு முன் வெளியிடப்பட்டது. முதற் பதிப்பின் பதிப்பு முறையே இரண்டாம் பதிப்பிலும் பின்பற்றப்படுகிறது; அது வருமாறு; பாட்டுக்கள் சீர் பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால், பாட்டுக்களுக்குப் பின் கொண்டுகூட்டுச் சேர்க்கப்பட்டிருப்பதில், வேண்டிய சந்திபிரித்தலும் குறியீடும் அமைந்திருப்பதனால், பாட்டுக்கள் சந்திபிரித்தல் குறியீடுகளின்றிப் பதிப்பிக்கப் பட்டுள்ளன.

கொண்டுகூட்டு என்னும் பகுதியில், சந்திபிரித்தல் குறியீடு செய்தலோடு, பாட்டின் பல பகுதிகளும் பொருளுக்குப் பொருத்தமாக முன் பின்னாகக் கொண்டு கூட்டப்பட்டும், இன்றியமையாத இடைப்பிறவரல்கள் ஆங்காங்கு இணைக்கப் பட்டும் இருக்கின்றன. கொண்டுகூட்டுக்குப் பின்வரும் பொருள் என்ற பகுதியில், பாட்டின் கருத்து விளங்குவதற்கு முக்கியமான பாட்டுப்பகுதிகட்கு மட்டும் உரை எழுதப் பட்டும், அடைமொழிகளில், கருத்துடை அடைமொழிகள் அல்லாதவை போன்ற சாமானியமான பகுதிகள் உரையின்றி விட்டுவிடப்பட்டும் இருக்கின்றன. எழுதப்பட்ட உரை நன்றாகவும் பொருத்தமாகவும் புலப்படும்பொருட்டு, அதில், கொண்டுகூட்டிலுள்ள இன்றியமையாத இடைப்பிறவரல்களோடு வேறு அவசியமான இடைப்பிறவரல்களும் இருதலைப் பிறையுள் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

கொண்டுகூட்டையும் பொருளையும் ஒப்பிட்டுப் பார்த்தால் பாட்டுப் பகுதிகளில் உரை வரையப்பட்ட முக்கியமான பகுதிகள் இவை, உரையெழுதாது விடப்பட்ட சாமானியமான பகுதிகள் இவை என்பதும், இடைப்பிறவரல்களுள் இன்றியமையாதவை இவை, ஏனையவை இவை, என்பதும் புலனாகும். பொருளுக்குப் பின் வரும் குறிப்புப் பகுதியில், முதலாவதாக மேற்கூறிய முக்கியமும் சாமானியமுமான

இரண்டு பகுதிகளிலும் உள்ள அருஞ்சொற்கள், சொற்ளுெடர்கள் ஆகியவைகளின் விளக்கமும், இலக்கணக் குறிப்புகளும், அவற்றின் பின் விசேடவுரைகளும், இறுதியில் பாடபேதங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

குறிப்புக்குப்பின் வரும் கதைத் தொடர்ச்சியில், பாட்டுக்களில் அடங்காத கதையும், இந்நூலின் விரிவஞ்சி விடுக்கப்பட்ட இன்கவிகளின் சாரமும், அடங்கியிருக்கின்றன. பாட்டுக்களுக்கும் கதைத் தொடர்ச்சிகளுக்கும் ஆங்காங்குத் தலைப்புக்கள் சேர்க்கப்பட்டுள்ளன.

மேற்கூறியவாருக, இப்புத்தகத்தில் தலைப்பு, பாட்டு, கொண்டுகூட்டு, பொருள், குறிப்பு, கதைத் தொடர்ச்சி என ஆறு பகுப்புக்கள் உள்ளன. அப்பகுப்புக்களுள் ஒன்றினின்று ஒன்றைப் பார்த்த மாத்திரத்திலேயே பகுத்துத் தெரிந்து கொள்ளும்படி,

தலைப்புக்கள், சிறிய தடித்த எழுத்திலும்,
பாட்டுக்கள், பெரிய கதித்த எழுத்திலும்,
பொருளும் கதைத்தொடர்ச்சியும் பெரிய சாய்வு எழுத்திலும்,
கொண்டுகூட்டும் குறிப்பும் சிறிய சாய்வு எழுத்திலும்,

பதிப்பிக்கப்பட்டிருக்கின்றன. மேற்கோள்களில், முதலில் வருபவை ' ' இந்த ஒற்றை மேற்கோட் குறிகளுக்குள்ளும், அவற்றுள் வரும் இரண்டாம் மேற்கோள்கள் " " இந்த இரட்டை மேற்கோட் குறிகளுக்குள்ளும், அவற்றுள் வரும் மூன்ரும் மேற்கோள்கள் ''' ''' இந்த மும்மை மேற்கோட் குறிகளுக்குள்ளும், அவ்வாறே பின் வருவனவும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

கம்பர் பெருமை, கம்பராமாயணச் சிறப்பு முதலியவை முன்னுரையில் காணப்படும். படல அட்டவணை, பாட்டு முதற் குறிப்பகராதி, முதலியவை இதில் அமைக்கப்பட்டிருக்கின்றன.

1—3—53
ம. தி. தா. இந்துக்கல்லூரி,
திருநெல்வேலி.

கு. அருணசலக் கவுண்டர்

# முகவுரை

தமிழ் நாட்டில் தமிழறிவுடைய யாவரும் தெரிந்து படித்தற்கு இன்றியமையாத நூல்களுள் கம்பராமாயணம் ஒன்று. இந்நாட்டினர் கம்பராமாயணப் பிரசங்கத்தை மிகச் சிறப்பாக மதிக்கின்றனர். இது சுவையினால் தமிழுலகைத் தன் வசப்படுத்தியிருக்கின்றது. இதனை எத்தனை வகையில் ஆராய்ந்து பார்த்தாலும் சலிப்பு உண்டாவதில்லை. அப்படியே கம்பராமாயணத்தின் தொடர்புடைய நூல்கள் எத்தனை வெளிவந்தாலும் அத்தனையும் தமிழ்நாட்டாருடைய ஆதரவுக்கு உரியனவாகும்.

இப்பொழுது நண்பர் இராவ்சாகிப் மகா-ள-ள-ஸ்ரீ வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள், ஜி. பி. வி. ஸி., வெளிப்படுத்தி வருகின்ற கம்பராமாயண சாரம் தமிழ் நாட்டாரால் போற்றிப் படித்து இன்புறற்குரிய சிறந்த நூலாகும். முதலியாரவர்களை நான் பல வருடங்களாக அறிவேன். தமிழ்க் காப்பியங்களிலும் பிரபந்தங்களிலும் ஆங்கில நூல்களிலும் இவர்கள் சிறந்த பயிற்சியுள்ளவர்கள். தமிழில் இனிய வசன நூல்களும் அழகிய கவிகளும் இயற்றும் ஆற்றலுடையவர்கள். பழகுங் காலத்தில் இவர்களுடைய சம்பாஷணைகளினால் எனக்கு உண்டாகும் இன்பம் ஒரு தனி இயல்புடையதாக இருக்கும். தமிழ் நூல்களையும் ஆங்கில நூல்களையும் இடை விடாமற் படித்துப் படித்து அவற்றிலுள்ள சாரத்தை அறிந்து தெளிவாக்கி இவர்கள் சொல்லுவதைக் கேட்கும் ஒவ்வொருவருக்கும், நூல்களில் பேரார்வமும் சுவைகண்டின்புறும் ஆற்றலும் இவர்களுக்கு மிகவுண்டென்பது நன்றாகப் புலப்படும்.

இங்ஙனம் மதிநுட்பமும் பரந்த நூலறிவும் உடைய இவர்கள் இளமை தொடங்கியே கம்பராமாயணத்தைப் படித்துப் படித்து இன்புற்று வருகிறார்கள். அந்நூலை எத்தனையோ முறை ஆழ்ந்து ஆராய்ந்து படித்திருத்தலின் அப்பொழுதப்பொழுது கண்ட அரிய பொருள்களைத் தொகுத்து இப்புத்தகப் பகுதிகளில் வெளியிட்டிருக்கிறார்கள்.

கம்பராமாயணம் முழுவதையும் படித்து இன்புறுவ தென்பது யாவருக்கும் இயலாத காரியம். முதலியாரவர்க ளுடைய கம்பராமாயண சாரமோ எல்லோருக்கும் பயன்படும் முறையில் அமைத்திருக்கிறது. தாம் தேர்ந்தெடுத்துள்ள கவிகளுக்குப் பொழிப்புரையும், கருத்தும், விசேடவுரையும் இந்நூலில் முதலியாரவர்கள் அமைத்திருக்கிறார்கள். கம்ப ராமாயணப் பாடல் முழுவதும் இல்லாவிடினும் கதைத் தொடர்பு அறுதபடி இடையிடையே உள்ள வரலாறுகளை எளிய அழகிய வசன நடையில் எழுதியிருப்பதால் இதனைப் படிப்பவர்களுக்கு ஒருவாறு கம்பராமாயணம் முழுவதிலு முள்ள அமைப்பு விளங்கும்.

பலகாலம் தேர்ந்து தேர்ந்து இன்புற்று வெளியிடப் படுவதாதலின் இப்புத்தகம் முதலியாரவர்களுடைய பலவகை ஆற்றல்களையும் ஆராய்ச்சி முறைகளையும் தெரிவிக்கின்றது.

இதனைத் தமிழ் நாட்டார் படித்து இன்புற்றுப் பார்ப் பார்களாயின் முதலியாரவர்களுடைய பேருழைப்பின் சிறப்பு நன்றாகப் புலப்படுமென்பது திண்ணம். முதலியாரவர்கள் இன்னும் நீண்டகாலம் எல்லா நலங்களோடும் வாழ்ந்து பின்னும் இம்முறையே கம்பராமாயண சாரத்தின் பிற் பகுதிகளையும் வேறு பல நூற்பொருள்களின் சாரத்தையும் வெளியிட்டுத் தமிழ் நாட்டினரை மகிழ்விக்கும்படி செய் தருளும் வண்ணம் அலகிலா விளையாட்டுடைய இறைவன் திருவருளைச் சிந்திக்கின்றேன்.

தியாகராஜ விலாசம்
திருவேட்டீசுரன்பேட்டை,
சென்னை.
28—6—36

இங்ஙனம்,
*வே. சாமிநாதையர்*

# INTRODUCTION

The fame of Rao Sahib V. P. Subramania Mudaliyar reached my ears long before I had the opportunity of making his acquaintance. Some of the most eminent Tamil scholars with whom I had the happiness of being associated bore eloquent testimony to the profound scholarship and spotless character of Mr. Mudaliyar. His published works revealed to me a well-disciplined mind and a personality that responded to all that is noble and lofty in the domain of literature.

It was in the suburbs of the sacred city of Chidambaram that I first had the pleasure of meeting him. I was then the head of the Tamil Department of the Annamalai University, and the Syndicate had invited Mr. Mudaliyar to be the Chairman of the Examination Board of the Tamil Department. Having heard so much of Mr. Mudaliyar, and having read a good many of his published works, I was so anxious to meet him and eagerly looked forward to the day fixed for the meeting of the Board. The thoroughness with which the Chairman attended to his exacting duties and his intellectual virility impressed me greatly. After the meeting of the Board, the Chairman spent a few days in the University, to the immense pleasure of the under-graduates, scholars and teachers of the Tamil Department. The talks given by Mr. Mudaliyar very often centered round Kamban, and Thiruvalluvar, two of the greatest figures in the wide realms of Tamil Literature.

The Kamba-Ramayana Inkavi-thirattu, 'a Compendium of the sweetest songs of Kamba Ramayanam' was serially appearing in the pages of the 'Senthamil' for some years past, and those of us who had read the brilliant interpretation of Kamban given by Mr. Mudaliyar were prepared to discuss the subject and to be introduced to further beauties lying hidden in the majestic verse of the greatest epic poet of Tamil land. The Kamba Ramayanam is so vast, running to over forty thousand lines, and so magnificent that none but those who have spent a lifetime in mastering it could speak of it with authority. Mr. Mudaliyar had attempted

and achieved the stupendous task of mastering Kamban and had brought to bear to the study of Kamban the same energy, earnestness, and thoroughness which he gives even to the minutest task entrusted to him. The result of his extended study and patient research is being published in the 'Senthamil' since 1922. The great work is nearing completion. This book that is now offered to the Tamil public is the first part 'Bala Kandam' of Kamba Ramayana Saram'. As I am writing, I have before me besides the 'Bala Kandam', the 'Ayodhya Kandam', the 'Aranya Kandam', the 'Kishkinda Kandam' and portions of the 'Sundara Kandam'.

As already mentioned, these 'studies' appeared serially in the pages of the 'Senthamil', the official organ of the Madura Tamil Sangam. The Tamil Sangam at Madura continues to preserve in a way the literary traditions associated with the ancient city of the Pandyan monarchs. Some of the most eminent of contemporary Tamil scholars have identified themselves with the work of the Sangam and this learned Society is always jealous of its reputation. The fact that the present work appeared serially in the 'Senthamil' is in itself sufficient testimony to its high standard of excellence.

The most notable among the works already published by Mr. Mudaliyar is the Tamil translation of Milton's Paradise Lost, Book I. The great epic of Milton and the equally great epic of Kamban have many points in common. Both poems immortalize the unconquerable spirit of the respective ages in which they were written. Both poems attempt 'to assert Eternal providence and justify the ways of God to men'. In both, some of the scenes are laid amidst the splendours of Heaven. In Milton's epic the Son of God offers to die in man's stead. In Kamban's epic the great God, who forgot His divinity on hearing the wails of a suffering world walks in the midst of kings, outcastes and recluses as a man among men sharing their joys and sorrows.

The sublime and the heroic in literature naturally appeal to minds that are moulded on high principles and lofty ideals. Herein we find the reason why Mr. Mudaliyar was

attracted to the two great epics of the East and the West. Born of a well-to-do Vellala family of Tinnevelly, Madras Presidency, on the 14th August, 1857, Mr. Subramania Mudaliyar will soon be entering into his eightieth year. Throughout his life, all who came in contact with him have testified to his devotion to duty, nobility of character, generosity and erudition. The Tamil translation of Paradise Lost earned the approbation of the greatest European Tamil scholar, Dr. G. U. Pope. The greatest living Tamil scholar, Pandit Mahamahopadyaya Swaminatha Iyer, has warmly appreciated the writings of Mr. Mudaliyar. The Tamil introduction to the present work is from his gifted pen.

The learned Mahamahopadyaya says, 'Mr. Mudaliyar whom I know for several years is highly learned both in English and Tamil, and possesses the rare ability of writing sweet Tamil prose and beautiful Tamil poems. When I came in contact with him, I noted that his conversation afforded me a rare and unique pleasure. As Mr. Mudaliyar has assiduously applied himself to the study of Tamil and English literary works, all who listened to his lucid expositions became well aware of his abiding interest in literature and his rare abilities of interpretation and appreciation. With keen insight and wide general reading he has applied himself from his younger days to the study of Kamba-Ramayanam and the results of his deep research are now presented in the form of this volume.' Nothing more need be said in the way of commending the book to the Tamil reading public.

In his learned commentary on the Bala-Kandam, Mr. Mudaliyar beautifully discusses the following among several other equally-interesting topics: Kamban's conception of the transcendent aspect of the Supreme Being; the poet's appreciation of the great work of his predecessor, Valmiki; the points of similarity in the poetry of Valmiki, Kalidasa, Valluvar and Kamban; the immanent aspect of the Divine Being; the existence of souls; the greatness of womanhood;

the generosity, valour and wisdom of the inhabitants of Kosala; the magnificence of the city of Ayodhya; the characteristics of true learning; the qualities to be noted in a great ruler of men; the greatness of the sages; the varying aspects of nature; the opulence of the city of Mithila ruled by the Sage-king Janaka; the meeting of the hero and heroine; the course of true love; the greatness of the dynasty of Raghu; the marks of a true Kshatriya; amusements and entertainments; innocent revelry; marriage rites and ceremonies; and Kshatriya prowess. While describing Kosala, Ayodhya, and the kings of the solar race, Kamban gives us the true picture of Chola Nadu and Chola monarchs. Kamba-Ramayanam has thus become a national heritage of the Tamil people.

From the time of its composition, Kamban's immortal epic has captured the heart of the Tamilians. Thirty generations have perused it with pleasure, and countless generations of the future will find in it a source of endless delight. Kamban in not only the greatest Tamil poet, but he does at the same time occupy a very high place, if not the highest, among the galaxy of learned scholars. The popular saying 'கல்வியிற் பெரியன் கம்பன்' is worth noting in this connection. The erudition of Kamban, often makes his poetry difficult of comprehension. It is here that the lucid exposition of Mr. Mudaliyar would greatly assist all students of Kamban's poetry. In conclusion, one can confidently say that this book will open the portals of the wide expanse 'that the deep-browed Kamban ruled as his demesne' to those that have not yet entered into those vast realms, and to the fortunate few who have entered therein, the book will serve as a guide to lead them to spots of fresh delight.

SHIVANANDA VIDYALAYA,
KALLADIUPPODAI,
**BATTICALOA** [Ceylon]
26—6—36

*Swami Vipulananda*

# முன்னுரை *

எப்பொருள் எல்லா உலகுயி ருள்ளும்
இடையினும் புறத்தும்நின் றியக்கும்
அப்பொருள் அறிவித் ததுகம்ப ராமா
யணத்தருங் கவிகளுக் கருத்தம்.

அரசாட்சி † யாக அறைவென் கவியின்பு
அரசாட்சி யின்பின்உயர் வாம்.

எஃதுயர்ந்த காவியமாய் இன்னா டகமுமாம்
அஃதுகம்ப ராமா யணம்.

எக்காலும் எந்நாட்டும் ஏய்கவிகள் தம்முள்எவன்
மிக்கான் அவன்கம்பன் மெய்.

நூல்களெலாம் ஆறுகளா நூற்பொருள்கள் நீர்களாச்
சால்கவின் ஆர் அந்நீர்கள் சார்ந்துறையும்—மால்கடலே
இம்பரா ரெல்லார்க்கும் இன்பம் இனிதூட்டும்
கம்ப ராமாயணமாங் காண்.

கொம்பனுர் தமுள்மால் மார்பார் கோதைபோல் எழில்கூர் மாதும்
உம்பர்ஆர் கோள்கள் தம்முள் உதயன்போல் ஒளிசால் கோளும்
இம்பர்ஆர் மலைகள் தம்முள் இமயம்போல் உயர்ந்த குன்றும்
கம்பரா **மாயணம்**போல் கவின்மிகு நூலும் காணேம்.

## கம்பராமாயணச் சிறப்பு

கம்பராமாயணத்தின் பெருமையை அறியாத தமிழர் இல்லை. அதனில் அடங்கியுள்ள மிக்க அருமையும் இனிமையும் வாய்ந்த கருத்துக்களை அறிந்து ஆனந்திக்கும் பயன் பெறவே, தமிழரல்லாதாரும் தமிழைக்கற்கவேண்டுமென்பது மிகையாகாது.

இவ்வாறு அந்நியபாஷையில் உள்ள இலக்கியங்கள் தம் பாஷையிலே மொழி பெயர்க்கப் பட்டவற்றைப் படித்த மட்டிலே திருப்தியடையாமல், அவ்விலக்கியங்களை நேராக அறிந்து ஆனந்திக்க விரும்பி, அவைகள் எழுதப்பட்டுள்ள மூலமொழிகளைக் கற்றுத் தேறிய அருங்கலை விநோதர் அநேகர் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் உளர். நாகரிகமடைந்த மற்றைத் தேசங்களிலும் அத்தகையார் சிலர் இருக்கின்றனர்.

---

* 'செந்தமிழ்'ப் பத்திரிகையில் வெளியானது; சில வேறுபாடுகளுடன் வெளியிடப்படுகின்றது.

† சிவன் சாட்சி.

இவ்வுலகத்துச் செல்வ மெல்லாவற்றையும் ஒருங்கே அடைந்து சகல போகங்களையும் ஆசைதீர அனுபவிக்கும் ராச பதவியேயன்றி, எல்லாவகையிலும் அந்த ராச பதவியினும் ஏற்றமான இந்திர பதவியுமே கம்பராமாயணம் போலக் கற்றோர்க்கு மனக்களிப்பைத் தரமாட்டாது என்னும் கருத்துப் புலப்பட,

இம்பர் நாட்டிற் செல்வமெல்லாம் எய்திஅரசாண் டிருந்தாலும்
உம்பர்நாட்டிற் கற்பகக்கா ஓங்கும்நீழல் இருந்தாலும்
செம்பொன்மேரு அனையபுயத் திறல்சேர்இராமன் திருக்கதையில்
கம்பநாடன் கவிதையிற்போற் கற்றோர்க்கிதயம் களியாதே

என்று கற்றார் ஒருவர்மனம்கனிந்து கூறியது உபசாரமன்று, உண்மையேயாம் எனக் கற்றாரனைவரும் ஒப்புக்கொள்வர்.

யாதாயினு மொரு காவியத்திலே பற்றுடையோர், அக் காவியத்தின் சிறப்பைப் புலப்படுத்த, அதைவேறு காவியங் களோடு ஒப்பிடாமல், கம்பராமாயணத்தோடு ஒப்பிட்டு, அது கம்பராமாயணத்தினும் சிறந்ததெனப் பாராட்டி முடிவு கட்டுவது வழக்கம். ஒரு பெண்ணின் அழகைச் சிறப்பாகக் கூறுவோன், அப் பெண் இலக்குமியினும் சிறந்த அழகுடையா ளென்பதனால், இலக்குமியே அழகிற் சிறந்தா ளென்னும் உண்மை பாதிக்கப்படாதது போல, கம்ப ராமாயணம் அதனோ டொப்பிடப்பட்டு உயர்த்திக் கூறப் பட்ட எல்லாக் காவியங்களினும் உயர்ந்ததென்பது உண் மையில் மறுக்கப்படவில்லை யென்பது சொல்லவேண்டிய தில்லை.

மலையாள சில்லாவில் கோயில்களில் கம்பராமாயணத் தைப் பிரசங்கித்தற்கு, மானியங்கள் ஏற்பட்டுத் திருவிழாக் காலங்களில் அயல் மொழியினரான மலையாளிகள் கம்ப ராமாயணப் பாட்டுப் பாடிப் பொருள் கூறும் திருப்பணி செய்து வருகின்றார்கள். இந்தப் பெருமை வேறெந்தத்தமிழ் நூலுக்கும் இருப்பதாகத் தெரியவில்லை. இவ்வழக்கம், மலையாளத்தில் சில நூற்றாண்டுகளுக்கு முன் தமிழே தாய் மொழியாய் இருந்த காலத்தில் ஏற்பட்டு, வெகு பிரபலமாய் இருந்திருக்கவேண்டு மென்பதும், அந்தப் பிரபலத்தின் ஆற்றல், அவ்வழக்கத்தைத் தமிழராயிருந்த மலையாளிகளின் தாய்மொழி மலையாளமாக மாறிய பின்னும், நிலைத்திருக்கச் செய்திருக்கின்றது என்பதும் ஊகித்தற் பாலனவாயுள்ளன.

தெலுங்கு சில்லாக்களில் கம்பராமாயணத்திலுள்ள சுந்தரகாண்டம் தெலுங்கெழுத்தில் எழுதப்பட்டுப் பாராயணம் செய்யப்பட்டு வருவதும் கம்பராமாயணச் சிறப்பை வலியுறுத்தும்.

கம்பராமாயணப் பிரசங்கமே தங்கள் ஆயுள் முயற்சியாகக் கொண்டு கம்பராமாயணப் பிரசங்கிகளென்ற பெயர் வகித்த புலவர் பெருமக்கள் ஒவ்வொரு தலைமுறையிலும் பலர் பல இடங்களில் இருந்து வந்திருப்பது, வேறெந்த நூலுக்குமில்லாத தனிச் சிறப்புடையது கம்பராமாயணமென்பதை இறுதியாகவும் உறுதியாகவும் நிலைநாட்டுகின்றது.

உலகத்துப் பல பிரபல மொழிகளில் உள்ள மிகச் சிறந்த காவியங்களுள் ஒன்று வான்மீக ராமாயணமென்பர். வான்மீகி முனிவரது 'உரையின்படி நான் தமிழ்ப்பாவினால் உணர்த்திய' தென்று கம்பர் வான்மீகத்தின் வழி நூலாக இயற்றிய ராமாயணம் அழகிலே யன்றி* அளவிலும் வான்மீகத்தினும் சிறந்து விளங்குகின்றதென்று இரண்டு நூல்களையும் ஒப்பு நோக்கி ஆராய்ந்தோர் சிலர் கூறுவர். இதனை வடமொழி தென்மொழி இரண்டினும் வல்லார் எல்லாரும் ஒப்புக்கொள்ளினும், வான்மீகத்துக்கு இழுக்கு அன்று; பெருமையேயாம்; தந்தையினும் மகன் சிறப்புடையனாதல், தந்தையின் சிறப்பைக் குறையாது, (அத்தகைய புத்திரனுக்குப் பிதாவாம் பெருமையால்) அதிகப்படுத்துவதாமாதலால். தந்தை யின்றேல், மகன் இன்மை போல, வான்மீக மின்றேல் கம்பராமாயணமு மின்றாம். தக்கவன் ஒருவன் அடைந்த பிதிராச்சிதச் சொத்து, அவனாற் கழித்தற்பாலன கழிக்கப்பட்டும், சீர்திருத்தற்குரியன சீர்திருத்தப் பெற்றும், நூதனமாகச் சேர்க்கத்தக்கன சேர்ப்புண்டும், எல்லா வகைகளிலும் மேன்மையுற்று விளங்குவது போல, முதல் நூலாகிய வான்மீகத்தினும் வழிநூலாகிய கம்பராமாயணம் சிறந்து விளங்குகின்றது. இவ்வாறு கூட்டவும் குறைக்கவும் மாற்றவும் பெற்ற பகுதிகளிலே, பல நூலினிமையை அதிகப் படுத்துவனவாம்; வேறு பல வான்மீகர் கால நாகரிகத்துக்கு இயைய அவர் கூறியவைகள் கம்பர் கால நாகரிகத்துக்கு ஏலாதன வானதனால், பிந்திய காலத்திற்குப் பொருத்தமாக மாற்றப் பெற்றனவாம்.

* வான்மீகம் 24000 சுலோகங்களை யுடையது; கம்பராமாயணம் 12000 விருத்தங்கள் உள்ளது; ஆயினும் சுலோகங்களின் குறுமையையும் விருத்தங்களின் நெடுமையையும் நோக்கக் கம்பராமாயணமே அளவிற் பெரிதாம்.

தமிழிலே கம்பராமாயணம் போல ஆங்கிலத்திலே, சிறந்த பாரகாவியமாகிய சுவர்க்க நீக்கத்தை இயற்றிய மிலிட்டனுரது சரித்திரத்தை எழுதிய ஓர் ஆங்கில ஆசிரியர், உலக இலக்கியக் காட்சிச்சாலை ஒன்று நியமித்து அச்சாலையில் ஒவ்வொரு மொழியாளரும் தத்தம் மொழியில் இரண்டு இலக்கியப் புத்தகங்களே கொண்டுவந்து வைக்கலாமென நிபந்தனை ஏற்படுத்தினுல், ஆங்கிலேயர்கள் அங்கே, ஷேக்ஸ்பியரது புத்தகத்தையும் மிலிட்டனுரது புத்தகத்தை யுமே காட்சிப் பொருள்களாக வைப்பரென்று கூறியுள்ளார். அப்படிப்பட்ட காட்சிச் சாலையில், தமிழ் மக்கள் கொண்டு வைத்தற்குரிய இரண்டு நூல்கள் குறளும், கம்பராமாயண முமே யென்பது தெளிவாம்.

ஒரு பெரு மாளிகையை அதன் பல பகுதிகளே நோக்கி மதிப்பதனேடு, முழுமையாகப் பார்த்தும் மதிப்பிடுதல்போல, கம்பராமாயண காவியத்தைப் பகுதி பகுதியாக நோக்கிக் கண்ட வனப்புக்களேயும், முழுமையாக நோக்கிக் கண்ட அழகையும் பல மொழிப் புலமையுடைய பாரிஸ்டர் வ. வெ. சு. அய்யர், 'பால பாரதி' என்ற மாதாந்தரப் பத்திரிகையில் மதிப்பிட்டு வித்தரித்தெழுதியுள்ளார். அவர், உலக மகா காவியங்களின் வரிசையில் கம்பராமாயணத்தின் தானத்தை நிர்ணயிக்கப் புகுந்து, பல பாஷா காவியங்களின் மூலத்தை யேனும் மொழிபெயர்ப்பையேனும் படித்து ஆராய்ந்து, அவற்ருேடு கம்பராமாயணத்தை முழுமையாக ஒப்பிட்டும், அதனில் பல பாகங்களே அவ்வப்பாகங்களின் விஷயங்களே வருணிக்கும் மற்றைக் காவியங்களின் பாகங்களோடு ஒப்பிட்டும் நோக்கி, கம்பராமாயண பாகங்கள் இன்னின் னவை இன்னின்ன பிற காவிய பாகங்களினும் சிறந்தவை, இன்னின்னவை குறைந்தவை யென எடுத்துக் காட்டி, கம்பராமாயணம் உயர்ந்த உலக காவியங்க ளெல்லா வற்றினும் உயர்ந்ததென முடிவு செய்திருக்கின்ருர்.

கங்கையாறு தோன்றியபின் வேறுள்ள ஆறெல்லாம் மேம்பாடிழந்ததுபோல, சீதை தோன்றியபின் ஏனைய அழகிய மாதரனை வரும் அழகிழந்தார்கள் * என்று கம்பர் கூறியவாறு, கம்பராமாயணம் பாடப்பெற்றபின் மற்றெல்லா நூல்களும் சிறப்பற்றனவாயின என்னலாம்.

---

கணங்குழையாள் எழுந்ததற்பின் கதிர்வானிற் கங்கையெனும்
அணங்கிழியப் பொலிவிழந்த ஆறெத்தார் வேறுற்ருர்.—கார்முகப்படலம்.

அவர்,'ஒவ்வோ ருறுப்புச் சிறந்த அழகுடையதாகப் பெற்றவர் மற்றைய வனப்பு மிக்க மாதர்; அவயவம் அனைத்தும் உத்தம அழகு ஒருங்கு நிரம்பப் பெற்றவள் சீதை ஒருத்தியே'† என்றவாறு, ஏனைய நூல்களெல்லாவற்றிலும் சில சில பகுதிகளே சிறந்தனவாயிருக்க, எல்லாப் பகுதிகளும் ஏற்றமுடையனவாகவுள்ளது கம்பராமாயண மொன்றே யென்று கூறலும் ஆம்.

எந்தக்காவியம், தன்னைப் படித்து இன்புறப் பெருராய்த் தான் தோன்றுமுன் இறந்த காவிய ரசிகரைக் காட்டிலும் தன்னை அறிந்து ஆனந்திப்பாராய்த்தான் தோன்றிய பின் வாழப்பெற்ற காவிய ரசிகர் பாக்கியசாலிகள் என்னும்படி எல்லாவகை வனப்புக்களும் மலிந்து சிறந்து விளங்குகின்றதோ, அந்தக் காவியம் கம்பராமாயணமே யாம்.

கம்பர், ஏகம்பவாண முதலியாரது புகழை வருணிக்குமிடத்து 'வாணன் புகழ்க்கெல்லை வாழ்த்துவோர் நாளெல்லை' என்றபடி, அவர் பாடிய ராமாயணச் சிறப்புக்கு எல்லை, அதனை எடுத்துரைப்போர் சொல்வன்மையின் எல்லையே. அச்சிறப்பை உரைப்பவர் எத்துணைச் சொல்லாற்றலுடையாராயினும், அவர் அதனை உரைக்க உரைக்க, அது வளராநின்று அவர் 'உரைகுறுக நிமிர்'* கின்ற இயல்புடையதாய் ஒருவராலும் முற்றக்கூற முடியாததாயுள்ளது. உலகத்துப் பெருமலைகளெல்லாவற்றினும் பெரிதாய் உயர்ந்ததாய்ப் பொன்மயமா யொளிமிகுந்த தென்று சிறப்பித்துக் கூறப்பட்ட மேருமலைபோலப் பெருங் காவியங்களெல்லாவற்றிலும் பெரிதாய் ரசமயமாய் இனிமை மிகுந்தது கம்பராமாயணமே யாம். அதன் சிறப்பு இவ்வாறிருத்தலானன்றே, 'கம்பர் கவிச் சக்கரவர்த்தி' என்றும் 'கல்வியிற்பெரியன் கம்பன்' என்றும் ஆன்ரோர் நன்காராய்ந்து துணிந்து கூறினர்.

அவர், வானரசேனைப் பெருமையை விளக்கக் கூறிய 'கடல் கண்டோமென்பர் யாவரே முடிவுறக் கண்டார்?' † என்றதையே நாமும் அவர் நூலின் பெருமையைப் புலப்படுத்தக் கூறுதலன்றி வேறு கூறுதற்கு யாதும் இல்லை.

கடவுள் சிருட்டியாகிய பிரபஞ்சம் போலக் கம்பர் சிருட்டியாகிய கம்பராமாயணமும் நுணுகி நுணுகி நோக்குந்தோறும் நோக்குந்தோறும் நூதன நூதனமான வனப்புக்களும் உண்மைகளும் புலப்படுத்தி மேலும் மேலும் விளங்குவதாய் வியப்பும் நயப்பும் விளைப்பதாயுள்ளது.

---

† உழைகுலாம் நயனத் தார்மாட் டொன்ருென்றே விரும்பற்கொத்தது
அழகெலாம் ஒருங்கே கண்டால் யாவரே ஆற்றவல்லார். —கோலங்காண்படலம்.

*கம்பராமாயணம், பாலகாண்டம், குலமுறை கிளத்துப்படலம், 4

† தானை காண் படலம், 34.

## கம்பர் பெருமை

தமிழ்க் கவிஞருள்ளே அவரவர் காலத்தவரால் கவிச் சக்கரவர்த்தியெனப் பட்டப்பெயர் பெற்ருர், கம்பர்போலச் செயங்கொண்டாரும் ஒட்டக்கூத்தருமாவர். ஆயின், காலக் குறிப்பு அல்லது வேறு குறிப்பின்றி வெறுமனே கவிச்சக்கர வர்த்தியென்ருல், அது கம்பரையே குறிப்பதும், 'கல்வியிற் பெரியவன்' என்பது கம்பர் காலந்தொட்டுக் கம்பருக்கே வழங்கிவருவதும் அவர் எல்லாக் காலத்துமுள்ள கவிஞர் கற்ருர் என்ற இரு திறத்தாருள்ளும் மிக்காரென்பதை நிலை நாட்டும். 'தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயஞர்', 'தெய்வப் புலமைக் கம்பநாட்டாழ்வார்'* என வேறெப்புல வர்க்கு மில்லாத தெய்வப் புலமைச் சிறப்புள்ள இருவர் களுள்ளே கம்பர் ஒருவராயிருப்பதும் அவருடைய பெரு மையை வலியுறுத்தும்.

வீர சிரேட்டரும் தனிக சிரேட்டரும் இராச சிரேட்டரும் ஏனைய சிரேட்டருமான எல்லாச் சிரேட்டர்களும் 'கவி சிரேட் டராகிய கம்பராகப் பிறந்தோமில்லையே!' என்று பொரு மைப்பட்டு ஏங்கி வருந்தும் மகிமை வாய்ந்தவர் கம்பர்.

## கம்பராமாயண சார காரணம்

நான் திருநெல்வேலி வித்துவான் அழகிய சொக்கநாத பிள்ளையவர்களுடன் அளவளாவிக் கலந்து பேசிக்கொண் டிருந்த ஒரு சமயத்தில், அவர்கள், கம்பராமாயணம் குகப் படலத்தில் 'சுற்றத்தார்' என்ற கவி முதலிய ஏழு பாட்டுக்களை யெடுத்துக் காட்டித் 'தம்பி! இந்தப் பகுதியைப் படித்துப் பாருங்கள்' என்ருர்கள். அவர்கள், கவி யியற்று வதிற்போலக் கவிச்சுவை யுணர்வதிலும் பேர்பெற்றிருந்த தஞல், அவர்கள் காட்டிய பகுதி சிறந்ததாகத்தான் இருக் குமென் றெண்ணி, அதனை—ஒரு முறையன்று—இரு முறை கவனமாகப் படித்துப் பார்த்து, 'நன்ருகத்தானிருக்கிறது. ஆஞல், நீங்கள் எடுத்துக்காட்டும்படியான அதிசயம் ஒன்று மில்லையே!' என்றேன். அவர்கள், 'இது கம்பராமாயணத்திற் சிறந்த பகுதியென்று பலர் சொல்லக் கேட்டிருக்கிறேன்' என்ருர்களே யன்றி, அதில் இன்ன இன்ன விசேடநயங்களி ருக்கின்றன வென்று சொன்ஞர்களில்லை.

அப்பகுதியில், என்னவோ சில ஆழ்ந்த உட் கிடைப் பொருள்கள் இருத்தல் வேண்டும், இல்லாவிட்டால், அது

* தனியன்கள். 2

சிறந்த பகுதியென வழங்கும் பிரபலம் பெற்றிராதென்று எண்ணி, இடையிடையே அப்பகுதியை ஊன்றிப் படித்து வந்தேன். உரையோடு கூடிய அயோத்தியா காண்டப் புத்தகங்கள் கிடைத்தவைகளிலெல்லாம் அப்பகுதிக்குக் கூறப்பட்டுள்ள உரைகளைப் பலமுறை படித்துப் பார்த்தேன். பல வித்துவான்களிடம் அப்பகுதிக்குப் பொருள் கேட்கவுஞ் செய்தேன். இந்த முயற்சிகளால் நான் முதன்முதலிற் கண்ட சாதாரணமான பொருள்களன்றிப் புதுமையான பொருள்களொன்றும் தெரிந்தபாடில்லை. ஆயினும், அப் பகுதி படிக்கப் படிக்க இனிமை குன்ருதிருந்ததனுல், ஊடே ஊடே அதனைப் பொழுதுபோக்குக்காகப் படித்துக்கொண்டிருந்த ஒரு சமயத்தில் 'சுற்றத்தார்' என்ற பாட்டின் உட்கிடைப் பொருள் திடீரெனப் புலப்பட்டது.

அப்பொருள் புலப்பட்டதோடு, 'அது, மிகவும் இனிமையானது; நிச்சயமாகக் கம்பர் கருதியது. அதை முன்ஞேர்கள் கண்டுதான் "சுற்றத்தார்" என்ற பாட்டுடன் தொடங்கும் பகுதி சிறந்த பகுதி யென்று சொன்ஞர்கள். பின்ஞேர்கள், அதன் உள்ளுறை புதையற் பொருளை உணராமல், "சிறந்த பகுதி" "சிறந்த பகுதி" யென்று கிளிப்பிள்ளைகள் போலச் சொல்லி வந்திருக்கிருர்கள். முன் காலத்தில் அநேகர் அறிந்திருந்த அரும்பொருள், சில காலம் மறைந்திருந்த கிரகம் திரும்பத் தோன்றிஞற்போல இப்போது தோன்றியிருக்கிறது. இவ்வாறே கம்பராமாயணம் முழுவதையும் ஆழ்ந்து ஆராய்ந்தால், கம்பர் காலத்தார் தெரிந்திருந்த அரும் பொருள்கள் மறைந்து போனவை பல, திரும்பக் கண்டு பிடிக்கப்படலாம். "சுற்றத்தார்" என்ற கவி போன்ற இனிய கவிகளைத் தேர்ந்தெடுத்துத் திரட்டி அவற்றின் உரைகளை ஊன்றியுணர்ந்து தெளிவாகவும் எளிதாகவும் எழுதி வெளியிடல் வேண்டும்' என்ற எண்ணங்கள் தோன்றின. அந்த எண்ணங்கள் தூண்டுதலே, கம்பராமாயண இன்கவித் திரட்டும், உரையும், கதைத் தொடர்ச்சியும் 'செந்தமிழ்ப்' பத்திரிகையில் வெளியாவதற்குக் காரணமாயிருந்தது. அந்நூல், இப்போது கம்பராமாயண சாரம் என்ற பெயருடன் வெளியிடப்படுகின்றது.

கம்பராமாயண இன்கவித் திரட்டின் முதற்பகுதி அடங்கிய 'செந்தமிழ்'ப் பத்திரிகை வெளியான வாரத்தில், அப் பத்திரிகை எனக்குக் கிடைத்த பின்பு ஒரு தமிழ்க் கடிதம் வந்தது. அதன் விலாசத்தைப் பார்த்து, அது எனக்குத் தெரியாதார் யாரோ எழுதியதென்றெண்ணி, அதைத்

திறந்து பார்த்தபோது, அது, அக்காலத்தில் எனக்கு அறிமுகமில்லாதவராய் ஸப் ஜட்ஜியாயிருந்த காலஞ்சென்ற ஜில்லா ஜட்ஜி C.V. கிருஷ்ணசாமி ஐயரவர்கள் தூத்துக்குடியிலிருந்து எழுதியனுப்பிய தென்று தெரிந்தேன். அதில், அவர்கள், 'நான் நேற்று இங்கே ஒரு சபையில் தலைமை வகித்துப் பேசியபோது "ஷேக்ஸ்பியரது இனிய கவிகள்" (Beauties of Shakespeare) என்ற புத்தகம் போலக் கம்பராமாயணத்தின் இனிய கவிகளைத் தெரிந்தெடுத்துத் தொகுத்து வெளியிடப்பட்ட புத்தகம் இல்லையே என்று வருந்தி, இது வெளியாகும்படி அருளவேண்டு மென்று ஈசனைப் பிரார்த்தித்தேன். அந்தப் பிரார்த்தனை பயனடைந்தாற்போல, இன்று வந்த "செந்தமிழ்"ப் பத்திரிகையில் "கம்பராமாயண இன்கவித் திரட்டு" ஆரம்பிக்கப்பெற்றிருப்பதைக் கண்டு ஆனந்தம் அடைந்தேன்' என்ற கருத்துப்பட எழுதியிருந்தார்கள். அந்த நிருபம், இந்த நூலுக்குச் சுபசூசகமாய், இது வித்தியா விநோதர்கள் விரும்பும் நூற்களுள் ஒன்ருமென்ற எண்ணம் தோன்றச் செய்து ஊக்கம் உண்டாக்கியது. அவர்கள் காலஞ்சென்றதற்குச் சில மாதங்களுக்கு முன் எனக்கு அனுப்பிய நிருபத்தில் 'கம்பராமாயண இன்கவித் திரட்டு'த் தொடங்கி நெடுங்காலமாகியும் முடியவில்லையே என்ற மன வருத்தம் இருப்பதாகத் தெரிவித்தார்கள். அவர்களுக்கு இந்நூலின் பிரதியை அனுப்பும் பாக்கியம் எனக்கு இயலாமற் போனது, என் மனக்குறைகளுள் ஒன்று.

## கம்பராமாயண சார நோக்கம்

அளவிறந்த சிறப்புடையதாய் அரிய இனிய அறிவாகாரமான கருத்துக்கள் நிரம்பிய கம்பராமாயணம் மற்றெந்தத் தமிழ் நூலினும் விரிவாயிருத்தலால், கற்ருேருள்ளேயே மிகப் பலர் அதனை முழுதும் படியாராய் அதனிற் சிறந்த பகுதிகளென்று பிறர் சொல்லக் கேட்ட சில பகுதிகளை மட்டும், விட்டுப் படித்து விடுவதும், மேற்கொண்டு படித்தால், அப்பகுதிகளையே திரும்பத் திருப்பப் படிப்பதும் வழக்கமென்பது தெரிந்த விஷயம். ஆதலால் கம்பராமாயணத்தை விரிவஞ்சி முழுதும் படியாத கற்ருேரும் மற்ருேரும் அதன் இனிமையான பகுதிகள் முழுவதையும் கற்று அறிந்து ஆனந்தித்துப் பயனடையும்படி கருதினேன். அக்கருத்து நிறைவேறுமாறு சேற்றூர்ச் சமஸ்தான வித்வான் மு. ரா. அருணசலக் கவிராயரவர்கள், திருநெல்வேலி ஹிந்து கலாசாலைத் தலைமைத் தமிழ்ப் பண்டிதராகவும் நமது சக்கரவர்த்தி

இளவரசராகவிருந்த போது நேராக அளித்த கில்லத்துப் பரிசு பெற்றவராகவும் இருந்த காலஞ்சென்ற மே. சொ. சுப்பிரமணியக் கவிராயரவர்கள் ஆகிய இவர்கள் உதவியுடன் ஆராய்ந்து என் சிற்றறிவுக்குப் பல வகையிலும் சிறந்தன வாகத் தோன்றிய பகுதிகளைத் தெரிந்தெடுத்துத் தொகுத்து உரையும் கதைத் தொடர்ச்சியும் சேர்த்து 'கம்பராமாயண சாரம்' என்று பெயரிட்டு வெளியிடலானேன். இதன் அளவு 'நைடதம்' 'பிரபுலிங்க லீலை' போன்ற காவியங்களின் அள வுக்கு அதிகமாயிராது, குறுகிய குறளையே 'நானூறு குறள்' 'நூறு குறள்' எனக் குறுக்கி வெளியிடும் இக் காலத்தில் விரிந்த கம்பராமாயணத்தைச் சுருக்கிக் கம்பராமாயண சாரம் என வெளியிடல் மிகையாகாது.

'தெய்வப் புலமைக் கம்பநாட்டாழ்வார் திருவுளமகிழ்ந்து திருவாய்மலர்ந்தருளிய கவிகள் யாவும் இனியவைகளே யன்றே? அவ்வாருக, அவற்றுள்ளே சிலவற்றை மட்டும் இன் கவிகளெனக் கொள்ளலாமோ?' எனில், கூறுகின்றேன். கம்பராமாயணப் பாட்டுக்களெல்லாம் சுவர்ணாபரணங்களென லாம். அவற்றுள்ளே பல, தனித் தங்க நகைகளெனவும், வேறு பல, ஒன்றும் பலவுமான இரத்தினங்கள் இழைத்த பொற்பூண்களெனவும் புகழலாம். பின்னையவற்றுள்ளே சில, அருமையினும் அருமையான மதிப்பில் அடங்காத ஒளி மிகுந்த பெரு மணிகள் இழைக்கப் பெற்றுப் பேரழகு வாய்ந்தன வாய்க் கழிபேருவகை விளைவிக்கும் கனக ரத்தின பூடணங்க ளென்று கழறலாம். அன்றியும், கம்பராமாயணம் முழுதும் தேம்பாகெனவும் அதனிற் காணப்படும் விசேட இனிமை யுள்ள கவிகள், அப்பாகிலே விளைந்து திரண்ட கற்கண்டு மணிகளெனவுங் கூறலாம். ஆதலால் யான் தெரிந்தெடுத் துத் திரட்டிய கவிகள் மிக இனியவை யென்று கொள்ள வேண்டுமே யன்றி மற்றைக் கவிகள் இனியவை அல்லன வென்னக் கருதலாகாது. கற்பனை, சமத்காரம், அலங்காரம், நவரசம், சொன்னயம், பொருணய முதலிய பல நலங்களுள் ஒன்ருே பலவோ பொதிந்து மனத்தை மகிழ்விக்கும் கவித்துவ சத்தி மிகுந்து விளங்குங் கவிகள், சிறந்த நீதி, உயர்ந்த ஞானம், முதிர்ந்த பத்தி, பிரபலமான உலக வழக்கு இவை களை இனிது போதிக்கும் கவிகள், என என் அறிவுக்குத் தோன்றய கவிகளை இந் நூலிலே சேர்த்திருக்கின்றேன்.

தனியாக நின்று இனிமை பயக்கும் கவிகளல்லாமல் அவ்வச் சந்தர்ப்பத்தில் தொகுதியாக நின்று இன்பம் விளைக்கும் தொடர்பான கவிகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இவ்வாறு தனித்தும் தொடர்ந்தும் இன்பம் தரும் கவிகள் இன்ன சந்தர்ப்பத்திற் கூறப்பட்டவைக ளென்று தெரிந்தாலொழிய, அக் கவிகளின் பொருள் முழுதும் நன்கு புலப்படாதாதலால், அவற்றின் இடையே உள்ளனவும் இந்நூலில் சேர்க்கப்படாமல் விடப்பட்டனவுமான கவிகளில் கூறப்பட்டுள்ள கதையை மேற்குறித்த தனி இன்கவிகள், தொடர் இன்கவிகளுக்கு இடையே சுருக்கமாக எழுதிச் சேர்த்திருக்கிறேன். ஆகவே, பாட்டுக்களின் பொருள்களும் இச் சுருக்கமும் சேர்ந்து கம்பராமாயண கதாசாரமாகும்; இது, பாட்டுக்கள் குறிப்புரைகள் விசேடவுரைகளை விட்டுவிட்டு இந்நூலை வரிசையாக வாசிப்போருக்குப் புலப்படும். மேற்கூறிய, சிறப்பாக இனிமையான கவிகளல்லாத இனிய கவிகளின் கருத்துக்கள், கதைத் தொடர்ச்சியுள் இணைக்கப்பட்டிருக்கின்றன.

இந் நூலிலுள்ள கவிகளின் பொருளைச் செய்யுட் பயிற்சி மிக்காரே யன்றி அப்பயிற்சி சிறிதே உடையாரும், அஃது ஒன்றும் இல்லாதாரும் எளிதாக அறிந்து ஆனந்திக்கும்படி அவ்வப்பாட்டின் கீழே கூடிய அளவு விளக்கமான பொருள் எழுதப்பட்டிருக்கின்றது. பாட்டின் முக்கியமான கருத்து நன்கு விளங்குதற்கு இடையூருய் அவசியமில்லாத அடைமொழிகள் போன்ற பாட்டுப் பகுதிகளுக்கு உரை எழுதாமல் விடப்பட்டும் பாட்டில் இல்லை யாயினும் பொருள் விளக்கத்துக்கு அவசியமான சொற்களும் தொடர்களும் வருவிக்கப்பட்டும் இருக்கின்றன. பொருளின் கீழ் அரும்பதவுரை, இலக்கணக்குறிப்பு முதலியவை அடங்கிய குறிப்புரையும், அதன் கீழ், பொருளில் அமையாத கவி நயங்களை விவரித்து விவரிக்கும் விசேடவுரையும் எழுதப்பட்டிருக்கின்றன.

பாட்டுக்களைப் படித்து அவைகளின் பொருளைத்தெரிந்து கொள்ளப் போதிய கல்விப்பயிற்சியில்லாராயினும் வசனத்திலுள்ள அதி நுணுக்கமான விஷயங்களையும் கிரகித்துக் கொள்ளத்தக்க மதி நுட்பமும் கவிக் கருத்துக்களை விளங்கக் கூறினுல் அவற்றைக் கவிஞர்போலவே சுவைத்து ஆனந்திக்கும் ரச உணர்ச்சியுமுள்ள விவேகிகள் இந் நூலில் கவிகளின் பொருள் விசேடவுரை கதைத் தொடர்ச்சியாகிய வசனப் பகுதிகளை வாசித்தலால், (கம்பராமாயணக் கருத்துகளைச் செய்யுட் பயிற்சி மிக்கார், கவி மூலமாக அறிந்து ஆனந்திப்பதுபோல) கதைச்சாரமும் கற்பனை வருணனை முதலிய நயங்களும் நன்கு விளங்கக் கண்டு களிப்பார்களென்று கருதுகிறேன்.

இந் நூலில், யான் இராமனது குணங்களை விதந்தெடுத்துக் கூறியுள்ள பல பகுதிகளைப் பொதுவாகவும், இராமன் வாலியை மறைந்து நின்று கொன்ற செயல் சம்பந்தமாக விவகரித்திருக்கும் வாலிவத நியாயப் பகுதியைச் சிறப்பாகவும் நோக்கினோர் சிலர், யான் வெளியிட்டுள்ள 'இராமாயண உள்ளுறை பொருளென்னும் தென்னிந்திய சாதி வரலாறு'* என்ற நூலில் எழுதியிருக்கிற இராமனைப் பற்றிய குற்ற விவரணத்தோடு இந்நூலில் கூறப்பட்டுள்ள குண விவரணம் முற்றும் மாருயிருப்பதற்குக் காரணம் வினவினர். அவ்வினு, வேறு பலர் மனத்தும் எழலாம். இராமாயண உள்ளுறை பொருளில், ஆசிரியர் சுந்தரம் பிள்ளை, சரித்திர முறையாக, இராமாயணத்தை ஆராய்ந்து இராமனைப்பற்றிக் கூறியதை யான் அறிந்தபடி விளக்கினது போல, இந்நூலில், கம்பர், சமய முறையாக, இராமனைப்பற்றிக் கூறியவைகளை என் அறிவுக்கு எட்டினமட்டும் விளக்கியிருக்கின்றேன்.

## குணங் குற்றங்கள்

கம்பராமாயண சாரத்திலே சேர்த்தற்குரிய சில கவிகளின் நயம் எனக்குப் புலப்படாமையால், அவைகள் சேர்க்கப்படாமல் விட்டிருக்கலாம்; அவ்வாறே சேர்த்தற்குரிய நயம் இல்லாதவைகள் சில, எனது பகுத்தறிவுக் குறைவாற் சேர்க்கப்பட்டிருக்கலாம்.

பொதுவாக, எல்லா நூல்களும், விசேடமாகக் கம்பராமாயணம் போன்ற ஆழமுடைய நூல்களும் படிப்பவரது இயற்கை அறிவு, கல்விஅறிவு, கேள்விஅறிவு, ஆராய்ச்சி அறிவு, அநுபவஅறிவு இவைகளுக்குத் தக்கவாறு பொருள் புலப்படுவனவாம். ஆதலால், யான் எழுதிய உரை, என் அறிவளவேயாய்ப் பல சிறந்த பொருள்களை விட்டிருத்தலும் அநேக பொருள்களைத் தப்பாகக் கொண்டிருத்தலும் இயல்பே. குற்றங்களை நீக்கிக்குறைகளை நிரப்பிக்கொள்ளுமாறு அறிஞரை வேண்டிக்கொள்கின்றேன்.

இந் நூலிலே தகுதியின்றிச் சேர்க்கப்பட்டிருக்கின்ற தனி இன் கவிகளும் தொடர்ச்சிப்பட்ட இன் கவிகளும் இவை இவை என்றும், தகுதி யிருந்தும் சேர்க்கப்படாது விடப்

* The Tamilian Antiquary No. 2. A Critical Review of the Story of the Ramayana & An Account of the South Indian Castes by Mr. V. P. Subramanya Mudaliar, published in 1908 by the 'Tamilian Archaeological Society,' and republished of late, by tha South India Saiva Siddhanta Publishing Society, Tinnevelly, Ltd.

பட்டவை தனிக் கவியினத்தில் இன்னவை இன்னவை, தொடர் கவியினத்தில் இன்னின்னவை என்றும் காரணத்தோடு காட்டியும், பொருள் அரும்பதவுரை விசேடவுரைகளில் உள்ள குற்றங்கள் இவை, குறைகள் இவை யென்று விளக்கியும் தயைசெய்து தெரிவிக்கும்படி அறிஞரை வேண்டிக் கொள்கின்றேன்.

## நன்றியுரை

இந் நூலுக்கு மதுரைத் தமிழ் சங்கத்துச் 'செந்தமிழ்'த் திங்கள் வெளியீட்டில் தாராளமாக இடம் அளித்தும், யான் வேண்டிக்கொண்ட காலங்களில் திருத்தங்கள் குறிப்பித்தும் உதவினவரான 'செந்தமிழ்'த் தலையமையாசிரியர் திருநாராயணையங்காரவர்களுக்கும், உதவியாசிரியர் T. K. ராமாநுஜையங்காரவர்களுக்கும், இந்நூலில் பாலகாண்டத்தைக் கவனித்துப் படித்துப் பல குறிப்புகள் எழுதி யுதவியிருக்கின்ற வண்ணார்பேட்டை வக்கீல் T. K. சிதம்பரநாத முதலியாரவர்கள், B. A., B. L., அந்தக் காண்டத்திலும் அயோத்தியா காண்டத்திலுமுள்ள சில கவிகளுக்கு விசேடவுரை வரைந்து உபகரித்த தூத்துக்குடி கவிராஜ பண்டிதர் ஜெக வீரபாண்டியன் அவர்கள் ஆகிய இருவருக்கும், பாலகாண்டத்தைச் செவ்வையாக அச்சிடுவதற்கான முறைகளைக் குறிப்பிட்டும் பாட்டுப் பகுதிகளுக்கும் வசனப் பகுதிகளும் தலைப்புக்கள் எழுதியும் மற்றையோருடன் புரூபுகள் திருத்தியும் உதவிய தூத்துக்குடி டிஸ்ட்ரிக்ட் முன்சீப் V. T. பழனியப்ப முதலியார், B. A., B. L., அவர்களுக்கும், புரூபுகள் திருத்தி உபகரித்த ராதாபுரம் டிப்டி தாசில்தார் T. M. பாஸ்கரத் தொண்டைமான் அவர்க்ள், B. A., தூத்துக்குடி வக்கீல் A. ராமமூர்த்தி ராவ் அவர்கள், B. A., B. L., சென்னைச் சர்வகலாசாலை ரீடர் S. வையாபுரிப் பிள்ளை அவர்கள், B. A., B. L., அக்கலாசாலை ஸீனியர் லெக்சரர் R P, சேதுப்பிள்ளையவர்கள், B. A., B. L., ஆகியவர்களுக்கும் எனது நன்றியறிவு பெரிதும் உரியதாயுள்ளது.

பாலகாண்டத்தை இனிது பதிப்பித்து உதவிய திருவாளர் M. P. S. துரைசாமி முதலியார், B. A., B. L., அவர்கள் நோயுற்றிருப்பதனால், அயோத்தியா காண்டத்தைப் பதிப்பிக்கும் உதவி புரியும்படி திருநெல்வேலி, மதுரைத் திரவியம் தாயுமானவர் இந்து கலாசாலைத் தலைமைத் தமிழாசிரியர் திருவாளர் வித்துவான் P. K. அருணசலக் கவுண்டரவர்களை

வேண்டிக் கொண்டேன். அவர்கள், உடனே இசைந்து, அவர்களுக்குள்ள இயற்கையான வேலையோடுகூட இதன் பதிப்பு வேலையை ஏற்றுக்கொண்டு சிரமம் பாராட்டாது செவ்விதாகச் செய்து முடித்தார்கள். அடுத்த ஆரணிய காண்டத்தையும் பதிப்பித்து வருகிறார்கள். அவர்களுக்கு எனது உள்ளன்பொடு கூடிய நன்றி உரியதாகின்றது.

இந்நூல், 'செந்தமிழில் வெளியாகி வருவதை அப்போதப்போது பார்த்து மகிழ்ச்சியுற்ற அமயங்களில் அம் மகிழ்ச்சியை எனக்குத் தெரிவித்து ஊக்கமூட்டிய உபகாரத் துடன், முகவுரையளிக்கும் பேருபகாரமும் புரிந்துள்ள மஹா மஹோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் சாமிநாதையரவர்களுக்கும், ஆங்கில முகவுரை அளித்து உதவிய சுவாமி விபுலாநந்தஜி மகராஜ் அவர்களுக்கும் யான் மிக்க கடப்பாடுடையேன்.

இந்நூலை உரிமையாக அங்கீகரித்தருளிய திருப்பனந் தாள் மடத்துத் தலைவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத தம்பிரான் சுவாமிகளவர்களுக்கு எனது அத்தியந்த வந்தனம் உரியதாகின்றது.

இந்நூலைத் தங்கள் வெளியீடாக வெளியிட்ட சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாருக்கும், இதனை நன்கு பதிப்பித்த ஹிலால் பிரஸ் அதிபரவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

வெள்ளக்கால் P. O.<br>தென்காசித் தாலூகா<br>26—3—36

*வெ. ப. சுப்பிரமணிய முதலியார்*

## துணை நூற்பட்டி*

| | | |
|---|---|---|
| 1. | பாலகாண்டம் :— | இராமசாமி நாயுடு உரையுடன், சர்வசித்து ஞூ |
| 2. | ,, | அ. குமாரசாமிப் பிள்ளை, த. கனகசுந்தரம் பிள்ளை அரும்பதவுரையுடன், காலயுக்தி ஞூ |
| 3. | ,, | வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியர் உரையுடன், அட்சய ஞூ |
| 4. | ,, சுருக்கம் :— | வெ. வ. சுப்பிரமணிய ஐயர் அரும்பொருள் விளக்கத்துடன், 1917 கி. பி. |
| 5. | அயோத்தியா காண்டம்:— | வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் உரையுடன், விபவ ஞூ |
| 6. | ,, | சண்முகம் பிள்ளை உரையுடன், (1904). |
| 7. | ,, | சுப்பராய ரெட்டியார் உரையுடன், 1919. |
| 8. | ,, | சேஷ சாஸ்திரியார் உரையுடன், ஸர்வதாரி ஞூ, |
| 9. | ஆரணிய காண்டம் :— | எம். ஆர். கந்தசாமிக் கவிராயர், எஸ். வேங்கடராயலு நாயுடு உரையுடன், 1900. |
| 10. | ,, | வை. மு. சடகோபராமாநுஜாச்சாரியார், சே. கிருஷ்ணமாச்சாரியார் உரையுடன், பிலவங்க ஞூ. |
| 11. | கிஷ்கிந்தா காண்டம் :— | ஷெ இருவர், வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் உரையுடன் விரோதிகிருது ஞூ. |
| 12. | ,, | பண்டித சவரிராயர், பாலஸரஸ்வதி கிருஷ்ணமாச்சாரியர், மூலமும் பாடபேதங்களும். |

* பாட்டுக்களின் பாட நிர்ணயத்திற்கும் பொருள் காணுதற்கும் உதவிய நூல்களின் விவரணம். (Bibliography.)

13. சுந்தர காண்டம் — வி. கோவிந்தப் பிள்ளை உரையுடன், விளம்பிஸு.

14. ,, — வை. மு. சடகோபராமாநுஜாச்சாரியர், சே. கிருஷ்ணமாச்சாரியர், வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியர், உரையுடன், ரக்தாக்ஷி ஸு (1924).

15. ,, — ஷை இரண்டாம் பதிப்பு, ஆங்கீரஸஸு (1932).

16. ,, — பண்டித பி. ஆர். கிருஷ்ணமாச்சாரியர், மூலம், கதைச் சுருக்கம், ஆங்கில முகவுரையுடன், ஸ்ரீவாணி விலாசம் பிரஸ், 1907.

17. யுத்த காண்டம் :— வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியர் உரையுடன், இரண்டு பகுதிகள், ஆங்கீரஸஸு (1932).

18. கம்பராமாயண அருங்கவி விளக்கம் :— கவித்தலம் துரைசாமி மூப்பனார், சர்வதாரிஸு.

19. ஏழு காண்டமும் மூலம் மட்டும் :— அ. கந்தசாமி முதலியார், தாது, இரத்தாட்சி.

20. ,, — அ. சுந்தரநாத பிள்ளை, 1911, இரண்டு பகுதிகள்.

21. ,, — அ. இரங்கசாமி முதலியார், 1914, இரண்டு பகுதிகள்.

22. வால்மீகி ராமாயண வசனம் :— பண்டித நடேச சாஸ்திரியார் மொழிபெயர்ப்பு.

23. கம்ப ராமாயண ஓலைச்சுவடி :— திருநெல்வேலிக் கவிராயர் வீட்டுப் பிரதி.

## மேற்கோள் விளக்கம்

| | |
|---|---|
| அ. கு. | அ. குமாரசுவாமிப் பிள்ளை : பாலகாண்டம் |
| இ. நா. | இராமசுவாமி நாயுடு : பாலகாண்டம் |
| உரி. நி. | உரிச்சொல் நிகண்டு |
| ஐங்குறு | ஐங்குறுநூறு |
| ச. அ. | சங்க அகராதி |
| சிந்தா. | சிந்தாமணி |
| சூடா. | சூடாமணி நிகண்டு |
| த. அ. | தமிழ் அகராதி |
| து. மு. | துரைசாமி மூப்பனார் : கம்ப ராமாயண அருங்கவி விளக்கம் |
| நாலடி. | நாலடியார் |
| பத்துப்பா. | பத்துப்பாட்டு |
| பரிபா. | பரிபாடல் |
| பிங்கல. | பிங்கல நிகண்டு |
| புற. நா. | புறநானூறு |
| புறப். வெண். மாலை | புறப்பொருள் வெண்பா மாலை |
| மணிமேகலை | மணிமேகலை |
| திரு. ச. | திருமயிலை சண்முகம் பிள்ளை : அயோத்தியா காண்டம், உரையுடன் |
| வை. மு. கோ. | வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியர் |
| சோ. சு. | சோடசாவதானம் சுப்பராய செட்டியார் |
| பெருங்கதை | பெருங்கதை |
| இ. அ. | இலக்கியச்சொல் அகராதி |
| குறள் | திருக்குறள் |
| நான்மணிக்கடிகை | நான்மணிக்கடிகை |
| கந்தபு. | கந்தபுராணம் |
| திருவாச. | திருவாசகம் |
| கலி. | கலித்தொகை—முதலிய |




# பொருளடக்கம்

## படல அட்டவணை




# கம்பராமாயண சாரம்

## சிறப்புப் பாயிரம்

## கடவுள் வாழ்த்து

உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசர ணுங்களே (1)

கொண்டுகூட்டு*: உலகம் யாவைதாமும் உள ஆக்கலும் நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா(த) அலகிலா(த) விளையாட்டு(ஆக) உடையாரவர் தலைவர். அன்னவர்க்கே நாங்கள் சரணம்.

பொருள்: நாம் வாழும் பூமியை யுள்ளிட்டதும் சூரியனை நடுவாக உடையதுமான அண்டத்தையும், அது போலவே மற்றைய எல்லா அண்டங்களையும், தோன்றச் செய்தலும், தோன்றியவைகளை நிலைக்கச் செய்தலும், நிலைத்தவைகளை ஒடுங்கச் செய்தலும், ஓயாத அளவில்லாத விளையாட்டாக உடையவரே, எல்லா உலகங்களுக்கும் அவைகளிலுள்ள உயிர்களுக்கும் முதல்வராவர். அவருக்கே நாம் அடைக்கலம்.

'யாவை தாமும்' எனக் கூட்டித் 'தாம்' என்பதைப் பகுதிப் பொருள் விகுதியாக்கிப் பொருள் கூறப்பட்டது. 'தாம்' என்பதற்குத் 'தாமே' (அசகாய கர்த்தாவாய் - வேறு துணை வேண்டாராய்) என்று பொருள் கூறலும் பொருந்தும். அஸஹாய சூரன் என்பதைக் கம்பர் மொழி பெயர்த்துக் 'கூட்டொருவரையும் வேண்டாக் 'கொற்றவன்' என வாலி வதைப் படலத்தில் அழகாகக் கூறியிருப்பதை நோக்குக.

உள ஆக்கல் - உள்ளன ஆகச் செய்தல் - படைத்தல். நினைவுறுத்தல் நினைவுறச் செய்தலெனவும், பயமுறுத்தல் பயமுறச் செய்தலெனவும் பொருள்படல் போல, 'நிலைபெறுத்தல்' நிலைபெறச் செய்தல் (- காத்தல்) என்ற பொருள்பட நின்றது. 'ஜீவேச்வர ஜகத்' என வைணவரும், 'பசு பதி பாசம்' எனச் சைவரும், உயிர் ஈசுரன் உலகம் என்னும் முப்பொருள்களும் சிருட்டிக்கப்படாமல் என்றும் உள்ளன வென்னுங் கொள்கையுடையோ ராதலால், 'உலகம் உள ஆக்கல்' என்றது சூக்கும

* கொண்டுகூட்டு - அந்நுவயம் - உரைமுறை (Prose order)

நிலையிலிருந்த உலகத்தைத் தூல நிலையை அடையச் செய்தலெனவும், 'நீக்கலும்' என்றது திரும்பச் சூக்கும நிலையை அடையச் செய்தலெனவுங் கொள்க. இது, 'உள்ளது போகாது, இல்லது வாராது' என்னும் சற்காரியவாதம்*; சூனிய வாதத்துக்கு மறுதலை.

நீங்கலா - இடையறாத. அலகிலா - அளவில்லாத. நீங்கலா அலகிலா விளையாட்டுடையார் - (சிருட்டியாதி; முத்தொழில்களையும்) இடையறாமலும் அளவில்லாமலும் செய்யும் விளையாட்டாக வுடையவர். 'நீங்கலா அலகிலா விளையாட்டுடையார்' என்பதற்கு, (மேற்கூறிய முத்தொழில்கள் நீங்கலாக அளவில்லாத (வேறு) விளையாட்டுக்களை யுடையவரென்றும் பொருள் கூறுவர். அவர், 'ஆக்கலும் நிலைபெறுத்தலும் நீக்கலும்' என விளையாட்டு மூன்றென்றதனால், அவைகளையே அளவிலா விளையாட்டு என்று கூறல் பொருந்தாதென்பர். ஆக்கல் நிலைபெறுத்தல் நீக்கலென்றதனால் விளையாட்டுக்கள் மூன்று வகை யென்றும் அவை ஒவ்வொன்றும் அளவில்லாதவை யென்றும் கொள்ளலாம். விளையாட்டு உடையார் - விளையாட்டாக உடையவர். 'ஆக' தொக்கு நின்றது. 'நிச்சயமாக முறுகி' என்பது, 'நிச்சயம் முறுகி' எனக் காஞ்சிப் புராணத்தில் நகரப் படலத்து முதற் பாட்டில் வருதல் காண்க.

இறைவனுக்குச் சிருட்டியாதித் தொழில்கள், 'இஃது இவ்வாறாக' என்ற சங்கற்ப மாத்திரையானே நிகழ்வனவாம். அத்தொழில்களை விளையாட்டென்றார். 'விளையாட்' டென்றது, ஐங்கலப் பாரம் பொறுத்தல் சாத்தனுக்கு விளையாட்டென்பது போல, அத்துணை எளிதிற் செய்யும் ஆற்றலுடைமை பற்றியே' † அன்றிச், சிறுவர் தட்டாடல், பெரியோர் சீட்டாடல் போன்றதன்று; வீண் தொழிலுமன்று: ஆன்மாக்கள் தனு கரண புவன போகங்களைப் பெற்று அவற்றைக் கொண்டு அடையும் அனுபவத்தால் படிப்படியாகப் பக்குவமடைந்து முத்தி பெறும் பயன் கருதிச் செய்யப்படுவதாம்.

'விளையாட்டுடையாரவர் தலைவர்', 'விளையாட்டுடையாரெவர் தலைவர்', என இரண்டு பாடங்கள் காணப்படுகின்றன. 'விளையாட்டுடையாரவர் தலைவர்' என்ற பாடங்கொண்டார், விளையாட்டுடையாராகிய அவர் தலைவர் என, 'ஆகிய' என்னுஞ் சொல் வருவித்துப் பொருள் உரைத்தார். 'விளையாட்டுடையாரெவர் தலைவர்' என்ற பாடங் கொண்டார், விளையாட்டுடையார் எவரோ அவரே தலைவர் என, 'அவர்' என்ற சொல் வருவித்துப் பொருள் உரைத்தார். 'விளையாட்டுடையாரவர்' என்பதில் உள்ள 'அவர்' என்பதைச், 'சிவனவனென் சிந்தையு ணின்ற வதனால்'‡ என்பதில் உள்ள 'அவன்' போலப், பகுதிப் பொருள் விகுதியாகக் கொண்டு, 'விளையாட்

* சற்காரிய வாதம் - முன்பில்லாதது இடையே தோன்றாதென்றும், காரியம் அழிந்த காலத்துக் காரிய வடிவம் காரணத்தில் அழியாது சூக்குமமாய் நிலைத்திருக்குமென்றும், வாதித்து நிலைநாட்டுவது.

† சிவஞான பாடியம், 2-ம் சூத்திரம், 1-ம் அதிகாரம். ‡ திருவாசகம்.

டுடையாரவர் ' என்பதற்கு இங்கே ஒரு சொல்லும் வருவியாமல் பொருள் கூறப்பட்டது. ஆரணிய காண்டக் காப்பில் 'ஆதிதேவரவர்' என்பதிலுள்ள 'அவர்', இந்த 'அவர்' போன்றது.

'அவர்' என்பதனுல் கம்பர் கடவுளை அவர்க்குரிய இயற்கைப் பெயர்ச் சொல்லாலன்றிச் சுட்டு பெயர்ச் சொல்லாற் குறித்தாரெனவுங் கொள்ளலாம். குற்ருலத் தல புராணத்தில் 'ஆலத்தை யவர்க்கமுதாக்கினுனை' என்ற பாட்டில் 'அவர்' சிவனைக் குறித்தல் காண்க. 'அவன் அசையாமல் அணு அசையாது', 'எல்லாம் அவன் செயல்', 'எல்லாம் அவர் செயல்', என்னும் உலக வழக்கில், 'அவன்' 'அவர்' என்பவை பலர் அறி சுட்டுப் பெயராய்க் கடவுளை உணர்த்தல் காண்க. இவ்வாறே, 'அது நீ ஆனுய்' என்ற மகா வாக்கியத்தில், 'அது' என்ற சுட்டுப் பெயர் பரம் பொருளைக் குறித்தலையும் நோக்குக.

சரணங்களே என்றும் பாடம். அதில் 'கள்' 'ஏ' அசைகள்.

கம்பர், இப்பாட்டில் கடவுளது பொது இலக்கணம் கூறி, அடுத்த 'சிற்குண' என்ற பாட்டில் 'மூன்றனுள் முற்குணத்தவரே முதலோர்' எனச் சாத்துவிக குணமுடையவரென்னும் விட்டுணுவே முதற் கடவுளெனக் குறிப்பாகப் புலப்படும்படி கூறி, இறுதிக் கடவுள் வாழ்த்துக் கவியாகிய 'ஆதி அந்தம் அரி' என்னும் பாட்டில் 'அரி' என்று விட்டுணு நாமத்தை வெளிப்படையாகக் கூறி, 'அவன் பாதமல்லது பற்றிலர் பற்றிலார்' என்ருர். பல மதத்தினரும் உள்ள சபையில் தம் நூலை அவர் அரங்கேற்றத் தொடங்கும்போது, அவர்கள் எல்லாரும் ஏற்றுக் கொள்ளும்படி பொதுத் தெய்வ வழிபாடாக முதற் பாட்டை மொழிந்தாரென்றும், எல்லாச் சமயிகளும் தம் தம் கடவுள் முக்கியாம்சத்தில் சாத்துவிக குணச் சிறப்புடையவர் என்பது பற்றியும், வைணவர் தம் கடவுளே சாத்துவிக குணமுடையவர் என்பது பற்றியும், ஆராய்ந்தறிந்து இரு திறத்தாரும் ஒப்பும்படி இரண்டாம் பாட்டை இயம்பினு ரென்றும், கதாநாயகனுகை அவதரித்த விட்டுணுவை வணங்குதல் எல்லா நூல்களுக்கும் முறை யென்று உய்த்துணரும்படி அவ்வணக்கத்தை 'ஆதி அந்தம் அரி' என்னும் மூன்ரும் பாட்டின் வாயிலாக இசைத்தாரென்றும், கொள்ள, இந்நூற் கடவுள் வாழ்த்துக் கவிகள் இடந்தருகின்றன.

தமிழ் நாட்டிலே, அச்சுப்பாட புத்தகங்கள் ஏற்படுமுன்னே, பிள்ளைகள் வித்தியாரம்ப காலத்தில் படித்த அரிச்சுவடி யென்ற நெடுங்கணக்கு, ஓலைச்சுவடியாயிருந்தது. அது 'அரி நமொத்து சிந்தம்—அ(ன), ஆ (வன்ன)' என்று ஆதியில் அரியெனத் தொடங்கி, அந்தத்தில் 'ஔ (வன்ன), (இ)ன் (னன்ன)—அரி ஓம் நன்ருக; குருவே துணை' என்றெழுதி முடிக்கப்பட்டிருத்தல் தவருத முறையாயிருந்தது. நெடுங்கணக்குக்கு, அரிச்சுவடி, அரிவரியென்ற பெயர்கள் அந்த முறை பற்றி ஏற்பட்டவை.

வைணவச் சிறுவர் மட்டுமாகவல்லாமல் பிறமதப் பிள்ளைகளும் அரிச்சுவடி படிக்கும்போது 'ஆதி அந்தம் அரியென ஓதினர்'. இக்காலத்தும்

பிள்ளைகளுக்கு முதல் முதலாகக் கல்வி கற்பிக்கத் தொடங்கும்போது உபாத்தியாயர், ஓலையில் 'அரி நமொத்து சிந்தம்' எனத் தொடங்கி, 'அரி ஓம் நன்ருக; குருவே துணை' என்றெழுதி முடித்து மஞ்சள் பூசிச் சித்தமாக வைத்திருக்கும் ஓலை அரிச்சுவடியைப் பிள்ளைகள் கையில் வைத்து முதலில் 'அரி நமொத்து சிந்தம்—அ (ன), ஆ (வன்ன)' என்றும், முடிவில் 'அரி ஓம் நன்ருக; குருவே துணை' என்றும் தாம் சொல்லிக் கொடுத்துப் பிள்ளைகளைச் சொல்லச் செய்தல் முற்றும் ஒழிந்துவிட வில்லை.

முதலாகப் படிக்கும் அரிச்சுவடியைப் போலவே, முடிவாகப் படிக்கும் வேதத்தையும் 'அரி' யெனத் தொடங்கி, 'அரி' யென்று முடித்தல் பிரசித்தம். முதலும் முடிவுமான நூல்களை 'அரி' யென்று தொடங்குதலால், இடைப்பட்ட எல்லா நூல்களையும் அவ்வாறே தொடங்குதல் முறை யென்பது சொல்ல வேண்டியதில்லை.

அன்றியும், அரிச்சுவடி முதலான எல்லா நூல்களுக்கும் காப்பு ஆகக் காவற் கடவுள் ஆகிய திருமாலைப் பிரார்த்தித்தல் இயல்பே. ஆதலால், அரங்கேற்றச் சபையிலுள்ள எல்லா மதத்தினரும் இராமாயண கதாரம்பத்தில் கதாநாயகனுக அவதரித்த அரியை வணங்குதல் முறையாமென உய்த்துணரச் செய்து அவர்கள் யாவரும் தடையின்றி ஒப்புக் கொள்ளும்படி 'ஆதி அந்தம் அரி' என்ற மூன்ரும் பாட்டைக் கூறினுர்.

'ஆதி அந்தம் அரியன' என்றும் பாட முண்டெனச் செல்வக்கேசவ ராய முதலியார் 'கம்பர்' என்ற புத்தகத்திற் கூறியிருக்கின்ருர். கோவிந்த ராஜையங்கார் தாம் பிரசுரித்த 'கம்பநாடர்' என்ற பத்திரிகையில், 'கம்ப ராமாயணக் கவி' என்ற பகுதியில் அந்தப்பாடத்தையே பாடமாகக்கொண்டிருக்கிருர். அந்தப் பாடங் கொண்டால், மேலே விவகரித்த மூன்று கடவுள் வாழ்த்துக் கவிகளுமே நாத்திகரொழிய எம்மதத்தினரும் சம்மதித்திடும் பொதுத் தெய்வ வணக்கமாம்.

## கம்பர் கடவுட் கொள்கை

விட்டுணு கம்பராமாயணத்துக்கு ஏற்புடைக் கடவுளாதலன்றி, நூலாசிரியர்க்கு வழிபடு கடவுளு மாவரென்று கொள்வதற்கு ஆதாரமாகப் புறச் சான்றுகள் ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லை. அகச் சான்று* உண்டோ என்பதை ஆராய்வாம்.

பாலகாண்டம், திரு அவதாரப் படலத்தில்,

கருமுகில் தாமரைக் காடு பூத்துநீ
டிருசுட ரிருபுறத் தேந்தி யேந்தலர்த்
திருவொடும் பொலியவோர் செம்பொற் குன்றின்மேல்
வருவபோற் கலுழன்மேல் வந்து தோன்றினுன்.

* அகச்சான்று, நூலின் உள்ளே உள்ள சாட்சி; புறச்சான்று, வெளியே சரித்திரம், கன்ன பரம்பரை வரலாறு முதலியவற்றில் உள்ள சாட்சி.

எழுந்தனர் கறைமிடற் றிறையுந் தாமரைச்
செழுந்தவி சுகந்தவத் தேவுஞ் சென்றெதிர்
விழுந்தன ரடிமிசை விண்ணு ளோரொடுந்
தொழுந்தொறுந் தொழுந்தொறுங் களிது ளங்குவார்.

என்ற பாட்டுக்களில் விட்டுணுவுக்குப் பரத்துவம் கூறி, அக் கடவுளே தம் வழிபடு கடவுளெனக் கம்பர் புலப்படுத்தினர், என்பர் ஒரு சாரார். அதனை ஆட்சேபிப்போர், 'கறைமிடற் றிறை'* யென்பது தப்பான பாடமென்றும்; அப்பாடம் உண் மையானதாயிருந்தால், கம்பராமாயணம் ஆதி சைவ சிரேட்ட ராகிய தில்லைத் தீட்சிதர்களால் அங்கீகரிக்கப்பட்டதாகக் கூறப் படுகிறபடி அங்கீகரிக்கப்பட்டிராதென்றும்; 'கம்பர்' என்ற பெயர் கம்ப நாடுடையார் கம்பரென்பதாக இருப்பதன்றிக் காஞ்சீபுரத்துச் சிவன் பெயராகிய 'கம்பர்'† ஆகவும் இருப்பத னுலும், கம்பர் மகன் பெயர் அவர் பெயர்போலக் கவர்படு பொருள் மொழியாயில்லாமல் தெளிவாகச் சிவநாமமாகிய 'அம் பிகாபதி'யாக இருப்பதனுலும், சைவருக்குத் திருமால் பெயரிடு வது வழக்கமாயினும் வைணவர் சிவநாமம் பூண்பது மரபன்றாத லாலும், கம்பர் இயற்றிய 'ஏரெழுபது' என்னும் நூலில் விநா யக தோத்திரம் செய்திருப்பதனுலும், சைவரெனத் துணிதற்பா லராகிய கம்பர் சிவனை இழித்துக் கூறியிராரென்றும்; ஆதலால் 'கறையடிக்கிறை'‡ என்றுள்ள பாடமே சரியான தென்றும்; வான்மீகி ராமாயணத்தில்§, இந்தச் சந்தர்ப்பத்தில் கூடிய பிரமாதி தேவர்களின் கூட்டத்தில் சிவன் இருந்ததாகக் கூறப் படவில்லை யென்றும்; கம்பராமாயணத்தில் இன்னும் இரண்டோ ரிடங்களில் சிவனை விட்டுணுவுக்குத் தாழ்த்திக் கூறும் பகுதிகள் தப்பாக மாற்றப்பட்டவை அல்லது இடைச் செருகல்களென்றும், கூறுவர்.

மேற்கூறிய அமயத்தில் சிவன் விட்டுணுவுக்குச் செய்த வணக்கம், அக்கடவுள் தன் குமாரக் கடவுளை ஒரு தருணத்தில்$

* கறைமிடற்றிறை - சிவன்.

† 'பணங்கொள் பாம்பணி கம்பன்', காஞ்சிப்புராணம், நாட்டுப்படலம், 1.

‡ இந்திரன்.

§ பண்டித நடேச சாஸ்திரி வால்மீகி ராமாயண வசனம், பாலகாண்டம், 61–63 பக்கங்களைப் பார்க்க.

$ அப்போது சிவபெருமான் சிஷ்யனுகவும், குமரக்கடவுள் குருவாகவும் இருந்த சமயம். உபதேச காலத்தில், சிஷ்யன் காலில்விழுந்து வணங்கலும், குரு, திருவடி தீக்ஷை செய்தலும் மரபு.

வணங்கினதாகக் கூறப்படும் வணக்கம் போலவும், விட்டுணுவே தன் அவதார காலங்களில் தாய் தந்தை குரு முதலியோரை வணங்கல் போலவும், பிரபுக்கள் சாதாரண காலத்தில் தம்மைக் கும்பிடும் பூசாரிகளை அவர்கள் சாமி கொண்டாடுங் காலங்களில் தாங்கள் கும்பிடுதல் போலவும், காவடியெடுக்கும் சிறியோரைப் பெரியோர் வந்திக்கும் வந்தனை போலவும், இக்கால வழக்கத்தில் ஒரு சபையில் தலைமை வகிப்போரை வாகனத்தில் பவனிவரச் செய்து, அவருக்குத் தாழ்ந்தோரே யன்றிச் சமமானோரும் உயர்ந்தோரும் பாதசாரிகளாய்ச் சென்று கவுரவிப்பது போலவும், விட்டுணு தேவ சபைத் தலைமை வகித்த சமயத்திற் செய்த உபசாரமே யென்று கூறலாம்.

பிரபலமான 'கறைமிடற்றிறை' யென்ற பாடமே சரியான பாடமாகக் கொண்டு நம் ஆராய்ச்சியை மேல் நடத்துவாம்.

'ஓரேனந் தனைத்தேட ஒளித்தருளும் இருபாதத் தொருவன்' * எனச் சிவனை விட்டுணுவினும் உயர்த்தியும் 'கடவுட் கங்கை நீர் முடித்தான் இரவொழித்த நீ'† என விட்டுணுவைச் சிவனினும் மேம்படுத்தியும் அவ்வவ் அமயத்துக்கேற்றவாறு இருபெருங் கடவுளரில் ஒருவரை ஏற்றமாகப் பல விடங்களிற் கூறும் வில்லிபுத்தூரர் பாரதம் போலக் கம்ப ராமாயணமும் சைவ வைணவ பாரபட்சமில்லாத இதிகாசமென்பது அதனை முற்றப் படிப்போர்க்குத் தெற்றெனப் புலப்படும். மேற்கூறிய 'ஆதி அந்தம் அரி' யென்னும் பாட்டில் கம்பர் விட்டுணுவை உயர்த்துக் கூறியவாறே, பாலகாண்டம், தாடகை வதைப்படலம் 3-ம் பாட்டில்,‡ சிவன் யோகிருந்த காமனுச்சிரம வருணனையில்,

> பற்றவா வேரொடும் பசையறப் பிறவிபோய்
> முற்றவா லுணர்வுமேல் முடுகினோர் அறிவுசென்
> றுற்ற வானவன்

எனச் சிவனை மேம்படுத்துக் கூறியுள்ளார். அங்கே சிவனுக்குப் பரத்துவங் கூறப்பட்டிருத்தல்போல, பாலகாண்டம், வேள்விப் படலம், 16-ம் பாட்டில்

> எங்கள்நால் மறைக்கும் தேவர் அறிவிற்கும் பிறர்க்கும் எட்டாச்
> செங்கண்மால்

என விட்டுணுவுக்குப் பரத்துவங் கூறப்பட்டிருத்தல் காண்க. ஈரிடத்தும் இரு மூர்த்திகளையும் யோக நிலையிலிருந்தாராகக் கூறியிருப்பது கவனிக்கத் தக்கது.

---

* பாரதம், அருச்சுனன் தவநிலைச் சருக்கம், 87.

† இந்நூல், 44-ம் பாட்டு. ‡ ஷை, கிருட்டிணன் தூதுச் சருக்கம், 15.

மேற்கூறிய இரண்டிடங்களில் விட்டுணுவை ஓரிடத்தும், சிவனை ஓரிடத்தும், சிறப்பித்துக் கூறிய கம்பர், சிவ விட்டுணுக் களைப்பற்றிப் பொதுப்படக் கூற நேர்ந்த சமயங்களில்,

அரன்அதிகன் உலகளந்த அரிஅதிக
னென்றுரைக்கும் அறிவி லார்க்குப்
பரகதிசென் றடைவரிய பரிசேபோல் * என்றும்,

யாரினும் உயர்ந்த மூலத் தொருவராம் இருவர் †

என்றும், இரு மூர்த்திகளையும் சமமாகக் கூறுவர். ஆகவே, சைவ வைணவ சமயங்களை ஏற்றத் தாழ்வில்லாத இரண்டு கண்கள் போலக் கம்பர் கருதினர் என்னலாம்.

கம்பர், பிறப்பினுலோ, வளர்ப்பினுலோ, பிறப்பு வளர்ப் பிரண்டினுலுமோ, வைணவரா யிருந்திருக்கலாம்; அல்லது சைவரா யிருந்திருக்கலாம்; அல்லது வேறு சமயியா யிருந் திருக்கலாம். அவர், எச்சமயத்தினராயிருந்தாலும், அச்சமய சம்பிரதாயங்களைத் தழுவி யொழுகி, அச்சமயிகள் பலரோ டொருவராய் அவரோடு பொருந்த இருந்திருப்பா ரென்பதிலும் தடையில்லை.

மிக மிகப் பலரான கண்ணில்லாரும் மிக மிகச் சிலரான கண்ணுள்ளாருஞ் சேர்ந்த ஒரு பெருங் கூட்டத்தில், பிந்திய சிலரே சூரியனைக் காணுதல்போல, மக்கட் பரப்பில் ஏகதேச மாகப் பரஞானக் கண் படைத்த ஒரு சிலரே பரம்பொருளென் னும் கடவுளைப் பார்ப்போராய்க் கடவுளுண்மையை நேராக அறிந்தவராவர்; மற்றைய சாதாரண சனங்களெல்லாம் கடவுள் உண்மையை அறியாதவரா யிருப்பதன்றி, அவ் வறியாமையை உணராராய்க் கடவுளில்லாரா யிருக்கின்றனர். ‡ கம்பர், பர ஞானக் கண் படைத்தவராய்ப் பரம்பொருளைப் பார்த்து அநு

---

* கிட்கிந்தா காண்டம், நாடவிட்ட படலம், 24. இப்பாட்டுப் பகுதிக்கு வெளிப் படையான செம்பொருளுக்கு விரோதமாக வைணவ சமயவாதிகள் '(விட்டுணுவே பரம்பொருளென்பது நிச்சயமாயிருக்கவும்) அரன் அதிகன்......பரிசேபோல்' என் றும், சைவ சமயவாதிகள் 'அரன் அதிகன்; (இவ் உண்மைக்கு மாருக) உலகளந்த அரி அதிகன்......பரிசேபோல்' என்றும் பொருள் கூறுவர்.

† பாலகாண்டம், பரசுராமப் படலம், 28.

‡ 'With the exception of those who have rare spiritual gifts, the generality of men, without their knowing it, are Godless'—RABINDRANATH TAGORE'S *Presidential Message to the Parliament of Religions*, Calcutta, 28th January, 1929. (*Vide* The Visva Bharati Quarterly, Vol. VII, p. 3.)

பவித்தவரா யிருந்தாலு மிருக்கலாம் ; அக்கண் ணில்லாமையால் பாராதவரா யிருந்தாலு மிருக்கலாம். அவர், சார்பால் எச் சமயத்தவராயினும், அநுபவ ஞானத்தாலோ ஆராய்ச்சி ஞானத் தாலோ, அவ் இருவகை ஞானங்களாலுமோ, கடவுள், சமயங்க ளெல்லாவற்றையுங் கடந்த பரம் பொருளென்றும், கடவுளின் ஓரோர் அம்சபூதரே ஒவ்வொரு சமயக் கடவுளுமென்றும், கொண்ட கொள்கை யுடையவராகக் கருதற்பாலர். அதை உரு பிக்க, அவரியற்றிய இராமாயணத்தில் அகச் சான்றுகள் மிகுந் துள்ளன. அவற்றுட் சில, பின்னர்க் குறிக்கப்படும்.

கம்பர் மேற் கூறிய மேலான கொள்கை யுடையவ ராதலா னன்றே, அவர், விட்டுணுவின் அவதாரமான ' காசில் கொற்றத் திராமன் கதை 'யில்,* இராமனைப் புகழ்தற் குரிய இடங்கள் இயல்பாகப் பலவா யுள்ளவைகளில், அவனைப் புகழு முகத்தால் விட்டுணுவைப் பரம்பொருளாகக் கொள்ளும்படி பலமுறை கூறி யிருப்பது போல, அக்கதையில் இயல்பாக ஏகதேசமாகச் சிவனைப்பற்றிக் கூற நேர்ந்தபோது சிவன் பரம்பொருளெனக் கருதும்படி கூறி யிருக்கிறார்.

' பற்றவா வேரொடும் பசைஅறப் பிறவிபோய்
முற்றவா லுணர்வுமேல் முடுகினர் அறிவுசென்
றுற்ற வானவன் '†

என்றதை நோக்குக. இன்னும், கம்பர், சிவனைப் பற்றிப் பேச நேரும்போது, எவ்வளவு பத்தி பரவச ராகின்று ரென்பதற்கு அடியில் வரும் பாட்டு ஓர் எடுத்துக் காட்டாம் —

ஆயதன் வடகீழ்ப் பாகத் தாயிரம் அருக்கர் ஆன்ற
காய்கதிர் பரப்பி அஞ்சு கதிர்முகக் கமலங் காட்டித்
தூயபே ருலகம் மூன்றும் தூவிய மலரிற் சூழ்ந்த
சேயிழை பாகத் தெண்தோள் ஒருவனை வணக்கம் செய்தான் ‡

சீதை, ' செங்கண்மால் நான்முகன் சிவனென் றேகொலோ— எங்கள் நாயகனையும் நினைந்த தேழைநீ '§ என, இராவணனை நோக்கிக் கூறியது, இங்கே ஆராய்தற்குரியது. செங்கண்மாலின் அவதாரமான இராமனைச் செங்கண்மாலென நினைந்தாயோ வென்பதன் பொருள் இராமன் திருமாலினும் அதிகன் என்பது

* கம்பராமாயணம், சிறப்புப்பாயிரம், 4.
† தாடகை வதைப் படலம், 3. இந்நூல் 44-ம் பாட்டு.
‡ உயுத்த காண்டம், மருத்துமலைப் படலம், 50.
§ சுந்தரகாண்டம், நிந்தனைப் படலம், 49.

தெளிவாம். இவ்வாறு கூறியதில் கம்பர் கருத்து யாதோ வெனில், பரம்பொருளின் அமிசம், இராமாவதார காலத்தில், திருமாலை யுள்ளிட்ட மும்மூர்த்திய ரெவர் பாலினும் அதிகமாக இராமன்பா லிருந்த தென்பது.

ஒரு பெரு நதி மூன்று கிளைகளாகித் திரும்பவும் ஒன்று சேர்ந்து ஒரே நதியான தொப்ப, 'யாரினும் உயர்ந்த மூலத் தொருவராம்'* ஏக மூர்த்தி, 'செங்கண்மால் நான்முகன் சிவனென்'னும் திரிமூர்த்திகளாகி 'ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் [வீற்றிருந்து, அவ் இருக்கைகளை] விட்டு [இராம னென்னும் ஒரு மூர்த்தியாகி] அயோத்தி வந்தான்' † என்றதனு லும், இராமனைத் திரிமூர்த்திகளில் ஒரு மூர்த்தியும் தனித்து ஒப்பாக மாட்டார், ஒன்றுசேர்ந்தால் மட்டும் ஒப்பாவாரென 'முளரிமேல் வைகுவான் முருகற் றந்தஅத்-தளிரியல் பாகத்தான் தடக்கை ஆழியான் — அளவிஒன் ருவரே யன்றி ஐயமில் — கிளவியர் தனித்தனி கிடைப்ப ரோதுணை?' ‡ என்றதனுலும், கம்பர் கருத்து, பரம்பொருள் திரிமூர்த்திக ளெவர் பாலினும் அதிகமாக இராமன்பால் முனைந்து நின்றதா மென்பது வலி யுறுதல் காண்க.

எச் சந்தர்ப்பத்தில் யார்பால் பரம் பொருள் முனைந்து நிற்கின்றதோ, அச் சந்தர்ப்பத்தில் அவரைப் பரம் பொரு ளெனக் கம்பர் உபசரித்துக் கூறுவர். உதாரணமாக, அனுமா னைப் பற்றி இராமன் 'என்றும்—நாட்படா மறைகளாலும் நவைபடா ஞானத்தாலும்—கோட்படாப் பதமே, ஐய, குரக் குருக் கொண்ட தென்ருன்'§ என்பதைக் காண்க.

கம்பர் உயிருக் குயிராகவும், உணர்வுக் குணர்வாகவும் ஒப் புயர் வற்ற தாகவும் கொண்ட கடவுள், எவ்வெத் தொழிலையும் நடத்துவோரையும் நடத்துவிக்கும் முழுத் தனி முதற் கடவு ளாய்ச் 'சமய வாதிகள் தத்தம் மதங்களில்—அமைவதாக அரற்றி மலைந்தனர்' ஆகும்படி செய்து நின்ற சமயாதீதப் பழம் பொருளான பரமபதியே யாம். (1)

---

* பாலகாண்டம், பரசுராமப் படலம், 28.

† சுந்தர காண்டம், பிணிவீட்டு படலம், 80.

‡ கிட்கிந்தா காண்டம், கலன்காண் படலம், 16.

§ கிட்கிந்தா காண்டம், அனுமப் படலம், 36. [நாட்படா - நாள் செல்லாத - இளமை மாருத. நவைபடா - குற்றப்படாத - குற்றமற்ற. கோட்படா - (அறிந்து) கொள்ளப்படாத. பதம் - பொருள்.—இலக்கியச் சொல்லகராதி.]

## அவையடக்கம்

நொய்தி னொய்யசொன் னூற்கலுற் றேனெனை
வைத வைவின் மராமர மேழ்துளை
எய்த வெய்தவற் கெய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொன்னின்ற தேயத்தே (2)

கொண்டுகூட்டு: (முனிவர்) வைத வைவின் ஏழ் மராமரம் துளை எய்த எய்தவற்கு (-இராமனுக்கு) எய்திய மாக்கதை(யைச்) செய்த செய்தவன் (-வான்மீகி) சொல் நின்ற தேயத்தே நொய்தின் நொய்ய சொல் (லால் ஒரு நூலை) நூற்கலுற்றேன். எ(ன்)னை!

பொருள்: முனிவர் சபித்த சாபம் தப்பாமற் பலிப்பதை ஒப்ப, ஒரே அம்பினால் ஏழு மராமரங்கள் ஒருங்கே துளைபடும்படி வன்மையோடு குறிதப்பாமல் எய்த இராகவனுக்கு உரியதாக அமைந்த பெருங்கதையைக் கூறிய வான்மீகி முனிவனது பிர பலமான வலிய காவியம் நிலைபெற்றிருக்கின்ற தேசத்திலே தானே, எனது அற்பத்தினும் அற்பமான எளிய சொற்களால் அந்தக் கதையையே யான் கூறப் புகுந்தேன்! என் அறியாமை இருந்தவாறு என்னே!

நொய்தின்நொய்ய - மெல்லிதினும் மெல்லிய - அற்பத்தினும் அற்ப மான. நூற்கல் - நூல் செய்தல். எனை - என்னை; ஆச்சரியம் அல்லது இகழ்ச்சி அல்லது இரண்டும் குறித்தது; என் அறியாமை இருந்தவாறு என்னே! என்ற பொருள்படச் சுருங்கச் சொல்லல் என்னும் வனப் பமைந்து நின்றது. வைத வைவின் - (முனிவர்) சபித்த சாபம் (தப்பா தது) போல. எய்த எய்தவன் - பொருந்தும்படி (அம்பு) எய்தவன் - இராமன். செய் தவன் - செய்தற்குரிய தவத்தை யுடையவன் அல்லது செய்து முடித்த தவத்தை யுடையவன் - வான்மீகி. சொல், ஆகுபெயராய் நூலை உணர்த்தி நின்றது; 'தேவர் குறளும்' என்ற வெண்பாவில் 'திருமூலர் சொல்', 'திருமூலர் திருமந்திரம்' என்னும் நூலைக் குறித்ததுபோல.

'எனை வைத வைவின்' என்பதற்கு 'என்னை யானே வைதுகொண்ட வசவு போல' என்றும் பொருள் கூறுவர். இப்பொருள் கொள்வதற்கு 'எனை வைத வைவின் நூற்கலுற்றேன்' எனக் கூட்டுக. மேற்கூறிய பொருள்கள் அல்லாமலும் 'வைத வைவின் மராமர மேழ் துளை—எய்த

வெய்தவற் கெய்திய மாக்கதை—செய்த செய்தவன்' என்பது வேறொரு முக்கிய விஷயத்தை உட்கொண்டு நிற்பதாம். என்னெனில்: வான்மீகர், ஒரு நாள் உச்சிப் போதில், தமசா நதிக்கு நீராடப் போகையில், ஆணும் பெண்ணுமாகக் கூடிக் களித்திருந்த கிரௌஞ்சப் பறவைகளில் ஆணை ஒரு வேடன் அம்பெய்து கொல்லப் பெண் கண்டு துடிக்கும் பரிதாப நிலையை (முனிவர்) நோக்கி மனம் பொறுமல், 'மாநிஷாத! ப்ரதிஷ்டாந்த்வம்' என்னுந் தொடக்கத்துச் சுலோகம் * தானே தமது வாக்கில் வர, அதனால் அவ் வனசரனைச் சபித்துச் சென்று நீராடி மீண்டு வந்த பின்னர், அச் சுலோகத்தின் மேற் சிந்தையோட, அதில் ஸ்ரீ ராம சரித்திர சங்கிரகப் பொருள் தொன்யார்த்தமாக விளங்கக் கண்டு, இது என்னையோ எனத் தெளியாது நிற்கையில், பிரமதேவர் அங்கு எழுந்தருளி ராமாயணத்தை உபதேசித்துப் பாடச்சொன்னதாகச் சரித்திரம் வழங்கி வருதலால், அப் பொருளையுங் குறிப்பித்தவாறும். இப் பொருளுக்கு 'வைத வைவில் எய்திய மாக்கதை' எனக்கூட்டி வேடனை வைத வசை மொழியில் மராமரந் துளைத்த 'ஸ்ரீ ராமனுக்குத் தொன்யார்த்த மூலமாகக் கிடைத்த மகத்துவ மான கதை' யெனப் பொருள்கொள்க. இந்தச் சுலோகந்தான், முதன் முதலாகச் செய்யுள் வடிவமாக வெளிப்பட்ட தென்றும், சோகங் காரணமாக வெளிவந்ததனால் அதற்குச் 'சுலோகம்' என்று பெயராயிற்று என்றும், வான்மீகம் ஆதிகாவ்ய மென்றுங் கூறுவர்.—சாமி சரவணப் பிள்ளை. †

பஞ்சைக்கொண்டு இராட்டினத்தில் நூற்று நூல் செய்தல் போலச் சொற்களைக்கொண்டு நூல் (-காவியம்) செய்தலை 'நூற்கல்' என்ற சொல்லாற் குறிப்பித்தார். தம் சொற்கள் பஞ்சுபோல மெல்லியன வென்றும் அச் சொற்களைக் கொண்டு செய்யும் நூலும் நூல் போலவே நொய்ய தென்றும், உய்த்துணர வைத்தார்.

பஞ்சிதன் சொல்லாப் பனுவல் இழையாகச்
செஞ்சொற் புலவனே சேயிழையா—எஞ்சாத
கையேவாய் ஆகக் கதிரே மதியாக
மையிலா நூல்முடியு மாறு

என்ற (நூலென்னும் பெயர்க் காரணங் கூறும்) வெண்பா இக் கருத்தை இனிது விளக்கும். (2)

---

* 'மாநிஷாத! பிரதிஷ்டாந் த்வம் அகமச் சாச்வதீஸ் ஸமா:- யத் க்ரௌஞ்ச மிதுநா தேகம் அவதீ: காம மோஹிதம்' [வேடனே! நீ க்ரௌஞ்ச மிதுனத்தினுள் காம மயக்கங்கொண்ட ஆண் பறவையைக் கொன்றதனால் என்றும் நற்கதியை அடையமாட்டாய்] என்று கூறிய சுலோகம் 'இலக்குமியை மார்பிற் கொண்டிருப் பவனே! க்ரௌஞ்ச மிதுனம் போன்ற ராவணன் மண்டோதரி என்ற இருவருக்குள் காம மோகிதனான ஒருத்தனை [இராவணனை]க் கொன்றாயாதலால், நீ பல்லாண்டு களில் பெரும் புகழ் பெறுவாய்' என்று இராமனை வாழ்த்தியதாக, ஒரு பொருளையும் கொண்டதாதல் காண்க.—வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியார்.

† விவேக பாநு, தொகுதி 2, பகுதி 1, பக்கம் 16.

வைய மென்னை யிகழவு மாசெனக்
கெய்த வும்மிதி யம்புவ தியாதெனின்
பொய்யில் கேள்விப் புலமையி ேனார்புகல்
தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே (3)

கொண்டுகூட்டு: என்னை வையம் இகழவும், எனக்கு மாசு எய்தவும், இது (-இதை) இயம்புவது யாதெனில், பொய் இல்(லாத) கேள்வி (உடைய) புலமையினோர் புகல் தெய்வ மாக் கவி மாட்சி(யைத்) தெரி(வி)க்கவே (என்பது).

பொருள்: 'இவனு, இப்பெருங் காவியத்தைச் செய்யத் தக்கவன்!' என்று உலகத்தார் என்னை இகழவும், எனக்குத் தோஷம் வந்து சேரவும், யான் இந்த நூலைக் கூறிய நோக்கம் யாதெனில், உண்மையான கல்விச் செல்வத்தோடு கேள்விச் செல்வமும் உடைய முந்திய புலவோர்கள் கூறியுள்ள தெய்வீக மகத்துவமுடைய கவிகளின் மாட்சிமையைத் தெரிவிக்கவே என்பது.

வையம் - உலகம்; உலகத்தார்க்கு ஆகுபெயர்; கல்வி கேள்வி முதலியவற்றால் உயர்ந்தோரைக் குறித்தது, 'உலக மென்ப துயர்ந்தோர் மாட்டே' யாதலால். இயம்புவது, இயம்புங் காரணம் அல்லது இயம்பு வதன் நோக்கம் என்ற பொருள் குறித்தது. 'பொய்யில் கேள்விப் புலமை யினோர்' என்றதை மரியாதைப் பன்மையாகக் * கொண்டு, வான்மீகி முனிவரைக் குறித்த தென்று கூறுவாரு முளர். 'கேள்வி' என்றதனால், 'கல்வி' உப லக்கணத்தாற் கொள்ளப் பட்டது. யாரும் நிழ லருமையை வெயிலில் நின்று தெரிதல் போல, விற்பன்னர்கள் பழைய புலவர்களின் கவிகளின் அருமையை என் கவிகளின் கேவலத்தைப் பார்த்துத் தெரிந்து கொள்ளும் பயன் கருதி, யான் எனக்குப் பழிப்பும் குற்றமும் வருவதைப் பொருட்படுத்தாமல் இந்நூலை இயற்றினே னென்பது கருத்து.

பாட பேதம்: புலமையினோன்; மாக்கதை. (3)

அறையு மாடரங் கும்படப் பிள்ளைகள்
தரையிற் கீறிடிற் றச்சருங் காய்வரோ
இறையு ஞானமி லாதவென் புன்கவி
முறையி னூலுணர்ந் தாரு முனிவரோ (4)

கொண்டுகூட்டு: பிள்ளைகள் அறையும் ஆடரங்கும் படத் தறையில் கீறிடில், தச்சரும் காய்வரோ? முறையின் நூல் உணர்ந்தார், இறையும் ஞானம் இ(ல்)லாத என் புன் கவி(யை) முனிவரோ?

* Honorific Plural.

**பொருள் :** விளையாடும் பிள்ளைகள் சிறு வீடும் பெரிய நடனசாலையும் போல வடிவம் தோன்றும்படி தரையிலே கோடுகள் கீறி விளையாடினால், அவைகள் சிற்ப நூற்படி யில்லையென்று சிற்பிகள் கோபிப்பார்களோ? கோபியார். அவ்வாறே, நூல்களுக்குரிய முறைகளையுடைய நூல்களைக் கற்று அறிந்தோர் ஆகிய வித்துவான்கள், அப்படிப்பட்ட அறிவு சிறிதுமில்லாத என்னு லியற்றப்பட் டிருக்கிற முறையற்ற அற்ப நூலை நோக்கி, 'இத்தகைய குற்றங் குறைகளுள்ள நூலை ஏன் செய்தாய்?' என்று என்னைக் கோபிப்பாரோ? கோபியார்.

அறை - சிறு வீடு. ஆடரங்கு - ஆடு அரங்கு - (கூத்து) ஆடும் சபை, நடன சாலை. பட - உண்டாக - தோன்ற. இறையும் - சிறிதும். முறையின் - முறையினை யுடைய. கவி - கவிகளா லாகிய காவியத்துக்கு ஆகு பெயர்.

பாட பேதம் : மடப்பிள்ளைகள், கீறிட, இறையுங் கேள்வியிலாத, நூலறிவாரும். (4)

---

# பால காண்டம்

இராமனது பாலப்பருவ சரித்திரத்தைக் கூறுவது

## 1. ஆற்றுப் படலம்

சரயு நதியைப் பற்றிக் கூறுவது

### ஆற்றுக்குக் காரணமான மேகவருணனை

**பம்பி மேகம் பரந்தது பானுவால்**
**நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினன்**
**அம்பி னாற்றுது மென்றகன் குன்றின்மேல்**
**இம்பர் வாரி யெழுந்தது போன்றதே** **(5)**

கொண்டுகூட்டு : மேகம் (விண்ணில்) பம்பிப் பரந்தது, நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினன், (ஆதலால்) அம்பின் ஆற்றுது மென்று (அந்த மாதுலனாகிய) அகல் குன்றின்மேல் இம்பர் வாரி எழுந்தது போன்றது.

**பொருள் :** மேகம் இமய மலைக்கு மேலே விண்ணிலே பரவினது, 'சிவனுக்கு மாமன் ஆகிய இமய பர்வத ராசன் சூரியனால் வெப்ப மடைந்திருக்கிறான், ஆதலால் நாம் மேகமாக விண்ணிலே எழுந்து மழை நீரினால் அந்த வெப்பத்தைத் தணிப்போம்' என்று அந்த மலைக்கு மேலே கடல் பரந்தது போன்றது.

பம்பி - எழுந்து. பானு - சூரியன். நம்பன் - சிவன். மாதுலன் - மாமன். அம்பின் - நீரின் ; நீரினால். ஆற்றுதும் - தணிப்போம். இம்பர் - இவ்வுலகம். உமாதேவி இமயபர்வத ராசன் குமாரியாதலால், நம்பன் மாதுலன் என்பது இமயமலையைக் குறித்தது. 'நம் - (கடலாகிய) நமது ; பன்னும் - சொல்லும், துதிக்கப்பெற்ற ; மாதுலன் - (கங்கை நதியாகிய நமது மனைவியைப் பெற்ற) மாமன் (ஆகிய இமயமலை)' என்றும் பொருள் கூறுவர். அவர், நம்பல் மாதுலன் எனச் சந்தி பிரித்து, நம்புதற்குரிய (-விரும்புதற்குரிய) மாமனென்று பொருள் கூறலுமா மென்பர். நதிகளை மனைவியரென்றும் அவைகள் சங்கமிக்கும் கடலை அவற்றின் கணவனென்றும் கூறுதல் கவி மரபு. (சங்கமித்தல் - கலத்தல்.) 'தாயர் வீடு விட்டுத் தலைவர் வீடு நோக்கிச் செல்லும் கற்புடைத் தலைமகளிர்,

தாயர் வீட்டுக்கு என்றும் திரும்பிச் செல்ல எண்ணு ரன்றே ! அப்படிப் பட்ட கற்புடையார் போல, நதிகள் தாம் பிறந்த மலையினின்று புறப்பட்டுக் கடலை நோக்கிச் செல்லா நிற்பன ; ஒருகாலும் திரும்பி மலைநோக்கிச் செல்லுவதில்லை ' என்ற கருத்துப் புலப்பட ஓர் ஆங்கில கவி கூறியது மேலே கூறிய கருத்தை ஒத்திருப்பது கவனிக்கத் தக்கது.

கார்காலத் துவக்கத்தில் கடல்நீரை உண்ட மேகம் இமய மலைக்கு மேலே பரந்த தோற்றம், உமா தேவியின் தந்தை யாகிய அந்த மலை கார் காலத்துக்கு முந்திய கோடை வெயிலால் தாபமுற்றிருப்பதைத் தண்ணீர் பொழிந்து தணிப்போ மென்று மண்ணில் உள்ள கடல் விண்ணில் எழுந்து விளங்கிய காட்சி போன்றிருந்தது, என்றவாறு.

பாட பேதம் : அம்பினுட்டுதும். (5)

### சரயுநதியின் தன்மை

இரவி தன்குலத் தெண்ணில்பல் வேந்தர்தம்
பரவு நல்லொழுக் கின்படி பூண்டது
சரயு வென்பது தாய்முலை யன்னதிவ்
உரவு நீர்நிலத் தோங்கு முயிர்க்கெலாம் (6)

கொண்டுகூட்டு : (கோசலநாட்டு ஆறு) இரவி தன் குலத்து எண் இல் பல் வேந்தர்தம் பரவு நல் ஒழுக்கின் படி பூண்டது ; சரயு என்பது ; இவ் உரவு நீர் (சூழ்ந்த) நிலத்து ஓங்கும் எல்லா உயிர்க்கும் தாய்முலை அன்னது.

பொருள் : கோசலநாட்டு ஆறு, என்றும் இடை வற்றுமல் ஒழுகுதலால், சூரியகுலத்தில் ஒருவர்பின் ஒருவராக நெடுங் காலம் இடையீடின்றி அரசாண்ட எண்ணிறந்த அரசரது இடையருத நல்லொழுக்கின் தன்மையை உடையது ; சரயு என்னும் பெயருடையது ; உலகத்தில் அபிவிருத்தி அடையா நின்ற உயிர்களெல்லாவற்றுக்கும் தன் நீரையும் அதனுல் விளையும் உணவுப் பொருள்களையும் உண்ண உதவி, நீரும் உணவும் ஒருங்கே அமைந்த பாலைக்கொடுத்துக் குழந்தைகளை வளர்க்கும் தாய்முலை ஒத்தது.

பரவு - புகழ்தற்குரிய. படி - தன்மை. ஒழுக்கு - ஒழுக்கம். என்பது - என்று சொல்லப்படுவது. ' இல்வாழ்வான் என்பான் ' என்னும் குறளில் ' என்பான் ' எனப்படுவான் என வருதல் காண்க. உரவு நீர் நிலம் - உலாவிய கடல் (சூழ்ந்த) பூமி. உரவுதல் - உலாவுதல்.— த. அ. நீர் - கடல்.—உரி. நிக. இடப்பெயர்த் தொகுதி, அ. உயிர்க்கெலாம் - உயிர்க ளெல்லாவற்றுக்கும் - உயிருள்ள சகல சராசரப்பொருள்களுக்கும். ' நீர்

நிலம்' என்பது, பூமியைப் பொதுப்படக் குறிப்பதாயினும், இங்கே கோசல நாட்டைக் குறித்தது.

இருபது பாட்டுக்க ளடங்கிய இந்த ஆற்றுப்படலத்தில், இந்தப் பாட்டிலே தான் 'சரயு' என்று கோசலநாட்டின் ஆற்றுப்பெயர் கூறப்பட்டிருப்பது காண்க. இப்பாட்டிலே கூறப்பட்ட 'உயிர்க்கெலாம் சரயு என்பது தாய்முலை அன்னது' என்ற உவமை மிகவும் சிறந்த உவமை. உவமானப் பொருளுக்கும் உவமேயப்பொருளுக்கும் உள்ள ஒற்றுமை நயம், ஊன்றி நினையுந்தோறும் அதிகமாகப் புலப்பட்டு மேன்மேலும் பெருகும் மகிழ்ச்சியை விளைக்கின்றது. இதன் இனிமையை அவரவர் உணர்ந்தறியலாமே யன்றி, பிறர் எடுத்துச் சொல்லித் தாம் முழுதும் உணர்தல் முடியாதது. இத்தகைய உவமைகள், வான்மீகர், காளிதாசர், வள்ளுவர், கம்பர் போன்ற உத்தமோத்தம கவிகள் உள்ளத்திலேயே உதயமாவன. (6)

### சரயுநதி பரம்பொருளை ஒத்திருத்தல்

**கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்**
**எல்லையில் மறைகளாலு மியம்பரும் பொருளீ தென்னத்**
**தொல்லையி லொன்றே யாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சி**
**பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும்போற் பரந்த தன்றே**

**கொண்டுகூட்டு :** கல் இடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம், எல்லை இல் மறைகளாலும் இயம்பு(தல்) அரும் பொருள் ஈது என்னத் தொல்லையில் ஒன்றே ஆகி(ப் பின்பு) துறை தொறும் பரந்த சூழ்ச்சி(யால்) பல் பெரும் சமயம் சொல்லும் (அப்) பொருள் போற் பரந்தது.

**பொருள் :** இமயமலையிலே உற்பத்தியாகி ஓடிக் கடலிலே சேர்ந்த அந்த நதி வெள்ளமானது, அளவில்லா வேதங்களாலும் சொல்லுதற்கரிய பரம்பொருள் போல்வது இது என்று சொல்லும்படியாக, ஆதியில் ஒன்றேயாகிப், பின்பு பல பிரிவாய், ஏரி, குளம் முதலிய நீர்த் துறைகள் ஒவ்வொன்றிலும் பரவிய தன்மையால், பலபெருஞ் சமயங்களும் தம் தம் தெய்வமென்று கூறும் ஒரு பரம்பொருள் பலவாய் எங்கும் வியாபித்தது போல வியாபித்தது.

கல் இடை - (இமய) மலையில். போந்து - சென்று. நீத்தம் - (சரயு நதியின்) வெள்ளம். தொல்லை - பூர்வம், ஆதி. துறை - நீர்த்துறை, இடம். சூழ்ச்சி - ஆராயும்படியான தன்மை(யால்). பொருள் - வஸ்து, கடவுள். 'பொருளும் போல்' என்பதில் உம்மை அசை.

'சூழ்ச்சி'யின் பின் ஆல் உருபு தொக்கது; இது போலத் 'தையல் தளிர்க்கை தடக்கை பிடித்தான்' (பாலகாண்டம், கடிமணப் படலம், 90) என்பதில் 'தடக்கை'யின் பின் ஆல் உருபு தொக்கதனை நோக்குக. இக்கவியை அடிஒற்றியது பின் வருவது—

திங்கள் சூடிய தேவ னொருவனே
பொங்கு பல்சம யப்பொரு ளாதல்போ
லங்கங் கேபகுத் தாயிர மாமுகக்
கங்கை போன்றது சித்திர கங்கையே * (7)

சரயு நதி உயிரை நேர்தல்

**தாதுகு சோலை தோறுஞ் சண்பகக் காவு தோறும்**
**போதவிழ் பொய்கை தோறும் புதுமணற் றடங்க டோறும்**
**மாதவி வேலிப் பூக வனம்தொறும் வயல்க டோறும்**
**ஓதிய உடம்பு தோறு முயிரென வுலாய தன்றே (8)**

கொண்டுகூட்டு: (அந்த ஆற்று வெள்ளம்) தாது உகு சோலை தோறும் சண்பகக் காவு தோறும் போது அவிழ் பொய்கைதோறும் புது மணல் தடங்கள் தோறும் மாதவி வேலிப் பூக வனந்தொறும் வயல்கள் தோறும் (சென்று) ஓதிய உடம்புதோறும் உயிர் (புகுந்து உலாவுதல்) என உலா(வி)யது.

பொருள்: அந்த ஆற்றுவெள்ளம், பலமரக் காவுகள், சண்பகச் சோலைகள், தடாகங்கள், மணற்கேணிகள், கமுக வனங்கள், வயல்கள், ஆகிய இவைகளெல்லாவற்றிலும் சென்று, எல்லா உடம்புகளிலும் உயிர் புகுந்து உலாவுதல் போல உலாவியது.

தாது - பூந் தாது, மகரந்தத் தூள். உகுதல் - சிந்துதல். போது - மலரும் பருவத்தினை யுடைய அரும்பு. அவிழ்தல் - விரிதல் - மலர்தல். மணல் தடம் - மணற்கேணி. மாதவி - குருக்கத்தி மரம். பூகம் - கமுகு. உயிர் என - உயிர் (புகுந்து உலாவுதல்) போல.

உயிரின் சம்பந்தத்தால் உடல்கள் செழித்திருத்தல் போல, சரயு நதிச் சலத்தின் சம்பந்தத்தால் சோலைகள் முதலியவை செழிப்புடையன என்பது கருத்து. (8)

பாட பேதம்: புது மணத் தடங்கள்.

---

* திருக்குற்றாலத் தலபுராணம், திருநதிச் சருக்கம். 21.

# 2. நாட்டுப் படலம்

கோசல நாட்டைப் பற்றிக் கூறுவது

**மருதத் திணை அரசு வீற் றிருத்தல்**

**தண்டலை மயில்க ளாடத் தாமரை விளக்கந் தாங்கக்
கொண்டல்கண் முழவி னேங்கக்குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை யெழினி காட்டத் தேம்பிழி மகர யாழின்
வண்டுக ளினிது பாட மருதம்வீற் றிருக்கு மாதோ (9)**

கொண்டுகூட்டு : தண்டலை (யில்) மயில்கள் ஆட, தாமரை விளக்கம் தாங்க, கொண்டல்கள் முழவின் ஏங்க, தெள்(ளிய) திரை எழினி காட்ட, வண்டுகள் தேம்பிழி மகர யாழின் இனிது பாட, (தன்) குவளைக் கண் விழித்து நோக்க, மருதம் (அரசு) வீற்றிருக்கும்.

பொருள் : கோசல நாட்டிலே சோலையாகிய அரசிருக்கை மண்டபத்தில், மயில்களாகிய நடனமாதர்கள் நர்த்தனஞ் செய்யச் செந்தாமரைக் கொடிகளாகிய பெண்கள் மலர்களாகிய தீபங்களை ஏந்த, மேகங்களாகிய மத்தளகாரர்கள் இடி முழக்க மாகிய மத்தள முழக்கம் செய்யத், தடாகங்களாகிய நாடகத் திரையிடுவோர் அலைகளாகிய திரையிட, வண்டுகளாகிய யாழ்ப் பாணர்கள் யாழோசை போல ரீங்காரமாகிய பாட்டுப்பாடக், குவளை மலர்களாகிய தன் கண்கள் மலர விழித்துக் கவனமாகப் பார்க்க, நிகழும் நாடகத்தின் ஆடல் பாடல்களைக் கண்டு கேட்டுக் களித்து மருதத்திணை அரசு, கொலு வீற்றிருக்கும்.

தண்டலை - சோலை. முழவின் - மத்தளம் போல. தெள் திரை - தெளிவான அலை. எழினி - (நாடகத்) திரைச் சீலை. தேம் பிழி யாழின் - இனிமை (உள்ள) தேன் (போன்ற இனிய) வீணை (ஓசை) போல. ‘ குவளைக் கண் ’, ‘ குவளை கண் ’ என வந்தது செய்யுள் விகாரம். (9)

**அன்னக் குஞ்சு, தவளை தாலாட்டத் தூங்குதல்**

**சேலுண்ட வொண்கணாரிற் றிரிகின்ற செங்கா லன்னம்
மாலுண்ட நளினப் பள்ளி வளர்த்திய மழலைப் பிள்ளை
காலுண்ட சேற்று மேதி கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத் தேரைதா லாட்டும் பண்ணை (10)**

கொண்டுகூட்டு : பண்ணை(யிலே), சேல் உண்ட ஒள் கண்ணாரின் திரிகின்ற செங்கால் அன்னம் மால் உண்ட நளினப்பள்ளி வளர்த்திய

மழலைப்பிள்ளை, கால் உண்ட சேறு (உடைய) மேதி கன்று உள்ளிக் கனைப் பச் சோர்ந்த பால் உண்டு துயிலப் பச்சைத் தேரை தாலாட்டும்.

பொருள் : வயல்களிலே அன்னங்கள் தாமரைமலர்களாகிய படுக்கைகளிலே படுக்கவைத்த இளங்குஞ்சுகள், எருமைகள் ஊரில் விட்டுவந்த கன்றுகளை நினைத்துக் கனைக்க வடிந்த பாலை உண்டு தூங்க, தவளைகள் தாலாட்டுதல்போலக் கத்தும்.

'சேல் உண்ட' என்பதில், 'உண்ட' என்பது அதன் செம்பொருளாகிய 'புசித்த' என்று பொருள்படாமல், 'ஒத்த' அல்லது வென்ற என்று பொருள்பட நின்றது. 'உண்ட' உள்ள இடத்தில் 'வென்ற' இருப்பினும் செய்யுளிலக்கணமும் ஓசை நயமும் குன்று எனினும், 'உண்ட' என்று கவிபாடியது தொடைநயங் கருதி. ஒள் கண்ணாரின் திரிகின்ற - ஒளி மிகுந்த கண்களையுடைய மாதர் போல நடக்கின்ற. மால் - (மற்றெல்லா மலர்களினும் சிறந்த) பெருமை. உண்ட - பொருந்திய. நளினப் பள்ளி - தாமரை மலராகிய படுக்கை(யில்). வளர்த்திய - கிடத்திய. வளர்த்தல் - வளரச் செய்தல்-கண்வளரச் செய்தல்,உறங்கச் செய்தல்-உறங்க (படுக்கையிலே) கிடத்துதல் : இவ்வாறாக, 'வளர்த்தல்' என்பது 'படுக்கையில் (தூங்கும்படி) கிடத்துதல்' என்று பொருள்படலுற்றது. 'மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்' என வருதல் காண்க. மழலை - குதலை. அன்னம் மாதர்போல நடப்பதாகவும் தவளை தாலாட்டுவதாகவும் வருணித்ததற்கியைய அன்னக் குஞ்சை மழலைப்பிள்ளை யென்றார். கால் உண்ட சேற்று மேதி - காலிற்பொருந்திய சகதியையுடைய எருமை. சகதியில் மிதித்துச் சகதி ஒட்டிய காலை உடைய எருமை. கன்று உள்ளி - (ஊரில் விட்டு வந்த) கன்றை நினைத்து. பண்ணை - வயல்(களிலே).

அன்னம், வயலிலே வேலைசெய்யும் மாதரது நடைபோல நடக்க விரும்பி, அவ்விருப்ப மிகுதியால் தூங்கக் கிடத்திய தன் குஞ்சை மறந்து, அம் மாதர் நடப்பது போல நடக்கப் பழகித் திரியா நிற்க, அக் குஞ்சு விழித்துப் பசியால் வருந்திக் கீச்சிடுவதைக் கண்ட எருமை தன் கன்றை நினைத்துக் கனைத்துப் பால் சொரிய, அப் பாலை அக் குஞ்சு உண்ணலால் அதற்கு அவ் எருமை தாய்க்குப் பதிலாகப் பாலூட்டும் முலைத்தாயாக, அக் குஞ்சு பசியாறித் தூங்கத் தொடங்க, அதற்குத் தாலாட்டத் தாயில்லாக் குறையை நிரப்பக் கருதிய வளர்ப்புத் தாய்போலப் பச்சைத் தவளைகள் கத்தித் தாலாட்டும் வளமுடையது வயல், என்றவாறு. (10)

எருமைகள் பால் சொரிய நெற்பயிர் வளர்தல்

ஈர நீர்படிந் திந்நிலத் தேசில
கார்க ளென்ன வருங்கரு மேதிகள்
ஊரி னின்றகன் றுள்ளிட வுண்முலை
தாரை கொள்ளத் தழைப்பன சாலியே (11)

கொண்டுகூட்டு : இந் நிலத்தே சில கார்கள் (உண்டு) என்ன ஈர நீர் படிந்து வரும் கரு மேதிகள், ஊரில் நின்ற கன்று(களை) உள்ளிட, உண் முலை(யிலிருந்து பால்) தாரைகொள்ளச் சாலி தழைப்பன.

பொருள் : விண்ணிலேயன்றி மண்ணிலேயும் மேகங்கள் உண்டென்று சொல்லும் படியாக மேகங்கள் கடல் நீரிற் படிதல் போலத் தடாக நீரிற் படிந்து தம் ஊர் நோக்கி வரும் கரிய எருமைகள், தம்மோடுகூட மேய்ச்சல் நிலத்துக்கு வாராமல் ஊரிலே நின்று விட்ட தம் கன்றுகளை நினைக்க, அதனால் அக் கன்றுகள் உண்ணும் மடியிலிருந்து பால் வடிய, அந்தப் பால் வயலிற் பாய்தலால் நெற்பயிர்கள் செழித் தோங்கும்.

ஈரம் - குளிர்ச்சி. உள்ளிட - நினைத்தலால். தாரை கொள்ள - வடிய. சாலி - நெல் ; ஆகுபெயராய் நெற் பயிரை உணர்த்தியது. விண்ணிலுள்ள மேகம் போலக் கருமை பெருமை யுடைமையால் எருமைகள் மண்ணில் உள்ள மேகங்க ளெனப் பட்டன. அதற்கியைய அம் மேகங்கள் நீர் பொழிந்து பயிர் வளர்த்தல் போல இம் மேகங்கள் பால் சொரிந்து பயிர் வளர்க்கு மென்றார். (11)

### மாதர்களது சிறப்பு

பெருந்த டங்கட் பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமுங் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்
விருந்து மன்றி விளைவன யாவையே (12)

கொண்டுகூட்டு : பெரும்தடம் கண் பிறைநுதலார்க் கெல்லாம் பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால், (அவர்கள்) வைகலும் வருந்தி வந்தவர்க்கு ஈதலும் (விருந்தினர்க்கு) விருந்து (இடுவது) மன்றி விளைவன யாவையே.

பொருள் : மாதர்களுக் கெல்லாம் செல்வமும் கல்வியும் ஒருங்கே உண்டா யிருத்தலினால், நாள்தோறும் தரித்திரத்தினால் வருந்தித் தம்பால் வந்தோர்க்கு அவர்கள் வேண்டுவன கொடுத் தலும் விருந்தினர்க்கு விருந்திடலுமன்றி உண்டாவன ஆகிய வேறு சிறந்த வேலைகள் எவை இருக்கின்றன ? ஒன்றுமில்லை.

செல்வம், இரவலர்க்கு ஈதலுக்கும் விருந்தோம்புதலுக்கும் சாதனம் ; கல்வியறிவு, அந்த ஈதலையும் ஓம்புதலையும் தக்கவாறு செய்தற்குச் சாதனம். இவ்வாறு கல்வியும் செல்வமும் ஒன்றற்கொன்று பொருத்தமாயிருத்தல் பற்றிப் 'பொருந்து செல்வமும் கல்வியும்' என்றார். கம்பர் காலத்தில்

பெண்கல்வி பரவியிருந்த தென்பது இந்தக் கவியினுல் பெறப்படுகிறது. 'எலாம்' என்பது பெண்கல்வி மிகுதியை வற்புறுத்துகின்றது. (12)

### நாட்டின் வளமும், குடிகளின் ஒழுக்கமும்

கலஞ்சு ரக்கும் நிதியங் கணக்கிலா
நிலஞ்சு ரக்கும் நிறைவள நன்மணி
பிலஞ்சு ரக்கும் பெறுதற் கரியதங்
குலஞ்சு ரக்கு மொழுக்கங் குடிக்கெலாம் (13)

கொண்டுகூட்டு : குடிக்கெலாம், கலம் கணக்கிலா நிதியம் சுரக்கும்; நிலம் நிறை வளம் சுரக்கும்; பிலம் நல் மணி சுரக்கும்; தம் பெறுதற்கரிய குலம் ஒழுக்கம் சுரக்கும்.

பொருள் : அந்த நாட்டுக் குடிக ளெல்லாருக்கும் மரக்கலங்கள், பிற தேயங்களினின்று கொண்டுவந்து திரவியங்களைக் கொடுக்கும் ; பூமியின் மேலுள்ள அளவற்ற நிலங்கள், நிறைந்த விளைபொருள்களைக் கொடுக்கும் ; பூமியின் கீழ் உள்ள சுரங்கங்கள், நல்ல இரத்தினங்களைக் கொடுக்கும் ; அவர்களது பெறுதற்கருமையான குடிப்பிறப்பு, நல்லொழுக்கத்தைக் கொடுக்கும்.

கலம் - மரக்கலம். வளம் - (விளைபொருள்களாகிய) பல பண்டங்கள்; பிலம் - கீழ்ப்பூமி (யில் உலோகங்களும் மணிகளும் அகப்படும் சுரங்கம் ; அல்லது கனி). (13)

### முறை பிறழாமை

நெறிக டந்து பரந்தன நீத்தமே
குறிய ழிந்தன குங்குமத் தோள்களே
சிறிய மங்கையர் தேயும் மருங்குலே
வெறிய வும்மவர் மென்மலர்க் கூந்தலே (14)

கொண்டுகூட்டு ; நீத்தமே, நெறி கடந்து பரந்தன ; குங்குமத் தோள்களே குறி அழிந்தன ; மங்கையர் தேயும் மருங்குலே சிறிய ; அவர் மென்மலர்க் கூந்தலே வெறிய.

பொருள் : அந்த நாட்டிலே வெள்ளங்களே நெறி கடந்து கரை புரண்டு செல்வன ; மக்கள் தத்தமக் குரிய நெறி கடந்து செல்லார்கள். மைந்தரது குங்குமம் அணிந்த தோள்களே மாதரைத் தழுவி அக் குங்குமக் குறி அழிவன; தவசக் குவியல் திரவிய சாலை முதலியவை களவு செய்யப்பட்டால் தெரியும்படி இடும் முத்திரைக்குறி அழிதல் இல்லை. மாதர் இடைகளே சிறுமையுடை

யன; அன்றிச் சிறுமையுடையார் இல்லை. அவர்களது மலர் மாலை உடைய கூந்தலே வெறி (-வாசனை) உடையன; அன்றி வெறி (-மயக்கம்) உடையார் இல்லை.

'சிறிய' என்பதற்குச் சிறுமை யுடையன வென்று பொருள் கொண்டதுபோல, 'வெறிய' என்பதற்கு வெறுமை யுடையன வென்றும் பொருள் கொள்ளலாம். அப்பொருள் கொண்டால், மேலே 'மயக்கம் உடையார் இல்லை' யென்றதனை, 'வெறுமை (-இன்மை - தரித்திரம்) உடையார் இல்லை' எனக் கொள்ளல் வேண்டும். இப்பாட்டில் குணங்களைக் குற்றங்கள் போலக் கூறிச் சிறப்பித்திருக்கும் கவி சாதுரியம் கண்டுகளிக்கத்தக்கது. 'வெறியவும்' என்பதில் உம்மை அசை. (14)

### மாதர்கள் குழந்தைகட்குப் பால் ஊட்டல்

தாலி யைம்படை தழுவு மார்பிடை
மாலை வாயமு தொழுகும் மக்களைப்
பாலி னூட்டுவார் செங்கை பங்கயம்
வானி லாவுறக் குவிவ மானுமே (15)

கொண்டுகூட்டு: தாலி ஐம்படை தழுவும் மார்பிடை மாலை (ஆக) வாய் அமுது ஒழுகும் மக்களைப் பாலின் ஊட்டுவார் செம்கை (குவிவது) வால் நிலா உறப் பங்கயம் குவிவ மானும்.

பொருள்: தாலியும் அதனுடன் தாலிச் சரட்டிற் கோத்த ஐம்படை அணியும் புரளும் மார்பிலே அணைத்து ஏந்தப்பட்டு வாய் நீர் வடியும் குழந்தைகளுக்குப் பாலூட்டுவார் ஆகிய மாதர்களுடைய கை பாலுள்ள பாத்திரத்தைப் பிடிக்கக் குவிவது, வெள்ளிய நிலாஉறத் தாமரை மலர் குவிவதனை ஒக்கும்.

ஐம்படை - ஐந்து ஆயுதங்கள் - திருமாலின் ஐந்து ஆயுதங்களாகிய சக்கரம், வில், வாள், தண்டு, சங்கு ஆகிய இவைகளின் உருவம் அமையச் செய்த பொன்னணிகள். தாலி ஐம்படை - தாலியாகிய பஞ்சாயுதம். புறநானூற் றுரைகாரர் ஐம்படைத் தாலி என்பர். (புற. 77).—அ. கு. தழுவும் - பொருந்திய. மாலை - ஒழுங்கு (ஆக). வாய் அமுது - வாய்நீர். மாலைவாய் அமுது ஒழுகும் என்பதற்கு (தம் மார்பின் மேல்) மாலை (போல) இரு கடைவாய் (நின்றும் உமிழ்) நீர் வடியும் என்றும் பொருள் கொள்ளலாம். பாலின், இன் சாரியை. மக்களைப் பாலின் ஊட்டுவார்-மக்களுக்குப் பாலை ஊட்டுவார். 'பாலின் ஊட்டுவார்' என்பதற்குப் பாலொடு சோற்றை யூட்டுவா ரென்றும் பொருள் கொள்ளலாம். வால் நிலா - வெண்மையான சந்திரிகை. 'குவிவது' எனற்பாலது துவ்விகுதி தொக்குக் 'குவிவ' என

நின்றது ; இந்நூல் 30-ம் பாட்டில் 'வருவது', 'வருவ' என வந்தது போல. கை, பங்கயம் குவிவ (னவற்றை) மானும் ( - ஒக்கும்) எனவும் கொள்ளலாம்.

ஐம்படை, மாதருக்கும் பிள்ளைகளுக்கும் பொது ஆபரண மெனினும் இங்கே தாலியோடு இயைந்து மாதர்க்குரிய ஆபரணமாகக் கொள்ள நின்றது. 'மாலை'க்கு மாலை நேரமெனப் பொருள்கொண்டு அதனை 'வால் நிலா'வோடு கூட்டுவாரும் உண்டு. அது வலிதிற் கொண்டுகூட்டுதலாம் ; இன்றியமையாதது மன்று. தாமரை கைக்கும், நிலவு பாலுக்கும், தாமரை நிலவு அணுகக் குவிதல், கை பால் அணுகக் குவிதலுக்கும் உவமை. (15)

## நாட்டின் நிறைவு

**வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்**
**திண்மை யில்லைநேர் செறுந ரின்மையால்**
**உண்மை யில்லைபொய் யுரையி லாமையால்**
**வெண்மை யில்லைபல் கேள்வி மேவலால் (16)**

கொண்டுகூட்டு : ஓர் வறுமை இன்மையால், வண்மை இல்லை ; நேர் செறுநர் இன்மையால், திண்மை இல்லை ; பொய் உரை இலாமையால், உண்மை இல்லை ; பல் கேள்வி மேவலால், வெண்மை இல்லை.

பொருள் : ஒருவர்க்கும் அற்ப தரித்திரமும் இல்லாததனால் இரப்பார் இல்லை, இரப்பார் இல்லாததனால் கொடை இல்லை ; எதிர்த்துப் போர் செய்யும் பகைவர் இல்லாததனால், வலிமை செலுத்தற்கு இடம் இல்லை ; ஒருவரும் பொய் கூறுமையால், எவரையும் இவர் உண்மை சிறந்ததெனச் சிறப்பித்துக் கூறுதற் குரிய உண்மை இல்லை ; எல்லாரும் கல்வி கேள்வி அறிவு பொருந்தியிருத்தலினால் எவரிடத்தும் அறிவின்மை இல்லை.

வண்மை - ஈகை. ஓர் வறுமை - சிறிது தரித்திரமும். திண்மை - வலிமை - பராக்கிரமம். நேர்தல் - எதிர்த்தல். செறுநர் - பகைவர். வெண்மை - வெளிற்றுத் தன்மை - அறிவின்மை.

ஒவ்வோரடியும் பொருள் முடிபுடைமையால், இப் பாட்டு அடிமறி மாற்றுப் பொருள் கோட்கு உதாரணமாம். இப் பாட்டில் முதன் மூன்றடியி லும் முற்பாதியில் வண்மை திண்மை உண்மை யென்ற நற்பொருள்களும், பிற்பாதியில் வறுமை பகைமை பொய்மை யென்ற தீப்பொருள்களும், இரு பாதிகளிலும் இன்மை குறிக்கும் மொழிகளும் அமையப் பாடிய கவி, அந்த மூன்றடிகளுக்கு முழுதும் பொருத்தமாகத் 'தண்மை இல்லை வெம் தாபம் இன்மையால்', 'ஒண்மை இல்லை பேதுறல் இலாமையால்' என்பவை போன்ற யாதாயினும் ஓர் அடியை நான்காம் அடியாகப் பாடாமல், அம் முதல் மூன்றடிகளுக்குக் குறைவான பொருத்தமுடையதாக, 'வெண்மை

இல்லை பல் கேள்வி மேவலால்' என்று, முற்பாதியில் 'வெண்மை' யென்ற தீப்பொருளும், பிற்பாதியில் 'கேள்வி' யாகிய நற்பொருளுடன் இன்மைக்கு எதிர்மறையாகிய உண்மை குறிக்கும் 'மேவல்' என்பதும் உள்ள அடியை நான்காம் அடியாகப் பாடியது கவனித்து ஆராயத்தக்கது. ஒண்மை - அறிவு; (உ - ம்.) 'ஒண்மை உடையம் யாம் என்னும் செருக்கு',—வள்., 844.—ச. அ.

'ஒண்மை யில்லை பல் கேள்வி யோங்கலால்' என்பதும் பாடம். அப் பாடத்திலும், ஏனைய மூன்றடிகளின் பிற்பாதியில் தீப்பொருளும் இன்மைச் சொல்லும் வருதல் போலன்றி, 'கேள்வி' யாகிய நற்பொருள் வருதலும் இன்மைச் சொல் வராமையும் குறிக்கத் தக்கவையாம். (16)

## நாட்டின் பரப்பு

**சோலை மாநிலந் துருவி யாவரே**
**வேலை கண்டுதா மீள வல்லவர்**
**சாலும் வார்புனற் சரயு வும்பல**
**காலி னோடியுங் கண்ட தில்லையே (17)**

கொண்டுகூட்டு: சோலை மாநிலம் துருவி யாவரே தாம் (அதன்) வேலை கண்டு மீள வல்லவர்? சாலும் வார் புனற் சரயுவும் பல காலின் ஓடியும் கண்டதில்லையே.

பொருள்: அந்தக் கோசல மென்னும் பெரிய தேசம் முடியச் சென்று தேடி எவர் தாம் அதன் எல்லை கண்டு, திரும்ப வந்து சொல்ல வல்லவர்? ஒருவரும் இல்லை. இது ஆச்சரிய மன்று. சரயு நதியே எண்ணிறந்த கால்களின் ஓடியும் அத் தேசத்தின் எல்லை கண்டதில்லையே!

சோலை - சோலைகளையுடைய. மா நிலம் - பெரிய தேசம். துருவி - தேடி. வேலை - எல்லை. சாலும் - மிகும் - திரண்ட. வார் புனல் - நெடு நீர் - நீள ஓடிச் செல்லும் நீர். கால், சிலேடையாய்க் கால் என்றும் வாய்க்கால் என்றும் இரு பொருள்படப் பிரயோகிக்கப்பட்டிருக்கின்றது. காலின் - கால்களால்; வாய்க்கால்களால் - வாய்க்கால்கள் வழியாக.

இப் பாட்டின் கருத்து பெரிய சரயுநதி எண்ணிறந்த காலாலும் ஓடிக் காண முடியாத கோசல நாட் டெல்லையைச் சிறிய மனிதர் இரண்டு காலாற் சென்று காண்ப தெவ்வாறு, என்றவாறு. (17)

# 3. நகரப் படலம்

*அயோத்தி நகரத்தைப் பற்றிக் கூறுவது*

**அயோத்தியின் பெருமை**

**செவ்விய மதுரஞ் சேர்ந்தன பொருளிற்**
**சீரிய கூரிய தீஞ்சொல்**
**வவ்விய கவிஞ ரனைவரும் வடநூன்**
**முனிவரும் புகழ்ந்தது வரம்பில்**
**எவ்வுல கத்தோர் யாவருந் தவஞ்செய்**
**தேறுவா ளுதரிக் கின்ற**
**அவ்வுல கத்தோ ரிழிவதற் கருத்தி**
**புரிகின்ற தயோத்திமா நகரம்** **(18)**

**கொண்டுகூட்டு :** அயோத்திமாநகரம், செவ்விய மதுரம் சேர்ந்த நற்பொருளின் சீரிய கூரிய தீம் சொல் வவ்விய கவிஞர் அனைவரும், வட நூல் முனிவரும் புகழ்ந்தது ; வரம்பு இல் எவ் வுலகத்தோர் யாவரும் தவம் செய்து ஏறுவான் ஆதரிக்கின்ற அவ் வுலகத்தோர் இழிவதற்கு அருத்தி புரிகின்றது.

**பொருள் :** அயோத்திமாநகரமானது, நேராகப் பொருள் படுவனவும், மனத்துக்கு இனிய நயமான அர்த்த முடையனவும், சிறந்தனவும், நுட்ப முடையனவுமாகிய, காதுக்கு இனிமை யான சொற்களைக் கொள்ளை கொள்ளும் சடகோப முனிவர் முதலிய தென் மொழிக் கவிவாணரும் வான்மீகி முனிவர் முதலிய வடமொழிக் கவிவாணராகிய முனிவரும் வருணித்துப் புகழ்ந்த சிறப்புடையது ; எல்லா உலகங்களிலும் உள்ளோ ரெல்லாம் தவஞ் செய்து ஏறி யடைதற்கு விரும்புகின்ற பரமபதத்தி லுள்ளோர் இறங்கி யடைதற்கு விரும்புகின்ற மகத்துவ முடையதா யுள்ளது.

எவ் வுலகத்தோரும் எனற் பாலது, செய்யு ளாதலால், எவ் வுலகத் தோரென உம்மை தொக்கது. ஆதரித்தல் - விரும்புதல். இழிதல் - இறங்குதல். அருத்தி - விருப்பம்.

வைகுந்த நாதன் வைகுந்தத்தை விட்டு (இராமனாக) அயோத்திக்கு வந்த மகிமையினால், வைகுந்தவாசிகளும் அந்த நகரத்துக்கு வர விரும்புவ ரென்பதை உய்த்துணரும்படி கம்பர் கூறி, அயோத்திக்கு அரசராகிய 'இராமர் போன இடம் அயோத்தி' என்னும் பழமொழிப்படி வைகுந்த நாதன் போன இடம் வைகுந்த மென்று வைகுந்தவாசிகள் அயோத்தியை

வைகுந்தமாகக் கருதும் இயல்பை இனிது குறிப்பித்தார். அடியில் வருவது இப்பாட்டின் பின்னிரண்டடியை அடியொற்றியதாகக் கொள்ளலாம்—

‘ மாண்டு பிறப்பொழிந்து வைகுந்தம் புக்கவரும்
மீண்டுதொழக் காதலிக்கும் வேங்கடமே ’ (18)

நிலமகண் முகமோ திலகமோ கண்ணோ
நிறைநெடு மங்கல நாணோ
இலகுபூண் முலைமே லாரமோ வுயிரி
னிருக்கையோ திருமகட் கினிய
மலர்கொலோ மாயோன் மார்பினன் மணிகள்
வைத்தபொற் பெட்டியோ மலரோன்
உலகின்மே லுலகோ வூழியி னிறுதி
யுறையுளோ யாதென வுரைப்பாம் (19)

கொண்டுகூட்டு : (அந்த நகரம்) நில மகள் முகமோ ? திலகமோ ? கண்ணோ ? நிறை நெடு மங்கல நாணோ ? இலகு பூண் முலைமேல் ஆரமோ ? உயிரின் இருக்கையோ ? திருமகட்கு இனிய மலர்கொலோ ? மாயோன் மார்பில் நல் மணிகள் வைத்த பொற் பெட்டியோ ? மலரோன் உலகின் மேலுலகோ ? ஊழியின் இறுதி உறையுளோ ? யாது என உரைப்பாம் ?

பொருள் : அந்த நகரம், இராமனாக அவதரித்த திருமாலின் மனைவியாகிய பூமிதேவியின் முகமோ ? அம் முகத்தைச் செயற்கையாக அலங்கரிக்கும் திலகமோ ? இயற்கையாக அழகு செய்யும் கண்ணோ ? அவள் மாங்கலியமோ ? அவள் மார்பின் மேல் அணியும் ஆபரணமோ ? அவள் உயிர்த் தானமோ ? திருமாலின் மற்றொரு மனைவியாகிய இலக்குமிக்கு இருப்பிடமாகிய தாமரை மலரோ ? திருமால் மார்பில் அணியும் கவுத்துவ மணி போன்ற ரத்தினங்கள் வைக்கப்பெற்ற பொற் பெட்டியோ ? பிரமாவின் உலகத்துக்கும் மேல் உலகமாகிய திருமால் வாழும் வைகுண்டமோ ? உகாந்த காலத்தில் எல்லா இடங்களும் அழிந்தொழியத் தானொன்றே, தன்னிடத்தே திருமால் அவதரித்து வளர்ந்து அரசாண்ட மகத்துவத்தினால் அழியாமல் உயிர்கள் வாழத்தக்கதாய் உள்ள வாசஸ்தலமோ ? இவற்றுள் அந்த நகரத்தை யாதென்று துணிந்து சொல்வோம் ?

இப்பாட்டு முழுதும் திருமால் சம்பந்தமான பொருள்கள் நிரம்பியிருப்பது நோக்கத்தக்கது.

(19)

**பெண்களின் அழகு**

பொழுதுணர் வரியவப் பொருவின் மாநகர்த்
தொழுதகை மடந்தையர் சுடர்வி ளக்கெனப்
பழுதறு மேனியைப் பார்க்கு மாசைகொல்
எழுதுசித் திரங்களு மிமைப்பி லாதவே (20)

கொண்டுகூட்டு : பொழுது உணர் வரிய அப் பொரு இல் மா நகர் (உள்ள) தொழு தகை மடந்தையர்(களுடைய) சுடர் விளக் கெனப் பழுது அறு மேனியைப் பார்க்கும் ஆசைகொல், எழுது சித்திரங்களும் இமைப்பிலாதவே !

பொருள் : எங்கும் இரத்தினப் பணிகள் மிகுந்து அவற் றின் பேரொலியால் எப்போதும் பகல்போ லிருத்தலால், இது பகல் இது இரவு என்று பொழுது விகற்பம் அறிய முடியாத அந்த நகரத்தில் உள்ள மாதரது வடிவத்தைப் பார்க்கும் விருப் பத்தினலோ, அவர் வாழும் மாளிகையில் எழுதப் பெற்றுள்ள சித்திரங்களும் இமையாதவைகளா யிருக்கின்றன !

பொருவு - ஒப்பு. இல் - இல்லாத. தொழு தகை மடந்தையர் - (கற்பினல்) தொழுந் தகுதி யுடைய மாதர். மடந்தையர் மேனி எனக் கூட்டுக. இயல்பாக இமையாத சித்திரங்களை, மாத ரழகைப் பார்க்க விரும்பியோ இமையாதனவா யிருக்கின்றனவென்று, அவரழகை அவாவி நோக்கும் ஆடவர் கண் இமையாத் தன்மையைச் சித்திரங்களின்மேலேற்றிக் கூறியது, தற்குறிப்பேற்ற அணி. இதனை உற்பிரேட்சை அலங்கார மென்பர் வடநூலார். மாதர் வனப்பை வாஞ்சித்து நோக்கும் மைந்தர் கண் இமையாமை பின்வரும் சிந்தாமணிப் பாட்டில் இனிது வருணிக்கப் பட்டிருப்பதைக் காண்க—

மாதர் தன் வனப்பு நோக்கி, மகிழ்ந்து, கண் இமைத்தல் செல்லான்,*
காதலித்(து) இருப்பக் கண்கள் கரிந்து நீர் வரக்கண்(டு), அம்ம !
பேதமை, பிறரை உள்ளி அழுபவர்ச் சேர்தல் என்ருள் ;
வேதனை பெருகி வேற் கண் தீ உமிழ்ந் திட்ட அன்றே (20)

**தெருக்கள், யானைத் தானங்கள், குதிரை வரிசைகள்**

இரவியிற் சுடர்மணி யிமைக்குந் தோரணத்
தெருவினிற் சிறியன திசைகள் சேண்விளங்
கருவியிற் பெரியன வானைத் தானங்கள்
பரவையிற் பெரியன புரவிப் பந்தியே (21)

கொண்டுகூட்டு : இரவியின் சுடர்மணி இமைக்கும் தோரணத்

* இமைக்கமாட்டாதவனய்.

தெருவினும் திசைகள் சிறியன; ஆனைத் தானங்கள் சேண் விளங்கு அருவியினும் பெரியன; புரவிப் பந்தி பரவையினும் பெரியன.

பொருள்: அந்த நகரத்துத் தெருக்களைக் காட்டிலும் திசைகள் சிறியவை (தெருக்கள் திக்குகளிலும் விசாலமானவை); யானைகளின் மதநீர் அருவிகள் மலை அருவிகளினும் பெரியவை; குதிரைப் பந்திகள் கடலினும் பெரியவை.

இரவியின் - சூரியனைப் போல. சேண் - ஆகாயம்; தூரம்; மலையினுச்சி. சுடர்மணி - ஒளியுடைய இரத்தினங்கள். இமைக்கும் - ஒளி செய்யும். சேண் விளங்கு அருவி - (மலையுச்சியில் தோன்றி) ஆகாயத்திலே பிரகாசிக்கும் அருவி.

### கல்விச் சிறப்பு

ஏகம் முதற்கல்வி முளைத்தெழுந் தெண்ணில் கேள்வி
ஆகும் முதற்றிண் பணைபோக்கி யருந்த வத்தின்
சாகந் தழைத்தன் பரும்பித்தரு மம்ம லர்ந்து
போகங் கனியொன்று பழுத்தது போலு மன்றே (22)

கொண்டுகூட்டு: (அந்த நகரத்தில்) கல்வி (மரம்) ஏகம் (ஆன முதல் முளைத்து எழுந்து, எண் இல் கேள்வி ஆகு அம் முதல் திண் பணை போக்கி, அரும் தவத்தின் சாகம் தழைத்து, அன்பு அரும்பித் தருமம் மலர்ந்து போகம் (ஆகிய) கனி ஒன்று பழுத்தது.

பொருள்: அந்த நகரத்திலே கல்வி ஆகிய ஒரு மர மூலம் முளைத்து வளர்ந்து, கேள்வியாகிய கிளை கிளைத்து, தவமாகிய தழை தழைத்து, அன்பாகிய அரும்பு அரும்பி, தருமமாகிய மலர் மலர்ந்து, போகமாகிய பழம் பழுத்தது, என்று கூறும்படி, அந்த நகரத்து மாந்தர், கல்வி கேள்வி தவம் அன்பு தருமம் போகம் ஆகியவைகளைச் சிறப்பாக உடையார்.

கல்வி ஏகம் முதல் முளைத்து - கல்வியாகிய ஒரு (மரத்து) மூலம் உண்டாகி. கேள்வி ஆகு அம் முதல் திண் பணை போக்கி - கேள்வியாகிய அழகிய வலிய அடிக் கிளை விட்டு. அரும் தவத்தின் சாகம் - அரிய தவமாகிய இலை. அன்பு அரும்பி - அன்பாகிய அரும்பு அரும்பி. தருமம் மலர்ந்து - தருமமாகிய பூப் பூத்து. போகம் கனி ஒன்று பழுத்தது - போகமாகிய பழம் ஒன்று பழுத்தது. போகம் என்பதில் அட்ட போகமும் அடங்கும். அட்ட போகம், எட்டு நுகர் பொருள்கள். அவையாவன: 1. பெண், 2. ஆடை, 3. அணிகலன், 4. போசனம், 5. தாம்பூலம், 6. பரிமளம், 7. பாட்டு, 8. பூ அமளி. (அமளி - மெத்தை.) போலும், அன்று, ஏ, அசைகள். (22)

# 4. அரசியற் படலம்

தசரதனது அரசாட்சி முறையைப் பற்றிக் கூறுவது

### தசரதன் குடிகளுக்கு உதவி புரிந்த துறைகள்

**தாயொக்கு மன்பிற் றவமொக்கு நலம்பயப்பிற்**
**சேயொக்கு முன்னின் றொருசெல்கதி யுய்க்கும்நீரான்**
**நோயொக்கு மென்னின் மருந்தொக்கு நுணங்குகேள்வி**
**ஆயப்பு குங்கா லறிவொக்கு மெவர்க்கு மன்னன் (23)**

**கொண்டுகூட்டு :** அன்னன், எவருக்கும் அன்பின் தாய் ஒக்கும்; நலம் பயப்பின் தவம் ஒக்கும்; முன் நின்று ஒரு செல்கதி உய்க்கும் நீரால் சேய் ஒக்கும்; நோய் ஒக்கும் என்னில், மருந்து(ம்) ஒக்கும்; நுணங்கு கேள்வி ஆயப் புகுங்கால் அறிவு ஒக்கும்.

**பொருள் :** இராமாயணக் கதை தொடங்குங் காலத்தில் அயோத்தி நகரத்திலிருந்து அரசாண்ட அரசன், எல்லாருக்கும், அன்பினல் தாயை நிகர்வான்; நற்பலன் அளிப்பதில் தவத்தை ஒப்பான்; செல்லுதற் குரிய நற்கதியிற் செலுத்துவதில் மறுமையில் நற்கதியிற் சேர்க்கும் புத்திரனை நேர்வான்; தண்டனை செய்வதில் நோய் போல்வான் என்றாலோ, தயை செய்வதில் மருந்தும் போல்வான்; நுண்ணிய நூல்களை ஆராயப்புகுந்தால் நுட்பமான பொருள்களைக் கண்டு பிடிக்கும் அறிவுக்குச் சமானமாவான்.

'எவர்க்கும்' என்பதைத் 'தாய் ஒக்கும்' 'தவம் ஒக்கும்' என்பவை முதலியவற்றுக்கு முன் இயைத்துப் பொருள் கொள்க. நலம் பயப்பின் - நன்மை பயப்பதில். உய்க்கும் நீரால் - செலுத்தும் தன்மையினல். நுணங்குதல் - நுணுகுதல். கேள்வி - நூல்.—சிந்தா. அன்னன் - அத்தன்மையினன் - இப் படலத்தில் இதற்கு முந்தியவையான முதல் மூன்று பாட்டுக்களிற் கூறிய தன்மைகளை யுடையவன். 'நோயொக்கு மென்னின் மருந் தொக்கும்' என்பதற்கு 'நோய் பொருந்தினல் (அதனை நீக்குவதில்) மருந்துபோல்வான்' என்றும் பொருள் கொள்ளலாம். ஒத்தல் - இயைதல்.—பரிபா; பொருந்தல்.—ச. அ. (23)

### தசரதனது வண்மை, நூலாராய்ச்சி, முதலியன

**ஈந்தே கடந்தா னிரப்போர்கட லெண்ணினுண்ணூல்**
**ஆய்ந்தே கடந்தா னறிவென்னு மளக்கர்வாளாற்**
**காய்ந்தே கடந்தான் பகைவேலை கருத்துமுற்றத்**
**தோய்ந்தே கடந்தான் றிருவிற்றொடர் போகபௌவம் (24)**

கொண்டுகூட்டு : இரப்போர் கடல் ஈந்தே கடந்தான் ; அறி வென்னும் அளக்கர் எண் இல் நுண் நூல் ஆய்ந்தே கடந்தான் ; பகை வேலை வாளால் காய்ந்தே கடந்தான் ; திருவின் தொடர் போக பௌவம் கருத்து முற்றத் தோய்ந்தே கடந்தான்.

பொருள் : அவன், யாசகராகிய சமுத்திரத்தை அவர்கள் திரும்ப இரவாதபடி நிரம்பக் கொடுத்தே தாண்டினன் ; அறிவாகிய சமுத்திரத்தை அளவற்ற நுண் பொருள் நூல்களை ஆராய்ந்தே தாண்டினன் ; பகைவராகிய சமுத்திரத்தை வாளாற் கொன்றே தாண்டினன் ; போக சமுத்திரத்தை ஆசை தீர அனுபவித்தே தாண்டினன்.

அளக்கர் - கடல். காய்தல் - கொல்லல் (உ - ம். ' தந்தையைக் காயில் என்பெறுவாயென '. திருவிளை., மாபாத., 11.—ச.அ.) கருத்து - இச்சை (உ - ம். 'ஒத்த கருத்திலர் ', கோயிற்பு., இரணி., 74.—ச. அ.) - (கருத்தில் உள்ள) ஆசை. முற்ற - நிறைவேற. தோய்தல் - (இன்பத்தில்) முழுகல் - (இன்பத்தை) அநுபவித்தல். திருவின் - செல்வத்தினால். தொடர் - பின் தொடர்கின்ற - வந்தடைகின்ற. போகம்—மேலே 22-ம் பாட்டின் உரையைப் பார்க்க. பௌவம் - கடல்.

அவன் யாசகக் கடலைக் கொடைக் கப்பலாற் கடந்து ஏற்பா ரின்மைக் கரை ஏறினன் : அவ்வாறே, முறையாக அறிவு, பகை, போக மாகிய கடல் களை, ஆராய்தல், கொல்லல், அநுபவித்தலாகிய கப்பல்களாற் கடந்து, இனி யறியத்தக்கதின்மை, பகையின்மை, நிராசை யாகிய கரைகளை அடைந்தான் என்க. (24)

### தசரதனது ஆட்சியின் பரப்பு

நேமிமால் வரைமதி லாக நீள்புறப்
பாமமா கடல்கிடங் காகப் பன்மணி
வாமமா ளிகைமலை யாக மன்னற்குப்
பூமியு மயோத்திமா நகரம் போன்றதே (25)

கொண்டுகூட்டு : நேமி மால் வரை மதில் ஆக, நீள் பாமம் மா புறம் கடல் கிடங்கு ஆக, மலை(கள்) பல் மணி வாம மாளிகை(கள்) ஆக, மன்னற்குப் பூமியும் அயோத்திமா நகரம் போன்றதே.

பொருள் : சக்கரவாள கிரி மதிலாகவும், பெரும் புறக் கடல் அகழியாகவும், மலைகள் மாளிகைகளாகவும், பூமி தசரதனுக்கு அயோத்தியை ஒத்தது.

மால் ( - பெருமை) நேமி ( - சக்கரம்) வரை ( - மலை) - பெரிய சக்கர வாளகிரி. பாமம் - பரப்பு. மா புறக் கடல் - பெரும் புறக் கடல். கிடங்கு - அகழி. வாமம் - அழகு. 'புற மா கடல்' என்றிருப்பதை 'மா புறக் கடல்' என்றும், 'மாளிகை மலை ஆக' என் றிருப்பதை 'மலை மாளிகை யாக' என்றும் கூட்டுக. இக் கவிக் கருத்து, பூமியும் அயோத்தி போன்று தசரதன் ஆளுகைக்குள் அடங்கியது என்பது. (25)

## குடிகளைத் தசரதன் பாதுகாத்த முறை

**வயிரவான் பூணணி மடங்கன் மொய்ம்பினன்**
**உயிரெலாந் தன்னுயி ரொப்ப வோம்பலாற்**
**செயிரிலா வுலகினிற் சென்று நின்றுவாழ்**
**உயிரெலா முறைவதோ ருடம்பு மாயினன் (26)**

கொண்டுகூட்டு: வயிர வான் பூண் அணி மடங்கல் மொய்ம் பினன், உயி ரெலாம் தன் உயி ரொப்ப ஓம்பலால், செயிர் இலா உலகினில் சென்று நின்று வாழ் உயிர் எலாம் உறைவது (ஆகிய) ஓர் உடம்பு ஆயினன்.

பொருள்: *அவன் மன்னுயி ரெல்லாம் தன்னுயிர் போலப் பாதுகாத்தலால், உலகத்தில் உள்ள சகல சராசர ஜீவராசிகளும் வாழும் ஓர் உடம்பு போன்றான்.*

வயிர வான் பூண் அணி மடங்கல் மொய்ம்பினன் - வயிர மிழைத்த சிறந்த ஆபரணங்களை அணிந்த சிங்கம் போன்ற பல முடையவன். ஓம்பல் - பாதுகாத்தல். சென்று வாழ் உயிர் - சஞ்சரிக்கும் உயிர்கள் - சரம். நின்று வாழ் உயிர் - இடம் பெயராத உயிர்கள் - அசரம். உறைவ தோர் உடம்பு - உறைவதாகிய ஒப்பற்ற உடல். ஆயினன் - ஒத்தான். 'ஆள்வாரிலிமாடாவேனோ' (திருவாசகம்) என்பதிலும், 'ஆதல்' ஒத்தல் எனப் பொருள் படுதல் காண்க. உடல் உயிரைத் தாங்குவது போலத் தசரதன் உலகத்து வாழ்வாரை யெல்லாம் தாங்கினன் என்பதும், உடலினும் உயிர் அருமையானது போலத் தன்னினும் தன் குடிகளை அருமையாகக் கருதினன் என்பதும், உய்த்துணர வைத்தார். (26)

## தசரதன் குடைச் சிறப்பு

**மண்ணிடை யுயிர்தொறும் வளர்ந்து தேய்வின்றித்**
**தண்ணிழல் பரப்பவு மிருளைத் தள்ளவும்**
**அண்ணறன் குடைமதி யமையு மாதலான்**
**விண்ணிடை மதியினை மிகையி தென்பவே (27)**

கொண்டுகூட்டு : அண்ணல் தன் (வெண்) குடை மதி, வளர்ந்து தேய்வின்றி மண் இடை உயிர் தொறும் இருளைத் தள்ளவும் தண் நிழல் பரப்பவும் அமையும் ; (ஆதலால்) விண் இடை மதியினை (அறிஞர்) இது மிகை என்ப.

பொருள் : தசரதனுடைய வெண் கொற்றக் குடையாகிய சந்திரன், வளர்த லுடையதாய்த் தேய்தல் இல்லாததாய், எல்லா உயிர்களுக்கும் துன்ப மாகிய அக இருளை நீக்கவும், இன்ப மாகிய அக ஒளியைப் பரப்பவும் அமையும் ; ஆதலால், ஆகாயத்திலுள்ள சந்திரன் அநாவசியம் என்று அறிஞர் கூறுவார்கள்.

நிழல் - ஒளி - நிலவு ; அருள்—பத்துப்பா. இருள் - இருட்டு ; துன்பம் ; மயக்கம்.—பரிபா. குடை, நிழல் பரப்பல் அருள் செய்த லெனவும், இருளைத் தள்ளல் துன்பத்தை அல்லது மயக்கத்தை நீக்குத லெனவும், பொருள் கொள்ளலுமாம். அமையும் - போதும். மிகை - (வேண்டும் அளவுக்கு) மிகுந்தது. என்ப - என்று சொல்லுவர். (27)

### தசரதன் சக்கரச் சிறப்பு

குன்றென வுயரிய குவவுத் தோளினன்
வென்றியந் திகிரிவெம் பரிதி யாமென
ஒன்றென வுலகிடை யுலாவி மீமிசை
நின்றுநின் றுயிர்தொறு நெடிது காக்குமே (28)

கொண்டுகூட்டு : குன்று என உயரிய குவவுத் தோளினன் வென்றி அம் திகிரி, வெம் பரிதி ஆம் என ஒன்று என உல கிடை உலாவி மீ மிசை நின்று நின்று நெடிது உயிர் தொறும் காக்கும்.

பொருள் : மலை போல உயர்ந்த திரட்சியுடைய தோளு டையனாகிய அவனது வெற்றி பொருந்திய ஆக்கினை சக்கரம், சூரியன் போல உலகத்துக்கு ஒன்று போதும் என உலகிலே எங்கும் சென்று, மற்றைய அரசரது ஆக்கினை சக்கரங்களுக்கு மேலாக நின்று, நிலையானதாய் எல்லா உயிர்களையும் அததற்கு அப்போ தப்போது வரும் ஆபத்துக்களை நீக்கி, தனித்தனி பாதுகாவா நிற்கும்.

உயரிய - உயர்ந்த. குவவு - திரட்சி. வென்றி - வெற்றி. ஒன்றென - உலகத்துக்குச் சூரியன் ஒன்றே அமையும், பல சூரியர் வேண்டியதில்லை என்பது போல, தான் ( - தசரதனது சக்கரம்) ஒன்றே உலகத்துக்குப்

போதும், ஏனைய அரசரது சக்கரங்கள் வேண்டியதில்லை, என. உலக முழுவதுக்கும் சூரியன் ஒன்றே ஆயினமை போல, தசரதன் ஆக்கினை சக்கரமும் ஒன்றே ஆயினது. (28)

### தசரதன் உலகம் ஓம்பிய பண்பு

எய்யென வெழுபகை யெங்கு மின்மையால்
மொய்பொரு தினவுறு முழவுத் தோளினான்
வையக முழுவதும் வறிஞ னோம்புமோர்
செய்யெனக் காத்தினி தரசு செய்கின்றான் (29)

கொண்டுகூட்டு : எய் என எழு பகை(வர்) எங்கும் இன்மையால், மொய் பொரு தினவு உறும் முழவுத் தோளினான், வறிஞன் ஓம்பும் ஓர் செய் என வையகம் முழுவதும் காத்து இனிது அரசு செய்கின்றான்.

பொருள் : அம்புகளை எய் யென்று போர் முழக்கஞ் செய்து கொண்டு தன்மேல் வரும் பகைவர் எவ்விடத்தும் இல்லாததனால், பகைவரோடு போர் செய்தற்கு உண்டாகும் தினவு பொருந்திய தோள்களை யுடைய தசரதன், ஒரு தரித்திரன் மிகுந்த சாக்கிரதையாகப் பாதுகாக்கின்ற அவனுக்குள்ள ஒரே வயல் போல, உலக முழுவதையும் கவனமாகக் காவல் செய்து அரசாட்சி செய்கின்றான்.

மொய் - போர் ; பகை.—புற. வெ. மா. பொருதல் - போர் செய்தல். மொய் பொரு தினவு - போர் பொருதற்கு உண்டாகும் தினவு - பகைவரோடு போர் செய்தற்கு உண்டாகும் தினவு. முழவு - மத்தளம். ஓம்புதல் - காத்தல். செய் என - வயலினைப் போல. தசரதன் அரசு செய்தது நம் கண்ணெதிர் நிகழ்வதுபோலச் செய்யக் கருதி, ' அரசு செய்கின்றான் ' என நிகழ் காலத்தாற் கூறினார். இவ்வாறு நடந்தொழிந்ததை நடக்கின்றதாகக் கூறும் நிகழ்காலத்தைச் 'சரித்திர நிகழ் காலம்' என்பர் ஆங்கிலேயர். (29)

# 5. திரு அவதாரப் படலம்

திருமால் இராமனாக அவதரித்ததைக் கூறுவது

### முன் நிகழ்ச்சிகளை வசிட்டன் நினைவு கூர்தல்

தசரதன் வசிட்டனை நோக்கித் தனக்குப் புத்திரன் இல்லாத தனால், தனக்குப் பின், உலகம், காப்பாரின்றி வருந்துமே என்ற கவலை தன்னை வருத்துகின்றது என்று கூற, வசிட்டன் முன் நிகழ்ச்சிகளை நினைவுகூர்ந்தான். அவையாவன: தேவர்க ளெல்லாம் தங்களுக்குத் துன்பஞ் செய்துவந்த இராக்கதரை விட்டுணுவே அழித்தா லன்றித் தங்களுக்குப் பிழைப் பில்லை யென்று ஆலோசித்து முடிவு செய்து, அப் பெருமான் உதவியை வேண்டி அவனைத் தியானித்தார்கள். அப்போது,

### திருமால் தோன்றுதல்

**கருமுகி ருமரைக் காடு பூத்துநீ**
**டிருசுட ரிருபுறத் தேந்தி யேந்தலர்த்**
**திருவொடும் பொலியவோர் செம்பொற் குன்றின்மேல்**
**வருவபோற் கலுழன்மேல் வந்து தோன்றினன் (30)**

**கொண்டுகூட்டு:** கரு முகில், தாமரைக் காடு பூத்து, நீடு இரு சுடர் இரு புறத்து ஏந்தி, ஏந்து அலர் திருவொடும் பொலிய, ஓர் செம் பொன் குன்றின் மேல் வருவ(து) போல, கலுழன் மேல் வந்து தோன்றினன்.

**பொருள்:** கரிய மேகம் உடல் நிறையத் தாமரை பூத்துச் சந்திர சூரியரை இரு பக்கங்களிலே தரித்து இலக்குமி நடுவிலே விளங்கச் செம் பொன் மலை மேல் வருவது போல, மேகம் போன்ற கரிய திருமேனியை யுடைய திருமால், செந் தாமரை மலர்கள் போலக் கண் வாய் உந்தி கை பாதங்கள் பொலிய, முறையே சந்திர சூரியர் போன்ற சங்க சக்கரங்களை இடப் புறத்தும் வலப்புறத்தும் இரு கைகளில் ஏந்தி, திருமகள் திரு மார்பில் வீற்றிருந்து விளங்க, செம் பொன் மலை சிறகு படைத் தாற் போலும் கருடன் மேல் ஏறி வந்தருளி அவர்களுக்குப் பிரசன்ன மானன்.

தாமரைக் காடு - (செந்) தாமரை (மலர்) மிகுதி. இரு சுடர் - சூரியன் சந்திரன். ஏந்து அலர்த் திரு - (தன்னைத்) தாங்கிய (தாமரை) மலரிடத் துள்ள இலக்குமி. 'ஏடவிழ் திரு' என்று பல பிரதிகளில் உள்ளது.

அதற்கு இதழ் விரிந்த (தாமரை மலரிடத் துள்ள) இலக்குமி யெனப்பொருள் செய்யப்பட் டிருக்கிறது. ஏடு என்பதற்கே பூ என்ற பொருள் உண்டு. ஏடு - பூ; உ-ம். 'ஏடவிழ் கூந்தலாய்'.—ச. அ. 'வருவது' எனற் பாலது, செய்யுள் வழக்காக 'வருவ' என ஈறு குறைந்தது. கலுழன் - கருடன். (30)

## தசரத குமாரர் பிறப்பும் வளர்ப்பும்

அவ்வாறு பிரசன்ன மானவன் 'அரக்கரை அழிக்க நானும் சங்க சக்கரங்களும் ஆதிசேடனும் தசரத குமாரராக அவதரிப் போம். எமக்குத் துணையாக நீங்க ளெல்லீரும் வானர ராகுங்கள்' என்று கூறிச் சென்றான். அவ்வாறே, அவர்கள் வானர ராகப் பிறந்தார்கள். இம் முன் நிகழ்ச்சிகள் நினைவில் வர, வசிட்டன் தசரதனைப் 'புத்திரகாமேட்டி என்னும் யாகம் செய்க' என்றான். தசரதன் அப்படியே செய்ய, அவன் மனைவியரில், கோசலைக்கு இராமனும், கைகேயிக்குப் பரதனும், சுமித்திரைக்கு இலக்குமண சத்துருக்கனரும் பிறந்தார்கள்.

அந்தப் பிள்ளைகள் வளர்ந்து கல்வி பயின்று யௌவனப் பருவம் அடைந்த காலத்தில், இணை பிரியாத இராம லக்குமண ரைக் காண்போ ரெல்லாம் மழை கண்டு செழிக்கும் பயிர் போலக் களித்தார்கள். 'இவ் அர சிளங் குமரருக்கு நல் வாழ்வு அருள்க' என்று தத்தம் இஷ்ட தெய்வங்களைப் பிரார்த்தனை செய்வதில் ஆடவரும் மாதரும் முறையே தசரதரையும் கோசலையையும் போன்றனர். அவர்கள், கரிய நிற முள்ள இராமனும் பொன் னிற முடைய இலக்குமணனும் கூடி உலாவுதலைக் கண்டு களித்து (கண் வாய் உந்தி கை கால்க ளாகிய) 'தாமரை பூத்த கருங்கடல் மேரு மலையோடு திரித லொக்கும்' என்பார்கள்.

இராமன், தன் எதிர் வருவோரை, அகம் நெகிழ, முகம் மலர, புன்னகை அரும்ப, கண்கள் கருணை ததும்ப, இனிது நோக்கி, 'உமக்குத் துன்ப மில்லையே! உம் மனைவியர் மக்கள் சுகமோ? குறித்துச் செல்லும் காரியம் யாது?' என்று அன் புடன் வினவ, அவர்கள் 'திக்கற்றவர்களுக்குத் தந்தையாக உள்ள உம்மை அரசாகப் பெற்ற எமக்கு யாதொரு குறைவு மில்லை; நீர் இவ்வுலகத்தை நீடூழி ஆள்வீராக' என்று மனமார வாழ்த்திச் செல்வர். இவ்வாறு அயோத்தி மா நகர மாந்தர் அனை வரும் வாழ்த்தத் தம்பியர் தன் திருவடி நிழல் நீங்காராய்ப் போற்ற, இராமன் வாழ்தல் கண்டு, தசரதன் அள வில்லாத ஆனந்தக் கடலுள் ஆழ்ந்திருந்தான்.

# 6. கையடைப் படலம்

## விசுவாமித்திரனிடம் இராம லக்குமணரை அடைக்கலமாகத் தசரதன் கொடுத்ததைக் கூறுவது*

### தசரதன் அரசிருக்கை மண்டபம் அடைதல்

இவ்வாறு தசரதன் களித்து வாழுங் காலத்திலே, அவன், ஒரு நாள், தேவர்கள் 'இந்திர சபா மண்டபமோ' என்று சந்தேகிக்கும்படியான தனது அரசிருக்கை மண்டபத்தை அடைந்தான்.

### தசரதன் கொலு விருத்தல்

**தூயமெல் லரியணைப் பொலிந்து தோன்றினான்**
**சேயிரு விசும்பிடைத் திரியுஞ் சாரணர்**
**நாயக னிவன்கொலென் றயிர்த்து நாட்டமோர்**
**ஆயிர மில்லையென் றயிர்ப்பு நீங்கவே (31)**

**கொண்டுகூட்டு :** சேய் இரு விசும் பிடைத் திரியும் சாரணர், 'நாயகன் இவன் கொல்?' என்று அயிர்த்து, ஓர் ஆயிரம் நாட்டம் இல்லையென்று அயிர்ப்பு நீங்க, தூய மெல் அரியணைப் பொலிந்து தோன்றினான்.

**பொருள் :** அந்தச் சமயத்திலே இந்திரனது காரியமாக, அவ் வழியே விண்ணிலே சென்று கொண்டிருந்த தேவ தூதர்கள் பலரும், தனித் தனியே, தம் மனத்தினுள்ளே, 'இந்தக் கொலு மண்டபம் நம் அரசன் கொலு மண்டபமேயாகத் தோன்றுகின்றது, இதில் கொலுவிருக்கும் அரசன் தேவராசன் போன்றிருக்கின்றான், உண்மையிலே இவன் தேவராசனோ?' என்று சந்தேகித்து, பின்பு, அவனுக்கு இந்திரன் போல ஆயிரம் கண் இல்லையென்று கண்டு, அவன் இந்திர னல்ல னென்று சந்தேகம் நீங்கும்படியாக, சிங்காதனத்திலே இந்திரன் போல விளங்கிக் கொலுவீற்றிருந்தான்.

அரி (-சிங்கம்) அணை (-ஆதனம்)- சிங்காதனம். 'சேய் இரு விசும்பு', 'சிந்தாமணி'யில் 'சேயுயர் மதில்', 'சேயுயர் உலகம்', என்பவை வருதல் போல வந்தது. சேய் இரு விசும்பு - தூரமான பெரிய ஆகாயம்.சேய் - தூரம். — ச. அ, 'வாய்மை', 'வாய்', என்பவை 'உண்மை' என்ற பொருளில் வருதல் போல, 'சேய்மை,' 'சேய்', என்பவை 'தூரம்' என்ற

---

* கையடை - அடைக்கலம். ('கையடையாகும்', — கிட்கிந்தா காண்டம் வாலிவதைப்படலம், 151.) படலம் - நூற் பகுதி.

பொருளில் வருகின்றன. சாரணர் - தூதர். நாயகன் - (தேவர்க்குத்) தலைவன். அயிர்த்து - சந்தேகித்து. நாட்டம் - கண். ஐயம் - சந்தேகம். (31)

### விசுவாமித்திரன் வரவு

கொலுவீற்றிருந்த தசரதன் முன்னே, உயிர்கள் எல்லாவற்றையும் அவைகள் உறையும் உலகங்களையும் தேவர்களோடு பிரமதேவனையும் 'இதோ படைக்கின்றேன்!' என்று படைக்கத் தொடங்கிய விசுவாமித்திர முனிவன் வந்தான். அவன் வரவும், தசரதன், பிரமதேவன் வரக் கண்ட இந்திரன் போல விரைந்தெழுந்து, கீழ் வீழ்ந்து வணங்கி, ஆதனத்தில் இருத்தி அருச்சித்து, அவனை வரவேற்பானுனான்.

### விசுவாமித்திரனுக்கு வரவேற்பு

**நிலஞ்செய்தவ மென்றுணரி னன்றுநெடி யோயென்**
**நலஞ்செய்வினை யுண்டெனினு மன்றுநகர் நீயான்**
**வலஞ்செய்துவ ணங்கவெளி வந்தவிது முந்தெங்**
**குலஞ்செய்தவ மென்றினிது கூறமுனி கூறும் (32)**

**கொண்டுகூட்டு :** 'நெடியோய்! (இந்த) நகரில் யான் வலம் செய்து வணங்க நீ எளி(து) வந்த இது, நிலம் செய் தவமோ என்று உணரின், (அது) அன்று, என் நலம் செய் வினை உண்டெனினும் (அதுவும்) அன்று, முந்து என் குலம் செய் தவம்', என்று (தசரதன்) இனிது கூற, முனி கூறும்.

**பொருள் :** 'இந்த நகரத்திலே தேவரீரை அடியேன் வலம் வந்து வணங்கும்படி வருதற்கரிய நீர் இலேசில் வந்த இந்தப் பாக்கியத்துக்குக் காரணம், இந்தப் பிரதேசத்தி லுள்ளார் செய்த தவமோ என்று ஆராய்ந்து பார்த்தால், அது வன்று; தமியேன் செய்த நல்வினை யுண்மையோ வென்றால், அதுவு மன்று; வேறு யாதெனின், முற் காலத்தில் என் வமிசத்தார் செய்த தவமே,' என்று இனிதாகச் சொல்ல, முனிவன் சொல்வான்.

நலம் செய் வினை - நன்மையைச் செய்கின்ற வினை - நல்வினை. நகர் - நகரில். இவ்வாறு, ஏழாம் வேற்றுமை உருபு தொக்கு, தாரணியில் (பூமியில்) என்பது தாரணி என, இக்காண்டம், திரு அவதாரப் படலம், 22-ம் பாட்டில் வருதல் காண்க. ('தசரதன் மதலையாய் வருதும் தாரணி'.) எளி வந்த - எளிதிற் கிடைத்த, இலேசில் வந்த. —ச. அ. இது - இந்தச் செயல் - இந்தச் செயலாகிய பாக்கியத்துக்குக் காரணம். முந்து என் குலம் - (எனக்கு) முந்திய என் குலத்தார்.

'எங் குலஞ் செய் தவம்' என்றதின் கருத்து: 'இப்பொழுது அரசாளும் நானும், என்னுடைய பிரஜைகளும் செய்த சிறிய தவத்தின் பயனுய்த் தாம் வந்தவ ரல்லீர்; என்னைப் போன்ற அரசர்களான என் மூதாதையர் பலரும் அவர்கள் பிரஜைகள் பல் கோடியினரும் செய்த தவத் தொகுதியின் பயனுய் வந்தீர்; என்பது.'—வை. மு. கோ. (32)

விசுவாமித்திரன் தசரதனைத் துதி செய்தல்

**என்னனைய முனிவரரு மிமையவரு**
**மிடையூருென் றுடைய ராஞற்**
**பன்னகமு நகுவெள்ளிப் பனிவரையும்**
**பாற்கடலும் பதும பீடத்**
**தந்நகரும் கற்பகநாட் டணிநகரும்**
**மணிமாட வயோத்தி யென்னும்**
**பொன்னகரு மல்லாது புகலுண்டோ**
**விகல்கடந்த புலவு வேலோய்** **(33)**

கொண்டுகூட்டு: 'இகல் கடந்த புலவு வேலோய்! என் அனைய முனிவரரும் இமையவரும் இடையூறு ஒன்று உடையராஞல், பல் நகமும் (நோக்கி) நகு வெள்ளிப் பனிவரையும், பாற் கடலும், பதும பீடத்து அந் நகரும், கற்பக நாட்டு அணி நகரும், மணிமாட அயோத்தி என்னும் பொன் நகரும் அல்லாது புகல் உண்டோ?'

பொருள்: 'பகைவரைக் குத்தி வென்றதனுல் அவரது ஊன் தங்கிய வேலாயுதத்தை யுடைய சக்கரவர்த்தியே! என்னைப் போன்ற முனி சிரேட்டர்களும் தேவர்களும் யாதாயினுமோர் இடையூற்றை அடைந்தார்க ளாஞல், பல மலைகளையும் நோக்கி, நீங்கள் எனக்கு ஒப்பாவீர்களோ வென்று, வாயால் மட்டு மன்றி உடம்பு முழுவதனுலும் சிரித்ததனுல் மேனி முழுதும் வெண்ணிறமடைந்த தென்னும்படி, அப் பல மலைகளையும் எள்ளி நகைக்கும் வெள்ளி மலையும், பாற்கடலும், சத்திய லோகமும் அமராவதியும், இரத்தின கசிதமான மாளிகைகளை யுடைய அயோத்தி மா நகரமும் புகலிடமாக அடைதல் அல்லாமல் வேறு வழி உண்டோ? இல்லை.'

என்(னை) அனைய - என்னைப் போன்ற. முனி - தவசி. வரம் - சிரேட்டம். வரர் - சிரேட்டர். முனிவரர் - தவ சிரேட்டர்கள். இடையூறு - இடையி(ல்) உறுதல் - (ஒரு காரியம் செய்யப் புகுந்தார்க்கு, அது முடியாதபடி இடையே உறும்) தடை - விக்கினம். பன் னகம் - பல் நகம்- பல மலைகள். நகுதல் - சிரித்தல். பனி வரை - குளிர்ந்த மலை. 'பதும

பீடத் தன்னகர்' என்ற பாடமே பெரும்பான்மையான அச்சுப் பிரதிகளிற் காணப்படுகின்றது. அதன் பொருள், (பதுமபீடத்தன் நகர் - ) தாமரை மலரை ஆதனமாக உடைய பிரமனது நகரம், என்பது: 'ன'கரம் அப் பாடத்தில் எதுகை நோக்கி இரட்டித்தது. மொழியை முறித்து எதுகை அமைத்தல் சிறந்த முறை யன்று. அதனிலும் இவ்வாறு விகாரமாகப் பதச் சேதம் பண்ணி எதுகை பெறுதல் விலக்கற் பாலது. இராமாயண முழுவதினுமே, இப்படிப்பட்ட சிறப்பற்ற எதுகை வேறிருக்குமோ என்பது சந்தேகம். ஆதலால், 'பதுமபீடத் தந்நகர்' என்ற பாடம் சிறந்ததாக எடுத்துக் கொள்ளப்பட்டது. இதனைப் 'பதும பீடத்து அம் நகர்' எனப் பிரித்துப் (பிரமனது சிங்காதனமாகிய) பத்மாசநத்தை (தன்னிடத்தே) உடைய அழகிய நகரம் என்று பொருள் கூறலாம்; அன்றியும், 'பதும பீடத்து அந்(த) நகர்' எனப் பிரித்து, பதும பீடத்தை யுடையது எந்த நகரமோ, அந்த நகரம், எனவும் உரை செய்யலாம். கற்பக நாடு - கற்பக தருக்கள் உள்ள பொன் னாடு. அணி நகர் - அழகுடைய நகரம் - அமராவதி யென்னும் இந்திரனது இராசதானி நகரம். புகல் - புகலிடம் - தஞ்சமாகப் புகு மிடம் - பற்றுக் கோடு. இகல் - பகை. இகல் கடந்த - பகைவரைக் கொன்று செயித்த. புலவு - மாமிசம்.

இந்தப் பாட்டைப் பற்றித் திரு. அ. வரதநஞ்சைய பிள்ளை கீழ்க் கண்டபடி கூறியுள்ளார் —

'மஹாரிஷி யாகியும் விசுவாமித்திரனுக்கு ஜன்ம சுபாவமாகிய ரஜோ குணம் நீங்கிற் றில்லை என்பார் என்னனைய முனிவரரும் (என்னைப் போன்ற சிறந்த முனிவர்களும்) என்ற சொல்லால் உணர்த்தினர். சாபாநுக்கிரக சாமர்த்தியத்தால் தேவரையும் பணி கொள்ளும் சிறப்பினால், முதலில் முனிவரையும், பிற்படத் தேவரையும், எண்ணியது. இவர்கட்கு ஓரோர் காலத்தில் யாதானும் துன்பம் தங்களுக்குத் தாமே நீக்கிக் கொள்வதற்கேலாதவாறு சம்பவிக்கு மென்னும் கருத்துப் போதர, 'இடையூறு ஒன்று' எனக் கூறினர்.

'பன்னகம் - பல்நகம் - பல மலைகள். குன்றுதோறாடல் முருகக் கடவுளின் படைவீ டாறனுள் ஒன்றாதலானும், (அவர்) குறிஞ்சி நிலத் தெய்வ மாதலானும், பல மலைகளை நாடல், அவரிடம் முறையிட்டுத் தங் குறை தீர்க்க வேண்டிக் கொள்வத னிமித்தமாம். இங்ஙனமே, கயிலாயம், பாற்கடல், பிரம னுலகம், இந்திரன் நகரம் இவற்றை முறைப்பட எண்ணினார். ஈசனாலும் அழிக்க இயலாத சூரனை அழித்த பெருமை தோன்ற முருகக் கடவுளை முன்னும், மகாவிஷ்ணு முதலியோர்க் கிடுக்கண் விளைத்த திரிபுராதியர் சலந்தரன் போன்றோரை ஜயித்த காரணத்தாலும் ஸம்ஹார கிருத்தியத் தலைவனாதலின் தங்கள் சத்துருவைச் சம்ஹரிக்குமாறு வேண்டிக் கொள்ளும் நிமித்தத்தாலும் பரமசிவத்தையும், காத்தற் கடவுளாதலின் தமக் கெய்திய இடுக்கணினின்று காத்தருளும் பொருட்டு மஹாவிஷ்ணுவையும், ரிஷிகணங்கட்குத் தலைமை பூண்டவ னாதலானும்

நேரே தம் குறை யறிந்து தவிர்க்கும் வழி கூறுவோ னுதலானும் பிரமனை யும், முப்பத்து முக்கோடி தேவர்கட்கு அரசனுய் வச்சிராயுதமும் அயிராவதமும் உடைய சுவர்க் காதிப னுதலானும், முன் விருத்திரன் முதலிய அசுரரை வெற்றி கொண்டமையானும் இந்திரனையும், அவ் இந்திரனுக் குற்ற இடுக்கண் தீரச் சம்பரனை வதைத்து உதவிய கருணை உடையை ஆதலின் நின்னையும், நாடிக் குறைதீர்த்துக்கொள்ள வருவோ மென்று குறிப்பித்தவாறு. எனவே, கைலாயம் பாற்கடல் முதலியன போல், நீ தலைவனுதலின் அயோத்தியும் அவற்றோடு சேர்த் தெண்ணும் தரத்த தாயிற்று எனக் குறிப்பித்தார்.

'ஒருவரை விசேஷித் துரைக்கும்போது, அவர் சாதி தருமங் கூறிச் சிறப்பித்தல் மெய் யுவகை விளைப்பதாகலின், 'இகல்கடந்த புலவு வேலோய்' என க்ஷத்திரிய தருமம் கூறியவாறு. இன்னும் இதனுனே, தான் கோரி வந்ததும் ஒரு பகை தீர்க்கும் கருத்தாலே கூறினுர் என்ப தும் கூருக் கூற்ருய் விளங்கல் காண்க.

'பன்னகமும் நகுவெள்ளிப் பருப்பதமும் என்பதற்குப் பல மலைகளையும் தனக்கு இணை சாலா என்று நகைப்பது போல வெண்மை யாய் விளங்கும் கயிலாய கிரி என்பாரும் உளர்.

'மணிமாட அயோத்தி யென்னும் பொன்னகர் என விசே டித்து, ஏனைய இடங்களை அவ்வாறு கூருமையால், அயோத்தியினிடத்துத் தமது பேரபிமானம் சிறத்தல் விளக்கிய வாருயிற்று. முழு வலிக் கடவுளர் பாற் குறை மொழிந்து ஒருகால் மறுக்கவும் பெற்றுத் தலை தாழ்ந்து நிற்ற லினும், நின்பால் வரின் உனது வணக்கத்தைப் பெற்று இறுமாந்து எண் ணிய குறையும் தீர்வோ மாதலின் எங்கட்குப் பெருமையும் துக்க நிக்கிரக மும் நின்னுல் எய்து மென்றே நாங்கள் இங்கு வருவோம், என்பதும், மற்றும், இக்கவி நயமாய் அமைந்தன, அறிக.'*

என்னனைய முனிவர்களும் என்றும் பாடம். அந்தப் பாடம் கொண்டால் தற்புகழ்ச்சி என்னும் குற்றம் சொல்ல இடம் இல்லை.

முனிவரர் என்ற பாடத்தையே கொண்டு திரு. வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் கூறுவது வருமாறு—' பற்பல இடையூறுகளைக் கடந்து நெடுங்காலம் இடைவிடாது அரிய பெரிய தவத்தைச் செய்து முடித்துப் பிரம விருடிப் பட்டம் பெற்ற தமது சிறப்பைக் கருதி, 'என் னனைய முனிவரர்' என்ருர். அப்படிப்பட்டவர்களுக்கும் 'நீயே கதி' என்று தசரதனைப் புகழ்தலில் நோக்காதலால், இது தற்புகழ்ச்சிக் குற்றத் தின்பாற் படாது.'†

பாட பேதம்: முனிவர்களும், பருப்பதமும், அணிகவரும். (33)

---

*'தமிழன்', தொகுதி 5, பகுதி 10 (டிசம்பர் 1917), பக்கம் 183-4.

† பாலகாண்டப் பதிப்பு, பக்கம் 223.

இன்றளிர்க்கற் பகநறுந்தே னிடைதுளிக்கும்
நிழலிருக்கை யிழந்து போந்து
நின்றளிக்குந் தனிக்குடையி னிழலொதுங்கிக்
குறையிரந்து நிற்ப நோக்கிக்
குன்றளிக்குங் குலமணித்தோட் சம்பரனைக்
குலத்தோடுந் தொலைத்து நீகொண்
டன்றளித்த வரசன்றோ புரந்தரனின்
றுள்கின்ற தரச வென்றான் (34)

கொண்டுகூட்டு: 'அரச! இன் தளிர்க் கற்பக நறும் தேன் இடை துளிக்கும் நிழல் இருக்கை(யை) இழந்து போந்து நின்று அளிக்கும் (உன்) தனிக் குடையின் நிழலில் ஒதுங்கி (இந்திரன்) குறை யிரந்து நிற்ப, நீ நோக்கி, குன்று அளிக்கும் குல மணித் தோட் சம்பரனைக் குலத்தோடும் தொலைத்து (அவன் அரசை உன் கைக்) கொண்டு அன்று அளித்த அரசன்றோ புரந்தரன் இன்று ஆள்கின்றது?' என்றான்.

பொருள்: 'இனிய தளிர்களை யுடைய கற்பக தரு இடை யிடையே வாசனையுள்ள தேன் துளி தூவும் நிழலில் உள்ள சிங் காதனத்தில் அரசு வீற்றிருக்கும் பதவியைச் சம்பராசுரன் பறித் துக்கொண்டதனால் அங்கு இருத்தலை இழந்து, அயோத்திக்கு வந்து, உனது ஏக வெண் கொற்றக் குடை நிழலில் ஒதுங்கி இந்திரன் குறை கூறி இரந்து நிற்க, அவனது பரிதாப நிலை யைக்கண்டு, மலை போலும் தோள்களையுடைய அந்தச் சம்பரா சுரனை அவனுடைய குலத்தோடு நிர்மூலமாகப் போரிலே கொன்று நாசமாக்கி, அவன் கைப்பற்றி யிருந்த இந்திர பதவியை நீ கைப்பற்றி உன்னதாக்கிக் கொண்டு, பின்பு இந் திரனுக்கு அக்காலத்திற் கொடுத்த இராச்சிய மன்றோ, அவன் இக்காலத்தில் ஆள்கின்றது!' என்று விசுவாமித்திரன் கூறினான்.

போந்து - வந்து. நின்று அளிக்கும் தனிக் குடை - (உலகத்துக்கு ஆதாரமாக) நின்று காக்கும் ஒப்பற்ற குடை. 'பலகுடை நீழலும் தம் குடைக்கீழ்க் காண்'கின்ற சக்கரவர்த்தியின் குடையாதலால், உலகத்துக் கெல்லாம் ஒரு குடையாக வுள்ள தென்பதைக் குறிக்கத் 'தனிக் குடை' என்றான், எனலுமாம். 'நின் தளிக்கும் குடை - உனது குளிர்ந்த குடை' என்னலும் உண்டு. குன்று அளிக்கும் - மலையை ஒத்த. அளித்தல் என்பதற்கு இயல்பாக ஒத்தல் என்ற பொரு ளில்லை யாயினும், அது எதுகையில் வருதலால் அதற்கு அப் பொருள் கூறப்பட்டது. புறப் பொருள் வெண்பா மாலையில் 'பிணங்கமருள்' என்ற வெண்பாவில் 'சிலை யளித்த தோளான் சினவிடலைக் கன்றே—தலையளித்தான் றண்ணடை

யுந் தந்து,' என வருதல் காண்க. அளித்தல் - ஒத்தல். (ஷை நூல் அரும் பதவுரை.) குலம் மணி தோள் - மேலான அழகுடைய தோள்.

முன் பாட்டில் தேவரும் முனிவரும் சரண மடையும் மஹா புருடருள் ஒருவனுகத் தசரதனைத் துதித்த விசுவாமித்திரன், அத் துதிக்கு மேல் துதியாக, இப்பாட்டில், அந்த மஹா புருஷருள் ஒருவனுகிய இந்திரனே தசரதனைச் சர ணடைந்தா னென்று, அவனுக்கு முன்னைய துதியில் உண்டாயிருந்த மகிழ்ச்சியை மிக அதிகப் படுத்திய சாதுரியம், கம்பர் கவித் திறத்தை விளக்குகின்றது. இவ்வாறு துதி மேல் துதி செய்தது, அடுத்த பாட்டிற் கூறும் 'கரைசெய்ய அரியது ஒரு பேருவகைக் கடல் பெருக'ச் செய்தது காண்க. (34)

தசரதன், முனிவன் வேண்டுவது யாதெனல்

உரைசெய்யு மளவிலவன் முகநோக்கி
யுள்ளத்தி லொருவ ராலுங்
கரைசெய்ய வரியதொரு பேருவகைக்
கடல்பெருகக் கரங்கள் கூப்பி
அரசெய்தி யிருந்தபய னெய்தினன்மற்
றினிச்செய்வ தருளு கென்று
முரசெய்து கடைத்தலையான் முன்மொழியப்
பின்மொழியு முனிவ னுங்கே (35)

கொண்டுகூட்டு: உரை செய்யும் அளவில் (தசரதன் தன்) உள்ளத்தில் ஒருவராலும் கரைசெய்ய அரியது (ஆகிய) ஒரு பேருவகைக் கடல் பெருக, அவன் (முனிவன்) முகம் நோக்கிக் கரங்கள் கூப்பி, 'அரசு எய்தியிருந்த பயன் எய்தினன், இனிச் செய்வது அருளுக' என்று முரசு எய்து கடைத் தலையான் முன் மொழிய, ஆங்கே முனிவன் பின் மொழியும்.

பொருள்: அவ்வாறு சொல்லவே, தசரதனது மனத்திலே யாவராலும் கரை காண முடியாத தோர் பெரு மகிழ்ச்சிக் கடல் பெருகாநிற்க, முனிவன் முகத்தைப் பார்த்து அஞ்சலி செய்து 'யான் இவ்வாறு முனி ராசராகிய தம்மால் நன்கு மதிக்கப் பெற்றதனுல், இப்போதுதான் அறுபதினுயிரம் வருடம் அரசாள் பதவியை அடைந்திருந்ததின் பயனை அடைந்தேன். யான் இனிமேற் செய்ய வேண்டிய காரியத்தைக் கூறி யருள்வீராக' என்று சக்கரவர்த்தி கூற, முனிவன் கூறுவான்.

முரசு எய்து கடைத் தலை - முரசு (முழங்குதல்) பொருந்திய தலை வாசல். கடை - வாசல். தலைக்கடை, கடைத் தலையாக மாறியது.

முன்மொழியப் பின் மொழியும், முரண்தொடை. இக்கவியில், தசரதன் மன மகிழ்ச்சிக் கெல்லை யில்லாதது போல, வாசிப்போர் மன மகிழ்ச்சிக்கும் எல்லை யில்லை,—சொல்நயம், பொருள் நயம், தொடைநயம், நடைநயம் தொனிநயம் எல்லாம் சிறந்திருத்தலால். (35)

**விசுவாமித்திரன், வேள்வி காக்க இராமனைத் தர வேண்டுதல்**

தருவனத்துள் யானியற்றுந் தவவேள்விக்
கிடையூருத் தவஞ்செய் வோர்கள்
வெருவரச்சென் றடைகாம வெகுளியென
நிருதரிடை விலக்கா வண்ணஞ்
செருமுகத்துக் காத்தியென நின்சிறுவர்
நால்வரினுங் கரிய செம்மல்
ஒருவனைத்தந் திடுதியென வுயிரிரக்குங்
கொடுங்கூற்றி னுளையச் சொன்னான் (36)

**கொண்டுகூட்டு :** ‘ தவஞ் செய்வோர்கள் வெருவரச் சென்று அடை காம வெகுளி எனத் தருவனத்துள் யான் இயற்றும் தவ வேள்விக்கு இடையூருக நிருதர் இடை(யே) விலக்கா வண்ணம் “ செருமுகத்துக் காத்தி ” என, நின் சிறுவர் நால்வரினும் கரிய செம்மல் ஒருவனைத் தந்திடுதி ’ என, உயிர் இரக்கும் கொடும் கூற்றின் உளையச் சொன்னான்.

**பொருள் :** ‘ தவஞ்செய்வோர் தவத்துக்கு இடையூருக அவர்கள் அஞ்சும்படி அவர்களிடம் வந்து சேரும் காமத்தையும் கோபத்தையும் போல, யான் செய்யும் யாகத்துக்கு இடையூருக வந்து தாக்குகின்ற சுவாகு மாரீசன் என்னும் அரக்கர்கள், இடையே புகுந்து அந்த யாகத்தைத் தடுக்காதபடி “ அவர்களைப் போரில் எதிர்த்து விலக்கி யாகத்தைப் பாதுகாப்பாயாக ” என்று இராமனுக்குக் கட்டளையிட்டு அவனை எனக்கு உதவியாகத் தருவாயாக ’ என்று, உயிரைக் கொடு என்று யாசிக்கும் கொடிய யமன் போல, தசரதன் மனம் வருந்தும்படி விசுவாமித்திரன் கூறினான்.

தரு வனம் - மரங்கள் (அடர்ந்த) வனம். தவ வேள்விக்கு - தவ வேள்விகளுக்கு - தவத்துக்கும் வேள்விக்கும் ; தவத்தோடு கூடிய வேள்விக்கு. வெரு வர - வெருவ - அஞ்சும்படி. நிருதர் - இராக்கதர். செரு முகத்து - போரில். காத்தி - காப்பாய். செம்மல் - புத்திரன் ; பெருமையிற் சிறந்தோன். தந்திடுதி - தந்திடுவாய். கூற்றின் - யமனைப் போல. உளைய - மனம் வருந்த.

உயிர் இரக்கும் கொடும் கூற்று என்றது, பல வகையில் மிகப்

பொருத்தமான உவமானம். தசரதனுக்கு இராமன் உயிரென்பது, இராமன் காட்டுக்குச் செல்வானய் நீங்கியபோது தசரதனுக்கு உயிர் நீங்கியதனல் தெளிவாம். இராமன் தசரதனுக்கு உயிரெனப் பல சமயங்களிற் கூறப்பட்டிருக்கிறது.

'இரக்கும்' என்றதனல், இராமனைத் துணையாகத் தரும்படி நயமாக வேண்டியதனையும், 'கொடுங் கூற்று' என்றதனுல், தசரதன் அவ் வேண்டுகோளால் அளவிறந்த மன வேதனை யடைந்து தானே இராமனுக்குப் பிரதியாக வேள்வியைக் காப்பதாகக் கூறிய போது விசுவாமித்திரன் இரக்க மின்றிப் பெருங் கோபங் கொண்ட கொடுமையையும்,* உயிரை வேண்டிய யமன் அதனைக் கொண்டு போகா தொழியாதது போல, இராமனை வேண்டிய விசுவாமித்திரன் அவனைக் கொண்டு போகா தொழியானென்பதையும், குறிப்பித்தார்.

இப் பாட்டிற்குத் திரு. **கவிராஜ பண்டிதர் ஜெகவீரபாண்டியன்** விசேட வுரை வருமாறு :—' வேள்விக்கு இடையூரு நிருதர் இடைவிலக்கா **வண்ணம்** என்றதற்கு இடையே பெய்து வைத்திருக்கும் உவமையின் அருமை உய்த்துணர்தற் பாலது. காமவெகுளி என்றது தொடர்புடைய சுபாகு மாரீசர்களைக் குறித்து நிற்றலைக் கூர்ந்து காண்க. இவ்விரு குணங்களும் உடன் பிறப்பு முறையில் ஒன்றையொன்று அவர் உபமேயத்தில் குறித்ததற்கு உரிமையெய்தி நிற்றலை யூன்றி யுணர்க.

'**வனம்** என்று மாத்திரம் கூறின் பாலை முதலிய கொடிய காடுகளோ என்று அரசன் கருதி, தன் அருமைத் திருமகனை, அனுப்புதற்கு அறவே இசையான் என எதிர் நினைந்து **தருவனம்** என்ருர்.

'**இயற்றும்** எனின் எது குறித்தோ? யார் செய்வதோ? என்று ஐயுற நேருமாதலால் அது நீங்க **யான் இயற்றும்** என்ருர்; யான் என்றது முன்பு உன்போல் உலக முழுவதும் உடையவனு யிருந்து பின்பு அதனை அறவே துறந்து இது பொழுது தவ நெறியில் நிற்கின்றவன் என்றவாறு. எல்லாந் துறந்த யான் என் பொருட்டு இயற்றுதற்குரியது யாதொன்றும் இல்லை யாதலால், அவ் இயற்றுதல் உலக நலத்துக்கே உரிமையாம் என அரசன் உணர்ந்துதவுதற்குத் தகுதியாக நிற்றலால் இது தற்புகழ்ச்சி யன்றென்க.

**வேள்வி** என்று மாத்திரம் கூறின் மாரண வேள்வி முதலாகக் கேடு பயப்பனவு முளவாதலால், அங்ஙனம் அவமாய தன் றென்பது தோன்ற, **தவவேள்வி** என்ருர். தரு, யான், தவ என்பன, வனம், இயற்றும், வேள்வி என்பவற்றிற்கு விசேடணமாய் நின்று பின் வேண்டும் உதவிக்கு உபகாரமா யிருத்தலை யூன்றி யுணர்க.

'**காத்தி** என முன்னிலையேவலொருமை வினையால் அரசனை நோக்கிக் கூறி, பின்பு **என** என்று இறக்கி, அதன்பின் **நின்** என நிறுத்தி, 'படையை அனுப்பும்படி வேண்டுகின்ருரோ?' என்று அவன் கருதும்படி

* கீழ், 37, 38, 39-ம் பாட்டுக்கள்.

வைத்து, அடுத்துச் சிறுவர் என நெருக்கி, அவன் திகைத்து 'அவர்களுள் யாரையேனும் ஒருவனை அனுப்பலாமா?' என உளையும்படி செய்து, உடனே நால்வரினும் என வரையறுத்துத் தாமே குறித்து விடுவது போல் தோற்றி, 'இனி எவரைக் கேட்பரோ?' என எண்ணியேங்குமாறு இயற்றி, அங்ஙனம் நிற்கும் நிலையில் கரிய என உரிமையில் மிகவும் அணுகி, 'கருமையிலும் இரண்டுள்ளன, அவற்றுள் இளையதை அனுப்பிவிடலாமா?' என்று தளருங்கால், செம்மல் ஒருவனைத் தந்திடுதி எனத் துணிவு தோன்ற இராமனைச் சுட்டி, திடீர் என்று அரசன் நிலைகுலைந்து போகாவண்ணம் வாழைப்பழத்தில் ஊசி இறக்கியது போல் முனிவர் இதில் உரையாடி யிருக்கும் அருமை மிக வியந்து நோக்கத்தக்கது.'

பாடபேதம் : தகைவேள்வி, தவஞ்செய்வோரை. (36)

### தசரதன் துயரம்

எண்ணிலா வருந்தவத்தோ னியம்பியசொல்
மருமத்தி னெறிவேல் பாய்ந்த
புண்ணிலாம் பெரும்புழையிற் கனனுழைந்தா
லெனச்செவியிற் புகுத லோடும்
உண்ணிலா வியதுயரம் பிடித்துந்த
வாருயிர்நின் றூச லாடக்
கண்ணிலான் பெற்றிழந்தா லெனவுழந்தான்
கடுந்துயரங் கால வேலான் (37)

கொண்டுகூட்டு : கால வேலான், எண்ணிலா அரும் தவத்தோன் இயம்பிய சொல் மருமத்தின் எறிவேல் பாய்ந்த புண்ணில் ஆம் பெரும் புழையில் கனல் நுழைந்தாலெனச் செவியில் புகுதலோடும், உள் நிலாவிய துயரம் பிடித்து உந்த, ஆருயிர் நின்று ஊச லாடக் கண் இ(ல்)லான் பெற்று இழந்தா லெனக் கடும் துயரம் உழந்தான்.

பொருள் : அவன் கூறிய வார்த்தை, தசரதனுக்கு மார்பிலே வேல் பாய்ந்த புண்ணிலே உண்டாகிய பெரும் புரையினுள்ளே நெருப்பு நுழைந்தாற் போலக் காதிலே புகுந்த வுடனே, அவன் மனத்தில் உண்டாகிய துன்பம் அவன் உயிரைப் பிடித்து உடலி னின்று வெளியே தள்ள,-உயிர், தான் நெடுங் காலம் வாழ்ந்த உட லாதலால், அதனைப் பிரிய மாட்டாமல் திரும்ப உள்ளே புகத்-துன்பம் மறுபடியும் வெளியே தள்ள,-உயிர் மீண்டும் உள்ளே புக,-இவ்வாறாக, உயிர் போவதும் வருவது மாகி ஊஞ்சல் போல ஆட, அவன் நெடுங் காலம் பிள்ளை யில்லா

திருந்து வருந்தி அருமையாகப் பெற்ற பிள்ளையை இழந்து விட்டதாக நினைந்து, ஒரு பிறவிக் குருடன் கண் பெற்றுப் பின்பு இழந்தால் அடையும் கடுந் துன்பத்தை அடைந்தான்.

எண்ணிலா - எண் இல்லா - சங்கியை இல்லாத - அளவில்லாத; எண்ணுதல் இல்லாத - (விசுவாமித்திரன் தன் வார்த்தையால் தசரதனுக்கு எவ்வளவு துன்ப முண்டா மென்று) எண்ணிப் பாராத. 'அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு' என்பதில் 'அஞ்சாமல்' என்பது 'அஞ்சா' என வந்தது போல, 'இலாமல்' என்பது 'இலா' என வந்ததாகக் கொண்டு 'எண் இலா' என்பதற்கு 'யோசனையில்லாமல்' எனவும் பொருள் கொள்ளலாம். எண் (- எளிமை) இலா - வலிய. எண் (-மனம்) நி(ல்)லா - (விசுவாமித்திரனது தவத்தின் பெருமையை நினைவாரது) மனம் (இடம் போதாமையால் அதில் அடங்கி) நில்லாத. எண் - மனம்.—ச. அ. 'எண்ணிலா' என்பதற்கு இந்த நான்காம் பொருள் கொண்டால், இப் பாட்டுத் திரிபு என்னும் கவியாம். எண் (-மனத்தில்) நிலாவு (-விளங்கிய) அருந் தவத்தோ னென்றும் பதம் பிரித்துப் பொருள் கொள்ளலுமாம். புழை - துவாரம். உள் (-மனத்தில்) நிலாவிய துயரம் (-துன்பம்) பிடித்து உந்த (-தள்ள) ஆருயிர் (-அருமையான உயிர்) நின்று (தள்ளப்பட்டும் வெளியே போகாது உடலுள் நின்று) ஊசல் ஆட (-ஊஞ்சலைப் போல ஆட) ஊஞ்சலைப் பிடித்துத் தள்ளத் தள்ள, அது திரும்பத் திரும்பத் தான் முன் இருந்த இடத்துக்கு வருவது போலத் துன்பம் வெளியே பிடித்துத் தள்ளத் தள்ள, உயிர் தன் நிலையமாகிய உடலுக்கு மீண்டும் மீண்டும் திரும்பியதாக, கவி துக்க வருணனை செய்தது மிக்க பொருத்தமானது. அவர் இப்படிப்பட்ட மற்றொரு சந்தர்ப்பத்தில் 'ஆவி வருவது போவதாகி' என்று கூறுவர்; வேறோரிடத்தில் 'உண்டிலை யென்னநின்ற உயிர்' என்பர். 'காலவேலான் கடுந்துயரம் உழந்தான்' என மாற்றிக் காலனை ஒத்த வேலாயுதத்தை யுடைய தசரதன் கொடிய துன்பத்தை வருந்தி யநுபவித்தான் என்று பொருள் கொள்க.

'தவத்தோன் இயம்பிய சொல் மருமத்தின் எறிவேல் பாய்ந்த புண்ணில் ஆம் பெரும் புழையிற் கனல் நுழைந்தா லெனச் செவியிற் புகுதல்' என்பதனில் உள்ள உவமான உவமேயப் பொருத்தத்தை நோக்கி அறிஞர் மிக்க மகிழ்ச்சி அடைவர். அடைந்தவர், அதனினும் அதிக இன்பம் பயக்கும் 'உள்நிலாவிய துயரம் பிடித்துந்த ஆருயிர் நின்றூசலாட' என்பதனில் உள்ள அரிய கருத்தின் சுவையை ருசித்து நுகர்ந்து ஆனந்தித்த போது அது போலச் சுவை யுடைய கவிக் கருத்திரா தென்று இயல்பாகக் கருதுவர். ஆயினும், அதனை அடுத்து வருகின்ற, அதற்குப் பிந்தாத சிறப்புடைய, 'கண் இலான் பெற்றிழந்தால் என உழந்தான் கடுந்துயரம் காலவேலான்' என்பதன் நயத்தில் ஈடுபட்டு அவர்கள் அடையும் ஆநந்தத்துக்கு எல்லையே இல்லை.

இவ்வாருக இப் பாட்டு, துவக்க முதல் இறுதி வரையும், மேன் மேல் மகிழ்ச்சி விளைக்கும் மூன்று சிறந்த கருத்துக்கள் அடங்கி யுள்ளது. இப் படலத்தில் இதற்கு முந்திய இனிமை மிகுந்த கவிகள் மற்றைய அங்கங் களில் அணியும் ஆபரணங்களாக, இது சிரசில் அணியும் மகுடம் போல விளங்குகின்றது.

பாடபேதம் : இழந்தானென. (37)

### சங்கடத்தி னின்று தப்பத் தசரதன் முயலல்

தொடையூற்றிற் றேன்றுளிக்கு நறுந்தாரா
ஞெருவண்ணந் துயர நீங்கிப்
படையூற்ற மிலன்சிறிய னவர்பெரியோர்
பணியிதுவேற் பனிநீர்க் கங்கை
புடையூற்றுஞ் சடையானும் நான்முகனும்
புரந்தரனும் புகுந்து செய்யும்
இடையூற்றுக் கிடையூரு யான்காப்பன்
பெருவேள்விக் கெழுக வென்ருன் (38)

கொண்டுகூட்டு : தொடை ஊற்றின் தேன் துளிக்கும் நறும் தாரான் ஒரு வண்ணம் துயரம் நீங்கி, '(உன்) பணி இதுவேல், (இவன்) படை ஊற்றம் இலன், சிறியன் ; அவர் பெரியோர் ; பனி நீர்க் கங்கை புடை ஊற்றும் சடையானும் நான்முகனும் புரந்தரனும் புகுந்து செய்யும் இடையூற்றுக்கு இடையூருய் யான் காப்பன் ; பெரு வெள்விக்கு எழுக,' என்ருன்.

பொருள் : பின்பு அவன் சமாளிக்கும் வழி உன்னி ஒரு வாறு துன்பம் நீங்கி, 'இராமன் போர் வலிமை இல்லாதவன் ; சிறியவன் ; அவ் அரக்கரோ பெரியவர் ; ஆதலால் உமது வேள் வியை நான் காப்பேன். வேள்வி செய்தற்குப் புறப்படுக.' என்ருன்.

தொடை ஊற்றின் தேன் துளிக்கும் நறும் தார் - தொடுத்து ஊற்றைப் போலத் தேன் சொட்டும் வாசனை யுடைய மாலை. தொடை ஊற்றின் - தொடையின் ஊற்றுப் போல. தொடை - தேன் கூடு. ஊற்றம் - வலி. பணி - கட்டளை. பனி நீர்க் கங்கை - குளிர்ச்சியுடைய நீரை யுடைய கங்கையை. புடை ஊற்றும் - (ஒரு) பக்கத்தில் வடியச் செய் யும் - பாய விடும். புரந்தரன் - இந்திரன்.

பாடபேதம் : சிறியன் இவன், பெரியோய். (38)

### விசுவாமித்திரன் கோபம்

என்றனனென் றலுமுனிவோ டெழுந்தனன்மண்
 படைத்தமுனி யிறுதிக் காலம்
அன்றெனவா மெனவிமையோ ரயிர்த்தனர்மேல்
 வெயில்கரந்த தங்கு மிங்கும்
நின்றனவுந் திரிந்தனமீ நிவந்தகொழுங்
 கடைப்புருவம் நெற்றி முற்றச்
சென்றனவந் ததுநகையுஞ் சிவந்தனகண்
 ணிருண்டனபோய்த் திசைக ளெல்லாம் (39)

கொண்டுகூட்டு : என்றனன் ; என்றலும், மண் படைத்த முனி, முனிவோடு எழுந்தனன். இறுதிக் காலம் அன்று என, ஆம் என, இமையோர் அயிர்த்தனர் ; மேல் வெயில் கரந்தது! நின்றனவும் அங்கும் இங்கும் திரிந்தன ! மீ நிவந்த கொழும் கடைப் புருவம், நெற்றி முற்றச் சென்றன ! நகையும் வந்தது ! கண்கள் சிவந்தன ! எல்லாத் திசைகளும் இருண்டு போயின !

பொருள் : என்று இவ்வாறு தசரதன் கூறினான். கூறின உடனே, ' பிரமா முதலிய சகல சீவராசிகளோடு உலகத்தைச் சிருட்டிப்பேன் ' என்று சிருட்டிக்கத் தொடங்கி ஒரு பாகம் உலகத்தைச் சிருட்டித்து விட்ட பெரு வல்லபம் உள்ள விசுவாமித்திர முனிவன் கோபத்தோடு புறப்பட எழுந்தான். அவனுடைய கோபாக்கினி எங்கும் பரவ, இந்தப் பிரளய காலாக்கினி இப்போது எப்படி வந்தது, யுக முடிவு காலம் வர இன்னும் நெடுங் காலம் உண்டே, ஆதலால் இப்போது உலக முடிவு காலம் போலத் தோன்றினும், உண்மையில் உலக முடிவு காலம் அன்று என்றும், இவ் அக்கினி உலகத்தை முடித்தே விடுமாதலால், இது முடிவு காலமே ஆம் என்றும், எது நிச்சய மென்று துணியக் கூடவில்லையே என்றும், தேவர்கள் சந்தேகிப்பா ராயினர். அந்தக் கோபாக்கினியின் புகையினால் சூரியனும் மறைந்தது ! விண் ணுலகத்தும் மண் ணுலகத்தும் உள்ள நிலை பெயர்ந்து சரிக்கும் இயல்புடைய சரப் பொருள்களோடு நிலை பெயராத அசரப் பொருள்களும் நிலை பெயர்ந்து அங்கும் இங்குமாக அலைவன வாயின ! கோபத்தால் மேலேறிய உரோம அடர்ச்சி வளமுடைய அவனுடைய புருவக் கடைகள் நெற்றி முழுதும் வியாபிக்கும்படி மேல் நோக்கிச் செல்வன வாயின ! கோபச் சிரிப்பும் உண்டாயிற்று ! கண்களும் அந்தக் கோபத்தாற் சிவந்

தன ! அப்படிப்பட்ட கோபமாகிய நெருப்பினது புகையினுல் சூரியன் மறைந்ததோடு, எல்லாத் திக்குகளும் இருண்டு போயின !

என்றலும் - என்ற வுடனே. முனிவு - கோபம். இறுதி - முடிவு. வெயில் - வெயில்; சூரியன். கரந்தது - மறைந்தது. மீ - மேல். நிவந்த - உயர்ந்த - ஏறின. இருண்டன போய் - இருண்டு போயின. 'திசைக ளெல்லாம் போய் இருண்டன' என மாற்றித் திசைக ளெல்லாம் (விளங்குதல்) போய் (க் கண்ணுக்குத் தெரியாதன வாக) இரு ளடைந்தன என்றும் பொருள் கொள்ளலாம். 'அன்றென ஆமென, அங்கும் இங்கும், நின்றன திரிந்தன, சென்றன வந்தன, சிவந்தன இருண்டன — தொடை முரண்.—வை. மு. கோ.

இப் பாட்டில் விசுவாமித்திரனது கோபம் அதி காம்பீரியமாய் மிக்க அதிசயம் விளைப்பதாய் வருணிக்கப்பட் டிருக்கிறது. விசுவாமித்திரனைக் குறிக்க, எத்தனையோ சொற்ருெடர்கள் இருக்கவும் இங்கே 'மண் படைத்த முனி' என்று கூறியது, அவன் கோபம், உலக முடிவு வந்து விட்டதோ என்று தேவர்கள் சந்தேகிக்கவும் சூரியன் மறையவும் திசைகள் இருளவும் செய்த தென்பது, அசம்பாவித மன்றெனக் கொள்ளும்படி, பூர்வ பீடிகை யாகக் கூறிய தென்னலாம். (39)

## இராம லக்குமணரை விசுவாமித்திரனிடம் ஒப்புவித்தல்

கறுத்த மாமுனி கருத்தை யுன்னிநீ
பொறுத்தி யென்றவற் புகழ்ந்து நின்மகற்
குறுத்த லாகலா வுறுதி யெய்துநாள்
மறுத்தியோ வெனு வசிட்டன் கூறினுன் (40)

கொண்டுகூட்டு : கறுத்த மாமுனி கருத்தை உன்னி, வசிட்டன், 'நீ பொறுத்தி' என்று அவற் புகழ்ந்து, (தசரதனை நோக்கி) 'நின் மகற்கு உறுத்தலாகா உறுதி எய்தும் நாள் மறுத்தியோ?' எனக் கூறினுன்.

பொருள் : இவ்வாறு கோபித்த விசுவாமித்திரன் இராம னுக்கு மிக்க நன்மை செய்யக் கருதியிருக்கும் கருத்தை ஆராய்ந் தறிந்துகொண்டு, வசிட்டன், 'அளவற்ற தவ வலியை யுடைய நீ கோபித்தால், யார்தாம் தாங்கவல்லார்! பொறுத்தருள்க' என்று அவனுக்குப் புகழ்மொழி கூறிச் சாந்தப் படுத்திவிட்டு, தசரதனை நோக்கி, 'உனது மகனுக்கு விசுவாமித்திரனு லன்றி வேறெவராலும் அடைவிக்க முடியாத நன்மைகள் அடையுங் காலத்தில் அவைகள் அடைய வொட்டாமல் தடுக்கிருயோ?' என்று கூறினுன்.

கறுத்த - கோபித்த. உன்னி - ஆராய்ந் தறிந்து. 'உன்னினேன் உனதுள்ளத்தின் உள்ளத்தை உரவோய்' என அனுமான் சுக்கிரீவனை நோக்கிக் கூறியதிலும், 'உன்னுதல்', 'ஆராய்ந் தறிதல்' எனப் பொருள் படல் காண்க. பொறுத்தி - பொறுப்பாய். அவற் புகழ்ந்து - அவனைப் புகழ்ந்து. 'அவற் புகன்று' என்றும் பாடம். அப் பாடத்துக்கு, 'அவனுக்குச் சொல்லி' என்பது பொருள். உறுத்த லாகலா - உறுவிக்க லாகலா - அடைவிக்க முடியாத. உறுதி - நன்மை. — ச. அ. நல்லது. —சிந்தா. மறுத்தியோ - மறுப்பாயோ - தடுப்பாயோ.

பாடபேதம் : அவற்புகன்று. (40)

பெய்யு மாரியாற் பெருகு வெள்ளம்போய்
மொய்கொள் வேலைவாய் முடுகு மாறுபோல்
ஐய நின்மகற் களவில் விஞ்சைவந்
தெய்து காலமின் றெதிர்ந்த தென்னவே (41)

குருவின் வாசகங் கொண்டு கொற்றவன்
திருவின் கேள்வனைக் கொணர்மின் சென்றென
வருக வென்றன னென்ற லோடும்வந்
தருகு சார்ந்தன னறிவி னும்பரான் (42)

கொண்டுகூட்டு : 'ஐய, பெய்யும் மாரியால் பெருகு வெள்ளம் போய் மொய் கொள் வேலைவாய் முடுகும் ஆறுபோல் நின் மகற்கு அளவு இல் விஞ்சை வந்து எய்து காலம் இன்று எதிர்ந்தது' என்னவே,

கொற்றவன், குருவின் வாசகம் கொண்டு, (தூதர்களை) 'சென்று திருவின் கேள்வனைக் கொணர்மின்' என, (அவர்போய்) 'வருக என்றனன்' என்றலோடும், அறிவின் உம்பரான் வந்து அருகு சார்ந்தனன்.

பொருள் : 'மழையினால் பெருகும் வெள்ளங்கள் கடலினிடத்து விரைந்து சென்றடைதல் போல, உன்னுடைய மகனுக்கு அளவற்ற வித்தைகள் வந்து சேருங் காலம் இன்று நேர்ந்தது' என்று வசிட்டன் கூற, தசரதன் அவன் வார்த்தையை ஏற்று உடம்பட்டு, தூதர்களை நோக்கி, 'நீங்கள் போய் இராமனை அழைத்துக்கொண்டு வாருங்கள்' என்று ஏவ, அவ்வாறே, அவர்கள்போய்ச் 'சக்கரவர்த்தி உன்னை "வருக" என்றான்' என்றவுடனே, அவன் வந்து தசரதன் அருகே அடைந்தான்.

மெய் - கூட்டம்.—பிங்கல. மொய் கொள் வேலை - (முந்தி வந்த வெள்ளக்) கூட்டத்தைத் (தனக்குள்ளாக்கிக்) கொண்டிருக்கின்ற கடல். வெள்ளங்கள் வித்தைகளுக்கும் கடல் ராமனுக்கும் உவமான மாதலால்,

மேற்கூறிய பொருளுக் கேற்ப, உவமேயத்தில் முன்னமே வசிட்டன் கற்பித்துத் தந்த வித்தைக் கூட்டங்களைத் தன்னுடையன வாக்கிக்கொண் டிருக்கின்ற இராமன் என்று பொருள் வருவித்துக் கொள்க. முடுகும் ஆறு - விரைந்து அடையும் விதம். விஞ்சை - வித்தை. கொண்டு - ஏற்றுக்கொண்டு (உடம்பட்டு.) திருவின் கேள்வன் - இலக்குமி நாயகன் - விட்டுணுவைப் போன்றவன், இராமன். கொணர்மின் சென்று என - (தூதரை நோக்கி நீங்கள்) சென்று கொணர்மின் (- கொண்டு வாருங்கள்) என. வருக என்றனன் - (உன் பிதா உன்னைத் தன்பால்) வருவாயாக என்றான். அருகு - (தசரதன்) அருகு. அறிவின் உம்பரான் - அறிவின் மேலோன். அறிவுக்கு மேற்பட்டவன் - அறிவுக் கெட்டாதவன் - கடவுள் அவதாரமானவன், இராமன். 'திருவின் கேள்வன்', தசரதன் கூற்று. 'அறிவின் உம்பரான்' கம்பர் கூற்று. தசரதனுக்கு இராமன் விட்டுணு வின் அவதாரமென்பது தெரியா தாதலால், 'திருவின் கேள்வன்' என்ப தற்கு விட்டுணுவின் அவதாரமான இராமன் என்று பொருள் கூறவில்லை. மேகம் முனிவனுக்கும், மேகம் மழை பொழிதல் அவன் விஞ்சை அளித்த லுக்கும், மழை வெள்ளம் விரைந்து கடலை அடைதல் விஞ்சைத் திரள் விரைந்து இராமனை அடைதலுக்கும், உவமை.

'கொணர்மின்' என்பதற்கு முன் 'தூதரை நோக்கி' என்று சொல் லற் பாலது, சொல்லாதிருக்கவும் விளங்குகின்றது. அத் தூதர் இராமனை அடைந்து அவனை நோக்கி, 'உன் தந்தை உன்னைத் தன்பால் வருக என்றனன்' எனக் கூறற்பாலதை 'வருக என்றனன்' எனச் சுருக்கிக் கூறியதிற் பொருள் விளக்கம் அமையாதிருக்கவில்லை. இவ்வாறாக, இப் பாட்டு, 'சுருங்கச் சொல்லல்', 'விளங்கவைத்தல்', என்ற ஒன்றுக் கொன்று இயல்பிலே முரணான இரண்டு வனப்புக்கள் ஒருங்கே அமைய இயற்றப்பெற்றிருப்பது கவனிக்கத் தக்கது. (41–2)

**வந்த நம்பியைத் தம்பி தன்னொடு**
**முந்தை நான்மறை முனிக்குக் காட்டிநல்**
**தந்தை நீதனித் தாயு நீயிவர்க்**
**கெந்தை தந்தன னியைந்த செய்கென்றான்** **(43)**

கொண்டுகூட்டு : வந்த நம்பியைத் தம்பி தன்னொடும் முந்தை நால் மறை முனிக்குக் காட்டி, 'எந்தை (யே), இவர்க்கு நல் தந்தை (யும்) நீ, தனித் தாயும் நீ. (இவர்களை உனக்குத்) தந்தனன், இயைந்த செய்க' என்றான்.

பொருள் : தன் அருகு வந்த இராமனைத் தசரதன் இலக்கு மணனோடு விசுவாமித்திரனுக்குச் சுட்டிக் காட்டி 'இவர்களுக்கு நீயே தாயும் தந்தையும் ; நீ கேட்டபடியே இவர்களை உனக்கு

அடைக்கலமாகக் கொடுத்தேன். இவர்களைக் கொண்டு உனக்கு வேண்டிய காரியங்களைச் செய்துகொள்வாயாக' என்றான்.

நம்பி - ஆடவரிற் சிறந்தோன், இராமன். தம்பி - இலக்குமணன். முந்தை - பழமை. காட்டி - சுட்டிக்காட்டி. எந்தை - எமது தந்தையே. இயைந்த - இயைந்தவை—பொருந்தியவை - பொருத்தமான காரியங்கள். (43)

**காமனுச்சிரமம் அடைதல்**

அவ்வாறு கொடுத்த குமரரை ஒப்புக்கொண்டு முன் கொண்ட கோபத்தை நீக்கித் தசரதனை வாழ்த்தி, இனி நாம் தொடங்கிய வேள்வியை முடிக்கச் செல்வோமென்று விசுவாமித்திரன் புறப்பட்டான். இராமனும் இலக்குமணனும், தசரதனுயிர் அவனைப் பிரிந்து சென்றாற் போலவும், விசுவாமித்திரனை நீங்காமல் அவன் நிழல் சென்றாற் போலவும், சென்று, அயோத்தியைக் கடந்து, சரயு நதியைத் தாண்டி, அத்தமன சமயத்தில் ஒரு சோலையை அடைந்தார்கள். 'அது யாது' என்று இராமன் விசுவாமித்திரனைக் கேட்டான்.

# 7. தாடகை வதைப்படலம்

*இராமன் தாடகையைக் கொன்றதைக் கூறுவது*

**காமனுச்சிரமத்தின் பெருமை**

'சிவன் மன்மதனை யெரித்த காலத்தில் அவன் அங்கம் (-எலும்பு) விழுந்ததனால், இந்த இடமெல்லாம், அங்க நாடு எனப் பெயர்பெற்றது. இந்தச் சோலை, காமனுச்சிரமம் என வழங்கலானது' என்று விசுவாமித்திரன் கூறிப் பின்னும் கூறுவான்.

**பற்றவா வேரொடும் பசையறப் பிறவிபோய்**
**முற்றவா லுணர்வுமேன் முடுகினா ரறிவுசென்**
**றுற்றவா னவனிருந் தியோகுசெய் தனனெனிற்**
**சொற்றவா மளவதோ மற்றிதன் றூய்மையே** **(44)**

கொண்டுகூட்டு: 'பற்று அவா வேரொடும் பசை அறப், பிறவி முற்றப் போய், வால் உணர்வு மேல் முடுகினார் அறிவு சென்று உற்ற வானவன் (இங்கு) இருந்து யோகு செய்தன னெனில், மற்று இதன் தூய்மை சொற்றவாம் அளவதோ!'

பொருள் : 'யான் எனது என்னும் இருவகைப் பற்றும் ஆசையும் வேரொடு முழுதும் ஈரப்பசை யற்றுக் கெட் டழியவும், பிறவி அற்றுப் போயொழியவும், மெய் யுணர்வு பரம் பொருளை அறியும்படி மேல் நோக்கி விரைந்து சென்றுர் ஆகிய ஞானி களின் அறிவு முடிவாகச் சென்று அடையும் திருவடிகளை யுடைய பரமசிவன் இவ் ஆச்சிரமத்திலிருந்து யோகஞ் செய்தா னென்ருல், இதன் தூய தன்மை சொல்லுக்கடங்கும் தரத்தின தாமோ !'

பற்று - முன்னமே அடைந்திருக்கிற பொருள்களின் மேலுள்ள அபிமானம். அவா - அடையாத பொருள்களை அடைய விரும்பும் இச்சை. 'பற்று அவா' என்பவைகளைப் 'பற்று ஆர்வம்' என்பர் சிந்தாமணி யாசிரியர். 'பற்று - உள்ளதன்மேற்று. ஆர்வம் - பெறக் கடவதன் மேலது'.—சிந்தா. பற்று அவா வேரொடும் பசை அற - பற்று, அவா என்னும் மரங்கள், இலை வளார் கொம்பு கிளை பணை தூரே யன்றி, வேரும் ஈரப்பசை யற்றொழிய. வால் அறிவு - மெய் யுணர்வு. வானவன் - தேவன். மகாதேவன் - சிவன். சொற்ற (- சொன்ன) ஆம் அளவதோ - (இதுவரை) சொல்லப் பட்டனவாம் அளவினதோ - (இவ் வாச்சிரமத்தின் தூய தன்மை இதுவரை தன்னைப் பற்றிப் பலராலும் வியந்து) சொல்லப்பட்டன ஆகிய அளவுடையதோ ! (அன்று ; அவ்வளவுக்கு மேற்பட்டது.) சொற்ற - சொல்ல, ஆம் - கூடிய எனலுமாம்.

அறியாமை அல்லது மயக்க அறிவு காரணமாக உண்டாகும் பற்றும் அவாவும் ஒழியப் பிறப் பொழியும், பிறப் பொழிய வீடு (-இறைவன் திருவடி யடைதல்) சித்திக்கும் என்ற ஞான விஷயம் இப்பாட்டிற் கூறப் பட்டது. இதனைச் சுருக்கமாக 'அற்றது பற்றெனில், உற்றது வீடு' என்னும் ஞான வாக்கியத்திற் காணலாம். (44)

### மூவரும் ஒரு பாலை நிலத்தை அடைதல்

அன்று அவர்கள் அங்கே தங்கி மறுநாள் உதயம் ஒரு பாலை நிலத்தை அடைந்தார்கள்.

### பாலை வருணனை

பரிதிவா னவனிலம் பசையறப் பருகுவான்
விருதுமேற் கொண்டுலாம் வேனிலே அன்றிவே
றிருதுவொன் றின்மையா லெரிசுடர்க் கடவுளுங்
கருதின்வே முள்ளமுங் காணின்வே நயனமும் (45)

கொண்டுகூட்டு : பரிதி வானவன் நிலம் பசை அறப் பருகுவான் விருது மேற்கொண்டு உலாம் வேனிலே அன்றி வேறு இருது ஒன்று(ம்)

இன்மையால், (அந்தப் பாலைவனத்தை) எரிசுடர்க் கடவுளும் காணின் நயனம் வேம் ; கருதின் உள்ளமும் வேம்.

பொருள் : நிலம் ஈரப்பசை முற்றும் அற்றுப் போம்படி உறிஞ்சி விடச் சூரியன் வெற்றிக் கொடியை மேல் உயர்த்துப் பிடித்துக் கொண்டு சஞ்சரியாநின்ற கோடைப் பருவமொன்றே யன்றி வேறெந்தப் பருவமும் அந்தப் பாலைவனத்தில் எக்காலமும் வருதல் இல்லாததனால் அந்த நிலத்தை அக்கினி தேவனே காண்பானானால் அவன் கண்கள் வெந்துவிடும்! கருதுவானாயின், கருத்தும் வெந்து விடும்!

பரிதி (-சூரியன்) வானவன் (தேவன்) - சூரிய (னாகிய) தேவன். பருகுவான் - பருகும்படி, குடிக்கும்படி. விருது - வெற்றி. வெற்றிச்சின்னம் - வெற்றிக்கொடி. மேல் கொண்டு - மேலாகக் கொண்டு. உலாம் - உலாவும், சஞ்சரிக்கும். வேனில் - கோடை. இருது - பருவம். எரி சுடர்க் கடவுள் - சுவாலிக்கும் அக்கினி தேவன். கருதின் - கருதினால். வேம் - வேகும். (45)

படியின்மேல் வெம்மையைப் பகரினும் பகருநா
முடியவே முடியமூ டிருளும்வான் முகடும்வேம்
விடியுமேல் வெயிலும்வே மழையும்வே மின்னினோ
டிடியும்வே மென்னின்வே றியாவைவே வாதவே (46)

கொண்டுகூட்டு : படியின் மேல் (உள்ள) வெம்மையைப் பகரினும், பகரும் நா முடிய வேம்! முடிய மூடு இருளும் வான் முகடும் வேம்! விடியு மேல் வெயிலும் வேம்! மழையும் வேம்! மின்னினோடு இடியும் வேம்! என்னில், வேறு வேவாத (பொருள்) யாவை?

பொருள் : அந்தப் பாலை நிலத்தில் உள்ள வெப்பத்தைப் பற்றிச் சொன்னால் சொல்லும் நாக்கு முழுதும் அடியோடு வெந்துபோம்! அந்த வெப்பத்தால், அந்த நிலத்தை முழுதும் மூடிய இருளும் ஆகாய முகடும் வெந்துவிடும்! விடியுமானால் அந்நிலத்தின் மேல் எறிக்கும் வெயிலும் வெந்துவிடும்! அந் நிலத்துக்கு மேலாக வந்தால் மேகமும் வேகும்! அந்நிலத்தில் மின்னும் மின்னும் இடிக்கும் இடியும் வெந்துவிடும்! என்றால், வெந்து விடாத பொருள்கள்தாம் யாவை இருக்கின்றன?

படி - நிலம் - அந்தப் பாலை நிலம். முடிய வேம் - முழுதும் வேகும். முடிய மூடு - (அந்த நிலம்) முழுதும் மூடிய. வேவாத - வேகாதவை. (46)

**விஞ்சுவான் மழையின்மே லம்பும்வே லும்படச்**
**செஞ்செவே செருமுகத் தன்றியே திறனிலா**
**வஞ்சர்தீ வினையினால் மானமா மணியிழந்**
**தஞ்சினார் நெஞ்சுபோ லென்றுமா றுதரோ (47)**

**கொண்டுகூட்டு:** விஞ்சுவான் மழையின் மேல் அம்பும் வேலும் படச் செம் செவே செருமுகத்து அன்றியே, திறன் இலா வஞ்சர் தீவினையினால் மானம் ஆம் மணி இழந்து, அஞ்சினார் நெஞ்சு போல் என்றும் (கொதிப்பு) ஆறுதது (அந்தப் பாலைவனம்).

**பொருள்:** மிகுந்த மழைத் தாரைகளினும் அதிகமாக அம்புகளும் வேல்களும் தாக்க, மிக நேர்மையாகக் கிரமமான யுத்தத்திலே இயல்பாகத் தோல்வி அடைதல் அல்லாமல், போர் செய்யும் வல்லமை யில்லாத வஞ்சகர்களது (யுத்த முறைக்கு விரோதமாக, எதிர் நில்லாமல், பின்புறத்து நின்று காயப் படுத்தல் போன்ற கபடமான) கொடிய செய்கையால் மான மாகிய மணியை யிழந்து அநியாயமாகவும் அவமானமாகவும் தோல்வி யடைந்தார் ஆகிய வீரர்களுடைய மனம் கொதிப்பு ஆறுதது போல, என்றும் கொதிப்பாறுதது அந்தப் பாலைவனம்.

வான் - மேகம், மேகத்தின். மழையின் மேல் - மழைத் தாரையினும் அதிகமாக. மான மாமணி, எனக்கொண்டால், மான மென்னும் பெரிய இரத்தினம் என்பது பொருளாம். அஞ்சல் - தோல்வி. —பிங்கல. (47)

**தாவரும் மிருவினை செற்றுத் தள்ளரு**
**மூவகைப் பகையரண் கடந்து முத்தியிற்**
**போவது புரிபவர் மனமும் பொன்விலைப்**
**பாவையர் மனமும்போற் பசையு மற்றதே (48)**

**கொண்டுகூட்டு:** தா வரும் இரு வினை செற்றுத் தள்ளரும் மூவகைப் பகை அரண் கடந்து, முத்தியில் போவது புரிபவர் மனமும், பொன்விலைப் பாவையர் மனமும் போல் பசை அற்றது (அப் பாலைவனம்).

**பொருள்:** நல்வினை தீவினை யென்னும் இரு வினைகளாகிய காடுகளாம் கோட்டைப் புறத்து அரண்களையும் தொலைத்து, காமம் வெகுளி மயக்கமென்னும் மூன்றுவகைப் பகைக் கோட்டைகளையும் தாண்டி, முத்தி நகரத்தில் செயசாலிகளாய்ச் சேர்தற்கு விரும்புவோரது மனத்தையும் வேசையரது மனத்தையும் போல ஈரப்பற்று இல்லாதது அந்தப் பாலைவனம்.

தா வரும் - துன்பம் வரும், துன்பம் வருவதற்குக் காரணமான.

இருவினை - நல்வினை தீவினை. நல்வினையும் பிறவிக்குக் காரணமாதலால், துன்பம் தரும் வினை என்றார். 'இரு வினைக்கு' பெரிய வினை, என்றும் பொருள் கொள்ளலாம். செறுதல் - அழித்தல். செற்று - அழித்து. தள் அரும் - நீக்குதற்கரிய. மூவகை - மூன்று வகை. அரண் - கோட்டை. புரிபவர் - விரும்புபவர். பொன் விலைப் பாவையர் - (போகத்துக்குப்) பொன்னை விலையாகக் கொள்ளும் பெண்கள் - வேசியர். பசை - பற்று (செய்யுள் வழக்கு—சிந்தா) ; ஈரம் (உலக வழக்கு). முத்தியை விரும்பு வோர் மனம் ஈசன் திருவடிப் பற்றன்றி வேறு பற்றில்லாதது ; வேசியர் மனம் பொருட் பற்றன்றி வேறு பற்றில்லாதது ; பாலைவனம் கொதிப்புப் பற்றன்றி வேறு பற்றில்லாதது—ஈரப் பற்றில்லாதது. (48)

### விசுவாமித்திரன், தாடகை கொடுமை விளம்பல்

இராமன், 'தசரதன் நாட்டில் ஒரு பகுதி இவ்வாறு அழிந்த தற்குக் காரணம் யாது?' என, விசுவாமித்திரன் கூறுவான் :

**பெருவரை யிரண்டொடும் பிறந்த நஞ்சொடும்**
**உருமுறழ் முழக்கொடு மூழித் தீயொடும்**
**இருபிறை செறிந்தெழு கடலுண் டாமெனின்**
**வெருவரு தோற்றத்தண் மேனி மானுமே (49)**

**சூடக அரவுறழ் சூலக் கையினள்**
**காடுறை வாழ்க்கையள் கண்ணிற் காண்பரேல்**
**ஆடவர் பெண்மையை யவாவுந் தோளினாய்**
**தாடகை யென்பதச் சழக்கி நாமமே (50)**

கொண்டுகூட்டு : கண்ணிற் காண்பரேல், ஆடவர் பெண்மையை அவாவு தோளினாய் ! ஊழித் தீயொடும் பிறந்த நஞ்சொடும், உரும் உறழ் முழக்கொடும், பெருவரை இரண்டொடும் இரு பிறை செறிந்து எழுகடல் உண்டாம் எனின், வெருவரு தோற்றத்தள் மேனி மானும். (அவள்) சூடக (மாக அணிந்த) அரவு உறழ் சூலம் (ஏந்திய கையினள் ; காடு உறை வாழ்க்கையள் ; அச் சழக்கி நாமம் தாடகை என்பது.

பொருள் : புருடர்கள் எப்படிப்பட்ட தோள்களைக் கண் களாற் காண்பாரானால், அவைகளின் அழகில் ஈடுபட்டு அவை களைத் தழுவப் பெண்ணாகப் பிறந்தோ மில்லையே யென்று பெண் தன்மை அடைய விரும்புவார்களோ, அப்படிப்பட்ட தோள்களை யுடையவனே ! யுக முடிவு காலத்துத் தீயும் இரண்டு ஆலகால விடமும் இரண்டு பிறையும் இடி முழக்கமும் இரண்டு மலையும் பொருந்தித் தோன்றும் பெருங் கருங் கடல் ஒன்று உண்டா மானால், அந்தக் கடல், பெரு நெருப்புச் சுவாலித்து எரிதல்

போன்ற செம்பட்டைத் தலைமயிரும், இரண்டு ஆலகால விடங்கள் போன்ற பெரிய கரிய கொடிய கண்களும், இரண்டு பிறைகள் போன்ற கோரப் பற்களும், இடி முழக்கம் போன்ற ஆரவாரமும், இரண்டு பெரிய மலைகள் போன்ற தனங்களும் ஆகிய இவைகளோடு, பார்த்தோர் பயப்படும் படியான தோற்றமுடையவளான இந்தப் பிரதேசத்தைப் பாழ் படுத்தியவள் தேகத்தை ஒக்கும்; அவள் கையில் சூலாயுத முடையவள்; காடே வாழு மிட மாகக் கொண்டவள்; அவள் பெயர் தாடகை.

இரண்டு பெரு வரையொடும் நஞ்சொடும் எனக் கூட்டி 'இரண்டு' என்பதை 'நஞ்சு'க்கும் அடை மொழியாகக் கொள்க. பிறந்த நஞ்சு - கடலில் (தேவர்கள் அமுதத்துக்காகக் கடைந்த காலத்தில்) உண்டாகிய ஆலகால விடம். உரும் - இடி. உறழ்தல் - உவமையாதல். செறிதல் - இயைதல் - பொருந்தல். எழுதல் - தோன்றுதல். வெருவரல் - பயப்படல். வெருவரு தோற்றத்தள் - பயப்படுதற்குக் காரணமான தோற்றத்தையுடையவள். மானும் - ஒக்கும்.

சூடக அரவு உறழ் சூலம் - (கையில் அணிந்த) சூடகமாகிய (படம் விரித்த) பாம்பு போலும் (ஒடுங்கி நீண்ட உடலும் பரந்த தலையும் உடைய) சூலாயுதம். சூடகம் - கைவளை. 'சூடக அரவு உறழ் கை' எனக் கூட்டிச் சூடகமாக அணிந்திருக்கிற பாம்பு போன்ற கை யென்றும் பொருள் கூறலாம். பின் வரும் காஞ்சிப்புராணப் பாட்டில் பாம்பைக் கைக்கு உவமானமாக வருணித்திருத்தல் காண்க—

முருகுகொப் புளிக்கும் கொன்றை நறுந்தொடை முடித்த வேணி
ஒருவர்வாள் முகத்துக் கண்ணும் உறையினும் விடேங்கள் என்று அவ்
இரு திறத்து அரவும் கூடி ஏல்வை பார்த்து உண்டது ஒக்கும்,
விரி மலர்க் கரங்கள் தம்மால் விழித்துணை புதைத்த தோற்றம்.

'சூடக அரவுறழ் சூலக் கையினள்' என்பது சூடகமாக அணிந்த படம் விரிந்த அரவு உறழ்கின்றதும் சூலாயுதத்தைத் தாங்கியதுமான கையினை யுடையாள் என விரியும். காடு உறை - வனங்களில் வாழ்கின்ற. சழக்கு - நீதிக்கு மாறானது; வழக்கிற்கு மாறானது, என்பது கருத்து. (உ - ம்.)—

'இழக்கின்றேன் மைந்தனையென் றெல்லீருஞ் சொல்லியவிச்
சழக்கின்று நானிசைந்தாற் றருமந்தான் சலியாதோ'

பெரிய புரா., திருவாரூர், 35.—ச. அ.

தாடகையினது பயங்கரமான கரிய பெரிய தேகம் கடல் போலுமென்றதற்குப் பொருத்தமாக, அத் தேகத்தில் உள்ள செம்பட்டைத் தலைமயிர், கரிய கொடிய கண்கள், வக்கிர தந்தங்கள், ஆர்ப்பரித்து அதட்டும் ஓசை, தனங்கள், ஆகியவைகள் முறையே (கடலோடு சம்பந்தப்பட்ட)

வடவைத்தீ, ஆலகால விடம், பிறை, ஓசை, மலை ஆகியவைகளாக உவமித் திருக்கும் கவி சாதுரியம் பாராட்டத் தக்கது.

மலை, கடல் கடைந்த மந்தரம் என்க. நஞ்சும் பிறையும் மலையும் அவற்றின் உவமேயங்களான கண்ணும் வக்கிர தந்தமும் தனமும் இரட்டையா யிருப்பது பற்றி இரட்டையாகக் கூறினர். ஆலகாலமும் பிறையும் பிறந்ததும் மலை கடைந்ததும் வெண் பாற் கடலாயினும், கட லென்ற மாத்திரையானே அதனைத் தாடகை கரிய உடம்புக்கு உவமை யாகக் கூறினர். மகா மேருவாகிய பொன் மலை, மலையென்ற மாத்திரத் தால் கீழ் 59-ம் பாட்டில், கரு நிறமுடைய இராமனுக்கு உவமையாகக் கூறியிருத்தல் காண்க. (49, 50)

**உளப்பரும் பிணிப்புரு வுலோப மொன்றுமே**
**அளப்பருங் குணங்களை யழிக்கு மாறுபோற்**
**கிளப்பருங் கொடுமைய வரக்கி கேடிலா**
**வளப்பரும் மருதவைப் பழித்து மாற்றினள்** **(51)**

**கொண்டுகூட்டு :** உலோபம் ஒன்றுமே, உளப் பரும் பிணிப்பு உரு, அளப்பு அரும் குணங்களை அழிக்குமாறு போல், கிளப்பு அரும் கொடுமைய அரக்கி கேடு இலா வளப் பரும் மருத வைப்பை அழித்து (பாலை நிலமாக) மாற்றினள்.

**பொருள் :** 'உலோப குணம் ஒன்றே என்னினும் அது ஒருவ னது உள்ளத்தின் பெரிய பந்தமாக உற்று அவனுடைய அள வற்ற நற்குணங்களை அழித்து விடுதல் போல, சொல்ல முடியாத கொடுமைகளை யுடைய இந்த இராட்சசி, முன் குறை வில்லாத வளப்பத்தை யுடைய விசாலமான மருதநிலமா யிருந்த இந்த இடத்தை அடைந்து இதன் வளங்க ளெல்லாவற்றையும் அழித் துப் பாலைநிலமாக மாற்றினள்.'

உள - உள்ளத்தின். பரும் - பருமையான - பெரிய. பிணிப்பு - கட்டு. உரு - உற்று. அளப்பு அரும் - அளத்தல் அரிய - அளவற்ற. ஆறு - விதம். கிளப்பு அரும் - சொல்லுதல் அரிய - சொல்ல முடியாத. கேடு - குறைவு; (உ - ம்) 'வைப்புழிக் கோட்படா வாய்த்தீயிற் கேடில்லை' (நாலடி.144).—க. அ. வளம் (உடைய) பரும் - (பெரிய - விசாலமான). மருத வைப்பு (-மருத நிலம்). வைப்பு - இடம்; இங்கே நிலத்தைக் குறித்தது.

ஒருவனது, எல்லா நற் குணங்களும் நிறைந்திருக்கும் மனத்தில், உலோப குணம் ஒன்று தோன்றுமானல், அது அந்த நற் குணங்கள் அனைத்தையும் நாசமாக்கி அம் மனத்தைப் பாழ்மன மாக்குதல் போல, சகல வளங்களும் நிரம்பி யிருந்த மருத நிலத்தில் தாடகை ஒருத்தி

தோன்றி எல்லா வளங்களையும் அழித்து அந்த நிலத்தைப் பாழ்நில மாக்கி னுள், என்பது கருத்து. (51)

இராமன் தாடகை இருப்பிடம் யாதென வினவல்

அங்கிறைவ னப்பரிசு ரைப்பவது கேளாக்
கொங்குறைந றைக்குலம லர்ச்செனிகு லுக்கா
எங்குறைவ தித்தொழிலி யற்றுபவ ளென்றுன்
சங்குறைக ரத்தொருத னிச்சிலைத ரித்தான் (52)

கொண்டுகூட்டு : அங்கு இறைவன் அப்பரிசு உரைப்ப, அதைச் சங்கு உறை கரத்து ஒரு தனிச்சிலை தரித்தான் கேளா, கொங்கு உறை நறைக்குல மலர்ச் செ(ன்)னி குலுக்கா, 'இத் தொழில் இயற்றுபவள் உறைவது எங்கு ?' என்றுன்.

பொருள் : என்று இவ்வாருகத் தவ ராசனுகிய விசுவாமித்திரன் கூற, திருமாலாக இருந்த போது சங்கு தங்கிய இடக் கையிலே தசரத குமாரனுய் வில்லைத் தாங்கிய இராகவன் கேட்டு, வாசனை தங்கிய மலர் மாலை யணிந்த முடித் தலையை, அப்படியா என்று அசைத்து, 'இப்படிப்பட்ட கொடிய தொழில் செய்பவள் தங்குவது எங்கு ?' என்று கேட்டான்.

இறைவன் - இராசன் - தவராசன் ஆகிய விசுவாமித்திரன்; குரு. அப் பரிசு - அவ்வாறு. கொங்கு - வாசனை. நறை - தேன். குல மலர் - சிறந்த புட்பம். செனி - சென்னி - தலை. குலுக்கா - குலுக்கி - அசைத்து. தனிச் சிலை - ஒப்பற்ற வில். இங்கே இராமன் தலை யசைத்துக் கேட்டதைக் கம்பர் நமது மனக் கண்ணெதிரே இப்போதுதான் நிகழ்வதுபோலத் தோன்றும்படி, தொனி வருணங்களும் சொல் இரேகைகளும் கொண்டு, கவிப் படத்திற் சித்திரித்திருப்பது கவனித்து நோக்கிக் களிக்கத் தக்கது. இராமன் திருமாலின் அவதாரம் என்பதைச் 'சங்குறை கரத்தொரு தனிச் சிலை தரித்தான்' என்று நயம்படக் கூறியதும் மிக்க மகிழ்ச்சி விளைக்கின்றது. (52)

தாடகை தோன்றல்

கைவரையெ னத்தகைய காளையுரை கேளா
ஐவரைய கத்திடைய டைத்தமுனி யைய
இவ்வரையி ருப்பதவ ளென்பதனின் முன்போர்
மைவரைநெ ருப்பெரிய வந்ததென வந்தாள் (53)

கொண்டுகூட்டு : ஐவரை அகத்திடை அடைத்த முனி, கைவரை எனத் தகைய காளை உரை கேளா, 'ஐய ! அவள் இருப்பது இவ்வரை'

என்பதனின் முன்பு, (அவள்) ஓர் மைவரை, நெருப்பு எரிய வந்தது என வந்தாள்.

பொருள் : இராமன் கூறியதைக் கேட்டு 'அவள் இருப்பது, இதோ! சமீபத்தில் தோன்றுகின்ற இந்த மலை தான்' என்று விசுவாமித்திரன் சொல்லி முடிவதன் முன், கரிய மலை ஒன்று உச்சியிலே தீ எரிய எதிரே நடந்து வந்தது போலத் தாடகை வந்தாள்.

கை வரை - கையை யுடைய வரை (-மலை) - யானை. எனத் தகைய - என்று சொல்லத் (தக்க) தகுதியை உடைய. காளை - கட்டிளமையுடையவன். ஐம் பொறிகளை ஐவரென உபசரித்தார். அடைத்த - (புலன் வழிச் செல்லாமல் அடக்கிக் காவல் செய்து மனச் சிறைக்குள்) அடைத்து வைத்த. ஐய - ஐயனே - அப்பா. மை - கறுப்பு. மை வரை - கரிய மலை. கரிய மலை தாடகையின் கரிய பெரிய உடலுக்கும், நெருப்பு எரிதல் அவள் தலையில் உள்ள செம்பட்டை மயிர்த் தோற்றத்துக்கும், மலை (நடக்குமானல் அதன்) நடத்தல் அவள் நடத்தலுக்கும், உவமானம்.

பொறிகள் என்ற பொருள்களை நேராகக் கூருமல், அவற்றின் எண்ணுகிய ஐந்தையும் கூட ஐவரென மாற்றிக் கூறி, அந்த ஐவர், பாண்டவர் ஐவர், கன்னியர் ஐவர், என்பவர்போன்ற ஐந்தெண்ணுடைய உயர்திணைப் பொருள்க ளெவற்றையும், மற்றைய ஐந் தெண்ணுடைய பஞ்ச தருப் போன்ற அஃறிணைப் பொருளெவற்றையும் குறியாமல், 'அகத்திடை அடைத்தமுனி' என்ற சொற் சேர்க்கையால் ஐம் பொறிகளை ஐயமின்றித் தெளிவாகக் குறிக்கும்படி கூறிய சமற்காரம் வியப்பும் நயப்பும் விளைப்பது. 'மைவரை நெருப் பெரிய வந்ததென வந்தாள்' என்று தாடகையின் உடல் அவள் செம்பட்டைத் தலைமயிர் என்ற உவமேயப் பொருள்களைக் கூருமலே அவைகளின் சிறந்த உவமானங்களால் அவைகளை நன்கு புலப்படுத்தியது ஊன்றி நோக்கி உள்ளங் களிகூரத் தக்கது. இவ்வாறே, மேல் 'கருமுகில்' என்ற 30-ம் பாட்டிலும், 'பெருவரை' என்ற 49-ம் பாட்டிலும், இதற் கடுத்த பாட்டிலும், இக்காண்டம் அகலிகைப் படலத்தில் 'பெய்யும் மாமுகில்' என்ற 9-ம் பாட்டிலும் மிகப் பொருத்தமான உவமானங்களால் உவமேயப் பொருள்களைக் கூருமற் கூறியிருத்தல் காண்க. இங்கு உள்ளாள் என்று கூரு நிற்கையிலேயே தாடகை வந்தது நாடக நிகழ்ச்சி போலக் கூறப்பட்டிருப்பதையும் நோக்குக. (53)

### தாடகையின் பயங்கரத் தோற்றம்

இறைக்கடைது டித்தபுரு வத்தளெயி றென்னும்
பிறைக்கடைபி றக்கிடம டித்தபில வாயள்
மறக்கடைய ரக்கிவட வைக்கனலி ரண்டாய்
நிறைக்கடன்மு ளைத்தெனநெ ருப்பெழவி ழித்தாள் (54)

**கொண்டுகூட்டு :** கடை இறை துடித்த புருவத்தள்; எயிறு என்னும் பிறைக்கடை பிறக்கிட மடித்த பிலவாயள்; மறக்கடை அரக்கி; நிறைக் கடலில் வடவைக் கனல் இரண்டாய் முளைத்ததென நெருப்பு எழ விழித்தாள்.

**பொருள் :** இறுதிப் பாகத்திலே சிறிது துடிக்கின்ற புருவங்களை யுடையவளும் இளஞ் சந்திரனது ஈற்றுப் பகுதிகளென்று சொல்லத்தகும் கோர தந்தங்கள் நன்கு வெளிப்பட்டுக் கடைவாய்களுக்குப் பின்னுகும்படி மடித்த குகை யொத்த வாயை யுடையவளும் மிக்க பாபியும் ஆகிய அந்த இராட்சசி, கரிய கடலிலே சிவந்த வடவா முகாக்கினி இருகூருகித் தோன்றினுற் போலக் கருங் கடல் போலப் பரந்த கரிய பெரிய முகத்திலே இரு பெருந் தீ சுவாலித்து எரிவது போலக் கண்கள் சிவந்து விளங்கக் கோபத் தீ தோன்ற, கண்களை அலர விழித்துப் பார்த்தாள்.

இறை - சிறிது. கடை - இறுதி (ப் பாகம்). 'இறை கடை துடித்த' எனற் பாலது, எதுகை நோக்கி 'இறைக்கடை துடித்த' எனப்பட்டது. எயிறு - பல் - வக்கிர தந்தம் - கோரப் பல். பிறை - இளஞ் சந்திரன். கடை - இறுதி. பிறக்கிட - பின்ற - பிந்த. 'பின்றல் பிறக்கிடல் பிறகிடலாகும்.'—பிங்கல., 1993. பிலம் - குகை. மறக்கடை - பாவத்தின் முடிவு - அத்தியந்த பாவம் - மிக்க பாவம். வடவை - வடவாமுகாக்கினி. நிறைக் கடல் - நிறைவுள்ள கடல். இப் பாட்டிற் கூறும் தாடகையின் வலிய கொடிய செயல் தோற்றம் குணங்களுக்கேற்ப இப் பாட்டு வல்லோசை மிக்குடைத்தா யிருப்பது காண்க. (54)

### இராமன் திகைத்தல்

அப்படிப் பார்த்த தாடகை, 'இக்காட்டில் உள்ள யாவும் நிர்மூலமாக அழித்து விட்டேனுதலால், இனி இவளுக்கு உண்ண மாமிச மில்லையே என்று கருணை தூண்ட, தியாக புத்தியுடன் வந்தீர்களோ? அல்லது உங்கள் விதி, பிடர் பிடித்துத் தள்ள, வந்தீர்களோ? சொல்லுங்கள்' என்று ஆரவாரித்து, 'கொல்வேன்' என்று உறுமி, சூலத்தை யெறியத் தொடங்க, அவளைக் கொல்வது முனிவன் கருத்தென்று குறிப்பால் தெரிந்தும், 'பெண் கொலை பாவம்' என்று இராமன் எண்ண, அதனை ஊகித் துணர்ந்த விசுவாமித்திரன் கூறுவான் —

### இராமனை விசுவாமித்திரன் தேற்றுதல்

**தீதென் றுள்ளவை யாவையும் செய்தெமைக்**
**கோதென் றுண்டில ளித்தனை யேகுறை**
**யாதென் றெண்ணுவ திக்கொடி யாளையும்**
**மாதென் றெண்ணுவ தோமணிப் பூணினாய் (55)**

**கொண்டுகூட்டு :** 'மணிப் பூணினாய்! தீது என்று உள்ளவை யாவையும் செய்து, எமைக் கோது என்று உண்டிலள்! இத்தனையே குறை. இக் கொடியாளை யாது என்று எண்ணுவது? மாது என்று எண்ணுவதோ?'

**பொருள் :** 'கொலை யாதி சகல பாவங்களையும் செய்தவள்; தவத்தால் வற்றித் தசையற்ற எலும்பும் தோலுமே யுள்ள முனிவர் உடல் சாரமற்ற சக்கை யென்று எங்களைத் தின்னாமல் விட்டிருக்கிறாள்; இவள் செய்யாது விட்ட பாவக் குறையின் அளவு எங்களை மட்டும் கொல்லாது விட்ட இவ்வளவே. இப்படிப் பட்ட கொடியவளைப் பூதங்கள் பேய்கள் துட்ட மிருகங்கள் முதலிய நாசகரமான கொடியவைகளுள் எது என்று கருதுதல் தக்கது? இன்ன தென்று தெரியவில்லை; அப்படியிருக்க, இவளைப் பெண்ணென்று கருதலாமோ?

தீது - பாவம்.—ஐங்குறு. கோது - சக்கை. மணிப் பூணினாய் - இரத்தினாபரணங்களைப் பூண்டவனே.

**பாடபேதம் :** எண்ணுதியோ. (55)

**நாண்மை யேயுடை யார்ப்பிழைத் தானகை**
**வாண்மை யேபெற்ற வன்றிற லாடவர்**
**தோண்மை யேயிவள் பேர்சொலத் தோற்பரேல்**
**ஆண்மை யென்னும தாரிடை வைகுமே (56)**

**கொண்டுகூட்டு :** 'நாண்மை உடையாரைப் பிழைத்தால் நகை; வாண்மை பெற்ற வல்திறல் (உடைய) ஆடவர், தோள் (வன்)மையை இவள் பேர் சொலத் தோற்பரேல், ஆண்மை என்னும் அது ஆரிடை வைகும்?'

**பொருள் :** 'நாணம் மாதர்க் குரியது; அது இம்மி யளவும் இல்லாத இவள் பெண் ணெனற் குரிய ளல்லள்; ஆதலாற் கொல்லற் குரியவளே. நாண முடையராகிய பெண்களைக் கொன்றால், அது இகழ்ச்சிக் கிடமாம்; வாளாண்மை யுடைய வலிய புருடர்கள், தம் தோள் வல்லமையை இவள் பேர் சொல்

லவே தோற்பாரானல், ஆண்மை யென்பது இவளிடத் தன்றி வேறு யாரிடத்தே தங்கும் ?

நாண்மை - நாணின் தன்மை - நாணம். பிழைத்தல் - தவறு செய்தல் - இங்கே கொல்லுதலைக் குறித்தது. நகை - இகழ்ச்சி ; இகழ்ச்சிக்குக் காரண மானதைக் குறித்தது. வாண்மை - வாள்மை - வாள் (உபயோகிக்கும்) வல்லமை. வல் - வலிய. திறல் - வலி. மிக்க வலிமை என்று பொருள் பட 'வல் திறல்' எனப்பட்டது. தோண்மை - தோள்மை - தோள் ஆண்மை. ஆண்மை என்னும் அது - ஆண் மக்களின் தன்மை - (வீரம்) என்று பொருள் பட 'ஆன்மை' யென்று சொல்லப் படுகின்ற, (சிறந்த தென்று) சுட்டிக் கூறுதற் குரிய குணம். இத் தகைய பொருள் குறித் தற்கே, 'ஆண்மை யென்பதி யாரிடை வைகுமே' என்னது, 'ஆண்மை யென்னும் அது ஆரிடை வைகுமே' என்ருன். (56)

## தாடகை வதத்துக்கு இராமன் இசைதல்

**ஐய னங்கது கேட்டற னல்லவாய்**
**எய்தி.னும்மிது செய்கவென் றேவினுன்**
**மெய்ய நின்னுரை வேதமெ னக்கொடு**
**செய்கை யன்ருே வறம்செயு மாறென்ருன் (57)**

**கொண்டுகூட்டு :** ஐயன், அங்கு அது கேட்டு, 'மெய்ய, அறன் அல்லவாய் எய்தினும், "இது செய்க" என்று (நீ) ஏவினுல், (அந்த) நின் உரை(யை) வேதம் எனக் கொ(ண்)டு செய்கை அன்ருே அறம் செய்யும் ஆறு' என்ருன்.

**பொருள் :** என்று விசுவாமித்திரன் கூறியதைக் கேட்டு இராமன், 'சத்திய மூர்த்தியே ! தரும விரோத மானவைகளாய்க் காரியங்கள் நேருமானுல், அவற்றுள் எதனை யாவது "இதனைச் செய்வாயாக" என்று தேவரீர் கட்டளை யிட்டால், உமது வாக்கை வேத வாக்காகக் கொண்டு நீர் கட்டளை யிட்டபடி செய்தலன்ருே தருமம் செய்யும் முறை' என்ருன்.

உண்மையோனே, உண்மையே உரு வெடுத்தாற் போன்ருேனே, என்று பொருள்படும் 'மெய்ய' என்ற விளியினுல் விசுவாமித்திரன் கூறியது உண்மை யல்லாமல் வேரு யிரா தென்றும், உண்மையின் வழி ஒழுகலே தரும மென்றும், அவன் கூறுவன தோற்றத்தில் அதருமமாக இருந்தாலும் உண்மையில் தருமமே யென்றும் இராமன் குறிப்பித்ததாகக் கொள்க. (57)

### தாடகையும் இராமனும் போர் செய்தல்

இவ்வளவில், தாடகை இராமன் கருத்தை அறிந்து, சூலம் முதலியவற்றை எறிந்து போர் செய்ய, அவன் எதிர்த்துப் போர் செய்தான்.

**சொல்லொக்குங் கடிய வேகச் சுடுசரங் கரிய செம்மல்**
**அல்லொக்கு நிறத்தி ஞண்மேல் விடுதலும் வயிரக் குன்றக்**
**கல்லொக்கு நெஞ்சிற் றங்கா தப்புறங் கழன்று கல்லாப்**
**புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற் றன்றே**

**கொண்டுகூட்டு :** கரிய செம்மல், (முனிவர் சாபச்) சொல் ஒக்கும் கடிய வேகச் சுடு சரத்தை அல் ஒக்கும் நிறத்தினள் மேல் விடுதலும், (அது) வயிரக் குன்றக் கல் ஒக்கும் நெஞ்சில் தங்காது அப்புறம் கழன்று, கல்லாப் புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற்று.

**பொருள் :** இராமன், தன் பயனைத் தப்பாமல் தருகின்ற முனிவரது சாப வாக்குப் போன்ற பாணத்தைத் தாடகையின் மீது ஏவின வுடனே, அது அவள் நெஞ்சிலே தைத்து, அங்கே தங்காமல் மறுபுறம் உருவி நீங்கி, கல்லாத கீழ் மக்களுக்குக் கற்ற மேல் மக்கள் கூறிய நூற் பொருள் ‘ஒரு காது வழியே புகுந்து, இடையே மனத்தே தங்காது, மறு காது வழியே போனது’ என உலக வழக்கிலே சொல்வது போலப் போய் விட்டது.

‘கடிய’, ‘வேக’, என்ற சொற்கள், ஒரு பொருள் குறித்தவை; ‘அதி வேகமான’ என்று பொருள்பட நின்றன. கல் - மலை. வயிரக் குன்றக் கல் ஒக்கும் நெஞ்சு - (சாதாரணமான கல் மலையாகிய மலையா யில்லாமல்) வயிர மலையாகிய மலையை (கடினத்திலும் பருமையிலும்) ஒத்த நெஞ்சு. ‘கடிய வேக’, ‘குன்றக் கல்’, என்பவைகள் ‘மீ மிசை ஞாயிறு’ ‘உயர்ந்து ஓங்கு பெருவரை’, போல ஒரு பொருட் பன் மொழி. ‘கல்லாப் புல்லர்க்கு’ என்று கூறிப் பின் ‘நல்லோர்’ என்றதனால், நல்லோர் என்பது கற்றோரெனப் பொருள் கொள்ளப்பட்டது. இவ்வாறே,

*நல்லார் பிறர் குற்றம் நாடார் ; நலம் தெரிந்து*
*கல்லார் பிறர் குற்றம் காண்பரோ ?—அல்லாத*
*என்போல்வார் என்னை இகழ்வரோ ? என்கவிக்குப்*
*பின்பாரோ சொல்வார் பிழை ?*

என்ற வெண்பாவிலும்,

*நல்லார்கட் பட்ட வறுமையின் இன்னாதே*
*கல்லார்கட் பட்ட திரு*

என்ற குறளிலும், ‘நல்லார்’ என்பது ‘கல்லாதார்’ என்பதற்கு எதிர்

மறையாய்க் 'கற்றூர்' என்று பொருள் பட வருதல் காண்க. பொருள் - நூற்பொருள்.—சிந்தா. பொருளுக்கு உண்மை என்றும் பொருள் கொள்ளலாம். (58)

### தாடகை அலறி விழுந்து மடிதல்

**பொன்னெடுங் குன்ற மன்னுன் புகர்முகப் பகழி யென்னும்**
**அந்நெடுங் கால வன்காற் றடித்தலு மிடித்து வானிற்**
**கன்னெடு மாரி பெய்யக் கடையுகத் தெழுந்த மேகம்**
**மின்னெடு மசனி யோடும் வீழ்வதே போல வீழ்ந்தாள் (59)**

கொண்டுகூட்டு: பொன் நெடும் குன்றம் அன்னுன் புகர் முகப் பகழி என்னும் அந் நெடும் கால வன் காற்று அடித்தலும், இடித்து வானில் கல் நெடு மாரி பெய்யக் கடையுகத்து எழுந்த மேகம் மின்னெடும் அசனியோடும் வீழ்வதே போல வீழ்ந்தாள்.

பொருள்: இராமனது பாணமாகிய ஊழிக் காற்று மோதவே, கல் மழை பெய்வதற்காக யுகாந்த காலத்திலே இடித்துக் கொண்டு ஆகாசத்திலே தோன்றிய மேகம் மின்னேடும் இடியோடும் பூமியிலே வீழ்வது போலத் தாடகை மடிந்து விழுந்தாள்.

புகர் முகப் பகழி - ஒருவகை அம்பு.—த. அ. அசனி - இடி. கரிய பெரிய மேகம் கரிய பெரிய தாடகைக்கும், இடித்தல் அவள் போரில் ஆரவாரித்தலுக்கும், மின் அவள் கோர தந்தத்துக்கும், இடி அவள் சாகும் போது கதறியதற்கும் உவமானம். ஆகாசம் அளாவி யுறுதலும், கல் மழை பெய்தலும், உவமானமாகிய மேகத்துக்கும் உவமேயமாகிய தாடகைக்கும் பொதுத் தன்மைகள்.

இப் படலத்தில், இதன் முன் தாடகை 'கல்லின் மாரியைக் கை வகுத்தாள்' என்றது, இப்போது 'கல் நெடு மாரி பெய்யக் கடை யுகத் தெழுந்த மேகம்' என்றதை விசேடமான பொருத்தமுடைய தாக்குதல் கவனிக்கத் தக்கது. (59)

### இராவணன் வீழ்ச்சிக்குத் தாடகை வீழ்ச்சி அறிகுறி யாதல்

**பொடியுடைக் கான மெங்குங் குருதிநீர் பொங்க வீழ்ந்த**
**தடியுடை யெயிற்றுப் பேழ்வாய்த் தாடகை தலைக டோறும்**
**முடியுடை யரக்கற் கந்நாண் முந்தியுற் பாத மாகப்**
**படியிடை யற்று வீழ்ந்த வெற்றியம் பதாகை யொத்தாள் (60)**

கொண்டுகூட்டு: பொடி உடைய கான மெங்கும் குருதி நீர் பொங்க வீழ்ந்த தடி உடைய எயிற்றுப் பேழ்வாய்த் தாடகை, அந்நாளில்

தலைகள் தோறும் முடி உடைய அரக்கற்கு (முடிவை) முந்தி (அறிவிக்கும்) உற்பாதமாகப் படி இடை அற்று வீழ்ந்த வெற்றி அம் பதாகை ஒத்தாள்.

பொருள் : அந்தக் காடெல்லாம் இரத்தம் பொங்க விழுந்த தாடகை, இராவணனுக்கு இனி நிகழும் தீங்கைத் தெரிவிக்கும் அப சகுனமாக அற்று விழுந்த அவன் வெற்றிக் கொடியை ஒத்துக் கிடந்தாள்.

பொடி உடை - புழுதியை யுடைய. குருதி - இரத்தம். தடி - (தாடகை உண்ட பிராணிகளின்) சதை. உடை - நையச் செய்யும். எயிறு - பல். பேழ் வாய் - பெரு வாய். அரக்கன் - இராக்கதன் - இராவணன். உற்பாதம் - பின் நிகழும் தீமைகளைக் காட்டும் குறி. படி - பூமி. பதாகை - கொடி. தாடகையினது நீண்ட வுடல் கொடியின் கம்பத்துக்கும், அவள் உடலினின்று பொங்கிய இரத்தப் பரப்பு கொடிச் சீலைக்கும், உவமம். கீழ் வீழ்ந்து கிடத்தல், இரண்டுக்கும் பொது. (60)

### இரத்த வெள்ளத்தின் தோற்றம்

**கான்றிரிந் தாழி யாகத் தாடகை கடின மார்பத்**
**தூன்றிய பகழி வாயூ டொழுகிய குருதி வெள்ளம்**
**ஆன்றவக் கான மெல்லா மாயின வந்தி மாலைத்**
**தோன்றிய செக்கர் வானந் தொடக்கற்று வீழ்ந்த தொத்தே**
**(61)**

கொண்டுகூட்டு : கான் திரிந்து ஆழி ஆகத் தாடகை கடின மார் பத்து ஊன்றிய பகழி (தைத்த) வாய் ஊடு ஒழுகிய குருதி வெள்ளம், அந்தி மாலைத் தோன்றிய செக்கர் வானம் தொடக்கு அற்று வீழ்ந்தது ஒத்து, ஆன்ற அக்கான மெல்லாம் ஆயின(து).

பொருள் : அவள் விழுந்த அந்தக் காடு தன் நிலை மாறிக் கடலாகும்படியாக, அவள் மார்பிலே அழுந்திய அம்பு தைத்த வாய்வழி ஒழுகிய இரத்தப் பிரவாகமானது, சாயங் காலத்திலே தோன்றும் செவ்வானம் ஆகாயத்திலே தொடுப்புண்டிருந்த தொடுப்பு அற்றுக் கீழ் வீழ்ந்தது போல, அக் காடெல்லாம் பரவியது.

கான் - காடு. ஆழி - கடல். மார்பம் - மார்பு. பகழி - அம்பு. குருதி . இரத்தம். ஆன்ற - அகன்ற. ஆயினது - பரவினது ; 'எங்கும் ஆகிய உன்னை'. — வில்லி பாரதம், பதினேழாம் போர்ச் சருக்கம், 246- தொடக்கு - கட்டு. தூக்கப் பட்டுத் தொங்கிக் கொண் டிருந்த ஒரு விதா னம், தூக்கி யிருந்த கயிற்றின் கட்டு அறுபட்டுக் கீழே விழுவது போல, செயற்கையாக வன்றி இயற்கையாக ஆகாயத்தில் தங்கிய செவ்வானம்

'தொடக்கற்று வீழ்ந்தது' எனச் சாதுரியமாகக் கூறி, கவி வாசிப்போர் மனத்திலே மயக்கவுணர்ச்சி உண்டாகும்படி செய்தது கவனிக்கத்தக்கது. (61)

## இயமன், இராக்கத உயிர்ச்சுவை அறிதல்

**வாசநாண் மலரோ னன்ன மாமுனி பணிம ருத**
**காசுலாங் கனகப் பைம்பூட் காகுத்தன் கன்னிப் போரில்**
**கூசிவா ளரக்கர் தங்கள் குலத்துயிர் குடிக்க வஞ்சி**
**ஆசையா லுழலுங் கூற்றுஞ் சுவைசிறி தறிந்த தன்றே (62)**

கொண்டுகூட்டு : வாச நாள் மலரோன் அன்ன மாமுனி பணி மருத காசு உலாம் பைங் கனகப் பூண் (அணிந்த) காகுத்தன் கன்னிப் போரில், வாள் அரக்கர் தங்கள் குலத்து உயிர் குடிக்கக் கூசி அஞ்சி ஆசையால் உழலும் கூற்றும் சுவை சிறிது அறிந்தது.

பொருள் : விசுவாமித்திரன் கட்டளையை மறுக்காது செய்த இராமனது முதற்போரிலே, அரக்கர் கூட்டத்தின் உயிரை உண்ணக் கருதி, உண்டால், தன் உயிர்க்கு அபாயம் வருமே யென்று, நோயுற்ற கண், ஒளியை நோக்கக் கூசுவது போலக் கூசி, பயந்து, சமயம் வாய்த்த போது உண்ண வேண்டு மென்று ஆசையோடு அலைந்து கொண்டிருந்த இயமன், அரக்கர் உயிரின் உருசியைச் சிறிது தெரிய லானான்.

நாள் மலர் - அன்று பூத்த பூ - புதுப் பூ. மலரோன் - (அப்படிப்பட்ட தாமரை) மலரில் வசிக்கும் பிரமன். காசு - இரத்தினம். உலாம் - உலா வும் : இங்கே எதுகையில் 'இழைத்த' என்று பொருள்பட நின்றது. காசு உலாம் - முத்துக்கள் முதலான புரை மணிகள் தொங்கி அசையும். 'கனகப் பைம் பூண்' என்பதைப் 'பைங் கனகப் பூண்' எனக் கூட்டிப் பசும் பொன்னாபரணம் எனப் பொருள் செய்க. பூட் காகுத்தன் - பூண் காகுத்தன் - பூணை யுடைய அல்லது பூணை யணிந்த இராமன். கன்னிப் போர் - முதற் போர். கன்னி முதலாவ தென்று பொருள்பட நின்றது. முதல் முறையாகச் செய்யும் தொழில்களைக் கன்னி என்ற அடை சேர்த்துக் கூறுவது ஆங்கிலத்தும் உண்டு. ஒருவருடைய பிரதமப் பிரசங்கத்தைக் கன்னிப் பிரசங்கம் என்பது ஆங்கில வழக்கு. குலம் கூட்டம் ('பேடிப்போர் வல்லரக்கர் பெருங் குலத்தை,' இராமா., சூர்ப்ப., 123.—ச. அ.); வமிசம். அரக்கர் குலத் துயிர் - இராட்சச வமிசத்தாரது உயிர்; இராட்சச சமூகத்தின் உயிர். உழலும் - (சமயம் நோக்கி) அலையும். 'ஆட்பார்த் துழலும் அருளில் கூற்று'.— நாலடி. (62)

### தேவர்கள், இராமனுக்குத் தெய்வப் படைகள் கொடுத்தல்

**யாமுமெம் மிருக்கை பெற்றே முனக்கிடை யூறு மில்லை**
**கோமகற் கினிய தெய்வப் படைக்கலங் கொடுத்தி யென்று**
**மாமுனிக் குரைத்துப் பின்னர் விற்கொண்ட மழைய னன்மேற்**
**பூமழை பொழிந்து வாழ்த்தி விண்ணவர் போயி னரே (63)**

கொண்டுகூட்டு : விண்ணவர், 'யாமும் எம் இருக்கை பெற்றேம். உனக்கு (இனி) இடையூறு இல்லை. கோமகற்கு இனிய தெய்வப் படைக் கலம் கொடுத்தி' என்று மா முனிக்கு உரைத்து, பின்னர், வில் கொண்ட மழை அன்னன் மேல் பூ மழை பொழிந்து, வாழ்த்தி, போயினரே.

பொருள் : நிகழ்ந்த போரை விண்ணினின்று நோக்கிக் கொண்டிருந்த தேவர்கள், 'தாடகை வதை, இராவணாதி அரக்கர் முடிவதற்கு நிச்சயமான அறிகுறி. அவர்கள் முடியவே, அவர்களாற் பறிக்கப்பட்ட எங்கள் இருப்பிடங்களை நாங்கள் பெற்றேங்க ளாயினேம். உன்னுடைய தவத்துக்கும் வேள்விக்கும் இடையூறு செய்ய வரும் அரக்கர் இராமனால் மடிவா ராதலால் உனக்கு இனி இடையூறு வருதல் இல்லை. எங்கள் அமிசமாக உன்னிடத்தேயுள்ள தேவாஸ்திரங்களை அவனுக்குக் கொடுப்பாயாக' என்று விசுவாமித்திரனுக்குக் கூறி, வான வில்லோடு கூடிய மேகத்தை ஒத்தவனாகிய கோதண்டராமன் மீது பூமழை பொழிந்து, அவனை ஆசீர்வதித்து, தத்தம் இடங்களை நோக்கிச் சென்றார்கள்.

இருக்கை - இருப்பிடம் - குடியிருக்கு மிடம். கோமகன் - இராச குமாரன் - இராமன். பெறுவேம் என்பது, பெற்றேம் எனத் துணிவுபற்றிக் கூறப்பட்டது ; காலவழுவமைதி. தெய்வப் படைக்கலம் - தேவாயுதங்கள் ; கீழ், 64-ம் பாட்டில், இவைகளையே 'உம்பர் தம் படைகள்' என்றார். கொடுத்தி - கொடுப்பாய். வில் கொண்ட மழை - வான வில்லோடும் விளங்கும் மேகம். அது வில் லேந்திய கரு நிற முள்ள இராமனுக்கு உவமானம். 'எம் இருக்கை பெற்றேம்,' 'உனக்கு இடையூறும் இல்லை,' என்பவைகளில் எவ்வளவு விரிவான பொருள்கள் எவ்வளவு சுருக்கமான சொற்களால் உய்த் துணர வைக்கப்பட்டிருக்கின்றன என்பதை நோக்குக. (63)

# 8. வேள்விப் படலம்

## விசுவாமித்திரன் செய்த வேள்வியைக் கூறுவது

### இராமன் தெய்வப் படைகள் பெறுதல்

விசுவாமித்திரன் தேவாயுதங்களை மனமுவந்து இராமனுக்குக் கொடுத்தான்.

**ஆறிய வறிஞன் கூறி யளித்தலு மண்ண றன்பால்**
**ஊறிய வுவகை யோடு மும்பர்தம் படைக ளெல்லாந்**
**தேறிய மனத்தான் செய்த நல்வினைப் பயன்க ளெல்லாம்**
**மாறிய பிறப்பிற் றேடி வருவபோல் வந்த வன்றே (64)**

**கொண்டுகூட்டு :** உம்பர் தம் படைகள் எல்லாம், (தங்களை) ஆறிய அறிஞன் (அவ்வப் படைக்குரிய மந்திரம்) கூறி அளித்தலும், தேறிய மனத்தான் செய்த நல்வினைப் பயன்க ளெல்லாம் மாறிய பிறப்பில் (அவனைத்) தேடி வருவது போல், அண்ணல் தன்பால் ஊறிய உவகை யோடு வந்த(ன).

**பொருள் :** தேவாயுதங்க ளெல்லாம், தம்மை விசுவாமித்திரன் இராமனுக்குக் கொடுத்த உடனே, ஒருவன் முன் சென்மத்திற் செய்த புண்ணிய பல மெல்லாம் அவனுடைய மறு சென்மத்தில் அவனைத் தேடி அடைவது போல, இராமனிடம் சந்தோஷத்துடன் அடைந்தன.

ஆறிய - '(காம வெகுளி மயக்கங்கள்) தணிந்த ;' '(அரக்கரால் ஆன துயர்) தணிந்த'. கூறி - (அந்த அந்த அஸ்திரங்களுக்குரிய மந்திரங்களை) உபதேசித்து. தேறிய - (சந்தேகம் இல்லாமல்) தெளிந்த. வருவ- வருவது என்பதன் விகாரம். மாறிய பிறப்பு - மாருகிய பிறப்பு - வேருகிய பிறப்பு - மறு பிறப்பு. 'தேறிய மனத்தான் செய்த நல் வினைப் பயன்க ளெல்லாம்—மாறிய பிறப்பில் தேடி வருவ போல்' என்றது,

பல்ஆவுள் உய்த்து விடினும் குழக்கன்று
வல்லதாம் தாய்நாடிக் கோடலை—தொல்லைப்
பழவினையும் அன்ன தகைத்தே தற்செய்த
கிழவனை நாடிக் கொளற்கு

என்ற நாலடியார் வெண்பாவின் கருத்தைத் தழுவியது. (64)

### திருமால் தவஞ் செய்த சோலையை அடைதல்

மூவரும் வழிச் சென்று ஒரு சோலையை அடைய, 'இது யாது' என்று இராமன் வினவ, முனிவன் கூறுவான் :—

**தங்கணு யகரிற் றெய்வந் தவம்பிறி திலவென் றெண்ணும்**
**மங்கைமார் சிந்தை போலத் தூயது மற்றுங் கேளாய்**
**எங்கண்மா மறைக்குந் தேவ ரறிவிற்கும் பிறர்க்கு மெட்டாச்**
**செங்கண்மா லிருந்துமேனுட் செய்தவம் செய்த தன்றே (65)**

**கொண்டுகூட்டு :** '(இந்தச் சோலை) தங்கள் நாயகரின் (மேலாகத்) தெய்வம் தவம் பிறிது இலை யென்று எண்ணும் மங்கைமார் சிந்தை போலத் தூயது; மற்றும் கேளாய், மாமறைக்கும் தேவர் அறிவிற்கும் பிறர் (அறிவு)க்கும் எட்டா எங்கள் செம் கண் மால், மேல் நாள் இருந்து தவஞ் செய்தது. (65)

**பொருள் :** 'தங்கள் கணவரினும் சிறந்த தெய்வமும் தவமும் வேறில்லை யென்று கருதும் கற்புடைய மாதர் மனம் போலப் பரிசுத்தமா யிருப்பது இந்தச் சோலை. இன்னும் இதன் பெருமையைக் கேட்பாயாக. நான்கு வேதங்களுக்கும், தேவரது அறிவுக்கும், மற்றெவர் அறிவுக்கும் எட்டாத திருமால் முன்னாளிலே இங்கே யிருந்து தவஞ் செய்யப்பெற்ற மகிமை உடையது.

**பாடபேதம் :** தெய்வந்தான் பிறிதிலை.

### மாவலி வரலாறு

'திருமால் இங் கிருந்த காலத்தில், மாவலிச் சக்கரவர்த்தி மூன் றுலகங்களையும் கவர்ந்து, ஒரு பெரிய யாகஞ் செய்யத் தொடங்கி, யாசகர்க்கு வேண்டியவை யாவையும் கொடுக்கத் துணிந்தவனு யிருந்ததை அறிந்து, 'அவனை ஒடுக்கி இந்திரனுக்கு அரசு நல்க வேண்டும்' என்று தேவர்கள் திருமால்பால் இரந்தனர். அவன் அதற் கிசைந்தான்.

**காலம் நுனித்துணர் காசிப னுக்கும்**
**வால திதிக்குமொர் மாமக வாகி**
**நீல நிறத்து நெடுந்தகை வந்தோர்**
**ஆலமர் வித்தி னருங்குற ளானுன் (66)**

**கொண்டுகூட்டு :** 'நீல நிறத்து நெடுந்தகை, காலம் நுனித்து உணர் காசிபனுக்கும் வால் அதிதிக்கும், ஓர் மா மகவு ஆகி வந்து ஓர் ஆல் அமர் வித்தின் அரும் குறள் ஆனுன்.

**பொருள் :** 'காசிபனுக்கும் அவன் மனைவி அதிதிக்கும் பிள்ளையாய், மிகப் பெரிய ஆல மரம் அடங்கிய நுண்ணிய

விதை போலத் தனது விசுவரூப மடங்கிய சிறிய வாமன மூர்த்தி யாய்த் திருமால் அவதரித்தான்.

நுனித்து உணர் - நுட்பமாக அறிகிற. வால் - தூய. குறள் - குள்ளன். (66)

'அவ் வாமனன் மாவலிபாற் போக, அவன் உபசரித்து, "உம்மினும் சிறந்த பிராம ணோத்தமர் இலர்; நீர் வரப் பெற்ற என்னினும் சிறந்தாரும் இலர்" என்று கூற, அவன், "யாசக ருக்கு அவர் ஆசைக்கும் அதிகமாகக் கொடுக்கும் நின்பால் வந்தவர் சிறந்தவர்; வராதவர் சிறவாதவர்" என, அவன் "உமது விருப்பம் யாது?" என, "மூன்றடி மண்" என, உடனே "தந்தேன்" என, அப்போது சுக்கிராசாரி "இவ் வுருவம் வஞ்சகமானது; இவன் அண்டம் உண்ட நெடு மால் என்று தெரிந்து கொள்" என்று கொடுப்பதைத் தடுக்க, அவன் கூறுவான்.

**நினைக்கிலை யென்கை நிமிர்ந்திட வந்து**
**தனக்கிய லாவகை தாழ்வது தாழ்வில்**
**கனக்கரி யானது கைத்தல மென்னில்**
**எனக்கிதன் மேனலம் யாதுகொ லென்றான் (67)**

கொண்டுகூட்டு: "என் கை நிமிர்ந்திட, வந்து தனக்கு இயலா வகை தாழ்வது தாழ்வு இல் கனம் கரியானது கைத் தலம் என்னில், எனக்கு இதன் மேல் நலம் யாது? நினைக்கிலை கொல்" என்றான்.

பொருள்: '"கொடுத்தற்கு என் கை மேலாக உயர, வாங்குதற்குத் தன் தகுதிக்கு ஏலாதவாறு கீழாகத் தாழ்வது திருமாலின் கையே யானால், எனக்கு இதனினும் மேம்பட்ட நன்மை யாதுளது?" என்றான்.

நினைக்கிலை - (சரியாக) நினைக்கின்றா யில்லை - உன் எண்ணம் தப்பு; (ஊன்றி) நினைக்கின்றா யில்லை. தாழ்வுஇல் - எவ்வகைத் தாழ்வும் இல் லாத. கனக் கரியான் - மேகக்கறுப்பு நிறமுடையான் - விட்டுணு. கனம் - மேகம். (67)

**வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்**
**வள்ளிய ராக வழங்குவ தல்லால்**
**எள்ளுவ வென்சில வின்னுயி ரேனுங்**
**கொள்ளுத றீது கொடுப்பது நன்றால் (68)**

கொண்டுகூட்டு : "வெள்ளியை ஆதல் விளம்பினை. மேலோர் வள்ளியராக வழங்குவ தல்லால், எள்ளுவ என்? சிலவே. இன்னுயிரேனும் கொள்ளுதல் தீது ; கொடுப்பது நன்று!"

பொருள் : "நீ வெள்ளறிவுடையாய் ஆதலைக் கொடுப்பதைத் தடுத்துக் கூறியதனால் வெளிப்படும்படி உரைத்தாய். மேலோர், கொடையாளராகக் கொடுப்ப தல்லாமல், கொடுத்தால் இகழ்வா மென்று இகழ்வன யாவை? அவை, மாதரது கற்பு, மைந்தரது மானம் போன்ற சிலவே. இனிய உயிரை யாயினும், அதனை நீக்கப் புகுந்தானைக் கொல்லுதல் முதலிய வேறுவகையால் விலக்க முடியாமல் அவனை யாசித்து, அது நீங்காது நிற்கப்பெறுதல் தீமையாம்; கன்னன் தனக்குப் பிராணாதாரமாய்ப் பிராணனே யாகிய கவச குண்டலங்களைக் கொடுத்தது போல உயிரையும் கொடுப்பது நன்மையாம்."

வெள்ளியை - சுக்கிரன் என்னும் பெயருடையாய் ; வெள்ளறிவுடையாய். வெள்ளறி வுடையாய் என்று வெளிப்படை யாகக் கூறாமல், ஆசிரியனாதலின், குறிப்பாக 'வெள்ளியை' என்று சிலேடையாகக் கூறினான். 'வெள்ளியை' என்பதற்குச் சுக்கிரன் என்னும் பெயருடையாய் என்று பொருள் கொள்ளும் போது, 'ஆதல் விளம்பினை' என்பதற்கு (உன் புத்திக்கு நல்லது) ஆதலைச் சொன்னாய், என்று பொருள் கொள்க. இப் பாட்டின் நான்காம் அடியில், கொள்ளுவது தீது என்பது 'கொள்ளுதல் தீது' என வந்தது போல 'ஆவது', ''ஆதல்' என வந்தது. ஆவது ஆகும் காரியம் ; 'ஆவது கருதானாகில் அமைச்சர் சொற் கேளானாகில்'— வில்லி பாரதம், கிருட்டிணன் றூதுச் சருக்கம், 142. எள்ளுவ - எள்ளுவன - இகழ்வன. என் - என்ன - யாவை? 'என்னே செயவேண்டிற் றவையெல்லாம்', கந்தபு. அசுரர் தோற்று., 3.—ச. அ. 'கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றால்' என்றது 'நல்லாறெனினும் கொளல் தீது மேலுலகம்—இல்லெனினும் ஈதலே நன்று' என்ற குறட் கருத்தைக் கொண்டது. அ. குமாரசுவாமிப் பிள்ளையும், த. கனகசுந்தரம் பிள்ளையும், 'மேலோய்! வள்ளியராகிய வழங்குவதல்லார் எள்ளுவ தென் சில' என்ற பாடங் கொண்டு, 'வழங்குவ தல்லார் எள்ளுவ தென் சில' என்பதற்குக் 'கொடுப்பதைக் கொடாதவர் சில வார்த்தைக் கூறி இகழுவ தென்' என்று பொருள் கூறி யிருக்கின்றனர். (68)

மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கண் மாயா
தேந்திய கைகொ டிரந்தவ ரெந்தாய்
வீந்தவ ரென்பவர் வீந்தவ ரேனும்
ஈந்தவ ரல்ல திருந்தவர் யாரே (69)

கொண்டுகூட்டு : ' " எந்தாய் ! மாய்ந்தவர், மாய்ந்தவர்க ளல்லர் கள் ; மாயாது ஏந்திய கை கொடு இரந்தவர், வீந்தவ ரென்பவர் ; ஈந்தவர், வீந்தவ ரேனும், (அவர்) அல்லது இருந்தவர் யார் ? "

பொருள் : ' " இறந்தவர் இறந்தவரல்லர் : பின்னை யாவர் இறந்தவரெனின், இரத்தலினும் இறத்தல் நன் றென்று இறவா மல், பொருள் வாங்குவதற்கு ஏந்திய கையோடு இரந்தவர், இருந்தும் செத்தாரொத்தா ராதலால், இறந்தவர் ; ஈந்தவர் பூத உடம்பு ஒழிய இறந்தா ராலும், அவரன்றி உலகத்திற் புக முடம்போடு இருந்தவர் யாவர் ? "

கை கொடு - கை கொண்டு. எந்தாய் - எம் தந்தையே. குரு வாதலால் இவ்வாறு விளித்தான். வீந்தவர் - இறந்தவர். ' இல் வாழ்வா னென்பான் ' என்ற குறளில் ' என்பான் ' என்பது, ' என்று சொல்லப் படுவான் ' என்ற பொருளில் வருதல்போல, ' வீந்தவரென்பவர் ' என்பதனில் ' என்பவர் ' என்று சொல்லப் படுபவர் என்று பொருள்பட வந்தது.

இக்கவி, மேல் நோக்காக நோக்க, விரோதப் பொருள்களும், உள் ஆழ்ந்து நோக்க, மிகப் பொருத்தமான பொருள்களும் உள்ளது ; ஈந்து (புகழுடம்பை நிறுத்தி) இறந்தார், தோற்றத்தில் இறந்தாரே யன்றி, உண்மையில் இருந்தா ரென்றும், இரந்து (அந்த இழிவினால் நடைப் பிண மாய்) இருந்தார், தோற்றத்தில் இருந்தாரே யன்றி, உண்மையில் இறந்தா ரென்றும், உய்த்துணரும்படி கூறி, ஈதலின் ஏற்றத்தையும், இரத்தலின் இழிவையும் மிக இனிமையாகப் பசுமரத் தாணி போல மனத்தில் நன்கு அழுந்தும்படி வற்புறுத்திக் கூறுவது. இது, இனிய கவிகளுட் சிறந்த இனிய கவிகளுள் ஒன்று. (69)

' " கொடுப்பவனைத் தடுப்பவன் கொடுப்பவனையும் தன்னை யும் பாவத்துக்குள்ளாக்கிக் கெடுப்பவன் ; இருவரையும் கெடுப் பதால், கொடுப்பதைத் தடுப்பதுபோலக் கெடுப்ப தொன்று மில்லை. ஆதலால், கொடுப்பதைத் தடுப்பது உமக்கு அழ கன்று " என்று கூறினான்.

வாமனன் திரிவிக்கிரம னாதல்

**கயந்தரு நறும்புனல் கையிற் றீண்டலும்**
**பயந்தவர் களுமிகழ் குறளன் பார்த்தெதிர்**
**வியந்தவர் வெருக்கொள விசும்பி னோங்கினான்**
**உயர்ந்தவர்க் குதவிய வுதவி யொப்பவே (70)**

கொண்டுகூட்டு : ' கயம் தரும் நறும் புனல் கையில் தீண்டலும், பயந்தவர்களும் இகழ் குறளன், எதிர் (நின்று) பார்த்து (முதலில்) வியந்

தவர் (பின்பு) வெருக்கொள, உயர்ந்தவர்க்கு உதவிய உதவி ஒப்ப விசும் பின் ஓங்கினன்.

**பொருள் :** 'பின்பு அவன் "நீ வேண்டிய மூன்றடி மண் தந்தேன்" என்று வார்த்த தானநீர் கையிற் பட்ட வுடனே, "காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு,' "குரங்குக்கும் தன் குட்டி பொன் குட்டி," என்றவாறு தம் பிள்ளை எவ்வளவு விரூபி யானலும் கண்டு மகிழும் இயல்புடைய பெற்றோருமே அரு வருத்து வெறுத்து இகழும்படியுள்ள குள்ளன், எதிர் நின்று பார்த்தோர் முதலில் ஆச்சரியப்பட்டுப் பின்பு பயம் அடையும் படி, உத்தமர்க்கு உபகரித்த உபகார பலம், ஒன்று பலகோடி மடங்காக வளர்தல் போல, திரிவிக்கிரம மூர்த்தியாய் ஆகாயம் அளாவ வளர்ந்தான்.

கயம் - குளம். நறும் புனல் - நல்ல நீர். நறுமை - நன்மை. 'நறுந் தொகை' என்னும் நூற் பெயரில் 'நறும்' என்பது, 'நல்வழி,' 'நன்னெறி' என்பவற்றிலுள்ள 'நல்'போல, 'நல்ல' என்ற பொருள்பட நிற்றல் காண்க. பயந்தவர் - பெற்றவர். குறளன் - குள்ளன் - வாமனனுக அவ தரித்த திருமால். 'எதிர் (எதிரில்) பார்த்து' என வரற்பாலது, செய்யு ளாதலால், 'பார்த்தெதிர்' எனப் பிறழ்ந்து வந்தது. வியந்தவர்-அதிசயித்த வர். (ஆகி) வெரு - பயம் ; வெருவு எனவும் வரும்.

தம் பிள்ளைகள் விகார ரூபமா யிருப்பினும், பெற்றோருக்கு அழகாகத் தோன்றுவதும், வாமன வடிவத்தை முதலிற் கண்டபோதும் அது வளரத் தொடங்கியதைக் கண்டபோதும் ஆச்சரியப் பட்டவர்கள் அவ்வடிவம் பயங் கரமான பரிமாணம் அடைய லுறவே பயப்பட லுற்றதும், ஆகிய இயல் பான மனத் தன்மைகளைக் கவி இனிது கூறியிருக்கின்றனர். அவர், தாம் இப் பாட்டிற் கூறக் கருதியது 'ஓங்கினன்' என்று மூன்றும் அடி முடிந்த தனேடு கூறி முடிந்துவிட, நான்காம் அடியைப் பூரிப்பாராய், 'உதவி வரைத்து அன்(று) உதவி ; உதவி—செய்யப்பட்டார் சால்பின் வரைத்து' என்ற குறளிற் கூறிய வுண்மையைத் திருட்டாந்தப்படுத்திப் பூரித்தார் போலும். அத் திருட்டாந்த விளக்கம் வருமாறு : இப்போது கூறப்பட்ட உப கதையில் 'உதவி செய்யப்பட்டார்,' உலகம் தோன்றிய கால முதல் உதவி செய்யப்பட்டா ரெல்லாரினும் உத்தம ரென்பதை விளக்கும் புரு டோத்தமப் பெயரினராகிய மகா விட்டுணுவே. அவருக்குச் செய்த வுதவி எவ்வளவு சிறிதாயினும் அவ்வுதவிப் பயன் அவரவ்வளவு பெருமையை யுடையதாம். அவர்க்குச் செய்த வுதவி அவரது வாமன வடிவம் போலச் சிறிது ; அவ்வுதவிப் பயன் அவரது திரிவிக்கிரம ரூபம் போலப் பெரிது.

(70)

### விசுவாமித்திரன் வேள்வி செய்தல்

'ஆகாயம் அளாவ வளர்ந்தவனது ஒரு கால், பூமி முழுவதும் வியாபித்து, அதற்கு மேற் பூமி யில்லை யாதலால், அவ்வளவில் நின்றது; பூமி விரியுமாயின், அதுவும் விரிவதாய் நின்றது. மற்றொரு கால் வான மெல்லாம் பரந்து மேற் செல்ல இடமின்றி மீண்டது; வானம் மேற்கொண்டு பரவுமாயின், அதுவும் பரவுவதாம். இவ்வாறு அவன் மண்ணையும் விண்ணையும் இரண்டடியாக அளந்து, மூன்றும் அடி அளவுக்கு வேறிட மின்மையால், மாவலியின் சரீரத்தையே அளவிட மாக்கி அவனைத் திருவடிக் கீழ் இருத்தினன். திருமால் தவம் செய்த இந்த இடத்திலேயே யான் யாகம் செய்வேன்' என்று கூறி, விசுவாமித்திரன் வேள்வி செய்யத் தொடங்கினன்.

### இராம லக்குமணர் வேள்வியைக் காத்தல்

**எண்ணுதற் காக்கரி திரண்டு மூன்றுநாள்**
**விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை**
**மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்**
**கண்ணினைக் காக்கின்ற இமையிற் காத்தனர்** (71)

**கொண்டுகூட்டு :** மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள், இரண்டு மூன்று நாள் விண்ணவர்க்கு ஆக்கிய முனிவன் (-விசுவாமித்திரன்) வேள்வியை எண்ணுதற்கு ஆக்க அரிது (ஆகக்) கண்ணினைக் காக்கின்ற இமையின் காத்தனர்.

**பொருள் :** இராம லக்குமணர்கள், கண்ணை இமை காத்தல் போல, விசுவாமித்திரனது வேள்வியை மற்றவர்கள் நினைத்தற்கும், நினைத்தாலும் செய்தற்கும், அரிது ஆன விதமாகக் காத்தார்கள்.

எண்ணுதற்கு அரிது, ஆக்க அரிது, என இயைக்க. ஆக்க - செய்ய. ஆக்கல் - செய்தல். (உ - ம்) 'திக்கொர் நாலிரண்டினுந் தன்செய்ய - கோல் வரும்படியே யாக்கிக் கொணர்ந்தன திறைகள்,' பாரதம்., இராச. 66—ச. அ. இரண்டு மூன்று நாள் - ஆறு நாள். விண்ணவர்க்கு ஆக்கிய - தேவர்களுக்காக (அவர் பிரீதிப்பொருட்டு) செய்த. இமையின் - இமை போல.

எண்ணுதற்கு ஆக்க அரிது (ஆக) காத்தனர் எனக் கூட்டுக. இவ்வாறு கூட்டிப் பொருள் கொண்டா ரன்றி, 'எண்ணுதற் காக்கரி திரண்டு மூன்று நாள் - விண்ணவர்க்கு ஆக்கிய முனிவன் வேள்வி' என்பதற்கு 'நினைக்கவும் செய்யவும் அருமையாக ஐந்து நாண்மீன்களைத் தன் கட்ட

னையை அவமதித்த தேவர்கள் பொருட்டுப் படைத்த முனிவனது யாகத்தை' என்றும், 'நினைக்கவும் செய்யவும் அரிய, ஆறு நாளும் தேவர் பொருட்டுச் செய்த முனிவனது யாகத்தை' என்றும், பொருள் கொண்டாரும் உண்டு. நாள், மீன், நட்சத்திரம் என்பவை ஒரு பொருள் குறித்தவை. வேள்வி செய்த நாள்கள் ஆறு என்று வான்மீகத்திற் கூறப்பட்டிருக்கிறது. மன்னன் - தசரதன். மைந்தர்கள் - இராம லக்குமணர்கள்.

இமையின் காத்தனர்: இதற்கு நிலையா யிருக்கும் கீழ்மையை அசைந்துகொண்டிருக்கும் மேலிமை தட்டி வருவது போல, இராமன் சாரி வந்து, ஓரிடத்தில் நின்ற லக்ஷ்மணனைத் தட்டிக் கொடுத்தான் என்று விசேஷார்த்தம் சொல்வது வழக்கமா யிருக்கிறது. இது, கம்பனாலேயே சொல்லப் பட்டதாகவும் கர்ண பரம்பரை. ஆனால், 'இமைகள் கண்ணைக் காப்பது போல அருமையாகக் காத்தார்கள்' என்ற பொருளில் உள்ள சுவை, இந்த 'விசேஷார்த்தத்தில்' இல்லை. இதற்கடுத்த பாட்டில் இரண்டு வீரரும் திரிந்தார்கள் என்று கவி சொல்லுவதைக் கூடக் கவனிக்காமல் விசேஷார்த்தம் கற்பித்திருப்பது விநோதமாயிருக்கிறது.

'விசேஷார்த்தங்களில், பெரும்பான்மை உண்மையான ருசி யற்றவைகளாகவே யிருக்கின்றன. ஆனால், செய்யுளுக்கு அமோகமாக விசேஷார்த்தங்கள் சொல்லுகிறவர்கள் மகா ரஸிகர்கள் என்ற அநர்த்தமான அபிப்பிராயம் நாட்டில் மிக அதிகமா யிருக்கிறது. இந்த அபிப்பிராயம் என்று நீங்குகிறதோ அன்று தான் உண்மையான சுவை பிறக்கும்.'— வ. வெ. ஸுப்ரஹ்மண்ய ஐயர், கம்பராமாயணச் சுருக்கம், பால காண்டம், அரும் பொருள் விளக்கம், பக்கம் 140. (71)

### இராக்கதர் தோல்வி அடைதலும் வேள்வி முடிதலும்

அவ்வாறு காத்த ஆறு நாள் முடிவிலே வில்லும் வாளும் தாங்கிய கரிய அரக்கர் படை, வில்லோடும் மின்னோடுங் கூடிய கார்மேகம் போல, ஆகாயத்திலே திரண்டு இடி போல ஆரவாரித்து, மழை போல அம்பு பொழிய, இராமன் அவைகளைத் தனது பாணங்களால் விலக்கி, ஓர் அம்பால் தாடகை மக்கள் இருவரில் மாரீசனைச் சமுத்திரத்திலே யெறிந்து, மற்றோ ரம்பால் சுவாகுவைக் கொன்று, வேறு கணைகளால் அரக்கர் தலை மலைகளும், இரத்த ஆறும் புரளும்படிசெய்ய, உயர்தப்பிய இராக்கதர் ஓடி யொழிந்தார்கள். வேள்வி விக்கின மின்றி முடிந்தது. அப்போது விசுவாமித்திரன் மனமுவந்து இராமனை நோக்கிக் கூறுவான் —

### விசுவாமித்திரன் இராமனைப் புகழ்தல்

**பாக்கி யம்மெனக் குளதென நினைவுறும் பான்மை**
**போக்கி நிற்கிது பொருளென வுணர்கிலேன் புவனம்**
**ஆக்கி மற்றவை யகிலமும் மணிவயிற் றடக்கிக்**
**காக்கும் நீயொரு வேள்விகாத் தனையெனுங் கருத்தே**
**(72)**

**கொண்டுகூட்டு :** 'பாக்கியம் எனக்கு உளது என நினைவுறும் பான்மை போக்கி நிற்கு இது பொருளென உணர்கிலேன் : புவனம் ஆக்கி, மற்றவை அகிலமும் மணி வயிற்று அடக்கிக் காக்கும் நீ ஒரு வேள்வி காத்தனை எனும் கருத்தே (எனக்கு இல்லை).'

**பொருள் :** 'என் வேள்வியை நீ காக்கும் பாக்கியம் நான் முன் செய்த தவத்தால் எனக்கு உள்ளது ஆகியது என்று நினைப்பதை விட்டு, உனக்கு இது சாதிக்கக் கடினமான காரியம் என்று நினைக்கின்றிலேன் ; ஏனெனில், அகிலாண்டங்களையும் சிருட்டித்து அவைகளைப் பிரளய கால ஆபத்துக்குத் தப்பும்படி திருவயிற்றினுள் அடக்கி வைத்துக் காக்கும் அவ்வளவு அபார வல்லமை யுடைய நீ சிறிய வேள்வியைக் கடைபோகக் காத்தா யென்று கருதும் கருத்து, என் மனத்தில் உண்டாமோ? உண்டா யின் அது எவ்வளவு பேதைமையானது ?

நினை வுறும் பான்மை - நினையும் தன்மை. போக்கி - நீக்கி - விட்டு ; அன்றி யெனலுமாம். பொருள் - காரியம் ; (உ - ம்) ' துணிபெவனோ பொருள் விளங்கச் சொல்லென்றான்.' சேதுபு. பிரமகத். 22. — ச. அ. ' கருத்தே ' என்பதற்கு, வினை முடிபு இல்லாமல், வேண்டு மென்றே விடப் பட் டிருக்கிறது. மனம் அவச முறுங்கால், சொல்லக் கருதியதில் ஒரு பகுதியைச் சொல்லி, சொல்லாமலே அறிந்து கொள்ளக்கூடிய எஞ்சிய பகுதியைச் சொல்லாது விடுதல் உலக வழக்கிற் போலச் செய்யுள் வழக்கி லும் உண் டென்பதற்கு இஃது ஓர் உதாரணமாம். வில்லி பாரதத்தில், கன்னன் மரணுந்த காலத்தில், ' மாதவத்தால் ஒரு தமியன் வாழ்ந்தவாரே ' என்றது மற்றோ ருதாரணம். பிற, பல உள. வந்துழிக் காண்க.

பாலகாண்டம் பதிப்பித்தாருள் ஒருவர் மேற்கூறிய ' கருத்து ' என்ற முடிபில்லாததை ' உளத்து ஆகுமா ' என்றும், மற்றொருவர் ' எப்படி உண் டாகும் ' என்றும் கூறி முடித்திருக்கின்றார்.

' எல்லா உலகங்களையும் (ஆதி காலத்தில் பிரம ரூபியாய்) படைத் தருளி, பின்பு (பிரளய காலத்தில்), அவ் வுலகங்க ளெல்லாவற்றையும் அழகிய திரு வயிற்றிலே அடங்கச் செய்து வைத்துக் காத்தருளுகின்ற நீ (எனது சிறிய) யாக மொன்றைக் காத்தருளினை யென்கின்ற எண்ணத்தி

ஞல், (பொருளல்லாத என்னை நீ ஒரு பொருளாக மதித்து வந்து உன்ஞல் வேள்வி காக்கப்படுதற்கு ஏதுவான தொரு) நல் வினை எனக்கு இருந்த தென்று (யான்) எண்ணுவேனே யன்றி, அத் தன்மையை ஒழித்துச் (சர்வ ரக்ஷகனை) உனக்கு இந்த யாக ரக்ஷணம் ஒரு பெருங் காரிய மென்று அறிகின்றே னில்லை.'— வை. மு. கோ. (72)

### மிதிலைக்குப் போகத் தீர்மானித்தல்

மூவரும் அன்று அங்கே தங்கி யிருந்தார்கள். மறு நாள் இராமன், 'இனி எனக்குக் கட்டளை யாது' என, முனிவன், 'நீ செய்தற் கரியது ஒன்று மில்லை. பெரிய காரியங்கள் பின் முடிக்க வேண்டுவன இருக்கின்றன. இப்போது மிதிலை அரசன் செய்யும் வேள்வியைப் பார்க்கப் புறப்படுவோம்' என்ருன்.

## 9. அகலிகைப் படலம்

*அகலிகையின் சாபத்தை இராமன் நிவிர்த்தி செய்ததைக் கூறுவது*

### விதேக நாடு அடைதல்

அவ்வாறே அவர்கள் புறப்பட்டுப் பல ஆறுகள் சோலை களைக் கடந்து, மிதிலை சேர்ந்தார்கள்.

**பள்ளி நீங்கிய பங்கயப் பழனநன் ஞரை**
**வெள்ள வான்களை களைவுறு கடைசியர் மிளிர்ந்த**
**கள்ள வாணெடுங் கண்ணிழல் கயலெனக் கருதா**
**அள்ளி நாணுறு மகன்பணை மிதிலைநா டடைந்தார் (73)**

**கொண்டுகூட்டு:** பள்ளி நீங்கிய பங்கயப் பழன நல் நாரை, வெள்ள வான்களை களைவுறும் கடைசியர் மிளிர்ந்த கள்ள வாள் நெடும் கண் நிழல் கயல் எனக் கருதா அள்ளி நாண் உறும் அகன் பணை மிதிலை நாடு அடைந்தார்.

**பொருள்:** தாமரைகள் மலிந்த வயலில் உள்ள நித்திரை நீங்கிய நாரை, அந்த வயல் நீரில் முளைத்த களைகளைப் பிடுங்கும் பள்ளிகளது கண் நிழலைத் தூக்க மயக்கத்தில் மீனென்று கொத்தி எடுத்து மீனல்லாமையால் நாணுகின்ற மருத நிலம் சூழ உள்ள மிதிலா நகரத்தைத் தன்னிடத்தே உடைய விதேக நாட்டை அவர்கள் அடைந்தார்கள்.

பள்ளி - நித்திரை. பழனம் - வயல். வெள்ளம் - நீர். வான் - பெருமை: இங்கே மிகுதியைக் குறித்தது. கடைசியர் - பள்ளப் பெண்கள். மிளிர்தல் - பிரகாசித்தல். கள்ள - கள்ளத் தன்மையுள்ள. வாள் - ஒளி. கயல் - கெண்டை மீன். அகன் - அகன்ற. பணை - மருத நிலம்.

களை பிடுங்கும் மாதர் கண்நிழல் அக் களைகள் உள்ள நீரிலே தோன்ற அதனை மீனென் றெண்ணி நாரைகள் மயங்கின என்பதற்குப் பொருத்தமாகக் களைக்கு 'வெள்ள' என்ற அடை கொடுத்ததும், மாதர் கண் மீன்போல்வன வாதலால், அவர் கண்நிழல் மீன் போலத் தோன்றி மீனென மயங்குதற் கேதுவா யிருப்ப, அவ்வேதுவைப் பலப்படுத்த நாரைக்குப் 'பள்ளி நீங்கிய' என்ற அடை கொடுத்ததும் கவனிக்கத் தக்கவை. (73)

### நாட்டு வருணனை

வரம்பில் வான்சிறை மதகுகண் முழவொலி வழங்க
அரும்பும் நாண்மல ரசோகுக ளலர்விளக் கெடுப்ப
நரம்பி னான்றதேன் றாரைகொ ணறுமல ரியாழிற்
சுரும்பு பாண்செயத் தோகைநின் றுடுவ சோலை (74)

கொண்டுகூட்டு: சோலை(யில்) வரம்பு இல் வான் சிறை மதகுகள் முழவு ஒலி வழங்க, அரும்பு நாள் மலர் (பூத்த) அசோகுகள் (அந்த) அலர் விளக்கு எடுப்ப, நரம்பின் நான்ற தேன் தாரை கொள் நறுமலர் யாழின் சுரும்பு பாண் செய, தோகை நின்று ஆடுவ.

பொருள்: அந்த விதேக நாட்டிலே, சோலைகளிலே உள்ள குளங்களின் மடைகள் அவற்றின் வழியே நீர் செல்லும் ஒலி யாகிய மத்தள முழக்கம் செய்ய, அசோக மரங்கள் மலர்கள் ஆகிய விளக்குகளை ஏந்த, வண்டுகள் நரம்பு போலத் தேன் தாரையுடைய மலராகிய யாழில் இசை பாட, மயில்கள் தோகை விரித்து நின்று கூத்தாடும்.

வரம்பு இல் - அளவில்லாத. வான் - பெரிய. சிறை - குளம்.—த. அ. அரும்பும் - அரும்புகின்ற - தோன்றுகின்ற. நரம்பின் - நரம்பைப் போல. நான்ற - தொங்கிய - தொங்கினாற் போல ஒழுகிய. தாரை கொள் - ஒழுக்கைக் கொண்ட. யாழின் - யாழ் (ஓசை) போல். பாண் செய - இசை பாட. பாண் - இசைப் பாட்டு. தோகை - மயில். சோலை - சோலையில்; ஏழன் உருபு தொக்கது.

சோலைகளி லுள்ள மதகுகளாகிய மத்தளிகர்கள் அம் மதகுகள் வழியே விரைந்து செல்லும் நீரோசை யாகிய மத்தளத் தொனி எழுப்ப, அசோக மரங்களாகிய மசால்சிக ளென்னும் விளக்குப் பணியாளர் சிவந்த மலர்களாகிய தீபங்களை ஏந்தி நிற்க, தேன் தாரையாகிய நரம்போடு கூடிய

மலர்களாகிய யாழ்களில் வண்டுகளாகிய யாழ்ப் பாணர்கள் ரீங்கார மாகிய யாழ்ப் பண்ணொலி செய்ய, பல வண்ணக் கலாப ஆடை யணிந்த மயில்களாகிய நர்த்தன மாதர்கள் நாட்டிய மாட, ஏக காலத்தில் கண்ணுக்கும் காதுக்கும் இன்ப மளிக்கும் நாட்டிய சாலைகளாக, விதேக நாட்டுச் சோலைகள், மரங்கள் நெருங்கி இருண்டு, பகலையும் சதிர்க் கச்சேரி நடத்தற் கேற்ற இரவாகச் செய்து இனிது விளங்குகின்றன, என்றவாறு. இப் பாட்டு, நாட்டுப் படலத்தில் 'தண்டலை மயில்களாட' என்ற பாட்டுப் போன்றது. (74)

**தூவி யன்னந்த மினமென்று நடைகண்டு தொடரக்**
**கூவு மென்குயிற் குதலையர் குடைந்ததண் புனல்வாய்**
**ஓவில் குங்குமச் சுவடுற வொன்றொடொன் றூடிப்**
**பூவு றங்கினும் புள்ளுறங் காதன பொய்கை (75)**

கொண்டுகூட்டு: பொய்கை(யில்) தூவி அன்னம் (மாதர்) நடை கண்டு தம் இனம் என்று தொடரக் கூவும் மெல் குயிற் குதலையர் குடைந்த தண் புனல் வாய் ஓவு இல் குங்குமச் சுவடு உற, ஒன்றொடு ஒன்று ஊடி (- ஊடுதலால்), பூ உறங்கினும் புள் உறங்காதனவாம்.

பொருள்: அந்த நாட்டு நீர் நிலைகளிலே, மாதர்கள் குளித்த நீரிலே, அம்மாதர் பூசியிருந்த குங்குமம் தோய, அக்குங்குமம் பட்ட அடையாளம் சேவல்களும் பேடைகளும் பொருந்த, நிறம் மாறியதன் காரணம் அறியாமல், இச் சேவல் என் சேவ லன்று இப் பேடை என் பேடை யன்று என்று கருதி, துணைப் பறவைகள், ஒன்றோடொன்று ஊடல் செய்து, இரவில் அந்தக் குளத்துத் தாமரைமலர்கள் இதழ் குவிந்து உறங்கினாலும், உறங்கா திருப்பனவாம்.

தூவி - இறகு. மெல் குயில் குதலையர் - மென்மையான குயி லோசை போலும் மழலை மொழிகளை யுடைய மாதர்கள். குடைந்த - குளித்த. புனல் வாய் ஓவு இல் - நீரில் (கலந்து அதனி னின்று) நீங்குதல் இல்லாத. சுவடு - அடையாளம். பொய்கை - இயற்கையாய் அமைந்த (மானிடர் ஆக்காத) நீர் நிலை. தொடரச் (சென்று) குடைந்த எனக் கூட்டுக.

மலர் கண்ணுக்கும், மலர் மடல் கண் மடலுக்கும், மலர் மடல் ஒன்றோடொன்று பொருந்தல் கண் மடல்கள் பொருந்தலுக்கும் ஒப்பாம். இதனை உட்கொண்டு, கவி, இரவில் தாமரை மலர்கள் குவிவதனை மனோ பாவனையால் அம்மலர்கள் உறங்குவதாகக் கொண்டு கூறிய நயம் பாராட்டத் தக்கது.

விதேக நாட்டுத் தடாகங்களில் பகலில் மலர்ந்திருக்கும் தாமரை மலர்களின் மேலிருந்து ஊடிக்கொண்டிருந்த அன்னப் பறவைகள், பகல்

நீங்கி இரவு வந்ததைத் தாமாகத் தெரியவில்லை யானாலும், தாம் உறைந்த தாமரை மலர்கள் குவிந்து தெரிவித்தும் தெரியாதனவாய், ஊடலை நிறுத் தாமல் உறங்கா திருந்தன, என்ற கருத்தை மிக இனிமையாக, உள்ளுந் தோறும் உள்ளுந்தோறும் உவகை உவட்டெடுக்கும்படி 'பூஉ றங்கினும் புள் உறங் காதன பொய்கை' என்பதனாற் புலப்படுத்திய கவித்திறத்தினைக் கண்டு களியார் அரியர். (75)

படைநெ டுங்கண்வா ளுறைபுகப் படர்புனன் மூழ்கிக்
கடைய முன்கடற் செழுந்திரு வெழும்படி காட்டி
மிடையும் வெள்வளை புள்ளொடு மொலிப்பமெல் லியலார்
குடைய வண்டினங் கடிமலர் குடைவன குளங்கள் (76)

கொண்டுகூட்டு: குளங்களில், மெல்லியலார், நெடும்கண் வாள்(ப்) படை உறைப் புகப் படர் புனல் மூழ்கி, முன் கடல் கடையச் செழும் திரு எழும்படி காட்டி, மிடையும் வெள்வளை புள்ளொடும் ஒலிப்பக் குடைய, வண்டினம் கடிமலர் குடைவன.

பொருள்: அந்த நாட்டுத் தடாகங்களிலே, மாதர்கள், கண்களாய வாளாயுதங்கள் இமைகளாகிய உறைகளிலே புகும் படி நீரில் முழுகி, முன் காலத்தில் தேவர்கள் கடல் கடைய அதனிலிருந்து திருமகள் மேலெழுந்த தன்மையை அந்நீரில் முழுகிய தாம் அந் நீரின்மே லெழுதலால் காட்டி, அத்தடாகங்களில் குடைந்து கொண்டிருக்க, வண்டுகள், அங்குள்ள மலர்களைக் குடையா நிற்பனவாம்.

'நெடுங்கண் வாட் படை' யெனவும் 'முன்கடல் கடைய' எனவும் கூட்டுக. படர் புனல் - பரவிய நீர். மிடையும் - நெருங்கிய. குடைதல் - நீராடுதல்; (வண்டுகள் தேனுக்காகப் பூக்களைக்) குடைதல்.

நீராடும்போது இயல்பாகக் கண் மூடுதலைக் 'கண் வாள் உறை புக' என்று நயம்படக் கூறினர். நீருள் மூழ்கின மாதர் எழுதலைப் பாற்கடலில் திருமகள் எழுந்தது போலு மென, (உவமான உவமேயங்க ளாகிய) இரு காட்சிகளும் நம் மனக்கண் ணெதிரே தோன்றும்படி கூறிய வனப்பு நோக்கத் தக்கது. 'பூ உறங்கினும் புள் உறங்காதன பொய்கை' என் பதனிலும், 'மெல்லியலார் குடைய வண்டினம் கடிமலர் குடைவன குளங்கள்' என்பதனிலும் இனிதாகப் பொருள் வேறுபடச் சொற்களை அடுக்கியிருக்கும் கவி சாதுரியம் கவனிக்கத் தக்கது. (76)

**அகலிகை கல் உருவம் நீங்கித் தன் உருவம் அடைதல்**

அந்த விதேக நாட்டிலே அவர்கள் சிறிது தூரம் சென்று, மிதிலை நகரத்துக் கோட்டையை அடுக்க உற்ற போது, அங்கே கல் லுருவாயிருந்த அகலிகை, இராமன் பாத தூளி படவே,

தொல் லுரு வாகி நிற்க, முனிவன், 'இவள் கௌதமன் மனைவி' என, இராமன், 'இவள் இவ்வா ருவானேன்?' என, அவன், 'இந்திரன் இவளை இச்சித்துக் கௌதமனைக் கிருகத்தி னின்று வெளியே போம்படி உபாயம் செய்து அவன் வடிவத்தோடு உள்ளே புகுந்து தன்னைக் கௌதம னென்று நம்பிய இவளைச் சேர்ந்திருந்த சமயத்தில், கௌதமன் வந்து, அவனைக் கண்டார் நகைக்கும் விகார உரு அடையும்படி சபிக்க, அவன் விகார உரு அடைந்து வெட்கப்பட்டு ஓடிப்போக, பின்பு இவளைக் கல்லாகும் படி சபிக்க, இவள் "அச் சாபத்துக்கு முடிவு அருள்க" என, "இராமன் கழலி லொட்டிய புழுதி பட்டிட முடிவாம்" என்றான். பின்பு, தேவர் வேண்ட, இந்திரன் விகார உரு நீங்கி ஆயிரங் கண்ணனாகும்படி கௌதமன் அநுக்கிரகித்தான்' என்று, பின் னும் கூறுவான்—

### விசுவாமித்திரன் இராமனைப் பாராட்டல்

**இவ்வண்ண நிகழ்ந்த வண்ண மினிஇந்த வுலகுக் கெல்லாம்**
**உய்வண்ண மன்றி மற்றோர் துயர்வண்ண முறுவதுண்டோ**
**மைவண்ணத் தரக்கி போரில் மழைவண்ணத் தண்ண லேயுன்**
**கைவண்ண மங்குக் கண்டேன் கால்வண்ண மிங்குக் கண்டேன்**

கொண்டுகூட்டு: 'மழை வண்ணத்து அண்ணலே! இவ்வண் ணம் நிகழ்ந்த வண்ணம். இனி இந்த உலகுக் கெல்லாம், உய் வண்ணம் அன்றி மற்றும் ஓர் துயர் வண்ணம் உறுவது உண்டோ? அங்கு, மை வண்ணத்து அரக்கி போரில், உன் கை வண்ணம் கண்டேன்! இங்கு, (உன்) கால் வண்ணம் கண்டேன்.'

பொருள்: 'இந்த வண்ணம் நடந்த வண்ணம் என்று தெரிவாயாக. இவளுக்குச் சாபம் நீக்கி அருளிய உனது பாத மகிமையால் இனிமேல் இந்த உலகத்தாரெல்லாருக்கும் உய்யும் வண்ணமன்றி நையும் வண்ண மொன்றும் உண்டாகுவதில்லை. மெய்யின் வண்ணம் மையின் வண்ணமான தாடகை யுத்தம் நிகழ்ந்த அந்த இடத்திலே உனது கையின் **வண்ணத்தைக் கண்டேன்!** அகலிகை சாப நீக்கம் நிகழ்ந்த இந்த இடத்திலே **உனது காலின் வண்ணத்தைக் கண்டேன்!**' என்றான்.

'வண்ணம்' என்பது, 'இவ் வண்ணம்,' 'நிகழ்ந்த வண்ணம்,' என்பவைகளில் விதத்தையும், 'உய்(யும் - உச்சீவிக்கு) வண்ணம்,' 'துயர் - (துயரும் - துன்பம் உறும்) வண்ணம்,' என்பவைகளில் ஆறு

அல்லது வழியையும், 'மை வண்ணம்,' 'மழை வண்ணம்,' என்பவைகளில் நிறத்தையும், 'கை வண்ணம்,' 'கால்வண்ணம்,' என்பவைகளில், குணம் அல்லது தன்மையையும், குறித்தல் காண்க.

இந்தப் பாட்டுக்குப் பல பாட்டுக்களுக்கு முந்திய 'அவ்வுரை இராமன் கூற அறிஞனும் நோக்கி' * என்ற பாட்டிலுள்ள 'நோக்கி' என்ற வினையெச்சம் இப் பாட்டில், 'கண்டேன்' என்ற வினைமுற்றுக் கொண்டு முடிகின்றதே யன்றி, 'அறிஞன்' என்ற படர்க்கை எழுவாய்க்குப் பயனிலை இல்லை: 'என்றான்' என்று பயனிலை வருவித்து முடிபு செய்க. இவ்வாறே மேல் 75-ம் பாட்டில் 'தொடரச் (சென்று) குடைந்த' என்று 'சென்று' என்ற சொல் வருவித்து முடிவு செய்ய வேண்டியிருந்தது காண்க. (77)

# 10. மிதிலைக் காட்சிப் படலம்

விசுவாமித்திரனும் இராம லக்குமணரும் மிதிலா நகரக் காட்சிகளைக் கண்டதைக் கூறுவது

### மதிற்கொடிகள் அசைதல்

பின்பு அவர்கள் அகலிகையைக் கௌதமனிடம் சேர்த்து விட்டு, வழிச் சென்று, மிதிலை நகரத்து மதிலைக் கண்டார்கள்.

**மையறு மலரி னீங்கி யான்செய்மா தவத்தின் வந்து**
**செய்யவ ளிருந்தா ளென்று செழுமணிக் கொடிக ளென்னுங்**
**கைகளை நீட்டி யந்தக் கடிநகர் கமலச் செங்கண்**
**ஐயனை யொல்லை வாவென்றழைப்பது போன்ற தம்மா (78)**

**கொண்டுகூட்டு:** அந்தக் கடி நகர், 'செய்யவள், மை அறு மலரின் நீங்கி யான்செய் மா தவத்தின் வந்து இருந்தாள்' என்று செழும் மணிக் கொடிக ளென்னும் கைகளை நீட்டிக் கமலச் செங்கண் ஐயனை 'ஒல்லை வா !' என்று அழைப்பது போன்றது, அம்மா !

**பொருள்:** அப்போது, அந்த மதிலுக்கு மேலாகத் தோன்றிய கொடிகள் காற்றால் அலைந்தது, அந்த நகரம் ஆகிய பெண், 'இலக்குமி தேவி, எப்பொழுதும் வசிக்கும் செந்தாமரை மலரினின்று நீங்கிச் சீதையாகி, யான் செய்த பெரும் புண்ணியத்தினால் என்னிடம் வந்திருக்கின்றாள்' என்று கைகளை உயர நீட்டி, அசைத்துச் சைகை செய்து, திருமாலாகிய இராமனை 'அவளை அடையச் சீக்கிரம் வருவாயாக' என்று அழைப்பது போன்றிருந்தது.

---

* இப்படலம் 74-ம் பாட்டு.

மை அறு - குற்றமற்ற. மலரின் - (செந்தாமரை)ப் பூவினின்று. செய்யவள் - இலக்குமி. கடிநகர் - காவலையுடைய நகரம். ஒல்லை - சீக்கிரம். (78)

### மாடக் கொடிகள் ஆடுதல்

**நிரம்பிய மாடத் தும்பர் நிரைமணிக் கொடிக ளெல்லாம்**
**தரம்பிற ரின்மை யுன்னித் தருமமே தூது செல்ல**
**வரம்பில்பே ரழகி னாளை மணஞ்செய்வான் வருகின் றானென்**
**றரம்பையர் விசும்பி னாடு மாடலி னாடக் கண்டார் (79)**

**கொண்டுகூட்டு :** நிரம்பிய மாடத்து உம்பர் நிரை மணி கொடிகள் எல்லாம் பிறர் தரம் இன்மை உன்னித் தருமமே தூதுசெல்ல, வரம்பில் பேரழகினாளை மணஞ் செய்வான் (இராம பிரான்) வருகின்றான் என்று (மகிழ்ந்து), அரம்பையர் விசும்பின் ஆடும் ஆடலின் ஆட, (அதனை மூவரும்) கண்டார்கள்.

**பொருள் :** மிதிலா நகரத்து மாடங்களின் மேலேயுள்ள கொடிகள், தூது போதற்கு வேறொருவரும் தகுதி யில்லாமையை உட் கொண்டு தரும தேவதை தானே தூது போய் அழைக்கச் சீதையைக் கல்யாணம் செய்யும் பொருட்டு இராமன் வருகின்றா னென்று மகிழ்ந்து அரம்பையர்கள் வானரங்கத்தில் ஆடுதல் போல ஆட, அவர்கள் கண்டார்கள்.

நிரம்பிய - (சிற்ப சித்திர வேலைப்பாடுகள்) நிறைந்த. மாடத்து உம்பர் - மாளிகைகளின் மேல். நிரை - வரிசை. தரம் - தகுதி. வரம்பு இல் - எல்லை யில்லாத. ஆடலின் - ஆடலைப் போல.

முந்திய பாட்டுக் கொடிகளை மதிற் கொடிக ளென்றும், இந்தப் பாட்டுக் கொடிகளை மாளிகைக் கொடிக ளென்றும் வேறுபடுத்திக் கூறி யிருப்பதும் உண்டு. (79)

### மூவரும் மிதிலை நகர் புகுதல்

**ஆதரித் தமுதிற் கோலந் தோய்த்தவய வமைக்குந் தன்மை**
**யாதெனத் திகைக்கு மல்லான் மதனற்கு மெழுத வொண்ணாச்**
**சீதையைத் தருத லாலே திருமக ளிருந்த செய்ய**
**போதெனப் பொலிந்து தோன்றும் பொன்மதின் மிதிலை புக்கார்**

**கொண்டுகூட்டு :** (மதனன்) ஆதரித்துக் கோலை அமிழ்தில் தோய்த்து அவயவம் அமைக்கும் தன்மை யாது எனத் திகைக்கும் அல்லால் (அந்த) மதனற்கும் எழுத வொண்ணாச் சீதையைத் தருதலாலே,

திருமகள் இருந்த செய்ய போது எனப் பொலிந்து தோன்றும் பொன் மதில் மிதிலை (யுள்ளே மூவரும்) புக்கார்.

**பொருள்:** அழகின் தன்மையை அறிதலிற் சிறந்த மன் மதன், 'வரம்பில் பேரழகினுள்' ஆகிய சீதையின் வடிவத்தைச் சித்திரிக்க இயல்பாக ஆசை பூண்டு, தனது சித்திரம் எழுது கோலை அமிழ்தமே தக்க வருணப் பொரு ளென்று அமிழ்தத் திலே தோய்த்து, அவளது அவயவங்களைச் சித்திரத்தில் புலப்பட அமைக்கும் வகை எவ்வகை என்று திகைப்பானே யல்லாமல், அந்த மன்மதனாலும் சித்திரிக்கக் கூடாத சீதை யாகிய இலக்குமியைக் காண்போர் களிக்க அளித்ததனால், இலக்குமி காண்போர் களிக்க வீற்றிருக்கின்ற சிவந்த தாமரை மலர் போல விளங்கும் மிதிலை நகரத்தி னுள்ளே அவர்கள் பிரவேசித்தார்கள்.

ஆதரித்து - விரும்பி. திகைக்கும் - திகைப்பான். செய்ய - சிவந்த; அழகிய.

'திகைக்கும்' என்பது 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்று. இவ் வாய்பாடு, 'அது செய்யும்' 'அவை செய்யும்' என உலக வழக்கிலும், இவைக ளல்லாமல் 'அவன் செய்யும்' 'அவள் செய்யும்' எனச் செய்யுள் வழக்கிலும் வழங்கும். (80)

### வீதி வழியே செல்லுதல்

**சொற்கலை முனிவ னுண்ட சுடர்மணிக் கடலுந் துன்றி**
**அற்கலந் திலங்கு பன்மீ னரும்பிய வானும் போல**
**விற்கலை நுதலி னாரு மைந்தரும் வெறுத்து நீத்த**
**பொற்கலன் கிடந்த மாட நெடுந்தெரு வதனிற் போனார் (81)**

**கொண்டுகூட்டு:** (அவர்கள்) சொற்கலை முனிவன் உண்ட சுடர் மணிக் கடலும் அல்லி(ல்) துன்றிக் கலந்து இலங்கு பல் மீன் அரும்பிய வானும் போல, விற் கலை நுதலினாரும் மைந்தரும் வெறுத்து நீத்த பொற் கலன் கிடந்த மாட நெடும் தெரு அதனில் போனார்.

**பொருள்:** அகத்தியர் குடித்த காலத்தில் நீர் வற்றித் தரை தெரிய லுற்றபோது வெளியாய்ப் பிரகாசித்த இரத்தினங்களை யுடைய கடலையும், இரவில் நட்சத்திரங்கள் தோன்றப் பெற்ற வானத்தையும் போல, ஆடவரும் மகளிரும் செல்வ மிகுதியால் புதியன புதியனவாக ஆபரணங்கள் அணியும் போது வெறுத்துக் களைந் தெறிந்த பழையன வாகிய, இரத்தின

மிழைத்த பொன்னுபரணங்கள் கிடந்த தெருக்கள் வழியே அவர்கள் சென்றூர்கள்.

சொல் கலை முனிவன் - சொல்லா லாகிய நூல்கள் அல்லது சாத்தி ரங்களை அறிந்த அல்லது அருளிச் செய்த அகத்திய முனி. சுடர் மணி - பிரகாசிக்கின்ற இரத்தினங்கள். அல் கலந்து இலங்கு பல் மீன் - இர விற் பொருந்தி விளங்குகின்ற பல நட்சத்திரங்கள். வில் கலை நுதலினர் - (வடிவத்தில்) வில்லைப் போன்ற பிரகாசத்தை யுடைய நெற்றியையுடைய மாதர்; ஒளியை யுடைய சந்திர கலை ( - பிறை) போன்ற நெற்றியை யுடைய பெண்கள்.

கடலும் வானமும் பரப்பினுலும், இரத்தினங்களும் நட்சத்திரங்களும் பிரகாசத்தினுலும், முறையே தெருக்களுக்கும் ஆபரணங்களுக்கும் உவம மாதல் காண்க. (81)

**தாறுமாய் தறுகட் குன்றந் தடமத வருவி தாழ்ப்ப**
**ஆறுமாய்க் கலின மாவி லாழியா லழிந்தோ ராருய்ச்**
**சேறுமாய்த் தேர்க ளோடத் துகளுமா யொன்றே டொன்று**
**மாறுமா ருகி வாளா கிடக்கிலா மறுகிற் சென்றூர் (82)**

கொண்டுகூட்டு: தாறு மாய் தறுகண் குன்றம் தடம் (கரிய) மத அருவி தாழ்ப்ப (கரிய) ஆறும் ஆய், கலின மா(வின்) விலாழியால் அழிந்து ஓர் (வெள்ளை) ஆறும் ஆய், தேர்கள் ஓடச் சேறுமாய், (அவை மேலும் மேலும் ஓடத்) துகளும் ஆய், ஒன்றே டொன்று மாறு மாருகி வாளா கிடக்கிலா மறுகில் சென்றூர்.

**பொருள்:** தெருக்களின் இடத்திலே செல்லும் யானைகள் கருமையான பெரிய மத அருவி பொழிய அதனுல் அத்தெருக்கள் கரு நிற ஆருகி, அங்கே செல்லும் குதிரைகளின் வெண்மையான வாய் நுரையால் கரு நிறம் சிதைந்து மாறி வேறு ஓர் வெண்ணிற ஆருகித், தேர்கள் ஓடப் புழுதி கலப்புற்றுச் சேருகி, திரும்பவும் தேர்கள் ஓடப் புழுதி அதிகமாகக் கலந்து புழுதியாக, ஒரு சமய நிலைமையி னின்று மறுசமய நிலைமை மாறி மாறி வேறு பட்டுச் சும்மா இருந்தபடியே ஒரு தன்மையாகக் கிடவாத தெருக்களிலே அவர்கள் சென்றூர்கள்.

தாறு - இரும்பு முள்; மதங் கொண்ட யானைகளை அடக்க, அவைக ளின் மதம் வழியும் கன்னத் துளையுட் செலுத்தப் படுவது. மாய் - மாய்கின்ற - முறிக்கின்ற. தறு கண் - கடுகக் கொல்லுதல்.—பத்துப்பா. தாழ்ப்ப - தாழச் செய்ய - சொரிய. கலினம் - கடிவாளம். மா - குதிரை. விலாழி - குதிரை வாய் நுரை. வாளா - சும்மா. (82)

### நடன சாலைக் காட்சி

நெய்திர ணரம்பிற் றந்த மழலையி னிறைந்த பாடல்
தைவரு மகர வீணை தண்ணுமை தழுவித் தூங்கக்
கைவழி நயனஞ் செல்லக் கண்வழி மனமுஞ் செல்ல
ஐயநுண் ணிடையா ராடு மாடக வரங்கு கண்டார் (83)

கொண்டுகூட்டு: நெய் திரள் நரம்பின் (இசை போலத்) தந்த மழலையின் நிறைந்த பாடல், தைவரு மகர வீணை தண்ணுமை தழுவித் தூங்கக், கைவழி நயனம் செல்லக், கண் வழி மனமும் செல்ல, ஐய நுண் இடையார் ஆடும் ஆடகம் அரங்கு கண்டார்.

பொருள்: உண்டோ, இன்றோ, என்று கண்டோர் சந்தேகித்தற் கிடமான நுண்ணிய இடையை யுடைய நாட்டியப் பெண்கள், தேன் தாரை போல நீண்டு உருண்ட நரம்புகளின் இசையை ஒத்த இனிய ஓசை யுடையனவான அப் பெண்கள் வழங்குகின்ற நிரம்பா மென் சொற்களால் நிரம்பப் பெற்ற, ஆடும்போது பாடுகின்ற வாய்ப் பாட்டின் ஓசை தடவி வாசிக்கும் மகர வீணை ஓசையோடும் தட்டி முழக்கும் மத்தள நாதத் தோடும் பொருந்தி ஒலிக்க, அந்தப் பாட்டுக் கருத்துப் புலப்பட அவிநயிக்கும் கைபோன வழியே அக் கருத்தைக் குறிப்பிக்கும் பார்வையோடு கூடிய கண் போகவும், கண் போன வழியே கையோடு கண்ணைப் போகச் செய்த கருத்துத் தானும் போகவும் அந் நாட்டியப் பெண்கள் நருத்தனஞ் செய்கின்ற நாடக சாலையை அவர்கள் கண்டார்கள்.

நெய் - தேன். நெய் திரள் நரம்பு - தேன் தாரை போல உருட்சியான நரம்பு. 'நரம்பின் நான்ற தேன்.'—இக்காண்டம், அகலிகைப் படலம், 64 இங்கே 'நரம்பு' ஆகுபெயராய் அதன் ஓசையைக் குறித்தது. நரம்பின் - நரம்பின் ஓசைபோல. தந்த - (பாடிக்) கொடுத்த - பாடிய. தைவரு - (விரலால்) தடவுகின்ற. வீணை, ஆகுபெயராய் வீணையின் ஒலியைக் குறித்தது. தண்ணுமை ( - மத்தளம்), அதன் ஒலிக்கு ஆகுபெயர். ஐய நுண் இடையார் (உண்டோ இன்றோ வென்று) சந்தேகித்தற் குரிய மிகச் சிறிய இடையை யுடைய மாதர்; அழகை யுடைய மிகச் சிறிய இடையை யுடைய மாதர். ஐயம் - சந்தேகம். ஐ - அழகு. ஐய - அழகை யுடைய.

மனம், எல்லா அவயவங்க ளிடத்தும் சென்று, அவற்றோடு கூடி அவற்றைத் தொழிற் படுத்துவ தாதலால், அது, அவிநயக் குறி காட்டக் கையைச் செலுத்தி, கை வழியே கண்ணைச் செலுத்தி, கண் வழியே தானும் சென்றது, என்றார். (83)

### மாதர்கள் ஊஞ்ச லாடல்

**பூசலி னெழுந்த வண்டு மருங்கினுக் கிரங்கிப் பொங்க**
**மாசுறு பிறவி போல வருவது போவ தாகிக்**
**காசறு பவளச் செங்காய் மரகதக் கமுகிற் பூண்ட**
**ஊசலின் மகளிர் மைந்தர் சிந்தையோ டுலாவக் கண்டார் (84)**

கொண்டுகூட்டு: பூசலின் எழுந்த வண்டு, மருங்கினுக்கு இரங்கிப் பொங்க, மாசு உறு பிறவி போல வருவது போவது ஆகிக், காசு அறு பவளச் செம் காய் மரகதக் கமுகில் பூண்ட ஊசலில், மகளிர், மைந்தர் சிந்தையோடு உலாவக் கண்டார்.

பொருள்: ஊஞ்ச லாடும் மாதர்கள் அணிந்த பூமாலைகளி லிருந்து சண்டை யிட்டு, அந்தச் சண்டையினால் மே லெழும்பிய வண்டுகள், மாலைப் பாரத்தோடு தம் பாரமும் சேர்ந்தால், இடை முறிந்துவிடு மென்று, இடையின் மென்மைக்கு இரங்கி எழுந்தாற் போல எழா நிற்க, மாறி மாறி வரும் பிறப்புப் போலச் செல்லுவதும் திரும்புவது மாகிக் கமுக மரத்திலே பூட்டப்பட்டுள்ள ஊஞ்சலிலே யிருந்து அந்த மாதர்கள், தம் அழகிலே யீடுபட்டுத் தம்மை விட்டுப் பிரியாத ஆடவர் மனத் தோடு ஊஞ்சலாட, அவர்கள் கண்டார்கள்.

பூசல் - சண்டை. மருங்கு - இடை. இரங்கி - வருந்தி; கருணை செய்து. பொங்கல் - எழுதல்—புற, வெண். மா.; கிளர்தல்-பரிபா.; மேன் மேற் கிளர்தல்.—புறநா. மாசு - குற்றம். காசு - குற்றம். மரகதக் கமுகு - பச்சை (இலை)க் கமுகு; ஊசல் - ஊஞ்சல். மகளிர் உலாவ - மாதர் அலைய. (84)

### மாதர்கள் வீணை வாசித்தல்

**வள்ளுகிர்த் தளிர்க்கை நோவ மாடகம் பற்றி வார்ந்த**
**கள்ளென நரம்பு வீக்கிக் கண்ணொடு மனமுங் கூட்டி**
**வெள்ளிய முறுவ றோன்ற விருந்தென மகளி ரீந்த**
**தெள்விளிப் பாணித் தீந்தேன் செவிமடுத் தினிது சென்றார்**

கொண்டுகூட்டு: மகளிர், வள் உகிர்த் தளிர்க்கை நோவ மாடகம் பற்றி வார்ந்த கள் என நரம்பு வீக்கிக், கண்ணொடு மனமுங் கூட்டி, வெள்ளிய முறுவல் தோன்ற, விருந்து என ஈந்த தெள் விளிப் பாணித் தீம் தேன் செவி மடுத்து, இனிது சென்றார்.

பொருள்: வீணை வாசிக்கும் மாதர்கள், கூரிய நகங்களை

யுடைய தளிர் போலும் கை வருந்த வீணை முறுக் காணிகளைப் பிடித்து முறுக்கி, ஒழுகும் தேன்தாரை போன்ற நரம்பைக் கடுமைபட இறுகச் செய்து, கண்ணும் மனமும் ஒன்றுபடச் செய்து நோக்கி, சிறிதே வெண் பற்கள் தோன்றப் புன்னகை செய்து, விருந்துணவு போல அளித்த தெளிந்த இசைப் பாட்டாகிய இனிய தேனை, செவி வாயால் உண்டு அவர்கள் இனிதாகச் சென்றார்கள்.

வீணை வாசிக்கும் மாதர்கள், தாம் விருந் தூட்டுவோராக, கேட்போர் விருந்துண்போராக, விருந் தூட்டும் மன மகிழ்ச்சி வெளிப்பட உள் ளன்போடு நோக்குதலும் புன்னகையும் செய்து, வீணை வாசிப்பாகிய விருந்துணவை அவ் விருந்தினர் செவியாகிய வாயால் உண்ணும்படி செய்தாரென்பது கருத்து. வீணை வாசிப்போர்க்கு அவ் வாசிப்பால் இயல்பாக வுண்டாகும் மன மகிழ்ச்சியைக் காட்டும் இனிய பார்வையையும் புன்னகையையும், விருந்தினரை இனிது நோக்கிப் புன்முறுவல் புரிந்து இன்முகங் காட்டி உபசரிக்கும் குறிகளாகக் கவி ஆக்கிக் கொண்ட நயம் கவனிக்கத் தக்கது. (85)

சாளரங்களில் மாதர் முகச் சந்திரன்கள்

**வாளரம் பொருத வேலு மன்மதன் சிலையும் வண்டின்**
**கேளொடு கிடந்த நீலச் சுருளுஞ் செங்கிடையுங் கொண்டு**
**நீளிருங் களங்க நீக்கி நிரைமணி மாட நெற்றிச்**
**சாளரந் தோறும் தோன்றுஞ் சந்திர வுதயங் கண்டார் (86)**

கொண்டுகூட்டு : வாள் அரம் பொருத வேலும், மன்மதன் சிலையும், வண்டின் கேளொடு கிடந்த நீலச் சுருளும், செம் கிடையும் கொண்டு, நிரை மணி மாட நெற்றிச் சாளரம் தோறும் நீள் இரும் களங்கம் நீக்கித் தோன்றும் சந்திர உதயம் கண்டார்.

பொருள் : வேலும், வில்லும், வண்டுக ளோடு கிடக்கும் நீலமலர்ச் சுருளும், செங்கிடைச்சும் தன்னிடத்தே கொண்டு, மாளிகைகளின் முகப்புக்களில் உள்ள பலகணிகள் தோறும் தோன்றும் சந்திரோதயத்தை அவர்கள் கண்டார்கள்.

வாள் அரம் பொருத வேல் - ஒளியை யுடைய அரத்தினால் அராவப் பட்ட வேலாயுதம். பொருதல் - போர் செய்தல்; இங்கே தாற்பரியார்த்தமாக அராவுதலைக் குறித்தது. வண்டின் கேளொடு கிடந்த - வண்டின் உறவொடு கிடந்த - வண்டு மொய்க்கப்பட்டுக் கிடந்த. செம் கிடை - சிவந்த கிடைச்சு. நீள் இரும் களங்கம் - நீண்ட (காலமாக வுள்ள) பெரிய களங்கம். நிரை மணி மாட நெற்றிச் சாளரம் - வரிசையாகவுள்ள இரத்தின கசிதமான மாளிகைகளின் முன் பக்கத்தில் உள்ள பலகணிகள்.

மாதர் முகத்துக்குக் களங்கம் நீங்கிய சந்திரனும், அவர்கள் கண்ணுக்கு வேலும், நெற்றிக்கு வில்லும், முடித்த கூந்தலுக்கு நீல மலர்ச் சுருளும், இதழுக்குச் செங்கிடைச்சும் உவமம். பலகணி வழியாகத் தெருவில் நிகழ்பவைகளைப் பார்க்கும் மாதர் முகங்கள் தோன்றுதலைச் சந்திரோதயமென வியப்பும் நயப்பும் உறும்படி கூறினர். சந்திரன் ஒன்றே. அதுவும் பகலில் ஒளி மழுங்குந் தன்மை யுள்ளது. அன்றிக் களங்க முடையது. அவ்வாறிருக்கவும், பகலிலே ஒளி கெடாத களங்கமில்லாத பல சந்திரன்கள் உதயமாயின என்ற புதுமை நயம் பாராட்டத் தக்கது. (86)

### மாதர்கள் பந்தாடுங் காட்சி

**மெய்வரு போக மொக்க வுடனுண்டு விலையுங் கொள்ளும்**
**பைஅர வல்கு லார்த முள்ளமும் பளிங்கும் போல**
**மையரி நெடுங்க ணோக்கம் படுதலுங் கருகி வந்து**
**கையுறச் சிவந்து காட்டும் கந்துகம் பலவுங் கண்டார் (87)**

கொண்டுகூட்டு : மெய் வரு போகம் ஒக்க உடன் உண்டு விலையும் கொள்ளும் பை அரவு அல்குலார் தம் உள்ளமும் பளிங்கும் போல மை அரி நெடும் கண் நோக்கம் படுதலும், கருகி வந்து கை உறச் சிவந்து காட்டும் கந்துகம் பலவும் கண்டார்.

பொருள் : காம இன்பத்தை ஆடவரோடு தாமும் சமமாக அநுபவித்தும் அதிகமாக அவ் இன்பத்துக்கு விலையையும் வாங்கிக் கொள்கின்ற விலைமாதர் மனத்தையும், பளிங்குக் கல்லையும் போல, மாதர்களுடைய கருமையான கண்பார்வை படக் கறுத்தும், அவர்களுடைய சிவந்த கை படச் சிவந்தும், தம்மைச் சார்ந்த பொருளின் நிறமாகத் தம் நிறத்தை மாற்றிக் காட்டும் பந்துகளை மாதர் ஆடுதலை அவர்கள் கண்டார்கள்.

மெய் வரு - (ஐம் புல நுகர்ச்சிக் கிடமான) உடம்பினால் வருகின்ற. ஒக்க - ஏற்றம் தாழ்வு இல்லாமல். உடன் உண்டு - கூட அநுபவித்து. 'பை அரவு அல்குலார்' என்பதை 'அரவுப் பை அல்குலார்' எனக் கூட்டிப் 'பாம்பின் படத்தை யொத்த அரையை யுடையார் (ஆகிய வேசியர்)' எனப் பொருள் கொள்க. அரை, நிதம்பம், அல்குல் என்பவை ஒரு பொருள் குறித்தவை. —உரி. நிக. 57. கடிதடம், நிதம்பம், அரையே, அல்குல்.—பிங்கலம், 1002. இந்தச் சொற்கள், 'ஜனனேந்திரியத்துக்கு மேலாக வுள்ள அவயவம்' என்ற பொருள் குறித்தவை. ஆன்றோர், மாதர் அல்லது மைந்தர்களுடைய அவயவ வருணனை செய்யு மிடங்களில் வரும் இச் சொற்கள், சாதாரணமாகக் கருதப்படுகிறபடி, இடக்கரடக்கற்

பொருள் குறிப்பன வல்ல. 'அல்குல், கடிதடம்,' என்னும் பதங்கள் ஆண் மக்களை வருணிக்கு மிடத்தும் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. 'பூந் துகில் சேரல்குல் காமரெழில்' எனத் தசரதன் ராமனை நோக்கிப் புலம்புவ தாகக் குலசேகராழ்வார் கூறுகின்றார். தவ நிலையில் நின்ற அருச்சுனனும், வேட வடிவங் கொண்டு வந்த சிவபெருமானும், மற்போர் செய்கின்ற காலத்தில், கடிதடத்தாலும் மற்போர் செய்தாரென்று வில்லிபுத்தூரார் கூறுகின்றார்'. —செந்தமிழ் 20-வது தொகுதி, 3-வது பகுதி, பக்கம் 225-6.

வேசியர், தம்மை யடைந்த ஆடவர்பால் காதல் இல்லாராயினும், உடையார் போல நடித்தலால், அவர் மனத்தில் இல்லாத காதல் உள்ள தாகத் தோன்றும்; பளிங்குக் கல்லை அடுத்த பொருளின் நிறம் அக்கல்லில் இல்லையாயினும், உள்ளதாகத் தோன்றும்; அவ்வாறே பந்துகளைச் சேர்ந்த மாதர் கண்ணிறம் கைந்நிறங்கள் அப் பந்துகளில் இல்லாதிருந்தும் உள்ளனவாகத் தோன்றின, என்றார். இப் பாட்டின் முதலடிக் கருத்துப் பின்வரும் பாட்டில் இனிதெடுத்தாளப் பட்டிருப்பது காண்க:

அலை விழிக் கணிகை மாதர் ஆடவர் தமக்கு நல்கும்
இலை நிகர் எனும் இன்பத்திற்கு இன்பமும் சமமாக் கொண்டு
விலை என நிதியும் கோடல் வியப்பிற்றே! ஏற்றம் ஆக,
மலை நிகர் தனங்கள் ஈந்தோர் மலை நிகர் தனமும் கொள்வார்.
—காஞ்சிப் புராணம், நகரப் படலம், 54 (87)

### மூவரும் சீதையைக் காணல்

**பொன்னின் சோதி போதினி னாற்றம் பொலிவே போற்**
**றென்னுண் டேனிற் றீஞ்சுவை செஞ்சொற் கவியின்பங்**
**கன்னிம் மாடத் தும்பரின் மாடே களிபே டோ**
**டன்னம் மாடு முன்றுறை கண்டங் கயனின்றார் (88)**

கொண்டுகூட்டு: (மூவரும்) கன்னி மாடத்து உம்பரின் மாடே களி பேடோடு அன்னம் ஆடும் துறை முன், பொன்னின் சோதி போதின் இன் நாற்றம் தென் உண் தேனின் தீம் சுவை செஞ் சொற் கவி(யின்) இன்பம் பொலிவே (- பொலிதலே) போல் (சீதையைக்) கண்டு அங்கு அயல் நின்றார்.

**பொருள்:** விசுவாமித்திர இராம லக்குமணர், கன்னியா மாடத்து மேடையிலே, களிக்கின்ற பெண் அன்னங்களோடு ஆண் அன்னங்கள் விளையாடும்படி அம்மேடையில் அமைக்கப் பட்டிருந்த தடாக நீர்த் துறை முன்னே, பொன்னினது ஒளியும் வண்டுகள் உண்ணும் தேனினது இனிய சுவையும் திருத்தமான சொற்களாலமைந்த பாட்டினது இன்பமும் ஆகியவை அனைத்

தும் ஓர் உருக் கொண்டு விளங்குதல் போலும் சீதையைக் கண்டு பிரமித்து, அவளைக் கண்ட அந்த இடத்திலே, அந்த மாடத்துக்கு அருகே நின்றார்கள்.

பொன்னொளி, பூமணம், தேன் சுவை, கவி யின்பம், உவமானங்கள்; சீதை உவமேயம். கூறப்பட்ட உவமானங்களிலிருந்து கூறப்படாத உவமேயம் பெறப்பட்டது. போதின் இன் நாற்றம் - பூவின் இனிய மணம். பொலிவு - சிறத்தல். பொலிவே போல் - சிறத்தல் போன்ற - சிறப்புடைய. 'பொலிவே போல்' என்பதை, சோதி பொலிவே போல், நாற்றம் பொலிவேபோல், சுவை பொலிவே போல், இன்பம் பொலிவே போல், எனக் கூட்டிப் பொருள் கொள்க. இயல்பாக இரண்டாம் அடியின் இறுதியில் நிற்றற்பாலதாகிய 'பொலிவே போல்' என்பது, செய்யுளாத லால் முறை பிறழ்ந்து முதலடியின் இறுதியில் நின்றது. (சீதையைப்) பொன்னின் சோதி, போதின் நாற்றம், தேனின் சுவை, கவி(யின்) இன்பம் (ஆகியவை ஒருங்கே திரண்டு ஓர் உருவாய்ப்) பொலிவு ( - பொலிதல்) போலக் கண்டு நின்றார், என முடிக்க.

தென் உண் தேனின் தீம் சுவை - வண்டு உண்ணும் தேனின் இனிய உருசி. எதுகைக்கு இயையத் 'தேன்' (- வண்டு) 'தென்' ஆயினது. இவ்வாறு நெட்டெழுத்துக் குற்றெழுத்தாக்கப் பட்டிருப்பது அரிதாகச் செய்யுளிற் காணப்படும். 'தீயேன்' 'கூறினும்' என்பவை யிரண்டினும் முதல் நெட்டெழுத்துக் குறுக்கப்பட்டு, முறையே, 'திருத்தார் நன்றென் றேன் தீயேன்' என நன்னூல் 5-ம் சூத்திர உதாரணத்தினும், 'கோலாற் கடாய்க் குறினும்' என நாலடியாரினும் வருதல் காண்க. 'தென், உண் தேன்' என்பதற்கு அழகு பொருந்திய தேன் என்றும் பொருள் கூறலாம். மாடத்து உம்பரின் மாடே - மாடத்தின் மேல் இடத்தில்-மேல் மாடியில் - மேடையில். உம்பர் - மேல். மாடு - இடம். பேடு - பெட்டை (அன்னம்). ஆடல் - விளையாடல். 'முன் துறை' என்பது 'துறை முன்' என்ற பொருளில், மணிமேகலையினும், ஐங்குறுநூற்றினும், பரிபாடலினும், கலித்தொகையினும் வருகின்றது. (ஷை நூல்களின் அரும்பதவுரை பார்க்க.) 'கன்னிம் மாடம்' 'அன்னம் மாடும்' என்பவைகளில் எதுகை பற்றி மகர ஒற்றுக்கள் மிகுக்கப்பட்டன.

'துறைக் கண்டு' எனற்பாலது இன் னோசைப் பொருட்டு 'துறை கண்டு' எனப் பட்டது. அங்கு - (சீதையை எந்த இடத்தி னின்று கண்டார்களோ) அந்த இடத்திலே. அயல் - (கன்னியா மாடத்துக்கு) அருகே. 'ஏ' இரண்டும் அசைகள். முதல் 'ஏ' தேற்றமாகவும் கொள்ளலாம். மேடையிலே தடாகம் அமைக்கப்பட்டிருந்த தென்றது, சில நூற்றாண்டுகளுக்கு முன் தென் ஐரோப்பாவை அரசாண்டவரும், இக்காலத்திய ஐரோப்பிய நாகரிகத்துக்கும் சாஸ்திரத்துக்கும்* நேர் கார

* Science.

ணருமான மோரியர் † தொங்கு தோட்டங்கள் ‡ அமைத்திருந்தார்க ளென்று சரித்திரக்காரர் கூறுவதை நினைவுறுத்துகின்றது.

இப் பாட்டினுள், பின்னிரண்டடிகட்குப் பேதப்பட்ட பல உரைகள் உள்ளன. அவை வருமாறு —

'*கந்நிகா மாடத்தி னருகில் அன்பின் மிக்க பெட்டை யன்னங்களுடன் ஆணன்னங்கள் கூடி விளையாடாநின்ற முன்றில்களைப் பார்த்து அவ் விடத்துச் சமீபமாய் நின்றார்கள்.*'— இ. நா.

'கன்னிமாடத்தின் மேலிடத்தில் (சீதாபிராட்டி வீற்றிருக்கிறாள்). இளமை மிகுந்த பெட்டை அன்னங்களோடு ஆணன்னங்கள் விளையாடு கின்ற முன்னிடத்தைப் பார்த்து அவ்விடத்துக்குப் பக்கத்தில் நின்றார்.'

'உபமானத்திற் கேற்ப உபமேயம் வருவிக்கப்பட்டது. "களி பேடோ டன்ன மாடும்" என்பதை உபமேயமாகக் கொள்ள லாகாதோ வெனில், சீதாபிராட்டி வீற்றிருத்தலை யாண்டு மோதாமையானும், "அன் றம்மாடத் தும்ப ரளிக்கும் மருதன்னாள்" என்று இம்மாடத்தைச் சுட் டிக் கூறினமையானும் அன்னத்தைக் கொள்ளலாகாதென்க'. —து. மூ.

'பொன்னின் சோதியை, நாற்றத்தை, சுவையை, இன்பத்தை முன் றுறைக்கு அயல் மாடத்து உம்பரின்மாடே கண்டு நின்றார் என்க. சோதி, நாற்றம், சுவை, இன்பம் என்னும் நான்கும் சீதையைச் சுட்டி நின்றன. "*பொன்னி னொளி பூவின் வெறி சந்து பொதிசீதம்—மின்னி னிழ லன்ன* வள்" என்பர் பின்னும் (கோலங்காண்-28). "அன்ன மாடுறையுளுக் கருகுநின் றாளையக் - கன்னிமா டத்திடைக் கண்டதும்" என்பர் பின்னும் (நாடவிட்ட.67)'—அ. கு.

'பொன்னும் (அதனிடத்து) ஒளியும், பூவும் (அதனிடத்து) நறு மண மும், அழகும், வண்டுகள் உண்ணும்படியான தேனும், (அதனிடத்து) இனிய உருசியும், திருத்தமான சொற்களினா லமைந்த செய்யுளும் (அதனிடத்து) இரசமும் போல (ஒன்றை யொன்று விட்டுப்) பிரியாமல், (அன்பிலே) மிகுந்த பெட்டை யன்னங்களுடனே ஆண் அன்னங்கள் கூடி விளையாடப் பெற்ற கன்னி மாடத்தினது மேலிடத்தின், முன் பக்கத்தைப் பார்த்து (மூவரும்) அவ்விடத் தருகிற் சென்று நின்றார்கள்.'-வை.மு.கோ.

கதாநாயகிக்கு இப் பாட்டிற் கூறிய உவமானங்களிற் சிலவற்றோடு, வேறு சில உவமானங்களை இனிமை மிகும்படி கலந்து கூறுவது, பின் வரும் சுப்பிரமணிய பாரதியார் 'குயிற் பாட்டு'ப் பகுதி —

. . . . கவிதைக் கனி பிழிந்த
சாற்றி னிலேபண்கூத் தெனுமிவற்றின் சாரமெலாம்
ஏற்றி யதனோடே இன் னமுதைத் தான்கலந்து
காதல் வெயிலிலே காயவைத்த கட்டியினால்
மாதவளின் மேனி வகுத்தான் பிரம னென்பேன்.

---

† Moors. ‡ Hanging gardens (vide Draper's Intellectual Development of Europe).

இங்கே சீதையை விசுவாமித்திர முனிவனும் இராம லக்குமணரும் பார்த்த பார்வை சாதாரணமாக ஒருவரை ஒருவர் பார்க்கும் பொதுப் பார்வை யென்பதும், கீழ் 98-ம் பாட்டில் 'அண்ணலும் நோக்கினன் அவளும் நோக்கினள்' என்ற இடத்தில் இராமனும் சீதையும் ஒருவரை யொருவர் பார்த்த பார்வை காதற் பார்வை யென்பதும் கவனிக்கத் தக்கவை.

கவி, கதா நாயகிக்கு உவமானமாகக் கூறிய பொருள்களெல்லாம் மிக இனிய பொருள்களிற் சிறந்தவைகளா யிருப்பதும், அவைகளை அடுக்கிக் கூறி முடிவில் அவற்றின் மகுடமாகச் செஞ்சொற் கவி யின்பத்தைக் கூறி யிருப்பதும், சொல் நயம், பொருள் நயம் ஒருங் கமைந்து இனிமை மிகுந்த அரிய கவிகளை ஆழ்ந்து ஆராய்ந்து அறிந்து அநுபவித்து ஆனந்திக்கும் அறிவாளர்க்கு அளவிறந்த அகமகிழ்ச்சியை அளிப்பனவாம். இது வரையும் மிதிலை நகரிலே பல இனிய காட்சிகளைக் கண்டுகொண்டு ஓரிடத்தும் நில்லாமற் சென்றவர்கள், இப்போது சீதாபிராட்டியைக் கண்ட காட்சி நிகழ்ந்த இடத்தில் நின்றாரென்றதனால், அந்தக் காட்சி தன்னைக் காணலுற்றார் அவசமாய்ப் பிரமித்து நிற்கச் செய்யும் நனியினிய அதி யற்புதக் காட்சியாமென உய்த்துணர வைத்தார்; அன்றி, நின்றவர் சென்றா ரென்றால், சென்றவர் காணும் வேறு காட்சிகள் கூறற் பாலனவாய், இப்போது பிண்டமாகக் கூறிய கதா நாயகி வருணனை விரிவாய்க் கூறற் கியலாதா மாதலால், அவ்வாறு விரித்துக் கூறுதற்கு அவகாசம் அமைத்துக் கோடலும் செய்தாரென்க.

பாட பேதம்: சோதிப்போதினின், தேறற் றீஞ்சுவை, இன்னுண் டேனிற், கழி பேடு (88)

சீதை வருணனைக்கு முகவுரை

**செப்புங் காலைச் செங்கம லத்தோன் முதல்யாரும்**
**எப்பெண் பாலுங் கொண்டுவ மிப்போ ருவமிக்கும்**
**அப்பெண் டானே யாயின போதிங் கயல்வேறோர்**
**ஒப்பெங் கேகொண் டெவ்வகை நாடி யுரைசெய்வேம் (89)**

கொண்டுகூட்டு: செப்புங்காலை, செங் கமலத்தோன் முதல் யாரும், எப் பெண்பாலும் கொண்டு உவமிப்போர் உவமிக்கும் அப்பெண் தானே (சீதை) ஆயினபோது (அவளுக்கு) இங்கு அயல் வேறு ஓர் ஒப்பு எவ்வகை நாடி எங்கே (கண்டு) கொண்டு உரை செய்வேம்?

பொருள்: பிரம தேவன் முதலிய யாவரும் தாம் வருணிக்க எந்தப் பெண்ணை யாயினும் எடுத்துக் கொண்டு, அவளுக்கு ஒப்புக்கூற நிற்போர் ஆனபோது, தாம் தாம் குறித்த பெண்ணுக்கு ஒப்பாகக் கூறும் அந்தப் பெண் ஆகிய இலக்குமி தேவி தானே

யாம் ஒப்புக் கூறவேண்டிய சீதை ஆகி யிருக்கின்றதனுல், அவளுக்கு அந்நியமான வேருேர் ஒப்பை எப்படித் தேடி எங்கே கண்டு கொண்டு யாம் கூறுவேம்.

செப்புங் காலை - சொல்லுங்கால் - சொல்லுமிடத்து. செங்கமலத் தோன் - பிரமன். பெண்பால் - பெண். உவமித்தல் - ஒப்புக் கூறுதல். அயல் - அந்நியமானது. உரை செய்வேம், கவிகளுக் குரிய பன்மை.

கம்பர், 'கவிஞ ரெல்லாரும் தத்தம் காவிய நாயகிகளுக்கு உவமை கூறுதல் முறை. அந்த முறை எனக்கும் வந்தது. அம் முறையை நிறைவேற்ற என்னு லியல வில்லை. ஏனெனில், அவர்க ளனைவரும் தத்தம் காவிய நாயகிகளுக்கு இலக்குமி ஒப்பென உவமித்தல் இயல்பாகவும், இயைபாகவும் இருந்தது. அந்த இலக்குமியே இந்தக் காவிய நாயகியா யிருக்கும்போது, அவளுக்கு வேறுவமை யாதுளது? எங்குளது? அதனை எப்படித் தேடிக் கண்டு பிடித்து, யான் முறைப்படி கூற வேண்டிய உவமையைக் கூறி முடிப்பது? சொல்லுங்கள்' என்று அவையோரை நோக்கிக் கூறியதாக உள்ளது இந்தக் கவி. இதன் பிண்டப் பொருள், 'சீதைக்கு உவமை வேறில்லை, அவள், தானே உவமை தனக்கு' என்பது.

இப் பாட்டுடன் இதனடியில் வரும் பாட்டு ஒப்பு நோக்குதற் குரியது—

அன்னது தானே ஆகும் அண்ணலே பாண்டி வேந்தாய்
இந் நகர்க் கரசன் ஆவான் இக்கவிக் கிறைவன் ஆவான்
தன் நிகர் உயர்ச்சி இல்லான் காப்பியத் தலைவ னுக
முன்னவர் மொழிந்த தேனுேர் தமக்கெலாம் முகம னன்றே (89)

**சீதை வருணனை**

**உமையா ளொக்கும் மங்கைய ருச்சிக் கரம்வைக்கும்**
**கமையாண் மேனி கண்டவர் காட்சிக் கரைகாணுர்**
**இமையா நாட்டம் பெற்றில மென்ரு ரிருகண்ணுல்**
**அமையா தென்ரு ரந்தர வானத் தவரெல்லாம் (90)**

**கொண்டுகூட்டு:** உமையாள் ஒக்கும் மங்கையர் உச்சிக் கரம் வைக்கும் கமையாள் மேனி கண்டவர், காட்சிக் கரை காணுர், 'இமையா நாட்டம் பெற்றிலம்' என்ருர். அந்தர வானத்தவ ரெல்லாம் 'இரு கண்ணுல் அமையாது' என்ருர்.

**பொருள்:** சீதையின் திருமேனி அழகைக் கண்டவர்கள் தாம் கண்ட காட்சிக் கடற்குக் கரை காணுர் ஆக, அவர்களுள், மண்ணவர்கள், 'இக் காட்சியை இடை விடாமல் நோக்கிக் கொண்டிருக்க, விண்ணவர் போல, இமையாத கண்கள் பெற்

றிருந்தே மில்லையே' என்றூர்கள். விண்ணவர்கள், 'இக்காட்சி இரண்டு கண்களால் பார்த்தற்கு அடங்காது' என்றூர்கள்.

உச்சிக் கரம் வைக்கும் கமையாள் - தலையிற் கை வைத்துத் தொழு தற் குரிய (சிறந்த) பொறுமை யுடையாள். சீதை, ஒருவர் வயிற்றினும் பிறவாததனுல், 'அயோநிசை' என்ற பெயர் படைத்து, 'அகழ்வாரைத் தாங்கும் நிலம்' என்று கூறும்படி பொறுமைக்குச் சிறந்த உவமான மான பூமியி னின்று தோன்றி, பின்னுளில், இலங்கையிலே, சிறையி லிருந்த காலத்தில் அநுமானை நோக்கி,

'அல்லல் மாக்கள் இலங்கைய தாகுமோ
எல்லை நீத்த உலகங்கள் யாவும் என்
சொல்லினுற் சுடுவேன்; அது தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசென்று வீசினேன்'*

என்று கூறிய அறக் கற் புடைய பொறுமைசாலி யாதலால், 'கமையாள்' என்றது மிகப் பொருத்தமானது.

இரு கண்ணு லமையாது என்பதனேடு பின் வரும் கார்முகப் படலக் கவி கருத் தொற்றுமை யுடையதா யிருத்தல் காண்க—

நம்பியைக் காண நங்கைக் காயிர நயனம் வேண்டுங்
கொம்பினைக் காணுந் தோறுங் குரிசிற்கு மன்ன தேயால்
தம்பியைக் காண்மி னென்பார் தவமுடைத் துலக மென்பார்
இம்பரிந் நகரிற் றந்த முனிவனை யிறைஞ்சு மென்பார். (90)

**வென்றம் மானைத் தாரயில் வேலுங் கொலைவாளும்**
**பின்றம் மானப் பேர்கய லஞ்சப் பிறழ்கண்ணுள்**
**குன்றம் மாடக் கோவி னளிக்குங் கடலன்றி**
**அன்றம் மாடத் தும்ப ரளிக்கு மமுதன்னுள் (91)**

கொண்டுகூட்டு: அம் மானை வென்று, தார் (அணிந்த) அயில் வேலும் கொலை வாளும் பின்றப் பேர் கயல் அஞ்சப் பிறழ் மானக் கண்ணுள், குன்றம் ஆடக் கோவின் அளிக்கும் கடல் அன்றி அன்று அம் மாடத்து உம்பர் அளிக்கும் அமுது அன்னுள்.

பொருள்: சீதை, கடல் கொடுத்த அமுதம் அல்லாமல் மாடம் கொடுத்த அமுதம் போன்றுள்.

அம் மானை வென்று - அழகிய மானைச் செயித்து. தார் அயில் வேல் - (வெற்றி) மாலை (அணிந்து) கூர்மை (பொருந்திய) வேலாயுதம். பின்ற - (கொலைத் தொழில்) பிந்த. பேர் கயல் அஞ்சப் பிறழ் மானக் கண்ணுள் - பெயர்கின்ற (தன்மை யுடைய) கெண்டை மீன் அஞ்சும்படி பிறழ்கின்ற பெரிய கண்களை யுடையாள். குன்றம் - (மந்தர) மலை.

*சுந்தர காண்டம், சூளாமணிப்படலம்—18

கோ - அரசன் ; பெருமையிற் சிறந்தோன் ; இங்கே திருமாலைக் குறித்தது. கோவின் அளிக்கும் கடல் - திருமாலினுற் (பள்ளி கொள்ளப்பட்டுக்) காக்கப்படும் (பாற்) கடல் : 'எழுதும் ஓலை' என்பது எழுதப்படும் ஓலையென்று பொருள் படல் போல, 'அளிக்கும் கடல்', அளிக்கப்படும் (காக்கப்படும்) கட லெனப் பொருள் படநின்றது. 'கோவின் - கோ என்ற ஆரவாரத்தோடு'. (91)

பெருந்தே ரல்குற் பெண்ணிவ ளொப்பா ளொருபெண்ணைத்
தருந்தா னென்ருல் நான்முக னின்னும் தரலாமே
அருந்தா வந்தத் தேவரி ரந்தா லமிர்தென்னும்
மருந்தே யல்லா தென்னினி நல்கும் மணியாழி (92)

கொண்டுகூட்டு : பெரும் தேர் அல்குற் பெண் இவள் ஒப்பாள் ஒரு பெண்ணை நான்முகன் தரும் தான் என்ருல், இன்னும் தரலாம் ; (அமுதத்தை) அருந்தா (அருந்திவிட்டு) அந்தத் தேவர் இரந்தால், மணி ஆழி மருந்தே அல்லாது இனி என் நல்கும் ?

பொருள் : தான் படைத்த சீதையை ஒப்பவள் ஆக வேறு ஒரு பெண்ணைப் பிரமதேவன் தருவா னென்ருல், அவன் இன்னமும் தரலாம் : அப்படித் தருவது, தன்னையே தான் ஒத்த சீதையை யன்றி வேருெரு பெண்ணை யன்று. இது எதுபோலெனில், தான் கொடுத்த அமுதத்தைச் சாப்பிட்டுவிட்டுத் தேவர்கள் தன்னிடம் வந்து 'முன் கொடுத்த அமிழ்தத்தைப் போன்ற வேருேர் அமிழ்தம் தா' என்று இரந்தால், கடல், அமிர்தத்தையே கொடுப்ப தல்லாமல் அமிழ்தை யொத்த பொருள் அமிழ் தன்றி வேறின்மையால், வேறு எதனைக் கொடுக்கும் ?

பெரும் தேர் அல்குல் பெண் - பெரிய தேர்(த்தட்டினை ஒத்த) அரை (யையுடைய) பெண். தரும் - தருவான். தான், அசை. அருந்தா - அருந்தி - புசித்து. அமிர் தென்னும் மருந்து - அமிர் தென்று சொல்லப் படுகின்ற (சாவைத் தடுக்கும்) மருந்து. என் - யாது. மணி - இரத்தினம், அழகு. ஆழி - கடல்.

'அல்லாது' என்பதன் முன் 'நல்குதல்' என்ற சொல்லை (ப் பின் வரும் 'நல்கும்' என்பதற்குப் பொருத்தமாக) வருவித்துக் கொண்டு பொருள் காண்க.

உணவுப் பொருள்களுள் அமிழ்தத்தை ஒத்தது வேறு இல்லாதது போல, மாதருள்ளே சீதையை யொத்தார் வேறு இலர், என்பது கருத்து. (92)

**மலர்மே னின்றிம் மங்கையில் வையத் திடைவைகப்**
**பலகா லுந்தம் மெய்ந்நனி வாடும் படிநோற்றார்**
**அலகோ வில்லா வந்தண ரோநல் லறமேயோ**
**உலகோ வானோ வும்பர்கொ லோவீ துணரேமால் (93)**

**கொண்டுகூட்டு:** இம் மங்கை மலர் மேல் நின்று இவ்வையத் திடைவைக, பலகாலும் தம் மெய் நனி வாடும்படி நோற்றார், அலகோ இல்லா அந்தணரோ? நல் அறமேயோ? உலகோ? வானோ? உம்பர் கொலோ? ஈது உணரேம்.

**பொருள்:** இந்தப் பெண் தான் வாழும் தாமரை மலர் மேலிருந்து இறங்கி இந்த உலகத்திலே தங்கும்படியாக, பல முறை தம் உடம்பு மிகவும் வாடும்படி தவஞ் செய்தவர்கள் அந்தணர்களோ? தரும தேவதையோ? மண்ணுலகோ? விண்ணுலகோ? பிரமாதி தேவர்களோ? என்பதை யாம் அறியேம்!

வையத்திடை - பூமியில். வைக - தங்க. அலகு - அளவு. ஓ, அசை. சீதை (பின் நாளில்) இலங்கையிலே சிறை யிருந்ததனால் இராவணாதி இராக்கதர் நாச மடையப் பாவம் தாழப், புண்ணியம் ஓங்க, அந்தணர் முதலிய மண்ணுலகத்தோரும் பிரமதேவர் முதலிய விண்ணுலகத்தோரும் உய்ந்தார்க ளாதலால், இவர்களில் எவர் செய்த புண்ணியத்தினால் இலக்குமிதேவி சீதையாகப் பூமியில் அவதரித்தாளோ? தெரியேம், என்றார். எல்லாரும் செய்த புண்ணியத்தின் பயனாக அவதரித்தாள் என்பது போந்த பொருள். (93)

**தந்நே ரில்லா மங்கையர் செங்கைத் தளிர்மானே**
**அன்னே தேனே யாரமிர் தேயென் றடிபோற்றி**
**பொன்னே முன்னே மொய்ம்மலர் தூவி முறைசாரப்**
**பொன்னே சூழும் பூவி னொதுங்கிப் பொலிகின்றாள் (94)**

**கொண்டுகூட்டு:** (சீதை) தம் நேர் இல்லா மங்கையர், 'தளிர்ச் செங்கை மானே! அன்னே! தேனே! ஆரமிர்தே!' என்று அடி போற்றி, முன்னே முன்னே மொய் மலர் தூவி, முறை சாரப், பொன் சூழும் பூவின் ஒதுங்கிப் பொலிகின்றாள்.

**பொருள்:** சீதை, செவிலித் தாயர் முதலிய மாதர்கள், 'மானே! தேனே! அமுதே! அம்மே!' என்று அருமையாகக் கூறி அழைத்து, 'இந்தப் பூத் திரள் மேல் நடப்பாயாக,' 'இந்தப் பூத் திரள் மேல் நடப்பாயாக,' என்று சொல்லிக் கொண்டு அவள் பாதங்கள் நோவாமற் காப்பதற்காக அவள்

செல்லும் வழிக்கு முன்னாக முன்னாகத் திரளான மலர்களைச் சொரிந்து கொண்டு முறையாகப் பக்கத்திலே வர, அந்தப் பூத் திரள் மேல் நடவா நின்று விளங்குகின்றாள்.

அன்னே - அன்னையே - தாயே. ஆரமிர்து - அருமையான அமிழ்தம். அடி போற்ற மலர் தூவி - (சீதையின்) பாதங்கள் நோவாமற் காக்கும்படி (அவள் செல்லும் இடங்களிலே) பூச் சொரிந்து. முறை சார - முறை யாக அடுத்து வர. பொன்னே சூழும் - அழகுபொருந்திய. ஏகாரம், அசை. பூவின் - (தூவிய) பூமேல். ஒதுங்கி - நடந்து.—பத்துப்பா : - சென்று. —பரி பா. அடி. 18. பொலிகின்றாள், சரித்திர நிகழ்கால வினை. (94)

**கொல்லும் வேலுங் கூற்றமு மென்னும் மிவையெல்லாம்**
**வெல்லும் வெல்லும் மென்ன மதர்க்கும் விழிகொண்டாள்**
**சொல்லுந் தன்மைத் தன்றது குன்றுஞ் சுவருந்திண்**
**கல்லும் புல்லுங் கண்டுரு கப்பெண் கனிநின்றாள் (95)**

கொண்டுகூட்டு : (சீதை,) கொல்லும் வேலும் கூற்றமும் என்னும் இவை எல்லாம் வெல்லும் வெல்லும் என்ன மதர்க்கும் விழி கொண்டாள். (அது) சொல்லும் தன்மைத்து அன்று ; (ஏனெனின்) குன்றும், சுவரும், திண் கல்லும், புல்லும் கண்டு உருகப், பெண் கனி நின்றாள்.

பொருள் : சீதை, கொல்லுகின்ற வேலும் கூற்றும் என்று சொல்லப்பட்ட இவை முதலிய கொலை செய்வன எல்லாவற்றை யும் நிச்சயமாக வென்றுவிடு மென்று சொல்லும்படி களிக்கின்ற கண்களைக் கொண்டாள். அவ்வாறு கொண்டது இன்ன தென்று புலப்படும்படி சொல்லக்கூடிய தன்மைய தன்று. அவள், பெரிய மலையும், சிறிய சுவரும், வன்மையான கல்லும், மென்மையான புல்லும், முதலிய எல்லாப் பொருள்களும் கண்டு உருகும்படி பெண் நலம் கனிந்த கனியாக நின்றாள்.

சீதையைக் காணும் சேதன ராகிய மாதரும் சேதன சிரேட்ட ணாகிய இராமனும் எவ்வளவு இன்ப மடைவா ரென்பதை மனத்தினாற் பாவித்துக் கொள்ளுமாறு அடுத்த பாட்டிற் கூறுவதற்குப் பூர்வ பீடிகையாக, இப் பாட்டில், மலை முதலிய அசேதனங்களே 'கண்டுருகப் பெண் கனி நின் றாள்' என்றார். சேதனர் - அறிவுடையோர். அசேதனம் - அறிவில் லாதது. (95)

**வெங்களி யினுக்கொரு விழவு மாயவர்**
**கண்களிற் காணவே களிப்பு நல்கலான்**
**மங்கையர்க் கினியதோர் மருந்து மாயவள்**
**எங்கணு யகற்கினி யாவ தாங்கொலோ (96)**

கொண்டுகூட்டு : மங்கையர்க்கு வெம் களியினுக்கு ஒரு விழவும் ஆய் அவர் கண்களில் காணவே களிப்பு நல்கலால், (அவர்க்கு) இனியது ஓர் மருந்து ஆயவள், எங்கள் நாயகற்கு இனி யாவது ஆம் கொலோ !

பொருள் : கண்டு களித்தற்கு ஒரு திருவிழாவும் ஆகி, மாதர்கள் கண்களாற் கண்ட அளவிலேயே களிப்பை அளிப்ப தால் அவருக்கு இனிய அமிர்தமும் ஆகிய சீதை இராமனுக்கு வேறு எப்பொரு ளாவளோ !

வெம் களி - விருப்பமான களிப்பு. விழவு - திருவிழா. அவர், மூன் ரும் அடியில் வரும் மங்கையரைச் சுட்டியது. ஓர் - ஒப்பற்ற. மருந்து - அமிர்தம். இனி - மற்று.—உரி. நிக., 160. யாவது - யாது. ஆம் - ஆவாள்.

முந்திய பாட்டில் மலை முதலிய பொருள்களுக்குச் சீதை கனி யாரு ளென்று, இந்தப் பாட்டில் மாதருக்குக் கனியினு மினிய அமிழ்த மாரு ளென்று, அமிழ்தினு மினிய பொருளின்மையால் இராமனுக்கு எப்பொரு ளாவளோ என்றதனுல் அமிழ்தினும் இனியவளாயினு ளென்பதை இனிது புலப்படுத்தினுர்.

' வெங்களிவிழிக்கு ' என்ற பாடம் கொண்டால், அதற்கு (மாதரது) விருப்பத்தைத் தருகின்ற களிக்கின்ற கண்க ளெனவும், அதற்குப் பொருத்தமாக ' அவர் கண்களிற் காணவே ' என்பதற்கு அவர்களுடைய அந்தக் கண்களாற் கண்ட மாத்திரையே எனவும் பொருள் கொள்க.

சீதை, அவளைக் காண்பாருள் அவளைப் போலப் பெண்பாலா யுள்ளார்க்கு அமிழ்தம் போல இனியளா யிருந்தாளாதலால், ஆடவருக்கு அதிகமாக இனியளா யிருந்தாளென்பது கூற வேண்டியதில்லை. அவ்வாருக, மாதரைப்போல அவளைப் பொது நோக்காக நோக்கும் ஆடவருக்கே அத்தன்மைய ளென்ருல், காதலித்துக் காணும் இராமனுக்கு எத்தன்மையளென்பே மென்பார் ' ஆயவள் எங்கள் நாயகற்கு இனி யாவ தாம்கொலோ ' என்ருர். (96)

இழைகளுங் குழைகளு மென்ன முன்னமே
மழைபொரு கண்ணிணை மடந்தை மாரொடும்
பழகிய தெனினுமிப் பாவை தோன்றலால்
அழகெனு மணியுமோ ரழகு பெற்றதே (97)

கொண்டுகூட்டு : அழகு எனும் அணி, இழைகளும் குழைகளும் என்ன முன்னமே மழை பொரு கண் இணை மடந்தை மாரொடும் பழகிய தெனினும், இப்பாவை தோன்றலால் ஓர் (புதிய) அழகு பெற்றது !

பொருள் : தான் தோன்றிய நாள் தொட்டுத் தன்னை அணிவார்க்கு அழகு செய்வது என்னும் காரணத்தினுல் அழ

கென்னும் பொருள் உள்ள அணி என்னும் பெயரையுடைய ஆபரணமானது, கழுத்திலணியும் மாலைகள் முதலிய பேரணி கலன்களும் காதிலணியும் குழைகள் முதலிய சிற்றணிகலன்களு மெனச் சீதை பிறக்கும் முன்னமேயே மாதரோடு அவர்களால் அணியப்பட்டுப் பழகியுள்ள தென்றாலும், தான் அவர்களுக்கு அழகு அளித்ததேயன்றி அவர்களால் தான் அழகு பெறவில்லை; சீதை அவதரித்ததினால் அவளது திருமேனியில் அணியப் பட்டுப் புதிதாகிய ஓர் அழகினைப் பெற்றது.

இழை - பேரணிகலம்.—பத்துப்பா. குழை - குண்டலம். மழை பொரு - குளிர்ச்சி பொருந்திய. 'விண் பொரு புகழ்' எனப் புற நானூற்றில், 11-ம் பாவில் வருதல் பார்க்க.

'இன்ன முன்னமே' என்றும், 'அழகெனுமதுவும்' என்றும், 'அழகெனுமழகும்' என்றும் பாட பேதங்கள் உண்டு.

'அழகெனும் அழகும்' என்ற பாடங் கொண்டால், ஆபரணமென் னும் பொருளுடைய அணி யென்பது, தன்னை அணிவோர்க்கு அணி (-அழகு) செய்தலால் அணி எனப்பட்டு, அணியப்பட்டிருக்குங் காலத்தும் அல்லாக் காலத்தும் அணியாக (-அழகாக) இருத்தலால் அந்த அணியை 'அழகெனும் அழகு' என்றாரென்க.

அப்படிப்பட்ட அணி, இதுகாறும் தன் சேர்க்கையால், எல்லா மாதருக்கும் அழகு தந்ததேயன்றி, தான் எந்த மாதின் சேர்க்கையாலும் அழகு பெறவில்லை. இப்போது, இதற்குமுன் பிறந்த எல்லா மாதரினும் சிறந்தவளாகப் பிறந்தவளான இந்த மாதின் சேர்க்கையால் புதுமையாக ஓர் அழகு பெறலாயிற் றென்பார் 'மடந்தை மாரொடும் பழகியதெனினும் இப்பாவை தோன்றலால் அழகெனும் அணியுமோர் அழகு பெற்றதே' என்றார். (97)

## சீதா ராமர் காதல் நோக்கு

எண்ணரு நலத்தினா ளினையள் நின்றுழிக்
கண்ணொடு கண்ணிணை கௌவி யொன்றையொன்
றுண்ணவு நிலைபெறா துணர்வு மொன்றிட
அண்ணலு நோக்கினா னவளும் நோக்கினாள் (98)

கொண்டுகூட்டு: எண் அரும் நலத்தினள் இனையள் நின்ற உழி கண்ணொடு கண் இணை கௌவி ஒன்றை ஒன்று உண்ணவும் உணர்வும் நிலைபெறாது ஒன்றிட, அண்ணலும் நோக்கினான், அவளும் நோக்கினாள்.

பொருள்: அளவிடற்கரிய அழகுடைய சீதை இத்தன்மை யளாய் நின்ற காலத்தில், ஒருவர் பார்வையோடு ஒருவர்பார்வை ஒன்றையொன்று பற்றி விழுங்கினாற்போல ஒற்றுமைப்படவும்,

இருவர் உணர்வுகளும் தத்தம் இடத்தே நிலைபெற மாட்டாமல் ஒன்றையொன்று நாடிக் கூடி ஒன்ருய்க் கலக்கவும் காதற் பார்வையாக இராமனும் பார்த்தான், சீதையும் பார்த்தாள்.

'எண் அரும்' என்பது பார்த்தற்கும் சொல்லுதற்குமே யன்றி நினைத்தற்கு மரிய என்பதுபட நின்றமையின் எண் என்பத னீற்றில் தொக்கு நின்ற வும்மை இறந்தது தழீஇயது. 'எண் - முதனிலைத் தொழிற் பெயர்'.—இ. நா.

பாட பேதம்: உண்ண வுண்ணிறையொடு முணர்வும். (98)

ஒவ்வொருவர் இதயத்தும் மற்றவர் மாறிப் புகல்

பருகிய நோக்கெனும் பாசத்தாற் பிணித்
தொருவரை யொருவர்தம் முள்ள மீர்த்தலால்
வரிசிலை யண்ணலும் வாட்க ணங்கையும்
இருவரு மாறிப்புக் கிதய மெய்தினர் (99)

கொண்டுகூட்டு: பருகிய நோக்கம் என்னும் பாசத்தால் பிணித்து ஒருவரை ஒருவர் தம் உள்ளம் ஈர்த்தலால் வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும் (ஆகிய) இருவரும் இதயம் மாறிப் புக்கு எய்தினர்.

பொருள்: இராமனும் சீதையும் கண்ணுகிய வாயால் ஒருவரை ஒருவர் விழுங்கியவர்போலப் பார்த்த பார்வையென்ற கயிற்றினுற் கட்டி ஒருவரை மற்ருெருவர் மனம் இழுத்ததால் இருவரும் அவரவர் மனமாகிய இருப்பிடம் விட்டு மாறி, ஒருவர் மற்ருெருவர் மனத்துட் பிரவேசித்திருந்தார்கள்.

பருகுதல் - விழுங்குதல்.—பத்துப்பா. வரி சிலை - கட்டிய வில். வரி வில் - வரிந்த வில்.—பத்துப்பா. ஒருவர் மனத்தில் ஒருவர் குடி கொள்ள, இருவரும் தம்மை மறந்து மற்றவரையே நினைப்பா ராயினு ரென்பது கருத்து. (99)

இருவரும் ஈருடம்புக்கு ஓருயி ராதல்

மருங்கிலா நங்கையும் வசையி லையனும்
ஒருங்கிய விரண்டுடற் குயிரொன் ருயினர்
கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினுற் பேச வேண்டுமோ (100)

கொண்டுகூட்டு: மருங்கு இலா நங்கையும் வசை இல் ஐயனும் ஒருங்கிய இரண்டு உடற்கு உயிர் ஒன்று ஆயினர். கருங்கடற் பள்ளியில் கலவி நீங்கிப் போய்ப் பிரிந்தவர் கூடினுல் பேச வேண்டுமோ ?

பொருள் : இருவரும் ஈருடம்பிற்கு ஓருயி ராயினர் ; பாற் கடலிலே சர்ப்ப சயனத்திலே கூடியிருத்தலை விட்டுப் பிரிந்து போனவர்கள் திரும்ப எதிர்பாரா தெதிர்ப்பட்டுக் கூடினால் அவர் களுக் குண்டாம் காதற் பெருக்கைச் சொல்ல வேண்டுமோ ! வேண்டா.

ஒருங்கிய - ஒருங்கும்படி, ஒன்றும்படி. இது 'செய்யும்படி' என்று பொருள்படும் 'செய்யிய' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். கருங் கடல் - பெருங்கடல் ; கரிய கடலன்று, பாற்கடலை குறித்தலால். பள்ளி - படுக்கை. போய்ப் பிரிந்தவர் என்பதைப் 'பிரிந்து போயவர்' என விகுதி மாற்றிக் கூட்டுக. (100)

### சீதை கண்பார்வையி னின்றும் இராமன் அகலுதல்

அந்தமி லழகனை யணைகி லாமையாற்
பைந்தொடி யோவியப் பாவை போன்றனள்
சிந்தையு நிறையுமெய்ந் நலனும் பின்செல
மைந்தனு முனியொடு மறையப் போயினான் **(101)**

கொண்டுகூட்டு : அந்தம் இல் அழகனை அணைகிலாமையால் பைந்தொடி ஓவியப் பாவை போன்றனள். (அவளுடைய) சிந்தையும் நிறையும் மெய்(யின்) நலனும் (தனக்குப்) பின் செல்ல, மைந்தன் முனி யோடு (கண்) மறையப் போனான்.

பொருள் : எல்லையில்லாத அழகுடையானாகிய இராமனை அடையாமையால் சீதை உயிரில்லாத சித்திரப் பாவையை ஒத் தாள் : அவளுடைய மனமும் கற்பும் தேக சௌந்தரியமும் தன்னைப் பின் தொடர இராமன் விசுவாமித்திர முனிவனுடன் கண் மறையச் சென்றான்.

விரக தாபத்தால் அழகு மழுங்கியதை 'நலனும் பின் செல' என்ற தனாற் குறிப்பித்தார். (101)

### சீதை அவசமுறுதல்

பிறையெனும் நுதலவள் பெண்மை யென்படும்
நறைகம ழலங்கலா னயன கோசரம்
மறைதலு மனமெனு மத்த யானையின்
நிறையெனு மங்குச நிமிர்ந்து போயதே **(102)**

கொண்டுகூட்டு : பிறை எனும் நுதலவள் பெண்மை என்படும்? நறை கமழ் அலங்கலான் நயன கோசரம் மறைதலும், (அவளுடைய)

மனமென்னும் மத்த யானையின் நிறை எனும் அங்குசம் நிமிர்ந்து போயது.

பொருள் : அவன் சென்றதனால் அவனைப் பார்த்துக் கொண்டிருந்த பரமானந்தத்தை இழந்த சீதையின் நாணம் முதலிய பெண்மைக் குணங்கள் என்ன பாடுபட்டன? அது சொல்லும் தரத்தினதன்று ; ஒருவாறு சொல்லின், இராமன் கண் பார்வையினின்று மறைந்தவுடனே, சீதையின் மனமென்ற மத யானையினது நிறையென்ற தோட்டி அவ் யானை அடங்காது செல்வதை அடக்குதற்குப் பலமாக அவளால் இழுக்கப்பட்ட போது நிமிர்ந்து போய்விட்டது.

பெண்மை - பெண்தன்மை—மாதர்க்குரிய அமைதி அல்லது அடக்க முடைமை. பெண்மை - அமைதித் தன்மை.—சிந்தாமணி. நறை - நறு நாற்றம். கோசரம் - புலனுக்கு விடயம் ஆனது. நயன கோசரம் - கண் ணுக்குத் தெரிதல். மத்த யானை - மதயானை. ‘மத்தப் புகர்முகக் களிறு’. —மணிமே. நிறை - நெஞ்சைக் கற்பு நெறியில் நிறுத்தல்.—மணிமே., பக்கம் 195. மனம் விவேகத்துக் கடங்காமல் காமாவேச முற்ற தென்பது கருத்து. (102)

காதல் வளரச் சீதை தளர்தல்

மாலுற வருதலு மனமு மெய்யுந்தன்
நூலுறு மருங்குல்போ னுடங்கு வாணெடுங்
காலுறு கண்வழி புகுந்த காதனோய்
பாலுறு பிரையெனப் பரந்த தெங்குமே (103)

கொண்டுகூட்டு : மால் உற வருதலும், மனமும் மெய்யும் நூல் உறு மருங்குல் போல் நுடங்கு வாளின் நெடும் கால் உறு கண்வழி புகுந்த காதல் நோய் பால் உறு பிரை என எங்கும் பரந்தது.

பொருள் : ஆசை அதிகமாக வளர்ந்தவுடனே, மனமும் தேகமும் இடைபோல மெலிவுற்ற சீதையின் கண் வழியாக உள்ள பிரவேசித்த காமநோய் பாலில் உற்ற பிரைபோலக் கண்ணோடு மற்றைப் பொறிகளும் அடங்கிய உடலெங்கும் வியாபித்தது.

மால் உற வருதலும் - மோகம் மிகுதியாக வளர்ந்தவுடனே. வருதல் - வளர்தல்.— ச. அ. நூல் உறு - நூல் போன்ற. உறுவது - ஒப்பது.— சிந்தா. கால் உறு கண்வழி புகுந்த காதல் நோய் - தான் புகுதற்கு வழியாக உற்ற கண் வழியாக உள்ளே பிரவேசித்த காம வியாதி. கால் -

வழி.—பிங்கலம், 33, 37. பிரை - உறை - பால் தயிராவதற்கிடும் மோர்த் துளி. காரணம் மிகச் சிறிதாயினும் காரியம் மிகப் பெரிதாவதற் குப் பாலில் இடு பிரை சிறந்த உதாரணம். இதனை இன்னும் சிறப்பாகச் 'சீரிய பாலின் வேலை சிறுபிரை தெறித்த தன்னான்' என்பர் பின்னர்.

### தோழியர் சீதையைப் படுக்கையில் சேர்த்தல்

மனத்தில் நினைந்ததை வாயாற் சொல்லமாட்டாத ஊமர் போலத் தான் உற்ற காம நோயைச் சொல்ல மாட்டாதவளாய், தேவர் கடைய யாவையும் கொடுத்து வெறுமையான பாற்கடல் போல, உடையும் வளையும் உணர்வும் உள்ளமும் உடலொளியும் இழந்திருந்த சீதையைத் தோழியர்கள் கொண்டுபோய் மலர்கள் பரப்பிய படுக்கையிற் சேர்த்தார்கள். அப்போது அவள் காம பரவசையாய், வில்லேந்திய கரிய மேனியையுடைய இராமனை நினைந்து, அவன் வில்லோடு பூமியிலே இறங்கிய மேகமோ, என்பாள்.

### சீதையின் பிரிவாற்றாமை

நெருக்கியுள் புகுந்தரு நிறையும் பெண்மையும்
உருக்கியென் னுயிரொடு முண்டு போனவன்
பொருப்புறழ் தோள்புணர் புண்ணி யத்தது
கருப்புவில் லன்றவன் காம னல்லனே (104)

கொண்டுகூட்டு: நெருக்கி உள் புகுந்து, அரும் நிறையும் பெண்மையும் உருக்கி என் உயிரொடும் உண்டு போனவ னுடைய பொருப்பு உறழ் தோள் புணர் புண்ணியத்தது, கருப்பு வில் அன்று: அவன் காமன் அல்லன்.

பொருள்: வலாற்காரமாய் என் நெஞ்சி னுள்ளே பிரவே சித்து எனது அருமையான நிறையையும் பெண் தன்மையையும் நெகிழச்செய்து அவற்றை என் உயிரோடும் கவர்ந்து கொண்டு போனவ னுடைய மலை யொத்த தோளைச் சேரும் பாக்கியத்தைப் பெற்று விளங்கும் வில், கரும்பு வில்லன்று: ஆதலால் அவன் காமன் அல்லன்.

நெருக்கி உள் புகுந்து - வலாற்காரமாய் மனத்தினுட் பிரவேசித்து. உண்டு போனவன் - கவர்ந்து கொண்டு போனவன் (தாற்பரியப் பொருள்). பொருப்பு உறழ் - மலை போன்ற. அழகினால் மன்மதனோ என் றெண்ணின சீதை, அவன் தோளிலிருப்பது மூங்கில் வில்லே, கரும்பு வில் அன்று,

என் றுணர்ந்து, அதனால் அவன் மன்மத னல்லன் என்று தேறினாள், என்பது கருத்து. மூங்கிலாற் செய்யப்பட்ட வில் அவன் தோள்களைப் புணர்தற் குரிய புண்ணியஞ் செய்திருந்ததே, அதுவும் யாம் செய்திலமே, என் றிரங்கினாள் என்பது குறிப்பு. —இ. நா. (104)

**பெண்வழி நலனொடும் பிறந்த நாணொடும்**
**எண்வழி யுணர்வுநா னெங்குங் காண்கிலன்**
**மண்வழி நடந்தடி வருந்தப் போனவன்**
**கண்வழி நுழையுமோர் கள்வ னேகொலாம் (105)**

கொண்டுகூட்டு: நான் பெண்வழி நலனொடும், பிறந்த நாணொடும், எண் வழி உணர்வும் எங்கும் காண்கிலன்: மண்வழி நடந்து அடி வருந்தப் போனவன், கண்வழி நுழையும் ஓர் கள்வனே கொல்!

பொருள்: எனது பெண் நலங்களையும் அவற்றுடன் தோன்றிய நாணத்தையும் என் அறிவையும் நான் என் அகத் துள்ளே எங்கும் தேடிப் பார்த்தும் காண்கின்றிலேன். ஆதலால், அவை களவுபோ யிருக்க வேண்டும். அவை அவன் வருமளவும் இருந்து பின்பு காணாமையால் அவைகளை அவனே களவு செய் திருக்க வேண்டும். ஆயின் அவன் எவ்வழியே என் அகத்துட் புகுந்து களவாடினா னென்பது தெரிய வில்லை. வேறு வழி யில்லை யாதலால், அவன் கண் வழியே நுழையும் கள்வன் போலும்!

பெண் வழி நலன் - பெண்களுக்கு வழி வழியாக வரும் நற் குணங் கள். பிறந்த நாண் - (அந்த நலங்களோடு கூடவே) தோன்றிய (அவற் றுள்ளே சிறந்த) நாணம். ‘எண்வழி உணர்வு - மனத்தி னிடத் துள்ள அறிவு. எண் வழி - எண்ணு மிடத்து.’ சீதை, இராமனைக் கள்வன் என்றதனால் வெறுப்பது வெளிப்படையும் தோற்றமு மாகவும், மென்மை யான பூ மேல் நடவாமல் வன்மையான மண் மேல் அடி வருந்த நடந்து போனவன் என்றதனால் விரும்புவது குறிப்பும் உண்மையு மாகவும் இருத்தல், கவனிக்கத் தக்கது. (105)

**இந்திர நீலமொத் திருண்ட குஞ்சியுஞ்**
**சந்திர வதனமுந் தாழ்ந்த கைகளுஞ்**
**சுந்தர மணிவரைத் தோளு மேயல**
**முந்தியென் னுயிரையம் முறுவ லுண்டதே (106)**

கொண்டுகூட்டு: இந்திரநீலம் ஒத்து இருண்ட குஞ்சியும், சந்திர வதனமும், தாழ்ந்த கைகளும், சுந்தர மணிவரைத் தோளும் அல்ல, முந்தி என் உயிரை உண்டது (மற்று யாதெனின்) அம்முறுவலே!

பொருள் : நீல ரத்தினக் கதிர்க் கூட்டத்தை ஒத்து இனி தாக இருண்ட கேசமும், பூரண சந்திரன் போன்ற முகமும், முழந்தாள் வரை தாழ்ந்த கைகளும், அழகிய நீல மலை நேரான தோள்களும் அல்ல, முதல் முதலாக என் உயிரை உண்டவை! மற்று எது முன்னதாக உண்ட தெனின், என் மனத்தை விட்டு நீங்காத அந்தப் புன்னகையே!

இந்திர நீலம் - நீல ரத்தினம். குஞ்சி - ஆண் மக்கள் தலை மயிர். மணி - நீல ரத்தினம். முறுவல் - சிரிப்பு; இங்கே புன் சிரிப் பென்று பொருள் பட நின்றது. அவன் சம்பந்தமான எல்லாம் என் உயிரை உண்டன; ஆயினும் அவற்றுள் முற்பட்டு என் னுயிரை யுண்டது அவன் புன்னகையே; புன்னகை உண்டு எஞ்சிய உயிர்ப் பகுதியைக் கேசம் முதலியவை உண்டன, என்பது கருத்து. (106)

படர்ந்தொளி பரந்துயிர் பருகு மாகமுந்
தடர்ந்தரு தாமரைத் தாளு மேயல
கடந்தரு மாமதக் களிநல் யானைபோல்
நடந்தது கிடந்ததென் னுள்ள நண்ணியே (107)

கொண்டுகூட்டு : படர்ந்து ஒளி பரந்து உயிர் பருகும் ஆகமும் தடம் தரு தாமரைத் தாளுமே அல; கடம்தரு மாமதக் களி நல் யானை போல் நடந்தது, என் உள்ளம் நண்ணிக் கிடந்தது.

பொருள் : மார்பழகினும் தாளழகினும் அதிகமாக நடை யழகு மனத்தில் நிலைத்திருக்கின்றது.

தடம் தரு தாமரை - தடாகம் (உண்டாக்கிக்) கொடுக்கின்ற தாமரை மலர்; (மலர்களிற் சிறந்த தென்ற) பெருமையைக் கொண்ட தாமரை மலர். தருதல் - கொள்ளுதல்.—புற. வெண். மா. (107)

பிறந்துடை நலநிறை பிணித்த வெந்திரம்
கறங்குபு திரியுமென் கன்னி மாமதில்
எறிந்தவக் குமரனை யின்னும் கண்ணிற்கண்
டறிந்துயி ரிழக்கவு மாகு மேகொலாம் (108)

கொண்டுகூட்டு : (என்னுடன்) பிறந்து உடை (மையா யுள்ள) நலம் நிறை (ஆகிய) பிணித்த எந்திரம் கறங்குபு திரியும் என் கன்னி மா மதில் எறிந்த அக் குமரனை இன்னும் கண்ணிற் கண்டு அறிந்து, உயிர் இழக்கவும் ஆகுமே?

பொருள் : என்னுடன் கூடப் பிறந்து என் உடைமையா யுள்ள கற் பெனும் யந்திரம் எவரும் அணுகாமல் காத்தற்கு எப்

பக்கமும் சுழன்று திரியப் பெற்ற எனது கன்னித் தன்மை யாகிய மதிலை அழித்த அந்த அரசிளங் குமரனை இன்னும் ஒரு முறை கண்ணாரக் கண்டு அவனை நன்கு அறிந்து கொள்ளும் பாக்கியம் பெற்ற பின்பு என் உயிர் போவ தானாலும் எனக்குச் சந்தோஷமே ; அப்படி யாயினும் நேரிடுமா ?

உடை - உடைமை.— ச. அ. நல நிறை - நல்ல கற்பு. பிணித்த - கட்டிய. கறங்குபு - சுழன்று. மதில் எறிந்த - மதிலை அழித்த. (108)

## அத்தமன வருணனையும் அந்தி வருணனையும்

என்று இவை போல்வன பல கூறி, இராமனது உரு வெளித் தோற்றத்தைக் கண்டு 'இதோ வந்தான்' என்றும், அது மறையவே 'அதோ ! போய்விட்டான்' என்றும் புலம்பிச் சீதை வருந்தும் போது, அவளைச் சுட்ட காமாக்கினி தன்னையுஞ் சுடத் தாங்க மாட்டாதவனாய் அச்சூட்டைத் தணிக்க மேல் கடலில் விழுந்தான் போலச் சூரியன் அத்தமித்தான். தென்ற லாகிய பாசத்தை வீசி, செவ் வான மாகிய சிவந்த தலை மயிரும் இரு ளாகிய கரு நிறமுங் கொண்டு காலன் வந்தது போல மாலைப் பொழுது வந்தது. பொழுது போயினமையால், கூடு தேடி அடையும் பறவை யொலி தான் கொட்டும் பறை யொலி யாக, கட லொலி தன் காற் சிலம் பொலியாக, இருள் கரு நிறச் சட்டையாகப் பூதம் புறப்பட்ட தென்று சொல்லும் படியாக, அந்தி மாலை தோன்றியது. அதனை நோக்கிச் சீதை கூறு கின்றாள் —

## சீதை, அந்திப் பொழுதை நோதல்

**மைவானி றத்து மீனெயிற்று வாடை யுயிர்ப்பின் வளர்செக்கர்ப்**
**பைவா யந்திப் படவரவே யின்று விளைத்துப் பகைத்தியால்**
**எய்வா னொருவன் கையோயா னுயிரு மொன்றே யினியில்லை**
**உய்வா னுறவிப் பழிபூண வுன்னோ டெனக்குப் பகையுண்டோ**

கொண்டுகூட்டு : மைவான் நிறத்து மீன் எயிற்று வாடை உயிர்ப் பின் வளர் செக்கர்ப் பைவாய் அந்திப் பட அரவே ! இன்று விளைத்துப் பகைத்தி. எய்வான் ஒருவன் கை ஓயான் ; உயிரும் ஒன்றே. உய்வான் உற இனி (உயிர்) இல்லை. இப்பழி பூண, உன்னோடு எனக்குப் பகை உண்டோ ?

பொருள் : ஆகாய நிறத்தையும் நட்சத்திரப் பற்களையும் வாடைக் காற்றுப் பெருமூச்சையும் செவ்வான வாயையுமுடைய அந்திப் பாம்பே! துன்பம் உண்டாக்கி என்னை எதற்காக விரோதிக்கின்றாய்? என் உயிருக் காக வென்றால், அதற்காக நீ வருமுன்பே வந்து என் மேல் அம்பு எய்வா னுயினுன் ஒருவன்; அவன் அதைக் கொண்டா லன்றி எய்யும் கை ஓயான்; உயிரோ, எனக்கு ஒன்றே உள்ளது; அதை அவன் கொண்ட பின், நான் பிழைத் திருக்க வேறு உயிர் இல்லை; உயிர் இல்லாது போகவே, நீ என் மீது பகை செலுத்தலால் என் உயிரை உண்ணும் பயனைப் பெறாய்; பெறு யாகவும் என்னை வீணே பகைக்கின்ற இந்தப் பழி பூணுதற்கு, முன் பகை இருத்தல் வேண்டும்; அப்படி உனக்கும் எனக்கும் பகை யுண்டோ? இல்லை; உண்டேல், சொல்வாயாக!

வான் மை நிறத்து - ஆகாசக் கரு நிறத்தை யுடைய. மீன் எயிற்று - நட்சத்திரப் பற்களை யுடைய. வாடை உயிர்ப்பின் - வாடைக் காற்றுப் பெரு மூச்சினை யுடைய. வளர் செக்கர்ப் பை வாய் - பெருகிய செவ்வானமாகிய, நஞ்சுப் பையுள்ள வாயினை யுடைய; பை வாய் - பரந்த வாயெனலு மாம். பைத்தல் - பரத்தல் —ச. அ. இன்னு - துன்பம். பகைத்தி - பகைக்கின்றாய். 'ஒருவன்', மன்மதனைக் குறித்தது. இனி - மற்று - வேறு. —உரி நிக., 160. உய்வான் உற - உய்தலை அடைய. உய்தல் - பிழைத்தல் - சீவித்தல்.—புறநா. 'உய்வான் உற இனி இல்லை' எனக் கூட்டி 'பிழைத் திருக்க வேறு (உயிர்) இல்லை' என்று பொருள் கூறப்பட்டது. உய்வான் உறவு இனி இல்லை - உய்தலுறுதல் இனி இல்லை, எனலுமாம்.

'மீனெயிற்று' என்ற பாடமே யன்றி, 'மின்னெயிற்று' என்ற பாடமும் உண்டு. இப் பாடம், இரவிலேயன்றி அந்தியிலே நட்சத்திரங்கள் காணப்படுதல் இல்லையென்பதுபற்றிக் கொள்ளப்பட்டதுபோலும். 'இப்போது மாலை போயிற்று,' 'இப்போது இரவு வந்தது,' என்று சொல்லக் கூடாத நேரமும் உண் டன்றே? மாலை முடியாமலும் இரவு தொடங்காமலும் உள்ள அந்தச் சந்தி நேரத்திலே, இரவிற் பேரொளி வீசும் நட்சத்திரங்களிற் சிறந்தன சில, மற்றைச் சிற் றொளி நட்சத்திரங்கள் தோன்று முன் தோன்றுபவைகளை உட் கொண்டு, கவி 'மீனெயிற்று' என்று பாடினு ரெனல் பொருந்தும். இப்படலம் 62-ம் பாட்டில், இவ் அந்திமாலையை வருணிக்குமிடத்து, 'எரி நிறச் செக்கரும் இருளும் காட்டலால்' என்றார். இப் பாட்டிற்கு அடுத்த 'ஆலமுலகில்' என்ற பாட்டையும் பார்க்கவும். (109)

### சீதை, இரவை நோதல்

**ஆல முலகிற் பரந்ததோ வாழி கிளர்ந்த தோவவர்தந்**
**நீல நிறத்தை யெல்லாரு நினைக்க வதுவாய் நிரம்பியதோ**
**கால னிறத்தை யஞ்சனத்திற் கலந்து குழைத்துக் காயத்தின்**
**மேலு நிலத்து மெழுகியதோ விளங்கு மிருளாய் விளைந்ததுவே**

கொண்டுகூட்டு : ஆலம் உலகில் பரந்ததோ ! ஆழி கிளர்ந்ததோ! அவர் தம் நீல நிறத்தை எல்லாரும் நினைக்க அது ஆய் நிரம்பியதோ? காலன் நிறத்தை அஞ்சனத்தில் கலந்து குழைத்துக் காயத்தின் மேலும் நிலத்தும் மெழுகியதோ ! (எது) விளங்கும் இருளாய் விளைந்தது ?

பொருள் : 'ஆலகால விடம் உலகத்திலே பரவியதோ ! சமுத்திரம் மேலோங்கி எங்கும் பெருகியதோ ! அவருடைய நீல நிறத்தை யெல்லாரும் நினைக்க அந்த நிறமே எங்கும் ஆகி நிறைந்ததோ ! இயமனது நிறத்தைக் கண்ணுக்கிடும் மையோடு கலந்து குழப்பி ஆகாயத்தின்மேலும் பூமியின்மேலும் மெழுகியதோ ! இவற்றுள் எது, இவை ஒவ் வொன்றும் செய்யும் துன்பத்தைச் செய்கின்ற இருளாய் விளைந்தது !'

கிளர்தல் - பெருகுதல்.—புறப். வெண். மா. காயம் - ஆகாயம்.

இப்போது கூறிய இருள், மாலையிருள் போனபின் வந்த இரவின் இருளை. அவ் விருளினும் இவ் விருள் மிகுந்து புலப்பட்டதனால் 'விளங்கும் இருள்' என்றார். ஆலகால விடம் முதலியவை விதையாக, அவை முளைத்து வளர்ந்து, விளைந்தது இருள் என்றும், விதையை நோக்க அவ்விதையின் விளைவு மிகவும் பெருக்கமா யிருப்பது போல, ஆலகால விடம் முதலியவற்றினும் இருள் (இருண்ட தன்மையினும் துன்பம் செய்த லினும்) மிகவும் பெரியதா யிருந்த தென்றும் 'விளைந்ததே' என்றதனால் குறிப்பித்தார். (110)

### தீபம் வைத்தல்

இவ்வண்ணம் சீதை பிரலாபித்துத் துன்புறும்போது, அவளுக்கு வெப்பஞ் செய்யு மென்று சாதாரண விளக் கேற் றுமல், தூண்டுதல் வேண்டாத இரத்தின தீபம் வைத்துத் தாதியர் இரவைப் பகல் போலச் செய்தார்கள்.

### சந்திரோதய வருணனை

**பெருந்திண் ணெடுமால் வரைநிறுவிப்**
**பிணித்த பாம்பின் மணித்தாம்பால்**
**விரிந்த திவலை யுதிர்ந்தமணி**
**விசும்பின் மீனின் மேல்விளங்க**

அருந்த வமரர் கலக்கியநா
　　ளமுத நிறைந்த பொற்கலசம்
இருந்த திடைவந் தெழுந்த தென
　　வெழுந்த தாழி வெண்டிங்கள் (111)

கொண்டுகூட்டு : பெரும்திண் நெடுமால் வரை நிறுவிப் பிணித்த பாம்பின் மணித்தாம்பால், (பாற்கடல் அமுது) அமரர் அருந்த (அக் கடலைக்) கலக்கிய நாளில், விரிந்த திவலை(யும்) உதிர்ந்த மணி(யும்) விசும்பில் மீனின் மேல் விளங்க, அமுதம் நிறைந்த பொற் கலசம் (அக் கடலுள்) இருந்தது (வெளி) இடை எழுந்தது என ஆழி(யில்) வெண் திங்கள் எழுந்தது.

பொருள் : திருமால் மந்தர மலையாகிய மத்திலே கட்டின வாசுகி என்னும் பாம்புக் கயிற்றினால் பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்துத் தேவர்கள் உண்ணும்படி அந்தக் கடலைக் கலக்கிய காலத்தில், நீர்த் துளிகளோடு தெறித்த மணிகள் நட்சத்திரங்களினும் அதிகமாக விளங்க, அமிர்த கலசம் அக் கடலினுள் இருந்தது அக்கடலிலிருந்து வெளிப்பட்டு எழுந்தது போலக் கடலிலே சந்திரன் உதயமாயிற்று.

வரை நிறுவிப் பிணித்த - (மந்தர மலையாகிய மத்திலே விலகாது) நிற்கும்படி செய்து கட்டின. அருந்த - (பாற் கடலி னின்று அமுதம் கடைந் தெடுத்து) உண்ணும்படி. ஆழி - கடல். பெரும் திண் நெடுமால் வரை, பெரிய வலிய உயர்ந்த கரிய மலை யெனலு மாம். (மால் - கருமை). இப் பொருள் கொண்டால், ‘அருந்த’ என்பதற்கு மட்டுமே யன்றி, ‘நிறுவி’, ‘பிணித்த’, ‘கலக்கிய’ என்பவைகளுக்கும் ‘அமரர்’ வினை முதலாம்.

‘பிரதான உபமானமான அமுத கலசத்துக்குத் துணையாக வந்த நீர்த் திவலைகளும் ரத்தினங்களும் உபமேயங்க ளாகவும், பிரதான உப மேயத்துக்குத் துணையான நட்சத்திரங்கள் உபமானங்களாகவும் சொல்லப் பட்டிருக்கின்றன.’ உதயமாகும் சமயத்தில் சந்திரன் சிவந்து தோன்று தலால் செம்பொற் கலசம் உதய சந்திரனுக்குப் பொருத்தமான உபமானம். வெண் சந்திர னென்றது உதய காலத்துக்குப் பிந்திய பெரும் பான்மை யான காலத்தில் உள்ள நிறம் பற்றி யென்க. பொன், உலோகப் பொது வாய்ச் செம்பொன் (தங்கம்), வெண்பொன் (வெள்ளி), பொன் (இரும்பு), மூன்றையுங் குறிப்பதால், இங்கே ‘பொன் கலசம்’ என்றதை வெள்ளிக் கலச மெனலு மாம். (111)

வண்டா யயன்நான் மறைபாட
மலர்ந்த தொருதா மரைப்போது
பண்டா லிலையின் மிசைக்கிடந்து
பாரு நீரும் பசித்தான்போல்
உண்டா னுந்திக் கடல்பூத்த
தோதக் கடலுந் தான்வேறோர்
வெண்டா மரையின் மலர்பூத்த
தொத்த தாழி வெண்டிங்கள் (112)

கொண்டுகூட்டு : பண்டு ஆலிலையின் மிசைக் கிடந்து பசித்தான் போல் பாரும் நீரும் உண்டான் உந்திக் கடல், அயன் வண்டாய் நால் மறை பாட, ஒரு தாமரைப் போது மலர்ந்தது (என்று), ஓதக் கடலும் தான் வேறு ஓர் வெண் தாமரையின் மலர் பூத்தது (-பூத்ததை) ஒத்தது ஆழி வெண் திங்கள்.

பொருள் : முன் காலத்தில் ஆலிலைமேற் பள்ளிகொண்டு பசித்தவன் போலப் பூமியையும் கடலையும் உண்ட திருமாலின் நாபி யாகிய கடலானது, பிரமன் வண்டு போன்று அதன் ரீங்கா ரம்போல வேதங்களைப் பாடாநிற்க, ஒரு (செந்) தாமரைப் பூப் பூத்தது என்று, கடலும் வே றொரு வெண்டாமரைப் பூப் பூத்ததை ஒத்தது கடலிற் பிறந்த சந்திரன்.

ஆய் - போன்று. மலர்ந்த தொரு தாமரைப் போது - மலர்ந்ததாகிய ஒரு தாமரைப் பூவை. நீர் - கடல். உந்தி - கொப்பூழ். ஓதம் - அலை. —ஐங்குறு. ஆழி - கடல் - கடலிற் பிறந்த ; வட்ட வடிவமான.

'தாமரைப்போது' என்றதற்கியைய அதனிற் றோன்றிய பிரமனை 'வண்டு' என்றும், வண்டு ரீங்காரம் செய்தல் போல 'அயன் நால்மறை பாட' என்றும், பூமியை யுண்டதற்குப் பொருத்தமாக (இயல்பிலே பசி யில்லாதவனைப்) 'பசித்தான் போல்' என்றும், ஒரு கடல் ஒரு தாமரைப் பூப் பூத்ததை நோக்கி மற்றொரு கடல் தானும் அது போல பூப்பேனென்று 'வேறோர் வெண் டாமரையின் மலர் பூத்தது' என்றும் பலவகை நயம் படக் கூறினர். (112)

வண்ண மாலைக் கைபரப்பி
யுலகை வளைந்த விருளெல்லாம்
உண்ண வெண்ணித் தண்மதியத்
துதயத் தெழுந்த நிலாக்கற்றை

விண்ணு மண்ணும் திசையனைத்தும்
விழுங்கிக் கொண்ட விரிநன்னீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன்றன்
புகழ்போ லெங்கும் பரந்துளதால் (113)

கொண்டுகூட்டு : வண்ணமாலைக் கைபரப்பி உலகை வளைந்த இருளெல்லா(வற்றையு)ம் உண்ண எண்ணித் தண் மதியத்து உதயத்து எழுந்த நிலாக்கற்றை, விரி நல்நீர்ப் பண்ணை வெண்ணெய்ச் சடையன் (உடைய) விண்ணும் மண்ணும் திசை அனைத்தும் விழுங்கிக் கொண்ட புகழ்போல எங்கும் பரந்துளது.

பொருள் : மாலைப் பொழுதாகிய கையைப் பரப்பி உலகத்தைச் சூழ்ந்து தனக்குள் ஆக்கிக் கொண்ட இருள் முழுவதையும் உண்டுவிடக் கருதிச் சந்திரோதய சமயத்திற் கிளர்ந்த நிலாக் கதிர்த் தொகுதி, மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் திசைக ளெல்லாவற்றையும் விழுங்கிய சடையப்ப வள்ளல் கீர்த்திபோல எங்கும் பரவியது.

வண்ணம் - நிறம். வண்ண மாலை - செவ்வானச் செந் நிறமும் இருளின் கரு நிறமும் உடைய மாலை. தண் மதியம் - குளிர்ச்சியுடைய சந்திரன். பண்ணை - வயல் (சூழ்ந்த). வெண்ணெய் - திருவெண்ணெய் நல்லூர். விழுங்கிக் கொண்ட புகழ் எனக் கூட்டுக. சடையப்ப முதலியார் புகழ் எங்கும் பரந்தது போல நிலாக்கற்றை எங்கும் பரந்ததென்பது கருத்து. — இ. நா. (113)

நீத்த மதனின் முளைத்தெழுந்த
நெடுவெண் டிங்க ளெனுந்தச்சன்
மீத்தன் கரங்க ளவைபரப்பி
மிகுவெண் ணிலவாம் வெண்சுதையாற்
காத்த கண்ணன் மணியுந்திக்
கமல நாளத் திடைப்பண்டு
பூத்த வண்டம் பழையதென்று
புதுக்கு வானும் போன்றுளதால் (114)

கொண்டுகூட்டு : நீத்தம் அதனில் முளைத்து எழுந்த நெடு வெண் திங்கள் என்னும் தச்சன், காத்த கண்ணன் மணி உந்திக் கமல நாளத் திடைப் பண்டு பூத்த அண்டம் பழைய தென்று, மீத்தன் கரங்கள் அவை பரப்பி, மிகுவெண் நிலவு ஆம் வெண் சுதையால் புதுக்குவான் போன்றுளது.

பொருள் : கடலில் உதய மாகி மேலெழுந்த சந்திர னென்னும் சிற்பியானவன், திருமால், தனது நாபிக் கமல நாளத்தினிடத்தே ஆதி காலத்தில் உண்டாக்கிய உலகமாகிய மாளிகை பழையதாய்ப் போயிற் றென்று அதன் மேலே தன் கிரணக் கைகளைப் பரப்பி நிலவாகிய சுண்ணும்புக் குழம்பினால் தீற்றிப் புதுப்பித்தல் போன்று அந்த நிலா உள்ளது.

நீத்தம் - வெள்ளம், இங்கே கடலைக் குறித்தது. நெடு வெண் திங்கள் - மிகுந்த வெண்மையுடைய சந்திரன். மீ - மேல். கரங்கள் - கைகள் ; கிரணங்கள். அவை, பகுதிப்பொருள் விகுதி. சுதை - சுண்ணச் சாந்து - சுண்ணும்புக் குழம்பு. மணி உந்திக் கமல நாளம் - அழகுடைய கொப்பூழாகிய தாமரைத் தண்டு. பூத்த - உண்டாக்கிய. புதுக்குவான் - புதுக்குதல். வருதல் ஏன், செய்தல் ஏன் என்ற பொருள்பட ‘ வருவானேன் ’, ‘செய்வானேன்’ என்பவை வருதல் போலப் புதுக்குதல் என்ற பொருளில்‘ புதுக்குவான்’ வந்தது. ‘உளது’ என்ற பயனிலைக்கு எழுவாய் முந்திய பாட்டில் உள்ள ‘ நிலாக்கற்றை ’. (114)

சீதை, சந்திரனைப் பழித்தல்

நீங்கா மாயை யவர்தமக்கு
நிறமே தோற்றுப் புறமேபோய்
ஏங்காக் கிடக்கு மெறிகடற்கு
மெனக்குங் கொடியை யானுயே
ஓங்கா நின்ற விருளாய்வந்
துலகை விழுங்கி மேன்மேலும்
வீங்கா நின்ற கருநெருப்பி
னிடையே யெழுந்த வெண்ணெருப்பே (115)

கொண்டுகூட்டு : ஓங்கா நின்ற இருளாய் வந்து, உலகை விழுங்கி மேலும் மேலும் வீங்கா நின்ற கரு நெருப்பின் இடையே எழுந்த வெள் நெருப்பே ! நீங்கா மாயை (செய்த) அவர் தமக்கு, நிறமே தோற்றுப் புறமே போய் ஏங்காக் கிடக்கும் எறி கடற்கும் எனக்கும் கொடியை ஆனுயே !

பொருள் : பெருத்த இரு ளுருவாய்ப் பரிணமித்து வந்து உலகத்தை விழுங்கினாற் போல முழுதும் மூடிக் கவர்ந்து வரவர அதிகமாக வளர்ந்துகொண்டிருந்த கரு நெருப்பின் நடுவிலே உண்டாகிய வெண்ணெருப்பே ! எனக்கு நீங்காத மயக்கத்தைச் செய்த அவருக்கு நிறத்திலே தோல்வி யடைந்து தூர மாகப்

போய் ஏங்கிக் கொண்டு கிடக்கும் கடற்கும் எனக்கும் கொடுமை யுடையோ னாகினையே !

'மாயை அவர்', என்பது மாயையைச் செய்கின்ற அவர் என்று பொருள்பட நின்றது 'சங்காரமூர்த்தி', சங்காரத்தைச் செய்யும் மூர்த்தி யென்று பொருள் பயத்தல் போல. ஏங்குதல் - ஒலித்தல் ; ஏக்கமுறுதல். 'ஏங்கா(-ஏங்கி)க் கிடக்கும்' என்பதில் இவ் விரு பொருளும் இனிது பொருந்தி யிருக்கின்றன. எறி கடல் - (அலைகளை) வீசும் சமுத்திரம். கொடியை - கொடுமை யுடையாய்.

'நீங்கா மாயை அவர் தமக்கு நிறமே தோற்றுப் புறமேபோய் ஏங்காக் கிடக்கு' மென்றது, கடலோடு இயைவதன்றி எனக்கும் என்பதனோடும் இயையுமெனக் கொண்டு, இராமபிரானைக் கண்டது முதல் தனது மாயையை யிழந்து தனி யிடத்துச் சீதை யிரங்குவதனால் இங்ஙனங் கூறு கின்றாளெனக் கொள்க.—வை. மு. கோ.

சீதை தன் விரகத்தையும் கடலின் நீரையும் பொங்கிப் பெருகச் செய்தலாற் சந்திரனைக் 'கொடியை' யென்றாள். விரகிகளுக்கு வெப்பஞ் செய்தலால், இருளையும் நிலவையும் முறையே கரு நெருப் பென்றும் வெண்ணெருப் பென்றும் உருவகித்தார். இயல்பிலே குளிர்ச்சியான இருளையும் நிலவையும் பொருத்தமாக நெருப் பென்றதும், அவை தம் முள் மாறுபடுதலைக் குறிக்கக் கரு நெருப்பு வெண்ணெருப் பென்றதும், அருமையும் இனிமையும் ஆச்சரியமு மாக விருக்கின்றன. (115)

**கொடியை யல்லைநீ யாரையுங் கொல்கிலாய்**
**மடிவி லின்னமு தத்தொடும் வந்தனை**
**பிடியின் மென்னடைப் பெண்ணொடென் றாலெனைச்**
**சுடுதி யோகடற் றோன்றிய திங்களே (116)**

**கொண்டுகூட்டு :** கடலில் தோன்றிய திங்களே ! நீ கொடியை அல்லை. யாரையும் கொல்கிலாய். மடிவு இல் இன் அமுதத் தொடும் பிடியின் மெல் நடைப் பெண் ணொடும் வந்தனை என்றால், எனைச் சுடுதியோ !

**பொருள் :** குளிர்ந்த கடலிலே தோன்றிய சந்திரனே ! எனக்குக் 'கொடியை ஆனாய்' என்றேன். அது கிடக்க, பிறர் திறத்தில் நீ கொடுமை யுடையா யல்லை ; யாரையும் கொல்ல மாட்டாய் ; தன்னை உண்டார் மரணத்தை நீக்கும் இனிய அமுதத் துடனும் மெல்லிய பெண்பாலான திருமகளுடனும் பிறந்தாய் என்று உலகத்தார் கூறுவது உண்மையானால், என்னைச் சுடுவாயோ !

'சாவா மருந்து' சாதல் இல்லாமற் செய்யும் மருந்து எனவும், 'மூவா

மருந்து' மூத்தல் இல்லாமற் செய்யும் மருந்து எனவும் வருதல் போல, 'மடிவில் அமுதம்' மடிதல் இல்லாமற் செய்யும் அமுத மென வந்தது. 'வடிவிலின் னமுதத்தொடும்' என்றும் பாடம். அமுதத் தொடும் பெண் ணொடு(ம்) வந்தனை என்றால் எனக் கூட்டுக. என்றால், என்று கூறுவது உண்மை யானால் என்ற பொருள் பட நின்றது, 'நீ யோக்கிய னென்றால் கொண்ட கடனைக் கொடுத்து விடு' என்பதிற் போல. பிடியின் மெல் நடைப் பெண் - பெண் யானையின் நடை போலும் மெல்லிய நடையை யுடைய இலக்குமி. சுடுதியோ - சுடுவாயோ.

'சுடுதியோ' என்பதற்குச் சந்திரனே, நீ பிறந்த இடம் குளிர்ந்த கடல்; உன்னொடு பிறந்த பொருள்களோ, இனிய அமுதமும் மெல்லிய பெண்ணும், ஆதலால் உனக்குச் சுடுதல் இயல்பன்று, ஒருகால் சுட்டா லும் பெண்ணொடு பிறந்த நீ பெண்ணாகிய என்னைச் சுடலாமோ என்றும்; 'கொடியை அல்லை' என்பதற்கு மென்மைத் தன்மை யுடைய பெண் ணுடன் பிறந்ததனால் இரக்க முடையை, ஆதலால் கொடுமை யுடையா யல்லை என்றும்; 'கொல்கிலாய்' என்பதற்குச் சாவை நீக்கும் அமுதத் தோடு பிறந்ததனால் உயிரைக் காப்பாற்றுவாய், கொல்லமாட்டாய் என்றும் பொருள் விரித்துரைக்க.

'நீங்காமாயை' என்ற பாட்டுக்கு முன் 'சீதை' என்பதும் 'கொடியை யல்லை' என்ற பாட்டுக்குப் பின் 'என்றாள்' என்பதும் வருவித்துப் பொருள் முடிவு செய்க. (116)

### சீதையின் விரக தாப வருணனை

நீக்க மின்றி நிமிர்ந்த நிலாக்கதிர்
தாக்க வெந்து தளர்ந்து சரிந்தனள்
சேக்கை யாகி மலர்ந்த செந்தாமரைப்
பூக்கள் பட்டதப் பூவையும் பட்டனள் (117)

கொண்டுகூட்டு: நீக்கம் இன்றி நிமிர்ந்த நிலாக் கதிர் தாக்க, (சீதை) வெந்து தளர்ந்து சரிந்தனள். சேக்கை ஆகி மலர்ந்த செந் தாமரைப் பூக்கள் பட்டதை அப் பூவையும் பட்டனள்.

பொருள்: மாலை சிறிது பொழுதிருந்து நீங்கியது; அதன் பின் வந்த இருளும் நெடு நேரம் நில்லாது கழிந்தது. அவற்றுக்குப் பின்பு தோன்றி, அவைகள் போலல்லாமல், அதிக நேரமாக நீங்காததாய் அடிவானத்திலிருந்து மேல் எழுந்து கொண்டிருந்த சந்திரனது கிரணங்கள் மேல் விழுதலால், சீதை வெதும்பித் தளர்வடைந்து சாய்ந்திட்டாள்; அவளுக்குப் படுக்கையாகி அவள் தேக வெம்மையால் தாமரை மலர்கள்

பட்ட பாட்டை நிலவு தன் மேல் விழுந்து தாக்குதலால் அவள் பட்டாள்.

சேக்கை - இருப்பிடம்; படுக்கை. பூவை - பூவை (நாகணவாய்ப் பறவை) மொழி போலும் மொழிகளை யுடைய பெண் - சீதை.

சீதை இலக்குமிதேவியா யிருந்த காலத்தில், அவளுக்கு இருப்பிட மாகி, அதனால் மகிழ்ச்சி யடைந்தன போல மலர்ந்த செந்தாமரை மலர்கள் நிலவினால் (ஒடுங்கிப் பொலி வழிந்து) பட்ட பாட்டைத் தானும் அந் நிலவாற் பட்டாள் என்றும், 'சேர்க்கையாகி......பூவையும் பட்டனள்' என்பதற்குப் பொருள் கூறலாம். மேலே, பொருளில், நிலவால் அதிகப் பட்ட விரக தாபத்தால் வெதுப்புண்ட சீதையின் தேக வெம்மையால் தாமரைப் பூக்கள் பட்ட பாடென்றது, இப்பாட்டுக்கு முந்தியதும் இந் நூலிலே சேர்க்கப் படாததுமான பாட்டில் 'போது மொய்த் தமளிப் புரண்டாளரோ' என்று கூறியிருப்பதுபற்றிக் கூறப்பட்டது. போது மொய்த்(த) அமளி - பூக்கள் நெருங்கிய படுக்கை. (117)

**வாச மென்கல வைக்களி வாரிமேற்**
**பூசப் பூசப் புலர்ந்து புழுங்கினள்**
**வீச வீச வெதும்பினண் மென்முலை**
**ஆசை நோய்க்கு மருந்துமுண் டாங்கொலோ (118)**

கொண்டுகூட்டு: (தோழியர்) வாச மெல் கலவைக் களியை வாரி மேலே பூசப் பூச (அது) புலர்ந்து புழுங்கினள்: வீச வீச மெல் முலை வெதும்பினள்; ஆசை நோய்க்கும் மருந்து உண்டோ?

பொருள்: தோழியர் கலவைச் சந்தனக் குழம்பை அள்ளி அள்ளி மேலே பூசப் பூச அக் குழம்பு உலர்தலுற்று அவள் வெதும்பினாள்; அவர்கள் விசிறி கொண்டு வீச வீச அதிக வெப் படைந்தாள்; அவர்கள் செய்த சைத்தியோபசாரம் ஒன்றும் பயன்படவில்லை; மற்ற நோய்களுக்கு மருந்திருத்தல் போல, ஆசை நோய்க்கும் மருந்துண்டோ?

கலவைக் களி - சந்தனத்துடன் வேறு பரிமளப் பொருள்கள் கலக்கப் பட்ட குழம்பு. வாரி - அள்ளி. புலர்ந்து - உலர்ந்து. மெல் முலை வெதும் பினள் - மென்மையான கொங்கைகள் (சந்தனம் பூசப் பட்டும் விசிறி வீசப் பட்டும்) வெதுப் புண்டாள்; மென் முலை யுடையாள் (ஆகிய சீதை) வெப்ப மடைந்தாள். சைத்தியோபசாரம் - சைத்தியம் (-குளிர்மை) உண்டாம் படி செய்யும் உபசாரம். (118)

### சதாநந்தன் சந்தித்தல்

மேற்கூறியவாறு சீதை வருந்திக்கொண்டிருந்தாள். அவ ளைக் கன்னியா மாடத்திலே கண்டுசென்ற விசுவாமித்திர ராம லக்குமணர்கள் சனக மன்னனைக் காண, அவன் அவர்களை வர வேற்று உபசரித்துச் சிறந்த மாளிகையொன்றில் அமரச் செய்த னன். அங்கே கௌதம புத்திரனுகிய சதாநந்த முனிவன் வந் தான். அப்பொழுது இராமன் அந்த முனிவனை வணங்க, அவன் இராமனுக்கு ஆசி கூறி, விசுவாமித்திரனை நோக்கி, 'தேவரீர் எழுந்தருளுவதற்கு இந்நகரம் செய்த புண்ணியம் யாதோ!' என்று உபசார வார்த்தை கூறினன். விசுவாமித் திரன் அவனுக்குப் பதில் உரைப்பா னுனன் :—

### இராமன் பெருமையை விசுவாமித்திரன் கூறல்

**வடித்த மாதவ கேட்டியிவ் வள்ளருன்**
**இடித்த வெங்குரற் ருடகை யாக்கையும்**
**அடுத்தென் வேள்வியு நின்னன்னை சாபமும்**
**முடித்தென் நெஞ்சத் திடர்முடித் தானென்ருன் (119)**

**கொண்டுகூட்டு :** 'வடித்த மாதவ! கேட்டி, இவ்வள்ளல் இடித்த வெம் குரல் தாடகை யாக்கையும், அடுத்த என் வேள்வியும், நின் அன்னை (அகலிகை) சாபமும் முடித்து என் நெஞ்சத்து இடர் முடித்தான்' என்ருன்.

**பொருள் :** 'இந்த வள்ளல் இராமன் இடி ஒத்த சத்தத்தை யுடைய தாடகையின் தேகத்தையும் எனது யாகத்தையும் உம்முடைய தாயின் சாபத்தையும் முடிவுறச் செய்து, தாடகை யின் தேகம் எனது யாகம் உமது தாயின் சாபம் ஆகிய மூன் றும் முடிவுரு திருந்ததனல் நீடித்திருந்த என் மன வருத்தத்தை யும் முடிந்தொழியச் செய்தவன்' என்ருன்.

வடித்த - திருத்தமாகச் செய்த.—புறநா. கேட்டி - கேட்பாய். இடித்த - இடிபோல் முழங்கிய.—புற. வெண். மா. அடுத்தென் - (தன்னை உதவி செய்யும்படி வேண்டி) அடுத்த (-அடைந்த) என்னுடைய. இதன் முந்திய பாட்டின் உரையிற் குறித்த 'மொய்த்த அமளி' 'மொய்த்தமளி' என வந்தது போல, 'அடுத்த என்' 'அடுத்தென்' என வந்தது. முடித்தல்- (யாக்கையை) அழித்தல்; (வேள்வியை) நிறைவேற்றல்; (சாபத்தைத்) தீர்த்தல்; (நீடித்திருந்த இடரை) முடிவா யொழிந்துபோகச் செய்தல். இடர் - வருத்தம். முடித்தல் என்ற ஒரு வினைச் சொல்லைப் பல செயப்படு

பொருள்களுக்குப் பொருந்தப் பல பொருள்படப் பிரயோகித்திருக்கும் நயமும் சாதுரியமும் பாராட்டத் தக்கன. (119)

### சதாநந்தன், விசுவாமித்திரன் சரித்திரத்தைக் கூறல்

மேற்கூறியவாறு விசுவாமித்திரன் கூறியபோது, சதாநந்தன், 'உமது அருளைப் பெற்ற வீரர்க்குச் செய்தற்கரியது யாதுமில்லை' என்று அவனுக்குச் சொல்லி, இராமனை நோக்கி 'இந்த விசுவாமித்திர முனி சிரேட்டர் ஆதியில் அரசராயிருந்தார். ஒரு நாள் இவர் வேட்டைக்குச் சென்றபோது, வசிட்டர் காமதேனுவைக் கொண்டு இவருக்கும் இவருடைய அளவிறந்த பரிசனங்களுக்கும் அதிசயமான விருந்து செய்வித்தார். இவர், அக் காமதேனுவைத் தமக்குக் கொடுக்கும்படி அவரை வேண்ட, அவர் மறுக்க, இவர் வலாற்காரத்தினால் அதைக் கவர முயன்று போர் புரிவாராகி, விட்ட அத்திர சத்திரங்களொன்றும் காமதேனுவை யாவது வசிட்டரையாவது ஒன்றும் செய்ய முடியாமை கண்டு, அரசரினும் தவசியர் வலியரென் றுணர்ந்து, அரசை வெறுத்துத் துறந்து, அளவற்ற காலம் அகோர தவஞ் செய்து, பிரம சிருட்டிக்கு எதிர்ச் சிருட்டி செய்ய வல்ல அபூர்வ தபோ பலம் பெற்றவர். இப்படிப்பட்ட மகா புருடருடைய அருளைப் பெற்ற உமக்கு எதுதான் அரிது, யாதும் எளிதே' என்று கூறி இராமனை ஆசீர்வதித்து எல்லாரிடத்தும் விடைபெற்றுத் தன் இருப்பிடம் சென்றனன்.

### இராமனது விரகதாப வருணனை

**முனியுந் தம்பியும் போய்முறை யாற்றமக்**
**கினிய பள்ளிக ளெய்திய பின்னிருட்**
**கனியும் போல்பவன் கங்குலுந் திங்களுந்**
**தனியுந் தானுமத் தையலு மாயினான் (120)**

**கொண்டுகூட்டு :** முனியும் தம்பியும் போய் முறையால் தமக்கு இனிய பள்ளிகள் எய்திய பின், இருள் கனி போல்பவன் கங்குலும் திங்களும் தனியும் தானும் அத் தையலும் ஆயினான்.

**பொருள் :** விசுவாமித்திரனும் இலக்குமணனும் அந்த மாளிகையில் தங்கள் பள்ளியறைகளுக்குச் சென்று முறைப்படி என்றும் போல அன்றும் இனிது தூங்கும்படி தம் படுக்கைகளை அடைந்த பின்பு, இராமன் அவ்வாறு படுக்கையை அடையானாய்

இரவும் சந்திரனும் தனிமையும் தானும் சீதையும் கவர்ந்து கவல் விக்கப்பட்ட மனத்தினன் ஆகின்றன்.

முறையால் - முறைமைப்படி - (என்றும் உள்ள) வழக்கப்படி. பள்ளி - படுக்கை. எய்திய - அடைந்த. இருள் கனி போல்பவன் - இருள் முதிர்ந்து கனிந்தது போன்றவன் - மிக இருண்ட நிறத்தினன் - இராமன். கங்குல் - இரவு. திங்கள் - சந்திரன். தனி - தனிமை. தையல் - பெண் - சீதை - சீதையின் ஞாபகமும் அவளுடைய உரு வெளித் தோற்றமும். கனியும் என்பதில் உம்மை இசை நிறை. 'முனியும் தம்பியும் போய் முறையால் தமக் கினிய பள்ளிகள் எய்திய' என்றதனால், இராமன் படுக் கைக்கு என்றும் போல அன்று செல்ல வில்லை யென்பதும், அவனுக்குப் படுக்கை இனியதல்லாததாயிற் றென்பதும் குறிப்பித்தார்.

இராமனுக்கு இன்றளவும் பழகியவைகளாய் இன்பஞ் செய்வனவா யிருந்த இரவும் சந்திரனும் இன்று புதிய (குணமுடையன)வாய்த் துன்பஞ் செய்வன ஆயினதற்கும், முன் சில சமயங்களில் தனித்திருக்கும்படி நேர்ந்த போதிருந்தபடி யில்லாமல் இப்போது தனிமையானதும் தன் தன்மை மாறிச் சகிக்கக் கூடாததாய் இருப்பதற்கும், தான் தன்னை இது வரை அறிந்தவா றின்றி வேறுபட்டுத் தனக்கே தான் அந்நியமாய் வெறுப்பா யிருப்பதற்கும் காரணம் சீதையே என்பது விளங்கக் 'கங்குல், திங்கள் தனி தான்' என்பவைக ளெல்லாவற்றுக்கும் பின் இறுதியில், 'தையல்' என்ருர்.

இராமன் பள்ளி கொள்ளும் சமயத்துக்கு முன் துணையா யிருந்த விசுவாமித்திரன் முதலியோரது துணை யில்லாமல், அந்தச் சமய முதல் விடியு மளவும் இயல்பாகத் துணையாக இருக்க வேண்டிய தூக்கத் துணையு மில்லாமல், இரவும் நிலவும் தனிமையும் தானும் சீதையைப் பற்றிய நினை வுமே துணையாக இராப் பொழுது முழுதும் வருந்திக் கழிப்பானுயினன் என்பது கருத்து. (120)

**விண்ணி னீங்கிய மின்னுரு விம்முறை**
**பெண்ணி னன்னலம் பெற்றதுண் டேகொலோ**
**எண்ணி னீதல தென்றறி யேனிரு**
**கண்ணி னுள்ளுங் கருத்துள்ளுங் காண்பனுல் (121)**

கொண்டுகூட்டு: விண்ணின் நீங்கிய மின் உரு, இம் முறை பெண்ணின் நல் நலம் பெற்றதுண்டே கொலோ? எண்ணின், ஈது, அலது, என்று அறியேன். இரு கண்ணின் உள்ளும் கருத்து உள்ளும் காண்பன்.

பொருள்: கை கால் முதலிய அவயவப் பகுப் பில்லாத மின் னுருவம் கண நேரத்தில் மறைந் தொழிவ தல்லது, நிலை

யானதாய் இவ்வாறு அவ்யவப் பகுப்புடைய பெண் போலச் சிறந்த அழகு பெற்ற துண்டோ? இதுவரை இல்லை. ஆராய்ந் தால், நான் காண்கின்ற இவ் உரு, மின்னுருவோ அல்லது பெண்ணுருவோ, என்று தெரிகிலேன். எது என்று தெளியே னுயினும், இவ் வுருவை வெளியே கண்ணிலும் உள்ளே கருத் திலும் காண்கின்றேன்.

விண்ணின் - மேகத்திலிருந்து. இம்முறை - இப்படி. பெண்ணின் - பெண் போல. நல் நலம் - சிறந்த அழகு. 'நல்லறம்' என்பதில் 'நல்' சிறந்தது என்று பொருள்படல் காண்க. என்று இடைச்சொல்; பெயர்ப் பொருளில் வந்தது; என்பது என்று பொருள்படும். காண்பன் என்பதிற் பகர விடைநிலை தனக்குரிய எதிர் காலத்தைக் குறியாது நிகழ்காலத்தைக் குறித்து நின்றது. (121)

**வள்ளற் சேக்கைக் கரியவன் வைகுறும்**
**வெள்ளப் பாற்கடல் போன்மிளிர் கண்ணினுள்**
**அள்ளற் பூமக ளாகுங்கொ லோவென**
**துள்ளத் தாமரை யுள்ளுறை கின்றதால் (122)**

கொண்டுகூட்டு : வள்ளல் சேக்கைக் கரியவன் வைகுறும் வெள் ளப்பாற் கடல் போல் மிளிர் கண்ணினுள், எனது உள்ளத் தாமரை உள் உறைகின்றதால், அள்ளல் பூ மகள் ஆகுங் கொலோ?

பொருள் : இருண்ட நிறமுள்ள பாம்பாகிய படுக்கையை யுடைய கரிய நிறத்தினன் ஆகிய திருமால் தூங்குகின்ற வெண் மையான பாற்கடல் போல் விளங்குகின்ற கண்ணினை யுடை யாள் ஆகிய அவள், என்னுடைய மனத் தாமரை மலரில் வசிக் கின்றதனுல், தாமரை மலரில் இருக்கும் இலக்குமி தானே!

சேக்கை - படுக்கை - சர்ப்ப சயநம். கரியவன் - திருமால். வைகல் - துயிறல் (சிலப்பதிகாரம்) - தூங்குதல்.

இந்த மிதிலைக் காட்சிப் படலம் 134-ம் பாட்டில் 'புட்டிருப்பாகன்' என்பதில் புள் (-பறவை), கருடப் புள்ளைக் குறித்தது போல, 'சேக்கைக் கரியவன்' என்பதில், சேக்கை, பாம்புச் சேக்கையைக் குறித்தது. 'வள் ளல் சேக்கை', பாம்பாகிய படுக்கை, என்ற உரையும் உண்டு. ஆனல், 'வள்ளல்' என்ற சொல் 'பாம்பு' என்ற பொருளில் எங்கும் பிரயோகிக் கப்பட் டிருப்பதாகத் தெரியவில்லை. வெள் அப் பாற் கடல் - வெண்மை யான அந்தப் பாற் சமுத்திரம். வெள்ளப் பாற்கடல், பெருக்கு உடைய பாற் கடல், எனலுமாம். மிளிர்தல் - ஒளிர்தல். அள்ளல் பூமகள் - சேற்றில் (உண்டாகும் தாமரை) மலரில் (வசிக்கும்) பெண் - இலக்குமி. உறைகின்றதால் - உறைகின்றதனுல். 'உறைகின்றதே' என்றும் பாடம்.

அதற்கு, இந்த மிதிலைக் காட்சிப் படலம், 84-ம் பாட்டில், 'காய் எரியால் கரிய' என்பது 'காய் எரிக் கரிய' எனவும், இக் காண்டம், கடி மணப் படலம், 90-ம் பாட்டில், 'தடக் கையால் பிடித்தான்' என்பது 'தடக் கை பிடித்தான்' எனவும் வருதல் போல, இங்கே 'உறைகின்றதால்' என்பது 'உறைகின்றது' என வந்ததென்று பொருள் கூறுக.

கருமையும் குளிர்மையும் பரப்பும் காணுதற் கினிமையும் உடைமை பற்றிக் கடலை மாதர் கண்ணுக் குவமித்தல் மரபு. வெண்மையான பாற் கடல் கண்ணின் வெண்மையான பாகமாகிய வெள் விழிக்கும், அந்தப் பாற் கடலின் மத்தியில் மண்டலித்த கரிய சர்ப்ப சயனம் கண் நடுவில் உள்ள வட்டமான கரிய பகுதியாகிய கரு விழிக்கும், அந்தச் சர்ப்ப சயனத்திற் கண்வளரும் கரிய திருமால் அந்தக் கரு விழியில் தோன்றும் கிருஷ்ணனுக்கும் உவமை. ஒன்ருேடொன்று தொடுத்த சம்பந்தமுடைய மூன்று உவமேயங்களுக்கு, அவைகள் போல விடாத தொடர்புள்ள மூன்று உவமானங்களை, ஒருசேரப் பொருத்தமாக எடுத்துத் தொடுத்தது, மிக்க இனிமை விளைப்பது.

ஒருவருடைய கண்ணுள்ளே உற்று நோக்குவோரது பிரதிபிம்பமாய் நோக்கப்பட்ட அந்தக் கண்ணினுள்ளே தோன்றும் வடிவத்தைக் 'கிருஷ்ணன்' என்பது உலக வழக்கு. இந்த வடிவத்தைக் 'கண் மணியிற் பாவை' என்பர் வள்ளுவர். (குறள் 1123.) உவமேயத்திற் குறிப்பாக வுள்ள 'கிருஷ்ணன்' என்ற சொல்லும் உவமானத்தில் வெளிப்படையாக வுள்ள 'கரியவன்' என்ற சொல்லும் 'கரு நிற முள்ளவன்' என்று பொருள்படலும் அந்த இரண்டு சொற்களும் திருமாலைக் குறித்தலும் மேற்கூறிய விசேடவுரையின் பொருத்தத்தையும் கம்பரது கவி நுட்பத்தையும் விளக்குதல் காண்க.

பாடபேதம்: உள்ளுறைகின்றதே. (122)

அருளி லாளெனி னும்மனத் தாசையால்
வெருளு நோய்விடக் கண்ணின் விழுங்கலால்
தெருளி லாவுல கிற்சென்று நின்றுவாழ்
பொருளெ லாமவள் பொன்னுரு வானவே (123)

கொண்டுகூட்டு: அருள் இலாள் எனினும், மனத்து ஆசையால் வெருளும் நோய் விடக், கண்ணின் விழுங்கலால், தெருள் இலா உலகில் சென்று நின்று வாழ் பொருள் எலாம், அவள் பொன் உரு ஆனவே.

பொருள்: அவள் என் மீது இரக்க மில்லாதவ ளாயினும், நான் அறிவின்றி அவள்மேற் கொண்ட ஆசையினுல் உண் டாகிய பயங்கரமான விரக நோய் தீரும்படி, மருந்தாக அவளை என் கண்களாகிய வாயால் விழுங்கியதனுல், என் கண்களுக்குச்

சகல சராசரப் பொருள்களும் அவளுடைய அழகிய வடிவமாகி விட்டன.

வெருளும் என்ற தன்வினை, வெருள்விக்கும் என்ற பிறவினைப் பொருள் தந்து நின்றது. வெருளல் - அஞ்சுதல். நோய் விட - வியாதி நீங்க. தெருள் - தெளிவு. சென்று நின்று வாழ் பொருள்கள் - இடம் பெயர்ந்தும் இடம் பெயராதும் வாழும் (இருவகைப்) பொருள்கள் - சரா சரப் பொருள்கள். பொன் உரு - அழகுடைய வடிவம். அசரப் பொரு ளில், மரங்கள் முதலிய உயிருள் பொருள்களும், மலைகள் முதலிய உயிரில் பொருள்களும் அடங்கி யுள்ளன. திசை தெரியாது மயங்கியவன் 'திசை மயங்கியது' என்பது போல, உலகப் பொருள்க ளெல்லாவற்றையும் சீதை யாக மயங்கிக் காணும் தன் தெருளாமையை இராமன் உலகின் மேல் வைத்துத் 'தெருளிலா உலகம்' என்றான், என்று கவி கூறிய நுட்பம் கவனிக்கத் தக்கது. (123)

**வண்ண மேகலைத் தேரொன்று வாணெடுங்**
**கண்ணி ரண்டு கதிர்முலை தாமிரண்**
**டுண்ணி வந்த நகையுமென் றென்றுண்டால்**
**எண்ணுங் கூற்றினுக் கித்தனை வேண்டுமோ. (124)**

கொண்டுகூட்டு: வண்ண மேகலைத் தேர் ஒன்று, வாள்நெடும் கண் இரண்டு, கதிர் முலை தாம் இரண்டு, உள் நிவந்த நகை என்ற ஒன்று உண்டு. எண்ணும் கூற்றினுக்கு இத்தனை வேண்டுமோ!

பொருள்: அழகிய மேகலாபரணம் அணிந்த தேர் போன்ற அரை ஒன்று, வாள் போலும் நீண்ட கண்கள் இரண்டு, இறுமாந்த தனங்கள் இரண்டு, மனத்தினுல் அனுபவித்தற்குரிய பல் வரிசை ஒன்று, ஆகிய இவைகள், யான் நினைந்துகொண்டே யிருக்கின்ற கன்னியாகிய இயமனுக்கு உண்டு. இவற்றுள் ஒன்றைக்கொண்டே என்னைக் கொன்று விடலாம். அப்படி யிருக்க, என்னைக் கொல்லுதற்கு உதவியாக இத்தனை ஆயுதங் கள் வேண்டுமோ!

வண்ணம் - அழகு. கதிர்த்தல் - இறுமாத்தல்.— சங்க அகராதி. கதிமுலை என்றும் பாடம். அந்தப் பாடத்தில், கதித்தல், எழுதல் என்ற பொருளுடையது. உண்ணல் - அநுபவித்தல்.—ஐங்குறு. நிவந்த - மேலான—ஐங்குறு. எண்ணும் - (கண்டார் அஞ்சி) மதிக்கும்; நினையும்- நினைந்து கொண்டே யிருக்கப்பட்ட. இப் பாட்டு, பின்வரும் இனிய பாட்டுக்களின் கருத்தை உட்கொண்டது—

பண்டறியேன் கூற்றென் பதனை இனிஅறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு —குறள், (1083)

கண்ணிறு லின்று கண்டாம் கூற்றினை ; காமர் செவ்வாய்
ஒண்ணுதல் உருவக் கோலத் தொருபிடி நுசுப்பிற் றீஞ்சொல்
வண்ணித்த லாவ தில்லா வருமுலை மதர்வை நோக்கின்
பெண்ணுடைப் பேதை நீர்மைப் பெருந்தடங் கண்ணிற் றம்மா.

—சீவக சிந்தாமணி, 2458. (124)

### இராமன் சந்திரனைப் பழித்தல்

**கொள்ளை கொள்ளக் கொதித்தெழும் பாற்கடற்**
**பள்ள வெள்ள மெனப்பட ருந்நிலா**
**உள்ள வுள்ள வுயிரைத் துருவிட**
**வெள்ளை வண்ண விடமுமுண் டாங்கொலோ (125)**

கொண்டுகூட்டு : கொள்ளை கொள்ளக் கொதித்து எழும் பாற் கடற் பள்ள வெள்ளம் என, நிலா உள்ள உள்ள உயிரைத் துருவிடப் படரும். வெள்ளை வண்ண விடமும் உண்டாங் கொலோ !

பொருள் : கரை மீதுள்ள பொருள்களைக் கவரும்படி பொங்கி யெழுகின்ற பாற்கடற் பெரு வெள்ளம் போல, நிலா வானது என் உயிரைக் கவருதற்கு அதனைத் தேடும்படி பரவு கின்றது. ஆலகால விடம் உலகெங்கும் பரந்து உயிர்களைக் கவர்ந்த தென்று கேட்டிருக்கின்றேன். அதன் நிறம் கரிது. அது போலப் பரந்து உயிரைக் கவரும் இந்த நிலாவோ வெண்மையானது. ஆதலால், நான் இதுவரை கண்டேனும் கேட்டேனும் இல்லாத வெண்ணிற விடமும் இருக்கின்றதோ !

கொள்ளை கொள்ளல் - கவர்தல். கொதித்தல் - பொங்குதல். பள்ள வெள்ளம் - (பரப்போடு) ஆழ முடைய பெருக்கு. படருதல் - பரவுதல் ; செல்லுதல். உள்ள - நினைக்க ; இருக்கின்ற. உள்ள உள்ள உயிர் - (அவளை) நினைக்க இருக்கின்ற உயிர் - (வேறெப்பயன் கருதியும் வாழ்தல் இல்லாமல் அவளை) நினைத்தற்கே (வாழ்ந்து) இருக்கின்ற உயிர். துருவுதல் - (கவருதற்காகத்) தேடுதல். 'நிலா, வெள்ள மென்ன, உயிரைத் துருவிடப் படரும்' எனக் கூட்டுக. (உயிரைக்) கொள்ளை கொள்ள (அந்த) உயிரைத் துருவிட என்று இயைத்துப் பொருள் கொள்ள லும் பொருந்தும்.

பாடபேதம் : உள்ள முள்ளுற் றுயிரைத் தொடருமால். (125)

### இராமன் தெளிதல்

**ஏகு நல்வழி யல்வழி யென்மனம்**
**ஆகு மோவதற் காகிய காரணம்**
**பாகு போன்மொழிப் பைந்தொடி கன்னியே**
**ஆகும் வேறிதற் கையுற வில்லையே (126)**

**கொண்டுகூட்டு :** என் மனம் நல்வழி ஏகும் ; அல் வழி (செல்வது) ஆகுமோ ? அதற்கு ஆகிய காரணம் பாகு போல் மொழிப் பைந்தொடி கன்னி(கையாக இருப்பதே) ஆகும். வேறு இதற்கு ஐயுறவு இல்லை.

**பொருள் :** என் மனம் நல்வழியிலே செல்லும் இயற்கை யுள்ளது. அது தீய வழியிலே செல்வது ஆகுமோ ? ஆகாது. நல் வழியிலேயே செல்வதாகும். அதற்கு இச் சமயத்தில் நல் வழியிற் சென்றதற்கு—அவள்பாற் சென்றது நல்வழி யென்ப தற்கு—தகுதியான காரணம் அவள் கன்னிகையா யிருத்தல் ஆகும். இதற்கு வேறு காரண மிருப்பதாகச் சந்தேக மில்லை.

அல் வழி - (நல்வழி) அல்லாத (தீய) வழி. பைந்தொடி - பசுமை யான (பொன்) வளையல் (உடையாள்). கன்னி - கல்யாண மாகாத பெண். ஐயுறவு - சந்தேகம். ' ஏகும் நல்வழி அல்வழி ' என்பதற்குச் ' செல்லுதற் குரிய நல்வழி அல்லாத (தீய) வழி ' யென்றும் பொருள் கொள்ளலாம்.

மேல் 120-ம் பாட்டில் உள்ள ' கனியும் போல்பவன் ' என்பதை எழுவாயாகவும், 121 முதல் இந்த 126-ம் பாட்டு வரை கூறியிருப்பதைச் செயப்படு பொருளாகவும் கொண்டு, ' என்ருன் ' என்ற பயனிலை வரு வித்துப் பொருள் முடிபு செய்க.

எப்பொழுதும், தீய கருத்துக்களைத் தோன்றின மாத்திரையே விலக்கி, நல்ல கருத்துக்களை மட்டும் தொடுத்துச் சிந்திக்கும் இயல்புடை யாரது மனத்திலே அபூர்வமாக ஒரு கருத்துத் தோன்றி நீடித்திருப்ப தானல், அது தீக் கருத்தா யிருத்தல் இயல்பன் றென்பதைக் குறிப்பித்துக் கம்பர் தம் கதாநாயகனது மனத் தூய்மையை இந்தப் பாட்டிற் புலப் படுத்தி யிருக்கின்ருர். இங்கே இராமன் கூறியதுபோலச் சாகுந்தல நாடகத்தில், கதாநாயகன் கதாநாயகியை ஆலோசியாது காதலித்த பின்பு அவள் மணஞ் செய்தற் குரியளோ என்ற சந்தேகம் தோன்றியபோது கூறியதையும், அவள் கொண்டிருந்த தவவேடம் நிலையான தன்றென்றும் அவளை வளர்த்த பிதா அவளைக் கல்யாணம் செய்விக்கக் கருதியுள்ளாரென் றும் தெரிந்தபோது அவன் தன் மனத்தை நோக்கி, ' மனமே ! நீ தீண்டக் கூடாத தீக் கங்கென்று பயந்தவள் மகிழ்ந்து வணைந்துகொள்ளும் மாணிக்க மாயுள்ளாள் ' என்று கூறியதையும் இப்பாட்டு நினைவுகூரச் செய்கின்றது.

சீதை போல இராமனும், மாலை, மாலைக்குப் பின்னும் நிலவுக்கு முன் னும் உள்ள இருள், நிலவு ஆகிய மூன்றினுலும் வருந்தினுயினும், சீதை அம் மூன்றையும் நொந்தாளென்றும், இராமன் நிலவை மட்டும் நொந்தானென்றும் கவி கூறியிருப்பது கவனிக்கத் தக்கது. இதன் காரணம் இராமனது விரகதாப வருணனையைக் கவி ஆரம்பிக்கும் சமயம் மாலையும் இருளும் நீங்கிச் சந்திரோதயமா யிருந்ததே. அதுவரை இராமன் விசுவாமித்திரனுதியரோடிருந்ததனுல் தன் வேட்கையை அடக்கி யிருந்தா னென்பது தெளிவாம். (126)

### இரவு கழிதலும் உதய மாதலும்

இரவு கழிந்தது. இராத்திரியாகிய இராசனது வெண் கொற்றக் குடை வீழ்ந்தாற் போலவும், மேற்றிசைப் பெண்ணின் முத்துச் சுட்டி அற்று வீழ்ந்தாற் போலவும், சந்திரன் மேற்புறக் கடலுள் தாழ்ந்து மறைந்தான். திசைகளாகிய மாதர்கள் தங்கள் நாயகனாகிய சந்திரன் பிரிந்து போனதனால், தங்கள் மேலே பூசியிருந்த வெண் கலவைச் சாந்தை அழித்தாற் போலச் சந்திரிகை ஒழிந்தது. அந்தச் சமயத்திலே, கருமையான யானைத் தோலைப் போர்த்த சிவபெருமான் போல, இருள் மூடிய உதயகிரியிலே, அக் கடவுளது நெற்றியைப் பிளந்து விளங்கும் சிவந்த அக்கினிக் கண் போலச் செஞ்ஞாயிறு உதய மாயிற்று.

### சூரியோதய வருணனை

**பண்டுவருங் குறிபகர்ந்து பாசறையிற்**
**பொருள்வயினிற் பரிந்து போன**
**வண்டுதொடர் நறுந்தெரிய லுயிரனைய**
**கொழுநர்வர மணித்தே ரோடும்**
**கண்டுமனம் களிகூர வொளிசிறந்து**
**மெலிவகலுங் கற்பினார் போல்**
**புண்டரிக முகமலர வகமலர்ந்து**
**பொலிந்தனபூம் பொய்கை யெல்லாம்** **(127)**

**கொண்டுகூட்டு :** பண்டு வரும் குறி பகர்ந்து பாசறையின் பொருள் வயினின் பரிந்து போன வண்டு தொடர் நறும் தெரியல் உயிர் அனைய கொழுநர் மணித்தேரோடும் வரக்கண்டு, மனம் களிகூர ஒளி சிறந்து, மெலிவு அகலும் கற்பினார் போல், பூம் பொய்கை எல்லாம், புண்டரிக முகம் மலர, அகம் மலர்ந்து பொலிந்தன.

**பொருள் :** பிரியும் முன் திரும்பி வரும் காலத்தின் அடையாளத்தைச் சொல்லிப் போரையேனும் பொருளையேனும் விரும்பிப் பிரிந்துபோன நாயகர் வரக்கண்டு, உளம் களிகூர உடல் ஒளி மிகுந்து பிரிந்த மெலிவு நீங்கும் கற்புடைய மாதர் போல, சூரியன் தேரில் வரக்கண்டு தாமரைக் கொடிகளின் மலர்களாகிய முகங்கள் மலரா நிற்க, அதனால் பொய்கைகளெல்லாம் அழகு மிகுந்து விளங்குவன வாயின.

பண்டு - முன். வரும் குறி - திரும்பிவரும் காலத்தின் அடையாளம், அதாவது கார்கால ஆரம்பம் என்பது போன்றது. பாசறை - பகைவர் மேல் யுத்தஞ் செய்யச் சென்றோர் தங்கும் இடம்; இது பாடிவீடு, படை

வீடு என்று கூறப்படும். இங்கே போர் வயிற் பிரிதல் ( - யுத்தம் காரணமாக நாயகர் தம் நாயகிகளைப் பிரிதல்) குறித்து நின்றது. பரிந்து - அன்பு கொண்டு - விரும்பி; விரைந்து; பிரிந்து,—த. அ. சிறத்தல் - மிகுதல். அகம் மலர்ந்து - உள்ளம் பொலிவுற்று.

சூரியனை நாயகனாகவும், தாமரைகளை நாயகிகளாகவும் கூறுதல் கவி மரபு. இம் மரபு பற்றி வந்தது, சூரியனுக்குத் தாமரை நாயக னென்னும் பெயர். தாமரைகளுக்குக் கற்புடைய மாதரும், அவைகளைச் சூரியன் பிரியும் காலமாகிய அத்தமன சமயத்துக்கு நாயகர் பிரியும் காலமும், தாமரை மலர்களுக்கு மாதர் முகங்களும், இரவுக்கு நாயகநாயகியர் பிரிந்திருக்குங் காலமும், இரவில் தாமரைகள் கூம்பி யிருத்தலுக்குப் பிரிவுக் காலத்தில் மாதர் முகங்கள் வாடி யிருத்தலும், உதயகாலத்திற் சூரியன் தேரில் உதித்தலுக்குத் தாம் வரக் குறித்த காலத்தில் நாயகர் தேரில் வரலும், தாமரைகள் மலர்ந்து பொலிதலுக்கு மாதர் முகமலர்ந்து ஒளி சிறத்தலும், வெளிப்படையாகவும் குறிப்பாகவும் உவமானங்களாயிருத்தல் கண்டு களிக்கத்தக்கது.

பாடபேதம் : வயினிற் பிரிந்து. (127)

எண்ணரிய மறையினொடு கின்னரர்க
ளிசைபாட வுலக மேத்த
விண்ணவரு முனிவர்களும் வேதியருங்
கரங்குவிப்ப வேலை யென்னும்
மண்ணுமணி முழவதிர வானரங்கி
னடம்புரிவா ளிரவி யான
கண்ணுதல்வா னவன்கனகச் சடைவிரிந்தா
லெனவிரிந்த கதிர்க ளெல்லாம் (128)

கொண்டுகூட்டு: எண் அரிய மறையினொடு கின்னரர்கள் இசை பாட, உலகம் ஏத்த, விண்ணவரும் முனிவர்களும் வேதியரும் கரம் குவிப்ப, வேலை என்னும் மண்ணும் மணி முழவு அதிர, வான் அரங்கில் நடம் புரி வாள் இரவி ஆன கண்ணுதல் வானவன் கனகச் சடை விரிந்தால் என, கதிர்களெல்லாம் விரிந்தன.

பொருள்: வேத பாராயணத்துடன் கின்னரர்கள் இசை பாடவும், ஞானத்தினும் பக்தியினும் உயர்ந்தோர் துதிக்கவும், தேவர்களும் தபோதனரும் அந்தணரும் அஞ்சலி வந்தனஞ் செய்யவும், சமுத்திரமாகிய முரசு முழங்கவும், ஆகாயமாகிய நடனசபையில் நர்த்தனம் செய்யும் சூரியனாகிய சிவனுடைய பொன்னிறச் சடை நர்த்தனம் செய்தலால் அவிழ்ந்து நாற்றிசையும் பரந்தாற்போலச் சூரிய கிரணங்கள் எங்கும் பரந்தன.

எண்ணரிய - அளவில்லாத. மறை - வேதம். இசை - இராகம்;

புகழ். மறையினெடு இசை பாட - வேதத்தை (உச்சரித்தலுடன்) இராகத்தோடு பாட ; வேதத்துடன் புகழைப் பாட. உலகம் - உயர்ந்தோர். கரம் - கை. வேலை - கடல். மண்ணும் மணி முழவு - மார்ச்சனை பூசப்பட்ட அழகிய முழவு. அதிர்தல் - முழங்குதல். வான் - ஆகாயம். அரங்கு - நடனசாலை. வாள் - ஒளி. இரவி - சூரியன். கண் நுதல் வானவன் - (ஒரு) கண் நெற்றியில் (உள்ள) தேவன் - சிவன். கனகச் சடை - பொன் (நிறச்) சடை.

ஆகாயம் சிற்சபைக்கும் ; சூரியன் அச்சபையில் ஆடும் சிவனுக்கும், உதய சூரியனது சிவந்த கதிர்க்கற்றை சிவனுடைய செஞ்சடைக் கற்றைக்கும், அந்த உதய சூரியன் எதிரிற் கடல் ஒலித்தல் நடேசர் சந்நிதியில் முரசு முழங்குதலுக்கும், ஒப்பு. கின்னரர் வேதத்துடன் இசைபாடலும், விண்ணவரும் முனிவரும் வேதியரும் கரம் குவித்தலும், ஆகிய வழிபாடுகள், உதய சூரியனுக்கும் சிவனுக்கும் பொது. (128)

இராமன் துயில் நீங்குதல்

கொல்லாழி நீத்தங்கோர் குனிவயிரச்
 சிலைதடங்கை கொண்ட கொண்டல்
எல்லாழித் தேரிரவி யிளங்கரத்தா
 லடிவருடி யனந்த றீர்ப்ப
அல்லாழிக் கரைகண்டா ளுயிரவாய்
 மணிவிளக்க மழலுஞ் சேக்கைத்
தொல்லாழித் துயிலாதே துயராழி
 யிடைக்கிடந்து துயில்கின் ருனே (129)

**கொண்டுகூட்டு :** கொல் ஆழி நீத்து ஓர் குனி வயிரச் சிலை தடம் கை கொண்ட கொண்டல், ஆயிரவாய் மணி விளக்கம் அழலும் சேக்கையில் தொல் ஆழியில் துயிலாதே, துயர் ஆழி இடைக் கிடந்து துயில்கின்ருன், எல் ஆழித் தேர் இரவி இளம் கரத்தால் அடி வருடி அனந்தல் தீர்ப்ப, அல் ஆழிக் கரை கண்டான்.

**பொருள் :** உலகத்தார் துன்பம் நீங்கும்படி இராவணுதி இராக்கதரைச் சங்கரிக்கும் பொருட்டுச் சக்கரத்தை நீக்கிக் கோதண்டத்தைக் கைக்கொண்ட திருமாலாகிய இராமன், ஆயிரம் வாய்களிலும் இரத்தின தீபங்கள் ஒளிர்கின்ற அநந்த சயனத்திலே திருப்பாற்கடலிலே இனிதாகத் தூங்காமல் விரகவேதனைப்பட்டுத் துன்பக் கடலிலே தூங்குகின்றவனை உதய சூரியன் இளங் கிரணக் கைகளால் அடிவருடி தூக்கம் நீக்க, இரவாகிய கடலினது கரையைக் கண்டான்.

கொல் - (பகைவரைக்) கொல்லும். ஆழி - சக்கரம். குனித்தல் - வளைத்தல். வயிரச் சிலை - வன்மையான வில். தடம் - அகலம். கொண்

டல் - மேகம் (போன்ற இராமன்). எல் - ஒளி. ஆழி - உருள் - சக்கரம். இரவி - சூரியன். கரம் - கை; கிரணம்; சிலேடையாக இரு பொருளும் குறித்தது. அனந்தல் - நித்திரை. தீர்ப்ப - நீக்க. அல் - இரவு. ஆழி - கடல். சேக்கை - படுக்கை. தொல் ஆழி - பழமையான (திருப்பாற்) கடல். துயர் ஆழி - துன்பக் கடல்.

துன்பம் எட்டிப் பார்க்கக் கூடாத பரமாநந்த தசையிலிருக்கும் பகவான், மனிதர் துன்பத்தை நீக்க மனிதனாகப் பிறந்த இடத்தே சாதாரண மனிதர்போலத் துன்பமுறுதல் பரிதாபகரமான தென்பதனை உணர்த்தப் பாற்கடலில் தூங்குவோன் துன்பக் கடலுள்ளே தூங்குகின்றானென்று நயம்பட உரைத்தார். உயர்ந்தோர் துயிலா நிற்பின், அவரைத் துயிலுணர்த்த வேண்டுவோர் அடிவருடல் முறைமையென்பது அற நூலின் துணிபாதலால் 'இரவி இளங்கரத்தா லடிவருடி அனந்தல் தீர்ப்ப' என்றார். மெல்லென்றிருத்தல் வேண்டுதலின் 'இளங் கரத்தால்' என்றுங் கூறினர்.—இ. நா. (129)

குலப் பெருமை விவரித்தல்

சூரியோதயத்தில் நித்திரை நீங்கி யெழுந்த இராமன், காலைக் கடன்களை முடித்து, விசுவாமித்திரன் இலக்குமணனுடன் சனக ராசனது வேள்விச்சாலையை அடைந்தான். சனகன் வேள்வியை நிறைவேற்றிவிட்டுத் தன் அரண்மனையைச் சேர்ந்து அங்கே சபாமண்டபத்திலே தன் பக்கத்திலே இராம லக்குமணரை இருக்கச் செய்து முனிவனோடு வீற்றிருந்தான்.

இருந்தகுலக் குமரர்தமை யிருகண்ணும்
முகந்தழகு பருக நோக்கி
அருந்தவனை யடிவணங்கி யாரையிவ
ருரைத்திடுமி னடிகளென்ன
விருந்தினர்க ணின்னுடைய வேள்விகா
ணியவந்தார் வில்லுங் காண்பார்
பெருந்தகைமைத் தசரதன்றன் புதல்வரென
வவர்தகைமை பேச லுற்றான் (130)

கொண்டுகூட்டு: (சனகன்,) அரும் தவனை அடி வணங்கி, இருந்த குலக் குமரர்தமை இரு கண்ணும் முகந்து அழகு பருக நோக்கி, 'அடிகள்! இவர் ஆர்? உரைத்திடுமின்' என்ன (விசுவாமித்திரன்), விருந்தினர்கள்; நின்னுடைய வேள்வி காணிய வந்தார்; வில்லும் காண்பார்; பெருந் தகைமைத் தசரதன் தன் புதல்வர்' என, அவர் தகைமை பேசலுற்றான்.

பொருள்: சனகன், விசுவாமித்திரனை அடிதொழுது, தன் பக்கத்திலே இருந்த இராசகுமாரரை அவர்களுடைய அழகை

முகந்து அருந்தும்படி விரும்பியவன் போலப் பார்த்து, ‘ சுவாமி களே ! இவர்கள் யார் ? இவர்கள் வரலாற்றைச் சொல்லுங்கள்.’ என,—விசுவாமித்திரன், இவர்கள் உமது விருந்தினர் ; உமது வேள்வியைப் பார்க்க வந்தார்கள் ; “இதனை எவர் வளைத் தாரோ, அவர் சீதையை மணஞ் செய்யப் பெறுவர்” என்று நீர் வைத்திருக்கும் வில்லின் ஆற்றலையும் பார்க்கச் சொன்னால் பார்க்கத்தக்கவர்கள் ; தசரத குமாரர் ’ என்று சொல்லி, அவர் களுடைய குலத்தின் பெருமையைக் கூறுவா னாயினன்.

குலக் குமரர் என்பதில், குலம், குலமகள், குலமணி, என்பவைகளிற் போல உயர்ந்த சாதியைக் குறித்து நின்றது. பருகல் - குடித்தல் ; விழுங் குதல். ஆரை என்பதில் ஐ அசை.—சிந்தா. அடிகள் - தேவரீர். காணிய - காண. இரண்டாம் ‘ தகைமை ’யின் பொருள் ‘ பெருமை ’ —உரி. நிக. 239. ‘ அடிகள் ! இவர் யாரை உரைத்திடுமின் ’ எனக் கூட்டுக.

‘ வில்லும் காண்பார் ’ என்பதனில் வரும் உம்மையிற் குறிப்பாகவுள்ள இனிய பொருள் ஊன்றி நோக்கத் தக்கது. இவர்களும் மற்றவர்களைப் போல வேள்வியைக் காணவந்தவர்களாயினும், இவர்கள் அவர்களைப் போலல்லாமல், வில்லின் வன்மை முழுவதையும் பார்க்க வல்லரென்ற கருத்தை அந்த உம்மை குறிப்பித்து நின்றது. இராம லக்குமணர் அவ் வாறு பார்க்க வல்லவரென்பதை நம்பச் செய்ய ‘ மகனறிவு தந்தை யறிவு ’ என்றபடி அவர்கள், (சம்பராசுரனை வென்றது முதலிய) பெருந் தகுதிப் பாடுகளுடைய தசரதனது குமார ரென்று கூறி, அந்த நம்பிக்கையை வலியுறுத்த, அவர்கள் குலத்து முன்னோர் ‘ செயற்கரிய செய்வார் பெரியர் ’ என்பதற்கு உதாரணங்களாக விளங்கினார்கள் என்பதைக் கூறுமுகத்தால் அடுத்த குலமுறை கிளத்து படலத்துக்குத் தோற்றுவாய் மிகப் பொருத்த மாகச் செய்யப் பட்டிருக்கின்றது. ‘ அவர் குலப் பெருமை அவர் பெருமை ’ என்றுணர்த்த, ‘ அவர் குலத்தகைமை பேசலுற்றான் ’ என் றது, ‘ அவர் தகைமை பேசலுற்றான் ’ என்று குல முறை கூறத் தொடங்கி, ‘ ஈதிவர்குலவரலாறு ’ என முடியாமல் ‘ ஈதிவன்றன் வரலாறு ’* என முடித்தார்.

‘ வில்வல்லான் ’ என்பது வில்லை வளைத்தலும் நாணேற்றலும் அம் பெய்தலும் செய்ய வல்லா னென்று பொருள் படுதலைக்கொண்டும், ‘ முனை வன் கண்டது (-செய்தது) முதல் நூலாகும் ’ என்பதிற் போலக் காண லுக்குச் செய்தலென்னும் பொருளுண்மை பற்றியும், ‘ வில்லுங் காண் பார் ’ என்பதற்கு சீதை மணப் பொருட் டுள்ள வில்லை வளைத்தல் முதலிய மேற்கூறிய முத்தொழிலும் செய்வா ரென்றும் பொருள் கொள்ளலாம். (130)

பாட பேதம் : முகத்தழகு.

---

* கீழ், 135-ம் பாட்டு

# 11. குலமுறை கிளத்து படலம்

இராமனது குல மரபு கூறுவது*

### இக்ஷ்வாகுவின் பெருமை

**பிணியரங்க வினையகலப் பெருங்காலந் தவம்பேணி**
**மணியரங்க நெடுமுடியாய் மலரயனே வழிபட்ட**
**பணியரங்கப் பெரும்பாயற் பரஞ்சுடரை யாங்காண**
**அணியரங்கந் தந்தானை யறியாதா ரறியாதார். (131)**

கொண்டுகூட்டு: 'மணி அரங்கு அம் நெடு முடியாய்! பிணி அரங்க வினை அகல, பெரும் காலம் தவம் பேணி மலர் அயன் வழிபட்ட பணி அரங்கு அப் பெரும் பாயல் (உடைய) பரஞ்சுடரை யாம் காண அணி அரங்கம் தந்தானை அறியாதார், அறியாதார்.

பொருள்: 'ஸ்ரீரங்கத்தில் பரஞ்சோதியாகிய ரங்கநாத சுவாமியைக் கொண்டுவந்து பிரதிட்டை செய்தவனை அறியா தவர் ஒருவருமிலர்; எவரேனு முளரேல், அவர் மூடரே.

பிணி - நோய். அரங்க - சிதைய—கெட. மணி அரங்கு அம் நெடும் முடியாய் - இரத்தினங்கள் அழுந்திய (அழுத்தப்பட்ட) அழகிய பெரிய கிரீடத்தை யுடைய சனக ராசனே. பணி அரங்கு அப்பாயற் பரஞ்சுடர் - பணிகளை (- காளிங்கன் ஆதிசேட னென்னும் பாம்புகளை, முறையே) அரங்கு (- ஆடும் இடம்) பாயல் (- படுக்கை) ஆக வுடைய பரஞ்சோதி. அப் பாயல் என்பதில் அ என்பது பலர் அறி சுட்டு. யாம் காண - நாங்கள் தரிசனை செய்ய. அணி அரங்கம் தந்தான் - அழ குடைய ஸ்ரீரங்க த்தலத்தில் கொண்டு வந்தவன் (ஆகிய இக்ஷ்வாகு என்ற அரசன்). அறியாதார் - தெரியாதவர்; மூடர். இப்பாட்டுத் திரிபாக அமைந் துள்ளது காண்க. 'அறியாதார் அறியாதார்' என ஒரு சொல்லையே மடக்கி யுரைத்து இக்ஷ்வாகு என்ற பிரசித்தனை அரசனைப் பற்றி அறிவில்லாதவர் அறிவில்லாதவரென நயம்படக் கூறியது பாராட்டற் பாலது. (131)

**அரசனவன் பின்னோரை யென்னலு மளப்பரிதால்**
**உரைகுறுக நிமிர்கீர்த்தி யிவர்குலத்தோ னொருவன்காண்**
**நரைதிரைமூப்பி வையெய்தி யிந்திரனு நந்தாமற்**
**குரைகடலை நெடுவரையாற் கடைந்தமுதங் கொடுத்தானும்**

கொண்டுகூட்டு: 'அரசன் அவன் பின்னோரை என்னலும் அளப்பு அரிது. இந்திரன் நரை திரை மூப்பு இவை எய்தி நந்தாமல்

* முறை - முறைமை - மரபு - பாரம்பரியம்.—சூடா. நிக.

குரைகடலை நெடும் வரையால் கடைந்து அமுதம் கொடுத்தான், உரை குறுக நிமிர் கீர்த்தி(யுடைய) இவர் குலத்தோன் ஒருவன்.

பொருள் : 'அவனுடைய பின்னோர்களை எத்தனைய ரென எதனாலும் கணக்கிடுதல் இயலாதது. இந்திரன் இறவாமல் அவனுக்குக் கடலை மலைகொண்டு கடைந்து அமுதம் கொடுத்தோன் இவர் குலத்தோன் ஒருவனே.

அரச னவன் - அரசனாகிய அவன் - இப்படலத்து 3-ம் பாட்டிற் குறித்த கருத்தன். என்னாலும் - எதனாலும் - எந்த அளவு கருவியாலும். என் - யாது - எது. என்னாலும் என்பதனில் உள்ள 'என்,' 'என்னாலும் வேண்டுவ என்றிகழ்ப'* என்பதனில் உள்ள 'என்' போல்வது. உரை குறுக நிமிர் கீர்த்தி - தன்னை எடுத்துச் சொல்லப் புகுந்தார் சொல்லச் சொல்ல அமையாமல் அவர் சொல் குறுகும்படி மேலும் மேலும் வளர்கின்ற கீர்த்தி. கீர்த்தி இவர் - கீர்த்தியையுடைய இவர். இந்திரனும் என்பதில் உம்மை அசைநிலை.—புற. நா., 214. நந்தாமல் - கெடாமல்; இங்கே இறவாமல் என்ற பொருள் குறித்தது. குரைகடல் - ஒலிக்கின்ற கடல். நெடுமலை - பெரியமலை. நெடுமை - பெருமை.—சிந்தா. கொடுத்தானும் என்பதில் உம்மை இறந்தது தழுவியது.

'என்னாலும் அரிது - எனக்கும் அரிதாகும்' என்றும், இதில் உள்ள 'உம்மை உயர்வு சிறப்பு' என்றும் உரை உண்டு. இவ் உரைகாரர் விசுவாமித்திரன் தற்புகழ்ச்சியாக 'என்னாலும்' என்றானென்று கருதினார் போலும். 'நரை திரை மூப்பிவை மாற்றி,' என்றும் பாடம். அதற்கு நரை திரை மூப்பாகிய இவைகளை இந்திரனுக்கு நீக்கி அவன் இறவாமல் அவனுக்கு அமுதங் கொடுத்தவன் எனப் பொருள் கொள்க. மாற்றுதல் - நீக்குதல்.—ஐங்குறு. 'உரை குறுக நிமிர் கீர்த்தி' என்ற சொற்றொடர், சொற்சுருக்கமும் பொருட் பெருக்கமும் தொனிப் பொருத்தமும் வாய்ந்து, நினைக்கும்தோறும் மனத்துக்கின்பம் பயப்பதா யுள்ளது. கம்பர் ஒரு தனிப் பாட்டில் 'வாணன் புகழ்க்கெல்லை வாழ்த்துவோர் நாவெல்லை' என்றதை இச் சொற்றொடர்க்கு வியாக்கியானமாகக் கொள்ளலாம். (132)

**வில்லென்னு நெடுவரையால் வேந்தென்னுங் கடல்கலக்கி**
**எல்லென்னு மணிமுறுவ லிந்துமதி யெனுந்திருவை**
**அல்லென்னுந் திருநிறத்த வரியென்ன வயனென்பான்**
**மல்லென்னுந் திரள்புயத்துக் கணியென்ன வைத்தானே (133)**

கொண்டுகூட்டு : 'அயன் என்பான் வில் என்னும் நெடும் வரையால் வேந்து என்னும் கடல் கலக்கி எல் என்னும் மணி முறுவல் இந்துமதி எனும் திருவை, அல் என்னும் திரு நிறத்த அரி என்ன, மல் என்னும் திரள் புயத்துக்கு அணி என்ன வைத்தான்.

* நாலடியார், 156.

**பொருள் :** 'இவர்கள் பாட்டனாகிய அயனென்ற அரசன், வில்லாகிய மலையினால் அரசராகிய கடலைக் கலக்கி, மலையாற் கடலைக் கலக்கித் திருமகளை மார்பில் அணிந்த திருமால் போல, இந்துமதி யென்னும் திருமகளைத் தோளில் ஆபரணமாக அணிந்தான்.

எல் - ஒளி. மணி முறுவல் - முத்துப்(போன்ற) பல்; அழகு(ஆன) சிரிப்பு. திருவை - இலக்குமியை. திருநிறத்த - அழகான நிறத்தையுடைய. அரி - திருமால். தோளில் ஆபரணமாக அணிந்தான் என்பது மணஞ் செய்து கொண்டான் என்பதைக் குறிப்பித்தது.

'எல் என்னும்' என்பதிலும், 'மல் என்னும்' என்பதிலும், வரும் 'என்னும்' என்ற சொல், தனக்குச் செம்பொருளான 'என்கின்ற' அல்லது 'ஆன' எனப் பொருள்படாமல், அடுத்து நின்ற சொற்களின் பொருளுக்குப் பொருந்தச் 'செய்கின்ற' என்ற பொருள்பட நின்றதன் காரணம் அச்சொல் எதுகையில் வந்ததே. கடலைக் கலக்கித் திருவை அடைந்து அணியென வைத்ததாக, அயன் அரி இருவருக்கும் பொருந்தக் கூறிய நயம் ஓர்ந்து உணர்ந்து உவத்தற்குரியது. (133)

### இராம லக்குமணர் பிறப்பு வளர்ப்பு

'அந்த அயனுடைய குமாரன் தசரதன். அவனுடைய பெருமையை அறியாதவரில்லை. அவன் குமாரர் இவர்கள். இவர்களது பெருமை பிரமதேவனுக்கும் சொல்லுதற் கரியது. ஆயினும் யான் அறிந்தபடி ஒருவாறு சொல்கிறேன் : இவர்கள் பிதா, தனக்குப் பின் உலகத்தைக் காக்கச் சந்ததி யில்லை யென்று வருந்தி இரந்து, கலைக்கோட்டு முனிவன் அருளால், இவ்வுலகமே யன்றி எவ் வுலகமும் காக்கவல்ல புத்திரராக, இந்த இராம லக்குமணரையும் பரத சத்துருக்கனரையும் பெற்றான். இந் நால்வரும், நால் வேதங்களை ஒத்தவராய், தீவினை செய்த தீவினைப் பயனும், நல்வினை செய்த நல்வினைப் பயனும் சேர்ந்து உருவெடுத்து வளர்ந்தாற்போல வளர்ந்து, கலைகள் கற்பதில் கலைமகட்குத் தலைவரானார்கள். இவர்களைப் பெற்றதனால் தசரதன் பெயர்மட்டில் பிதாவாக, உபநயனஞ் செய்வித்துச் சகல கலைகளுடன் வேத மோதுவித்து வளர்த்து உண்மைப் பிதாவானவன் வசிட்டன். என் வேள்விக்கு இராக்கதர் இடையூ றியற்றாமல் காக்கும் துணையாக இவ்விருவரையும் தசரதனிடம் பெற்று இவர்களுடன் வனத்திற்கு வந்தேன். வரவே, அரக்கர் யாரினும் அதி மூர்க்கமுடைய தாடகையே முதல் முதலாக எதிர்ந்தாள்.

**அலையுருவக் கடலுருவத் தாண்டகைதன் னீண்டுயர்ந்த
நிலையுருவப் புயவலியை நீயுருவ நோக்கையா
உலையுருவக் கனலுமிழ்கட் டாடகைதன் னுரமுருவி
மலையுருவி மரமுருவி மண்ணுருவிற் றொருவாளி (134)**

கொண்டுகூட்டு : 'ஐயா! அலை உருவக் கடல் உருவத்து ஆண்டகை தன் நீண்டு உயர்ந்த நிலை உருவப் புய வலியை நீ உருவ நோக்கு! ஒரு வாளி, உலை உருவக் கனல் உமிழ் கண் (உடைய) தாடகைதன் உரம் உருவி, மரம் உருவி, மலை உருவி, மண் உருவிற்று!

பொருள் : 'சனக ராசனே! அலை வடிவமான கடலின் நிறத்தையுடைய, ஆண்மையிற் சிறந்த இவனுடைய நிலையான அழகுடைய தோள்களையும் அத் தோள்களின் பருமைக்குத் தக்க பலத்தையும் நீ உனது கண்கள் தைத்து உருவும்படி ஊன்றிப் பார்ப்பாயாக! அந்தத் தோட் பலத்தினால் எய்த ஓர் அம்பு, கொல்லனது உலையில் உள்ள செந் தீப்போலும் அக்கினி கக்கிடும் கண்களையுடைய தாடகையின் மார்பை உருவி, அடுத்து நின்ற மரத்தை உருவி, அப்பால் மலையை உருவி, இறுதியாக மண்ணையும் உருவிப்போனது.

'ஐயா!' என்ற அருமைச் சொல்லில் அமைந்து கிடக்கும் அருத்தம் ஆழ்ந்து ஆராயத்தக்கது. அது, 'அரசனே!' என்ற சாதாரணப் பொருளைத் தந்த மட்டிலே நில்லாமல், 'காதல் என்தன் உயிர்மேலும் இக் கரியோன் பால்உண்டால்' என்று விசுவாமித்திரன் அடுத்த பாட்டில் கூறுமாறு அவனுக்கு இராமன்பாலுள்ள நயப்பையும், இராமனது வீரத்தின் பாலுள்ள வியப்பையும், சனகனும் அடைந்து ஈடுபடச் செய்யும்படி கருதி, தான் கூறப் போவதைக் கூர்ந்து கவனிக்கச் செய்தற்காகப் பிரிய மொழி கூறி அழைத்த விசேடமான பொருளையும் தந்து நின்றது. மேல் 130-ம் கவியில் 'வில்லுங் காண்பார்' என்றதை நம்புவிக்க இராமனது முன்னோர் அருஞ் செயல்களைக் கூறியவன் இப்போது இராமனது அருஞ் செயல்களைக் கூறத் தொடங்கினான். (134)

### இராமன் அரும் செயல்கள்

'இவன் விட்ட அம்பு ஒன்றினால் தாடகை புத்திரரில் ஒருவனாகிய சுவாகு மடிந்தான்; மற்றொரு புத்திரனாகிய மாரீசன் போன இடம் தெரியாது போயினான். யான் தவஞ் செய்து பெற்றனவாய், ஏவினால் உலக முழுவதையும் கடலோடும் மலையோடும் எரித்துவிட வல்லனவாய், என்னால் இவனுக்குக் கொடுக்கப் பட்டிருக்கின்ற ஆயுதங்கள், அவைகளைக் கொடுத்த நானுமே

நாணமடைய, இவனுக்கு ஏவல் செய்கின்றன. இன்னும் இவன் மகிமையைக் கூறுகின்றேன், கேள்.

**கோதமன்றன் பன்னிக்கு முன்னையுருக் கொடுத்ததிவன்**
**போதுநின்ற தெனப்பொலிந்த பொலன்கழற்காற் பொடிகண்**
**காதலென்ற னுயிர்மேலு மிக்கரியோன் பாலுண்டால் [டாய்**
**ஈதிவன்றன் வரலாறும் புயவலியு மெனவுரைத்தான் (135)**

கொண்டுகூட்டு : 'இவன் போது நின்றது எனப் பொலிந்த பொலம் கழல் (உடைய) காற்பொடி, கோதமன் தன் பன்னிக்கு முன்னை உருக் கொடுத்தது கண்டாய்! இக் கரியோன் பால் என் தன் உயிர் மேலும் காதல் உண்டு. ஈது இவன் தன் வரலாறும் புய வலியும்,' என (விசுவா மித்திரன்) உரைத்தான்.

பொருள் : 'ஒரு நாள் மலர்ந்து, மறு நாள் நிலையா தழியும் இயல்புடையது பூ. அப்படிப்பட்ட பூவானது நிலை பெற்றது போல விளங்கா நின்ற, இவனுடைய பாதத்திற்படிந்த அளவற்ற பல தூளிகளுள் ஒரு தூளியே சாப வசத்தினால் நெடுங்காலம் கல்லா யிருந்த அகலிகைக்குச் சாப விமோசனஞ் செய்து முந்திய வடிவத்தை அருளிய மகிமை யுடையது என்றால், அப் படிப்பட்ட பாதத்தின் மகத்துவத்தைக் கூற முடியுமோ! அதுவே கூற முடியா தென்றால், கேவலம் அதமாங்கமேயான அப்பாதத்தோடு உத்தமாங்கமான சிரசு உள்பட மற்றெல்லா அங்கங்களும் அமைந்த முழுத் திருமேனியின் வைபவம் இவ்வள வென்று கூறுவது எங்ஙனம்! இத்தகைய பெரியானாகிய இந்தக் கரியான்பால் எனக்கு என் உயிர்மே லுள்ளதினும் அதிகமான அன்பு உள்ளது. யான் இப்போது ஒருவாறு கூறியபடி இவ் வளவு பெருமையுடையது இவன் வரலாறு! இவ்வளவு பெருமை யுடையது இவன் புயபலம்! தெளிவாயாக!' என்று விசுவாமித் திரன் கூறினான்.

பன்னி - மனைவி. போது - மலர். நின்றது - நிலைத்தது - நிலையா னது. பொலன் - பொன்; 'பொலம்' என்பதன் மரூஉ. கழல்-வீரர் காலில் அணியும் ஓர் ஆபரணம். கரியோன் - கரு நிற முள்ளவன் - இராமன். ஈது - இத்தன்மை யுள்ளது; இவ்வளவு பெருமை யுடையது. 'ஈது' தொகுதி யொருமை என்றாயினும், 'வரலாறு ஈது', 'புயவலி யீது', என்று பிரித்துக் கூறியாயினும், இலக்கண அமைதி செய்துகொள்க.

மேற்கூறிய 'இத்தன்மை உள்ளது', 'இவ்வளவு பெருமை யுடை யது', என்ற கருத்துக்களை வியப்பொடு கூறு மிடங்களில், கம்பர், 'இது'

'ஈது', என்ற சொற்களால் நயம்படக் கூறுவர். 'குலம் இது! கல்வி ஈது!' என்ற வாலி வதைப் படலப் பாட்டையும், 'அறிவும் ஈதே! உரு ஈதே!' என்ற சுந்தர காண்டப் பாட்டையும் நோக்குக.

காலிற் பட்டவற்றுள் ஒரு தூளே சாப விமோசனஞ் செய்த தென்று உரை செய்ததைக் 'கொடுத்தது' என்ற ஒருமைப் பயனிலை வலியுறுத் துதல் காண்க. தூள், துகள், தூளி, தூசி, சுண்ணம், பூழி, பூழ்தி, பொடி என்ற சொற்கள் புழுதி என்ற கூட்டப் பொருளாகிய ஒரு பொருள் குறித்தவை. இந்தத் தொகுதிப் பொருளில் ஒரு பகுதியை 'ஒரு தூளி' யென்றது, புழுதி போலச் சமுதாயப்பொருளாகிய மணலின் ஒரு பகுதியை 'மணல் ஒன்று' என்று 'அணி கொண்ட குரங்கினங்கள் அலை கடலுக்(கு) அப்பாலை — மணல் ஒன்று காணமல் மலை யெடுத்து மயங்கினவே' என்ற கலிங்கத்துப் பரணிப் பாட்டிற் கூறப்பட்டது போலக் கூறப்பட்டது. (ஒரு மணலின் சூடே கடலை வற்றச் செய்திருக்கு மென்பது அப்பாட்டின் குறிப்பு.)

'முன்னையுரு' வென்றது, இந்திரனுற் கற்பழிக்கப் பட்ட பின்னும் கல்லாகு முன்னும் இருந்த இழிவுற்ற வடிவத்தை யன்று; அது கௌதமன் ஏற்றுக் கொள்ளத் தகாத தென்று கூற வேண்டுவதின்று. கற்பழிக் கப்படு முன் கௌதமனது மனைவியா யிருந்த வடிவத்தையுமன்று: அது புதிய தல்லாததனுல் இராமன் கௌதமனுக்குக் கொடுத்தற் குரியதன்று. மற்றெவ் வடிவத்தையோ வெனின், கௌதம பன்னியாதற்கு முன்னிருந்த கன்னிப் பருவ வடிவத்தையே. இது புலப்படுமாறு, கம்பர், 'அகலி கைக்கு முன்னையுரு' வென்னுமல் 'கோதமன் றன் பன்னி (ஆனது)க்கு முன்னையுரு' என்முர் என்ற கருத்தை, ஸ்ரீ ரா. ராகவையங்கார், அகலிகை வெண்பா 2-ம் பதிப்பு, முகவுரை, xxix-ம் பக்கத்தில்,

> 'முந்த இவள் (அகலிகை) உற்ற உரு முண்டகத்தோன் கை சமைத்த(து,)
> இந்த உரு நின் (இராமருடைய) திருத்தாள் ஈந்ததால்; — அந்த உரு
> மா(சு) அடைவும் மாய்வும் உற்ற வா(று,) இவ் உரு, என்றும்
> ஆ(சு) அடைவும் வீவும் இல(து)ஆம்'

என்ற பாட்டுப் பொருளை விளக்குதற்குப் பீடிகையாகக் கூறி யுள்ளார்.

# 12. கார்முகப் படலம்

இராமன் நாண் ஏற்ற, சீதை மணப் பொருட்டுள்ள
வில் இற்றதைக் கூறுவது

## சிவதனுசை இராமன் நாண் ஏற்றும்படி சனகன் விரும்பல்

மாற்றம்யா துரைப்பது மாய விற்குநான்
றோற்றவா றெணமனந் துளங்கு கின்றதால்
நோற்றன ணங்கையு நொய்தி னையன்வில்
ஏற்றுமே லிடர்க்கட லேற்று மென்றனன் (136)

கொண்டுகூட்டு : (சனகன்,) 'மாற்றம் யாது உரைப்பது! மாய விற்கு நான் தோற்ற ஆறு எண்ண, (என்) மனம் துளங்குகின்றது. ஐயன் நொய்தின் வில்(லில் நாண்) ஏற்று மேல், நங்கை நோற்றனள், இடர்க் கடல் ஏற்றும்.' என்றனன்.

பொருள் : இவ்வாறாக விசுவாமித்திரன் கூற, சனகன், 'தேவரீர். "இவர் வில்லும் காண்பார்" என்றீர். அதற்கு மறு மாற்றம் நான் யாது கூறுவது? இதனை எவரேனும் வளைத்து என் பெண்ணை மணப்ப ரென்ற என் எண்ணம் நிறைவேறுமற் செய்து என்னைத் தோல்வி யடையச் செய்த அந்த மாயமான வில்லுக்கு நான் தோற்ற விதத்தை நினைக்க என் மனம் நடுங்கு கின்றது. அந்த நடுக்கத்தினால் முன் வளைக்க முயன்றவர்போல இவனும் வளைக்க மாட்டாமற் போவானோ என்ற பயம் உண்டா கின்றது. இவன் அந்த வில்லில் நாண் ஏற்றுவா னானால், சீதை தவஞ் செய்தவ ளாவாள்; அவள் கல்யாண மாகாமையால் வருந்திக்கொண்டிருக்கும் எங்களை யெல்லாம் துன்பக் கடலி னின்றும் இன்பக் கரையில் ஏற்றினவ னாவான்' என்றான்.

மாற்றம் - வார்த்தை. மாய வில் - வஞ்சனையையுடைய வில். (மாயப் பொய் - வஞ்சனையை யுடைய பொய்.—பரிபாடல் இருபதாவதன் உரை.) மாரீசனை மாய மானை 'வஞ்சனை மான்' என உருக்காட்டு படலம் 17-ம் பாட்டிற் கூறுதல் காண்க. அறிவில்லாத வில் வஞ்சனையையுடைய வில் லென்று பொருள்பட 'மாய வில்' என்றது, அது தோற்றத்தில் மற்ற விற்களைப் போன்று, உண்மையில் அவ் விற்கள் போல வளைக்கக் கூடா திருந்தமை பற்றி யென்க. துளங்குதல் - நடுங்குதல். நோற்றனள் - தவஞ் செய்தனள் - தவப் பயனை அடைந்தவள் - புண்ணியவதி. நங்கை - பெண் ணிற் சிறந்தவள். நொய்தின் - இலகுவாக; விரைவாக.

வில்லின் வன்மையையும், அவ் வன்மையால் அது இது வரையும் ஒருவராலும் வளைபடாமையையும், அதனால் நெடுங்காலம் சீதை கல்யாண மாகா திருத்தலையும் கருதி மனம் நடுங்குகின்ற சனகன், அவ் வில்லை இராமன் மிகவும் வருந்தியாயினும் வளைத்து நாணேற்ற வேண்டு மென்று கூறற்பாலனு யிருக்க, 'நொய்தின் (-எளிதாக - வருத்தமின்றி) ஐயன் (-இராமன்) வில்(லை வளைத்து நாண்) ஏற்றுமேல்' என்றது ஆராய்தற் குரியது. 'நொய்தின்' என்ற சொல் நிற்கும் தானத்தில் அது சிறந்த பொருள் பயக்கவில்லையாயினும், அத்தானம் மோனைத் தானமாத லால், பொருட் சிறப்பைப் பிரதானமாகக் கருதாமல் அச் சொல் புணர்க்கப் பட்ட தென, ஒரு சமாதானம் கூறலாம். பின் வரும் விசேடவுரையைக் கொண்டால், ஒரு சமாதானமும் கூறவேண்டிய ஆவசியகம் இல்லாமற் போதலை யன்றி, அந்த 'நொய்தின்' என்ற சொல் மிகச் சிறந்த பொருள் பயக்குமாறு பிரயோகிக்கப் பட்டுள்ளதாகக் கருதலாம்.

அதாவது: சனகன், இராமனைக் கண்டவுடனே மிகுந்த அன்பு பூண்டுவிட்டா னுதலால், அவன் இராமன் திறத்தில் 'என் பெனக்(கு) உருகு கின்ற(து) இவர் கின்ற(து) அள(வு) இல் காதல்—அன்பினுக்(கு) அவதி இல்லை'* என்ற சிந்தையனாய், இராமன் வருந்தி வில் வளைத்தற்கு மனம் சகியானாய் 'நொய்தின் ஐயன் வில் ஏற்றுமேல்' என்றான், என்பது.

'நொய்தின்', விரைவாக என்னும் பொருளில் அருகி வரும். அப் பொருள் கொண்டால், வில்லை விரைவாக வளைத்துவிட்டால், எல்லாருடைய துன்பமும் சீக்கிரமாக நீங்கிவிடுமென்ற விருப்போடு கூடிய கருத்துக் கொண்டு 'நொய்தின்' என்றான், என்க. 'நோற்ற பேற்றைப் பெற்றவளா வாள்' என்பதை 'நோற்றனள்' என்றும், 'வில்லை வளைத்து நாணேற்று மேல்' என்பதை 'வில் ஏற்று மேல்' என்றும், 'இடர்க் கடலி னின்றும் எங்களை இன்பக் கரை யேற்றும்' என்பதை 'இடர்க் கடல் ஏற்றும்' என்றும், பொருள் விளக்கம் சிறிதும் குன்றாமல் சுருங்கக் கூறியிருத்தல் கவனிக்கத் தக்கது. (136)

## வில்லின் வரலாறு

மேற்கூறியவாறு கூறிச் சனகன் அந்த வில்லைத் தருவித்து இராமனது கம்பீரத் தோற்றத்தையும் வில்லின் வலியினையும் சீதை கல்யாணமாகா நிலையினையும் சிந்திக்க, அச் சிந்தனையை அவன் முகக்குறியால் சதாநந்தன் அறிந்து, விசுவாமித்திரனை நோக்கி, 'தக்கன் உமாதேவியை அவமதித்தா னென்று, சிவாமிச னை வீரபத்திரன் இந்த வில்லுடன் அவன் யாகசாலை சேர்ந்து அவனையும் அவனுக்குத் துணையாயிருந்த தேவர்களையும் சிதைந்

* கிட்கிந்தா காண்டம், அநுமப் படலம், 15.

தோடச் செய்து, அவன் வேள்வித் தீ ஆறத் தன் கோபத் தீயும் ஆறினன். அப்போது அவன் இந்த வில்லை இந்தச் சனகனது முன்னோ ரொருவனிடம் வைத்துச் சென்றான். இனி, இவ்வில்லை வளைப்போன் மணத்தற்குரியவள் வரலாறும் கேளும்: நாங்கள் யாகம் செய்தற்கு நிலத்தைச் சுத்தப்படுத்தும் பொருட்டு வயிரக் கொழுவையுடைய பொற் கலப்பையினால் உழுதோம்.

**உழுகின்ற கொழுமுகத்தி னுதிக்கின்ற கதிரினொளி**
**பொழிகின்ற புவிமடந்தை யுருவெளிப்பட் டெனப்புணரி**
**எழுகின்ற தெள்ளமுதோ டெழுந்தவளு மிழிந்தொதுங்கித்**
**தொழுகின்ற நன்னலத்துப் பெண்ணரசி தோன்றினாள் (137)**

**கொண்டுகூட்டு :** 'உழுகின்ற கொழுமுகத்தின் உதிக்கின்ற கதிரின் ஒளி பொழிகின்ற புவிமடந்தை உருவெளிப் பட்டெனப்' புணரியில் எழுகின்ற தெள் அமுதோடு எழுந்தவளும் இழிந்து ஒதுங்கித் தொழுகின்ற நல் நலத்துப் பெண் அரசி தோன்றினாள்.

**பொருள் :** 'உழுத கொழுவின் முனையிலே, உதய சூரியன் போல ஒளி வீசுகின்ற பூமிதேவியினது உருவம் வெளிப்பட்டாற் போல, கடலில் உண்டாகிய அமுதத்துடன் தோன்றிய இலக்குமி தேவியும் தன் அழகு தாழ்வுற்று நாணி எதிர் நிற்கமாட்டாமல் ஒருபுறம் ஒதுங்கி நின்று வணங்கும்படியான மிக்க அழகுடைய பெண்ணரசி யாகிய சீதை தோன்றினாள்.

கொழுமுகம் - கொழுவின் முனை. முகம் - முனை—ச. அ. உதிக்கின்ற கதிர் - உதயமாகின்ற சூரியன். புணரி - கடல். இழிந்து - இழிவடைந்து - தாழ்ச்சியுற்று. நல் நலம் - நல்ல நலம் - மிக்க அழகு. நன்மை - மிகுதி. —ச. அ. நன்று—பெரிது—புறநா.

உதய சூரியனது ஒளி, செம்பொன் னிறமுடையதாய், (இளவெயி லெனப் பெற்று,) இதமான சூடுடையதாய், இனிதாயிருப்பதால், சுவர்ண நிறமுடைய சீதையினது திருமேனியின் திவ்விய தேசசுக்குச் சிறந்த உவமானமா யுள்ளது. இப் பாட்டின் பின் னிரண்டடிக் கருத்தை மிக இனிதாக வேறோ ராற்றால் 'தாமரை இருந்த தையல் சேடியாம் தரமு மல்லள்' என்று கவி பின்னர்க் கூறுவர். (137)

**குணங்களையென் கூறுவது கொம்பினைச்சேர்ந் தவையுய்யப்**
**பிணங்குவன வழகிவளைத் தவஞ்செய்து பெற்றதுகாண்**
**கணங்குழையா ளெழுந்ததற்பின் கதிர்வானிற் கங்கையெனும்**
**அணங்கிழியப் பொலிவழிந்த வாறொத்தார் வேறற்றார் (138)**

கொண்டுகூட்டு: ‘குணங்களை என் கூறுவது? அவை கொம்பினைச் சேர்ந்து உய்யப் பிணங்குவன. இவளை அழகு தவம் செய்து பெற்றது காண்! கணம் குழையாள் எழுந்ததன் பின், வேறு உற்ருர், கதிர் வானில் கங்கை எனும் அணங்கு (பூமியில்) இழியப் பொலிவு அழிந்த ஆறு ஒத்தார்.

பொருள்: ‘அவளுடைய நாணம் முதலிய பெண்மைக் குணங்களைப் பற்றி யாது கூறுவது? அவைகள் அந்தப் பூங்கொம்பு போல்வாளை அடைந்து வாழ்வுறுதற்கு “யான் முந்திக் கொள்வேனுக, யான் முந்திக்கொள்வேனுக” என்று ஒன்ருேடொன்று சண்டை செய்வனவாயின. ஏனை மாதர் தாம் செய்த தவத்தினுல் அழகைப் பெற்றிருக்க, இவளை அழகு தவம்செய்து பெற்றிருக்கின்றது. கங்கையாறு ஆகாயத்தினின்றும் பூமியின் மேல் இறங்கித் தோன்றினவுடனே அழகழிந்த மற்ற ஆறுகள் போல, இவள் பூமிக்குள்ளிருந்து வெளிப்பட்டுப் பூமியின் மேலே தோன்றினவுடனே ஏனை மாதர்கள் எல்லாரும் அழகழிந்தவர் ஆனுர்கள்.

என் - யாது. உய்தல் - பிழைத்தல் - வாழ்வுறுதல். பிணங்குதல் - சண்டை செய்தல். காண் - முன்னிலை அசை; ‘இதனைத் தெரிந்து கொள்வாயாக’ என்னும் பொருளுடையதுமாம். கணம் - திரட்சி — பத்துப்பா. கணங்குழை - திரட்சியான குண்டலம். கதிர்வான் - ஒளி(யை யுடைய) ஆகாயம். அணங்கு - தெய்வப் பெண்; பெண். இழிய - (பூமிமேல் பகீரதன் செய்த தவத்தினுல்) இறங்க. பொலிவு - அழகு; விளக்கம்; பிரகாசம். வேறு உற்ருர் - (சீதைக்கு) வேருக உற்ருர் ஆகிய பெண்கள் - மற்றைய மாதர் (அனைவரும்).

இப்பாட்டின் பின்னிரண்டடிகளில் உள்ள உவமான உவமேயப் பொருத்தம் மிகச் சிறந்தது. ஆறுகளையும் மாதரையும் ஒப்பிடுவது பல வகையிலும் பொருத்தமானது. பூமி தோன்றிய காலமுதலாக உள்ள புராதனமான ஆறுகளெல்லாம் கங்கை ஆறு (முன் இல்லாதது) புதிதாக வந்தவுடனே அதன் பொலிவு மிகுதியால் தம் பொலிவழிந்தது போல, ஆதி முதல் இது வரையும் அழகிற் சிறந்தாரா யிருந்த மாத ரெல்லாம் புதிதாக உண்டாகிய சீதையின் பேரழகினுல் அழகழிந்தா ராயின ரென்ற கருத்து மிக்க இன்பம் பயப்பது. சற்றேறக்குறைய இக் கருத்துப் போலவே இப்பாட்டின் முன்னிரண்டடியில் ‘கொம்பினைச் சேர்ந்து உய்யக் குணங்கள் பிணங்குவன’ என்றும், ‘அழகு இவளைத் தவம் செய்து பெற்றது காண்’ என்றுங் கூறிய கருத்துக்களும் மிகவும் இனியவைகளே. இத்தகைய சிறந்த அழகுடைய மூன்று கருத்துக்களைப் பொருத்தமாக ஒரு பாட்டில் அமைத்திருக்கும் கவிசாதுரியம் கண்டு களிக்கத் தக்கது.

'அழ கிவளைத் தவஞ் செய்து பெற்றது' என்பதனை ஒப்ப, வேறோ ரிடத்தே 'தவம் செய்த தவமாம் தையல்' என்பர். (138)

'நீரிலே பிறந்த அந்தத் திருமகளை விண்ணரச ரெல்லாரும் காதலித்தது போல, நிலத்திலே பிறந்த இந்தத் திருமகளை மண் ணரச ரெல்லாரும் காதலித்து மணம் பேசினார்கள். அவர் களுக்கு, 'இவ் வில்லை வளைத்தவரே இவளை மணக்கப்பெறுவர்' என்றோம். அவர்கள் வில்லை வளைக்க மாட்டாராய், இவள்பாற் கொண்ட காதலையும் விடமாட்டாராய், வலியினால் இவளை அடையக் கருதிப் போர்செய்து, தோற்றுப் போனார்கள், பின்பு, இவ் வில்லருகே எவரும் வந்திலர். இனி யெக்காலமும் இவளுக்குக் கல்யாண மில்லை யென்றிருந்தோம். இவன் வளைத் தால், இவள் அழகு பயனற்றுப் போகாது.' என்றான்.

வில்லை வளைக்க இராமன் எழுதல்

இவ்வாறு சதாநந்தன் கூறியதைக் கேட்டு, விசுவாமித்திரன் வில்லின் வன்மையைப் பற்றி வியப்படைந்து, இராமன் முகத் தைப் பார்த்தான். அப் பார்வையின் குறிப்பறிந்து, இராமன் வில்லை நோக்கினான்.

**பொழிந்தநெய் யாகுதி வாய்வழி பொங்கி**
**எழுந்த கொழுங்கன லென்ன வெழுந்தான்**
**அழிந்தது வில்லென விண்ணவ ரார்த்தார்**
**மொழிந்தன ராசிகண் முப்பகை வென்றார்** **(139)**

கொண்டுகூட்டு: பொழிந்த நெய் ஆகுதி வாய் வழியே பொங்கி எழுந்த கொழும் கனல் என்ன எழுந்தான். 'அழிந்தது வில்' என விண்ணவர் ஆர்த்தார். முப்பகை வென்றார் ஆசிகள் மொழிந்தனர்.

பொருள்: இராமன், ஓம குண்டத்திலே சொரிந்த நெய் யாகிய ஆகுதி வீழ்ந்த இடத்தினின்று அந்த நெய் விழுந்த வழியே ஓங்கி எழும்புகின்ற ஓமத் தீப்போல எழுந்தான்; 'அழிந் தது வில்' என்று தேவர்கள் ஆரவாரித்தார்கள். முனிவர்கள் வாழ்த்தினார்கள்.

வாய் - இடம். ஆர்த்தல் - ஒலித்தல். ஆசி - வாழ்த்து. முப்பகை வென்றார் - முனிவர். முப்பகையாவன: காமம், வெகுளி (- கோபம்),

மயக்கம் என்பன. வன்மையுடைய இராமன் எழுதலுக்கு வன்மையுடைய தீ எழுதல் உவமான மாயினும், நன்மையுடைய இராமனுக்கு,

தீயவே தீய பயத்தலால், தீயவை
தீயினும் அஞ்சப் படும்

என்றவாறு, தீமையுடைய தீ ஒவ்வாது. ஒவ்வாதது ஒவ்வுவதாம்படி, தீமையை ஒழிப்பதாய் வன்மையுடன் நன்மையும் ஒருங்குடையதாயுள்ள ஓமாக்கினியை உவமானமாக உபயோகப்படுத்திய கவிசாதுரியம் உவகை விளைப்பதா யுள்ளது. (139)

இராமன் அந்த ஒரு வில்லை ஒடிக்கு முன், அவன் மீது காதல் கொள்ளும்படி, மாதர்கள் ஒவ்வொருவர் நெஞ்சினும் அள விறந்த அம்புகளை எய்து மன்மதன் ஆயிரம் விற்களை ஒடித் தான். 'இவன் இந்த வில்லை வளையானாயின், சீதையும் நாமும் தீயில் விழுந்து இறப்போம்' என்பாரும், 'இவன் சீதையைக் கல்யாணம் செய்ய விரும்பினால், இவன் கேட்கு முன் "கொள்வா யாக" என்று கொடுப்பதை விட்டு, (இளமைப் பருவம் நீங்காத இந்தப்) பிள்ளையின் முன் ஈசனது வில்லை யெடுத்து வைத்தது மடமையே' என்பாருமாக, மாதர்கள் பரிந்து பேசாநிற்ப, அவன் சிங்கம்போல அந்த வில்லை நோக்கி நடந்து சீதை தனக் குச் சூட்ட நீட்டும் மாலை என்னும்படி அவ்வளவு சந்தோஷமாக வும் எளிதாகவும் அதை எடுத்தான்.

**இராமன் வளைக்க வில் இறுதல்**

**தடுத்திமை யாம லிருந்தவர் தாளின்**
**மடுத்தது நாணுதி வைத்தது நோக்கார்**
**கடுப்பினின் யாரு மறிந்திலர் கையால்**
**எடுத்தது கண்டன ரிற்றது கேட்டார் (140)**

கொண்டுகூட்டு : (இமைத்தலைத்) தடுத்து இமையாமல் இருந்தவர், (வில்லைத்) தாளில் மடுத்ததும், (வில்) நுதி(யில்) நாண் வைத்ததும் கடுப் பினில் நோக்கார்; யாரும் அறிந்திலர்; (வில்லைக்) கையால் எடுத்தது கண்டனர்; இற்றது கேட்டார்!

பொருள் : அவன் வில்லை எடுத்தது முதல் நாண் ஏற்றும் வரையும் செய்யும் ஒவ்வொரு செயலையும் இம்மியும் விடாது நுணுகி நோக்கும் இச்சை யுடையாராய், இடையே இமைத்தல் செய்தால், இமைத்த சமயத்திலே நிகழ்வது பார்க்க முடியாது தப்பிப்போ மென்று, இயற்கையாக இமைக்கும் இமையைச் செயற்கையாக மன முயற்சியினால் தடுத்து இமையாம லிருந்த

வர்கள் ஒருவ ரொழியாமல் எல்லாரும், அவன் வில்லின் ஒரு முனையைக் காலின் பெரு விரலினால் அழுத்தியதையும் வில்லை வளைத்து மற்றொரு முனையில் நாணைப் பூட்டுதற்கு வைத்த தையும் அச்செயல்கள் செய்யப்பட்ட வேகத்தினால் கண்ணினால் கண்டிலர்; அவ் எல்லாருள்ளே சிறந்த அறிவாளர் எவரும் தாம் இமையாதிருந்தும் அச் செயல்களைக் காணுதபடி செப்படி வித்தை போல எப்படிச் செய்தானென்று கருத்தினாலும் தெரிந்திலர்; வில்லைக் கையால் எடுத்ததைக் கண்டார்கள்; ஒடிந்த சத்தத்தைக் கேட்டார்கள்! அவ்வளவே அவர்கள் அறிந்தது.

தடுத்து - (இமைத்தலைத்) தடை செய்து. தாள் - கால்; இங்கே முதலாகு பெயராய்க் காற் பெருவிரலைக் குறித்தது, மடுத்தல் - அழுத்தல்.— ச. அ. அடுத்த அடியில் வரும் ‘ அறிந்திலர் ’ போல ‘ நோக்கிலர் ’ (-பார்த்திலர் - பார்க்கவில்லை) எனற்பாலது, செய்யுளுக்குப் பொருந்த, ‘நோக்கார்’ என நின்றது. கடுப்பு - விரைவு. இற்றது - ஒடிந்தது; ஒடிந்ததனால் உண்டாகிய ஓசையைக் குறித்தது.

‘ தாள் ’ என்பதற்குச் சில அகராதிகளில் ‘ வில்குதை ’ என்ற பொருள் உளது. அப் பொருள் கொண்டால், ‘ தாளின் மடுத்ததும் நாண் நுதி வைத்ததும் ’ என்றதற்கு, தாளில் (- வில்லின் ஒரு முனையில் உள்ள விற்குதையில்) நாணை (- நாணின் ஒரு தலையை) மடுத்ததும் (-சேர்த்ததையும்) நுதி (- மற்றொரு முனையில்) வைத்ததும் (- நாணின் மற்றொரு தலையைப் பூட்டுதற்கு வைத்ததையும்) எனப் பொருள் கொள்ளலாம். இப்படலத்தில் ‘ இரும்பனைய ’ என்று தொடங்கும் 16-ம் பாட்டில் ‘ பொற் கலப்பை (யில்) வயிரத்தின் கொழுமடுத்திட்டு ’ என்பதிலும் ‘ மடுத்தல் ’ சேர்த்தலெனப் பொருள்படப் பிரயோகிக்கப்பட்டிருத்தலைக் காண்க.

நாண் பூட்டுதற்கு முன் வில் முறிந்ததைக் குறிக்க ‘ நாண் பூட்டியது ’ மென்னுது ‘ நாண் வைத்ததும் ’ என்றார். ‘ எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார் ’ என்றது கவி சமத்காரத்துக் கோருதாரணமாம் என்பர்.—செல்வக்கேசவராய முதலியார், கம்பநாடர், பக்கம் 57-8.

அந்த ஓசை, சுவர்க்க மத்திய பாதலமென்ற மூன்று லோகங்களிலும் சென் றிடித்தது. இனி சீதாகல்யாணம் நிறைவேறினதேயா மென்று எல்லாரும் குதூகலித்தார்கள். ஆடவரினும் பெண்டிர் அதிகமாக மகிழ்ந்தார்கள்.

### விரகதாபத்தால் சீதை புலம்பல்

சனகராச சபையில் நிகழ்ந்தது இதுவாக, நிலவினாலும் இருளினாலும் வருந்தி நீங்கலுற்ற உயிரை, இராமனைக் காண

வேண்டுமென்னும் ஆசை மருந்தினுற் சிறிது மீட்கப்பெற்ற சீதை, படுக்கை விட் டெழுந்து, பாங்கியர் சூழச்சென்று, கன்னியா மாடத்தை அடுத்துள்ள ஒரு தாமரைத் தடாக மத்தியில் விளங்கிய பளிங்கு மாளிகையில் அமைத்த பூ அணையைச் சேர்ந்தாள். சேர்ந்தவள் அத்தடாகத்துத் தாமரைகளை நோக்கிக் கூறுகின்ருள்—

**பெண்ணிவ ணுற்ற தென்னும் பெருமையா லருமையான**
**வண்ணமு மிலைகளாலே காட்டலால் வாட்டந் தீர்ந்தேன்**
**தண்ணறுங் கமலங் காளென் றளிர்நிற முண்ட கண்ணின்**
**உண்ணிறங் காட்டி நீரென் னுயிர்தர வுலோவி னீரே (141)**

கொண்டுகூட்டு : 'தண் நறும் கமலங்காள்? "இவண் உற்றது பெண்" என்னும் பெருமையால் (என் காதலன்) அருமையான (பச்சை) வண்ணம் இலைகளாலே காட்டலால், வாட்டம் தீர்ந்தேன். நீர் என் தளிர் நிறம் உண்ட கண்ணின் உள் நிறம் காட்டி, என் உயிர்தர உலோவினீரே!

பொருள் : 'தாமரைகளே! "இங்கு வந்தது பெண்" என்றெண்ணுகின்ற எனவே, இரக்கங் கொள்கின்ற பெருந்தன்மையினுல், எனது காதலனது அருமையான பச்சை நிறத்தை உங்களுடைய இலைகளினுலே காட்டுகின்றீர்கள்; அவ்வாறு காட்டுதலால் யான் அவனைக் காணுத சோர்வு நீங்கினேன்; எனது செம்மாந் தளிர் போலும் நிறத்தைக் கவர்ந்துகொண்ட அவனுடைய கண்களில் உள்ள சிவப்பு நிறத்தை உங்களுடைய பூக்களால் நீங்கள் காட்டிச் சிறிது அருள் செய்தீர்கள்; முழுதும் அருள் செய்து என் உயிர் ஆன அவனைத் தருதற்கு உலோபஞ் செய்தீர்கள்; யாது காரணமோ?

இவண் - இவ்விடம். என்னும் - என்றெண்ணும். 'அன்றறிவாமென்னு தறஞ்செய்க' என்ற குறளில், 'என்னுது' என்பது, 'என்று கருதாது' எனப் பொருள்படல் காண்க. பெருமை - பெரியாரது தன்மை. —குறள், 98-ம் அதி. பெருமை வண்ணமும் என்பதில் உம்மை இசை நிறை. தண் நறும் கமலங்காள் - குளிர்ச்சியாகிய வாசனையுள்ள தாமரைகளே. 'உண்ட', கவர்ந்துகொண்ட என்ற பொருளைக் குறிப்பால் உணர்த்தியது. கண்ணின் உண்ணிறம் - கண்ணின் உள் நிறம் - கண்ணில் உள்ள நிறம்; கண்ணுக்குள்ளே உள்ள நிறம் எனலுமாம். உலோவுதல் - உலோபஞ் செய்தல். இவண் உற்றது பெண், என இயைக்க.

'அண்ணலும் நோக்கினன், அவளும் நோக்கினள்' என்ற சமயத்திலே தன்னை நோக்கிய இராமனது கண்ணழகிலே ஈடுபட்டுக் காதல் கொண்ட சீதை, அக்காதலால் தனது தேகம் தன்னிறமான செம் பொன் னிறம் மாறிப் பைம் பொன் னிறமான பசலை போர்த்ததனால், 'தளிர் நிறம் உண்ட கண்' என்றாள். இராமன் தேக நிறத்துக்கு உவமானமான இலைகளைக் கூறிக் கண் ணிறத்துக்கு உவமானமான பூக்களைக் கூறுது உய்த்துணர வைத்தார்.

காணமற் போன ஒரு பொருளின் சில பாகங்களைக் காட்டியவர்பால் அப் பொருள் முழுதும் இருக்குமென்று கருதி அதனை இழந்தவர், காட்டியவரை நோக்கி, 'அதன் சில பாகங்களைக் காட்டினீர்; ஆதலால் அது உம்மிடம் இருக்கின்றது; கொடுப்பீராக!' என்று வேண்டுதலும், கொடாவிடில், 'கொடாமல் உலோபஞ் செய்தீரே!' என்று குறைகூறலும் இயல்பன்றோ? அவ்வாறே, சீதை, 'தாமரைகளே! என் உயிர் (ஆன காதலன்) உடைய மெய்ந்நிறமும் கண்ணிறமும் காட்டினீர். ஆதலால், அவ் உயிர் உம்மிடத்துள்ளது. அதனைக் கொடுத்தல் வேண்டுமென் றிரக்கின்றேன். கொடுக்கின்றிலீர். இவ்வாறு உலோபம் செய்யலாமோ?' என்று நொந்து குறை கூறிப் புலம்பின ளென்ற விரிந்த கருத்தை எவ்வளவு சுருங்கிய சொற்களால் எத்துணை ஆழம்பட அழகாகக் கவி கூறியிருக்கிற ரென்பதை நோக்குக. மேற்கூறியவாறு பொருள் கூறுதலால் 'கண்ணின் உண் ணிறம் காட்டி நீ ரென் உயிர் தர உலோவினீரே' என்பதில், 'கண் ணிறங் காட்டல் வல்லார் உயிர் தரல் வல்லா ராதல் எங்ஙனம்? இரண்டுக்கும் பொருத்தம் என்னை?' என்று இயல்பாக எழும் சந்தேகம் நிவிர்த்தியாதலும் காண்க. (141)

நாணுலாவு மேருவோடு நாணுலாவு பாணியுந்
தூணுலாவு தோளும்வாளி யூடுலாவு தூணியும்
வாணிலாவி னூலுலாவு மாலைமார்பு மீளவுங்
காணலாகு மாகினாவி காணலாகு மேகொலாம் (142)

கொண்டுகூட்டு: 'நாண் உலாவு மேருவோடு நாண் உலாவு பாணியும், தூண் உலாவு தோளும் வாளி ஊடு உலாவு தூணியும், வாள் நிலாவின் நூல் உலாவு மாலை மார்பும் மீளவும் காணல் ஆகுமாயின், ஆவி காணல் ஆகும்.

பொருள்: 'வில் நாண் பூண்ட மேரு ஒன்றுண்டாயின் அதனை ஒத்த பெரிய வலிய தநுவையும், வில்லையும் நாணையும் முறையே பிடித்தல் தெறித்தல் செய்து பொருந்திய இடக்கை வலக் கைகளையும், தூண்கள் போன்ற திரண்ட தோள்களையும், அம்புகள் உள்ளே நிறைந்த அம்பருத் தூணியையும், ஒளி

யுடைய நிலாக் கதிர்ப் புரி ஒப்ப முப்புரி நூல் அசைகின்ற மாலை அணிந்த மார்பையும், நேற்றுக் கண்டதுபோலத் திரும்பவும் காணக் கூடுமானல், என் உயிரைக் காணக்கூடும்.

முதலாம் உலாவு, பூண்ட வென்றும், இரண்டாம் உலாவு, பொருந்திய வென்றும், மூன்றும் உலாவு, போன்ற வென்றும், நான்காம் உலாவு, நிறைந்த வென்றும், ஐந்தாம் உலாவு, அசைகின்ற வென்றும், தாம் நிற்கும் இடங்களுக் கியையப் பொருள்படல் கவனிக்கத் தக்கது. பாணி - கை. தூணி - அம்புக்கூடு. வாள் - ஒளி. ஏ, கொல், ஆம், மூன்றும் அசைகள். 'நாண் (- வில் நாண்) உலாவு மேரு' என்றதனல் மேரு உருவகமாய் வில்லைக் குறித்தது. (142)

**விண்டலங் கலந்திலங்கு திங்களோடு மீதுசூழ்**
**வண்டலம் பலங்கறங்கு பங்கியோடும் வார்சிலைக் [ளுவியை**
**கொண்டலொன் றிரண்டுகண்ணின் மொண்டுகொண்டென்**
**உண்டதுண்டெ னெஞ்சினின்று முண்டதென்று முண்டரோ**

கொண்டுகூட்டு : 'விண் தலம் கலந்து இலங்கு திங்களோடும், மீது சூழ் வண்டு அலம்பு அலங்கல் தங்கு பங்கியோடும், வார் சிலை (யுடைய) கொண்டல் ஒன்று இரண்டு கண்ணின் என் ஆவியை மொண்டு கொண்டு உண்டது உண்டு; (அது) என் நெஞ்சின் இன்றும் உண்டு; அது என்றும் உண்டு.

பொருள் : 'ஆகாயத்திலே பிரகாசிக்கின்ற சந்திரனேடும் தேன் உண்ண மேலே சுற்றும் வண்டுகள் இரைகின்ற மாலை தரித்த குடுமியோடும் நீண்ட வில்லையுடைய மேகம் ஒன்று வந்து இரண்டு கண்களால் என் உயிரை மொண்டுகொண்டு உண்டதுண்டு; அது என் நெஞ்சினுள்ளே இப்போதும் இருக்கின்றது; இனி எக்காலமும் நிலையாய் இருக்கும்.

விண் தலம் கலந்து - ஆகாயமாகிய இடத்தைச் சேர்ந்து. மீது சூழ் - (தேன் உண்ண) மேலே சுற்றுகின்ற. அலம்புதல் - ஒலித்தல். அலங்கல் - பூமாலை. பங்கி - குடுமி. வார் சிலை - நீண்ட வில். கொண்டல் - மேகம். கொண்டல் ஒன்று - ஒரு மேகம். ஆவி - உயிர். உண்டது உண்டு - உண்டது மெய். 'நீ சொன்ன துண்டா?' என்ற உலக வழக்கில், 'உண்டா?' என்பது 'உண்மையா?' என்று பொருள்படல் காண்க. இன்று - இப்போது.—ச. அ.

திங்கள் முகத்தையும், கொண்டல் இராமனையும் குறித்தன. குடுமி, முகத்துக்கு மேலிருத்தலால், 'மீது' என்பதை, அலங்கல் மீது என்று

சேர்க்காமல், திங்கள் மீது என்று சேர்த்தும் பொருள் கூறலாம். மேலே குடுமியும், அதன்கீழ்த் திங்களாகிய முகமும், அதன் கீழ் வில்லும், கன்னி மாடத்தின் மேல் மாளிகையிலிருந்து இராமனைப் பார்த்த சீதைக்குத் தோன்றிய முறை கூறப்பட்டதாகக் கொள்ளலாம். 'ஆவி', 'நீராவி', யென்பவை தடாகத்தைக் குறிக்கும்; ஆதலால், கடலை மொண்டுகொண்டு உண்டு களிக்கும் மேகம், கடலென் றெண்ணிக் கடல் போன்ற தடாகத்தை மொண்டுகொண்டு உண்டது, என்ற ஒரு தொனிப் பொருள் தோன்றுதல் காண்க. (143)

**பஞ்சரங்கு தீயினுவி பற்றநீடு கொற்றவில்**
**வெஞ்சரங்க ணெஞ்சரங்க வெய்யகாம னெய்யவே**
**சஞ்சலங் கலந்தபோது தையலாரை யுய்யவந்**
**தஞ்சலஞ்ச லென்கிலாத வாண்மையென்ன வாண்மையே (144)**

கொண்டுகூட்டு: 'வெய்ய காமன் நீடு கொற்ற வில்(லினுல்) வெஞ் சரங்களைப் பஞ்சு அரங்கு தீயின் ஆவி பற்ற நெஞ்சு அரங்க எய்ய, தையலார் சஞ்சலம் கலந்த போது, உய்ய வந்து, "அஞ்சல்! அஞ்சல்!" என்கிலாத ஆண்மை என்ன ஆண்மையே!

பொருள்: 'கொடிய மன்மதன், தனது நீண்ட வெற்றி பொருந்திய வில்லினுல், உட்டினமான அம்புகளை, பஞ்சை எரித்து அழிக்கும் தீப் போல, உயிரைப் பற்றும்படி, அவ் உயிர் தங்கிய நெஞ்சுகள் அழுந்த எய்ய, அதனுல் மாதர்கள் துன்பம் உற்ற சமயத்தில், அவர்கள் தப்பிப் பிழைக்கும்படி, அவர்களுக்கு உதவியாக வந்து அம் மன்மதனை ஓட்டி, "பயப்படாதீர்கள்! பயப்படாதீர்கள்!" என்று அபய வார்த்தை கூறுத ஆண்மை என்ன ஆண்மை? பயனற்ற ஆண்மையே!

பஞ்சு அரங்கு தீ - பஞ்சு அழிதற்குக் காரணமான தீ. அரங்குதல் - அழிதல்; அழித்தல் என்னும் பொருளுடைய அரக்குதல் என்ற பிற வினைப் பொருள் பயக்கும்படி பிரயோகிக்கப்பட்டிருக்கின்றது. கிட்கிந்தா காண்டம், நட்புக்கோட்படலம், 75-ம் பாட்டில் 'விலகும்' என்பது, 'விலக்கும்' என்ற பொருள்பட வருதல் காண்க. தீயின் - தீயைப் போல. அரக்கல், அமுக்கல்* அல்லது அழுத்தல் என்ற பொருளுடையதாதலால், அதன் தன்வினையாகிய அரங்கல், அமுந்தல் எனப் பொருள்படுவதாகக் கொண்டு, 'நெஞ்சு அரங்க' என்பதற்கு நெஞ்சுள் அழுந்த என்று உரை செய்யப்பட்டது. அரங்குதல் - அமுந்துதல்.—த. அ.

இப் பாட்டில் ஒவ்வோரடியும் சிறந்த இன்னேசை யுடைமை கவனிக்கத் தக்கது. சீதை தையலார் என்ற ஜாதிப் பன்மையால் தன்னைக் குறித்

* சிந்தாமணி.

தாளென்பது தெளிவாம். ‘ தம்மைப் பாதுகாவலராகக் கொண்ட மாதர்கள், பகைவனுகிய மன்மதனுல் தாக்கப்பட்டபோது, அவருக்கு உதவியாக வந்து காவாத ஆடவர் ஆண்மை ஆண்மையாமோ ?’ என்று கூறி, இராமன் வீரத்துக்குக் குறை கூறுவாள் போன்று, அவன் தன்பால் உடனே வாராமையாலாகிய ஆராமையைச் சீதை வெளியிட்டாள். ஆராமை - (குறை) நிரம்பாமை. (144)

**எங்குநின் றெழுந்ததிந்த விந்துவந்தெ னெஞ்சுலா**
**அங்கியன் றனங்கனெய்த வம்பின்வந்த சிந்தைநோய்**
**பொங்குகின்ற கொங்கைமேல் விடம்பொழிந்த தென்னினும்**
**கங்குல்வந்த திங்களன் றகங்களங்க மில்லையே (145)**

கொண்டுகூட்டு : ‘ இந்த இந்து எங்கு நின்று எழுந்தது ? அனங்கன் வந்து என் நெஞ்சு உலா அங்கு இயன்று எய்த அம்பின் வந்த சிந்தை நோய் பொங்குகின்ற கொங்கை மேல் விடம் பொழிந்தது என்னினும், அகம் களங்கம் இல்லை ; (ஆதலால்) கங்குல் வந்த திங்கள் அன்று.

பொருள் : ‘ இதுவரை யில்லாத அதிசயமாக, இன்று பகலில் தோன்றும் இந்தச் சந்திரன் எங்கே இதுவரையும் இருந்து இப்போது இங்கே உதித்தது ! மன்மதன், என் நெஞ்சிலே பவனி வந்து, அங்கே உலாவி, எய்த அம்பினுல் உண்டாகிய மனவேதனை வெப்பம் கொதித்துக் கிளர்தலையுற்ற கொங்கைகளின் மேல் அக் கொதிப்புப் போதாதென்று இந்தச் சந்திரன் தன் சூடான நிலவாகிய விடத்தைச் சொரிந்தது ; ஆயினும், இந்தச் சந்திரன் களங்கமில்லா திருத்தலால், நேற்று இரவில் வந்த சந்திர னன்று.

இந்து - சந்திரன் ; விரக நோயால் மனம் பேதுற்றிருந்த சீதை சந்திரனென்று மயங்கிய சூரியனைக் குறித்தது. ‘ அனங்கன் என் நெஞ்சு உலா வந்து அங்கு இயன்று ’ எனக் கூட்டி மன்மதன் என் மனத்தில் பவனி வந்து அங்கே உலாவி எனப் பொருள் கொள்க. இயலல் - உலாவல்.— பத்துப்பா. பொங்குதல் - கொதித்துக் கிளர்தல். விடம், சீதை நிலவென்று மயங்கிய வெயிலைக் குறித்தது. கங்குல் - இரவு. திங்கள் - சந்திரன். அகம் - இடம் - (தன்) இடத்தில். இல்லை என்பதன் பின் ஆல் உருபு தொக்கது.

தாமரைப் பொய்கையிற் பளிங்கு மாடத்துச் சந்திரகாந்த மமிழ்ந்த சீதநீர் தெளித்த புஷ்ப சயநத்திற் ருன் கிடத்தலானும், சேடியர் செய்யும் சைத்தியோபசாரத்தானும் வெங்கதிர் தண்கதிராய்த் தோன்றலா லிவ்வாறு கூறினர்.—இ. நா. விரகிகளுக்குச் சைத்தியோபசாரங்களும், திங்கள்,

தென்றல் முதலிய தண்ணிய இனிய பொருள்களும் வெப்பத்தை அதிகப் படுத்துவன வன்றிக் குறைப்பன வல்லவாம். ஆதலால் இப்பொருள் பொருத்தமாகத் தோன்றவில்லை.

பகல் வர, சூரியனும் வெயிலும் இயல்பாக வெப்பத்தைச் செய்ய, சீதை விரக வேதனையினால் மனக் கலக்கமுற்றுப் பகுத்தறிவு குன்றி யிருந்த தனால், அவளுக்கு அவைகள் அவளை முந்திய இரவில் இயல்புக்கு மாறாக வெதுப்பிய சந்திரனும் நிலவும்போலத் தோன்ற, சூரியனை 'எங்கு நின்று எழுந்தது இந்த இந்து?' என்றும், அவள் கொங்கைகளின் மேற் சூரியன் வெயி லெறித்ததை அப் புதிய சந்திரன் (நிலவாகிய வெள்ளை) 'விடம் பொழிந்தது' என்றும் கூறிப் பின்பு அதனிடத்துக் களங்க மில்லாமை யைக் கண்டு, அது 'கங்குல் வந்த திங்க ளன்று' என்றாள் என்பது கருத்தென்று கொள்ளலாம் போலும்.

பாடபேதம் : அங்கியொன்று, திங்களின்னகம். (145)

**அடர்ந்துவந் தனங்கனெஞ் சழன்றுசிந்து மம்பெனும்**
**விடங்குடைந்த மெய்யினின்று வெந்திடா தெழுந்துவெங்**
**கடந்துதைந்த காரியானை யன்னகாளை காலடைந்**
**துடன்றொடர்ந்து போனவாவி வந்தவாவென் னுள்ளமே (146)**

கொண்டுகூட்டு : 'அனங்கன் நெஞ்சு அழன்று அடர்ந்து வந்து சிந்தும் அம்பு என்னும் விடம் குடைந்த மெய்யினின்று வெந்திடாது எழுந்து, வெம் கடம் துதைந்த கார் யானை அன்ன காளை கால் அடைந்து உடன் தொடர்ந்துபோன ஆவி வந்தவா(று) என் ? உள்ளமே ? (கூறுவாய்!)

பொருள் : 'மன்மதன் மனம் கொதித்துக் கோபித்து என்னை நெருங்கிவந்து என் மேற் சொரிந்த அம்பாகிய விஷ நெருப்பு வெள்ளத்தில் முழுகிய என் தேகத்தினின்றும் அதன் உள்ளே தங்கி யிருந்தால் அதனோடு தானும் வெந்துவிட வேண்டி வருமென்று பயந்து வெந்து விடாமல் தப்பிக் கொள்ளும்படி எழுந்து, அவனுடைய காலில் வீழ்ந்து சரணடைந்து அவனைத் தொடர்ந்து அவனுடன் போன உயிர் திரும்பி வந்த காரணம் யாது? நெஞ்சே! கூறுவாயாக!

அடர்ந்து - நெருங்கி. அழன்று - கொதித்து - கோபித்து. சிந்தல் - சொரிதல். குடைதல் - நீராடுதல் - முழுகல். வெம்மை - விருப்பு. வெம் கடம் - (வண்டுகளுக்கு) விருப்பமான (யானை) மதம். துதைதல் - செறி தல் - மிகுதல். கார் யானை, காரியானை யெனப் புணர்ச்சி யிலக்கணப்படி புணர்ந்தது. காளை - காளைப் பருவமுடையவன் - இளைஞன்; காளை போலும் (பெருமித) நடையுடையவன். அடைதல் - (சரண்) அடைதல். வந்த வா - வந்த வாறு - வந்த ஆறு - வந்த விதம் - வந்ததற்குக் காரணம்.

விரக தாப மிகுதியால் சகிக்க முடியாத துன்ப மடைந்து, 'இனிப் பிழையேம், செத்தே விடுவேம்' என் றெண்ணி, அறிவிழந்து, அதனுல் துன்பத்தை உணராதிருந்த சீதை, திரும்ப அறிவு தோன்ற, அதனேடு துன்பமும் தோன்றிய போது, உயிரின்றேல் உணர்வின் றென்றும், துன்ப உணர்ச்சி தோன்றியதனுல் உடல் விட்டு நீங்கி யொழிந்ததாக எண்ணிய உயிர் திரும்பி வந்த தென்றும் கருதி, 'அது திரும்பியதற்குக் காரணம் யாது? இன்னும் துன்பம் உழக்கவோ?' என்று தன் நெஞ்சை நோக்கிக் கூறியதனுல், அவள் 'செத்தோம்' என்றெண்ணியபடி செத் தொழியாமல் உயிருட னிருப்பதை வெறுத்தாள் என்பது கருத்து.

பாடபேதம் : வந்தவாறென். (146)

**விண்ணுளே யெழுந்தமேக மார்பினூலின் மின்னெடும்**
**மண்ணுளே யிழிந்ததென்ன வந்துபோன மைந்தனுர்**
**எண்ணுளே யிருந்தபோதும் யாவரென்று தேர்கிலேன்**
**கண்ணுளே யிருந்தபோது மென்கொல்காண்கி லாதவே (147)**

கொண்டுகூட்டு : 'விண்ணுளே எழுந்த மேகம், மார்பில் மின் னின் நூலொடு மண்ணுளே இழிந்தது என்ன வந்து போன மைந்தனுர், எண் உள்ளே இருந்த போதும் யாவர் என்று தேர்கிலேன், கண்ணுள்ளே இருந்த போதும் காண்கிலாத(து) என் கொல்?

**பொருள் :** 'விண்ணிலே தோன்றும் மேகம் மானுட வடிவம் கொண்டு மின்னற் பூணூலோடு மண்ணிலே இறங்கிய தென்று சொல்லும்படி கன்னிமாடத்தின் முன்னே யான் கண்டு களிக்கும்படி வந்துபோன மகாபுருடர், என் மனத்தினுள்ளே இருந்தாலும் அவரை யாரென் றறியேன், அவர் என் கண் ணுள்ளே யிருந்தாலும் அவரை யான் காண்கின்றிலேன்; அவ் வாறு காணுமைக்குக் காரணம் யாதோ?

எழுதல் - தோன்றுதல். 'நூலின் மின் னெடு' என்பதை 'மின் னின் நூலொடு' என மாற்றுக. இன், சாரியை. மின்னின் நூல் - மின் ஞகிய நூல். மேலே, 111-ம் பாட்டில் 'பாம்பின் மணித் தாம்பு' என்பது பாம்பாகிய மணித் தாம்பு எனப் பொருள்பட வந்தது காண்க. இழிந்தது - இறங்கியது. 'மைந்தன்,' புத்திரன் என்ற பொருளைக் குறியாது ஆடவன் என்ற பொருளைப் புலப்படுத்தியது. உரிச்சொல் நிகண்டு 61-ம் பாட்டில் 'மைந்தர்க்கு மாதர்க்கு' என வரும் சொற்றெடரில் மைந்தர் ஆண் மக்களை யுணர்த்துதல் காண்க. எண் - மனம். இருந்தபோதும் - இருந் தாலும். குறள், 793-ல், 'ஒலித்தக் கால்' என்பது ஒலித்த போது, ஒலித் தால், எனப் பொருள்படல் காண்க. உலக வழக்கில் 'வந்தாலும்' என்பது

'வந்த போதிலும்' என வரல் காண்க. தேர்தல் - அறிதல்.—ச. அ. காண்கிலாதது, 'காண் கிலாத' எனத் துவ் விகுதி கெட்டு நின்றது. இக் காண்டம், குலமுறைகிளத்து படலம், 18-ம் பாட்டில், 'பூதகணத் தர சேந்தி அனல் நின்றும் புறப்பட்ட' என்ற ஈற்றடியில் புறப்பட்டது எனற்பாலது 'புறப்பட்ட' என வந்தது காண்க. காண்கிலாதது - காண் கிலாத தன்மை - காணுமைக்குக் காரணம்.

எட்டாத தூரத்துள்ள காணற்கரிய பொருள், கிட்ட வந்து காட்சி யளித்தது என்ற கருத்து விளங்க 'விண்ணுளே எழுந்த மேகம் மண் ணுளே இழிந்தது' என்றார். கரு மேகத்தைக் கரிய இராமனுக்கு ஒப்பாகக் கூறியதற்குப் பொருத்தமாக, அதன் வெள்ளிய ஒள்ளிய (கொடி) மின்னலை வெள்ளொளிப் பூணூலுக்கு உவமித்த நயம் உவத்தற்குரியது. இவ் இனிய கருத்தைச் 'சூனிறக் கொண்மூக் கிழித்திடை துடிக்கும் மின்னென மார்பினூல் துளங்க'* என்று பின்பும் இனிது கூறுவர். தூரமான இடத்துள்ள பொருள்களையும் காணும் கண், தன்னுள்ளேயே உள்ள வரைக் காணுமையும், இடத்தா லன்றிக் காலத்தாலும் தூரமான பொருள் களை விவரத்துடன் அறிய வல்ல மனம், தன் னிடத்திலேயே தங்கியவனை இன்னுனென்று விவரம் தெரிந்துகொள்ளாமையும் ஆச்சரியம் என்பது பின் இரண்டடிக் கருத்து. (147)

பெய்கடற் பிறந்தயற் பெறற்கொணு மருந்துபெற்
றையபொற் கலத்தொடங்கை விட்டிருந்த வாதர்போல்
மொய்கிடக்கு மண்ணலேந்தோள் முயங்கிடாது முன்னமே
கைகடக்க விட்டிருந்து கட்டுரைப்ப தென்கொலோ (148)

கொண்டுகூட்டு : 'பெய்கட(லி)ற் பிறந்து அய(லி)ற் பெறற்கு ஒண்ணு(த) மருந்தைப் பெற்று ஐய பொற் கலத்தொடு அங்கை விட்டு இருந்த ஆதர் போல், மொய் கிடக்கும் அண்ணல் தோள் முன்னமே முயங் கிடாது கை கடக்க விட்டிருந்து, (இப்பொழுது) கட்டுரைப்பது என் கொலோ?'

பொருள் : 'கடலிலே பிறந்ததாய் வேறிடத்துப் பெற முடி யாததான அமிழ்தத்தை அதிட்ட வசத்தால் கையுறப் பெற்று அதனை உடனே நுகராமல், அது தங்கப்பெற்ற அழகிய பொற் பாத்திரத்தோடு கையினின்று நழுவி நீங்க விட்டு ஏமாறி இருக்கும் அறிவீனர் போல, முன், எனது காதலரது தோள்கள் தழுவிக் கொள்ளும்படி கிட்ட வரப்பெற்ற சமயத்திலே தழுவா மல், கைக் கெட்டாமற் போக விட்டுவிட்டு, தழுவிக்கொண்டு விடா திருந்தால் நம்மைப் பிரியாமல் நம் வசமே யிருப்பாரே

* சுந்தர காண்டம், நிந்தனைப் படலம், 5.

யென்று இப்போது அலங்காரமாகப் பேசுதலால் யாது பயன்? ஒன்றுமில்லை.'

பெய் கடல் - (தன்னிடத் துள்ள இரத்தினங்கள் முதலியவைகளை அலைகளால் கரையில்) சொரிகின்ற கடல்; மழை பெய்யும் முகி லெனற் பாலது, பெய் முகில் என வருதல் போல வந்தது. ஐ - அழகு; ஐய - அழகை உடைய. ஆதர் - அறிவில்லார். மொய் - வலி. அண்ணல் - தலைவன்; பெருமையிற் சிறந்தோன். —ச. அ. கட்டுரை - புனைந்துரை - அலங்கரித்துரைத்தல்.

இராமனது திருமேனி பொற் கலத்துக்கும் அத் திரு மேனியினின்று நுகரும் இன்பம் பொற்கலத்திலிருந்து நுகரும் அமுதத்துக்கும் ஒப்பு. முற் பாட்டில் சீதை தன் காதலனது உருவத்தை அகலாமல் கண்ணிலும் கருத்திலும் இருத்தினேன் என்றுளென்று கூறி, இப் பாட்டில் அவள் அவ்வாறு தன் காதலனுடைய உடலைப் 'பற்றி விடா திருந்தே னில்லையே' என்று கழி விரக்கங் கொண்டாள் என்று கூறினர். (148)

### சீதை, ஆநந்தம் அடைதல்

இவ்வண்ணம் சீதை கூறி வருந்தித் துன்பக் கடலுள் ஆழ்ந்து கொண்டிருந்த சமயத்திலே, வில் முறிந்ததைக் கண்ட மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் முகமலர்ச்சியோடு நீலமாலை யென்னும் தாதி வந்தாள். வந்தவள் உவகை மிகுதியினால் தன்னை மறந்து, வழக்கம் போல வணங்காளாய், ஆடல் பாடல் செய்யா நிற்க, அவளைச் சீதை, 'உன் மகிழ்ச்சிக்குக் காரணம் யாது?' என வினவ, அவள், தன் நினைவு வரப்பெற்றுத் தொழுது, 'முனிவன் பின்னே தம்பியாரோடு நம் நகருக்கு வந்தவர், இராமர் என்னும் பெயரினர், வில்லை முறித்தார்.' என்று, 'கை கடக்க விட்ட காதலர் கைவசமானார், துன்பக் கடலில் ஆழாதீர்! இன்பக் கரை யேறுமின்!' என்று கூறுவாள்போலக் கூறினாள். தாதி கூறிய அடையாளத்தால் சீதை, வில் முறித்தவன் தான் காதலித்தவனே யென்று தேறினாள்.

இல்லையே நுசுப்பென்பா ருண்டுண் டென்னவும்
மெல்லியன் முலைகளும் விம்ம விம்முவாள்
சொல்லிய குறியினத் தோன்ற லேயவன்
அல்லனே லிறப்பனென் றகத்து ளுன்னினாள் (149)

கொண்டுகூட்டு: மெல்லியலுக்கு நுசுப்பு இல்லை யென்பார், 'உண்டு! உண்டு!' என்ன முலைகளும் விம்ம, விம்முவாள்; '(தாதி) சொல்

லிய குறியினுல் அவன் அத் தோன்றலே ; அல்லனேல் இறப்பன் ' என்று அகத்துள் உன்னினுள்.

பொருள் : முன் சீதையின் இடை காணப்படாமையால், 'இல்லையே ' யென்று கூறியவர்கள், இப்போது அது காணப்படு கின்றமையால் 'உண்டு! உண்டு!' என்று அதிசயித்துக் கூற, இடை காணு மாத்திரை பெருக்க, இன்னும் பெருத்தல் இயலா என்னும்படி பெருத்திருந்த தனங்களும் முன்னினும் அதிகமாகப் பெருக்க, உவகை மீக் கூர்தலால் சீதை உடம்பு முழுதும் பூரித் தாள். 'வில்லை முறித்தவ னென்று சொல்லப்பட்டவன் எவனே, அவன் தாதி சொன்ன அடையாளத்தினுல், நான் காதலித்த அந்தத் தலைவனே, அல்லனுயின் இறந்து விடுவேன் ' என்று சீதை தன் மனத்தினுள்ளே நினைந்தாள்.

நுசுப்பு - இடை. குறி - அடையாளம். குறியின் - அடையாளத்தி னுல் ; அடையாளத்தினை யுடைய. தோன்றல் - தலைவன் —புறநா. 'அவன் ' வில்லை முறித்தவனைச் சுட்டியது.

'சொல்லிய குறியினத் தோன்றலே அவன் அல்லனேல் இறப்பன்' என்பதற்கு (வில்லை முறித்தவன், தாதி) சொன்ன அடையாளத்தினுல் (நான் காமுற்ற) அந்தத் தோன்றலே (ஆதல் வேண்டும் ;) அவனல்ல னுயின், இறப்பேன், என்று பொருள் கொள்ளலும் பொருந்தும்.

உடம்பெல்லாம் பூரித்தபோது இடையும் பூரித்தது, ஆதலால் முன் தோன்ருதிருந்த இடை தோன்றுவதாயிற்று என்பது இப் பாட்டின் முத லடிக் கருத்து. (149)

### சனகன், தசரதனுக்கு மண ஓலை அனுப்பல்

சீதையின் நிலைமை இவ்வாருக, வில் முறிந்த ஓசை உலகம் எங்கும் போய் முட்ட, சனகன் அவ் வோசையினும் மிகுந்த உவ கையுற்று, விசுவாமித்திரனை நோக்கி, 'இராமனுக்குக் கல்யாணம் இன்றே முடித்தலோ, தசரதனைத் தருவித்து முடித்தலோ, எது தமது விருப்பு?' என, ' அவனை விரைவில் வருவித்தல் நன்று ' என்று விசுவாமித்திரன் பதில் உரைக்க, தூதரை அழைத்துத் ' தசரதனுக்கு நிகழ்ந்தவை யனைத்தையும் தெரிவித்து இத் திரு முகத்தைக் கொடுங்கள் ' என்று சனகன் மண ஓலை விடுத்தான்.

## 13. எழுச்சிப் படலம்

### தசரதன் மிதிலைக்கு எழுந்துபோதலைக் கூறுவது

சனகனது தூதர் அயோத்தியை அடைந்து, தசரதனைக் கண்டு தொழுது, அவனைப் பிரிந்த பின் இராமன் செய்த அரிய செயல்களை விவரித்துக் கூறித் திருமுகத்தை நீட்ட, அரசன் கற்பனைப்படி அதனை ஒரு புலவன் வாங்கி வாசித்தான். வில்லொடிந்த பேரொலியைப் பற்றிய விவரங் கேட்ட அளவில், தசரதன் அணிந்திருந்த வாகுவலயங்கள் கழலும்படி அவன் தோள்கள் பூரிக்க, 'அன்று நாம் செவியுற்ற பேரோசை இந்த ஓசையோ!' என்று வியப்பொடு கூறித் தூதருக்கு ஆடை யாபரணங்கள் அளித்தான். பின்பு, தன் சிற்றரசரும் சேனையும் முன்னாக மிதிலைக்குச் செல்லும்படி கட்டளை யிட்டான். அந்தச் சேனையின் மேலாக விரிந்த வெண் குடைகள் செல்வன, சிறை விரித்துப் பறக்கும் அன்னப் பறவைகள் போன்றன; ஆகாய மளாவ உயர்த்துப் பிடிக்கப்பட்ட கொடிகளில் தொங்கும் சீலைகள் ஆகாய மெங்கும் தோலுரிந்து தொங்கினாற் போன்றிருந்தன. வெள்ளிய கொடிச் சீலைத் தொகுதி கீழ் உள்ள கரிய யானைச் சேனையை நோக்கித் தாழுதல், வெண் மேகம் கருங்கடலில் நீர் பருகத் தாழுதல் ஒத்திருந்தது.

**சேனை வருணனை**

இழையிடை இளவெயி லெறிக்கு மவ்வெயில்
தழையிடை நிழல்கெடத் தவழு மத்தழை
மழையிடை யெழில்கெட மலரு மம்மழை
குழைவுற முழங்கிடுங் குழாங்கொள் பேரியே (150)

கொண்டுகூட்டு: இழை யிடை இள வெயில் எறிக்கும்; அவ் வெயில் தழை இடை நிழல் கெடத் தவழும்; அத் தழை மழை இடை எழில் கெட மலரும்; அம் மழை குழைவுறக் குழாம்கொள் பேரி முழங்கிடும்.

பொருள்: அந்தச் சேனையில் உள்ளார் அணிந்திருந்த ஆபரணங்களில் உள்ள பொன்னும் மணிகளும் இள வெயில் வீசும்; அந்த வெயில், மயிற்றோகைக் குடைகளின் நிழல் ஒழியும் படி பரவும்; அந்தக் குடை, மேகங்களின் அழகு கெட விரியும்;

* எழுச்சி - எழுந்து போதல்.—4. 8.

அந்த மேகம் இடிக்கும் இடி தளர்வடையும்படி, பேரிகைகள் முழங்கும்.

இழை - ஆபரணம். தழை - மயிற்றேகைக் குடை. இடை - இடம். தழை யிடை நிழல் - மயிற்றேகைக் குடையிடத்து (அதன் கீழ்) உள்ள நிழல். மழை - மேகம். குடையும் மேகமும் மேலே பரந்து மூடி நிழல் செய்யும்; மயிற் றேகைக் குடை, இனிய பல வருணங்கள் இலங்கும் மயிற் றேகைகளா லாகியது; மேகமும் இனிய பல வருணமுள்ள வானவில்லை யுடையது; ஆதலால் மேகமும் மயிற்றேகைக் குடையும் ஒன்றற்கொன்று ஒப்புமை யுடையனவென உய்த்துணரும்படி 'அத்தழை மழையிடை எழில் கெட மலரும்' என்றார். (150)

மாதர்கள் மீதிருந்து செலுத்தப்பெற்ற குதிரைக் கூட்டம், அன்னங்கள் மேலேயிருக்க அவற்றேடு செல்லும் ஆறு போன்றது. பெண்கள் ஏறிச் செல்லும் யானைகள் மின்னல் களோடு கூடிய மேகங்களை ஒத்தன.

மாதர் வனப்பு

**முத்தினன் முழுநிலா வெறிக்கு மொய்ம்மணிப்**
**பத்தியா லிளவெயில் பரப்பும் பாகினுந்**
**தித்தியா நின்றசொற் சிவந்த வாய்ச்சியர்**
**உத்தரா சங்கமிட் டொளிக்குங் கூற்றமே (151)**

கொண்டுகூட்டு: பாகினும் தித்தியா நின்ற சொல்(லையுடைய) சிவந்த வாய்ச்சியர் உத்தரா சங்கம் இட்டு ஒளிக்கும் கூற்றம், முத்தினல் முழு நிலவு எறிக்கும்; மொய் மணிப் பத்தியால் இள வெயில் பரப்பும்.

பொருள்: இனிப்பான சர்க்கரைப் பாகினும் அதிகமாக இனிக்கின்ற குதலைச் சொல்லை யுடைய சிவந்த வாயினு ராகிய மாதர்கள் மேலாடையிட்டு மறைத்த யமன்போலக் காதலரை வருத்திக் கொல்லும் கொங்கைகள், மேலணிந்திருக்கிற முத் தாரத்தினல் அதன் வெள்ளொளியாகிய நிலவைப் பரப்பும்; மாணிக்க மாலையினல் அதன் செவ்வொளியாகிய இளவெயிலைப் பரப்பும்.

முழு நிலா - பூரண சந்திரிகை. மணி - மாணிக்கம்.—சிந்தா. உத்தராசங்கம் - உத்தரீயம் - மேலாடை. வெயிலுள்ளபோது நில வில்லை, நிலவுள்ளபோது வெயிலில்லை, என்பதற்கு விரோதமாக, ஏக காலத்தில் வெயிலும் நிலவும் பரப்பப்பட்டன என ஆச்சரியம் தோன்றக் கூறினர்.

சேனைப் பெருக்கத்தின் சிறப்பு

உழுந்திட விடமிலை யுலக மெங்கணும்
அழுந்திய வுயிர்க்கெலா மருட்கொம் பாயினான்
எழுந்தில னெழுந்திடைப் படருஞ் சேனையின்
கொழுந்துபோய்க் கொடிமதின் மிதிலை கூடிற்றே
(152)

கொண்டுகூட்டு : உலகம் எங்கணும் உழுந்து இட இடம் இல்லை! அழுந்திய உயிர்க்கெல்லாம் அருட் கொம்பாயினான், எழுந்திலன்; எழுந்து இடைப் படரும் சேனையின் கொழுந்து போய்க் கொடிமதில் மிதிலை கூடிற்றே.

பொருள் : நால்வகைச் சேனையும் அதனோடு சென்ற மாதர் முதலியோர் கூட்டமும் நெருங்கிப் பரந்ததனால் உலக மெங்கும் ஓர் உழுந்தையிடவும் இடமில்லை என்னும்படி ஆகி விட்டது. துன்பச் சேற்றில் அழுந்தும் உயிர்க்கெல்லாம் அருளாகிய ஊன்றுகோலாயிருக்கும் தசரதன் மிதிலைக்குச் செல்லத் தனது இருக்கைவிட்டு எழவில்லை; அதன் முன்பே, அவன் கட்டளையின்படி அயோதிக்கும் மிதிலைக்கும் இடையே சென்று கொண்டிருந்த சேனையின் முன்னணி முனை சென்று மிதிலையைச் சேர்ந்தது.

அருட் கொம்பு - பற்றுக்கோடு - தஞ்சம். படர்தல் - நடத்தல்; கொடி படர்தல். 'படரும்' என்றது சேனை நடத்தலையும் கொடி படர் தலையும் உணர்த்தியது; 'கொழுந்து' என்றது சேனையின் முன்னணி முனைப் பகுதியையும் கொடியின் நுனியையும் குறித்தது; வேறோரிடத் தில், காலின் முனையில் உள்ள விரலைச் 'சேவடிக் கொழுந்து' என்பர். (சுந்தர காண்டம். நிந்தனைப் படலம், 45).

சேனையைக் கொடியாக உருவகித்து, அவ்வுருவகத்தை உய்த் துணரும்படி 'படரும்', 'கொழுந்து', என்ற பதங்களைப் பொருத்த மாகப் பிரயோகித்தார். மிதிலையை வருணிக்க எத்தனையோ பல அடை மொழிகளிருக்கவும், அவற்றுள் வேறெதனையும் எடுத்தாளாமல், 'கொடி மதில் மிதிலை' என்று கூறியது, சேனையைக் கொடியாக உருவகித்ததை உய்த்துணராதாரும் உணரும்படி செய்யக் கருதிப் போலும். (152)

காதலி கடைக்கண் பார்வை

பாண்டிலின் வைத்தவோர் பாவை தன்னொடும்
ஈண்டிய வன்பின னேகு வானிடைக்
காண்டலு நோக்கிய கடைக்க ணஞ்சனம்
ஆண்டகைக் கினியதோ ரமுது மாயதே (153)

கொண்டுகூட்டு : பாண்டிலின் வைத்த ஓர் பாவை தன்னொடும் ஈண்டிய அன்பினன் ஏகுவான், இடை(யில்) காண்டலும், நோக்கிய கடைக் கண் அஞ்சனம் ஆண்டகைக்கு இனியது (ஆகிய) ஓர் அமுதம் ஆயது.

பொருள் : வண்டியில் தான் ஏற்றி வைத்த பாவை போல் வாளோடு செல்பவனாகிய அவள் காதலனைப் பிரயாண மத்தியில் அவள் கடைக்கண்ணாற் பார்த்தாள். பார்த்தவுடனே பார்த்த கடைக்கண் அஞ்சனம், மனத்துள் அவள் அதுவரை மறைத்து வைத்திருந்த காதலை வெளிப்படுத்தி அவனுக்கு இனிய அமுதம் போன்றது.

பாண்டில் - வண்டி. ஈண்டுதல் - நிறைதல்.—ச. அ. இடை - மத்தி. அஞ்சனம் - கண்ணுக்கு இடும் மை; மறைந்து கிடக்கும் பொருளைக் காட்டும் மை. ஆயது - போன்றது. 'கடைக்கண் பார்வைக்கு ஆகு பெயராகவும், 'கடைக்கண் அஞ்சனம்' கடைக்கண் பார்வையாகிய அஞ்சனமென்று பொருள் படுவதாகவுங் கொண்டு, அஞ்சனகாரனது அஞ்சனம் பூமியின் உள்ளே மறைந்து கிடக்கும் புதையற் பொருளைக் காட்டல் போல, பார்வையாகிய அஞ்சனம் மனத்தினுள்ளே மறைந்து கிடக்கும் காதலைக் காட்டியதென்று கொள்ளலாம்; அன்றி, 'கடைக்கண் அஞ்சனம்' என்பதற்குக் கடைக்கண்ணாகிய அஞ்சனமென்று பொருள் செய்து, காதலியின் வெள் விழி கண்ணாடி நேர, அதனிடையுள்ள கரு விழி அக்கண்ணாடியில் இடும் அஞ்சனத்தை நிகர, காதலன் அஞ்சனகாரனை ஒப்ப, காதலி கடைக்கணித்தபோது அவன் அவள் கருவிழியுள்ளே நோக்கிக் கண்டுபிடித்த உள்ளக் காதல் அஞ்சனகாரன் அஞ்சனத்துள்ளே நோக்கிக் கண்டுபிடிக்கும் புதையற் பொருள் போன்றது என்றும் கொள்ள லாம்.

அஞ்சனகாரனது அஞ்சனம் அவனுக்குப் புதையற் பொருளைக் காட்டிக் கொடுத்து வறுமை நோயை நீக்குதல் போல, காதலியின் கண் ணஞ்சனம் காதலனுக்கு அவளுடைய உள்ளக் காதலைக் காட்டிக் கொடுத்து விரக நோயை நீக்குதல்பற்றி, 'பாவை......கடைக்கண் அஞ்ச னம் ஆண்டகைக் கினியதோர் அமுதம் ஆயதே,' என்றார். அமுதம், நோவையும் சாவையும் நீக்கும் தேவருணவு.

மிதிலைக்குப் போவாருள் ஒருவன் தன் மனையாளோடு செல்கிறான். பெண்பாலான துணைபற்றி மனையாளை வண்டியில் வைத்துவிட்டுத் தான் மற்ற ஆடவரோடு நடந்து செல்கிறான். அவ்வாறு போகும் வழியில் இடை இடையே வண்டிக்கு அருகில் வர நேரும்போது, அவள் அவனைக்கண்டு ஆசையோடு கடைக்கண்ணால் நோக்குகிறாள். மையிட்ட காரணம் பற்றிக் கண்ணின் ஓட்டம் தெள்ளிதின் விளங்க, கடை நோக்கின் ஆசைக் குறிப்பு

நன்கு வெளிப்படுகிறது. அது பற்றியே மையிட்டது காதலனுக்கு மிக்க இன்பம் செய்வதாயிற்று. கரிய மை வெண்ணிறத்து அமுதத்தின் இனிமையைப் பயந்தது என்று வைத்த முரணணி காதற் சுவையை அதிகரிப்பிக்கும் விதம் நோக்கற்பாலது.—டி. கே. சிதம்பரநாத முதலியார், பி.ஏ., பி.எல். (153)

## காதல் நிகழ்ச்சிகள்

ஒருவன், தன் காதலி தனங்களிற் பதிந்த கண்களைப் பறிக்கமாட்டாது சென்றதனுல், 'வழி நடப்பவர் பராமுகமாயிடின் மலர்ந்து கண்ணிருந்தாலும், குழியில் வீழ்குவர்' என்றவாறு, குருடன் போல, எதிர்வரும் யானையைக் கண்டு விலகாது முட்டினுன். வேருெருவன், தன் காதலி ஏறிச்சென்ற குதிரை துள்ள, அவள் வழுவி விழா நிற்க, அவளுக்கு அபாயம் நேராமல் அவளைத் தாங்கித் தழுவியவன், தரைமேல் இறக்காமலும் இறங்க விடாமலும் தழுவியபடியே பரவசனுய் நின்ருன். மற்ருெருவன் தன் காதலியை நோக்கி, 'உன் இடை காணப்படவில்லையே! புறப்படும் அவசரத்தில் அதை மறந்து வைத்து விட்டு வந்தாயோ?' என்ருன். ஒரு மாது புலந்து தன் கோபத்தைக் கண்ணுலன்றி வாயாற் கூருது செல்ல, அவள் காதலன் 'இப்போது என்னேடு பேசுகின்ருயில்லையே, வழியில் உள்ள ஆற்றிலிறங்கிச் செல்லும்போது, உன்னை யார் கையால் தூக்கிக் கரைமேலேற்றுவார்?' என்ருன். மற்ருெரு மாது தன் அன்பன் புலந்து பிரிந்து போனவனை நினைந்து கண்ணீர் ததும்பத் தேர்மேற் செல்பவள், அவனது உருவெளித் தோற்றங் கண்டு, 'புலந்து சென்ற நீ திரும்பி வந்தாயா! நல்லது, தேரிலேறு' என்று கூறித் தூக்கி ஏற்றுதற்குக் கைகளைத் தாழ்த்தினுள். இத்தகைய பல நிகழ்ச்சிகளோடு, காணுதற்கு மட்டுமன்றிக் கருதுதற்கு மரிதான இடையையும் காதலர் கண்ணுங் கருத்தும் உருவிக் கடந்து உயிர் வரையும் சென்று நுழையும் விழியையுமுடைய மாதர்கள் எண்ணிறந்தவர்கள் தங்கள் காதலருடன் இராமனுடைய திருக் கலியாணங் காணும் அவாவினராய்ச் சேனையோடு சென்ருர்கள்.

## ஏக காலத்து இரவும் பகலும் தோன்றல்

**குடையொடு களிறுந் தொங்கற் குழாங்களுங் கொடியின் காடும்**
**இடையிடை மயங்கி யெங்கும் வெளிகரந் திருளைச் செய்யப்**
**படைகளு முடியும் பூணும் படர்வெயில் பரப்பிச் செல்ல**
**இடையொரு கணத்தி னுள்ளே யிரவுண்டு பகலு முண்டே**

கொண்டுகூட்டு : குடையொடு களிறும் தொங்கற் குழாங்களும் கொடியின் காடும், இடையிடை மயங்கி, எங்கும் வெளி கரந்து இருளைச் செய்யப் படைகளும் முடியும் பூணும் படர்வெயில் பரப்பிச் செல்ல, (அந்தச் சேனையின்) இடை(யே) ஒரு கணத்தினுள்ளே இரவுண்டு பகலும் உண்டே !

பொருள் : அந்தச் சேனையின் இடையே, குடைகளும், யானைகளும், பீலிக் குஞ்சத் தொகுதியும், கொடிக் கூட்டமும் அங்கங்கே கலந்து எங்கெங்கும் ஆகாய வெளியை மறைத்து இருளை உண்டாக்க, ஆயுதங்களும், கிரீடங்களும், ஆபரணங் களும் விரிந்த வெயிலைப் பரப்ப, ஏககாலத்தில் இரவும் உளதா யது, பகலும் உளதாயது.

தொங்கல் - மயிற்றேகைக் குஞ்சம் - பீலிக் குஞ்சக் குடை. குழாம் - கூட்டம். காடு - கூட்டம். இடை இடை - ஊடே ஊடே. மயங்கி - கலந்து. கரந்து - மறைத்து. இடை - (சேனையின்) இடையே.

'இடை ஒரு கணத்தினுள்ளே' என்பதை 'ஒரு கணத்தின் இடை உள்ளே' எனக் கூட்டி 'ஒரு கணத்தின் துவக்கத்துக்கும் முடிவுக்கும் நடுவிலே' என்றும் கொள்ளலாம். ஒரே காலத்தில் நிகழ முடியாத, ஒன்றற்கொன்று முற்றும் மாறுன, இரண்டு நிகழ்ச்சிகள், யாதாயினும் ஒரு காரணம்பற்றி, ஒருமிக்க நிகழ்வனவாக வியப்புத் தோன்றக் கவி முறையிலே கூறுமிடங்களில் கம்பர் 'ஒரு கணத்து' என்ற சொற்றொடர்ப் பிரயோகஞ் செய்வர். 'ஒரு கணத் திரண்டு கண்டேன்' என்ற, சுந்தர காண்டம், திருவடி தொழுத படலம், 77-ம் பாட்டைப் பார்க்க. (154)

சேனை செல்வதால் எழுந்த புழுதி

**ஆர்த்தது விசும்பை முட்டி மீண்டகன் றிசைக ளெங்கும்**
**போர்த்ததங் கொருவர் தம்மை யொருவர்கட் புலங்கொள் [ளாமைத்**
**தீர்த்தது செறிந்த தோடித் திரைநெடுங் கடலை யெல்லாந்**
**தூர்த்தது சகர ரோடு பகைத்தெனத் தூளி வெள்ளம் (155)**

கொண்டுகூட்டு : (சேனையின்) தூளி வெள்ளம், ஆர்த்தது ; விசும்பை முட்டி மீண்டு அகன் திசைகளெங்கும் போர்த்தது ; அங்கு ஒருவர் தம்மை ஒருவர் கட்புலன் கொள்ளாமையைத் தீர்த்தது ; சகரரோடு பகைத்தெனத் திரை நெடும் கடலை யெல்லாம் செறிந்தது (ஆக) ஓடித் தூர்த்தது.

பொருள் : சேனை செல்வதனு லுண்டாகிய புழுதித் திரள் எங்கும் புழுதிகளை நிறைத்தது ; விண்ணை முட்டித் திரும்பித்

திசைகளெங்கும் சென்று மூடியது; சென்ற இடங்களில் ஒருவரை ஒருவர் பார்த்தல் கூடாமல் தீர்த்தொழித்தது; சகரரோடு பகைத்தாற் போல அவர்கள் தோண்டி உண்டாக்கிய கடலை அடர்ந்ததாக ஒடித் தூர்த்தது.

ஆர்தல் - நிறைதல்; ஆர்த்தல் - நிறைத்தல். அகன் திசை - விசாலமான திக்குகள். கண் புலம் கொள்ளாமை - கண்ணால் அறியாமல் - காணமல். தீர்த்தது - ஒழித்தது. செறிந்தது - நெருங்கியது - அடர்ந்தது. பகைத்தென - பகைத்தாலென, பகைத்தாற்போல. வெள்ளம் - மிகுதி. (155)

### தசரதன் சந்திரசைலச் சாரல் அடைதல்

அப் புழுதித் திரள் பொன் மயமான விண்ணுலக மீது படிந்து (பொன்னிறம் மறைய மண் மயமாகச் செய்து) அவ் விண்ணுலகத்தை இம் மண்ணுலக மென்று மயங்கும்படி செய்தது. இவ்வளவு புழுதி யுண்டாக்கிய தசரதனது பெருஞ் சேனைப் பாரத்தைத் தாங்கமாட்டாமல் பூமிதேவி முதுகை நெளித்தாளென்றால், அவன் பூபாரம் தாங்கிப் பூமிக்குப் பாரத்தை நீக்கினனென்று கூறுவது எவ்வாறோ? அவன், சேனை பரிசனங்களுடன் இரண்டு யோசனை தூரம் சென்று, சந்திரசைலச் சாரலைச் சேர்ந்தான்.

# 14. வரைக் காட்சிப் படலம்

*சந்திரசைலச் சாரலைச் சேர்ந்த தசரதனுதியர் அம் மலைவளங்களைக் கண்டு களித்ததைக் கூறுவது.*

**மாதர் தனங்களும் யானைகளும்**

**கோவை யார்வடக் கொழுங்குவ டொடிதர நிவந்த**
**ஆவி வேட்டன வரிசிலை யனங்கன்மேற் கொண்ட**
**பூவை வாய்ச்சியர் முலைசிலர் புயத்தொடும் பூட்டத்**
**தேவ தாரத்துஞ் சந்தினும் பூட்டின சிலமா (156)**

கொண்டுகூட்டு : கோவை ஆர் வட கொழும் குவடு ஒடிதர நிவந்த, ஆவி வேட்டன, வரிசிலை அனங்கன் மேற்கொண்ட, பூவை வாய்ச்சியர் முலை சிலர் புயத்தொடும் பூட்ட, (கோவை ஆர் வட கொழும் குவடு ஒடிதர நிவந்த, ஆவி வேட்டன, வரிசிலை அனங்கன் மேற் கொண்ட,) சிலமா தேவ தாரத்தும் சந்தினும் பூட்டின.

பொருள் : அந்தச் சந்திரசைலச் சாரலிலே மாதர் தனங்களாகிய யானைகள், மைந்தர் சிலருடைய தோள்களாகிய தூண்கள் கட்டுத் தறிகளாக, அவைகளிற் கட்டப்பட, அந்தத் தனங்களுக்கு உவமானமாகிய யானைகள் சில, தேவதாரு சந்தனமென்னும் மரங்கள் கட்டுத் தறிகளாக அவைகளிற் கட்டப்பட்டன.

முதலிரண் டடிகள் மாதர் தனங்களுக்கும் மதயானைகளுக்கும் சிலேடை. கோவை ஆர் வட கொழும் குவடு ஒடி தர நிவந்த - (தனங்கள்) கோத்த மாலை அணிந்த, திசையில் உள்ள (மேரு) மலை (ஒப்பாக மாட்டாமையால்) முறிந்து போம்படி (எனவே, தோல்வி யடையும்படி) வளர்ந்தன ; [கோவை - கோத்தமாலை, ஆர்தல் - அணிதல். குவடு - மலை. ஒடிதர - ஒடிய - தளர ; —மணிமே.; கெட. —பரிபா. நிவந்த - வளர்ந்தன.] (யானைகள்) ஆகாயத்தைப் பொருந்திய ஆலமரத்தின் கொழுமையான கிளைகள் ஒடியும்படி உயர்ந்தன. (வடம் - ஆலமரம்).

ஆவி வேட்டன - (தனங்கள்) ஆடவரது உயிரை விரும்பின ; (யானைகள்) தடாகத்தை விரும்பின.

வரிசிலை அனங்கன் மேற்கொண்ட - (தனங்கள்) கட்டப்பட்ட வில்லை யுடைய மன்மதனை (-மன்மதன் உருவம் தொய்யிலாக எழுதப் பட்டதனை) மேலே கொண்டன ; (யானைகள்) மன்மதன் போன்ற வீரர் ஏறப்பட்டன.

பூவை - நாகணவாய்ப் பறவை. அது, ஆகுபெயராய், அப் பறவையின் சொல்லைக் குறித்தது. வாய், ஆகு பெயராய், வாயினுற் சொல்லப்

படும் சொல்லை யுணர்த்தியது. பூவை வாய்ச்சியர் - நாகணவாய்ப் பறவை யின் சொற் போலும் சொற்களை யுடையார் (ஆகிய மாதர்கள்). சந்து - சந்தன மரம். 'பூட்ட', 'பூட்டின', என்பவை, 'எழுதிய ஓலை' என்பது போலப் படு விகுதி தொக்குப் 'பூட்டப் பட,' 'பூட்டப் பட்டன', என்று பொருள்பட நின்றன.

மா, எல்லா மிருகங்களுக்கும் பொதுப்பெயராயினும், இதற்கு முந்திய பாட்டிற் கூறப்பட்ட 'மன்மதக் களிறும் மாதர் கொங்கையும்' பற்றிக் கூறும் இந்தப் பாட்டில் முன் தொடர்புபற்றி யானையைக் குறித்தது. 'கோவை யார்வட கொழுங்குவ டொடிதர நிவந்த—ஆவி வேட்டன வரி சிலை அனங்கன்மேற் கொண்ட' என்ற விசேடணங்களாலும் 'மா' என்பது யானையை உணர்த்தியது.

கோவை ஆர் என்பது, தனங்களுக்கு விசேடணமாம்போது, கோவை (- கோத்த மாலை) ஆர் முலை எனவும், யானைகளைக் குறிக்கும் போது கோவை (-ஆகாயத்தை) ஆர் (- பொருந்திய) வட கொழும் குவடு எனவும் இயையும். வடம் ( - ஆலமரம்) வடமொழி யாதலால், வடக் கொழுங் குவடென்னாது வட கொழுங் குவ டென்றார்.

யானைகளின் மேலிருந்த மாதரை அவர் கொழுநர் தழுவித் தாங்கி இறக்கும்போது தனங்கள் புயங்களில் பூட்டப்பட்டன. அவர்கள் இறங்கிய பின் அவ் யானைகள் மரங்களில் பூட்டப்பட்டன. ( - கட்டப்பட்டன). பூட்டுதல், அணைத்தல், கட்டுதல், ஒரு பொருட் பன்மொழி. பூட்டுதல் - கட்டுதல்.—த. அ. 'பூட்டாங் கயிறு' என உலக வழக்கில் வருதலுங் காண்க. யானைகள் தனங்களுக்கும், மரங்கள் புயங்களுக்கும் உவமை. 'மராமரம் இவையென வலிய தோளினன்'.—இக் காண்டம், கார்முகப் படலம் 59. (156)

## தேர்ச் சிறப்பு

தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினு மவர்தம்
மருண்ட புன்மையை மாற்றுவ ரெனுமது வழக்கே
உருண்ட வாய்தொறும் பொன்னுரு ளுரைத்துரைத் தோடி
இருண்ட கல்லையும் பொன்னிற மாக்கிய விரதம் (157)

**கொண்டுகூட்டு :** தெருண்ட மேலவர், சிறியவர்ச் சேரினும் அவர் தம் மருண்ட புன்மையை மாற்றுவர் எனும் அது வழக்கு ; இரதம், பொன் உருள் உருண்ட வாய்தொறும் (அவ் உருளின் பொன்னை) உரைத்து உரைத்து ஓடி இருண்ட கல்லையும் பொன்னிறம் ஆக்கிய.

**பொருள் :** பெரியோர், தம் போன்ற பெரியோரை இயல்பாகச் சேர்தலன்றி, ஒரு கால் சிறியோரைச் சேர்ந்தா ராலும், அச் சிறியோ ருடைய சிறுமையை மாற்றுவாராய் அவரைத் தம் போலப் பெரியோ ராக்குவார் என்று சொல்லப்படுவது உலக

வழக்கு; அதுபோலத் தேர்கள், தம் பொற் சக்கரங்கள் உருண்ட இடமெல்லாம் அப் பொற் சக்கரங்களின் பொன்னை உரைத்துக் கொண்டே ஓடிக் கருநிறமான கல்லையும் பொன் னிறமாக்கின.

தெருண்ட - தெளிந்த. மேலவர் - பெரியோர். மருண்ட - மயங் கிய. புன்மை - சிறுமை. மருண்ட புன்மை - மயக்கம் காரணமாக ஏற் பட்ட சிறுமை. எனும் அது - என்று சொல்லும் அது - என்று சொல் லப்படும் அது - என்று சொல்லப்படுவது. இது போல, 'ஆண்மை யென்னு மது' ஆண்மை யென்று சொல்லப்படுவது என்ற பொருளில் மேலே 56-ம் பாட்டில் வருதல் காண்க. வழக்கு (உலகத்தாரால்) வழங் கப் படுவது - (உலக) வழக்கு. (157)

### மாதர் தோற்றம்

அந்த மலைச்சாரலிலே மரங்களின் அருகே சென்ற, பன்னிற மணிகள் இழைத்த ஆபரணங்க ளணிந்த மாதர்கள், அம்மரங்களின் பல வருணப் பூப் பூத்த கொம்புகள் போன்றார். பளிங்குப் பாறையிலே தன் உருத் தோன்றும்படி ஒரு மாது படுத் துறங்க, அவளைத் தேடி வந்த அவளுடைய தோழிகள் அவளுடைய இரண் டுருவங்களைக் கண்டு திகைத்தார்கள்.

### மாதரது மேனியை மைந்தர் துடைத்தல்

**மிதிக்கநிமிர் தூளியின் விளக்கமறு மெய்யைச்**
**சுதைக்கணுரை யைப்பொருவு தூசுகொடு தூசை**
**உதிர்த்தன ரிளங்குமர ரோவியரி னோவம்**
**புதுக்கின ரெனத்தருண மங்கையர் பொலிந்தார் (158)**

கொண்டுகூட்டு: ஓவியர், இன் ஓவம் புதுக்கினரென, இளங் கும ரர், (சேனை) மிதக்க நிமிர் தூளியின் விளக்கம் அறும் (மாதர்) மெய்யி னின்று தூசை சுதைக்கண் நுரையைப் பொருவு தூசு கொடு உதிர்த்த னர். (அந்தத்) தருண மங்கையர் பொலிந்தார்.

பொருள்: சித்திரிகர் இனிய சித்திரங்களைப் புதுப்பிப்பவர் போல, காளையர்கள், ஆள்கள் குதிரைகள் ஆனைகள் மிதிக்க எழுந்த தூசினால் பொலிவற்ற தம் காதலிகளின் மேனியினின்று அந்த நுண் தூசிகளைப் பால்நுரை போன்ற வெள் ஆடை கொண்டு துடைத்து உதிர்த்தார்கள். அதனால் அந்த இள மங்கையர்கள் புதுப்பிக்கப்பட்ட சித்திரம் போல விளங் கினார்கள்.

தூளி - தூள். சுதை - பால். தூசு - தூள் ; ஆடை. ஓவியர் - சித்திர காரர். இன் - இனிய. ஓவம் - சித்திரம். தருணம் - இளமை.

'தூசுகொடுதூய்தா' என்றும் பாடம். 'மெய்யைத் தூசுகொடு தூசை உதிர்த்தனர்' என்பதற்கு, 'மெய்யினின்றும் தூசைத் தூசு கொண்டு உதிர்த்தனர்', என்று பொருள் கொள்க. 'மெய்யி னின்றும்' எனற் பாலது 'மெய்யை' என வந்தது, 'யாத னுருபிற் கூறிற் றுயினும் - பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும்'* என்பதனுல் என்க. 'மெய்யைத் தூசுகொடு தூய்தா உதிர்த்தனர்', என்ற பாடத்துக்குப் பொருள் கூறுங்கால், 'தூள் உதிர்த்தனர்' என்று, 'தூள்' என்ற பதத்தை அவாய் நிலையாகக் கொள்க.

'ஓவியர் இன் ஓவம் புதுக்கின ரென இளங் குமரர், மிதிக்க நிமிர் தூளியின் விளக்கம் அறும் (தருண மங்கையர்) மெய்யைச் சுதைக்கண் நுரையைப் பொருவு தூசுகொடு தூசை உதிர்த்தனர் ; தருண மங்கையர் பொலிந்தார்' எனக் கூட்டிப் பொருள் செய்யப்பட்டது காண்க. 'புதுக்கின ரென' என்றில்லாமல் 'புதுக்கினவென' என்று பாடமுளதாயின், 'இளங் குமரர் (தருண மங்கையர்) மெய்த் தூசை, (சித்திரத் தூசைத் துடைத்து உதிர்க்கும்) ஓவியரின் ( - சித்திரகாரர் போல), உதிர்த்தனர் ; ஓவம் (- சித் திரங்கள்) புதிக்கின வென ( - புதுக்கப்பட்டன போல) தருமணமங்கையர் பொலிந்தார்' என்று கூட்டிப் பொருள் கொள்ளலாம். (158)

## மாதரும் மைந்தரும் மலைக்காட்சிகள் காணல்

மலையினின்று இறங்கும் சிங்க ஏறுகள் போல, யானையி னின்று அரசர் இறங்கி, அந்தச் சிங்க ஏறுகள் குகைகளுள் நுழைதல் போலக் கூடாரங்களினுள்ளே குடி புகுந்தார்கள். தம் மேற்படிந்த புழுதியை உடல் குலுக்கி உதறி யெறிந்த குதிரை கள், தம்மைச் சேர்ந்த தீயோரைத் தீயோரெனத் தெரிந்த மாத்தி ரையே விலக்கித் தள்ளிவிட்ட தூயோர் போல விளங்கின. திரைச் சீலைகள் அலையும் கூடாரங்களிலே, கழங்காடும் மங்கை யர் கண்கள், கழங்குகள் செல்வழி ஓடித் திரும்பி மிளிர்கின் றவை, திரையலையும் தடாகங்களில் (இரை தேடி யோடிப்) பிறழ்ந்து பிரகாசிக்கின்ற மீன்கள் போன்றன. சேனையைக் காணுதற்கு வந்த தேவலோக வாசிகள் தம்மவர்களையும் சேனையி லுள்ளாரையும் பகுத்தறிய மாட்டாமல் திகைப்புறும்படி யிருந் ததனுல், மைந்தர் மகளிரோடு பொலிந்த அந்த மலைச்சாரல், தேவர் தேவமாதரோடு தேவ லோகம் வழுக்கி மண்ணில் விழுந்து விளங்கிற்றுற் போன்றிருந்தது. மாதர்கள், கூவும் குயில்களி

---

*நன்னூல்.

ளுேடு பேசியும், எதிரொலி ஒலிக்கும் மலேயொடு கூடி எதிரொலி கேட்டும், உவந்து, மயில்கள் போல உலாவித் திரிந்தார்கள். மைந்தர்கள், காலில் வீரக் கழல்கள் சத்திக்க, மாலேயிலே வண்டு கள் ஒலிக்க, பக்கத்திலே வாள் விளங்க, தோளில் வாகுவலயம் துளங்க, அந்தத் தோள் போன்ற மலேயின் காட்சிகளேக் காண் பாராய்த் திரிந்தார்கள்.

**சந்திரன், கண்ணுடி யாதல்**

**குப்புறற் கருமை யாலக் குலவரைச் சாரல் வைகி**
**ஒப்புறத் துளங்கு கின்ற வுடுபதி யாடி யின்கண்**
**இப்புறத் தேயுங் காண்பர் குறத்திய ரியைந்த கோலம்**
**அப்புறத் தேயுங் காண்பா ரரம்பைய ரழகு மாதோ (159)**

கொண்டுகூட்டு : குப்புறற்கு அருமையால் அக் குலவரைச் சாரல் வைகி ஒப்புறத் துளங்குகின்ற உடுபதி (ஆகிய) ஆடியின் கண், இப் புறத்தேயும் குறத்தியர் இயைந்த கோலம் காண்பர் ; அப் புறத்தேயும் அரம்பையர் அழகு காண்பார்.

பொருள் : அந்த மலே மிக உயர்ந்து கடத்தற்கு அருமை யாயிருத்தலால் கடக்க மாட்டாமல் அந்த மலேப் பக்கத்திலே தானே தங்கி முன்னும் பின்னும் ஒப்ப விளங்குகின்ற சந்திர ளுகிய கண்ணுடியிலே அதன் பூமியை நோக்கிய இந்தப் பக் கத்திலே குறத்தியர் தமது அழகை நோக்குவார்கள் ; வானே நோக்கிய அதன் மறுபுறமாகிய அந்தப் பக்கத்திலே அரம்பையர் தமது அழகை நோக்குவார்கள்.

குப்புறல் - கடத்தல். ஒப்புறத் துளங்குகின்ற உடுபதி ஆடி - (முகம் பார்க்கும் கண்ணுடி ஒரு பக்கமே விளக்கமா யிருக்கும், அது போலன்றி இருபக்கமும்) ஒன்றுபோல விளக்கமா யிருக்கும் சந்திரளுகிய கண்ணுடி; (நம்மைக் கண்ணுடி யென்று நம்பால் தம் அழகைப் பார்க்கின்ற மாதர் முகத்துக்கு) ஒப்பு உற (நாம் தகுதி யில்லேமே யென்று அஞ்சி) நடுங்கு கின்ற சந்திரளுகிய கண்ணுடி. துளங்குதல் - விளங்குதல் ; நடுங்குதல். ஆடி - கண்ணுடி. கோலம் - அழகு.

சந்திரசைலத் துச்சியைச் சந்திரன் கடக்க மாட்டாமல் அம் மலேப் பச்கத்தில்தானே தங்கி யென்றதளுல், (அம் மலேயின் பெயர்க் காரணம் கூறிளுர் போலு மென்று ஓர் நினே வெழச் செய்து) அம் மலேயின் மிக்க உயர்ச்சியைக் குறிப்பித்தார் ; அவ்வாறு குறிப்பித்தவர் அம்மட்டிலே நில்லாமல், சந்திரனே மிகப் பொருத்தமாகக் கண்ணுடியாக உருவகித்து, அவ்வளவிலும் அமையாமல், மற்றைக் கண்ணுடிகள் போலன்றி அவ்

வுருவகக் கண்ணுடி இரு பக்கமும் முகம் பார்க்குந் தன்மை யுடைமையை ஏதுவாகக் கொண்டு, தம் பாவனு சக்தியால், அதன் ஒரு புறத்தில் மலை நாடியரும் மறு புறத்தில் வான நாடியரும் தத்தம் அழகு காண்பார்க ளென்று அதிசயமும் ஆநந்தமும் விளையக் கூறிய நயம் பாராட்டற்பாலது.

சந்திரன், சந்திரசைலத்தின் உச்சியைக் கடக்க மாட்டாது அதன் தாழ் வரையில் தங்க, அதன் ஒரு பக்கத்தில் குற மாதரும் மற்றொரு புறத்து அமர மாதரும், அழகு பார்த்தா ரென்றதனுல், வானுலகம் அச் சந்திரனுக்குச் சமீபமாகவும் அம்மலை யுச்சிக்குக் கீழாகவும் இருந்த தென்று உய்த்துணர வைத்தார். இது, குற்ருலக் குறவஞ்சியில், திரிகூட மலைச்சிகரம் வானுலகத்திற்கு மேலிருந்ததென ஊகித்துணரச் செய்யும் பின்வரும் கண்ணியை நினைவுறுத்துகின்றது—

வானரங்கள் கனிகொடுத்து மந்தியொடு கொஞ்சும்
மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும் (159)

## மலைச் சாரலின் தோற்றம்

மலை வளங் காணும் மாதர் ஒரு சுனையைப் படிகத் தள மென்று மயங்கி விரைந்து சென்று இறங்க, அவர் சேலை நனையக் கண்ட மைந்தர்கள் கை கொட்டிச் சிரித்தார்கள்.

பல இடங்களில் உள்ள மலர்களைத் தேடி யுற்றுக் கள்ளுண்டு களிக்கும் ஆண் வண்டுகள் பெண் வண்டுகள் போல, மைந்தரும் மகளிரும் அம் மலையின் பல இடத்து வளங்களையும் நாடிச் சென்று கண்டு களித்தார்கள்.

சுவர்க்கத்தை அடைந்தவர்கள் போல, மலைமேலுற்றவர்கள் பூமியில் இறங்க மனமில்லாராய்க் களித்துக்கொண்டிருக்கும் போது, மாலைக் காலம் வந்தது.

அப்போது, அத்தமனகிரி ஆனையை ஒத்தது; அதனை அடைந்த சூரியன், அந்த ஆனைமேற் பாய்ந்த சிங்கத்தை ஒத்தது; செவ்வானம், சிங்கம் யானை மேற் பாயப் பொங்கிய இரத்தப் பிரவாகத்தை ஒத்தது; அப்படிப்பட்ட மாலை நேரம் கழியும் பொழுது, அம் மலைமேல் ஏறியிருந்தவர்கள், கீழே யிறங்கினுர்கள்.

கிரணக் கற்றைப் பிடரி மயிரை யுடைய சூரியச் சிங்கம் அத்தமனகிரிக் குகையிற் புகுந்து மறையவே, அதுவரை ஒதுங் கிப் பதுங்கி ஒளித்திருந்த யானைக் கூட்டம் போல இருள் வந்து எங்கும் பரந்தது.

தீபங்கள் எங்கும் ஏற்றப் பெற்ற சேனைக் கடல், செந் தாமரை நிறையப் பூத்த தெண்ணீர்க் கடல் போல விளங்கியது.

சந்திரன், எங்கும் பரவிய நிலாவி னிடையே நட்சத்திரங் களினூடே செல்லா நின்ற காட்சி, வெண்மணற் பரப்பிலே தன்னால் ஈடுபட்டுச் சூழச் சிதறுண்டு கிடக்கும் முத்துக்கள் மத்தியிலே வெண் சங்கம் ஊதா நின்ற தோற்றம் போன்றது.

மீனக் கடல் ஒரே சந்திரனை யீன்ற தென்று, சேனைக் கடல் எண்ணில்லாத சந்திரன்களை யீன்ற தென்னும்படி, சேனையிலே அள விறந்த மாதர்களின் முக மதிகள் பொலிந்தன.

நடன மாதர் நடிக்க, அதற்கியைய மத்தளிகர் மத்தளம் கொட்ட, தாளகாரர் தாளம் தட்ட, பாடகர் பாட்டுப் பாட, யாழ்ப்பாணர் யாழ் இசைக்க, வேய்ங்குழல் ஊதுவோர் ஊத, எல்லா இனிய ஓசையும் ஒன்றுக்கொன்று முரணுதலின்றி ஒற்று மைப் பட்டுக் கூடித் தேவரும் மயங்கும்படி விம்மி ஒலித்தன.

வாயினால் உண்ண முடியாத அருங்கலை அமிழ்தைக் காதி னால் உண்டும், மாதர்களது ஆடலைக் கண்டும், பாடலைக் கேட்டும், ஊடலைத் தீர்த்தும் மைந்தர்களுக்கு இரவு கழிந்தது.

## 15. பூக் கொய் படலம்

வழியில், ஒரு சோலையில், மாதர்களும் மைந்தர்களும் பூக் கொய்தலைக் கூறுவது

### சூரியோதயம்

**மீனுடை யெயிற்றுக் கங்குற் கனகனை வெகுண்டு வெய்ய**
**கானுடைக் கதிர்க ளென்னு மாயிரங் கரங்க ளோச்சித்**
**தானுடை யுதயமென்னுந் தமனியத் தறியு ணின்று**
**மானுட மடங்க லென்னத் தோன்றினன் வயங்கு வெய்யோன்**

கொண்டுகூட்டு: மீன் உடை எயிற்றுக் கங்குற் கனகனை வெகுண்டு, வெய்ய கான் உடைக் கதிர்கள் என்னும் ஆயிரம் கரங்கள் ஓச்சித் தான் உடை உதயம் என்னும் தமனியத் தறியுள் நின்று, மானுட மடங்கலென்ன வயங்கு வெய்யோன் தோன்றினன்.

பொருள்: விண்மீன்களாகிய பற்களையுடைய இரவாகிய இரணியனைக் கோபித்துக் கிரணக் கைகளை நீட்டி உதயகிரி யாகிய தூணினின்று நரசிங்கம் தோன்றியது போலச் சூரியன் உதயமாயினன்.

மீன் - விண் மீன் - நட்சத்திரம். மீன் உடை எயிற்றுக் கங்குற் கனகன் - நட்சத்திரங்களைத் தன்னுடைய பற்களாக உடைய இரவாகிய இரணியன். கான் - காடு - அதிர்ச்சி. தான் உடை - தன்னுடைய. 'யான் உடை' என்னுடைய என்ற பொருளில், சுந்தர காண்டம், பாசப்

படலம், 19-ம் பாட்டில் வருதல் காண்க. உதயம், உதய கிரியை உணர்த்தி நின்றது. தறி - தூண். (160)

### பூக் கொய்தல்

பின்பு சேனை புறப்பட்டுச் சோணை யாற்றைச் சேர்ந்தது. அப்போது உச்சிப் பொழுதாயிற்று. பூக் கொய்யவும் நீராடவும் விரும்பி மாதர்களும் மைந்தர்களும் தடாகங்கள் மலிந்த ஒரு சோலையைச் சேர்ந்தார்கள்.

மாதர்கள், தங்கள் புருவங்கள் விற்களாக, கண்கள் அம்பு களாக, தம்மை எய்வா ரென்று பயந்தன போல மயில்களும், அவர் வாய் சொற் கேட்டு நாணின போலக் கிளிகளும், அவர்கள் நடை யழகு கண்டு ஒதுங்கின போல அன்னங்களும் அவர் களைக் கண்டு விலகிப் போயின. அடிமுதல் முடியளவும் (பன் னிற மணி) அணிகள் அணிந்த மாதர்களின் கூட்டம் (களிப்பால்) ஆடுதல், (பன்னிற மலர்கள்) நிறையப் பூத்த கொம்புகளின் கூட்டம் (காற்றால்) ஆடுதலை ஒப்ப, (தூரத்தே நின்று கண்ட) மைந்தர்கள் இரு கூட்டத்துக்கும் பேதந் தெரியாமல் மயங்கி னார்கள். குயில்கள் அகல்வன, மாதர்களின் ஆரவாரத்திற்கு அஞ்சி யன்று, அவர் பேச்சுக்கு எதிர்பேச நாணியே : 'வாசகம் வல்லார் முன்னின்று யாவர் வாய் திறக்க வல்லார் ?'

மாதர்கள் இனிதாக நோக்கிக் கையால் தீண்டவே, (உணர்ச்சி யில்லாத) கொம்புகளே தாழ்ந்து அவர்கள் பாதங் களில் மலர் சொரிந்து வணங்கின வென்றால், அவர்களுக்கு (வசியப்பட்டு) வணங்காதவ ருண்டோ? மாதர்கள் தீண்ட, வன்மை யுடைய மைந்தர்களே வணங்கித் தாழ்வார்களானால், அவர்கள் தீண்ட, மென்மையுடைய கொம்புகள் வணங்கித் தாழ்தல் ஆச்சரியமாமோ ?

### ஒரு கொடி இரு சாதிப் பூ பூத்ததுபோல மாதர் முகமும் கண்ணும் விளங்குதல்

**நதியினுங் குளத்தும் பூவா நளினங்கள் குவளை யோடு**
**மதிநுதல் வல்லி பூப்ப நோக்கிய மாலைத் தும்பி**
**அதிசய மெய்திப் புக்கு வீழ்ந்தன வலைக்கப் போகா**
**புதியன கண்ட போழ்து விடுவரோ புதுமை பார்ப்பார் (161)**

கொண்டுகூட்டு : மதி நுதல் வல்லி, நதியிலும் குளத்தும் பூவா நளினங்கள் குவளையோடு பூப்ப நோக்கிய மாலைத் தும்பி, அதிசயம் எய் திப் புக்கு வீழ்ந்தன ; அலைக்கப் போகா ; புதுமை பார்ப்பார் புதியன கண்டபோழ்து விடுவரோ ?

பொருள் : மாதராகிய கொடிகள் ஆறுகளிலும் குளங்களிலும் அலராத முகங்கள் கண்களாகிய தாமரையும் நீலோற்பலமும் பூத்திருக்கக் கண்ட வண்டுகள் அதிசயமுற்று அவைகளில் விழுந்து மொய்த்தன ; அவைகள் நீங்கும்படி அலேக்க நீங்கிப் போகாவாய்த் தங்கி மொய்த்துக் கொண்டிருந்தன ; புதுமையான பொருள்களை விருப்போடு காண்போர் அவைகளைக் கண்டால் விட்டுப் போவாரோ ?

மதி நுதல் வல்லி - பிறை போலும் நெற்றியை உடைய கொடி (- கொடிகளாகிய பெண்கள்). மாலை - ஒழுங்கு - வரிசை.

ஒரே கொடியிலே தாமரை குவளையாகிய இரு சாதிப் பூக்கள் பூத்திருத்தல் புதுமை என்பது குறிக்க 'அதிசய மெய்தி' என்றார். 'நளினங்கள் குவளையோடு வல்லி பூப்ப' என்றதற்கு, (கண்களோடு கூடிய முகங்கள் போல) குவளைகளோடு (கூடிய) தாமரைகளைக் கொடிகள் பூக்க, என்று பொருள் செய்து, நீல மலர்கள் தம் மேல் மலரப் பெற்ற தாமரை மலர்களைக் கொடிகள் பூத்திருத்தல் புதுமை என்பது குறிக்க 'அதிசய மெய்தி' என்றார், எனலுமாம்.

இது, மாதரது தாமரை மலர் போலும் முகத்தில் நீல மலர் போலும் கண்கள் விளங்குதலை உட்கொண்டு 'முண்டகத்தின் மீது முழுநீலம் பூத்திருக்கக் கண்டதுண்டு கேட்டதில்லை காண்' என்ற சமுத்தியையும், நகர் நீங்கு படலத்தில்,

> வாவிவிரி தாமரையின் மாமலரின் வாசக்
> காவிவிரி நாண்மலர் முகிழ்த்தனைய கண்ணுர்

என வருவதனையும் நினைவுறுத்துகின்றது. (சமுத்தி - பாடும்படி எதிர் கொடுக்கும் உள்ளுறை வசனம்.) (161)

### பூங் கொம்புகள் மாதரை ஒத்தல்

பூங் கொம்புகளில் ஆடவர்களுக்கு எட்டியவை இணங்கிய மாதரையும், எட்டாதவை பிணங்கிய மாதரையும் போன்றன.

### காதல் நிகழ்ச்சிகள்

**போரென்ன வீங்கும் பொருப்பன்ன பொலங்கொ டிண்டோள்**
**மாரன் னனையான் மலர்கொய்திருந் தானை வந்தோர்**
**காரன்ன கூந்தற் குயிலன்னவள் கண்பு தைப்ப**
**ஆரென்ன லோடு மனலென்ன வயிர்த்து யிர்த்தாள்** (162)

கொண்டுகூட்டு : ஓர் கார் அன்ன கூந்தற் குயில் அன்னவள் வந்து, 'போர்' என்ன வீங்கு பொருப்பு அன்ன பொலம் கொள் திண் தோள் மாரன் அனையான், மலர் கொய் திருந்தானை, கண் புதைப்ப, (அவன்) 'ஆர்' என்னலோடும், அனல் என்ன அயிர்த்து உயிர்த்தாள்.

**பொருள் :** மேகம் போன்ற கூந்தலையுடைய, குயிலை யொத்த குரலை யுடைய ஒரு பெண், 'போர்' என்று சொல்லக் கேட்டவுடன் போர் செய்ய எழும் ஆசையால் பூரிக்கின்ற வலிய தோளையுடைய, மன்மதன் போன்ற, தன் கணவன் பூப் பறித்துக் கொண்டிருந்தவனை, கண் பொத்த, அவன் 'ஆர்?' என்றவுடனே, அவனிடத்துத் தன்னைப் போல விளையாடும் மாதர் பிறர் உளர், இல்லையாயின் இவ்வாறு கேட்டிரான், என்று சந்தேகித்து, உலை நெருப்புப் போலக் கோபத்தால் மேனி சிவந்து, துருத்தியால் ஊதப்பட்டு உலை நெருப்பினின்று புறப்படும் காற்றுப் போலப் பெருமூச் செறிந்தாள்.

பொலம் - அழகு. 'வீங்கும் தோள்', 'பொருப்பு அன்ன தோள்', 'அயிர்த்து அனல் என்ன உயிர்த்தாள்', எனக் கூட்டுக. (162)

ஒரு மன்னன் தான் வைத்திருக்கும் ஒரு மலரை வேண்டி இரண்டு மாதர் கையேந்தி நிற்க, அம் மலரை ஒருத்திக்குக் கொடுத்தால் மற்றொருத்தி மனம் நோவாளென்று, மிக்க லோபி போலக் கொடுக்க மாட்டானாய், கொடாது மறுக்கவு மாட்டானாய், வாளா நின்றுகொண்டிருந்தான். மற்றொரு மன்னன் தன்னிடத்தே உள்ள பூக்களை இரண்டு மாதருக்குச் சமமாகப் பகுத்துக் கொடுக்க, இருவரும், 'என்னை அதிகமாக நேசிக்கவில்லை', என்று கோபங்கொண்டு, அந்த மலர்களை வீசி யெறிந்தார்கள்.

வேறொரு மன்னன் ஒருத்திபால் மிக்க காதல் கொண்டு, அவளொடு பழக்க மாகுதற்கு வேறு யாது செய்வ தென்று தெரியானாய், 'என் கையில் உள்ள மந்தார மலரைப் பெற்றுக் கொண்டு உன் கையில் உள்ள மாதவி மலரைத் தருவாயா?' என்று கூறி யிரந்து நின்றான். பின்னுமொரு மன்னன், தன் அழகை நுகர விரும்பித் தன் காதலியர் கண்கள் சூழா நிற்க உலாவுவோன், மத நீரை யுண்ண விரும்பி வண்டுகள் சூழா நிற்கத் திரிகின்ற யானையை ஒத்தான். இன்னு மொரு மன்னன், தன் கையிலே தாமரை மலரை யேந்தி, தன் காதலியர் முகக் கமலங்கள் தன்னைச் சூழ்ந்து நோக்க உலாவி, தாமரையைக் கையிலேந்தித் தாமரைக் காட்டினிடையே செல்லும் சூரியனைப் போன்றான்.

ஒரு மாது, எல்லாப் பூக்களும் பறிக்கப்பட்டு வெறுமையான ஒரு கொம்பை நோக்கி, இது இந் நிலைமையில் என் ஆருயிர் நாயகன் காணுதற் கினிதா யிராதென்று, அதற்குத் தன் ஆபரணங்களை அணிந்து பார்த்து மகிழ்ந்து நின்றாள்.

மற்றொரு மாது, ஓர் அன்னத்தைக் கண்டு. அதன் நடையைக் கண்டு, அது தன்னை உறவென் றெண்ணியது போலத் தொடர்தலைக் கண்டு, அது தன்னொடு தோழமை யுடையதெனக் கொண்டு, அன்புடன் அதனை நோக்கி 'நீ என் தோழி' என்றாள்; பின்பு, 'சேலை யில்லாத உன்னைக் கண்டவர்கள் இகழ்வார்கள். இதை உடுத்துக் கொள்' என்று ஒரு சேலையைக் கொடுத்தாள். மாதர்கள், தம் உயிரென்றோ, அதனினும் இனிய தென்றோ, கூந்தல் குலைதலையும் ஆடை அவிழ்தலையும் அறியாராய், மலர் எங்கே கிடைக்கும் என்று தேடித் திரிவா ராயினர்.

**யாழொக் குஞ்சொற் பொன்னனை யாளோ ரிகன்மன்னன்**
**தாழத் தாழா டாழ்ந்த மனத்தா டளர்கின்றாள்**
**ஆழத் துள்ளுங் கள்ள நினைப்பா ளவனின்ற**
**சூழற் கேதன் கிள்ளையை யேவித் தொடர்வாளும் (163)**

கொண்டுகூட்டு: யாழ் ஒக்கும் சொற் பொன் அனையாள், ஓர் இகல் மன்னன் தாழத் தாழாள்; தாழ்ந்த மனத்தாள் தளர்கின்றாள்; (நெஞ்சின்) ஆழத்து உள்ளும் கள்ளம் நினைப்பாள்; அவன் நின்ற சூழற்குத் தன் கிள்ளையை ஏவித் தொடர்வாள் (ஆனாள்).

பொருள்: யாழ் இசை போலும் சொல்லை யுடைய திருமகளொப்பாள் ஒருத்தி, கணவனாகிய மன்னன் கோபம் தணியும்படி பணியவும் கோபம் தணியாதவள், அவன் பிரிந்து போன பின்பு கோபம் தணிந்த மனத்தினள் ஆகி, அவன் பணிந்த போது இணங்கினோ மில்லையே என்று பச்சாத்தாபப்பட்டு வருந்துகின்றவள், அவன்பால் வலியச் செல்ல விரும்பி, அவ்வாறு சென்றால் பரிகாசத்துக் கிடமாமென்றும் தன் கிளியை அவன்பாற் செல்லச் சொல்லிவிட்டு அதனைத் தேடிச் செல்லல் போலச் சென்று அவனை அடைதலே அப் பரிகாசத்தை நீக்கத் தக்க உபாய மென்றும் கருதி, அக்கருத்து முகக் குறி முதலிய எவ்வாற்றானும் வெளிப்படாது மறைக்கவேண்டித் தன் நெஞ்சில் மேற்புறத் தன்றி ஆழத்திலே நினைத்த கள்ள நினைப்பினாள், அவன் நின்ற இடத்துக்குச் செல்லும்படி தன் கிளியை ஏவி அதனைத் தொடர்வாள் ஆயினாள்.

இகல் - வலி. ஆழத்து உள்ளும் - (நெஞ்சில்) ஆழத்தில் நினைக்கின்ற; உம்மை, இறந்ததும் எதிரதும் தழுவியது. மூல நூலில், இப் பாட்டினும் இதன் முன்னும் பின்னும் 'ஒருத்தி இவ்வாறு செய்வாளும்' 'ஒருத்தன் இவ்வாறு செய்வானும்' எனப் பன்னிரண்டு பாட்டுக்கள் குளகமாகப் பாடி, அவையாவும் 'ஆயினர்' என்பதை அவாய் நிலையாக்

கொண்டு முடிவு பெற வைத்திருப்பது காண்க. (குளகம் - ' பல பாக்கள் கூடி ஒரு வினை கொண்டு முடிவது'. அவாய்நிலை - ' ஒரு பதம் தன்னோடு பொருந்திப் பொருள் முடித்தற் குரிய மற்றொரு பதத்தை வேண்டி நிற்கும் நிலை.') (163)

**சோலைத் தும்பி மென்குழ லாகத் தொடைமேவுங்**
**கோலைக் கொண்ட மன்மத வாயன் குறியுய்ப்ப**
**நீலத் துண்கண் மங்கையர் சூழ நிரையாவின்**
**மாலைப் போதின் மால்விடை யென்ன வருவாரும் (164)**

**கொண்டுகூட்டு :** மாலைப் போதில், சோலை(யிலே), தும்பி மென் குழலாக, தொடை மேவும் கோலைக் கொண்ட மன்மத ஆயன் குறி உய்ப்ப, (ஆடவர்கள்) நிரை ஆவின் நீலத்து உண்கண் மங்கையர் சூழ, மால் விடை என்ன வருவாரும்.

**பொருள் :** மாலையிலே, அந்தச் சோலையிலே, வண்டோசை மெல்லிய வேய்ங்குழ லோசையாக, மதனன் ஆகிய கோபாலன் குறித்த இடத்துக்குச் செலுத்த, ஆடவர்கள், பசுக் கூட்டம் போல மாதர் சூழ்ந்துவர, காளைகள் போலச் செல்வார் ஆயினர்.

தும்பி - வண்டு. குழல் - வேய்ங் குழல்.—சிந்தா. இரண்டும் அதனதன் ஓசையைக் குறித்தன. தொடை - பூமாலை; வில் நாண். கோல் - மரக் கொம்பு; அம்பு. ' தொடை மேவும் கோல் ' என்ற தொடர்க்கு ' நாணிற் பொருந்திய அம்பு ' என மன்மதனுக்குப் பொருந்தவும் ' பூ மாலை (சுற்றப்பட்டுப்) பொருந்தி (பசு ஓட்டும்) கோல்; என இடையனுக் குப் பொருந்தவும் பொருள் கொள்க. ஆயன் - இடையன். நீலத்து உண் கண் - நீல நிறத்தையுடைய (மை) உண்ட கண்களையுடைய. நிரை - வரிசை. ஆ - பசு. ' ஆ நிரையின் ( - பசுக் கூட்டம் போல) மங்கையர் சூழ ' என மாற்றுக. மால் - பெருமை. மால் விடை - பெரிய இடபம். இப் பாட்டும் இதன் முற்பாட்டுப் போல ' ஆயினர் ' என்பதை அவாய் நிலையாகக் கொண்டு முடிந்தது.

குறி - குறித்த இடம். அது, காளைகள் பசுக்களுக்கு இரவில் தங்கும் தொழுக்களையும், ஆடவர் பெண்டிர்க்குக் கலவி யின்ப மனுபவிக்கும் கூடாரங்களையும், குறித்தது. மாலை வரவே, அது, காளைகள் பசுக்களுக் குத் தொழுவிற்குச் செல்லுங்கால மென இடையன் தெரிவித்தல் போல, அந்த மாலை மைந்தர்க்கும் மாதருக்கும் காமம் நுகருங் கால மென மன் மதன் (அவர் மனத்திலே காத லெழச்செய்து) தெரிவித்தானென்றார். (164)

### மாதரும் மைந்தரும் நீர்விளையாடச் செல்லல்

பூக்கொய் விளையாட்டைப் போதிய அளவு செய்து வெறுத்த மாதரும் மைந்தரும் நீர்விளையாட்டை விரும்பித் தடாகங்களை அடைந்தார்கள்.

# 16. நீர்விளையாட்டுப் படலம்

பூக்கொய்த மாதர் மைந்தர் நீர்விளையாடலைக் கூறுவது

### நீர்விளையாட்டு வருணனை

**அங்கவர் பண்ணை நன்னீ ராடுவா னமைந்த தோற்றங்**
**கங்கைவார் சடையோ னன்ன மாமுனி கனல மேனுள்**
**மங்கையர் கூட்டத் தோடும் வானவர்க் கிறைவன் செல்வம்**
**பொங்குமா கடலுட் செல்லுந் தோற்றமே போன்ற தம்மா (165)**

**கொண்டுகூட்டு :** அங்கு அவர் பண்ணை நல் நீர் ஆடுவான் அமைந்த தோற்றம், மேனுள், கங்கை வார் சடையோன் அன்ன மாமுனி கனல, வானவர்க்கு இறைவன் செல்வம், மங்கையர் கூட்டத்தோடும் பொங்குமா கடலுள் செல்லும் தோற்றம் போன்றது.

**பொருள் :** அந்தத் தடாகத்திலே, வந்த மைந்தரும் மாதரும் நீர்விளையாடப் பிரவேசிக்க அமைந்த காட்சி, துருவாச முனிவன் சாபத்தினுல் இந்திரனது செல்வத்தோடு தேவமாதர் கூட்டம் கடலுட் செல்லலுற்ற தோற்றத்தை ஒத்தது.

'கனலல்', 'காய்தல்'போல, நெருப்பின் தொழிலாய், தாற்பரியப் பொருளாகக் கோபித்தலை யுணர்த்தி, கோபித்தல் காரணமாக சபித்தலைக் குறித்தது. மேனுள் - முன் நாளில். செல்வம் - கற்பக தரு, சங்க நிதி, பதும நிதி, சிந்தாமணி, காமதேனு முதலிய பொருள்கள். ஒரு வித்யாதர மாது இலக்குமியைப் பூசித்துப் பெற்ற மாலையைத் துருவாசன் பெற்று இந்திரனுக்குக் கொடுக்க, இந்திரன் அதனை அசட்டையாக வாங்கியதால், இந்திரனது செல்வ முழுதும் கடலை யடையச் சாபமிட்டனன்'.—அபிதான சிந்தாமணி. (165)

ஆழநீரில் தம் நாயகர் மார்பிலும் தோளிலும் ஏந்தப் பெற்ற மாதர்கள் முறையே விட்டுணுவின் மார்பிலும் தோளிலும் வீற்றிருக்கும் திருமகளையும் வீர லக்குமியையும் போன்றனர். காதலர்களும் காதலியர்களும் ஒருவர்மேலொருவர் வாசனைப் பொடிகளை வீசுவாரும் பூமாலை கொண்டோச்சுவாரும் நீரை அள்ளி யிறைப்பாரு மாயினர்.

அந்தத் தடாகத்து மீன்களைக் கண்டு, தடாகத்துக்கும் கண்களுண்டோ வென்று ஒரு மாது தன் கணவனை வினவினுள். மற்றொரு மாது, ஊடிப் பிரிந்து போய், தாமரை மலர்கள் நிறைந்திருந்த ஓர் இடத்தில் மறைந்துகொள்ள, அவள் நாயகன்

அங்கே தோன்றியவைகளுள், இது தாமரை, இது முகம், என்று வேற்றுமை தெரியாளுய், உற்றுப் பார்ப்பா ஞயினுன்.

வேறெருரு மாது முகம் மட்டும் தோன்ற நீருள் முழுக, அவள் முகம், நீரிலே தோன்றும் சந்திர பிம்பம் போல விளங்கியது. தடாகத்தில் நீராடிய மாதர்களுடைய செவ்வாய் வெளுக்கக் கண்கள் சிவக்கப் பூசிய சந்தன குங்குமங்கள் அழிய ஆடை அவிழ்ந்ததினுல், அம் மாதர்கள் கொழுநரோ டாடிய மாதர் போன்றனர் : தடாகம் கொழுநர் போன்றது.

நீராடலால், பூசியிருந்த சந்தனம் முதலியன கழுவப் பெற்று விளங்கிய பெண்மணிகள், அழுக்ககற்றப்பட்ட ஒண் மணிகளை * ஒத்தனர். தாமரை மேலேறியஅன்னங்கள், தங்களை நடையினுல் தோல்வி யடையச் செய்த மாதர்களுடைய பாதங்களுக்கு அம் மலர்கள் உவமானமா யிருக்கின்றன வென்று கோபித்து அம் மலர்களை மிதிப்பன போலத் தோன்றின.

அலையால் தடுமாறி முழுகுகிற தாமரை மலர்கள், மாதர் முகங்களைத் தாம் ஒவ்வாமைக்கு நாணி ஒளிப்பன போன்றன. ஒரு மன்னவன் தன் காதற் கருத்தை ஒரு மாதுக்குக் கைச் சைகையாற் சொன்னுன். அதனை அவள் தன் தோழிக்குக் கண்சமிக்கையாற் சொன்னுள்.

நீராட்டு முடித்து மாதரும் மைந்தரும் கரை யேறவே, தடாகம், தாமரை மலர்கள் குடி போனது போன்றது ; அன்றி, நிறைந்து விளங்கிய நட்சத்திரங்கள் நீங்கிய வானத்தை ஒத்தது ; ஆடவரும் பெண்டிரும் நீராடியதைக் கண்டு, தானும் நீராட விரும்பினுன் போலச் சூரியன் மேற்றிசைக் கடலில் விழுந்து அத்தமனமானுன். எதிர்த்த அரசன் முன் நிற்க மாட்டாமல் தோற்று ஓடி ஒளித்திருந்த அரசன், மீளவும் போர் செய்ய வெளிப்பட்டுத் தோன்றுதல்போல, மாதர் முகங் களுக்குத் தோற்றேடி யொளித்திருந்த சந்திரன் மீளவும் தோன்றினுன்.

---

* பிரகாசமான இரத்தினங்களை.

# 17. உண்டாட்டுப் படலம்

*மிதிலை செல்வோர் மது உண்டு மகிழ்ந்து விளையாடலைக் கூறுவது*

**சந்திரோதயம்**

**கலந்தவர்க் கினியதோர் கள்ளு மாய்ப்பிரிந்**
**துலந்தவர்க் குயிர்சுடு விடமு மாயுடன்**
**புலந்தவர்க் குதவிசெய் புதிய தூதுமாய்**
**மலர்ந்தது நெடுநிலா மதனன் வேண்டவே (166)**

**கொண்டுகூட்டு:** நெடு நிலா, கலந்தவர்க்கு ஓர் இனிய கள்ளு மாய்ப் பிரிந்து உலந்தவர்க்கு உயிர் சுடு விடமுமாய், (காதலர்) உடன் புலந்தவர்க்கு உதவி செய் புதிய தூதுமாய், மதனன் வேண்ட, மலர்ந்தது.

**பொருள் :** சந்திரிகையானது, பிரியாமல் சேர்ந்து வாழ் வார்களாகிய காதலர்க்குக் காமத்தை அதிகப்படுத்தும் கள்ளுப் போன்றதாய், பிரிந்து வாடுவார் ஆகிய காதலர்க்கு உடம்பே யன்றி உயிரையும் வெதுப்பும் விடம் போன்றதாய், ஊடல் செய் வார் ஆகிய காதலர்க்கு அவர்களுடைய காமத்தை மிகுவித்து ஊடல் நீங்கிக் கூடுதற்கு விரைவாய் உதவி செய்யும் தூது போன்றதாய், மன்மதன் வேண்டிக்கொள்ள, அவன் வேண்டு கோட்கியைந்தாற்போல எங்கும் பரவியது.

'ஆய்' மூன்றும், 'போன்று' என்ற பொருளுடையன. உலத்தல் - குறைதல். மலர்ந்தது - விரிந்தது - பரந்தது. உடன் - உடனே - அக் கணமே.—ச. அ. - விரைவாக. நெடு நிலா - பெரிய சந்திரிகை. நிலா, கள்ளுமாய், விடமுமாய், தூதுமாய், மதனன் வேண்ட மலர்ந்தது, எனக் கூட்டுக. (166)

**ஆறெலாங் கங்கையே யாய வாழிதாம்**
**கூறுபாற் கடலையே யொத்த குன்றெலாம்**
**ஈறிலான் கயிலையை யியைந்த வென்னினி**
**வேறியாம் புகல்வது நிலவின் வீக்கமே (167)**

**கொண்டுகூட்டு :** ஆறு எலாம் கங்கையே ஆய; ஆழி(கள்) தாம் கூறு பாற் கடலையே ஒத்த; குன்று எல்லாம் ஈறு இல்லான் கயிலையை(யே) இயைந்த; நிலவின் வீக்க(த்தை) இனி யாம் வேறு புகல்வது என் ?

**பொருள்:** சந்திரிகை தம்மேற் பரவப் பெற்று வெண்ணிறம் அடைந்ததனுல், எல்லா ஆறுகளும் இயல்பாக வெண்மையான கங்கா நதி போன்றன; கடல்களெல்லாம் பாற்கடல் நேர்ந்தன; மலைகள் யாவும் வெள்ளி மலை யொத்தன: இவ்வாறு கூறுவதன்றி, நிலாப் பெருக்கத்தைப்பற்றி இனி நாம் வேறு கூறத் தக்கது யாது உளது? ஒன்றும் இல்லை.

ஆய - ஒத்தன. 'செம்மாந்த தெங்கின் இளநீரை ஓர் செம்மல் நோக்கி—அம்மா இவை மங்கையர் கொங்கைகள் ஆகும் என்ன' * என்பதில், 'ஆதல்', 'ஒத்தல்' என்ற பொருள்பட வருதல் காண்க. கூறு - (மற்றைக் கடல்களினுஞ் சிறந்ததாகக்) கூறப்பட்ட. இயைந்த - ஒத்தன. என் - யாது. வீங்குதல் - மிகுதல்.—புறநா. வீக்கம் - மிகுதி; பெருமை.—சிந்தா.

'கங்கையே,' 'கடலையே,' என்பவற்றில் வரும் 'ஏ,' 'முன்னவனே முன்னின்ருல் முடியாத பொருளுளதோ?' என்பதில் உள்ள 'ஏ' போல உயர்வு சிறப்புப் பொருள் தந்து நின்றது. அந்த 'ஏ' கயிலையை என்பதன் பின் தொக்கு நின்றது.

சாமானியமான ஆறுகளைச் சங்கரன் சடையில் தரித்த மகிமையுடைய கங்கை யாருகவும், சாதாரணமான கடல்களைத் திருமால் பள்ளி கொள்ளும் சீர் படைத்த பாற் கடலாகவும், பல இடங்களில் காணப்படும் மலைகளை ஈசன் வாழும் மகத்துவம் மிகுந்த கைலை மலையாகவும் செய்து, வெண்ணிறமும் சிவன் முடிமேல் விளங்கும் சந்திரனது ஒளியாம் பெருமையும் உடைய சந்திரிகையானது, தான் சார்ந்த பொருள்களைத் தன்னைப் போல வெண்மையும் மேன்மையும் அடையச் செய்ததென்று பொருள் விரித்துரைக்கலாம். நிலவு பரவப் பெற்ற கருங் கடல் கரிய மலை முதலியன வெண்ணிற மடைந்தன வென்பது, மேலே 157-ம் பாட்டில், 'உருண்ட வாய்தொறும் பொன்னுருள் உரைத்துரைத்தோடி—இருண்ட கல்லையும் பொன்னிற மாக்கிய இரதம்' என்றதனேடு ஒப்பிடற்குரியது. (167)

### கள் உண்ணல்

மாதர்கள், முத்துப் பந்தலிலும், பூம்பந்தலிலும், கூடாரங்களிலும் தாம் நீராடி விட்டு நீங்கிய தடாகங்கள் போன்ற பளிங்குப் பாறைகளிலும் சென்று தங்கிப் பூவிலே தேனை வார்த்தாற் போல வாயிலே கள்ளை ஊற்றி உண்பாராயினர்.

---

* இக்காண்டம் பூங்கொய் படலம் 17.

உக்கபால் புரைநிலா உண்ட வள்ளமுங்
கைக்கொள்வா ளொளிபடச் சிவந்து காட்டத்தன்
மைக்கணுஞ் சிவந்ததோர் மடந்தை வாய்வழிப்
புக்கதே னமிழ்தமாய்ப் பொலிந்த போன்றவே. (168)

கொண்டுகூட்டு: உக்கபால் புரைநிலா உண்ட வள்ளமும், ஓர் மடந்தை கைக்கொள்வாள் ஒளிபடச் சிவந்து காட்ட, (அவள்) தன் மைக் கண்ணும் சிவந்தது; (அவள்) வாய்வழிப்புக்க தேன், அமிழ்தமாய்ப் பொலிந்தது போன்றது.

பொருள்: சிந்திப் பரவிய பால் போன்ற பரந்த வெண்மை யான நிலாப் பொருந்தியதனுல் வெளுத்திருந்த செம்பொற் கிண்ணமானது, அதனை, அதனிலிருந்த கள்ளை யுண்ட ஒரு மாது கையால் எடுப்ப, அவள் செங்கை ஒளிபடச் சிவந்து தோன்ற, கள்ளுண்ட காரணத்தால் அவளுடைய கருங்கண் சிவந்தது; அதே காரணத்தால் வெளுத்திருந்த வாயிலே அவள் உண்ணும்படி ஊற்றப் புகுந்த செந்தேன் வாயின் வெள்ளொளி பட்டு வெண்மையான அமிழ்தமாய் விளங்கியது போன்றது.

கள் உண்டார்க்கு வாய் வெளுத்தலும் கண் சிவத்தலும் இயல்பு. உக்க - சிந்திய. புரை - ஒத்த. உண்ட - பொருந்திய. ச. அ.— 'பொலிந்த,' 'போன்ற,' என்பவை 'து'வ்விகுதி தொக்கு நின்றன. 'வருவபோற் கலுழன்மேல் வந்து தோன்றினுன்,' * 'பூதகணத் தர சேந்தி அனல் நின்றும் புறப்பட்ட,' என்பவைகளில், 'வருவ,' 'புறப் பட்ட,' என்பன 'து'வ்விகுதி தொக்கு நின்றதைக் காண்க. உம்மைகள், இசைநிறை. (168)

**கள் மயக்கம்**

ஓமாக்கினி உள்ளே உள்ள ஓம குண்டத்தின் வாயில் ஊற் றும் நெய் ஓமாக்கினியை ஓங்கி வளரச் செய்தல் போல, காமாக் கினி உள்ளே உள்ள மாதர் வாயில் வார்த்த கள், காமாக்கினி யைக் கதித்துப் பெருகச் செய்தது.

கள்ளுண்டு அறிவு மயங்கியதாலோ, மாதர்க் கியற்கையாக வுள்ள பேதைமையினுலோ, ஒரு மாது, கள் வார்த்த கிண்ணத் திலே தன் வடிவைக் கண்டு, 'தோழியே! என்னுடன் கள்ளுண் பாயாக' என்றுள்; மற்றெருரு மாது தன் முகத்தைக் கள்வள்ளத்

* இந்நூல், 30-ம் பாட்டு.

திலே கண்டு, ‘பைத்தியகாரீ ! யாது செய்தாய்! வேறு நிரம்பக் கள்ளிருக்க, எச்சிற் கள்ளை உண்ணுகின்றாயே !’ என்றாள்; வேறொரு மாது, கள் வட்டிலிலே சந்திரிகை பாய்ந்து கள் நிறைந்தது போலத் தோன்றக் கண்டு உண்ணுதற்கு வாய் வைக்கவே, பக்கத்தில் நின்றோர் பார்த்துப் பரிகசிக்க, வெட்கமுற்றாள்; பிறிதொரு மாது, தன் கண்ணின் நிழல் கள்ளிலே தோன்ற வண்டென்று ஓட்டலுற்றாள்; ஏனை ஒரு மாது, தான் இருந்த பூம்பந்தரின் விதானத்தில் உள்ள துளைகள் வழியாக ஒழுகும் நிலாவைக் கள் என்று வள்ளத்தில் ஏற்றாள்; இன்னும் ஒரு மாது, கள்ளுச் சாடியுள்ளே சந்திர பிம்பத்தைக் கண்டு, ‘சந்திரா ! நீ வானத்திலுள்ள இராகு வென்னும் பாம்புக்குப் பயந்து இங்கு வந்து ஒளித்தாய் போலும்; பயப்படாதே; அபயம் அளித்தேன்.’ என்றாள்; பின்னும் ஒரு மாது, கள்வள்ளத்துள்ளே தன் முகத்தைக் கண்டு, கள்ளுண்ணும் ஆசையால் சந்திரன் அவ் வள்ளத்துள் விழுந்தானென்று எண்ணி, ‘யான் என் கணவனோடு ஊடும் நாட்களில் நீ கொதிமதி யாகாமல் குளிர்மதி யாவாயானால், யான் உனக்குக் கள் உண்ணக் கொடுப்பேன்.’ என்றாள்; பெயர்த்தும் ஒரு மாது, கள்ளுண்ட மயக்கத்தால் பூமாலையை அரையிலும் பொன் மாலையைக் கூந்தலிலும் சுற்றினாள்.

இவ்வாறு அறிவு மயங்கிய மாதர் செயல்கள் ஆக, அறிவு மயங்காத மாதொருத்தி, தன் உள்ளத்தில் உறைகின்ற கணவன் கள்ளுண்ணாதவ னென்பதை நினைந்து, அவன் உள்ள உள்ளத்தில் கள் உண்ண எண்ணும் எண்ணத்துக்கும் இடங்கொடுத்தலாகாதென்று, கள் உண்ணலை எண்ணலும் செய்யாது விலக்கினாள்.

ஒரு மாது, தன் காதலைத் தன் கணவனுக்குத் தெரிவிக்கும்படி தோழியைத் தூதனுப்புகின்றவள், ‘தோழீ ! என் நெஞ்சைத் தூது விட்டேன். அது அவரிடமே தங்கி வாராமல் தாழ்த்தது. அதுபோல நீயும் தாமதித்து விடுவாயோ? திரும்பி வருவாயோ?’ என்றாள். ஒரு பேதை, தன் தோழிய ரெல்லாரையும் ஒருத்தி பின் ஒருத்தியாகத் தன் நாயகன்பால் தூதனுப்பிவிட்டு, அவர்கள் பின் தானும் தனியளாய்ச் சென்றாள்.

ஒரு கோதை, சயனத்திலே தன்னோடிருந்த கொழுநனோடு ஊடினாள்; பின்பு அவள் ஊடல் நீங்க எண்ணங் கொண்டாள்.

அந்தக் குறிப்பை அவன் அறியா திருந்தான்; ஆகவே, பேசா திருந்த தான் வலிந்து பேசுவதை மறைக்க, சோம்பல் விடுவாள் போன்று, கை கால்களை நிமிர்த்துக் கொட்டாவி விட்டுக் கொண்டு, 'எத்தனை நாழிகை கழிந்தன?' என்று கேட்டாள்.

ஒரு பாவை புலவி செய்தாள்; காமத்தால் அப்புலவி நீங்கிக் காமம் அதிகப்படவே, அக் காமத்தைத் தீர்த்தற்கு, அவள் பொய்யுறக்கம் உறங்கி, கனவு கண்டு பயந்தவள் போலக் காந்தனைக் கட்டிக் கொண்டாள். ஒரு பூவை, தான் செல்வது பிற ரறியாதபடி சதங்கை முதலிய ஒலி செய்யும் ஆபரணங் களைக் கழற்றி வைத்துவிட்டு, தன் புருடனிருக்கு மிடத்துக்குப் புறப்பட்டாள். அப்போது சந்திரன் தோன்ற, அது தன்னை வெளிப்படுத்தித் தான் கரந்து செல்லுதற்குத் தடையாயின தென்று கடுமையாகக் கோபித்து, அதனைத் தீர்த்துவிடுவாள் போலப் பார்த்தாள்.

ஒரு நங்கை தான் காமனுல் வருந்துவதைச் சொல்லக் கருதி, அவன் உருவம் உள்ள படத்தைப் பார்த்துத் தோழியை நோக்கி னுள். அதனுல் அவள் காம நோயுற்றதைத் தோழி ஊகித் துணர்ந்து, அந் நோயைத் தீர்க்க அவள் காதலனை அழைத்து வரப் புறப்படுவாளாகி அவன் இருந்த திசையை நோக்கினுள்; அந் நோக்கின் குறிப்புணர்ந்து தன் நோக்கின் சமிக்கையால் அந் நங்கை விடையளித்தாள். ஒரு மங்கை, தன் மணவாள னுள்ள இடத்துக்குச் செல்வாளானுள்; அவளை அழைத்துச் சென்ற தூது, மதுவோ, மதியோ, மதனே, எதுவோ, தெரியேம். ஒரு மடந்தை, தன் கேள்வன் மீது கொண்ட கோபமும் மோக மும் ஒன்ருேடொன்று போராட, கோபம் தோற்ருேட, கோபத் தைச் செலுத்தற் கிடமில்லாது போயிற்றே என்று நாணிக் கண் ணீர் விட, அது கண்ட அவன் 'யாது நேர்ந்தது!' என்று நகைக்க, தானும் நகைத்து நாணம் விடுத்தாள்.

### மகிழ்நன் துன்புறுதல்

பொய்த்தலை மருங்குலா ளொருத்தி புல்லிய
கைத்தல நீக்கிலள் கருத்தி னீக்கினள்
சித்திரம் போன்றவச் செயலொர் தோன்றற்குச்
சத்திரம் மார்பிடைத் தைத்த தொத்ததே (169)

கொண்டுகூட்டு: பொய்த்து அலை மருங்குலாள் ஒருத்தி, (புருடன் தன்னைப்) புல்லிய கைத்தலம் நீக்கிலள்; (அக்கைகளை) கருத்தில் நீக்

**கினள் ; (ஆக) அச் சித்திரம் போன்ற செயல், ஓர் தோன்றற்கு மார்பிடைச் சத்திரம் தைத்தது ஒத்தது.**

**பொருள் :** ஒருத்தி, தன்னைத் தழுவிய தலைவனது கைகளைத் தள்ளவில்லை ; மனத்துள் அவனை ஏற்றுக் கொள்ளவு மில்லை ; தன்னை அடைந்தாரை வெறுத்துத் தள்ளுதலும் எதிர் தழுவி விரும்பிக் கொள்ளுதலும் செய்யாத விசித்திரமான அவள் செயல், அவனுக்கு நெஞ்சில் வேல் பாய்ந்தது போன்றது.

**பொய்த்து அலை மருங்குலாள் - பொய்யாகி (இருந்தும் இல்லாத தென்று சொல்லும்படி சிறியதாய்) துவளுகின்ற இடையினை யுடையாள். கைத் தலம் - கை. தோன்றல் - தலைவன். சத்திரம் - வேலாயுதம்.**

**பாட பேதம் :** *நீக்கினள் கருத்தி னீக்கலள்.* **(169)**

### ஆசையும் நாணமும் போராடல்

ஒருத்தி தன் பிரிய சகியை ஆலிங்கனஞ் செய்துகொண்டு, அன்பு பாராட்டி 'என் நாயகன்பால் தூது போ' என்று சொல்ல உன்னுவாள் ; நாணத்தாற் சொல்ல மாட்டாள் ; திரும்பவும் சொல்ல உன்னுவாள் ; திரும்பவும் நாணத்தாற் சொல்ல மாட்டாள் ; இவ்வாறு பலமுறை பயனின்றி முயன்று நெடு நேரம் தோழியைத் தழுவியபடியே நின்று விம்மிக்கொண் டிருந்தாள்.

### காதலர் தழுவுதல்

**உருத்தெரி தன்மைய வுயிரு மொன்றுதம்
அருத்தியு மத்துணை யாய நீரினர்
ஒருத்தியு மொருத்தனு முடம்பு மொன்றெனப்
பொருத்தின ராமெனப் புல்லி னாரரோ (170)**

**கொண்டுகூட்டு : உருத் தெரி தன்மையை உயிரும் ஒன்று ; தம் அருத்தியும் அத்துணை ; ஆய நீரினர் ஒருத்தியும் ஒருத்தனும், உடம்பும் ஒன்றெனப் பொருத்தினரா மெனப் புல்லினர்.**

**பொருள் :** காதலனும் காதலியுமாகிய ஒருவனுக்கும் ஒருத்திக்கும் உருவம் தோன்றும் தன்மை யுடைய உயிர் ஒன்று ; அன்பும் ஒன்று ; அப்படிப்பட்ட தன்மையுடையோர் ஆன அந்த ஒருவனும் ஒருத்தியும் உடம்பும் ஒன்றே யென்னும்படி (மெழுகுப் பாவை யிரண்டை ஒன்றுக) இணைப்பார் போலத் தம் உடல்கள் ஒன்றி ஐக்கியமாகத் தழுவினர்கள்.

உரு தெரி தன்மைய - உருவம் கண்ணுக்குத் தெரியும் தன்மையை உடைய. அருத்தி - அன்பு. அத் துணை - (ஒன்று என்ற) அந்த அளவு. ஆய - அப்படிப்பட்ட. 'ஆயவன்,' அப்படிப்பட்டவன் என்ற பொருள்பட, 'ஆயவன் ஒருபகல் அயனை யேநிகர்' என இக் காண்டம், திரு அவ தாரப் படலம், முதற் பாட்டில் வருதல் காண்க. ஆம், அரோ, அசைகள்.

'ஒன்று தாம்' என்றும் பாடம். அந்தப் பாடத்தில் 'தாம்' என்பதைப் பகுதிப் பொருள் விகுதியாகக் கொண்டு கடவுள் வாழ்த்தில் 'உலகம் யாவையும் தாம் உள' என்பதை 'உலகம் யாவை தாமும்' உள எனக் கூட்டியது போல, 'உயிரும் ஒன்றுதாம்' என்பதை '(இருவர்) உயிர்(கள்) தாமும் ஒன்று' எனக் கூட்டுக.

அச்சிடப்பட்டிருக்கிற பாலகாண்டப் பிரதிகள் பலவற்றில், உயிர் கண்ணுக்குப் புலப்படாத தன்மைய தாதலாலோ, வேறு காரணத்தாலோ, 'உருத் தெரி தன்மைய உயிர்' என்ற பாடம் தள்ளப்பட்டுக் 'கருத்தொரு தன்மைய துயிர்' என்ற பாடம், மோனையின்றி யிருந்தும், கொள்ளப்பட் பட்டிருக்கிறது. முந்திய பாடம், மோனையுடைமை பற்றியும் பின் வரும் விளக்கம் பற்றியும் இங்கே எடுத்தாளப்பட்டது. அவ்விளக்கம் வருமாறு :

மற்றையோர்க்குப் போலன்றி, காதலர்க்கு அவர் உயிர் அவராற் காதலிக்கப்பட்டார் உருவமாகத் தோன்றும் என்பது பற்றி, இங்கே காதலராகிய ஒருத்தனுக்கும் ஒருத்திக்கும் 'உருத் தெரி தன்மைய உயிர்' என்றூர். காதலன், காதலியின் தோற்றத்தைத் தன் உயிரின் தோற்றமாகக் கொண்டு மொழிபகர்வதைப் பின்வரும் பாட்டுக்களில் காண்க :

காணு மரபிற் றுயிரென மொழிவோர்,
நாணிலர், மன்ற* பொய்ம்மொழிந்தனரே ;
யாஅங்கண் டும்மே அரும்பெற லுயிரே ;
சொல்லும், ஆடும், மென்மெல இயலும் ;
கணைக்கால் நுணுகிய நுசுப்பின்
மழைக்கண் மாதர்ப் பணைப்பெருந் தோட்டே. ‡ —குறுந்தொகை

நேயத்த தாய்நென்ன லென்னைப் புணர்ந்துநெஞ் சந்நெகப்போ
யாயத்த தாயமிழ் தாயணங் காயர னம்பலம்போற்
றேயத்த தாயென்றன் சிந்தைய தாய்த்தெரி யிற்பெரிதும்
மாயத்த தாகி யிதோவந்து நின்றதென் மன்னுயிரே. —திருக்கோவையார்

காதலனுக்குக் காதலியாகிய உயிரும் காதலிக்குக் காதலனாகிய உயிரும் ஒன்றுக்கொன்று ஏற்றத்தாழ்வில்லாமல் இன்பம் பயத்தலில் ஒன்று போன் றிருத்தல் பற்றி 'உயிர் ஒன்று' என்றூர். அவர்கள் ஒத்த அன்பினராதல் குறிக்க 'அருத்தி ஒன்று' என்றூர். (170)

நெடுங்காலம் பிரிந்திருந்த காதல ரிருவர், சந்திக்கச் சமயம் கிட்டியபோது, உடல்கள் மெழுகுப் பாவைகள் போல ஒட்டும்படி

* மன்ற - நிச்சயமாக. ‡ தோட்டு - தோளை யுடையது.

இறுகத் தழுவினார்கள் ; ஒட்டிய உடல்களை அவசத்தாற் பிரிக்க அறியாராய் நெடும்பொழுது பிரியாராயினர்.

ஒரு காதலன் தன் காதலியை மார்பு அழுந்தத் தழுவ, அவள் அவனை எதிர் தழுவியபோது, அவள் கைகள் அவன் முதுகை அணைத்தது, அவள் தனங்கள் அவன் மார்பை உருவி முதுகுப் புறத்து வெளிப்பட்டனவோ வென்று தொட்டுப் பார்த்ததுபோன்றது.

**கொழுநனது வரவு நோக்கல்**

**மறப்பிலள் கொழுநனை வரவு நோக்குவாள்**
**பிறப்பினொ டிறப்பெனப் பெயருஞ் சிந்தையாள்**
**துறப்பரு முகிலிடைத் தோன்று மின்னெனப்**
**புறப்படும் புகுமொரு பூத்த கொம்பனாள் (171)**

**கொண்டுகூட்டு :** ஒரு பூத்த கொம்பு அன்னாள், கொழுநனை மறப்பிலள், வரவு நோக்குவாள், பிறப்பினொடு இறப்பு எனப் பெயரும் சிந்தையாள், துறப்பு அரும் முகிலிடைத் தோன்றும் மின் என (கூடாரத்தைவிட்டு) புறப்படும், (மீண்டு அதனுள்ளே) புகும்.

**பொருள் :** ஆபரணங்கள் அணிந்து பூத்த கொம்பு போன்ற ஒரு மாது, தன் நாயகனை ஒரு பொழுதும் மறவாதவள், அவன் வரவை ஒவ்வொரு கணமும் எதிர்பார்ப்பவள், ஓர் உயிர்க்குப் பிறப்பும் இறப்பும் மாறி மாறி வருதல் போல, ஒருகால் வருவானென்ற எண்ணமும் ஒருகால் வாரானென்ற எண்ணமும்மாறி மாறி வர, நிலைமாறும் மனத்தினள், மேகத்தினின்று தோன்றும் மின் அடுத்தடுத்து வெளிப்படலும் மறைதலும் போலப் பல முறை கூடாரத்தினின்று நாயகன் வருவானென்று வரவேற்க வெளியே வருவாளும் வாரானென்று உள்ளே போவாளுமாயினள்.

பெயரும் - நிலை பெயரும் - நிலை மாறும். துறப்பு அரு முகில் - (மின்னுக்கு உறைவிட மாகியதனால் அதற்கு) நீங்குதற்கரிய மேகம் ; (மழை பெய்வது பிராணாதார மாதலால் உலகத்தார்) வெறுத்துவிடக் கூடாத மேகம்.

மின் பெண்ணுக்கும், மின் தோன்றல் மறைதல் பெண் வெளியே வரல் உள்ளே போதலுக்கும் உவமானம். உவமானமாகிய மேகத்தைக் கூறி உவமேயமாகிய கூடாரத்தைக் கூறாது உய்த்துணர வைத்தார். இவ்வுவமான வுவமேயங்களின் பொருத்தம் நினையுந் தோறும் மிக்க மகிழ்ச்சி

விளைப்பதா யுள்ளது. மைந்தரும் மாதரும் கூடாரத் துறைதல் இக் காண்டம், வரைக் காட்சிப் படலம், 17, 18-ல் கூறப்பட்டது.

இப் பாட்டு,

*வருவார் கொழுந ரெனத்திறந்தும், வாரார் கொழுந ரெனஅடைத்தும்*
*திருகும் குடுமி விடியளவும் தேயும் கபாடம் திறமினோ !*

என்னும் கலிங்கத்துப் பரணிப் பாட்டை நினைவுறுத்துகின்றது. (171)

ஊடல்

ஒரு மாது, தன் கொழுநன் தன்பால் அன்பு பாராட்டும் போது, தன்னை இளையாள் பெயரால் விளிக்க, அவளிடத்தினும் தன்னிடத்து அதிக அன்புடையான் போல அவன் நடித்த கரவு வெளிப்படக் கண்டு சிரித்தாள்; அதே சமயத்தில் தன்னைக் குறைவாக நேசித்தா னென்று கண்ணீர் பெருக்கினாள்.

**கொள்ளைப்போர் வாட்க ணாளங்**
**கொருத்தியோர் குமர னன்னான்**
**வள்ளற்று ரகலந் தன்னை**
**மலர்க்கையாற் புதைப்ப நோக்கி**
**உள்ளத்தா ருயிரன் னாண்மே**
**லுதைபடு மென்று நீநின்**
**கள்ளத்தாற் புதைத்தி யென்னா**
**முன்னையிற் கனன்று மிக்காள்** (172)

கொண்டுகூட்டு : அங்கு, கொள்ளைப் போர் வாள் (போலும்) க(ண்)ணாள் ஒருத்தி, (தன் கணவனை உதைக்க அந்தக்) குமரன் அன்னான் (இரத்தின மாலை அணிந்த தன்) வள்ளல் தார் அகலம் தன்னை மலர்க்கை யால் புதைப்ப நோக்கி, '(உன்) உள்ளத்து ஆர் உயிர் அன்னாள் மேல் உதை படுமென்று நீ நின் கள்ளத்தாற் புதைத்தி' என்னா, முன்னையி(னும்) மிக்குக் கனன்றாள்.

பொருள் : ஒருத்தி, ஊடற் காலத்தில் கோபித்து உதைக்கப்போம்போது அவள் நாயகன் அவனுடைய பொன்னாலும் மணிகளாலும் அமைந்த மாலை அணிந்த மார்பை அம் மாலைகள் பட்டு அவள் பாதங்கள் வருந்து மென்று கைகளினால் பொத்தக் கண்டு, 'உன் உள்ளத்துள்ளே உறைகின்ற உன் உயிரை ஒத்தவள் மேல் உதை படுமென்று உனக்குள்ள கள்ளத் தனத்தினால் மூடுகின்றாய்' என்று முன்னிலும் அதிகமாகக் கோபித்தாள்.

கொள்ளை - மிகுதி. குமரன் - முருகன். வள் - வலி.—புற. வெ. மா. 'தொடை', 'தொடையல்', இரண்டும் மாலையைக் குறித்தல் போல, 'வள்', 'வள்ளல்', இரண்டும் ஒரு பொருள் குறித்தன போலும். அப்படியாயின், 'வள்ளல் தார்' என்பதற்கு வன்மையான (மணிகளாலும் பொன்னாலும் அமைந்த) மாலை யென்று பொருள் கொள்ளலாம். 'வள்ளல்' என்பது மேல் 122-ம் பாட்டிலும் 'வள்ளற்சேக்கைக் கரியவன்' எனப் பிரயோகிக்கப்பட் டிருக்கிறது. 'வள்ளத்தார்' என்ற பாடங் கொண்டு 'வள்ளம்' 'வளம்' ஆய தெனலும் உண்டு. 'கனன்று மிக்காள்' என்பது 'மிக்குக் கனன்றுள்' என விகுதி பிரித்துக் கூறப்பட்டது. (172)

### சூரியோதயம்

முற்பிறப்பிலே அறத்தை முற்றுப் பெறச் செய்யாதவர்கள் இப் பிறப்பிலே 'கருவிலே திருவுடையவர்' ஆகிப் பெற்ற பிறவிச் செல்வம் அவர் இறக்குமளவும் குறைவின்றி நில்லாது இடையிலே குன்றிவிடுதல் போல, சந்திரன் உதயமாகும்போது உடன் தோன்றிய ஒளி இடையிலே (அத்தமிக்கு முன்) மழுங்கும்படி உதயகாலம் வர, திருமாலின் கரிய பெரிய திருமார்பில் விளங்கும் சிவந்த கவுத்துவ ரத்தினம் போல, கரும் பெருங் கடலிலே செஞ் ஞாயிறு உதயமாயிற்று.

## 18. எதிர்கோட் படலம்

*சனகன் தசரதனை எதிர்கொண்டு வரவேற்றதைக் கூறுவது*

### மிதிலை செல்வோர் கங்கையை அடைதல்

**கப்புடை நாவி னூக ருலகமுங் கண்ணிற் றோன்றத்**
**துப்புடை மணலிற் றாகி கங்கைநீர் சுருங்கிக் காட்ட**
**அப்புடை யநீக வேலை யகன்புனன் முகந்து மாந்த**
**உப்புடைக் கடலுந் தெண்ணீ ருண்ணசை யுற்ற தன்றே**

கொண்டுகூட்டு : *கங்கை, நீர் சுருங்கிக் கப்புடைய நாவின் நாகர் உலகமும் கண்ணில் தோன்ற, துப்பு உடைய மணலிற்று ஆகிக் காட்ட அப்பு உடை அநீக வேலை அகன் புனல் முகந்து மாந்த, உப்புடைய கடலும் தெள் நீர் உண் நசை உற்றது.*

பொருள் : கங்கையாறு நீர் குறைந்து நாக லோகமும் கண்ணுக்குப் புலப்படும்படியாகவும், முன்பு நீரினால் மறைக்கப் பட்டிருந்த மணல் வெளிப்பட்டுத் தோன்றுதல் உடையதாகி நீர்

சுருங்கியதாய்த் தோன்றும்படியாகவும், அதன் நீரைப் படைக் கடல்முகந் துண்டதனல் அந் நீர் தன்பால் மிகுதியாக வந்து கொண்டிருந்ததை உண்டுகொண்டு தாகம் தவிர்ந்திருந்த லவண சமுத்திரத்திற்கு நீருண்ணும் விருப்பம் மிகுந்தது.

கப்பு - பிளவு. நாவின் - நாவினையுடைய. துப்பு உடை - தூய்மை யுடைய. மணலிற்று - மணலையுடையது. அப்புஉடை - அம்பினை உடைய. ‘ அம்பு ’. ‘ அப்பு ’ ஆக விகாரப்பட்டது. அம்பு - நீர். அநீகம் சேனை. வேலை - கடல். அகன் புனல் - விரி நீர். நசை - விருப்பு.

‘கடல் தான் நீர் நிரம்பியதாயினும், உப்புச் சுவை யுடைமையால் வேறு தண்ணீர் விரும்ப வேண்டியதாயிற்று ; இக்கருத்தைத் தருதலால், ‘ உப்புடை ’ என்பது ‘ கருத்துடை யடைமொழி ’.—வை. மு. கோ.

### மிதிலைக்குள் செல்லல்

தசரதன் மிதிலையை அணுகிய போது, சந்திரன் சூரியனை யெதிர்கொண்டாற் போல, சந்திரகுலச் சனகன் சூரியகுலத் தசரதனைக் குதூகலத்துடன் வரவேற்கத் தன்சேனை பரிவாரங்க ளோடு புறப்பட்டான். தசரதன் சேனை பாற்கடலொழிய மற்றெல்லாக் கடல்களும் ஒருங்கு திரண்டு வந்தாற் போல் வர, அதனைத் திருமகளைப் பெற்ற பாற்கடல் சந்தித்தது போல, சீதையைப் பெற்ற சனகனது மிதிலா நகர ஜன சமூகம் சந்தித் தது. தசரதன் சேனையைச் சனகன் சேனை கூடிய ஆரவாரம் கடலில் ஆறு சங்கமிக்கும் ஓசையை ஒத்தது. தன் சேனையைப் பின் நிற்கச்செய்து, சனகன் தசரதன் தேர் முன் தன் தேரினின்றும் இறங்கி, அவன் விரும்பியவாறு அவன் தேரில் ஏறினன். ஏறினவனை அகமும் முகமும் மலரத் தசரதன் தழுவினன். பின், இருவரும் மிதிலை நோக்கிச் சென்றனர்கள். இராம லக்குமணர் மிதிலையினின்று புறப்பட்டுப் பிதாவை யெதிர்கொள்ள வந்தார்கள். முன் பிரிந்த உயிர் திரும்பி வந்து சேர்ந்தாற்போல, இராமன் தசரதனை அடைந்து வணங்க, தசரதன் அவனை ஆலிங்கனஞ் செய்தான். இலக்குமணன் இறைஞ்ச, அவனையும் தழுவினன். இருவரும் தாயரையும் தொழுதார்கள். இராமன் தசரதனை வணங்கியது போலப் பரதன் இராமனையும், இலக்குமணன் பரதனையும், சத்துருக்கன் இராமலக்குமணர் இருவரையும் பணிந்தார்கள். தசரதன் கட்டளைப்படி சேனையை நடத்தி இராமன் முன் சென்றான். தம்பியர் குதிரைமேல் இருபக்கமும் வர, இராமன் தேர் மீது செல்ல, எல்லோரும் மிதிலையை அடைந்தார்கள்.

பஞ்சிசூழ் மெல்லடிப் பாவைமார் பண்ணைசூழ்
மஞ்சுசூழ் நெடியமா ளிகையின்வந் திடைவிராய்
நஞ்சுசூழ் விழிகள்பூ மழையின்மேல் விழநடந்
திஞ்சிசூழ் மிதிலைமா வீதிசென் றெய்தினன் **(174)**

**கொண்டுகூட்டு :** பஞ்சி சூழ் மெல் அடிப் பாவைமார் பண்ணை சூழ், மஞ்சு சூழ் நெடிய மாளிகையி னின்று வந்து இடைவிராய் நஞ்சு சூழ் விழிகள் பூ மழையின் மேல் விழ நடந்து இஞ்சி சூழ் மிதிலை மா வீதி சென்று எய்தினன்.

**பொருள் :** மாதர்களின் கூட்டம் மாளிகைகளினின்றும் வெளியே வந்து மற்றைச் சனங்களோடு கலக்க, அவர்களுடைய பார்வை மாரி, தேவரும் மனிதரும் பொழியும் பூமாரியினும் அதிகமாகத் தன் மீது விழ, இராமன், மிதிலை நகர வீதியிலே செல்வானன்.

பஞ்சி - பஞ்சு. அது செம்பஞ்சுக்காகிச் செம்பஞ்சுக் குழம்பைக் குறித்தது. பண்ணை - பெண்களின் கூட்டம். விராய் - விரவி - கலந்து. மழையின் மேல் - மழையினும் அதிகமாக. இஞ்சி - மதில்.

சூழ், இரண்டாம் அடி நான்காம் அடிகளில் தன் பொருளாகிய வளைதலையும், எதுகையில் நிற்றல் காரணமாக முதலடியில் ஊட்டுதலையும் மூன்றும் அடியில் ஒத்தலையும் உணர்த்தியது. (174)

தெருவில் வந்து சேர்ந்த மாதருள் பேதை முதலாகப் பேரிளம்பெண் ஈருக ஏழு பருவத்துப் பெண்களும் இருந்தார்கள்.

# 19. உலாவியற் படலம்

இராமன், மிதிலை வீதியிற் பவனியாகச் சென்றதைக் கூறுவது

### மிதிலையில் இராமன் பவனி வரல்

மான் கூட்டமும் மயிற் கூட்டமும் மின் கூட்டமும் போன்ற மாதர் கூட்டங்கள், தேனுண்ண மொய்க்கும் வண்டுகள் போல, இராமன் அழகை நோக்க நெருங்கிக் கூடின.

### இராமனைக் கண்ட மாதர்களின் நிலை

கண்ணினுற் காத லென்னும்
பொருளையே காண்கின் ஞேமிப்
பெண்ணினீர் மையினு லெய்தும்
பயனின்று பெறுது மென்பார்
மண்ணினீ ருலந்து வான
மழையற வறந்த காலத்
துண்ணுநீர் கண்டு வீழு
முழைக்குலம் பலவு மொத்தார் (175)

கொண்டுகூட்டு : (மாதர்கள்) 'கண்ணினுல் காதலென்னும் பொருளைக் காண்கின்ஞேம் ; இப் பெண்ணின் நீர்மையினுல் எய்தும் பயன் இன்று பெறுதும்' என்பார் ; மண்ணில் நீர் உலந்து வான மழை அற வறந்த காலத்து உண்ணும் நீர் கண்டு வீழும் பல உழைக்குலம் ஒத்தார்.

பொருள் : மாதர்கள், 'நாம் இதுவரை காதாற் கேட்டதேயன்றிக் கண்ணுற் பாராத காதலென்ற பொருளை—காதலே உருக்கொண்டாற் போன்ற இவனை—இன்று நேராகக் கண்ணுலே காண்கின்ற பாக்கியம் பெற்ரேம்; நாம் பெண்ணுகப் பிறந்ததனுற் பெறக் கூடிய பிரயோஜனத்தை இன்று பெறுவோம்' என்று எண்ணுவாராய், பூமியில் எங்கும் நீர் வற்றி வானமும் மழை பெய்தல் இல்லாமல் வறட்சி உண்டான காலத்திலே உண்ணும் நீரை ஓரிடத்திலே கண்டு அந் நீரருகே திரளும் மான் கூட்டங்களை ஒத்தார்கள்.

பெண்ணின் நீர்மை - பெண் தன்மை - பெண்மை. பெறுதும் - பெறுவோம். என்பார் - என்றெண்ணுவார்.—குறள், 36. உலத்தல் - அழிதல் - இல்லையாதல். வீழும் - திரளும்.—சிந்தா. இப் பதம் இப் பொருள்பட கீழ் 177-ம் பாட்டிலும் வருதல் காண்க. உழை - மான்.

---

* உலா – பவனி ஊர்கோலம், இயல் – தன்மை ; இலக்கணம்.

குலம் - கூட்டம். மாதர் கூட்டங்கள் பலவாயிருந்தமை குறிக்க 'உழைக் குலம் பலவும் ஒத்தார்' என்றார். (175)

**பள்ளத்துப் பாயு நன்னீ ரனையவர் பானல் பூத்த**
**வெள்ளத்தும் பெரிய கண்ணார் மென்சிலம் பலம்பு மென்பூத்**
**தள்ளத்தம் மிடைக ணோவத் தமைவலித் தவன்பாற் செல்லும்**
**உள்ளத்தைப் பிடித்து மென்ன ஓடுகின் றாரு மொத்தார்**

கொண்டுகூட்டு : பள்ளத்துப் பாயும் நல் நீர் அனையவர், பானல் பூத்த வெள்ளத்தும் பெரிய கண்ணார், மென் சிலம்பு அலம்பும் மென் பூ (போன்ற பாதம்) தள்ள, தம் இடைகள் நோவ, தம்மை வலித்து அவன் பால் செல்லும் உள்ளத்தைப் பிடித்தும் என்ன, ஓடுகின்றாரையும் ஒத்தார்(கள்).

பொருள் : மாதர்கள் தம்மை இராமன்பால் இழுத்துக் கொண்டு (தமக்கு முன்னாகச்) செல்லும் தம் மனத்தை (எட்டிப்) பிடிப்போ மென்று ஓடுகின்றாரையும் ஒத்தார்கள்.

பள்ளத்துப் பாயும் நல் நீர் அனையவர் - தண்ணீர் பள்ளத்தை நோக்கி யோடுதல் போல இராமனை நோக்கி யோடும் மாதர்கள். பானல் - கருங் குவளை. பானல்பூத்த - கருங் குவளை மலர் போல மலர்ந்த. வெள்ளம் - கடல். வெள்ளத்தினும் பெரிய கண்ணா ரெனற் பாலது செய்யுளாதலால் வெள்ளத்தும் பெரிய கண்ணா ரென இன் உருபு தொக்கு வந்தது. வேறோ ரிடத்துக் 'கஞ்சத்தி னளவிற்றேனும் கடலினும் பெரிய கண்கள்' என்பர். தள்ளல் - தள்ளாடல். சிலம்பு அலம்பும் மெல் பூ தள்ள - சிலம்புகள் ஒலிக் கும் மெல்லிய பூ (போன்ற பாதங்கள்) தள்ளாட. 'சிலம்பு அலம்பு' என்ற அடையால், பூ, பூவை ஒத்த பாதம் என்ற பொருள்பட வைத்தார். வலித்து - இழுத்து. பிடித்தும் - பிடிப்போம். பள்ளத்துப் பாயும் நன்னீர் என்று உவமானத்தை மட்டும் கூறி, 'இராமனை நோக்கி ஓடும் மாதர்' என்ற உவமேயத்தைக் கூறாமலே சிறிதும் ஐயமின்றி நன்கு விளங்க வைத்த நயம் பாராட்டற்குரியது. (176)

**அரத்தமுண் டனைய மேனி யகலிகைக் களித்த தாளும்**
**விரைக்கருங் குழலிக் காக வில்லிற நிமிர்ந்து வீங்கும்**
**வரைத்தடந் தோளுங் காண மறுகினில் வீழு மாதர்**
**இரைத்துவந் தமிழ்தின் மொய்க்கு மீயின மென்ன லானார்**

கொண்டுகூட்டு : அரத்தம் உண்டு அனைய மேனி அகலிகைக்கு அளித்த தாளையும், விரைக் கருங் குழலிக்காக வில் இற நிமிர்ந்து வீங்கும்

வரைத்தடந் தோளையும் காண, மறுகினில் வீழும் மாதர், இரைத்து வந்து அமிழ்தில் மொய்க்கும் ஈ இனம் என்னலானார்.

பொருள் : அகலிகைக்குச் சாபம் ஒழித்து அருள் செய்த தாளையும் சீதைக்காக வில்லொடித்த தோளையும் காணும்படி தெருவிலே திரண்ட மாதர்கள் அமிழ்தில் மொய்க்கும் வண்டுக் கூட்டம் போன்றார்கள்.

அரத்தம் உண்டு அனைய - செந் நிறத்தை உட்கொண்டாற் போன்ற. அளித்தல் - அருள் செய்தல்.—ச. அ. விரை - வாசனை. இற - ஒடிய. வீழும் - திரளும்.—சிந்தா. இரைத்து - ஒலித்து. ஈ - வண்டு.

தோள்கண்டார் தோளே கண்டார்! தொடுகழற் கமலம் அன்ன
தாள்கண்டார் தாளே கண்டார்! தடக்கை கண்டாரும் அஃதே!

என்று கீழ் 184-ம் பாட்டில் கூறுவதற்கு இயைய, இராமனது எல்லா உறுப்புக்களும் ஒன்றுபோல அழகுடையனவாயினும், மாதர்கள் தம் போன்ற இரு பெண்களுக்கு நன்மை செய்த தாளையும் தோளையும் விசேடமாகக் காண விரும்பினார்களெனலாம். (177)

**வீதிவாய்ச் செல்கின் றான்போல் விழித்திமை யாது நின்ற**
**மாதரார் கண்க ளூடே வாவுமான் றேரிற் செல்வான்**
**யாதினு முயர்ந்தோர் தன்னை யாவர்க்கும் கண்ண னென்றே**
**ஓதிய பெயர்க்குத் தானே யுறுபொரு ளுணர்த்தி விட்டான்**

கொண்டுகூட்டு : வீதிவாய்ச் செல்கின்றான் போல், விழித்து இமை யாது நின்ற மாதரார் கண்க ளூடே வாவும் மான் தேரில் செல்வான், யாதினும் உயர்ந்தோர் தன்னை 'யாவர்க்கும் கண்ணன்' என்று ஓதிய பெயர்க்குத் தானே உறு பொருள் உணர்த்தி விட்டான்.

பொருள் : தோற்றத்தில், வீதியிலே உலாப் போவான் போன்று, உண்மையில், தன் அழகை நன்கு நோக்கக் கண்களை அலர விழித்து, இமைத்தால், அச் சமயத்தில், அவ் வழகின் காட்சி மறையு மென்று இமை கொட்டாமல் நின்ற, மாதர்களுடைய கண்களுக்குள்ளே தான் மாத்திர மன்றித் தாவும் குதிரை பூட்டிய பெரிய தேரோடும் செல்வானாகி, உயர்ந்தோர்கள் தன்னை 'எல்லாருக்கும் கண்ணன்' என்பதற்குப் பொருள், எல்லாருடைய 'கண்ணிடத் தவன்' என்று, இராமன் தானே விளங்கச் செய்து விட்டான்.

வீதி வாய் - தெருவில். வாவும் - தாவும். மான் - குதிரை. யாதினும் - எதனிலும் - கல்வி அறிவு ஒழுக்கங்கள் எதனிலும். கண்ணன் - கண்ணில்

உள்ளவன். கரியன் என்று பொருள்படும் 'கிருஷ்ணன்' என்ற வட மொழிச் சொல் 'கண்ணன்' எனத் தமிழில் மருவிய தென்பர். அச் சொல் லுக்குப் பொருள் 'கண்ணி னிடத்து உள்ளான்' என்று காரணம் கற்பித் துக் கூறிய நயம் கவனிக்கத்தக்கது. (178)

**எண்கடந் தலகிலா தின் றேகுறு மிவன்றே ரென்று**
**பெண்கடந் தம்மி னுைந்து பேதுறு கின்ற காலை**
**மண்கட ந் தமரர் வைகும் வான்கடந் தானைத் தான்றன்**
**கண்கட வாமற் காத்த காரிகை வலிய ளேகாண் (179)**

**கொண்டுகூட்டு:** 'எண் கடந்து அலகு இல்லாது இன்று ஏகுறும், இவன் தேர்' என்று, பெண்கள் தம் தம்மில் நொந்து பேதுறுகின்ற காலை, மண் கடந்து அமரர் வைகும் வான் கடந்தானைத் தான் தன்கண் கடவா மற் காத்த காரிகை வலியளே!

**பொருள்:** 'மன வேகத்தையும் கடந்து தான் செல்லும் வேகத்துக்கு அளவில்லாமல் செல்லா நின்றது இவன் தேர்' என்று, பெண்கள் தங்கள் தங்களுள்ளே நினைந்து வருந்தி மயங்குகின்ற போது, ஈரடியால் பூமியைத் தாண்டி வானையுந் தாண்டிய திரிவிக்கிரமாவதார மெடுத்த திருமாலாகிய இராமனைத் தன் பார்வைக்கு எட்டாத தூரம் போகாதபடி எப்போதும் கிட்ட இருக்கும் வண்ணம் தன் மணவாளனைக் கட்டிக் காத்துக் கொண்ட சீதை வல்லமை யுள்ளவளே!

கீழ், 'அருப்பு மென் முலை' என்ற 185-ம் பாட்டில் வேறொருத்தி சீதையைப் பற்றிக் கூறுதல் காண்க. எண் - மனம். அது மன வேகத் தைக் குறித்தது. இவ்வாறே 'சிந்தை' மன வேகத்தைக் குறிப்பதைப் பெருங்கதை, உஞ்சைக்காண்டம், கங்கை நீராடியது, 215-ம் அடியிற் காண்க. அலகு - அளவு. தம் தம்மில் - தங்கள் தங்களுள்.

மற்றைய மாதருக்குச் சிறிது நீடித்த நேரமும் சற்றுத் தூரத்திலேயும் காட்சி அளிக்காதவனும், நினைக்கு முன்னே மூன்றுலகத்தையும் கடந்த வனும் ஆகிய இராமனை எப்போதும் தன் அருகே யிருக்கும்படி தன் மண வாளனைச் செய்து கொண்ட சீதையின் சத்தி வியப்புறக் கூறப்பட்டது. காதலர்க்குத் தம்மாற் காதலிக்கப்பட்டாரைக் கண்டு களிக்கும்பொழுது நெடும் பொழுதா யிருப்பினும், அது கணம் போலத் தோன்றுதலை, ஊர் கோலமாக மெல்லச் சென்ற இராமன் தேர், மன வேகத்தினும் அதி வேக மாகச் சென்றதெனக் காதலுற்ற மாதர் கூறினா ரென்பதனாற் குறிப்பித் தார்.

மற்றெல்லா மாதர்களும் தம் பார்வைக் கெட்டாத தூரம் இராமன் சென்றபோது அவன் நீடித்துக் காட்சி அளித்தானில்லையே யென்று

வருந்தா நிற்க, ஒரு மாது இராமனைக் கண்ட அக்கணமே மனத்தைப் பறி கொடுத்து, அவன் தேர் போய்விட்ட பின்பும், அவனை உருவெளித் தோற்றத்தில் கண்டு கொண்டிருக்கிருள். நேரில் கண்ட இராமனது உருவம் மறைவதற்கும், உருவெளித் தோற்றத்தில் அவன் உருவத்தைக் காண்பதற்கும் இடைப் பொழுது இல்லாமை காரணமாக, உண்மைத் தோற்றம் உருவெளித் தோற்றமாக மாறியதை யறியாது தன் கண்ணுள் எப்பொழுதும் இராமனை நிறுத்திக் கொண்டாள் என்று கவி கூறுவதாகக் கொள்ளலாம். இதனைச் சமத்காரமாக, மூன்றுலகமும் இரண்டு காலடியளவுக்குப் பற்ருத பெரிய உருவ முடையவனைத் (திரிவிக்கிரமனுன திருமாலை - திருமாலவதாரமான இராமனைத்) தனது கண்ணுள்ளடக்கி அதனைக் கடந்து போகாமற் காவல் செய்தவள், திண்ணமாகச் சிறந்த திறமையுடையாளென்ருர், எனலுமாம்.

பாடபேதம் : பெரியளே காண். (179)

ஒருமாது, தனக் குரியவைகளுள், உயி ரொன்றே ஒழிய, ஆடையும் வளையும், நாணும் நிறையும், மற்றும் புறப்பொருள்களும் அகப்பொருள்களுமாகிய எல்லாவற்றையும் போக்கி நின்ருள்.

இராமனது கரிய திருமேனியின் ஒளி தோய்ந்து மாதர் கண்கள் கரிய வாயினவோ? மாதர்கள் கண்ணொளி பாய்ந்து அவன் திருமேனி கரிய தாயினதோ? தெரியேம்.

**மாந்தளிர் மேனி யாளோர் வாணுதன் மதன னெங்கும்**
**பூந்துணர் வாளி மாரி பொழிகின்ற பூச னேக்கி**
**வேந்தர்கோ னுணை நோக்கான் வீரன்வில் லாண்மை பாரான்**
**ஏந்திழை யாரை யெய்வான் யாவனே வொருவ னென்ருள்**

கொண்டுகூட்டு : மாந்தளிர் மேனியாள் ஓர் வாள் நுதல் (உடைய மாது) மதனன் எங்கும் பூந்துணர் வாளி மாரி பொழிகின்ற பூசல் நோக்கி, 'வேந்தர் கோன் ஆணை நோக்கான், வீரன் வில் ஆண்மை பாரான், ஏந்து இழையாரை ஒருவன் எய்வான். (அவன்) யாவனே?' என்ருள்.

பொருள் : ஒரு மாது, மன்மதன் எல்லா மாதர் மீதும் புட்பசர மாரி பொழிந்து செய்கின்ற சண்டையை நோக்கி, 'எளியாரை வலியார் வருத்தாது காக்கும் தசரத சக்கரவர்த்தியின் ஆணையை மதியானுய், வீரர்க்குள் வீரனுகிய இராமனது வில்லாண்மைக்கு எதிரே நிற்கும் தகுதி ஒருவருக்கு மில்லை யென்பதையும் எண்ணிப் பாரானுய் மாதரை ஒருவன் எய்கின்ருன், அவன் யார்?' என்ருள்.

வாள் நுதல் - ஒளி பொருந்திய நெற்றி - ஒளி பொருந்திய நெற்றி யுடையாள். துணர் - கொத்து. 'ஏந்திழையாரை ஒருவன் எய்வான். (அவன்) யாவனோ' எனக் கூட்டுக. (180)

**சொன்னலங் கடந்த காமச் சுவையையோ ருருவ மாக்கி**
**இன்னலந் தெரிய வல்லா ரெழுதிய தென்ன நின்றாள்**
**பொன்னையும் பொருவும் நீராள் புனைந்தன வெல்லாம் போகத்**
**தன்னையுந் தாங்க லாதா டுகிலொன்றுந் தாங்கி நின்றாள் (181)**

கொண்டுகூட்டு : சொல் நலம் கடந்த காமச் சுவையை ஓர் உரு வம் ஆக்கி இன் நலம் தெரிய வல்லார் எழுதியது என்ன நின்றாள், பொன் னைப் பொருவும் நீராள், புனைந்தன எல்லாம் போகத் தன்னையும் தாங்கலா தாள், துகில் ஒன்று தாங்கி நின்றாள்.

பொருள் : சொல்லால் தெரிவிக்கக்கூடிய எல்லா இன்பங் களுக்கும் மேற்பட்ட காம இன்பத்தை ஒரு வடிவமாக, இன்பங் களைப் பகுத்தறிந்து அவற்றுட் சிறந்தவை இவை யெனத் தெரிய வல்லான் ஆகிய சித்திரிகன் சித்திரித்த சித்திர மென்று சொல் லும்படி நின்ற ஒரு மாது, காம பரவசத்தால் தான் அணிந் திருந்தன வெல்லாம் நெகிழ்ந்து நீங்கத் தன் னுடம்பையே தாங்க மாட்டாளாய்ச் சோர்வு மிகுந்திருந்தும் மானம் மிக் குடையாளாதலால் அம்மானத்தைக் காக்கும் சேலை யொன்று மட்டும் நீங்கவிடாது தாங்கி நின்றாள்.

எழுதல் - சித்திரம் எழுதுதல். எழுதியது - சித்திரித்தது - சித்திரம். இன் நலம் - இனிய இன்பங்கள். அகத்து நிகழ்ந்த காமச் சுவை பிறர்க் குப் புலப்படுமாறு இற்றென வாயாற் கூற லரியதும் ஏனை உலக வின்பங் களிற் சிறந்தது மாகலின், 'சொன்னலங் கடந்த காமச் சுவை' என்றார்.

ஒருத்தி, காம பரவசத்தினால், இராமனே யன்றி வேறொரு பொருளையும், காணாளாய், 'நால் வகைப் படையொடு பெரு வைபவத்துடன் வரற்பாலனாகிய இவன் தனித்து வருவானேன்?' என்றாள்.

**மைக்கருங் கூந்தற் செவ்வாய் வாணுத லொருத்தி யுள்ளம்**
**நெக்கன ளுருகு கின்றா ணெஞ்சிடை வஞ்சன் வந்து**
**புக்கனன் போகா வண்ணங் கண்ணெனும் புலங்கொள் வாயில்**
**சிக்கென வடைத்தேன் றோழி சேறுது மமளி என்றாள் (182)**

கொண்டுகூட்டு : மைக்கருங் கூந்தற் செவ்வாய் வாள்நுதல் (உடைய) ஒருத்தி, உள்ளம் நெக்கனள் (ஆகி) உருகுகின்றாள், ‘தோழி! வஞ்சன் வந்து நெஞ்சிடைப் புக்கனன், போகாவண்ணம் கண் எனும் புலங் கொள் வாயிலைச் சிக்கென அடைத்தேன்; அமளியைச் சேருதும்’ என்றாள்.

பொருள் : ஒருத்தி காமத்தால் நெஞ்சம் நெக்கு உருகு கின்றவள், தன் கண்ணைக் கையால் இறுகப் பொத்திக்கொண்டு, ‘தோழீ! எனக்குக் காதல் உண்டாக்கிவிட்டு அதனைத் தீர்க் காத கள்ளன் என் கண் வழியாக என் உள்ளத்துள்ளே புகுந் தான். அவன் வெளியே தப்பிப் போய்விடாதபடி அவன் உள்ளே நுழைந்த என் கண்ணாகிய வாசலை (இமையாகிய கதவை மூடி) உறுதியாக அடைத்தேன். நாம் பள்ளியறையை அடை வோம். என்னை அங்கே நடத்திக்கொண்டு போவாயாக!’ என்றாள்.

மை - மேகம். வாள் - ஒளி. நுதல் - நெற்றி. நெக்கனள் - இளகின வள் (ஆகி). புலம் - விடயம். வாயில் - வழி. சிக்கென - உறுதியாக. சேருதும் - சேர்வோம். அமளி - பள்ளியறை ; படுக்கை. (182)

ஒருத்தி தன்னை மன்மதன் அம்புகள் துளைத்ததையும் ஆடை ஆபரணங்கள் நெகிழ்ந்து நீங்கினதையும் அறியாளாய், ஏனை மாதர்கள் இராமனை நோக்குவதைக் கண்டு பொறாமல் அவர்களைக் கடுமையாகக் கோபித்துப் பார்த்தாள்.

**களிப்பன மதர்ப்ப நீண்டு கதுப்பினை யளப்ப கள்ளம்**
**ஒளிப்பன வெளிப்பட் டோடப் பார்ப்பன சிவப்புள் ளூறி**
**வெளுப்பன கறுப்ப வான வேற்கணா ளொருத்தி யுள்ளம்**
**குளிர்ப்பொடு காண வந்தாள் வெதுப்பொடு கோயில் புக்காள்**

கொண்டுகூட்டு : களிப்பன, மதர்ப்ப, நீண்டு கதுப்பினை அளப்ப, கள்ளம் ஒளிப்பன, வெளிப்பட்டு ஓடப்பார்ப்பன, சிவப்பு உள் ஊறி வெளுப்பன, கறுப்ப ஆன வேற் கண்ணாள் ஒருத்தி, உள்ளம் குளிர்ப் பொடு காண வந்தாள்; வெதுப்பொடு கோயில் புக்காள்.

பொருள் : ஒருத்தி குளிர்ந்த மனத்துடன் இராமனைப் பார்க்க வெளியே வந்தாள்; விரகாக்கினியினால் கொதித்த மனத் துடன் வீட்டுக்குள்ளே போனாள்.

களிப்ப - மகிழ்வன - மகிழ்ச்சியைக் காட்டுவன. மதர்ப்ப - செருக்கு வன - இறுமாப்பைக் காட்டுவன. நீண்டு - காதுப் பக்கம் சென்று. கதுப்பு - கூந்தல், கன்னம் அன்று. 'கொண்டையுறு நீல விழி'.—குற்றாலத்தலபுராணம், கவுற்சனச் சருக்கம், 1. கொண்டை - கூந்தலைப் பக்கத்து முடித்த முடி. கள்ளம் ஒளிப்பன - ஒரு சமயத்தில் கள்ளக் கருத்தை வெளிப்படாது மறைத்துக் கபடமாகப் பார்ப்பன. வெளிப் பட்டோடப் பார்ப்பன - மற்றொரு சமயத்தில், மனச் சிறையில் அடைத் திருந்த அக்கள்ளக் கருத்து யாரும் அறியும்படி வெளிப்பட்டு ஓடச் சுத்த மான பார்வையாகப் பார்ப்பன. சிவப்பு, சிவந்த ரேகைகளைக் குறித்தது. வெளுப்ப - (வெள் விழி, தூய) வெண்மையா யிருப்பன. கறுப்ப - (கரு விழி, கனிந்த) கருநிற முடையன. குளிர்ப்பு, மகிழ்ச்சியைக் குறித்தது. வெதுப்பு - (காம) வெப்பம். கோயில் - அரண்மனை. 'உள்ளம் குளிர்ப் பொடு வந்தாள், உள்ளம் வெதுப்பொடு கோயில் புக்காள்' என உள் ளத்தை வெதுப்பின் முன்னும் கூட்டுக.

இப்பாட்டில் அதி சாதுரியமாக மாதர் கண்ணின் தொழில்கள் பல வற்றை இனிது தொகுத்து நயப்பும் வியப்பும் உறக் கூறிய கவித்திறம் பாராட்டத் தக்கது.

பாட்டின் முக்கிய கருத்தாகிய 'வீட்டினின்று மனக் குளிர்ச்சியோடு வெளியே வந்தவள் மன வெப்பத்தோடு திரும்பி உள்ளே போனாள்' என்பதை ஓரடியில் அமைத்துக்கொண்டு உறுப்பிற் சிறந்த கண்ணை வருணனையிற் சிறந்த வருணனையால் சிறப்பித்து ஏனை மூன்றடிகளையும் பூரித்த கவித்திறம், யாவரையும், விசேடமாகக் கவிஞரையும், மிக மகிழ் விப்பது. (183)

ஒரு மாது, அளகபாரமும் தனபாரமும் ஆடையாபரண பாரமும் மிக்க பிற மாதர்கள் தம்முன் நின்று தான் இராமனைக் காணுதபடி மறைக்க, வேறு வழி கிடையாமல், அம் மாதரது இடைகளின் இடையே உள்ள சந்து வழியாக, அவனைப் பார்ப் பாளாயினள்.

**தோள்கண்டார் தோளே கண்டார் தொடுகழற் கமல மன்ன**
**தாள்கண்டார் தாளே கண்டார் தடக்கைகண் டாரு மஃதே**
**வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்**
**ஊழ்கொண்ட சமயத் தன்னா னுருவுகண் டாரை யொத்தார்**

**(184)**

கொண்டுகூட்டு : தோள் கண்டார், தோளே கண்டார்! கமலம் அன்ன தொடுகழல் (அணிந்த) தாள் கண்டார், தாளே கண்டார்! தடக்கை கண்டாரும் அஃதே! வாள் கொண்ட கண்ணார் யாரே வடிவினை

முடியக் கண்டார்! ஊழ்கொண்ட சமயத்து அன்னான் உருவு கண்டாரை ஒத்தார்.

பொருள்: இராமனைப் பார்த்த மாதர்களுள்ளே முதற் கண் அவனுடைய தோளை நோக்கும்படி நேர்ந்தவர்கள் அத் தோளழகில் ஈடுபட்டு ஏனை யுறுப்புக்களை நோக்கும் எண்ணமே தோன்றாதவராய்த் தோளழகையே நோக்கிக் கொண்டிருந்தார்கள்! தாளழகை நோக்கியவர்களும் அவ்வாறே தாளழகையே நோக்கிக்கொண்டிருந்தார்கள்! கையை நோக்கியவர்களும் அப்படியே! அம்மாதர்களுள் யார்தாம் அவன் வடிவை முடியக் கண்டவர்கள்? ஒருவரும் இலர். அவர்கள் ஒன்றுக்கொன்று மாறுபட்ட அபிப்பிராயங்கொண்ட சமயங்களில் கூறப்பட்ட அவனுடைய வெவ்வேறு மூர்த்தங்களை மனக் கண்ணாற் கண்ட சமயிகள் தாம் தாம் கண்ட மூர்த்தமன்றி வேறு மூர்த்தங்களைக் காணாதவர்கள் போன்றார்கள்.

தொடுகழல் - கட்டிய வீர கண்டையையுடைய. அஃதே - தடக் கையே கண்டார். மூன்றும் அடியில் 'கொண்ட' என்பது ஏதுகையில் நிற்றல்பற்றி 'நிகர்த்த' என்னும் பொருள் குறித்தது. ஊழ் - பகை.— இக் காண்டம், 'நாட்டுப் படலம், 17; முடிவு; முறை.—மணிமே. ஊழ் கொண்ட - 'இதனிற் சிறந்ததில்லை யென்று தனித்தனியே முடிவு கொண்ட.' 'ஊழ்கொண்ட' என்பதற்குத் தத்தமக்குரிய 'முறையைக் கொண்ட' என்றும் பொருள் கூறலாம். (184)

அண்டங்க ளனைத்தையும் வயிற்றிலடக்கிய திருமாலாகிய இராமனினும் பெரியார் யார் உளர்? அவ்வளவு உருவிற் பெரியான் (அதினும் கருணையிற் பெரியானாய்) ஒரு மாது வருந்தாது உய்யும்படி அவள் உள்ளத்துள்ளே ஒடுங்கினான்.

ஒருத்தி, இராமனைப் பார்க்க வீட்டினின்று மேகலையும் சிலம்பும் பேரொலி செய்ய வேகமாகக் காலால் நடந்து வெளியே வந்தாள்; அவனைக் கண்டு, மயல்கொண்டு, வசமிழந்து தோழியர் கையால் சுமந்துகொண்டு போகப்பட்டு உள்ளே போனாள்.

அருப்பு மென்முலை யாளங்கொ ராயிழை
இருப்பு நெஞ்சினை யேனுமோ ரேழைக்காப்
பொருப்பு வில்லைப் பொடிசெய்த புண்ணியா
கருப்பு வில்லிறுத் தாட்கொண்டு காவென்றாள் (185)

கொண்டுகூட்டு: அங்கு, அரும்பு (போலும்) மென் முலையாள், ஓர் ஆயிழை, 'இருப்பு நெஞ்சினை ஏனும் ஓர் ஏழைக்காக, பொருப்பு

வில்லைப் பொடி செய்த புண்ணியா! கருப்பு வில் இறுத்து ஆட்கொண்டு கா!' என்றாள்.

பொருள் : ஒரு மாது, இராமனை நோக்கி, 'என் போன்ற ஒரு பெண்ணுக்காக வன்மையான மலை வில்லை ஒடித்த புண்ணியனே! அவளைக் காதலித்ததுபோல என்னைக் காதலிக்காமல் என் திறத்தில் இரும்புபோல இளகாத நெஞ்சினை யுடையாய் என்றாலும், காதல் காரணமாகவன்றிக் கருணை காரணமாக எனக்காகக் கரும்பு வில்லை ஒடித்து, என்னை மனைவியாகக் கொள்ளவில்லை யானாலும் அடிமையாகக்கொண்டு காப்பாயாக!', என்றாள்.

ஆய் இழை - தெரிந்தெடுத்த ஆபரணம். அது அன்மொழித் தொகையாய் அதனை யுடையாளாகிய பெண்ணைக் குறித்தது. ஏழை - பெண். இறுத்து - ஒடித்து. ஆட்கொண்டு - அடிமைகொண்டு. அருப்பு, இருப்பு, கருப்பு என்பவை அரும்பு, இரும்பு, கரும்பு என்பவைகளின் விகாரம். மன்மதனது மேனியை எரித்தழித்த ஆற்றலுடைய சிவபிரானது வில்லை ஒடித்தெறிந்தவனுக்கு அச்சிவனால் எளிதிலழிக்கப்பட்ட மன்மதனது வில்லை யொடித்தல் அரியதொரு தொழிலாகா தென்பதும், மிக வலிய மலை வில்லைப் பொடி செய்தவனுக்கு மிக எளிய கருப்பு வில்லை முறித்தொழித்தல் எளிதே யென்பதும் தோன்ற, இங்ஙனங் கூறினாள்.
—வை. மு. கோ. (185)

ஒருத்தி, இராமன் தேர் கண்மறையப் போனபின், அவன் உருவெளித் தோற்றத்தைக் கண்டு 'தேர்மீது செல்லலைவிட்டுத் திரும்பி இங்கே கிட்ட வந்து அவன் என் கண்ணெதிர் நிற்பதன் காரணம், அவன் கபடமோ? என் கனவோ?' என்றாள்.

ஒருத்தி, இராமன் போனபின் அவன்பால் அனுப்புதற்குத் தன் மனமன்றி வேறு தூது கிடையாதவளாய் விரக வேதனையால் உயிர் தளர்கின்றவள், 'என்போல வருந்தாது அவனைத் தூது இல்லாமலே அடையச் சீதை எத்தவம் செய்தனளோ!' என்றாள். ஒருத்தி, காதல் மிகுதியால், துடித்து, அழுது, பெருமூச்செறிந்து, சோர்ந்து, தோழியைத் தொழுது 'என்னை இவ்வாறும்படி செய்த மன்மதன், இராமனை நான் சித்திரத்திலாவது கண்டு களிக்கும்படி அவன் வடிவை யெழுத வல்லனோ! அவ்வல்லமை யில்லாதவன் என்னை ஏன் மயல்கொள்ளச் செய்தான்?' என்றாள்.

ஒருத்தி, பக்கத்து நின்றாரை நோக்கி, 'இவ்வளவு அழகு மனிதனுக்கு அமைதல் இயல்வதோ! இவன் திருமாலே! இது

உண்மை யென்பதை நான் இப்போதே காண்கின்றேன்! பின்பு நீங்களும் காண்பீர்கள்' என்றாள். ஒருத்தி, இராமன் இந் நகர்க்கண் வந்தது சீதையின் பிதா செய்த தவத்தால், நமது பிதாக்கள் தவத்தாலன்று, இராமன் சீதையை மணத்தலன்றி நம்மை மணத்தல் இல்லையாதலால்' என்றாள். ஒருத்தி 'முனிவர் மன்னர் முதலியோர் உடன் வரலின்றி இராமன் தனியே என் கனவிலே வருவானோ?' என்றாள்.

ஒருத்தி, 'இவன் தன்னால் காம மயக்கமடைந்த மாதர்பால் ஒன்றும் விரும்பானாய் அவரை ஒரு சிறிதும் நோக்கானாய்ச் சும்மா செல்கின்றான். ஆதலால், கருணையென்பதைக் கண்டறியாதவன்; ஞானியோ வென்னில், சீதா தேவியை விரும்புவானேன்? இவன் ஏனை மாதர்பால் இரக்கமில்லாத படுகொலைகாரன்!' என்றாள். ஒருத்தி, காம பரவசத்தால், ஒரு செயலுமின்றி உணர்ச்சியுமின்றிப் 'பிழைப்பாள்' என்று சிலரும் 'பிழையாள்' என்று சிலரும் கூறுமாறு ஓய்ந்து ஒடுங்கிக் கிடந்தாள். ஒருத்தி, இராமனை அடைதல் கூடுமென்று அவன் தேரின்பின் செல்வாள்; கூடாதென்று திரும்புவாள்; இவ்வாறாக ஊசலாடுவாள் போன்றாள். ஒருத்தி, இராம காமப்பித் தேறி மற்றொருத்தியை நோக்கி 'என் மனத்தைக் காணேன். அஃது இவ்வழியாகப் போகக் கண்டாயோ?' என்று நாணமின்றிக் கேட்டாள். இச்சை கொண்டார்க்கு லச்சை யுண்டோ?

நங்கை யங்கொரு பொன்னயந் தாருய்யத்
தங்க ளின்னுயி ருங்கொடுத் தார்தமர்
எங்க ளின்னுயி ரெங்களுக் கீகிலா
வெங்க ணெங்கண் விளைந்த திவற்கென்றாள் (186)

கொண்டுகூட்டு: அங்கு, பொன் (போல்வாள்) ஒரு நங்கை, '(இவன்) தமர், நயந்தார் உய்யத் தங்கள் இன் உயிரும் கொடுத்தார். இவனுக்கு, எங்கள் இன் உயிர் எங்களுக்கு ஈகிலா வெங்கண் எங்கண் விளைந்தது?' என்றாள்.

பொருள்: ஒருத்தி,' இவன் சுற்றத்தார் ஆகிய இவனுடைய முன்னோர், தம்பால் அன்புற்றார் பிழைக்கும்படி தங்கள் இனிய உயிரையும் கொடுத்தார்கள். அப்படிப்பட்டவர்கள் வழித் தோன்றிய இவனுக்குத் தன்பால் அன்புற்றதனால் இறந்துபடும் எங்களுக்கு உரிய எங்களுயிரையே கொடுக்காத கொடுமை எங்கேயிருந்து உண்டாகியது!' என்றாள்.

பொன் இலக்குமி (போல்வாள்). நயத்தல் - விரும்புதல் ; அன்பாற் சிறத்தல்.—பரிபா. தமர் - உறவினர். வெங்கண் - கொடுமை.
எங்கன் (-எவ்வாறு) என்பதும் பாடம். (186)

ஒருத்தி, 'இவன் எந்த மாதையும் நோக்குகின்றானில்லை. பெண்ணாசை யில்லாதவன் ; ஆயின், எதற்காக வில்லை முறித்தா னென்றால், சீதையை மணத்தற்காக வன்று, தன் வில்வித்தை யைக் காட்டுவதற்காக' என்றாள். ஒருத்தி, முத்துமாலை சோர, மற்ற ஆபரணங்களனைத்தும் சோர, ஆடை சோர, ஆவி சோரா நின்றவள், 'எவரும் அஞ்சும் இந்த வில்வீரர் எதிரிலேயே என்னைக் கொல்லுகின்ற மன்மதனினும் வலியார் யார் !' என்றாள்.

### இராமன் சபா மண்டபம் அடைதல்

இவ்வாறு மாதர்கள் காதலால் துன்புறு நிற்க, இராமன், அரசர் குழாம் புடைசூழத் தம்பியரோடு சென்று வசிட்டனும் விசுவாமித்திரனும் இருந்த மண்டபத்தைச் சேர்ந்தான். அங்கே தசரதனும் வந்தான்.

### நாடு முழுதும் நகரம் போன்றது

**ஊடு பேர்விட மின்றியொன் றாம்வகை**
**நீடு மாகடற் றானை நெருங்கலால்**
**ஆடன் மாமத யானைச் சனகர்கோன்**
**நாடெ லாமொரு நன்னக ராயதே (187)**

கொண்டுகூட்டு : ஊடு பேர்வு(க்கு) இடம் இன்றி, ஒன்று ஆம் வகை நீடு மா கடல் (போலும்) தானை(களெல்லாம்) நெருங்கலால், ஆடல் மா மத யானைச் சனகர்கோன் நாடு எல்லாம் ஒரு நல் நகர் ஆயது.

பொருள் : ஒரு சேனைக்கும் மற்றொரு சேனைக்கும் இடையே நிலை பெயரும் இட மில்லாமல் எல்லாச் சேனைகளும் ஒரே சேனையாம் என்று சொல்லும்படி, பெரிய கடல் போலும் சேனைகள் நெருங்குதலினால் சனகனது விதேக நாடு முழுதும், அதன் நகர்களுக் கிடையே வெற்றிட மில்லாமற் சன நெருக்க முற்று ஒரு நகரம் போன்றது. (187)

சனகன் முழு அன்புடன் இழிந்தோர் உயர்ந்தோர் எல்லா ருக்கும் உயர்ந்த சம்மானம் செய்தான் : முழு அன்புக்கு அதிக மாக அன்பு செய்தல் அசாத்திய மாதலால் அவன் அன்பு இழிந் தார்க்கும் இராமனுக்கும் ஒத்தது.

# 20. கோலங்காண் படலம் *

சீதையை அலங்காரம் செய்ததைக் கூறுவது

தசரதன், தேவியரோடு சிங்காதனத்தில் இருந்த போது, வசிட்டன் சனகனை நோக்கிச் 'சீதையைத் தருவிக்க' என, அவன் அயல் நின்ற மாதரை ஏவ, அவர் சென்று தாதியர்பாற் சொல்ல, அவர்கள் சீதையை அலங்கரிக்கலானார்கள்.

**சீதையைத் தாதியர் அலங்கரித்தல்**

**அமிழிமைத் துணைகள் கண்ணுக்கணியென வமைக்கு மாபோல்**
**உமிழ்சுடர்க் கலன்க ணங்கை யுருவினை மறைப்ப தோரார்**
**அமிழ்தினைச் சுவைசெய் தென்ன வழகினுக் கழகு செய்தார்**
**இமிழ்திரைப் பரவை ஞால மேழைமை யுடைத்து மாதோ (188)**

கொண்டுகூட்டு : அமிழ் இமைத் துணைகள் கண்ணுக்கு அணியென (பிரமன்) அமைக்குமா(று) போல, உமிழ் சுடர்(உடைய) கலன்கள் நங்கை உருவினை மறைப்பது ஓரார் (ஆகித் தாதியர்கள்) அமிழ்தினைச் சுவை செய்தென்ன, அழகினுக்கு அழகு செய்தார்? இமிழ் திரைப் பரவை ஞாலம் ஏழைமை உடைத்து.

பொருள் : கண்களை மூடி அவற்றின் அழகை மறைக்கும் இமைகளைப் பிரமன், கண்களுக்கு அழகென உடம்புகளைச் சிருட்டிக்குங் காலத்தில் அமைக்குமாறு போல, தாதியர், ஆபரணங்கள் சீதையின் திருமேனியை மூடி அம் மேனி அழகை மறைப்பதை அறியாராய், இன் சுவை அனைத்தும் குறைவின்றி நிரம்பிய அமிழ்தத்தை அதிகச் சுவை பெறுத்த முயலலால், அதன் சுவை கெடு மென்றறியாமல், அதிகச் சுவையுறச் செய்ய முயன்று சுவை கெடச் செய்தாற் போல, சீதையின் பரிபூரண சௌந்தரியத்தை அதிகப்படுத்த முயலலால், அது கெடுமென்றறியாமல், அவளுடைய அழகுக்கு அணிகலங்களால் அதிக அழகு செய்ய முயன்று அவ் அழகைக் கெடுத்தல் செய்தார்கள்; இவ்வாறு செய்த தாதியரும் அவர் செயல் தக்கதெனக் கருதிய மற்ற மக்களும் அடங்கிய உலகத்தவர் அறியாமையை உடையார்! இவர் அறியாமை இருந்தவாறு என்னே!

* கோலம் - அலங்காரம். காணல் - செய்தல்.

அமிழ்தல் - ஆழ்தல் - தாழ்தல். அமிழ் இமை - (கண்ணை மூடி அதன் அழகை வெளிப்படாமற் செய்யும்படி) தாழ்கின்ற கண் மடல். துணை - இரண்டு. 'துணைகள்' என்பதிற் 'கள்' அசை.—சிந்தா. அணி - அழகு. அமைக்கு மா போல் - அமைக்குமாறு போல. உமிழ் சுடர்க் கலன் - வீசுகின்ற ஒளியை யுடைய ஆபரணம். உரு - உடம்பு; அழகு. சுவை செய்தல் - சுவை யுறச் செய்தல். இமிழ் திரைப் பரவை ஞாலம் - ஒலிக்கின்ற அலைகளையுடைய கடல் (சூழ்ந்த) உலகம். உலகம், உலகத்தாரைக் குறித்தது. ஏழைமை - அறியாமை. உடைத்து - உடையது.

இமை தாழுங் காலத்துக் கண்ணை மூடிக் கண்ணின் அழகு புலப்படாமற் செய்தல் குறிக்க, சும்மா 'இமை' என்னாது, 'அமிழ் இமை' யென்றார். அமிழ்தினும் அதிகச் சுவை யுடைய பொருள் யாதேனு மொன்று இருந்தாலன்றோ, அப்பொருளைக் கொண்டு அமிழ்தத்தை அதிகச் சுவையுறச் செய்தல் கூடும்; அப்படிப்பட்ட பொருள் ஒன்றும் இல்லாமையால் அமிழ்தினைச் சுவை யூட்ட முயல்வா ருளரேல், அவர் அறிவில்லாரே; அவ்வாறே சீதையின் அழகுக்குக் குறைந்த அழகுடைய அணிகளைக் கொண்டு அவள் 'அழகினுக்கு அழகு செய்தார் அறிவில்லாதாரே.'

'அழகினுக்கு' என்பதற்கு, 'அழகு வேறு தான் வேறென் றில்லாமல், அழகே தானாக வுள்ள சீதைக்கு' என்றும் பொருள் கொள்ளலாம். இப் பொருளை, இலக்குமி தேவியே சீதையானா ளென்பதும் 'இலக்குமி' என்ற பதத்துக்கு 'அழகு' என்ற பொருளுண்மையும் வலியுறுத்தும்.

இக் கவி, கழிபேருவகை விளக்கும் கவிகளுள்ளே சிறந்தவற்றுள் ஒன்று. இதனில் எடுத்தாளப் பட்டுள்ள உவமான உவமேயங்கள் ஒன்றுக்கொன்று மிகச் சிறந்த பொருத்த முடையனவாய் நினைக்குந்தோறும் நிரம்ப இன்பம் பயப்பனவா யுள்ளன. (188)

**கண்ணன்றன் னிறந்தன் னுள்ளக் கருத்தினை நிறைத்து மீதிட்**
**டுண்ணின்றுங் கொடிக ளோடி யுலகெங்கும் பரந்த தென்ன**
**வண்ணஞ்செய் கூந்தற் பார வலயத்து மழையுட் டோன்றும்**
**விண்ணின்ற மதியின் மென்பூஞ் சிகழிகைக் கோதை**
**வேய்ந்தார் (189)**

கொண்டுகூட்டு: கண்ணன் தன் நிறம், தன் (சீதையின்) உள்ளக் கருத்தினை நிறைத்து, மீதிட்டு உள் நின்றும் கொடிகள் (ஆக) ஓடி உலகு எங்கும் பரந்தது என்ன, வண்ணம் செய் பாரம் வலயம் (உடைய) கூந்தலில், மழையுள் தோன்றும் விண் நின்ற மதியின், மென் பூஞ் சிகழிகைக் கோதை(யைத் தாதியர்) வேய்ந்தார்.

பொருள்: இராமனது கரிய நிறம், சீதையின் மனத்தை இடமாகக் கொண்டு, தன்னால் அதனை நிறையச் செய்து, அதனுள் அடங்காமல் மேலிட்டு, எழுந்து, வளர்ந்து, எண்ணிறந்த

உரோமக் கொடிகளாக ஓடி எங்கும் பரவியதென்று சொல்லும் படி, அந்த நிறத்தை ஒத்த நிறத்தையுடைய கூந்தலிலே, மேகத்தில் இடைவெளியில் தோன்றும் ஆகாயத்தில் நிலையாக நின்ற சந்திரன் போலப் பூமாலையைத் தாதியர் வட்டமாகச் சூட்டினார்கள்.

**கண்ணன் - கிருட்டிணன்; அந்த அவதார மெடுத்த திருமாலின் மற்றோ ரவதாரமான இராமனைக் குறித்தது. உள்ளக் கருத்து - மனம். உள்ளம் என்பதில் 'அம்' பகுதிப் பொருள் விகுதி. உள்ளமும் கருத்தும் ஒரு பொருட் பன்மொழிகள். மிகுந்து பரந்ததென்பது குறிக்க, உலகெங் கும் பரந்தது, எனப்பட்டது. செய், உவமச் சொல்.—சிந்தா. கூந்தற் பாரம் - அளக பாரம். பாரம் - சுமை. வலயம் - வட்டம். கூந்தற் பார வலயம், சுமையும் வட்டமுமான கூந்தலென்பதைக் குறித்தது. மழை - மேகம். சிகழிகை - சிரத்தைச் சூழ அணியும் பூமாலை.**

> கண்ணன்தன் நிறம்தன் உள்ளக் கருத்தினை நிறைத்து மீதிட்
> டுள்நின்றும் கொடிகள் ஓடி உலகெங்கும் பரந்த தென்ன
> வண்ணம் செய் கூந்தல்

**என்றது, பாரதத்தில், அருச்சுன சந்நியாசியின் காவி வேட்டியை**

> ' உள்ளடங்கிய காமவெங் கனல்புறத் தோடிக்
> கொள்ளை கொண்டன கூறை'

**என்றது போல்வது காண்க. [கூறை - ஆடை - (காவி)வஸ்திரம்] (189)**

வில்லை முறித்த வீரன், தான் காதலித்தவனோ அல்லனோ வென்ற சந்தேகத்தால் அலைப்புண்ட சீதையின் மனம் ஊசலாடல் போல அசையும் குழைகளைத் தாதியர்கள் அவள் காதுகளிலே அணிந்தார்கள்.

> **கோனணி சங்கம் வந்து குடியிருந் தனைய கண்டத்**
> **தீனமில் கலன்க டம்மி லியைவன வணிதல் செய்தார்**
> **மானணி நோக்கி னார்தம் மங்கலக் கழுத்துக் கெல்லாந்**
> **தானணி யான போது தனக்கணி யாது மாதோ (190)**

கொண்டுகூட்டு: கோன் அணி சங்கம் வந்து குடியிருந் தனைய கண்டத்து ஈனம் இல் கலன்கள் தம்மில் இயைவன அணிதல் செய்தார்; மான் அணி நோக்கினார் தம் மங்கலக் கழுத்துக் கெல்லாம் தான் (இலக்குமி யான சீதை) அணி ஆன போது தனக்கு அணி யாது?

பொருள்: திருமால் கையில் அணிந்த சங்கு தேடி வந்து குடியிருந்தாற் போன்ற சீதையின் அழகுடைய கழுத்திலே

வேலைப்பாட்டுக் குறைவு இல்லாத அணி வகைகளில் பொருத்த மானவைகளைத் தாதியர் அணிந்தார்கள் : மங்கிலியப் பெண்கள் கழுத்துக் கெல்லாம் சீதை அணிகல அரசாம் தாலி அணியா யிருக்கும்போது, அவளுக்கு அணியாகத் தக்கது யாது? ஒன்று மில்லை யென்றபடி.

கோன் - எப்பொருட்கும் இறைவன் ; இங்கே விட்டுணுவைக் குறித் தது. ஈனம் - குறைபாடு. ஈனம் இல் அணிகள் - பொற் கொல்லர் தொழிற் றிறமை குறைவின்றி அமைத்த ஆபரணங்கள். மான் அணி நோக்கினர்- மான் கண்கள் போலும் கண்களை உடையார். அணி, எதுகையில் நிற்றல் பற்றிப் போலும் எனப் பொருள்பட்டது. 'அணி - அழகு' எனக் கொண்டு, 'மான் கண்ணின் அழகையுடைய கண்ணுடையார்' என்றும் பொருள் கொள்ளலாம்.

சங்கு, திரண்டு உருண்ட வடிவம், வரிகள், ஓசை இவைகளை உடைத்தாயிருத்தலால், மாதர் கழுத்துக்கு ஒப்பென்பர். சீதை இலக்குமி யின் அவதாரமாதலாலும், மங்கிலியம் இலக்குமியின் அமிசமாய் இலக்குமி பெயராகிய 'திரு'வைத் தனக்கும் பெயராகக் கொண்டிருத்தலாலும் 'மானணி நோக்கினர் தம் மங்கலக் கழுத்துக் கெல்லாம் - தானணியான போது தனக்கணியாது மாதோ' என நயம்பட உரைத்தார். (190)

சீதை தனங்களின்மீது அணிந்த முத்து மாலையை விண் மீன்*களைக் கொண்டு கோத்த மாலை யென்னலாமோ? இளம் பிறை யென்னலாமோ? பற்களின் ஒளி பரந்த தென்னலாமோ? யாதென்னலாம்?

உண்டென்று ஆத்திகரும் இல்லை யென்று நாத்திகரும் கூறும் பரம்பொருள் போல, 'உண்டு' 'இல்லை' யென்னும்படி உள்ள இடை வருந்தும்படி சீதைக்குத் தாதியர் அணிகள் அணிந்தார்கள்.

இரண்டு நீல மலர்கள் ஒரு தாமரை மலர்மேல் மலருமானல், அதனில் மூன்றும் நாட்பிறை தோன்றுமானல், அந்தப் பிறை நடுவில் ஒரு விண்மீன் உளதாமானல், அவ்விண்மீனைப் போல, இரண்டு கண்கள் விளங்கும் முகத்தின்மேல் ஒளிரும் நெற்றி யிலே, திலகத்தை, மானுட மடந்தையர் நாக கன்னியர் தேவ மாதரெல்லாருக்கும் திலகம் போன்ற சீதைக்குத் தாதியர் தரித்தார்கள்.

சீதைக்கு அலங்காரஞ் செய்த சேடியர், மலரினது கள் ளுண்டு வண்டுகள் மயங்குதல்போல, அவள் அழகுக் கள்ளைக்

---

* விண் மீன் - நட்சத்திரம்

கண்வாயால் மனவயிறு தேக்கிட உண்டு, ஆசை வெறிகொண்டு, சொற் குழறித் தடுமாற்றமுற்று, அவளைக் கண்ட ஆடவர் படும் பாடுபட்டு நின்றார்கள்; இஃது ஆச்சரியமன்று; ஆடவர்க்கும் பெண்டிர்க்கும் உடல்கள் இரு வேறு தன்மையினவே யன்றி, மனங்கள் ஒரே தன்மையின வன்றோ?

ஒவ்வொரு பெண்ணிடத்தும் ஒவ்வோர் அழகு, சிறப்பாக விரும்பத்தக்கதாகக் காணப்படும்; அவ் அழகுகளெல்லாவற்றையும் ஒருசேர ஒரு பெண்ணிடத்துக் கண்டால், அவ்வாறு கண்டதனாலாய ஆசையை ஆற்றும் ஆற்றலுடையார் ஆர் உளர்? ஒருவருமில்லை; ஆதலால், மற்றைத் திதிச் சந்திரன்கள் போலன்றி, ஒரு கலைக் குறைவுமில்லாமல் எல்லாக் கலைகளும் பூரணமாக நிரம்பிய பௌர்ணமிச் சந்திரனைப் பார்த்தாற் போல, பிற பெண்கள் போலன்றி, ஓரழுகுக் குறைவுமில்லாமல் எல்லா அழகுகளும் சேர நிறைந்த சீதையைப் பார்த்து மாதர்கள் அடங்காப் பெருங்களி கொண்டார்கள்.

**சீதை, சபா மண்டபம் சேர்தல்**

**வல்லியை யுயிர்த்தநில மங்கையிவள் பாதம்**
**மெல்லிய வுறைக்குமென வஞ்சிவெளி யெங்கும்**
**பல்லவ மலர்த்தொகை பரப்பின ளெனத்தன்**
**நல்லணி மணிச்சுடர் தவழ்ந்திட நடந்தாள் (191)**

**கொண்டுகூட்டு:** வல்லியை உயிர்த்த நில மங்கை, 'இவள் பாதம் மெல்லிய, உறைக்கும்' என அஞ்சி, வெளி எங்கும் பல்லவ மலர்த் தொகை பரப்பினள் எனத் தன் நல் அணி மணிச் சுடர் தவழ்ந்திட நடந்தாள்.

**பொருள்:** சீதையைப் பெற்ற பூமி தேவி, 'இவள் பாதங்கள் மென்மையானவை, தரையால் உறுத்தப்படும்' என்று அஞ்சிச் சீதை செல்லும் தரை வெளி யெங்கும் பல நிற முடைய தளிர்கள் மலர்களைப் பரப்பினாள் என்று சொல்லும்படி, அவளுடைய ஆபரணங்களின் பல வருண மணிகளின் பன்னிற ஒளிகள் அவள் நடக்கும் பாதையில் பரவ, அவள், தசரதராதியர் இருந்த மண்டபத்துக்குப் போக, நடக்கலுற்றாள்.

வல்லி - கொடி. கொடி போல்வாள் - சீதை. உறைக்கும் - உறுத்தும்; உறுத்தப்படும் என்று பொருள் கொள்ள நின்றது. பல்லவம் - தளிர். தொகை - கூட்டம் - திரள். தவழ்ந்திட - பரவ. (191)

தன் நடைக்குத் தோற்று, அன்னங்கள் ஓடிப்போகக் கருதிப் பலமுறை பறந்து எழுந்து பின்பு பயத்தால் ஓடமாட்டா

மல் விழுதல் போல, சாமரைகள் விரிந்து எழும்பித் தாழும்படி இரட்டப்படா நிற்க, கலாபம்* அணிந்த சீதை கலாப மயில் போலச் சென்ருள்.

மண்ணுலகத்தும் மற்றைய உலகங்களினும் உள்ள மாதர்களுக் கெல்லாம் கண்மணி யென்று சொல்லத் தக்க சிறந்த அழகுடைய சீதையைப் பார்க்க ஆசை கொண்டு இராமனது குல முதல்வனை சூரியன் விண்ணினின் றிறங்கிஞற் போன்ற ஒளி மிகுந்த விதான நிழலின் கீழாகச் சென்று சீதை, தசரதனுதி அரசர் கூடியிருந்த மண்டபத்தை அடைந்தாள்.

சிருட்டி கர்த்தாவாற் செய்யப்பட்ட பிற மாதருக்குக் கிரந்த கர்த்தாக்களாற் செய்யப்பட்ட பிற கிரந்தங்கள் சமானமாகத், தன்னைச் சிருட்டிப்பா ரின்றிச் சுயம்புவாகப் பூமியி னுள்ளிருந்து புறப்பட்டுத் தோன்றிய சீதைக்குச் 'செய்யா மொழி' யாய்ச் சுயம்புவான வேதமே சமானமாகச் சொல்லலாம்.

அப்படிப்பட்ட சீதை வந்து சேர்ந்த மண்டபத்திலே, அவள் திருமேனியின் சௌந்தரியத்தைக் கண்ட ஆடவர் பெண்டி ரனை வரும், அந்தக் காட்சி யானந்தத்தில் ஆழ்ந்து, அம் மண்டபத்தில் எழுதப்பட்டிருந்த சித்திரப்பாவைகள் போல, இமை கொட்டாமலும் மூச்சு விடாமலும் அசையாமலும் இருந்தனர்.

### சீதையைக் கண்ட இராமன் களிப்பு

**அன்னவளை யல்லளென வாமென வயிர்ப்பான்**
**கன்னியமிர் தத்தையெதிர் கண்டகடல் வண்ணன்**
**உன்னுயிர் நிலைப்பதொ ரருத்தியொ டுழைத்தாண்**
**டின்னமிர் தெழக்களிகொ ளிந்திரனை யொத்தான் (192)**

**கொண்டுகூட்டு :** அன்னவளை, அல்லளென, ஆ மென, அயிர்ப்பான், கன்னி(யான) அமிர்தத்தை எதிர் கண்ட கடல் வண்ணன், உன்(னும்) உயிர் நிலைப்ப தொரு அருத்தியொடு உழைத்து ஆண்டு இன் அமிர்து எழக் களி கொள் இந்திரனை ஒத்தான்.

பொருள் : அப்படிப்பட்ட சீதையை அவள் மண்டபத்திற்கு வருமுன், தான் கன்னியாமாடத்திற் கண்டு காதலித்தவன் அல்லளென்றும் காதலித்தவள் ஆமென்றும் ஐயப் பட்டுக்கொண்டிருந்த இராமன், கன்னியர் சமூகமான பாற் கடலிலே தோன்றிய

* கலாபம்-மாதர் அரையில் அணியும் பதினறு மணிக்கோவை; மயிற்றோகை.

அமிர்தமான அவளை எதிரே காணப்பெற்றவன் ஆனபோது, உயிர் இறந்து விடாது நிலைக்கச் செய்யவேண்டுமென்ற ஆசையால் பாற் கடலை வருந்திக் கடைந்து உழைத்து, அந்தப் பாற் கடலிலே அமுதம் உண்டாகக் கண்டு களிப்படைந்த இந்திரனை ஒத்தான்.

அயிர்த்தல் - சந்தேகித்தல். உன்னுதல் - கருதுதல். உன் உயிர் - (அருமையான பொருள்கள் யாவற்றினும் அருமையானதாகக்) கருதப் பட்ட உயிர். நிலைப்பது என்ற தன்வினை நிலைப்பிப்பது என்ற பிறவினைப் பொருள் தந்து நின்றது. ஓர் - ஒப்பற்ற. அருத்தி - விருப்பம். உழைத்து- வருந்தி வேலை செய்து. ஆண்டு - அவ்விடத்தில்; முன் பின் தொடர்ச்சி யாற் பாற் கடலை உணர்த்தியது.

இந்திரன் அமிர்தம் பெற்று உயிர் நிலைக்கப் பெற்றான்; அவ்வாறே இராமன் சீதையைப் பெற்று உயிர் நிலைக்கப் பெற்றானென்பது கருத்து.

### வசிட்டன் முதலோர் வியந்தது

மேற்கூறியவாறு சீதை எதிரே வரக் கண்ட இராமன், 'கன்னியாமாடத்தை விட்டு என் அகத்துள்ளே குடிபுகுந்திருக் கின்றவள் என் அகத்தே யன்றிப் புறத்தேயும் உள்ளாளோ' என்று எண்ணினான்.

'நாம் செய்த தவத்தால் திருமால் இராமனாக வந்தான்; ஆதலால் இலக்குமியே சீதையானாள்' என்று வசிட்டன் எண்ணி மகிழ்வுற்றான்.

'நான் எத்தனையோ காலம் உலகமுழுதும் அரசாளும் செல் வத்தை அடைந்திருந்தேனென்றாலும், (அச் செல்வத்தின் அதி தேவதை யாகிய) இலக்குமியை என் மருமகளாகப் பெற்ற இன்றுதான் அதனை உண்மையாக அடைந்தேன்' என்று தசரதன் எண்ணினான்.

தான் குடியிருந்த தாமரைக் கோயிலை* வெறுத்துச் சனகன் கோயிலிற் குடிபுகுந்த சீதை, முனிவரைத் தொழுது, பின்பு தசரதனைத் தொழுது சனகனுக்கு அருகே யிடப்பட்டிருந்த ஆசனத்திலே அமர்ந்தாள்.

**அச்சென நினைத்தமுத லந்தணன் நினைந்தான்**
**பச்சைமலை யொத்தபடி வத்தட லிராமன்**
**நச்சுடை வடிக்கண்மலர் நங்கையிவ ளென்றால்**
**இச்சிலை கிடக்கமலை யேழையு மிறுமே (193)**

---

* கோயில் - தேவாலயம்; இராச மனை.

**கொண்டுகூட்டு :** அச்சு என நினைத்த முதல் அந்தணன் நினைந்தான், பச்சை மலை ஒத்த படிவத்து அடல் (உடைய) இராமன், (பரிசு ஆகிய) இவள் நச்சு உடை வடிக் கண் மலர் நங்கை யென்றால், இச்சிலை கிடக்க, மலை ஏழையும் இறுமே !

**பொருள் :** ஆதனத்தில் அமர்ந்த சீதையை அழகிற் சிறந்த மாத ரனைவருக்கும் அச்சுப் போல்வாளென் றெண்ணிய விசுவாமித்திரன் ஒன்று நினைந்தான் ; அது யாதெனில், வில்லை வளைப்பதற்குப் பரிசாக வுள்ள இவள் இலக்குமி தேவி யென்று தெரிந்திருந்தால், இராமன், இந்தவில் ஒன்றை மட்டுமோ ஒடித்திருப்பான் ! இது – சிவன் வில்லாகிய மேருமலை – ஒன்று கிடக்கட்டும், சத்த குல பருவதங்களென்ற மலைகள் ஏழையுமே ஒடியாது விட்டிருப்பானோ ! என்பது.

அச்சு – உயிர் ; மூலரூபம் ; ஆதாரம்.—ச. அ. அச்செனா – (மற்ற அழகிற் சிறந்த மாதர், உடல்போல, அவ் வுடலுக்கு) உயிர்போல்வாளென்று ; (எந்த மூல ரூபத்தினின்று மற்றெல்லா அழகிய மாதருடைய ரூபங்களும் பெறப் பட்டனவோ அந்த) மூல ரூப மானவளென்று ; (பிற மாதருடைய அழகுக்கெல்லாம்) ஆதாரமான (அழகுடைய)வ ளென்று : கம்பர் காலத்து அச்சு யந்திரம் இருந்திருந்தால், 'அச்செனா' என்பதற்குப் 'பிற மாத ரெல்லாம் கை யெழுத்துப் போல, இவள் அச் செழுத்துப் போன்றாளென்று' என்றும் பொருள் கூறலாம். முதல் அந்தணன் – முதன்மையுடைய முனி, விசுவாமித்திரன். படிவம் – வடிவம். அடல் – வலி. நச்சு – விருப்பு. உடை – உடைய – உடைய என்பதன் யகரம் கெட்டு நின்றது. நச்சு உடை – (கண்டார்) விரும்பும் தன்மை யுடைய. வடி – மாவடு. வடிக் கண் – மாவடுவை யொத்த கண்களை யுடைய. மலர் நங்கை – மலர் மகள் – இலக்குமி. 'இவள் மலர் நங்கை என்றால்' என இயைக்க.

'அச்சு என நினைத்த – (உலகத்துக்கு) அச்சாணி போன்றவளென்று மதிக்கப்பட்ட. அச்சு ஆகுபெயர்' என்றும், 'இறுமே (என) நினைந்தான் என்று முடிக்க' என்றும், 'கண் மலர் நங்கை இவள் – கண் மலர்களை யுடைய பெண் இத்தன்மையள்' என்றும் உரைகள் உள. வசிட்டன் 'மலர் புல்லும் மங்கை யிவளாம்' என்றும் தசரதன் 'இன்று திரு எய்தியது எனக்கு' என்றும், விசுவாமித்திரன் 'மலர் நங்கை இவள்' என்றும் மூவரும் ஒருவர் போலச் சீதையை இலக்குமி தேவியாகக் கருதியதாகக் கூறியிருப்பது கவனிக்கத் தக்கது. (193)

### சீதையின் ஆனந்தப் பெருக்கம்

வில்லை ஒடித்தவன், 'இளையகோவொடும் பராவரும் முனியொடும் பதிவந் தெய்தினான்', என்று தாதி முன்பு சொல்லக்

காதாற் கேட்டு, அநுமானப் பிரமாணத்தால், தான் காதலித்த வனே அல்லனே வென்ற சந்தேகம் பெரும்பாலும் நீங்கலுற்றிருந்த சீதை, பிரத்தியட்சப் பிரமாணத்தால் அச் சந்தேகம் முழுதும் நீங்குதற்பொருட்டு, அவனை அகத்தேயன்றிப் புறத்தேயும் காண விரும்பித் தன் கை வளையல்களைத் திருத்தும் பாவனை செய்து, அந்த வளையல்களைப் பார்த்தல் போல, இராமனைக் கடைக் கண்ணால் நோக்கினாள்; நோக்கவே, பலகோடி தேவர்கள் பங்கிட்டுண்ட அமிழ்தத்தை வேறெவரோடும் பகிராமல் ஒருவர் தாமே முழுதும் உண்டாற் போல உடம்பு பூரித்தாள்.

சீதை, தன் கருத்திற் குடிகொண்ட கள்வனே வில்லை முறித்தவனென்று அகக் கண்ணா லன்றி முகக் கண்ணாலும் அறிந்த போது, அஞ்ஞானம் நீங்க மெய்ஞ்ஞானம் ஓங்கப் பெற்றவர்கள் அடையும் முத்தியின்பத்தை ஒத்த இன்பத்தை உற்றனள்.

### மண நாள் தீர்மானித்தல்

தசரதன் விசுவாமித்திரனை நோக்கி, 'கல்யாணத்துக்கு நன்னாள் எந்நாள்?' எனக் கேட்க, அவன் 'நாளைத் தினம் நல்ல தினம்' என்றான்.

அப்போது எல்லாரும் எழுந்து அவரவரிருப்பிடம் அடைந்தார்கள். சூரியனும் அத்தமன மடைந்தான்.

## 21. கடிமணப் படலம்

சீதா ராம கல்யாணத்தைப்பற்றிக் கூறுவது

### சனகன் விருந்தோம்பிய தன்மை

சனகனால் இனிமையாக உபசரிக்கப்பெற்றுத் தேவ போகங்கள் போன்ற போகங்களை நுகர்ந்து, தசரதன் முதலாகத் தாழ்ந்தோர் இறுதியாகவுள்ள எல்லாரும், உடம்போடு தேவ லோகத்தை அடைந்தவர்கள் போன்றார்கள்.

### சீதையின் தவிப்பு

தேடரு நலத்தபுன லாசைதெற லுற்றார்
மாடொர்தட முற்றதனை யெய்தும்வழி காணார்
ஈடழி வுறத்தளர்வொ டேமுறுவ ரன்றே
ஆடக வளைக்குயிலு மந்நிலைய ளானாள் (194)

கொண்டுகூட்டு: தேடு(தல்) அரும் நலத்த புனல் ஆசை தெறல் உற்றார், மாடு ஓர் தடம் உற்றதனை எய்தும் வழி காணார், ஈடு அழிவுறத் தளர்வொடு ஏமுறுவ ரன்றே! ஆடக வளைக்குயிலும் அந்நிலையள் ஆனாள்.

பொருள் : நீர்வேட்கையால் வருத்தப்படலுற்றவர்கள் ஒரு தடாகத்தின் பக்கத்திலே சேர்ந்தும் அதனை அடையும் வழியைக் காணுதவர்கள் ஆனபோது வலி யழிந்து தளர் வடைந்து ஏக்க முற்று மயங்குவார்க ளன்றே! அவ்வாறே இராமன் அருகே உறப்பெற்றும், அவனை அடையப் பெருமையால் சீதையும் அவர்கள் தன்மையின ளானுள்.

தேடரும் - தேடிக் கிடையாத. நலத்த - நன்மையுடைய. புனல் - நீர். தெறல் - வருத்துதல். மாடு - பக்கம். தடம் - தடாகம். ஈடு - வலி —புற. வெ. மா. ஏமுறுதல் - ஏக்கமுற்று மயங்குதல்.—புற. வெ. மா. ஆடகம் - தங்கம். வளை - வளையல். வளைக் குயில் - வளையல் அணிந்த குயில் ஓசை போல் இனிய மொழி யுடையா ளாகிய சீதை (194)

### சீதா ராமர் இரவைக் கழித்த விதம்

சீதை, 'இராமனைக் கண்டவுடனே, அவன் அடியைச் சார்ந்து, பின்னே சென்று, அவனை விட்டுப் பிரியாதிருந்து, அவன் திரும்ப வந்தபோது கூட வந்து, மீண்டும் அவனுடன் போய் விட்டது என் மனம், நெடு நாள் அவனோடிருப்பது, என்னோடு ஒருபோது தங்கலாகாதோ?' என்றும்,—'இரவோ விடிகின்றதில்லை, கண்ணோ துயில்கின்றதில்லை, பகலோ வருகின்றதில்லை, மயலோ அகல்கின்றதில்லை, உயிரோ ஒழிகின்றதில்லை.' என்றும்,—'கடலே! தரையிலே வளைகளைச் * சிந்துகின்ருய்! விழுகின்ருய்! புரள்கின்ருய்! அலறுகின்ருய்! உறங்காய்! நீயும் என்னைப் போல மன்மத பாணத்துக்கு அஞ்சிய கன்னிகையோ!' என்றும் பலவாறு புலம்பி இரவெல்லாம் வருந்திக் கொண்டிருந்தாள்.

இராமன், 'யான் கன்னி மாடத்தே கண்டு, முடி வில்லாத காதல் கொண்டு, கண்ட கண்கள் துணையாக மனத்தின் கண்ணே சித்திரித்து வைத்து, பின்பு சனகனது கொலு மண்டபத்திற் கண்டும் ஒரு பெண்ணின் ஆகம் எங்கும் விளங்கும் அழகை முழுதும் காணமுடியவில்லை: ஆகாய மெங்கும் பரவும் மின்னலைக் காண்போன் அதன் ஒரு பகுதியையே காண்பான்; அவன் அதனை எத்தனை முறை காணினும் முழுதும் காண்பதெங்ஙனம்?' என்றும்,—'என் மனமே! என்னை ஒருபோதும் நினையாய்! நீ என்பால் வருதற்கு வழி நீண்டதாயிருக்கின்றதோ! "நீ யார்? ஏன் வந்தாய்?" என்று உன்னை வினவாதவர் பால் விடைபெற்ரு யில்லையோ! அவரோடு போன நீயும்

---

* வளை - சங்கு ; வளையல்.

அவரைப் போல, என்னை மறந்தாயோ !' என்றும்,—' விடம், பாம்பின் பல்லை யிடமாகக் கொண்டிருந்தது முன் நாளிற் போலும்; இந் நாளில், அது, என் கண்ணையும் கருத்தையும் கணப்பொழுதும் நீங்காதவரது கண்ணையே இடமாகக் கொண்டிருக்கிறது' என்றும் பின்னும் பல பலவும் நினைத்துக்கொண்டு அன்றை இரவைக் கழித்தான்.

### கலியாண நாளில் நகரத்தின் தோற்றம்

இரவு விடிய, தன் குலத் துதித்த இராமனது திருமணங் காண வந்தான் போலச் சூரியன் தோன்றினன். அப்போது, வீடுகளிற் பூமாலைகள் தொங்க விட்டும், வாசல்களில் வாழை கமுகுகள் நட்டும், திண்ணைகளில் முளைப்பாலிகை வைத்தும், வீதிகளில் தோரணங்கள் கட்டியும், மதில்களின்மேல் ஆகாய மளாவக் கொடிகள் நட்டும், தேர்கள் யானைகள் குதிரைகளை அலங்கரித்தும், மற்றும் பலவாறு மிதிலா நகரம் திருக்கலியாணத்துக்காக அலங்கரிக்கப்பட்டது.

மாதர்களும் மைந்தர்களும், சிறந்த உடைகள் உடுத்தும், உயர்ந்த அணிகள் அணிந்தும், நறிய பூமாலை புனைந்தும், பரிமள தயில சந்தன களபங்கள் பூசியும், அலங்காரம் செய்து கொண்டார்கள். அந்தணர் அரசர்கள், பாவாணர் யாழ்ப் பாணர்கள், பாடகர் பாடகிகள், நாடகர் நாடகிகள், நெருங்கிக் கூடினர்கள். திருமணங் காண வந்த தேவர்களும் தேவ மாதர்களும், தேவலோகத்தி லிருக்கின்றோமோ, பூலோகத்திலிருக்கின்றோமோ, என்று திகைக்கும்படி, மிதிலாநகரம் அமராவதியை * ஒத்திருந்தது. இராமன் கலியாணநாள், இந்திரன் முடிசூடு நாள் போன்றது.

பொன்னாலும் மணிகளாலும் புனைந்த கல்யாண மண்டபத்துக்குத் தசரதன் தேவியருடன் வந்து ஆதனத்தில் அமர்ந்தான். முனிவரும் அரசரும் சனகனும் கிளைஞரும் அவரவர் மனைவியர் சகிதராய் வந்திருந்தார்கள். எல்லாரும் எல்லாப் பொருள்களும் இருக்கப் பெற்றதனால், அம் மண்டபம், பிரமாவின் அண்டத்தையும் திருமாலின் வயிற்றையும் ஒத்தது.

### இராமனது அலங்கரிப்பு

இராமன், கடல் நீர் கங்கை நீர் முதலிய தீர்த்தங்கள் கலந்த நீராடி, பாற் கடல் கருங் கடலைச் சூழ்ந்தது போல வெண்பட்டு வேட்டி கட்டி, கருமேகத்தின் மேல் வெண்ணிலாப் பரவியது

---

* அமராவதி - தேவேந்திர நகரம்.

நேரச் சந்தனம் பூசி, கருங் கடலில் வெண்மதி தோன்றுதல் நிகர மயிர் முடியில் மலர் மாலே சூடினுன்.

ஏதமி லிருகுழை யிரவு நண்பகல்
காதல்கண் டுணர்ந்தன கதிருந் திங்களுஞ்
சீதைதன் கருத்தினைச் செவியி னுள்ளுறத்
தூதுசென் றுரைப்பன போன்று தோன்றவே (195)

கொண்டுகூட்டு: ஏதம் இல் இரு குழை நண் பகல் இரவு கதிரும் திங்களும், சீதை காதல் கண்டு உணர்ந்தன (ஆய் அவள்) தன் கருத்தினைச் செவியின் உள் உறத் தூது சென்று உரைப்பன போன்று தோன்ற.

பொருள்: குற்றமற்ற குண்டலங்கள், முறையே பகலிலும் இரவிலும் சீதையின் காதலைக் கண்டறிந்தவைகளான சூரியனும் சந்திரனும் அவள் கருத்தைக் காதிலே உள்ளே உறும்படி தூது சென்று சொல்வன போன்று தோன்ற, இராமன் காதுகளிற் குண்டலங்கள் பூண்டான். (195)

அவன், 'நவக்கிரகங்களுள் ஒன்ருகிய சந்திரனைச் சிவன் சூடினுன், நாம் அதனோடு மற்றெல்லாச் சுடர்களையும் ஒருசேர அணிவோம்' என்று அணிந்தாற் போல, நவமணிகளிழைத்த வீரபட்டத்தை நெற்றியி லணிந்து திலகமும் அணிந்தான். சீதையின் பல்வரிசை தோன்றும் முறுவலானது தன் மனத்துள்ளும் நிறைந்து பின்பு மார்பிலும் வெளிப்பட விளங்கிறுற் போல முத்துமாலை புனைந்தான். தன்னில் இழைக்கப்பட்ட வயிர வெண் மணிகளும் பதுமராகச் செம் மணிகளும், முறையே, படப் பொறிகளும் கோபத்திருற் சிவந்த கண்களும் போல, தான் பாம்பு போல விளங்கிய வாகுவலயத்தை மலை போலும் தோளிலே மந்தர மலையைச் சுற்றிய வாசுகியைப் போல அணிந்தான்.

கருமேகத்திலே பல நிறங்கள் படைத்த வானவில் விளங்குதல் போலக் கரிய திரு மார்பிலே பல வருண மணி மாலையை வனைந்தான். மார்பில் தரித்திருந்த முத்து மாலையின் வெள்ளொளி பரவியது போல, வெண் பட்டுத்தரீயம் மிலைந்தான். இனி உலகை அளப்ப தெப்படி யென்று தடுக்கும் தடைகள் போன்ற சிலம்புகளை அணிந்தான். அப்போது அவனைக் கண்ட இவ்வுலகத்தோரும் இமையா * ராயினுர். அவ்வாருனது, அவன் திருமேனியின் இயற்கை அழகும் உடை அணிகளின் செயற்கை

* இமையார் - தேவர்; கண் இமையாதவர்.

அழகும் ஒருங்கு பொருந்தி விளங்கின சிறப்பினாலோ, அவர்கள், அவனை இடைவிடாமற் பார்த்தற்கு அவசியமாக இமையா திருக்க வேண்டு மென்று உறுதியாகக் கொண்ட மன ஓர்மையி னாலோ, எதனா லென்று தெரிதல் இயலாததா யிருக்கின்றது.

**மண நிகழ்ச்சி**

இராமன், சூரியனது தேர் போலும் தேரிலே சூரியன் போல ஏறி, அருணன் போலப் பரதன் தேர் செலுத்த, இலக்குமண னும் சத்துருக்கனும் இருபக்கமும் நின்று சாமரை யிரட்டச் சென்றான். செல்லும்போது, எல்லோரும் பூ மழை பொழிந் தார்கள் ; சுண்ணப்பொடி தூவினார்கள் ; காசுகளும் தூசுகளும் வீசினார்கள். (தூசு – வஸ்திரம்)

**வள்ளலை நோக்கிய மகளிர் மேனியின்**
**எள்ளரும் பூணெலா மிரிய நிற்கின்றார்**
**உள்ளன யாவையு முதவிப் பூண்டவும்**
**கொள்ளையிற் கொள்கெனக் கொடுக்கின் றாரினே (196)**

**கொண்டுகூட்டு :** உள்ளன யாவையும் உதவிப் பூண்டவும் *கொள்ளையில் கொள்க எனக் கொடுக்கின்றாரின்,* வள்ளலை நோக்கிய மகளிர், மேனியின் எள்ளரும் பூண் எல்லாம் இரிய நிற்கின்றார்.

**பொருள் :** உள்ள பொருள்க ளெல்லாவற்றையும் கொடுத் துப் பின்பும் கொடுக்கும் ஆசை தூண்டக் கொள்வாரை நோக்கி இன்னும் அதிகமாகக் கொள்வீராக என்று (தம் உடம்பில்) அணிந்திருந்த அணிகளையும் கொடுக்கும் கொடையாளர் போல, இராமனைக் கண்ட மாதர்கள் காம பரவசராகி மெலிவுற்றதனால் தம் உடலி லணிந்திருந்த ஆபரணங்களெல்லாம் கழன்று நீங்க நின்றார்கள்.

எள் அரும் பூண் - பழிப்பில்லாத ஆபரணங்கள் - குற்ற மற்ற ஆபர ணங்கள். இரிய - நீங்க. பூண்ட - பூண்டவை - ஆபரணங்கள். கொள்ளை - மிகுதி. ‘கொள்ளையில் கொள்க’ என்பதற்குக் கொள்ளை யடித்தலிற் (பறிக்கப் படுபவர் பூண்டிருக்கும் பூண்களையும் கைக் கொள்ளல்) போலக் கொள்க என்றும் பொருள் கொள்ளலாம். (196)

தேரிலே செல்லும் சூரியன் மேருமலையை அடைதல் போலத் தேரிற் சென்ற இராமன் கல்யாண மண்டபத்தை அடைந்து, அங்கிருந்த முனிவரைத் தொழுது, தசரதனைப் பணிந்து, அவன் பக்கத்தில் இட்டிருந்த ஆதனத்தில் அமர்ந் தான்.

### சீதை மண மண்டபம் சேர்தல்

**சிலையொடு கயல்வாட் டிங்க ளேந்தியோர் செம்பொற் கொம்பர்**
**முலையிடை முகிழ்ப்பத் தேர்மேல் முன்திசை முளைத்த தன்னாள்**
**அலைகடற் பிறந்து பின்னை யவனியிற் றோன்றி மீள**
**மலையிடை யுதிக்கின் றாள்போன் மண்டப மதனில் வந்தாள்**

**கொண்டுகூட்டு :** ஓர் செம்பொன் கொம்பர், சிலையொடு கயல் (உடைய) வாள் (பொருந்திய) திங்களை ஏந்தி, (தன்) இடை மு (ல்) லை முகிழ்ப்பத் தேர்மேல் முன் திசை முளைத்தது அன்னாள், அலை கடற் பிறந்து, பின்னை அவனியில் தோன்றி, மீள மலையிடை உதிக்கின்றாள் போல், மண்டபம் அதனில் வந்தாள்.

**பொருள் :** ஒரு செம்பொற் கொம்பு, மேற் பாகத்தில் ஒரு வில்லையும் அதன் கீழ் இரண்டு மீன்களையும் உடைய பிரகாசமான சந்திரனை உச்சியிலே ஏந்தி, அந்தச் சந்திரனிடத்தே முல்லை அரும்புகள் தோன்று நிற்கத் தேரின் மீது கீழ்த் திசையில் (இள ஞாயிறென) தோன்றியதனைப் போன்ற சீதாதேவி, அலைகள் அலையும் திருப்பாற் கடலிலே முன்பு இலக்குமியாய்ப் பிறந்து, பின்பு பூமியிலே சீதையாக அவதரித்து, மீண்டும் மலையிலே பிறக்கின்றவள் போல, அந்த மண்டபத்தில் இராமன் ஆதனத்தில் அமர்ந்த தற்சமயத்தில் வந்து சேர்ந்தாள்.

சிலை - வில் (நெற்றி). கயல் - மீன் (கண்.) வாள் திங்கள் - ஒளியையுடைய சந்திரன் (முகம்). முலை - முல்லை - அரும்பு (பல்). செய்யுளாதலால் ' முல்லை ' முலையென நின்றது. இடை - (திங்கள்) இடம்.

' முலை ' என்பதற்கு முந்திய உரைகாரர்கள் ' கொங்கை ' யென்று பொருள் கூறிப் போயினார்கள். நெற்றி கண் முகம் ஆகிய உறுப்புக்களை அவற்றின் உவமானப் பொருள்களாற் கூறிய கவி இவ் ஓர் உறுப்பை மட்டும் அவ்வாறு கூருது போனாரெனக் கொள்வது தகுதியாகத் தோன்றவில்லை. ' முல்லை முகிழ்ப்ப ' என்றது ' புன்னகை அரும்புதலாற் பல் வரிசை சிறிது வெளிப்பட்டு முல்லை அரும்பு போல இனிது விளங்க ' என்பதைக் குறித்தது. இயல்பாக இனிதாக உள்ள முகப் பொலிவு குறுஞ் சிரிப்பால் அதிக இனிமை யுடையதா மென்பது கூறவேண்டுவதில்லை. சீதையின் முகத்தில் புன்னகை தோன்றியது, இராமனை மணக்கப் போகிறோ மென்ற சந்தோஷத்தினாலுண்டாகிய மெய்ப்பாடென்க. இராமன் ஆதனத்தில் அமர்ந்த தற்சமயத்தில் சீதை வந்தா ளென்று நாடக நிகழ்ச்சி போலக் கூறிய நயம் கவனிக்கத் தக்கது.

' தேர் மேல் முன் திசை முளைத்த தன்னாள் ' என்றதனால், தேரிலே கீழ்த் திசையிலே சூரிய ஜோதி உதயமாதல் போல் (சீதையாகிய) பெண்

சோதி தோன்றியதாகவும், கல்யாண மண்டபத்தின் கிழக்கு வாயிலை நோக்கிச் சீதை கிழக்கினின்றும் தேரிலே வந்தாளாகவும் கம்பர் குறிப்பித்தாரென்று கொள்ளலாம். அவ்வாறு வருவதைப் பார்க்கும் நிலையில் இராமன் கிழக்கு முகமாக வீற்றிருந்தா னென்று பாவித்தல், அவன் ஆதனத்தில் அமர்ந்தவுடன் சீதை வந்தாளென்றதனால், பொருத்தமாம். கல்யாண மண்டபம் கிழக்கு நோக்கி யிருக்கு மென்பதும் அதனுட் செல்வோர் கிழக்கினின்று செல்வாரென்பதும் பிரசித்தம்.

பெண்களைக் கொம்புக்கு உவமிப்பது கவிமரபு. அவ் வுவமையை அதிகப் பொருத்தமானதாக்கச் செம் பொற் கொம்பு என்று கூறிப் பெண்ணாகிய உவமேயத்தில் உள்ள சில சிறந்த உறுப்புக்களின் உவமானப் பொருள்களை அந்தக் கொம்பாகிய உவமானத்தோடு அழகாகப் பொருத்தி ஓர் இனிய மனக் காட்சி தோன்றக் கூறிய நயம் பாராட்டற் பாலது. அதனோடு நில்லாமல், உயிருள்ள மரத்தில் முளைக்கும் கொம்பு உயிரில்லா மரத்தாலாகிய தேரில் முளைத்ததாக வியப்பும் நயப்பும் விளைய உரைத்த விநோதம் மெச்சத்தக்கது. அம்மட்டில் அமையாமல், உள்ளுறையாக, ஒளி மிக்க அக் கொம்பு ஒரு சோதியாகவும், அச் சோதி, கீழ்த் திசையிலே தேரிலே உதிக்கும் பால சூரிய சோதி போலத் தேரிலே கிழக்குத் திக்கிலே தோன்றியதாகவும் கூறிய சாதுரியம் ஊன்றி உணர்ந்து உவத்தற் குரியது. கொம்புக்கும் சோதிக்கும் பொதுவாகப் பொருந்தும்படி 'அங்குரித்தல்', 'வெளிப்படத் தோன்றல்', என்ற இரு பொருள் உள்ள 'முளைத்தல்' என்ற பதம் பிரயோகிக்கப்பட்டிருத்தலை நோக்குக.

சூரிய சோதி, முதலிற் கடலில் உதித்துப் பின்பு அக் கடலுக்கு அடுத்த பூமிக்கு மேல் விளங்கி, அதன் பின் அப்பால் உள்ள மலைமேற் பிரகாசித்தல் போலச் சீதா சோதியும் முதலிற் கடலிலும் பின்பு பூமியிலும் அதன் பின் மலையிலும் தோன்றியதாகக் கூறிய கவி நுட்பம் ஆச்சரியமும் ஆனந்தமும் அளிப்பது. முன்னிரண்டடியிற் குறிப்பாக அமைத்த 'சோதி' என்ற பொருளை விடாது பின்னிரண்டடியிலும் குறிப்பாகப் பொருந்தச் செய்த கவி வன்மை, கண்டு களிக்கத்தக்கது. இவ்வாறாக, இன்பமயமான இந்தப் பாட்டு ஓர் ஆனந்த சாகரம் போலவும், இப்பாட்டை ஆராயுந்தோறும் புதியன புதியனவாக மேலு மேலும் புலப்படும் கருத்துக்கினிய கருத்துக்கள், நோக்க நோக்க, அச் சாகரத்தில் ஒன்றன் பின் ஒன்றாக முடிவின்றித் தோன்றுகின்ற கண்ணுக்கினிய அலைகள் போலவும் இருக்கின்றன. (197)

இலக்குமி தேவியாகச் சீதை முன் பாற் கடலில் தோன்றிய காலத்தில், அவளைத் திருமாலாக இருந்த இராமன் விவாகம் செய்த அன்றைத் திருக்கலியாணத்தினும் இன்றைத் திருக்கலியாணம் அதிக அழகுடைய தென்று இரு திருமணங்களையும் காணப் பெற்ற இமையவர்கள் கூறினார்கள்.

தேவலோகம் பூலோகம் நாகலோக மென்ற மூன்று லோகங்களிலும் உள்ள அழகு வாய்ந்த பொருள்கள் யாவற்றின் அழகுகளும், எந்த இலக்குமி தேவியின் அமிசங்களோ, அந்த இலக்குமி தேவியே ஆன சீதையின் திருக்கலியாணத்தின் அழகைச் செப்ப முடியுமோ ! அப்படிப்பட்ட அழகைக் கண்டு களிக்கப் பிரமதேவன் முதலியோர், தேவியருடன் வந்தார்கள். விவாக வேள்வி செய்தற்கு மறையவர் சூழ, வசிட்டன் வந்து மங்கல அங்கியை * வளர்த்தான். இராமனும் சீதையும் மணவறையை அடைந்து மண வேதிகையில் இருந்தார்கள். சனகன், இராமனெதிர் நின்று 'நீரும் என் மகளும் திருமாலும் திருமகளும்போல நீடு வாழ்வீராக!' என்று இராமன் கையில் தாரை வார்த்தான்.

அப்போது அந்தணர், ஆசீர்வாத ஓசையும் மாதர் பல்லாண்டிசையும் தேவர் வாழ்த்தொலியும் சங்க நாதமும் முழங்கின ; வானவர் மலர்மழை வருஷித்தார்கள் ; புரவலர் பொன் மழை பொழிந்தார்கள் ; மற்றவர்கள் மலர்கள் முத்துக்கள் முதலியவற்றை வாரிச் சொரிந்தார்கள்.

இராமன், மங்கல வேள்வித் தீயில் மந்திரம் ஓதி ஆகுதி பெய்து, சீதை கையைப் பிடித்துக் கொண்டு, அந்த மங்கலத் தீயை வலம் வந்தான் ; அப்போது இராமனோடு சென்ற சீதை, பிறப்புதோறும் உயிர் பற்றப்பெற்ற உடம்பொத்தாள். மங்கலத் தீயை வலம் வந்தவர்கள் அதனை வணங்கிய பின், அம்மி மிதித்து அருந்ததி பார்க்கும் கிரியை நிகழ்த்தப் பெற்றது. பின்பு தம்பதிகள் முனிவரையும் தசரதனையும் வணங்கி, அரண்மனைக்குச் சென்று, தாயர் மூவரையும் பணிந்தார்கள்.

சனகன், தனது தம்பி குசத்துவனது குமாரிகள் மூவரையும் முறையே இராமனுக் கிளையார் மூவருக்கும் கொடுக்க, வசிட்டன், சீதாராமருக்குச் செய்ததுபோல, மணவேள்வி செய்து, அம் மூன்று தம்பதிகளுக்கும் மணவினை முடிப்பித்தான். மூன்று விவாகங்களும் முற்றுப்பெற்றபோது, சனகன், தான் கொடுக்கவும் பிறர் கொள்ளவும் முடியாத தனது புகழ் நீங்கலாக, வேண்டியவர்கள் வேண்டியவைகளை வேண்டிய அளவாகப் பெற்றுக் கொள்ளும்படி, தன்னிடத்துள்ள பொருள்களெல்லாவற்றையும் கொடுத்தான். தசரதனும் அவ்வாறு கொடுத்து மகிழ்ந்து மிதிலா நகரத்திலே சில நாள் இனிது தங்கியிருந்தான்.

---

அங்கி - தீ.

# 22. பரசுராமப் படலம்

## பரசுராமனை இராமன் வென்றதைக் கூறுவது

### தசரதனுதியர் புறப்படல்

மிதிலையிலே, இராமனும் சீதையும் நானுவித போகங்களையும் அனுபவித்து இன்புற்று வாழும் நாளிலே, விசுவாமித்திரன், அவர்களை ஆசீர்வதித்து, விடைபெற்று, வடதிசை நோக்கிச் சென்று இமயமலையை அடைந்து தவஞ் செய்யலானுன். தசரதன், மிதிலா நகரமாந்தர் பிரிவென்னும் துன்பக் கடலில் முழுகத் தம் மக்கள் மருமக்கள் முதலியோருடன் அயோத்திக்குப் புறப்பட்டான்.

தசரதன் முன்னே படர,* மிதிலைவாசிகள் மனம் பின்னே தொடர, தம்பியர் அருகேவர, இராமன் சீதையுடன் இனிதாக வழிச் சென்ருன். செல்லும்போது சில சகுனங்கள் எதிர்ப்பட, 'அவற்றின் பலன் நன்ரே? தீதோ?' எனத் தசரதன் வினவ, நிமித்திகன்† 'தீது நேரும் நன்ருய் முடியும்' என்ருன்.

### பரசுராமன் எதிர்ப்படல்

அப்போது, தனது தாய் தந்தையர்க்குக் கேடுசெய்த கார்த்த வீரியார்ச்சுன ராசனது ஆயிரம் தோள்களையும் அறுத்து, அவனைக் கொன்று, அவ்வளவிலே கோபம் தணியாமல், இருபத்தொரு தலைமுறை அரசரைக் கொன்ற பரசுராமன், சடைமுடி விண்ணை எட்ட, தோள்கள் திக்கை முட்ட, கண்கள் நெருப்பைக்கொட்ட, மழுவாயுதமும் விற்படையும் தாங்கி, மேரு மலை நடந்து வந்தாற்போல வந்தான்.

அவனைக் கண்டோர், 'வானைக் கீழே கவிழ்க்கவோ! மண்ணை ஆகாயத்திலோ பாதாளத்திலோ எறியவோ! எல்லா உயிர்களையும் எமனுக்கு இரையாக்கவோ! கண்கள் இரத்தங் கொப்புளிப்பனபோல அக்கினி கக்குகின்ற இவனது கோபத்தின் நோக்கம் யாதோ?' எனக் கருதினுர்கள்.

அவ்வாறு வந்தவனைத் தசரதன் கண்டு எதற்காக இவன் வந்தானென்று அஞ்சுகின்றபோது, அவன், படைகள் பயந்தோடப், பேரிடி போல ஆரவாரித்துக்கொண்டு இராமனெதிரே சென்ருன். இராமன் இவன் யாரோ என்று எண்ணிக்கொண்டிருக்கும் சமயத்தில், தசரதன் இருவருக்கும் இடையே சென்று, வந்தவனை வந்தனை செய்வானுய் அடிகளில் முடிபடியத் தரையில் விழுந்தான். அதனுற் கோப மாருமல், அவன், இராமனை நோக்கி

---

* படர - செல்ல. † நிமித்திகன்—சகுனபலம் சொல்வோன்.

' நீ ஒடித்த வில் வலி அறிவேன் ; உன் தோள் வலியைச் சோதிக்கும் விருப்புடையேன் ; அரசரை அதஞ் செய்த தோள்களிலே போர்செய்யும் தினவும் சிறிதுள்ளேன் ; இதுவே யான் வந்த காரணம் ' என்றான்.

அப்போது தசரதன், ' உலக முழுவதையும் வென்று உமக்கென ஒன்றும் வைத்துக் கொள்ளாமல் ஒரு முனிவர்க்கு உதவிய உதாரசீலரே ! திரிமூர்த்தியரே உமக்கு எதிரல்லர் ! சிறு மனிதர் ஒரு பொருளோ ! யாங்கள் உமக்குச் செய்தற்குரிய வேறுபாடுகளை இறுமாப்பினாற் செய்ய மறந்ததுண்டோ ? எங்களைக் கோபித்தலை ஒழிவீராக ! அரசரைச் சீறுதலை அருளால் நெடுங் காலமாக அகற்றியிருந்தீர். இப்போது எங்களை முனிதல் முறையோ ! என் மகன் உயிர் நீங்குமேல், யான் என் சுற்றத் தாரனைவரோடும் இறப்பேன் ! என் குலத்தை முற்றும் அற முடித்து விடாதீர் ! இதுவே, உம்பால், யான் இரப்பது' என்று காலில் வீழ்ந்து தாழ்ந்து வேண்டினான்.

தன் காலில் விழுந்த தசரதனை இகழ்ந்து, பரசுராமன் இராமன்பாற் செல்ல, அவன் செல்லும் நோக்கம் கொல்லும் நோக்கமே யென்று தெரிந்து, தன்னாற் செய்யக் கூடிய தொன்று மின்மையை நினைந்து, தசரதன் தளர்ந்து அச்சம் மீக்கூர்ந்து அறிவு சோர்ந்தான்.

### பரசுராமன் கருவ பங்கம்

பரசுராமன், மானமுடைய இராசாதிராசன் மானம் விடுத்துக்காலில் விழுந்து மதிமயங்கிக் கிடத்தலைத் தான் மதியாமையானது, பின்பு அவன் நிலையைத் தான் அடையும் விதியை விலக்காமையாமென்று உணரும் அறிவில்லானாய், இராமனை நோக்கி ' நீ ஒடித்த வில் ஊனமுற்ற வில். அதன் வரலாற்றைக் கேள்! சூரியனைப்போல் ஒளியும் மேருவைப்போல் வலியும் உடைய இரண்டு விற்களை விசுவகருமன் நிருமித்தான். ஒன்றைச் சிவனும் மற்றொன்றை விட்டுணுவும் கைக்கொண்டார்கள். இரண்டில் எது அதிக வலியுடையதென்று இமையவர் பிரமாவை வினவினர். அவன் எவ்வில் வல்வில்லென்று தெரிவது வியாசமாக, இருவரையும் போர்மூட்டி விட்டான். போர் மத்தியில் சிவன் வில் முறிந்தது. அந்த ஊனவில் நீ ஒடித்த வில். விட்டுணு தன் வெற்றிபெற்ற வில்லை இருசிக இருடிக்குக் கொடுக்க, அவன் என் பிதாவுக்குக் கொடுக்க அவன் எனக்குக் கொடுத்தான். இதை நீ வளைத்தால், உன்னை ஒப்பார் இல்லை ; நானும் குறித்த போரை நிறுத்துவேன்.

இன்னும் கேள். நான் இருபத்தொரு தலை முறை அரசரைக் கொன்று, அவர்கள் இரத்த நீரில் என் பிதாவுக்குப் பிதிரர் கடன் கழித்து, என் கோபத்தை அடக்கினேன். யான் செயித்த உல கனைத்தையும் ஒரு முனிவனுக்குக் கொடுத்துவிட்டுத் துறவியாய், ஒரு மலையில் தவஞ்செய்து கொண்டிருந்தேன். நீ வில்லொடித்த ஓசை கேட்டுச் சீறி வந்தேன். இந்த வில்லை வளைக்க வல்லை யேல், வளைப்பாயாக!' என்றான்.

இராமன் அவன் கூறியதைக் கேட்டுக் குறுஞ்சிரிப்புக் கொண்டு, வில்லை வாங்கி வளைத்து, 'நீர், அரசரை யெல்லாம் கொன்ற கொலைஞரானாலும், இருடிபுத்திரராயும் தவசியாயுமிருத் தலால், கொல்லற் குரியீரல்லீர். இந்த வில்லில் தொடுத்த அம்பும் வீண்போவதன்று. இதற்கு இலக்கு யாது? விரைவாய் உரை யீர்!' என்றான்.

பரசுராமன், 'கோபியாதீர்! நீர் விட்டுணுவே! உமது அம்பு பழுதுறாமல் அதற்கு என் தவத்தை யெல்லாம் இலக்காக்குதிர்!' என்றான். உடனே இராமன் அம்பைக் கைந் நெகிழ விட, அது பரசுராமன் தவ முழுவதையும் வாரி மீண்டது. பரசுராமன், 'புண்ணியரே!' நீர் எண்ணும் காரியங்கள் இனிது நிறைவேறுக. விடை தருக'! என்று தொழுது போனான். அவன் தருக்கும் தவமும் அழிந்து போனபின், இராமன், ஐம்பொறிகளின் உணர்ச்சிகளும் அடங்கி உள்ளம் ஒடுங்கி உயிர் போனான் போலக் கிடந்த தசரதன் முன்னே போய்த் தொழுதான்.

**தசரதன் இன்பமுறுதல்**

**வெளிப்படு முணர்வினன் விழுமம் நீங்கியே**
**தளிர்ப்புறு மதகரித் தானை யானிடைக்**
**குளிப்புறுந் துயர்க்கடற் கோடு கண்டவன்**
**களிப்பெனுங் கரையிலாக் கடலு ளாழ்ந்தனன் (198)**

**கொண்டுகூட்டு :** வெளிப்படும் உணர்வினன், விழுமம் நீங்கித் தளிர்ப்புறும் மதகரித் தானையான், இடையில் குளிப்புறும் துயர்க் கடற் கோடு கண்டவன், களிப்பெனும் கரையில்லாக் கடலுள் ஆழ்ந்தனன்.

**பொருள் :** அப்போது, உள்ளடங்கியிருந்த உணர்வு சிறிது வெளிப்படலாகி அரைக்கண் திறக்கப்பெற்றிருந்த தசரதன், கொல்லப்பட்டுப் போவானென் றெண்ணியிருந்த இராமன் தொழுதலைக் காணவே, உணர்வு முழுதும் வெளிப்பட்டவனாய்த் துன்பம் நீங்கி, இன்பம் ஓங்கலுற்றவனாகி, பரசுராமன் வந்த தற்கும் போனதற்கும் இடையே தான் முழுகிக்கிடந்த துன்பக்

கடலின் கரையைக் கண்டான். கண்டவன் அதில் ஏறின உடனே கரையற்ற களிப்புக் கடலுள் வீழ்ந்து ஆழ்ந்தவனுனன்.

பரசுராமனுல் நேர்ந்த துன்பத்தால் தசரதனுக்கு உள்ளடங்கியிருந்த உணர்வு இராமன் தொழுதலைக் காண வெளிப்பட்டது. உணர்வு வெளி வரப்பெற்ற தசரதன் பரசுராமன் இல்லாததையும் இராமன் சேமமாயிருப் பதையும் கண்டு துன்பம் நீங்கினுன்; பின்பு, பரசுராமன் தோற்றத்தைக் கேட்டு அளவற்ற இன்பம் அடைந்தான். இந் நிகழ்ச்சிகளை மிக இனிமை யாகவும் சுருக்கமாகவும் முன் னிரண்டடிகளிற் கூறினர். கூறினவர், கூறினதையே, பின் னிரண்டடிகளில், வேருெரு விதமாக, விசேட இன்பத் துடன் வியப்பும் விளையக் கூறுவாராய், 'தசரதன், பரசுராமன் வரவே துன்பக் கடலில் வீழ்ந்து, அவன் போனது தெரியு மளவும் அதில் மூழ்கிக் கிடந்து, அவன் போனது தெரியவே, அத் துன்பக் கடலினின்று கரையேறி, அவன் இராமனுல் வெல்லப்பட்டதை அறிந்து இன்பக்கடலில் மூழ்கினுன்,' என்ருர். என்றவர், தசரதன் பட்ட துன்பம் முடிவுற்றது போலன்றி அவன் உற்ற இன்பம் முடிவற்ற தென்பதைக் குறிக்கத் துயர்க் கடற்குக் கரை யுண்மையும் களிப்புக் கடற்குக் கரை யின்மையும் கூறிய அதிமதி நுட்பம் அதிசயமானது. (198)

### எல்லோரும் அயோத்தி அடைதல்

பரசுராமன் வில்லை வளைத்து அவனுக்குப் பழியை விளைத்த இராமனைத் தசரதன் ஆலிங்கனம் செய்து உச்சி மோந்து ஆனந்தக் கண்ணீ ராட்டினுன்; 'இவன் விர கறியாத இளம் பிராயத்திற் செய்த இந்த ஆண்மைத் தொழில், மூன்றுலகத் தோரும் ஒருங்கு சேர்ந்தும் முடிக்க முடியாதது. நல்வினை செய்த எனக்கு இன்பமும் தீவினை செய்த பரசுராமனுக்குத் துன்பமும் தந்த இந்த இளங் குமரன் இருவினை செய்தோர்க்கு அவரவர் செய்த வினைக்குத் தக்க பயன்களை இம்மை மறுமை யிரண்டிலும் ஈயும் இறைவன். இஃது உண்மை' என்ருன்.

அப்போது தேவர்கள் பூ மழை பொழிந்தார்கள். அவர் களுள் வருணனிடத்து, இராமன், 'இந்த வில்லைக் காப்பாற்றி வைப்பாயாக' என்று சொல்லிக் கொடுத்துத் தசரதனுதியருடன் அயோத்தியை அடைந்தான்.

### பரத சத்துருக்கனர் கேகயம் போதல்

பின்பு, சிலநாள் சென்றபின், தசரதன், பரதனை நோக்கி 'உன் பாட்டனுர் உன்னைக் காணும் விருப்புடையார். நீ கேகய நாட்டுக்கு ஏகுவாயாக' என்ருன். பரதன், பிதாவைத் தொழுது சென்று, இராமனை வணங்கி, அவனை அன்றி ஆவி வேறில்லாத வனுதலால், உயிரைப் பிரிந்து உடல் சென்ருற் போலச் சென்று சத்துருக்கனுடன் கேகய தேயத்தை அடைந்தான்.

பாலகாண்டம் முற்றுப்பெற்றது.

# பாட்டு முதற்குறிப்பகராதி

[எண்—பக்கவெண்]

கம்பராமாயண சாரம்

# அயோத்தியா காண்டம்

அயோத்தியில் நிகழ்ந்த செய்திகளாகிய, தசரதன் இராமனை நாடாளும்படி கற்பித்தலையும், கைகேயி காடேகும்படி விகற்பித்தலையும் கூறுவது

—◆═✡═◆—

## 1. மந்திரப் படலம்



தசரதன், குருமார் மந்திரிமார்களோடு, இராமனுக்கு முடி சூட்டுவதைப் பற்றி ஆலோசித்தலைக் கூறுவது *

---

**கடவுள் வணக்கம்**

**வானின் றிழிந்து வரம்பிகந்த மாபூ தத்தின் வைப்பெங்கும்**
**ஊனு முயிரு முணர்வும்போ லுள்ளும் புறத்து முளனென்ப**
**கூனுஞ் சிறிய கோத்தாயுங் கொடுமை யிழைப்பக் கோறுறந்து**
**கானுங் கடலுங் கடந்திமையோ ரிடுக்கண் காத்த கழல்**
**[வேந்தை**

**கொண்டுகூட்டு † :** கூனும் சிறிய கோத்தாயும் கொடுமை இழைப்ப, கோல் துறந்து, கானும் கடலும் கடந்து, இமையோர் இடுக்கண் காத்த கழல் வேந்தை, (மேலோர்,) 'வான் நின்று இழிந்து, வரம்பு இகந்த மாபூதத்தின் வைப்பு எங்கும், ஊனும் உயிரும் உணர்வும்போல், உள்ளும் புறத்தும் உளன் ' என்ப.

**பொருள் :** கூனியாகிய மந்தரையும் சிறிய தாயாகிய கைகேயியும் கொடுமை செய்ய, அதனால் அரசைக் கைவிட்டுக் காட்டையும் கடலையும் தாண்டி(ச் சென்று, இராவணாதி இராக்கதரை அழித்து)த் தேவர் துன்பத்தை நீக்கிக் காத்த இராமபிரானைப்—பரமாகாயத்தினின்று தோன்றி எல்லை கடந்த நிலம், நீர், தீ, வாயு, ஆகாயமாகிய ஐம் பெரும் பூதங்களில் எவ்விடத்தும், உடம்பும், உயிரும், உணர்வும் போல, உள்ளேயும் புறத்தேயும் இருக்கின்றவனென்று கூறுவர் (மேலோர்).

---

* மந்திரம் - ஆலோசனை.

† அந்நுவயம் - உரை முறை (Prose order).

3234—2

வான் - ஆகாயம். வான் நின்று இழிந்த பூதமென்பதில் 'பூதம்' வானை யுள்ளிட்ட பூதங்க ளனைத்தையும் புலப்படுத்துதலால், 'வான்' என்பது, சாதாரண ஆகாயத்துக்கு மேற்பட்ட பரமாகாய மெனப் பொருள் கொள்ள நின்றது. இழிந்து - இறங்கி; தோன்றி யென்ற பொருள் குறித்தது. இகந்த - கடந்த. வைப்பு - இடம். ஊன், கூன், கோல் என்பவை, ஆகுபெயராய், முறையே உடம்பு, கூனி, அரசு என்ற பொருள்களைப் புலப்படுத்தின. கோ - அரசன். கோத்தாய் - அரசர் குலத்தினளாகிய தாய்; இளவரசனான பரதன் தாய். சிறிய - இளைய; அற்ப குணமுள்ள. இழைப்ப - செய்ய. கோல் - செங்கோல். துறந்து - விட்டு. அரசாட்சியை அகங் குளிர்ந்து தானே நீக்கலால் 'கோல் இழந்து' என்னாது 'கோல் துறந்து' என்றார். இடுக்கண் - துன்பம். உருக்காட்டு படலம், '21-ம் பாட்டில், சாகுதல் அடையாமற் காப்பவரைச் 'சாதல் காப்பவர்' என்றது போல, 'இடுக்கண் காத்த' என்றார். காத்தல் - தடுத்தல். (21-ம் குறள் உரை).

இராமன் வாகனமின்றிப் பாதசாரியாய்க் காட்டை நடந்து கடந்த தன்றித் தான் கட்டுவித்த சேதுமீது நடந்து கடலையும் கடந்தனன் என்பது விளங்கக் 'கானும் கடலும் கடந்த கழல்' என்றார். (கழல் - கால்.) இராவணாதி யிராக்கதரை வென்ற 'வெற்றித் திறலை விளக்கவே யணிந்த வீரக் கழலை யுடையான் என்பது படக் "கழல் வேந்தை"' என்றாரென லுமாம்.—திரு. ச. இப்பொருளில் கழல் - வீரகண்டை - வீரத்தைக் குறிக்கக் காலில் அணியும் ஓர் ஆபரணம்.

'உள்ளும் புறத்தும் உளன்' என்பதை உள்ளும் உளன், புறத்தும் உளன் என அந்வயித்துப் பிண்டமாகிய உடலுக்குள்ளே உயிரும், உயிருக்குள்ளே உணர்வும் இருத்தல் போல, அண்டமாகிய உடலுக்குள்ளே உயிரும் அவ்வுயிருக்குள்ளே அறிவுமாய் அண்டத்தினுள்ளே யிருக்கின்றவன், அண்டத்தின் வெளியேயும் இருக்கின்றவன் என்று பொருள் செய்யலாம். பலமில்லாமையால் 'அபலைகள்' எனப்பட்ட பெண்கள் செயலால் அரசிழந்து காடே கதியாகப் போய், எல்லாரும் இரக்கப்படும்படி எளியவன் ஆனவனே, தேவர்களையும் செயித்த அதி பலசாலிகளான இராக்கதரை வென்ற வலியவனுமானான் என்றதனால், இராமபிரான், தான் பலவீனரான பெண்கள் கொடுமைக் குட்பட்டுத் தேவர்களைப் பலசாலிகளான இராக்கதர் கொடுமைக்குட்படாமற் காத்து, அறத்தை நிலைநிறுத்த, எளியார்க்கு எளியனும் வலியார்க்கு வலியனும் ஆனான் என்றார். (1)

தசரதன், ஆலோசனை மண்டபத்தை அடைந்து, தனியாயிருந்துகொண்டு, ஆலோசனைக் குரியவர்களை அழைத்துவரும்படி தூதரை ஏவ, அவர்கள் அழைக்க, மும்மூர்த்தியரோடு, நான்காம் மூர்த்தி யென்று எண்ணத்தக்க வசிட்டன் வந்தான்: மந்திரிகளும் வந்தார்கள்.

### மந்திரிகளின் சிறந்த குணங்கள்

**உற்றது கொண்டு மேல்வந் துறுபொரு ளுணருங் கோளார்**
**மற்றது வினையின் வந்த தாயினு மாற்ற லாற்றும்**
**பெற்றியர் பிறப்பின் மேன்மைப் பெரியவ ரரிய நூலுங்**
**கற்றவர் மான நோக்கிற் கவரிமா வனைய நீரார் (2)**

**கொண்டுகூட்டு:** (மந்திரிகள்) உற்றது கொண்டு, மேல் வந்து உறு பொருள் (ஊகித்து) உணரும் கோளார்; அது வினையின் வந்தது ஆயினும், (அதனை) மாற்றல் ஆற்றும் பெற்றியர்; பிறப்பின் மேன்மைப் பெரியவர்; அரிய நூல் கற்றவர்; மானம் நோக்கில், கவரிமா அனைய நீரார்.

**பொருள்:** (அந்த மந்திரிகள்,) நேர்ந்த காரியத்தைக் கொண்டு இனிமேல் நேருங் காரியத்தை ஊகித்து அறியும் மதி வன்மை உடையவர்; நேர்ந்த காரியம் வினைப் பயனாக நேர்ந்த தானாலும், அதனை மாற்றுதல் செய்யும் தன்மையினர்; நல்ல குடிப் பிறப்பின் சிறப்பினையுடைய பெருந்தகையாளர்; கற்க வேண்டிய நூல்களைக் கற்றவர்; மானத்தை (உயிரினும் சிறந்த தாக)க் காத்தலை நோக்கினால், (ஒரு மயிர் நீங்கினும் உயிர் வாழாத) கவரிமானை ஒத்த தன்மையுடையவர்;

உற்றது - நேர்ந்தது - நேர்ந்த காரியம். உறு பொருள் - (அது காரணமாக இனிமேல்) நேருங் காரியம். கோள் - வலி, வன்மை. மற்றது: மற்று - அசை; 'அது' 'உற்றது' என்பதைச் சுட்டியது. வினையின் வந்தது - முன் செய்த வினையின் பயனாக வந்தது. ஆற்றும் - செய்யும். பெற்றி - தன்மை. நூலும்: 'உம்' இசை நிறை. 'தனது ஊழ் வினைக்கு ஏற்ப வந்த காலனையும் கண்ணுதற் கடவுளாற் கடிவித்த காளையாகிய மார்க்கண்டேயனைப் போல் ஊழையும் உப்பக்கம் காண வல்லா ரென்பது தோன்ற "வினையின் வந்ததாயினும் மாற்றல் ஆற்றும் பெற்றியர்" என்றார்.'

மதிநுட்பம் நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்நிற் பவை
ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்
மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்

என்ற மூன்று குறட் கருத்துக்கள் இப்பாட்டில் இனிதெடுத் தாளப்பட் டிருத்தல் காண்க. (2)

குறித்த காரியத்தை முடித்தற்கு ஏற்ற காலம், இடம், சாதனங்களைத் தாம் கற்ற நூலைத் துணையாகக் கொண்டு

ஆராய்ந்து தெரிந்து அறநெறி முறையே அக் காரியத்தை முடிப்பவர் ; தமக்கென ஒன்றையும் நாடாமல், தம் தலைவனுக்கே புகழும் புண்ணியமும் பொருந்தும்படி புரிபவர் ;

**தம்முயிர்க் குறுதி யெண்ணார் தலைமகன் வெகுண்ட போதும்**
**வெம்மையைத் தாங்கி நீதி விடாதுநின் றுரைக்கும் வீரர்**
**செம்மையிற் றிறம்பல் செல்லாத் தேற்றத்தார் தெரியுங் காலம்**
**மும்மையு முணர வல்லா ரொருமையே மொழியு நீரார் (3)**

கொண்டுகூட்டு : தலைமகன் வெகுண்டபோதும், தம் உயிர்க்கு உறுதி எண்ணுதவராய், (அவ்) வெம்மையைத் தாங்கி, நின்று, நீதிவிடாது உரைக்கும் வீரர் ; செம்மையில் திறம்பல் செல்லாத் தேற்றத்தார் ; தெரியும் காலம் மும்மையும் உணர வல்லார் ; ஒருமையே மொழியும் நீரார் ;

பொருள் : தலைவன் கோபித்தாலும் (அவன் கோபத்தினால்) தம் உயிருக்கு(க் கேடு நேராமல், அக் கோபத்தினின்று தப்பிக் கொள்ளும் பொருட்டு விலகும்) நன்மையைக் கருதாராய், அவன் கோப வெம்மையைத் தாங்கி விலகாமல் நின்று, சொல்ல வேண்டிய நீதியை (ஒரு முறை சொன்ன அளவில் ஏற்றுக்கொள்ள வில்லையானால், பல முறை) விடாது சொல்லும் துணிவுடைய வீரர் ; நடுவுநிலையினின்றும் பிறழாத உறுதியுடையவர் ; தெரிய வேண்டிய திரிகால சம்பவங்களையும் தெரிய வல்லவர் ; (தாம் பலபட ஆராய்ந்து துணிந்த முடிபை ஆராய்ந்தவாறே பலபடக் கூறினால், மயக்கத்துக் கிடமா மென்று அந்த முடிபு) ஒன்றையே தலைவனுக்குச் சொல்லும் தன்மையினர் ;

உறுதி - நன்மை ; உறுவது - சம்பவிப்பது—ச. அ. இப் பொருள் பற்றித் ' தம்முயிர்க் குறுதி யெண்ணார் ' என்பதற்குத், 'தலைவன் கோபத்தால் தம் உயிர்க்குக் கேடு சம்பவிப்பதைப் பொருட்படுத்தாதவராய் ' என்றும் பொருள் கொள்ளலாம். தலைமகன் - தலைவன் - அரசன். ' தாங்கி நின்று நீதி விடாது உரைக்கும் ' எனக் கூட்டுக. செம்மை - நடுவு நிலைமை ; ஒழுக்கம் - முறைமை. திறம்பல் - தவறுதல் - மாறுபடல். செல்லா - அடையாத—ச. அ. சிந்தாமணி 2506-ம் பாட்டில் ' இமையான்' என்பது ' இமைத்தல் செல்லான் ' என வரல் போல, ' திறம்பா ' என்பது ' திறம்பல் செல்லா ' என வந்தது. மும்மை - மூன்று ; எண்ணின்மேல் நின்றது—(' இருமைவகை ' என்ற குறள் உரை). ஒருமை - ஒன்று (ஷெ).

' ஒருமையே மொழியும் நீரார் ' என்பதற்கு, மந்திரிகள் பலராயினும், ஒவ்வொரு காரியத்திலும் உண்மையான முடிபு ஒன்றே யாதலால், அம் முடிபை எல்லாரும் கண்டுபிடித்து, அவ்வொரு முடிபையே ஒருவர் போல எல்லாரும் ஒருமைப்பட்டுச் சொல்லும் தன்மையினு ரென்றும்(—திரு. ச.)

ஒருகாற் சொன்னதை மறுகால் மாற்ருத ஒருசொல்லாள ரென்றும்(—வை. மு. கோ.) பொருள் கூறலாம்.

தலைவனுக்கு, இவை நல்லவை, இவை தீயவையென நாடியறிந்து, தீயவை வராமல் விலக்குபவர்; நோய் வந்த காலத்து வயித்தியர் உதவுவது போல, தீங்கு வந்த காலத்து அவனுக்கு உதவுபவர்; தீவினைப் பயன் நேர்ந்தால், அதனை மாற்றுதற்கு அவனுடைய நல்வினைப்பயன் போல உதவும் ஆலோசனையுடையவர்.

## தசரதன் பேச்சு

அந்த மந்திரிகளை நோக்கித் தசரதன் கூறுவான்: 'உயிர்க்கு உறுதி தரும் ஒரு செய்தி என் உள்ளத்தில் உள்ளது. அதனை உரைக்கின்றேன் கேளுங்கள்; எனது சூரிய குலத்து மன்னர் முறை பிறழாது தொன்றுதொட்டு அரசு செய்த பூமியை, கன்னியர் கற்பைக் காத்தல் போல, உங்கள் உதவி கொண்டு அறுபதினுயிரம் ஆண்டு காத்து மன்னுயிர்க்கு நன்மை செய்த யான், என்னுயிர்க்கு நன்மை செய்ய எண்ணுகின்றேன். ஆதிசேடனும் அட்டதிக் கயங்களும் அட்டகுல பர்வதங்களும் சேர்ந்து சுமத்தற்கரிய பூபாரத்தை யானொருவன் நெடுங்காலம் தாங்கி அலுத்தேன்; இனித் தாங்க இயலாதவனு யிருக்கின்றேன்.

**வெள்ளநீ ருலகினில் விண்ணி னுகரில்**
**தள்ளரும் பகையெலாந் தவிர்த்து நின்றயான்**
**கள்ளரிற் கரந்துறை காம மாதியாம்**
**உள்ளுறை பகைஞருக் கொதுங்கி வாழ்வெனே (4)**

**கொண்டுகூட்டு:** 'வெள்ளம் நீர் உலகினில் விண் உலகில் நாகர் உலகில் தள்(ளுதற்கு) அரும் பகை எல்லாம் தவிர்த்து நின்ற யான், கள்ளரின் கரந்து உறை காமம் ஆதியாம் உள் உறை பகைஞருக்கு ஒதுங்கி வாழ்வெனே?

**பொருள்:** 'பூதலத்திலும் மீதலத்திலும் பாதலத்திலும் இருந்த ஒழித்தற் கரிய பகைவ ரெல்லாரையும் ஒழித்து வெற்றி பெற்று நிற்கின்ற யான், கள்வரைப் போல ஒளித்து வாழ்கின்ற காமம் முதலான உட்பகைவர்க்கு ஒதுங்கி வாழ்வேனே?

வெள்ளம் - கடல். வெள்ள நீர் உலகு - கடல்நீர் சூழ்ந்த பூமி. 'நாகர்' நாகர் வாழும் பாதாள உலகத்தைக் குறித்தது. கள்ளரின் - கள்ளரைப் போல. மண்ணுலகத்தை 'வெள்ள நீருலகு' என்றது பின் வரும் விண்ணுலகமும் நாகர் உலகமும் அவ்வாறு கடல் சூழ்ந்தன அல்ல

என்பதை உணர்த்தியது. 'பகைவ ரெல்லாரையும்' எனற்குரிய உயர் திணைப் பொருளைப் 'பகையெலாம்' என அஃறிணைச் சொல்லாலும், 'பகைகளுக்கு' எனற்குரிய அஃறிணைப் பொருளைப் 'பகைஞருக்கு' என உயர்திணைச் சொல்லாலும் பொருத்தமாக மாறிக்கூறிய நயம் காணத் தக்கது.

'என் நாட்டுக்கு வெளியே, வெளிப்படையாய் வாழ்ந்த பெருஞ் சேனை பலம் படைத்திருந்த, மாற்றரசரான பல புறப் பகைவரை அஞ்சி யொதுங் காமல் எதிர்த்து வெற்றிபெற்றிருக்கின்ற யான், என் நாட்டுக்குள்ளே ஒளித்து வாழ்கின்ற சிறுகூட்டப் பலமேயுள்ள சில திருடர் போல, என் அகத்துக்குள்ளே ஒளித்து வாழ்கின்ற காமக் குரோத லோப மோக மத மாற்சரியங்களான சில உட்பகைவருக்கு அஞ்சி ஒதுங்கியிருந்து உயிர் வாழ்வேனோ? வாழேன்' என்று பொருள் இனிது விரிதல் காண்க. (4)

'சம்பராசுரன் முதலிய பகை அசுரர் ஏறிய தேர் பத்தை வென்ற எனக்கு மனப் பேய் ஏறிய இந்திரியத் தேர் ஐந்தை வெல்லுதல் அருமையாமோ? 'பிறவிக் கடலைக் கடத்தற்குத் துறவுப் புணையே* துணையாம்.

ஒரு பறவைக்கு வலப்பக்கச் சிறகும் இடப்பக்கச் சிறகும் இருத்தல் போலச் சீவனுக்குத் துறவு ஞானம் என்னும் இரு சிறை† யுண்டானால், பிறவி யென்னும் ஒரு சிறையினின்று தப்பி நீங்கலாம். என் மனம் துன்பந் தரும் நாட்டரசாட்சியை வெறுத்து இன்பந் தரும் வீட்டரசாட்சியிற் பதிந்தது. இவ் வுலகத்தை ஆளுதற்கு உதவிய நீங்கள் அவ் வுலகத்தை ஆளு தற்கும் உதவ வேண்டும்.

**கச்சையங் கடகரிக் கழுத்தின் கண்ணுறப்**
**பிச்சமுங் கவிகையும் பெய்யு மின்னிழல்**
**நிச்சய மன்றெனி னெடிது நாளுண்ட**
**எச்சிலை நுகருவ தின்ப மாகுமோ** (5)

**கொண்டுகூட்டு :** 'கச்சை அம் கடகரிக் கழுத்தின்கண் உற, பிச்சமும் கவிகையும் பெய்யும் இன் நிழல் நிச்சயம் அன்று; எ(ன்)னின் நெடிது நாள் உண்ட எச்சிலை நுகருவது இன்பம் ஆகுமோ?

**பொருள் :** 'யானைக் கழுத்தின்மேல் பொருந்த மயிற்பீலிக் குடையும் வெண்கொற்றக் குடையும் இடுகின்ற நிழலானது (எனவே, அந்த நிழலின் கீழ் அந்த யானைப் பிடரின்மேல் வீற்றிருந்து பவனி வரும் அரசச் செல்வமானது) நிலையான

* புணை - தெப்பம். † சிறை - சிறகு; சிறைச்சாலை

தன்று; என்றால் பல நாளும் நுகரப்பட்ட எச்சிலை - இராச போகங்களை - நுகருவது இன்பமாமோ? ஆகாது.

கச்சை - யானையின் கழுத்திற் கட்டும் கயிறு. பிச்சம் - மயிற்றோகைக் குடை. பெய்தல் - இடுதல். நிச்சயம் அன்று - உறுதியான தன்று - நிலையான தன்று. எனின் - என்னின் - என்றால். இதற்கு 'என்ருல்' என்று முந்திய உரைகாரர்கள் உரை செய்தனர்.—சோ. சு., திரு. ச. (5)

'மக்கள் இல்லாமையால் இராச்சிய பாரத்தை நெடுங் காலம் சுமந்து நொந்தேன். என் நோவை நீக்க இராமன் வந்தனன். இனி அவன் அப்பாரத்தைத் தாங்க வைத்து, நான் தப்பி ஈடேறும்படி துறவு பூண உறுதி செய்தேன்.

' "வீரர்க்குள் வீரனான இராமன் பிதா, போர்க்களத்தில் இறந்து வீர சுவர்க்க மடைந்தானல்லன். செய்யவேண்டிய யாகாதி தருமங்க ளெல்லாம் செய்து முடித்து மூப்படைந்த பின் செய்யற் பாலதாக எஞ்சி நின்ற துறவறத்தை மேற்கொண்டா னல்லன்" என்ற பழிச்சொல் உண்டாகியது. இனியும் துறவே னெனில், "முத்தி யடைதற்குச் சாதனமாகிய மனிதப் பிறப்பிற் பிறந்த பயனை அடைந்திலன்" என்ற தீச்சொல்லன்றி நற் சொல் பிறவாது.

'இராமன் பிறந்த திருநாட் பண்டிகையையும் சீதாதேவி யாகிய சீதேவியை மணந்த திருநாள் விழாவையும் கண்டு மகிழ்ந்த யான், அவன் பூதேவியை மணக்கும் திருநாள் மகோற்சவத்தையும் கண்டு மகிழ விரும்புகிறேன். இராமனை அடையப் பூதேவி செய்த தவத்தின் பயனை அவள் அடையாமல் தாமதப்படுத்துவது தருமமன்று. ஆதலால் அரசாட்சியை இராமனிடம் கொடுத்து நான் தவம் செய்ய வனத்துக்குச் செல்லுங் கருத்துடையேன். உம் கருத்து யாது?'

எல்லாரும் மயங்குதல்

**திரண்ட தோளின னிப்படிச் செப்பலுஞ் சிந்தை**
**புரண்டு மீதிடப் பொங்கிய வுவகைய ராங்கே**
**வெருண்டு மன்னவன் பிரிவெனும் விம்முறு நிலையால்**
**இரண்டு கன்றினுக் கிரங்குமோ ராவென விருந்தார் (6)**

கொண்டுகூட்டு: திரண்ட தோளினன் இப்படி செப்பலும், சிந்தை புரண்டு, மீதிட, பொங்கிய உவகையர் (ஆய மந்திரிகள்) ஆங்கே, மன்னவன் பிரிவு என்னும் விம்முறு நிலையால் வெருண்டு, இரண்டு கன்றினுக்கு இரங்கும் ஓர் ஆ என இருந்தார்.

**பொருள் :** தசரதன் இவ்வாறு கூற, ராமன் முடிசூடும் சந்தோடத்தினுல் மனத் தடத்தில் அடங்காமல் கரை புரண்டு ததும்பிப் பொங்கிய உவகைப் பெருக்கு உடையவராகிய மந்திரி கள், அதே சமயத்திலே தசரதன் பிரிவென்னும் சோக தாபத்தி ஞல் அவ் உவகைப் பெருக்கு வற்றி யொழிய மதிமயங்கி, வெவ்வேறு திசைநோக்கி ஓடுகின்ற இரட்டையாய்ப் பிறந்த தன் இரு கன்றுகளுக்கு (அன்புகூர்ந்து தான் எந்தக் கன்றைப் பின் பற்றிச் சென்று அடைவதென்று துணிய மாட்டாமல் திகைத்து நின்று) வருந்தும் ஒரு பசுப்போல (மறுமொழி கூற வாய்திறக்க மாட்டாமல் வாளா) இருந்தார்கள்.

## வசிட்டன் பேச்சு

ஆயினும், அவர்கள் தசரதனுக்குத் துறவல்லது வேறு உறுதி யில்லை யென்பதனுலும் இராமனைக்காட்டிலும் சிறந்த மன்னவ ரில்லை யென்பதனுலும் தசரதன் கருத்துக்கு மன மிசைந்தார்கள். அவர்கள் சம்மதித்த குறிப்பையும் தசரதன் கருத்தையும் குடிகளின் நன்மையையும் தெரிந்து வசிட்டன் கூறுவான் :

'தசரத, நீ தவம் செய்யக் கருதியது தக்கதே. இராமனைப் பெற்றதனுல், நீ உனது குல மன்னவ ரெல்லாரினும் சிறப் புற்ருய். பூதேவி உன்னைப் பிரிந்ததனுல் ஆதரவற்றவ ளாயினு ளல்ல ளென்று சொல்லும்படி அவன் அரசு செய்வான். அவன், திரிமூர்த்திகளும் ஒருமூர்த்தியா யவதரித்தவன் : சீதேவியும் பூதேவியும் பிராணநாதனுகக் கருதுகின்றவன். அவனை உன் உயிர்க்கு நல்லவனென்று சொல்லுதல் பெருமை யன்று ; உன் உயிர்க்குப் போல எல்லார் உயிர்களுக்கும் நல்லவன்.

'அப்படி நல்லவனுகிய அவனுடைய அன்புடைமையை இனி நான் என்னென்று சொல்வது ! தினமும் அவன் திரு நாமத்தை ஓதலால் எல்லா இடையூறுகளும் நீங்குகின்ற பயன் கருதி அவனை அந்தணர் முதலிய அனைவரும் தங்கள் தங்கள் நல்வினைப் பயனென்று கருதுகின்ருர்கள். அவனைக் கற்ருேரும் மற்ருேரும் உண்ணும் நீரினும் உயிரினும் அதிகமாக விரும்பு கின்ருர்கள். மூன்றுலகத்தினும் அவனினும் சிறந்தவ ரில்லை. ஆதலால், அவனை அரசுபுரியச் செய்து நீ துறவு புரிதலினும் சிறந்தது வேறில்லை.'

### தசரதன் பெருமகிழ்ச்சி யடைதல்

**மற்ற வன்சொன்ன வாசகங் கேட்டலு மகனைப்**
**பெற்ற வன்றினும் பிஞ்ஞகன் பிடித்தவப் பெருவில்**
**இற்ற வன்றினு மெறிமழு வாளவ னிழுக்கம்**
**உற்ற வன்றினும் பெரியதோ ருவகைய னானான் (7)**

**கொண்டுகூட்டு :** அவன் சொன்ன வாசகம் கேட்டலும், மகனைப் பெற்ற அன்றினும், பிஞ்ஞகன் பிடித்த அப் பெருவில் இற்ற அன்றினும், எறிமழுவாளவன் இழுக்கம் உற்ற அன்றினும், பெரியதான ஓர் உவகை யன் ஆனான்.

**பொருள் :** (தசரதன், மேற்கூறியவாறு) வசிட்டன் சொன்ன வாசகத்தைக் கேட்டவுடனே, நெடுங்காலம் பிள்ளை யில்லாதிருந்த தான் இராமனைப் பெற்ற அன்றையினும், வேறெ வரும் வளைக்க முடியாதிருந்த சிவன் வில் முறிந்த அன்றை யினும், இருபத்தொரு தலைமுறை அரசரை நாசம் செய்த பரசு ராமன் தோல்வியடைந்த அன்றையினும் அடைந்த மகிழ்ச்சி களினும் அதிகமான மகிழ்ச்சி யுடையவ னானான்.

மற்று : அசை. பிஞ்ஞகன் - சிவன். இறுதல் - ஒடிதல். இற்ற - ஒடிந்த. எறிதல் - கொல்லல். மழு - கோடரி. வாள் - ஆயுதம். எறி மழுவாளவன்-கொல்லுகின்ற ஆயுதத்தையுடைய பரசுராமன். பரசு, மழு, கோடரி யென்பன ஒருபொருட் சொற்கள். இராமனை முடிசூட்டுதற்கு எல்லாரும் ஏகமனதாக இசைந்ததனால், தசரதனுக்கு உண்டாகிய கழி பேருவகையைக் கூறுமுகத்தால், இராமன் பிறக்குமுன் நிகழ்ந்த நனி யினிய நிகழ்ச்சிக ளனைத்திலும் மேலானது இராமன் பிறந்த தென்றும், அதனினும் மிக்கது அவன் சிவன் வில்லை முறித்ததென்றும், அதனினும் உயர்ந்தது அவன் பரசுராமனது வில்லை வளைத்த தென்றும், வரிசையாக ஒன்றுக்கொன்று ஏற்றமாகத் தசரதனது நீண்ட ஆயுட் காலத்தில் நேர்ந்த அசாதாரண அதி சந்தோட சம்பவங்களைச் சூழ்ந்தெடுத்துத் தொடுத்தடுக்கிச் சுருக்கி உரைத்த இனிமை பாராட்டற் பாலது. (7)

### சுமந்திரன் ‘ இராமனுக்கு முடிசூட்டல் தக்கதே ’ யெனல்

அவ்வளவு மகிழ்ச்சி யடைந்தவன், வசிட்டனை வணங்கி, ‘ உனது கிருபையால் நான் பூபாரம் தாங்கியது போல இராம னும் தாங்குதல் தக்கதே ’ என்றான். அப்போது முதல் மந்திரி யாகிய சுமந்திரன், தன் கருத்தோடு மற்ற மந்திரிகள் கருத்தும் ஒத்திருத்தலை அவர்கள் முகக்குறிப்பால் அறிந்தவனாய்த் தசர தனை நோக்கி, ‘ நீ, “ இராமன் அரசுசெய்தல் தக்கது ” என்றது

எங்கள் மனம் குளிரச் செய்தது; "துறப்பேன்" என்றது வெதும்பச் செய்தது; உலகத்தை அவன் காத்தலும் நீ நீத்தலுமாகிய இரண்டையும் ஒருங்கே விதிக்கின்ற அறத்தினும் கொடியது யாது! அவ்இரண்டுள் முன்னதாகிய இராமனை முடி சூட்டுதலைச் செய்து, பின்பு, பின்பு, (இன்னதெனச் சொல்ல என் மனம் இசையாத) பின்னதனைச் செய்க' என்றான்.

### தசரதன் சுமந்திரனை ஏவல்

உடனே தசரதன், சுமந்திரனை, 'நீயே சென்று இராமனை அழைத்துவருக' என—அவன், இராமன்பா லுள்ள அன்பினால் இராச்சியத்தைத் தானே அடைந்தாற்போலக் களித்து, இராமன் அரண்மனையை அடைந்து சீதா சமேதனாக வீற்றிருந்த இராமனை, அவன் அழகு தேன் போல, அதனைத் தன் கண்ணும் கருத்தும் வண்டுபோல நுகரக் களிபெருகக் கண்டான். கண்டவன் தொழுது, 'ஒரு காரிய நிமித்தம் உன்னை அரசன் அழைத்துவரக் கட்டளை யிட்டனன்' என,—இராமன், மேகம் மலைமேல் உறுதல் போலத் தேர்மீது உற்று, முழவுகள் முழங்கச் சிரசில் அணிந்த மாலையில் மொய்க்கும் வண்டுகள் தேர் செல்லும் அதிர்ச்சியினால் கலந்து இரையக், கண்ட மாதர்கள் காமுற்று ஏங்கி மெலிதலால் அவர்கள் கைகளினின்று கழன்று கீழே விழும் வளையல்கள் தரையிற்பட்டு ஒலிக்க, 'இனி, வனம் செல்வான், அரக்கரைக் கொல்வான், நம் குறை நிறைவேறியது' என்று எண்ணித் தேவர்கள் ஆரவாரிக்கச் சென்றான்.

### இராமனைக் காண மாதர்கள் நெருங்கல்

**நீளெ முத்தொடர் வாயினுங் குழையொடு நெகிழ்ந்த**
**ஆள கத்தினோ டரமியத் தலத்தினு மலர்ந்த**
**வாள ரத்தவேல் வண்டொடு கெண்டைகண் மயங்கச்**
**சாள ரத்தினும் பூத்தன தாமரை மலர்கள்** (8)

கொண்டுகூட்டு: தாமரை மலர்கள், குழையொடு நீள் எழு தொடர் வாயினும் நெகிழ்ந்த; அளகத்தினோடு அரமியத் தலத்தினும் அலர்ந்த; வாள் அரத்தவேல் வண்டொடு கெண்டைகள் மயங்க, சாளரத் தினும் பூத்தன.

பொருள்: இராமனைக் காணத் தாமரை மலர்கள் ஆகிய மாதர் முகங்கள் குண்டலங்களோடு, உயர்ந்த தூண்வரிசை களை (இரு பக்கத்துத் திண்ணைகளிலும்) உடைய முன் வாசல்

ளினிடத்து மலர்ந்தன; கூந்தலுடன், நிலாமுற்றங்களிடத்து மலர்ந்தன; வாளும் இரத்த(ம் தோய்ந்த) வேலாயுதமும் வண்டும் கெண்டை மீனும் போன்ற கண்கள் காம மயக்கங் கொள்ளப் பலகணிகளிடத்தும் மலர்ந்தன.

எழு - தூண். வாய் - வாசல். குழை - குண்டலம். நெகிழ்ந்த - மலர்ந்தன. அளகம் ( - கூந்தல்), ஆளகம் எனத் தொடை நோக்கி முத லெழுத்து நீட்டப்பெற்றது.* அரமியம் - நிலாமுற்றம். அரத்தம் - இரத் தம். சாளரம் - பலகணி. இப் பாட்டிற் போல, க. ரா. சா. பாலகாண்டம் 86-ம் பாட்டில் வேறு வருணனைகளோடு 'சாளரந்தோறும் தோன்றும் சந்திர உதயங் கண்டார்' என இனிது கூறியிருத்தல் காண்க. (8)

இராமனைத் தசரதன் தழுவல்

இராமன் இலக்குமணனுடன் தசரதன் இருந்த இடத்தை அடைந்தான். அடைந்தவுடன் முறையே வசிட்டனையும் தன்னையும் தொழுத இராமனைத் தசரதன் மார்புறத் தழுவினான்.

**நலங்கொண் மைந்தனைத் தழுவின னென்பதென் னளிநீர்**
**நிலங்க டாங்குறு நிலையினை நிலையிட நினைந்தான்**
**விலங்க லன்னதிண் டோளையு மெய்த்திரு விருக்கும்**
**அலங்கன் மார்பையுந் தனதுதோள் மார்புகொண் டளந்தான்**

**கொண்டுகூட்டு:** (தசரதன்) நலம் கொள் மைந்தனைத் தழுவினன் என்பது என்? நளிநீர் நிலங்கள் தாங்குறும் நிலையினை, நிலையிட நினைந் தானாய், விலங்கல் அன்ன திண் தோளையும், மெய்த்திரு இருக்கும் அலங் கல் மார்பையும், தனது தோள், மார்பு கொண்டு அளந்தான்.

**பொருள்:** இராமனைத் தசரதன் தழுவினானென்றது ஏன்? எனில், பூமி பாரம் தாங்கும் தன்மையை (இராமன் உடையனோ என்பதைத் தசரதன் அளந்து) நிச்சயிக்கக் கருதினவனாய் இராமனது தோளையும் மார்பையும் பூபாரந் தாங்கிய தனது தோள் மார்புகளால் அளந்தான் (என்க).

நளி - குளிர்ச்சி. நீர் நிலம்-கடல் சூழ்ந்த பூமி. 'நிலங்கள்' என்பதில் 'கள்' அசை—சிந்தா. நிலை - தன்மை; நிச்சயம். நிலையிட - (அளந்து) நிச்சயிக்க. விலங்கல் - மலை. அலங்கல் - மாலை. மற்றைய அரசர் மார்பில் இலக்குமி இருப்பதாகக் கூறுதல் (உபசாரம் உண்மை யன்று; எனவே) பொய் என்பார் 'மெய்த்திரு இருக்கும் அலங்கல் மார்பு' என்றார்.— சோ. சு. (9)

---

* திருவாய்மொழி முதற் பத்தில் 'வீடுமின் முற்றவும்' என்புழிப் போல; நீட்டும்வழி நீட்டல்; அளி ஆளி எனவும், பண்டிதர் பாண்டிதர் எனவும் கம்பனில் வருவது காண்க.

### தசரதன் இராமனை முடிசூடும்படி வேண்டல்

பின்பு, தசரதன், இராமனைத் தன் அருகிருத்தி, அன்பு மீதூர, மகிழ்கூர்ந்து நோக்கி, 'பரசுராமன் புகழ் குறுக வளர்ந்த புயபலத்தினுய்! உன்னைப் பெற்ற யான் உன்பாற் பெற வேண்டுவ தொன்றுண்டு. மூப்பினுல் மிகவும் நொந்தேன். அதனுல் அதிக வருத்தஞ் செய்வதாகிய பூ பாரத்தைச் சுமக்கும் கட்டத்தினின்று விடுபட்டு நான் உய்தற்குரிய தவநெறியிற் செல்ல நீ உதவுதல் வேண்டும். பிள்ளைப்பேறு, இம்மை மறுமைப் பேறுகளிரண்டையும் பெறச் செய்யுமென்பர் பெரியோர். அப் பிள்ளைகளுள்ளும் அறக்கடவுளே போன்ற நின்னைப் பெற்ற யான் வருத்தம் நீங்காதிருத்தல் தகுதியாமோ? எண்ணிலடங் காத நம் முன்னேர் மூப்புக் காலத்தில் தங்கள் தங்கள் குமாரர் பூபாரம் மேற்கொள்ள வைத்துத் தவமேற்கொண்டார்கள். முற் பிறப்புக்களிற் செய்த நல்வினைப் பயனுகவும், இப்பிறப்பிற் செய்த யாகாதி புண்ணிய பலமாகவும், உன்னைப் பெற்ற பின்பும் நான் பூபாரம் பொறுக்கும் துன்பம் நீங்கிலே னென்ருல், உன்னைப் பெற்றதனுலாகிய பயன் யாதோ? முதுகின் சுமை வருத்தம் ஒருவகையிலும் காலின் முடவருத்தம் மற்ருெரு வகை யிலும் வருத்த, அசையமாட்டாது வருந்தும் பொதியெருது போல, முன் சொன்ன பூபாரத் துன்பமும் மூப்புத் துன்பமும் பொறுக்க முடியாமல் வருந்தும் யான் இரு துன்பங்களி னின்றும் என்றும் விடுதலை செய்துவிடும் வீட்டை யடைய விருப்புடையேனுயினேன். அது பெற, நீ அருளல் வேண்டும். பிறவித் துன்பத்தினின்று நீங்கியவர், அரசரல்லர்; இந்திரன் முதலிய இறையவரோவெனின், அவருமல்லர்; வேறு யாவரோ வெனின், தவம் செய்தோரும் தம் சொற்கடவாத சற்புத்திர ரைப் பெற்ருேருமே. ஆதலால் என் சொற்படி நீ முடிசூடுவா யாக' என்ருன்.

### இராமன் முடி சூட இசைதல்

தாதை யப்பரி சுரைசெயத் தாமரைக் கண்ணன்
காத லுற்றில னிகழ்ந்திலன் கடனிதென் றுணர்ந்தும்
யாது கொற்றவ னேவிய ததுசெய லன்ருே
நீதி யெற்கென நினைந்துமப் பணிதலை நின்ருன் (10)

கொண்டுகூட்டு: தாதை அப்பரிசு உரைசெய, தாமரைக் கண் ணன் காதல் உற்றிலன்; இகழ்ந்திலன்; 'இது கடன்' என்று உணர்ந்

தும், 'கொற்றவன் ஏவியது யாது அது செயல் அன்றோ நீதி எற்கு' என நினைந்தும், அப்பணி தலைநின்றான்.

**பொருள் :** தசரதன் அவ்வாறு கூற, இராமன், முடிசூடு தலை விரும்பினா னல்லன்; வெறுத்தா னல்லன்; 'இது என் கடமை' என்று நினைந்தும், 'அரசன் கட்டளையிட்ட தெதுவோ அதைச் செய்தலன்றோ எனக்கு முறை' என்று கருதியும் அக் கட்டளையை ஏற்றுக்கொண்டான்.

தலைக்கொள்ளல் ஏற்றுக்கெள்ளல் என வருதல்போலத் தலைநின்றான் ஏற்றுக்கொண்டான் என வந்தது. (தலைக்கொள்ளல் - ஏற்றுக்கொள்ளல். உ - ம். 'உந்தை உண்மைய னாக்கியுன் சிற்றவை—தந்த சொல்லைத் தலைக்கொண்டு தாரணி—வந்த தம்பிக் குதவிய வள்ளலே'—சு. ரா.) இயல்பாக, மிக்க பெரும்பான்மையோரால், விருப்போடாயினும் வெறுப் போடாயினுஞ் செய்யப்பட்டுப் பிறவிக் கேதுவாகுங் கருமங்களையே விருப்பு வெறுப்பின்றிச் செய்து முத்திக் கேதுவாக்குதல் பலாபல சமரச பாவனையுடைய ஞானிகள் செயலென்பதைச் சிறந்த திருட்டாந்த முகத் தால் விளக்குவாராய் இராமன் முடிசூடுதலைக் 'காதலுற்றிலன் இகழ்ந் திலன்' என்றார். (10)

### தசரதனும் இராமனும் தம் தம் மாளிகை அடைதல்

தசரதன், இராமன் உடன்பட்ட குறிப்பை யுணர்ந்து மகிழ்ந்து, இருவர் உயிர்களும் நெருங்கிப் பொருந்தி யொன் றாகச் செய்வான் போல, இராமனை இறுகத் தழுவிக்கொண்டான். பின்பு, தன் அரண்மனைக்குச் சென்றான். இராமனும் தன் மாளி கையை அடைந்தான்.

### தசரதன் முடிசூட்டு விழாவுக்கு அரசர்களை அழைத்தல்

தசரதன், இராமனது முடிசூட்டு விழாவுக்கு வரும்படி பல தேச ராசர்க்கும் திருமுக மனுப்பி, வசிட்டனை, 'அச் சடங் குக்கு வேண்டுவன சித்தஞ்செய்க' என்றான். அவன் அவ்வாறு செய்ய ஒப்புக்கொண்டு போனான். அயோத்தியில் உள்ள அர சர்கள் இராமன் முடிசூடுவதைத் தெரிந்து மனத்தில் உண் டாகிய மகிழ்ச்சி பொங்கி உடம்பெங்கும் மயிர்க்கால்களின் வழியே எழுந்தாற்போல உரோமம் சிலிர்க்க உடம்பொடு சுவர்க்கம் புகுந்தார் போன்றார்கள். அவர்களெல்லாரும் தாங்கள் தாங்களே இராச்சியத்தைப் பெற்றார் போன்று, ஆனந்த பரவச ராய், அரசனை அடைந்து தொழுது, 'ஐய! நீ செய்யக் கருதி யது மிகச் சிறந்தது' என்றார்கள். அவன், அதனால் தன் மனத்

துண்டாகிய மகிழ்ச்சியை மறைத்துக் கொண்டு, நான் புத்திர வாஞ்சையாற் புத்தி மயங்கிக் கூறியதற்குப் பொருத்தமாக நீங்கள் புகன்றது, உங்கள் மன மகிழ்ச்சியினாலோ, என் கருத்துக்கு இசைந்து கூறவேண்டுமென்ற எண்ணத்தினாலோ, இது தக்கதென ஆராய்ந்து துணிந்ததனாலோ, எதனாலெனக் கூறுவீராக' என்றான். அவர்கள், '"இராமனுக்கு எல்லா நற்குண நற்செய்கைகளும் சகல சம்பத்துக்களும் பெருகுவன ஆக" என்று எல்லோரும் தத்தம் இட்ட தெய்வங்களைப் பிரார்த்திக்கின்றனர். இதில் என்ன அதிசயமிருக்கிறது (ஊருணி நீர் நிறைதலையும், காலமழை பெய்தலையும், நெல்வயல் நீர் நிரம்புதலையும் விரும்புவாரன்றி வெறுப்பாருண்டோ? இராமன் எல்லாரிடத்தும் எவ்வாறு சிறந்த அன்புடையானோ, அவ்வாறே அனைவரும் அவனிடத்து அன்புடையராயிருக்கின்றார்கள்') என்றார்கள். அதுகேட்ட சக்கரவர்த்தி, கவலை நீங்கிக், களியோங்கி, அன்பு மீதூர, ஆனந்தக் கண்ணீர் சோர, அரசர்களை நோக்கி, 'நடுவு நிலைமை விலகாமை, அறச்செயல்கள் ஆற்றுதல், தீயாரைச் சினத்தல், ஒழுக்கம் வழுக்காமை ஆகிய இவைகளை ஆடம்பரமாக வன்றி உண்மையாக மேற்கொண்டொழுகும் வேந்தர்களே! இராமன் என் மகனென்பானேன்? அவன் உம் மகன். உமக்கடைக்கலம்' என்று இனிது கூறி அரசர்களுக்கு விடைகொடுத் தனுப்பினான்.

### கோசலைக்குத் தாதியர் அறிவித்தல்

கோசலாதேவியின் தாதியர் நால்வர் இராமபிரான் முடிசூடு நிகழ்ச்சி யறிந்த உவகை மிகுதியால், அவசராய்க் கூந்தல் குலைதலும் தேகம் பூரிக்கக் கொங்கைக் கச்சுப்பூட்டும் ஆடைக் கட்டும் அவிழ்தலும் உணராராய், வரம்பின்றி ஆடல் பாடல் செய்து, கண்டவர்களையெல்லாம் கும்பிட்டுக்கொண்டு, யாது கூறுவதென அறியாராய்க் கோசலையிடம் ஓடிச் சென்றார்கள். அவள் அவர்கள் களிப்பு மிகுதி கண்டு அன்பு கொண்டு, நோக்கி, 'உங்கள் மனத்தில் ஓர் உவகைச் செய்தி உண்டென்பதை ஊகித்துணர்ந்தேன். உடனே அதை உரையுங்கள்' என அவர்கள் உரைத்தார்கள்.

சிறக்குஞ் செல்வ மகற்கெனச் சிந்தையிற்
பிறக்கும் பேருவ கைக்கடல் பெட்பற
வறக்கு மாவட வைக்கன லானதால்
துறக்கு மன்னவ னென்னுந் துணுக்கமே (11)

கொண்டுகூட்டு: (கோசலைக்கு) 'மன்னவன் துறக்கும்' என்னும் துணுக்கம், மகற்கு 'செல்வம் சிறக்கும்' எனச் சிந்தையில் பிறக்கும் பேர் உவகைக் கடல், பெட்பு அற வறக்குமாறு வடவைக் கனல் ஆனது.

பொருள்: அப்போது, கோசலைக்கு அரசன் துறப்பானென்ற அச்சமானது, மகனுக்கு இராச்சிய பாக்கியம் சிறப்பாகவுறுமென்று மனத்தில் தோன்றிய பெரு மகிழ்ச்சியாகிய கடல் முழுதும் வற்றும்படி, வடவாமுகாக்கினி ஆயிற்று.

பெட்பு - பெருமை, நீர்ப்பெருக்கத்தைக் குறித்தது. வறக்குமாறு, வறக்குமா எனத் தொக்கது. துணுக்கம் - அச்சம். கோசலை மனம் கடலிடத்துக்கும், மகன் முடி பூண்பானென்ற மனக்குளிர்ச்சி அக்கடலிடத்து நீருக்கும், கணவன் துறப்பானென்ற மனவெப்பம் அவ்விடத்தேயுள்ள வடவைத் தீக்கும், அக்குளிர்ச்சி அவ்வெப்பத்தால் ஒழிதல் அந்நீர் அத்தீயால் வற்றுதலுக்கும் மிகப் பொருத்தமாக உவமித்திருக்கும் நயம் சிந்திக்கத் தக்கது. (11)

கோசலை கோயிலுக்குப் போதல்

ஆயினும், அவள் அவர்களுக்குச் சிறந்த வெகுமதிகள் அளித்துவிட்டுச் சுமித்திரையுடன் திருமால் கோயிலுக்குச் சென்று வணங்கினாள்.

**என்வ யிற்றரு மைந்தற் கினியருள்**
**உன்வ யிற்றதென் றுளுல கியாவையும்**
**மன்வ யிற்றி னடக்கிய மாயனைத்**
**தன்வ யிற்றி னடக்குந் தவத்தினாள் (12)**

கொண்டுகூட்டு: உலகு யாவையும் மன் வயிற்றின் அடக்கிய மாயனைத் தன் வயிற்றின் அடக்கும் தவத்தினாள், '(சுவாமீ!) என் வயிற்று அரும் மைந்தற்கு இனி அருளல் உன்வயிற்றது' என்றாள்.

பொருள்: அண்டங்களனைத்தையும் வயிற்றுள் அடக்கிய திருமாலைத் தன் வயிற்றில் அடக்கிய பெருந் தவத்தையுடைய கோசலை, 'சுவாமீ! என் வயிற்றில் பிறந்த அருமையான இராமனுக்கு இனி அருளுதல் உன் பரம்' என்றாள்.

வயின் - வயிறு. வயின்தரு - வயிற்றில் (பிறக்கும்படி) அருளிய எனலுமாம். அருள்: முதனிலைத் தொழிற்பெயராய் அருளுத லென்ற பொருள்பட நின்றது. வயின் - இடம். 'வயிற்றது' என்பதில் 'வயிற்று' இடத்தினது: 'அது' பகுதிப்பொருள் விகுதி. மன்வயிறு - பெரிய வயிறு. மன் - மிகுதி; பெருமை.—சிந்தா. 'மாயனை' என்பது திருமாலின் அவதாரமாகிய இராமனைக் குறித்தது. திருமாலுக்குப் பல திருநாமங்க

ளிருக்கவும் அகிலாண்டங்களையும் வயிற்றில் அடக்கிய மாயத்தைக் குறிக்க, 'மாயன்' என்ற பெயரை இங்கே இனி தெடுத்தாண்ட நயம் பாராட்டத் தக்கது.

ஏழு கடல்களும் (ஒருமிக்கச்) சென்று இறங்க இடம் தந்த பெரிய திருவாயையுடைய அகத்திய மகாமுனிவன், திரிலோகங்களையும் ஒரு வாயால் உண்டு (திரும்ப) உமிழ்ந்த திருமாலைத் தன்னுள்ளே (கோயில் கொண்டு வீற்றிருக்கச்செய்து) அடக்கி, (அதனால் திருமாலினும் பெருமை யுடையதாயும்) அந்த மூன்றுலகு(களில் உள்ளவர்)களையும் (அவர்கள் திருமாலைச் சேவிக்க நான்கு கோபுரவாசல்கள் வழியாக உள்ளே வருவதும் சேவித்துவிட்டு வெளியே செல்வதுமா யிருத்தலால்) தனது நால் வாயில் உண்டு உமிழு(தலால் அத்திருமாலை ஒத்ததாயும், எனவே, அவருக்கு ஒரு வகையில் உயர்ந்தும் ஒரு வகையில் ஒத்தும் இருக்)கின்ற (முன் விட்டுணுத்தலமாயிருந்த திருக்குற்றலத்துத்) திருக்கோயிலைக் கண்டான்: (கண்டவன், கண்ட காட்சியால், ஆனந்த பரவசனாகி அக் கோயிலைக்) கும்பிட்டுப் 'பிறவி(ச் சிறைசாலை) வாசலைக் கடக்க (உதவியாக) இக்காட்சியே போதும் (அரியதவம் செய்யவேண்டுவ தில்லை)' என்று (கேட்போர்) இரு செவி வாய்களிலும் பொன் சொரிந்தாற்போல (அவர்கள் மகிழ்ச்சியடைய, உலகையுண்டவனை உண்ட கோயிலைத் துதித்தற்குத் தமிழைக் கற்றுவல்ல கம்பராதியரது சாதாரண வாய்கள் தகுதியுடையனவல்ல, தமிழைப் பெற்ற வல்லவனது, கடலை யுண்ட அசாதாரண வாயே தகுதி யுடையது என, அந்த வாய்கொண்டு) தோத்திரம் செய்வானாயினான் என்ற கருத்தை உள்ளடக்கிய,

ஒருவாயில் உண்டுமுன்நாள் உமிழ்ந்தானை உள்ளடக்கி உலகம் மூன்றும்
திருவாயில் ஒருநான்கால் உண்டுமிழும் திருக்கோயிற் செல்வம் கண்டான்,
கருவாயில் கடப்பவர்க்குக் காட்சிஇது போதும் எனக் கரங்கள் கூப்பி
இருவாயும் பொன்சொரிய ஏத்தினான் எழுகடல்சென் றிறங்கும் வாயான்

என்னும் குற்றலத் தலபுராணக் கவியை 'உலகியாவையும் - மன்வயிற்றின் அடக்கிய மாயனைத் - தன்வயிற்றின் அடக்கும் தவத்தினாள்' என்பது நினைவுகூரச் செய்கின்றது.

பாட பேதம்: உன் வயத்தது. (12)

## கோசலையின் தான தவங்கள்

கோசலை, தன் மகன் முடிசூடுதல் குறித்துக் கோதானம், பூதானம், அன்னதானம், சொன்னதானம், கன்னிதானம் முதலிய தானங்கள் செய்து நோன்புகள் நோற்கத் தொடங்கினாள்.

## 2. மந்தரை சூழ்ச்சிப் படலம்

இராமன் முடிசூடுதலைத் தடுக்கும்படி கைகேயிக்கு மந்தரை யென்ற கூனி கூறிய தீய ஆலோசனையைப் பற்றிக் கூறுவது *

### வசிட்டன் இராமனுக்குக் கூறல்

தசரதன், சோதிடரை 'இராமனுக்கு முடிசூட்டுதற்கு எத் தினம் நற்றினம்' என அவர்கள் 'நாளைத் தினம் நல்ல தினம்' என, வசிட்டனை, 'அதற்கு வேண்டுவன விரைவிற் செய்தலும் இராமனுக்கு உறுதிப் பொருள்களை உணர்த்தலும் வேண்டும்' என, அவன் இசைந்து இராமனைக் காணும் ஆசை முன்செல்ல, அதற்கு முந்துவான் போல விரைந்து சென்று அடைந்து, 'அரசன் உனக்கு நாளையே அரசைத் தருவான். அரசர்க்குரிய உறுதிப் பொருள்களைக் கூறுவேன். கேட்டுக் கடைப்பிடிப்பா யாக' என்று மேலும் கூறுவான் :

**கரிய மாலினுங் கண்ணுத லானினும்**
**உரிய தாமரை மேலுறை வானினும்**
**விரியும் பூதமொ ரைந்தினு மெய்யினும்**
**பெரிய ரந்தணர் பேணுதி யுள்ளத்தால் (13)**

**கொண்டுகூட்டு :** '*அந்தணர், கரிய மாலினும், கண்ணுதலானினும், உரிய தாமரை மேல் உறைவானினும், விரியும் பூதமோர் ஐந்தினும், மெய்யினும் பெரியர் ; (அவர்களை) உள்ளத்தால் பேணுதி.*

**பொருள் : 'அந்தணர், மும்மூர்த்திகளைக் காட்டிலும் எங்கும் பரந்த பஞ்ச பூதங்களைக் காட்டிலும் பரம்பொருளையே காட்டிலும் பெருமை யுடையவர்கள் : ஆதலால் அவர்களை (வெளிச் செயலாக மட்டு மன்றி) மனப்பூர்வமாகவும் வழிபடுவா யாக.**

மால் - விட்டுணு. கண்நுதல் - கண்(ணை உடைய) நெற்றி(யை யுடைய சிவன்). உரிய தாமரை மேல் உறைவான் - (தனக்கு) உரிமை யான தாமரை (மலராகிய ஆதனத்தின்) மீது வீற்றிருப்பவன் (ஆகிய பிரமன்.) **ஐம்பூதம்** - பிருதிவி (மண்), அப்பு (நீர்), தேயு (தீ), வாயு (காற்று), ஆகாய மென்னும் **அஞ்சு தத்துவங்கள். தத்துவங்கள் சூக்குமமாய்த் தேகத்தின் அகத்தே உள்ளவை. மெய் - உள்** ளது - (என்றும் உள்ளதாகிய) **பரம்பொருள்.** சத்து சித்து ஆனந்தம் ஆகிய சச்சிதானந்தம் என்பதில் **என்றும் உள்ளது** என்னும் பொரு

---

* சூழ்ச்சி - ஆலோசனை ; இதுபோன்ற இடங்களில் அடையின்றியே துராலோசனை யென்ற பொருள் குறிக்கும். பெருங்கதை முகவுரை XIX-ம் பக்கம் பார்க்க.

ளுடைய சத்து.* பிரமத்தை உணர்த்தல் காண்க. மெய்யன் என்பது கடவுள் என்னும் பொருளுடையது என்பதையும் கருதுக. இராம சாதகம் சேஷசாஸ்திரியார் இயற்றிப் பதிப்பித்திருக்கிற அயோத்தியாகாண்ட உரையில், மேலே கூறிய மெய் என்ற பதத்துக்குப் பரமாத்துமா என்று உரை யெழுதியிருப்பதும் ஓர்க. பரமாத்துமா, கடவுள், பிரமம், பரம் பொருள் என்பவை ஒரு பொருள் குறித்தவை. பேணுதல், வழிபடுதல்—த. அ. உள்ளத்தால் - உள்ளத்தோடு - மனசார. ஆல் உருபு உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது.

அந்தணர் பெருமையை இங்கே விதந்து கூறியிருப்பதுபோல, வேறெங்கும் கூறியிருப்பதாகத் தெரியவில்லை. கூறமுடியுமென்று நினைக்கவும் முடியவில்லை: ஏனெனில், (எல்லாவற்றினும்) பெரிது என்ற பொருளுடைய பிரமம் என்னும் பரம்பொருளுக்குப் பெரிதாக வாதல் ஒப்பாக வேனு மாதல் ஒரு பொரு ளிருந்தாலன்றோ, அப்பொருளினும் பெரியர் அந்தணரென்று கூறமுடியுமென்பது.

வசிட்டமுனிவன், இராமனுக்கு இராசநீதி போதிப்பானாய் முதல் முதலாக அந்தணர் பெருமையைக் கூறுகின்றான். அதற்கு நியாயம்,—பூவுலகத்தில் அறிவில் பொருள்களினும் பெருமையுடையவை, ஓர் அறிவு முதல் ஐயறிவு ஈருக உடைய படிப்படியாக உயர்ந்த அறிவுடைப் பொருள்கள்; அவைகளினும் பெருமையுடையவர், ஆறறிவுடைய மக்கள்; அவர்களுள்ளே சிறந்த பெருமையுடையவர், ஆறும் அறிவாகிய பகுத்தறிவினும் மேலாம் அறிவாகிய தத்துவஞானமுடைய அந்தண ரென்பதாம். அது பொருந்தும்: ஆயினும், அந்தப் படிப்படி உயர்முறை, பூதம், மூவர், பரம்பொருளென வரிசைப்படுத்தாமல் மூவர், பூதம், பரம்பொருளென வரிசைப்படுத்தியிருப்பதில் இல்லையே யெனில், உள்ளதே. எவ்வாறுள்ளதெனில், பரம்பொருளொன்றே, ஐம்பூதங்க ளடங்கிய தத்துவத்தைக் கடந்த பொருள்; மூவரும் பூதங்களும் தத்துவத்துக் குட்பட்ட பொருள்கள்.; எல்லா உயிர்களின் உடல்களும் பூதங்களின் பகுதிகளாலாகிப் பூதியங்களெனப்படும். இவ்விதிக்கு விலக்கா யில்லாமல், மும்மூர்த்திகளின் மிகவுந் தூய மூர்த்தங்களும் (தேகங்களும்,) பூதங்களின் மிகத் தூய்மையான பகுதிகளாலாகிய பூதசார சரீரங்களே; ஆகவே, மும்மூர்த்திகள் பரம்பொருளின் சிறந்த அம்சபூதரேயானாலும், அவர்களுடைய தேகங்கள் பூதங்களின் பாகங்களே: அவர்கள் அவர்களுடைய தேகங்களினுள் அடங்கியவர்க ளென்பது கூறவேண்டியதில்லை. எப்பொருளும் அதன் பாகத்தினும் பெரிதென்பது தானே விளங்கும்: விளங்கவே, மும்மூர்த்திக ளடங்கிய அவர்கள் தேகங்கள் ஐம்பூதங்களின் பாகங்களாம் சிறுமை பற்றி அவர்களை முதலினும், அப்பூதங்களை அவர்கள் பின்னும், அவைக ளடங்கிய தத்துவத்தைக் கடந்த பரம்பொருளை அவைகளின் பின்னும் படிப்படி உயர்முறையாக—சோபானக் கிரமமாக—வைத்தானென்பது.

* சத்து - என்றும் உள்ளது—த. அ., பிரமம்— ச. அ.

கம்பர், பரம்பொருளை 'மூன்று கவடாய் (மும்மூர்த்திகளாய்) முளைத்தெழுந்த மூலம்' என்றும், பரம்பொருளின் பின்னும்சபூதரான 'செங்கண் மால் நான்முகன் சிவனென் றேகொலோ - (பரம்பொருளின் பூர்ணம்சபூதரன) எங்கள் நா யகனையும் (இராமனையும்) நினைந்த தேழைநீ' என்றும், சிவ விட்டுணுக்களை 'யாரினு முயர்ந்த மூலத் தொருவராம் இருவர்' என்றும், 'அரன் அதிகன் உலகளந்த அரிஅதிகன் என்றுரைக்கும் அறிவிலோர்' என்றும், பரம்பொருள், மூன்று கூருய் விட்டுணுவும் பிரமனும் சிவனுமாகி, முறையே 'ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் (உறைவிடமாக அமர்ந்து, அவைகளை) விட்டு, (மூன்று கூறும் ஒன்று சேர்ந்த முழுத் தனி முதல்வனுகி இராமனுக) அயோத்தி வந்தான்' என்றும் கூறியிருக்கின்ருர். அவர், பரம்பொருள், ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொருவரிடம் முனைந்து நின்று தொழிலாற்றல் பற்றி, அவ்வச் சமயத்தில் அவ்வவரை உயர்ந்தவரென்பதன்றி, எப்போதும் ஒருவரை மற்றவரினும் உயர்ந்தவ ரெனக் கருதும் சமய வாதக் கொள்கை யுடையவரல்ல ரென்பது, நடுநிலை நின்று கம்பராமாயண முழுதும் ஆராய்வார்க்குத் தெளிவாம். ஆதலால், இங்கே, 'கரிய மாலினும் கண்ணுதலானினும்—உரிய தாமரை மேலுறை வானினும்' என வசிட்டன் கூற்ருகக் கூறியது, படிப்படியுயர்முறை பற்றியதா யில்லாமல் 'உமைக்கு நாதற்கு மோங்குபுள்ளூர் திக்கும்—இமைப்பி ளுட்டமொ ரெட்டுடை யானுக்கும்' என்றது போல மும்மூர்த்திகளை உயர்வு தாழ்வு குறியாது கூறியதா யுள்ள தென்பது கவனிக்கத் தக்கது.

மேற்கூறியவாற்ருல், மும்மூர்த்திகளினும் பூதங்கள் பெரியவை, பூதங்களினும் பரம்பொருள் பெரிது என்றது பொருத்தமாயினும், மும்மூர்த்திகளுள் ஒருவராற் படைக்கப்பட்ட அந்தணர், அவ்வொருவரையுள்ளிட்ட மூவர், பூதம், பரம்பொரு ளென்னும் முத்திறப் பொருள்களினும் பெரிய ரென்றது, பரமாணு பிரமாண்டத்தினும் பெரி தென்ருற் போலச் சற்றும் பொருந்தாததாகத் தோன்றுகின்றதே, இது பொருந்துமாறும் உளதோ, உளதேல், அஃது யாதெனில்,—புற வுலகில் முன் அறியப்படாததனுல் காரியாம்சத்தில் இல்லாததாக விருந்த அமெரிக்காவைக் கொலம்பஸ் என்பார் பெரிது முயன்று கண்டுபிடித்து மற்றவர்களுக்குக் காட்டிக் கொடுத்து இம்மைப்பய னடையச் செய்தது போல, அகவுலகில் முன் அறியப்படா திருந்த திரிமூர்த்திகள் பஞ்சபூதங்களடங்கிய தத்துவங்கள் தத்துவாதீதமான * பரம்பொருள் ஆகிய மூவகைப் பொருள்களையும் அந்தணர், அரிது முயன்று கண்டுபிடித்து, மற்றவர்களுக்குக் காட்டிக் கொடுத்து மறுமைப்பய னடையச் செய்த ஒப்புயர்வற்ற சீரிய கொடையாள ராவர்: ஒரு பொருளைக் கொடுத்தவனை அப்பொருளினும் பெருமையுடையவ னென்னும் முறைப்படி, மேற்

* தத்துவாதீதம் - தத்துவங் கடந்தது.

கூறிய முப்பொருள்களைக் கொடுத்த அந்தணரை அப்பொருள்களினும் பெருமை யுடையா ரென்று னென்பது.*

இந்தக் கவியில் வரும் மெய் போலத் திருக்குறளில் மெய்யுணர்தல் என்னும் அதிகாரப் பெயரில் வரும் மெய்யும், அந்த அதிகாரத்தில் 'எப் பொருள்' 'கற்றீண்டு' என்னும் குறள்களில் வரும் மெய்யும், 'ஓர்த்துள் ளம்' என்ற குறளில் வரும் உள்ளதும், பரம்பொருளை உணர்த்துதல் அறியத் தக்கது. இந்தக் கவியிலும் இதற்குப் பின்னுள்ள 'அந்தணர்' 'ஆவதற்கும்' என்ற கவிகளிலும் கூறப்பெற்ற அந்தணர் என்னும் பெயரும் அந்தணரது பெருமையும், திருக்குறளில் நீத்தார் பெருமை யென்னும் அதிகாரத்தில் வரும் அந்தணர் என்ற பெயரோடும் அப்பெய ருடையாரது பெருமையோடும் ஒத்திருத்தல் கருதத் தக்கது. (13)

'ஐம்பொறிகளை அடக்கிய அந்தணர் அவற்றை அடக்காத அமரரினும் அதிகராவர். ஆதலால் அவர்களை வணங்கி அவர்கள் சொற்படி செய்வாயாக. கல்வி கேள்விகளால் தெளிவாகத் தெரிந்த தருமங்களையும் நடுவுநிலைமையையும் எல்லா உயிர் களிடத்தும் அருளுடைமையையும் நீங்குவோர் திரிமூர்த்திய ராயினும் அழிந்துவிடுவார்கள்.

**சூது முந்துறச் சொல்லிய மாத்துயர்**
**நீதி மைந்த நினக்கிலை யாயினும்**
**ஏத மென்பன யாவையு மெய்துதற்**
**கோது மூல மவையென வோர்தியே (14)**

**கொண்டுகூட்டு :** 'நீதி மைந்த, சூது முந்துறச் சொல்லிய மா துயர் நினக்கு இல்லை ஆயினும், அவை, ஏதம் என்பன யாவையும் எய்து தற்கு ஓதும் மூலம் என ஓர்தி.

**பொருள் :** 'நீதிகளை இயல்பாகவே உடைய இராமா! சூதாட்டம் முதலாகச் சொல்லப்பட்ட பெருந் துன்பங்கள் (விளைவிக்கும் துன்மார்க்கத் தொழில்கள்) உனக் கில்லையாயி னும், அவைகள், கேடுகள் என்பவை யாவையும் அடைதற்குக் காரணமென்று (நீ தெரிந்துகொள்ளல் நல மாதலால்) தெரிந்து கொள்வாயாக.

துயர் - துன்பம், துன்பத்துக்குக் காரணமான கட்குடி, பரத்தை யரைச் சேர்தல், உயிர்க்கொலை முதலிய தீச்செயல்களைக் குறித்தது. ஏதம் - கேடு. ஓர்தல் - உணர்தல். நீதியுடையான் சூது முதலிய தீய

* 'உலக முழுதும் தெய்வத்தின் வயத்தது ; அத்தெய்வம் மந்திரத்தின் வயத் தது ; அம் மந்திரம் அந்தணர் வயத்தது ; அவ்வந்தணர் எமக்குக் கடவுளாவார்' என்று மகாபாரதத்தில் கண்ணன் கூறுவது அறியத் தக்கது.

செயல்களில்லாளுகவும் அவற்றின் தீய பயன்களைத் தெரியும் புத்தியுள்ளா ளுகவும் இருக்கும் இயல்பு குறிக்க 'நீதிமைந்த...ஓர்தி' என்ருன். அத்தகையாளனுக்குச் செய்யத் தகாத தீச் செயல்கள் இவை யெனப் பிண்டமாகக் குறிப்பித்தலே போது மென, இவ்வொரே பாட்டாற் குறிப் பித்துவிட்டுச் செய்யத் தக்க நற்செய்கைகளுட் சிறந்தவைகளைப் பல பாட்டுக்களால் விளக்கிக் கூறுதல் காண்க. (14)

யாரொ டும்பகை கொள்ளில னென்றபின்
போரொ டுங்கும் புகழொடுங் காதுதன்
தாரொ டுங்கல்செல் லாதது தந்தபின்
வேரொ டுங்கெடல் வேண்டலுண் டாகுமோ (15)

கொண்டுகூட்டு : '(அரசன்) யாரொடும் பகைகொள்ளிலன் என்ற பின், போர் ஒடுங்கும் ; புகழ் ஒடுங்காது; தார் ஒடுங்கல் செல்லாது : அது தந்தபின், (பகைவர்) வேரொடும் கெடலை வேண்டல் உண்டாகுமோ ?

பொருள் : 'ஓர் அரசன், பலத்தில் தனக்கு உயர்ந்தார், தாழ்ந்தார், ஒத்தார் எவரோடும் "பகைகொள்ளே"னென்ற உறுதிசெய்தபின்பு அவனுக்குப் போர் சுருங்கி யொழிந்துவிடும்; புகழ் சுருங்காது வளரும் ; சேனை போரின்மையால் நாச மில்லா ததாகக் குறையாது: அந்தப் பகைகொள்ளாமையைப் பகை வர்க்கு அவர் பகைக்குப் பிரதியாகத் தந்த பின்பு (பகைமை யானது முன் பகைவராயிருந்தவர் மனத்தைவிட்டொழிந்துவிடு மாதலால், அப் பகைவர்) அடியோடழிதலை விரும்புதல் (ஆகிய எண்ணமே) உண்டாகுமோ ? (உண்டாகாது, உண்டாகுதற்குக் காரணமாகிய பகைமை இன்ருகிவிட்டதனுல்.) *

தார் - சேனை. ஒடுங்கல் செல்லாது - ஒடுங்காது. † 'அது' முத லடியில் வந்த 'பகைகொள்ளாமை'யைச் சுட்டியது. 'வேரொடுங் கெடல்' என்பதன்முன் 'பகைவர்' என்பது அவாய்நிலையால் வந்த சொல். இது போல் க. ரா. சா. பாலகாண்டம் 42-ம் கவியில் 'கொற்றவன் திருவின் கேள்வனைக் கொணர்மின் சென்று' என்பதில் 'தூதரை' என்ற சொல் 'திருவின் கேள்வனை' என்பதன் முன் அவாய்நிலையாக வந்தது காண்க.

'பகையைப் பகையால் தணித்தல் முடியாது, தீயைத் தீயால் தணித் தல் முடியாதவாறு போல ; பகையை அன்பால் ஒழித்தல், தீயை நீரால்

---

* 'அது தந்தபின்......உண்டாகுமோ' என்பதற்கு 'அப் போர்த் தொழிலைச் செய்தால் அவன் வேரொடும் அறக் கெடுதல் தானே உண்டாம்' என்றும் (சோ. சு.), 'அது தந்த பின்னர் பகையை வேரொடுங் களைதலை வேண்டப்படுமோ' என்றும் (திரு. ச.), 'அது தக்க பின்' என்று வேறு பாடம் கொண்டும் (வை. மு. கோ) உரை கூறினர்.

† இந்நூல் 3—உரை பார்க்க.

ஒழித்தல் போலத் தக்க முறையாம். பலத்தினுற் பகைவனை வெல்வோன், பகைவனது உடலையே வென்றவ னுவான்; பகைவனை அன்பால் வெல்வோனே, அவன் உடலோடு உள்ளத்தையும் வென்றவ னுவான்; பலத்தால் வெல்லப்பட்ட பகைவன், சமயம் வாய்த்தால், கேடு செய்வான்; அன்பால் வெல்லப்பட்ட பகைவனே, எக்காலத்தும் கேடு செய்யான்.' என்ற புத்த பகவான் கருத்தை இப்பாட்டு அடிப்படையாகக் கொண்டிருப்பது காண்க.

'ஐம்பொறிகளால் அநுபவிக்கும் அநுபவங்களை மிகைபட விடாமற் குறைத்துப் பொருளைத் தினமும் சம்பாதித்துப் பகைவர் பயந்து பதறும் பலசாலியாய் அரசாளும் அரசனே அரசனுவான். அவனுக்கு, நல்லொழுக்கம் வாட்படையினும் மேற்படையாம்; அவ் வொழுக்கம் அவன் அழியாமைக்கும், அன்புடைமை ஆக்கத்துக்கும் காரணமாம்; ஆயுதம் செலுத்தலினும் அன்பு செலுத்தலே மேல். அரசன் எவ்வளவு வீரனுயினும் அமைச்சர் சொற்படி ஆற்றலே* அவனுக்குச் சிறந்த ஆற்றலாம்.† இன்சொல்லினன், கொடையாளி, தீர்க்காலோசனை செய்வோன், முயற்சி யுடையான், சொல்லும் நினைவும் தொழிலும் சுத்தமானவன், நீதிமான் ஆகிய அரசனுக்குக் கேடு வருமாறு கிடையாது.

## அயோத்தியை அலங்கரித்தல்

இவ்வாறு அரச தருமங்களை வசிட்டன் எடுத்துச் சொல்லி, இராமனைத் திருமால்கோயிலுக்கு அழைத்துச் சென்று வணங்கித் திருமாலை அபிடேகஞ் செய்து, அலங்கரித்துப் பூசித்து, வெண்ணிறத் தருப்பை யாதனத்தில் வீற்றிருக்கச் செய்துவிட்டு அதனைத் தரசரதனுக் கறிவித்தான். அவன், 'நாளைத்தினம் இராமன் முடிசூடும் நாள்' என்று நகரத்தாருக்குத் தெரிவித்து நகரை அலங்கரிக்கும்படி கட்டளையிட்டான். அதனை அறிந்த அனைவரும் அளவற்ற மகிழ்ச்சியடைந்து, சூரியனையும் திருமால் மார்பிலணிந்த கவுத்துவ மணியையும் அதிகமாக விளங்கச் செய்வார் போல, இயல்பாக முழுத்த அழகுடைய நகரத்தை அதிக அழகு அடையும்படி அலங்கரிப்பாராயினர்.

அலங்கரிக்கப் பெற்ற அந்நகரத்தில், வெண்மை, கருமை, செம்மை முதலிய அநேக வருணங்களையுடைய சேலைக் கொடிகள் பறப்பன, பலநிறப் பறவைகள் பறப்பன போன்றன. மாதர்கள்

---

* செய்தல். † பலம்.

கழுத்துப் போலக் கமுகுகளும், தொடை போல வாழைகளும் நாட்டப்பட்டன. அவர்கள் பல்வரிசை போல முத்துமாலைகள் தூக்கப்பட்டன. வெண்ணிற உறைகள் பொதிந்த மாணிக்கத் தூண்களும் பவளத் தூண்களும் விபூதி உத்தூளித்த விமலனை யும்* பனி மூடிய பாலசூரியனையும் போலத் தோன்றின. குதிரைகள் பூட்டிய தேர்த் தொகுதிகள், அந்நகரின் அழகு காண நாடிப் போந்த தெய்வ விமானங்கள் போன்றன. நெற்றிப்பட்டம் சொலிக்க யானைகள் திரிவன, உதித்த சூரியனுடன் உதயகிரி பல உலவுவன ஒத்தன.

அந்நகரத்தின் அழகு காண வந்த அமரர், அங்கே ஐசுவரி யமும் அழகும் அநுபோகப் பொருள்களும் அளவின்றி அமைந் திருத்தலால் அந்நகர் தந்நகர்† போலத் தோன்றக் கண்டு, அவர்கள், அந்நகரிலோ தந்நகரிலோ எந்நகரிலே யிருக்கின்றோ மென் றெண்ணுவா ராயினர்.

### கூனி வெளிப்படல்

இவ்வாறாக, அந்நகர் பொன்னகர்போல அலங்கரிக்கப்பட்டு விளங்குதலுற்ற வேளையிலே, திரிலோகங்களுக்கும் தீங்கிழைத்த தீயோனாகிய இராவணனுடைய தீவினைப் பயன்க ளெல்லாம் திரண்டு ஒரு வடிவுகொண்டாற் போன்ற மந்தரை யென்ற கொடிய மனம் படைத்த கூனி வெளிப்பட்டாள்.

‡ அவள், இராமன் பாலப் பருவத்திலே விளையாட்டாகத் தன் கூனிலே வில்லா லெய்த உண்டை பட்டு வருத்தமுற்றுக் கூன் நிமிரப் பெற்றவள். (அவனால் தான் வருந்தியது போலத் தன்னால் அவன் வருந்தவும், முடங்கி ஒடுங்கி யிருந்த தன் உடம்பு நிமிர்ந்து வளர்ந்து அழகுற்றது போல அடங்கி யொடுங்கியிருந்த அவன் புகழுடம்பு ஓங்கி வளர்ந்து பெருமை யுறவும் கருதினாள் போன்று) அவள், இராமன் முடிசூடுகின்றா னென்று கேட்ட மாத்திரத்தில், நெஞ்சு படபட வென்று துடிக்க, அந்நெஞ்சில் நெடு நாளாக நிலைத்திருந்த கோபத் தீ குதித் தெழுந்து கண்கள் வழியே சுவாலை வீச, அத்தீ வெடித்தாற் போன்ற உரத்த சொல்லுடையளாய்க் கைகேயியின் மாளிகையை அடைந்து, அங்கே திருப்பாற் கடலிலே செம்பவளக் கொடி

---

* சிவன். † தம் நகர்.

‡ ஸ்ரீ சுப்பராய செட்டியார் இந்தப் படலம் 'நாற்கடல்' என்ற செய்யுளுக்குச் செய்திருக்கும் உரையைப் பார்க்க.

செந்தாமரை பூத்துக் கிடந்தாற்போல, வெண்மலர் விரித்த மெத்தையிலே சிவந்த திருமுக மண்டலம் திவ்விய தேசசோடு பொலியக் கருணை பொழியும் கண் முகிழ்த்து உறங்கும் கைகேயி யைக் கிட்டித் தூக்கம் நீக்கப் பாதத்தைத் தொட்டாள். அவள் உணர்ந்து தூங்குதல் நீங்கியும் நீங்காமலுமிருக்கும் போதே, அவளை நோக்கி மந்தரை கூறுவாள் :

அணங்குவாள் விடவரா வணுகு மெல்லையும்
குணங்கெடா தொளிவிரி குளிர்வெண் டிங்கள்போல்
பிணங்குவான் பேரிடர் பிணிக்க நண்ணவும்
உணங்குவா யல்லைநீ யுறங்கு வாயென்றாள் (16)

**கொண்டுகூட்டு :** 'அணங்கு வாள்விட அரா அணுகும் எல்லையும் குணம் கெடாது ஒளி விரி குளிர் வெண் திங்கள் போல், பிணங்கு வான் பேர் இடர் பிணிக்க நண்ணவும், உணங்கு வாய் அல்லை! நீ உறங்கு வாய்!' என்றாள்.

**பொருள் :** 'துன்பஞ் செய்யும் இராகு வென்னும் பாம்பு (தன்னை விழுங்க) நெருங்கிவிட்ட பொழுதினும் (தன் ஒளித்) தன்மை சிறிதும் கெடாமல் ஒளி பரப்புகின்ற குளிர்ந்த வெண் மதி போல, மிகப் பெரிய துன்பம் உன்னைப் பற்றிக்கொள்ள அணுகியிருக்கவும், முகம் வாடா திருக்கின்றாய்! ஒரு சிந்தையு மின்றித் தூங்கவும் செய்கின்றாய்! (என்னே உன் மதி இருந்த வாறு!') என்று சொன்னாள்.

அணங்குதல் - வருத்துதல் - துன்புறுத்தல்.—பரிபா. வாள் - ஒளி. குணம் - தன்மை. பிணங்குதல் - மாறுபடல். வான் - பெருமை. வான் பேரிடர் - மிகப் பெரிய துன்பம். பிணித்தல் - கட்டல். உணங்குதல் - வாடுதல். இப்பாட்டில் உபமான உபமேயங்கள் ஒன்றுக்கொன்று ஆச்சரியகரமான பொருத்த முடையனவா யிருத்தல் ஆழ்ந்து ஆராய்ந்து அறிந்து ஆனந்திக்கத் தக்கது.

### 'நீ தாழ்ந்தாய்! கோசலை வாழ்ந்தாள்' எனல்

அதற்குக் கைகேயி, 'என் பிள்ளைகள் சேமமா யிருக்கின்றார் கள். ஒவ்வொருவரும் அறநெறி வழுவா தொழுகுகின்றார்கள். அப்படி யிருக்க, எப்படி எனக்குத் துன்பம் அடுக்கும்? சற்புத் திரரைப் பெற்றா ரெல்லார்க்கும் நற்கதி உண்டு. அப்புத்திரருள் ஒப்பற் றுயர்ந்த உத்தமனான இராமனைப் பெற்ற எனக்குத் துன்பமென்ப தொன் றுண்டோ?' என,—மந்தரை, 'நீ உன் மதியால் தாழ்ந்தாய் : கோசலை தன் மதியால் வாழ்ந்தாள்'

எனக்—கைகேயி, ‘அவளுக்கு நாயகனே ராச ராசனான தசரத சக்கரவர்த்தி, குமாரனே பாரெலாம் புகழ் பரதன்; இப்பெரு வாழ்வினும் மேலாக இனி வரும் வாழ்வு யாது இருக்கக்கூடியது?’ என,—மந்தரை, ஆண்மக்கள் சிரிக்க ஆண்மை பழுதுபடத் தாடகை யென்ற பெண்ணைக் கொன்ற இராமன் நாளை முடி சூடுவான். இதுதான் கோசலைக்கு வந்த வாழ்வு’ என்றாள்.

அதனால், கைகேயி மனம் வேறுபடவில்லை; அந்த நற்செய்தி யைக் கேட்டுக் கோசலை எவ்வளவு களிப்பாளோ அவ்வளவு களித்தாள். இராமனுக்கு முடிசூட மிக விரும்பிய தசரதன் இருவர் மனத்தும் இருந்ததனால், அவன் மனத்தை அவ்விருவர் மனமும் அம் முடிசூட்டு விஷயத்தில் ஒத்திருந்தன.

### கைகேயி இரத்தின மாலை அளிக்கக் கூனி வீசி யெறிதல்

பூமியிற் சமுத்திரம் பொங்கா நிற்கப் பூரண சந்திரன் பொலிதல் போலக் கைகேயி மனத்தில் அன்புக்கடல் பொங்கிப் பெருக, அவள் முகமதி விசேட தேசசோடு கூடி விளங்கியது: அப்போது, அவள் கழி பேருவகை கொண்டு ஓர் உயர்ந்த ஒளி மிகுந்த இரத்தின மாலையை மந்தரைக்குக் கொடுத்தாள். கொடுக்கவே, அவள் கோபித்தாள்; கொதித்து நோக்கினாள்; வைதாள்; மன மழிந்தாள்; பெருமூச்செறிந்தாள்; அழுதாள்; அம்மாலையை நிலங் குழிய வீசி யெறிந்தாள்.

### கூனி கைகேயியின் அறியாமையை வெறுத்துக் கூறல்

பின்பு, அவள் கைகேயியைக் கடிந்து பார்த்து, ‘நீ அறிவில் லாய்! பைத்தியக்காரி! நீ பெற்ற பிள்ளையுடன் கோசலைக்குத் தொண்டு செய்து துன்புறுவாயாக! நீ அவளுக்கு அடிமைத் தொழில் செய்தல் போல, நான் அவள் தாதியர்க்கு அடிமை யாய்ப் பணி செய்யேன். இராமனும் சீதையும் சிங்காதனத்தில் வீற்றிருக்க, உன் மகன் வெறுந் தரையி லிருக்கும்படியான போது, நீ எதற்காக மகிழ்கின்றாய்?

‘பரதன் இறத்தல் நலம்; இறவா துயிரோ டிருக்கின்றான். யாது செய்து பிழைப்பானோ? நீ தாயானதனால் அவன் பிறந் தும் பிறந்ததனாலாம் பயனை அடையாமல், பிறவாதவனானான். இராமன் இலக்குமணனுடன் பூமியை ஆள்வானானால், பரதனைச் சத்துருக்கனோடு வனஞ் சென்று தவஞ்செய்ய விடுதல் நல்லது.

பரதன் மண்ணை ஆண்ட மன்னர் வரிசையில் வைத் தெண்ணப் பிறந்திலன். இப்படி அவன் இருத்தலினும் இறத்தல் நன்று.

'கட்டழகும், இளமையும், காய பலமும், கல்வி நலமும், வில்லாண்மையும், வீரமும், வேறு அளவற்ற நற்குணங்களும் பரதனுக்கு அமைந்தது, புல்லிற் கவிழ்த்த அமுதம் போலப் பய னற்றதாயிற்று. அவனை அரசன் பாட்டனூர்க்கு அன்று அனுப்பிய கருத்து, இன்று எனக்கு விளங்கியது.

'அப்பா! பரதா! உன்னைத் தூர தேசத்துக்கு அனுப்பி விட்டு இராச்சியத்தை இராமனுக்கு ஈந்த தந்தையும் கொடியன்! அதனைத் தடாத தாயும் கொடியள்! கைகேயீ! அரசர் குலத்திற் பிறந்து, அரசர் மனையில் வளர்ந்து, அரசர் குடியிற் புகுந்து, அரசிகளுக்கு அரசியான நீ கரை காணரிய கவலைக் கடலிற் கவிழ்கின்றாய்! உனக்கு உறுதியானதை உரைக்கவும் கேளாய்: நீயாகவும் உணராய்' என்றாள்.

### கைகேயி கோபித்துக் கூறல்

இவ்வாறு மந்தரை கூறிய கொடுஞ் சொற்கள் நெருப்பில் நெய் சொரிந்தாற் போலக் கோபத்தை யெழுப்பக் கைகேயி கண்கள் சிவக்க அவளை நோக்கிக் கூறுவாள் :

**வெயின்மு றைக்குலக் கதிரவன் முதலிய மேலோர்**
**உயிர்மு தற்பொரு டிறம்பினு முறைதிறம் பாதோர்**
**மயின்மு றைக்குலத் துரிமையை மனுமுதன் மரபைச்**
**செயிரு றப்புலைச் சிந்தையா லென்சொனாய் தீயோய் (17)**

கொண்டுகூட்டு: 'தீயோய், வெயில் முறைக் குலக் கதிரவன் முதலிய மேலோர், (தம்) உயிர் முதல் பொருள்கள் திறம்பினும், உரை திறம்பாதோர் (அநுசரித்துவந்த) மயில் முறைக் குலத்து உரிமையை— மனுமுதல் மரபை—செயிர் உற (உன்) புலைச் சிந்தையால் என் சொன்னாய்?

பொருள்: 'கொடியாளே! வெயிலைத் தனக்கு இயல்பான குணமாக உடைய சிறப்புள்ள எங்கள் குல முதல்வனான சூரி யன் முதலிய எங்கள் முன்னோர்கள், தங்கள் உயிர் முதலிய பொருள்கள் தவறிப் போவதா யிருந்தாலும் அவைகள் தவறாமற் காத்தற்காகச் சொற் றவறாதவர்கள் (இதுவரை தவறா தநுச ரித்து வந்திருக்கிற, மூத்தவனே முடிசூடுதலாகிய, மூத்த ஆண் குஞ்சுக்கே கலாபம் முளைக்கும்) மயிற்குல முறைமையை

உடைய எங்கள் குலப்பாத்தியத்தை எங்கள் முன்னோனாகிய மனுவின் காலம் முதல் வழங்கிவரும் பழமையான வழக்கத்தைக் குற்றம் பொருந்தும்படி உன்னுடைய நீச புத்தியால் யாது செப்பினாய்?

முறை - குணம்—ச. அ. குலம் - சிரேட்டம், சிறப்பு. திறம்புதல் - தவறுதல். செயிர் - குற்றம். புலை - கீழ்மை, தாழ்வு. புலைச் சிந்தை, புலை மக்கட் குரிய எண்ண மெனவும் பொருள்படும். மூத்த ஆண் மயிற் குஞ்சுக்கே கலாபம் முளைக்கு மென்பது ஐதிகம்.* (17)

**எனக்கு நல்லையு மல்லைநீ யென்மகன் பரதன்**
**தனக்கு நல்லையு மல்லையத் தருமமே நோக்கில்**
**உனக்கு நல்லையு மல்லைவந் தூழ்வினை தூண்ட**
**மனக்கு நல்லன சொல்லினை மதியிலா மனத்தோய் (18)**

**கொண்டுகூட்டு:** 'மதியில்லாத மனத்தோய்! நீ எனக்கு நல்லை அல்லை; என் மகன் பரதன் தனக்கும் நல்லை அல்லை; அந்தத் தருமம் நோக்கில், உனக்கும் நல்லை அல்லை; ஊழ்வினை வந்து தூண்ட, (உன்) மனத்துக்கு நல்லன (போலத் தோன்றிய தீயன) சொல்லினை.

**பொருள்:** 'அறிவில்லாய்! என்னைத் தீமை செய்யத் தூண்டுதலால் நீ எனக்கு நல்லா யல்லாய்! (முறை தவறி அரசடையக் கூறுதலால்), பரதனுக்கும் நல்லா யல்லாய்! (அவரவர் வினைப்பயனை அவரவர் அடையச் செய்வது எதுவோ) அந்தத் தருமம் (என்ன பலன் உனக் களிக்கும்) என்பதை நோக்கினால், (எங்களைத் தீவழியிற் செலுத்த முயன்ற தீவினைப் பயனை அடையற்பாலையாய்) உனக்குமே நல்லா யல்லாய்! முன் செய்த தீவினை அதன் பயனைத் தரவேண்டிய காலத்தில் வந்து உன்னைத்

---

* மயின் முறைக் குலத்துரிமை :—மை இல் முறை என்பதை எழுத்து முதற் போலியாய் மயின் முறை என்று கொண்டு குற்ற மற்ற முறையுள்ள குலம் என்றும்;

ஒரு மயிலுக்குப் பல குஞ்சுகளிருந்தாலும் மூத்ததற்கே உச்சிக் கொண்டை முளைக்கும்; அது மரித்த பின்னரே அடுத்ததற்கு முளைத்து வரிசையாய் வரல் போல, மூத்த மகன் இராமனுக்கே முடிசூட்டல் முறைமை என்றும் கூறுவர்.

மூத்த மயிற்குஞ்சுக்கே கலாபம் முளைக்கு மென்பதற்குத் தணிகைப் புராணம், களவுப் படலம், 244-ம் பாட்டு ஆதாரம் :

'பலாவம் பொழிலி னொரு தாயுயிர்த்த பல மயிற்கும்
கலாவம் புனைந்த களிமயின் மூத்தது.'

பாரதம், சாந்தி பர்வத்தில் யுதிஷ்டிரனுக்குப் பீஷ்மன் மயிலின் பல்வேறு தன்மைகளை விவரித்து அவற்றை வேந்தன் அனுசரிக்கவேண்டு மென்று அறிவுறுத்துகிறான்.
—செந். தொ. 19.

தூண்டுதலால், உன் மனத்துக்கு நல்லவை (போலத் தோன்றிய தீயவை)களை உரைத்தாய்.

ஊழ்வினை - தீவினை—சிந்தா. மனக்கு - மனத்துக்கு. (18)

பிறந்தி றந்துபோய்ப் பெறுவது மிழப்பதும் புகழே
நிறந்தி றம்பினு நியாயமே திறம்பினு நெறியின்
திறந்தி றம்பினுஞ் செய்தவந் திறம்பினுஞ் செயிர்தீர்
மறந்தி றம்பினும் வரன்முறை திறம்புதல் வழக்கோ (19)

கொண்டுகூட்டு : (ஒருவன்) பிறந்து இறந்துபோய்ப் பெறுவதும் (புகழே:) இழப்பதும் புகழே. நிறம் திறம்பினும், நியாயமே திறம்பினும், நெறியின் திறம் திறம்பினும், செய் தவம் திறம்பினும், செயிர்தீர் மறம் திறம்பினும் வரன்முறை திறம்புதல் வழக்கோ?

பொருள் : 'ஒருவன் இந்த உலகத்தில் மனித சரீரம் பெற்றுப் பிறத்தலும் இறத்தலும் செய்து (பிறத்தலுக்கும் இறத்தலுக்கும் இடையே அந்த மனித சரீரத்தாற் பெறுகின்ற பொருள்கள் இழக்கின்ற பொருள்களிற் சிறந்ததாகப்) பெறுவதும் புகழே, இழப்பதும் புகழே; அப்படிப்பட்ட புகழைப் பெறுதற்குக் கருவியாகிய சரீரம் தவறினும், நடுவு நிலைமையாகிய நியாயம் தவறினும், நல்ல ஒழுக்கத்தின் உறுதி தவறினும், செய்யும் தவம் தவறினும், சத்திரியர்க்குப் பிரதானமான வீரம் தவறினும் சேட்ட புத்திர பாத்தியமான பரம்பரைக் கிரமம் தவறுதல் முறைமையாமோ? (ஆகாது), என்று கைகேயி கூறினள்.)

'செத்துப் போனன்' என்பது போல 'இறந்துபோய்' என்பது ஒரு சொல் நீர்மைத்தாய் வந்தது. நிறம் - சரீரம்—த. அ. திறம்புதல்-தவறுதல். திறம் - உறுதி. செயிர் - குற்றம். தீர்தல் - நீங்குதல். மறம் - வீரம். உரையில் 'அப்படிப்பட்ட புகழைப் பெறுதற்குக் கருவியாகிய' என்ற விசேடணம், 'நியாயம்' 'நெறியின் திறம்' 'தவம்' 'மறம்' 'வரன் முறை' என்பவைகளையும் விசேடித்து நிற்றல் காண்க.

தோன்றிற் புகழொடு தோன்றுக; அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று

என்றவாறு 'பிறந்திறந்து போய்ப் பெறுவதும் இழப்பதும் புகழே' எனப் பட்டது. பொய்யாமை யென்ற அறத்தைச் சிறப்பித்து வற்புறுத்தப்

பொய்யாமை பொய்யாமை யாற்றின், அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று

என்றாற் போல, 'முன்னோர் முறையைத் தவற விடலாகாது' என்ற அறத்தை வலியுறுத்தச் சரீரப் பாதுகாப்பு முதலிய பல அறங்களை அடுக்

கூக் கூறி அவைகளை யெல்லாம் தவற விட்டாலும் விடலாம், முன்னோர் முறையைத் தவறவிட லாகா தென்று கூறப்பட்டது. ஒருவனுடைய ஒழுக்கமாகிய கட்டடத்துக்கு மற்றைய அறங்க ளெல்லாம் மேற் பகுதி களாக முன்னோர் முறை வழுவாமை அடிப்படையா மென்பது கருத்து. உலக மென்ப துயர்ந்தோர் மாட்டே' என்ற கருத்துக் கிணங்க 'முன் னோர்' என்பது இங்கே மெய்யறிவும் நல்லொழுக்கமு முடைய முன் னோரை உணர்த்தி நின்றது.

பாட பேதம்: புகழேல்.*

மேற்கூறியவாறு கைகேயி கூறி, 'அநியாயமும் அக்கிரமு மான காரியங்களைச் சொல்லிய உனது நாக்கை அறுத் தெறிதல் வேண்டும். நீ பழமையான தோழியாதலால் அது செய்யாது பொறுத்தேன். என் எதிரே நில்லாதே. போ' என்றாள். அவ் வாறு கடிந்து கூறியும், மந்தரை, சிறிதும் அஞ்சாமல், சிகிச்சை செய்தும் தீராத விடம் போல நீங்காமல், 'எனக்குத் தஞ்ச மாகிய உனக்கு உறுதிப் பொருளை உணர்த்துதலை ஒழியேன்' என்று காலில் வீழ்ந்து கூறுவாள்:

### மந்தரை எதிர் நியாயம் கூறல்

மூத்த வர்க்குறித் தரசெனு முறைமையி னுலகங்
காத்த மன்னனி லிளையனன் றேகடல் வண்ணன்
ஏத்து நீண்முடி புனைவதற் கிசைந்தன னென்றால்
மீத்தருஞ் செல்வம் பரதனை விலக்குமா றெவனோ (20)

கொண்டுகூட்டு: "அரசு, மூத்தவர்க்கு உரித்து" எனும் முறைமையின், உலகம் காத்த மன்னனில் கடல்வண்ணன் இளையன் அன்றே? (அவன்) ஏத்தும் நீள் முடி புனைவதற்கு இசைந்தனன் என்றால், மீ தரும் செல்வத்தைப் பரதனை விலக்குமாறு எவனோ?

பொருள்: "அரசு மூத்தவனுக்கே உரியது" என்று நீ கூறும் முறைப்படி உலகத்தைக் காத்த தசரத ராசனிலும் இராமன் இளையவ னன்றோ? அப்படி யிருந்தும் அவன் தனக்கு மூத்த தசரத னிருக்கத் தான் முடிசூடுதற்குச் சம்மதித்தா னென்றால், அவனிருக்க அவனுக்கு இளையவனான பரதன் அந்த அரசச் செல்வத்தை அடையாமல் அப் பரதனை விலக்கு முறை எப்படிப் பொருந்தும்?

---

* இப்பாடல் கொண்டால் 'புகழேல்' என்பதற்குப் (பெரியோர்) 'புகழென் கையினால்' எனப் பொருள் கொள்ளலாம். ஏல் - எனில் - என்கையினால் (முனிகு வம் எனினே வேண்டே மென்கையினாலே. பொருந. 107—ச. அ.)

ஏத்தும் நீள் முடி - துதிக்கப்பெற்ற உயர்வுடைய கிரீடம். மீ தரும் செல்வம் -(அடைந்தவனுக்கு) மேன்மையை அளிக்கும் (அரசச்) செல்வம். மீ - மேல் - மேன்மை. எவன் - எப்படி. ('எவன் பல மொழிகுவம்'— கலி. 5.) 'வேந்தன்' 'மன்னன்' என்பவை இந்திரன் பெயர்கள். ('மாலை வெண்குடை மன்னவன் [- இந்திரன்] கோயிலும்.'—சிலப். 5. 173.—த. அ.) ஆதலால், 'மன்னன்' தசரதனைக் குறியாமல், இந்திரனைக் குறிப்பதாகக் கொள்ளலாம். 'கடல் வண்ணன்' திருமா லவதாரமான இராமனை உணர்த்தாமல் திருமாலையே உணர்த்துவ தாகலாம். ஆகவே, இப்பாட்டுக்குப் பின்வரும் பொருளும் பொருந்தும்:

'மூத்தவனுக்கே அரசு உரிய தென்ற புராதன சம்பிரதாயப்படி உலகத்தைக் காத்த இந்திரனைக் காட்டிலும் (அவன் தம்பியான உபேந்திரனை அவதரித்த) திருமால் இளையவ னன்றோ? (அவன் தமயனிருக்கவேயும், தான் உலக காவலனாகி) முடி சூடுதற்குப் பொருத்தமானவனா யிருந்தானாதலால், (மூத்த இராம னிருக்கும்போது இளைய) பரதனுக்கு (எச் செல்வங்களினும் அதிகமான) மேன்மை தருவதான (அரசச்) செல்வத்தைச் சேராமல் விலக்குமாறு எவ்வாறு (பொருத்தமானதாம்)? (20)

அறநி ரம்பிய வருளுடை யருந்தவர்க் கேனும்
பெறல ருந்திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம்
மறநி னைந்துமை வலிகில ராயினு மனத்தால்
இறலு றும்படி யியற்றுவ ரிடையறு வின்னல் (21)

கொண்டுகூட்டு: 'அறம் நிரம்பிய அருள் உடை அருந் தவர்க்கேனும், பெறல்அரும் திருவைப் பெற்றபின் சிந்தனை பிறிதாகும். (இவர்கள் ஊன்றி) நினைந்து உம்மை மறம் வலிகிலர் ஆயினும் நீங்களே துயர் தாங்கா மனத்தால் இறல் உறும்படி இடையறு இன்னல் இயற்றுவர்.

பொருள்: 'தரும எண்ணம் நிறைந்த, எல்லா உயிர்களுக்கும் இரங்கும் கருணையுடைய மனத்தினராய்ச் செய்தற்கு அரிய தவத்தைச் செய்துமுடித்த முனிவர்களாயினும், அவர்களுக்கும், பெறுதற்கரிய செல்வத்தை(ப் பெற்றால், அதனைப் பெறுமுன் இருந்த தரும சிந்தனையும் சீவகாருணியமும், அச்செல்வத்தை)ப் பெற்ற பின்பு நீங்கி மனம் வேறுபட்டுவிடும்; அவர்கள் மனமே அவ்வாறானால், இவர்கள் மனம் எவ்வாறு மென்று கூற வேண்டிய தில்லை; இவர்கள் தீர்க்கமாக ஆலோசித்து உங்களைக் கொல்லுதலைத் துணியாராயினும் நீங்களே இவர்கள் செய்யும் துன்பத்தைப் பொறுக்கமாட்டாத மனத்தால் (நான்று கொள்ளல் நஞ்சுண்ணல் முதலிய வகையால்) சாதலுறும்படி இடையறாத தொடர்ச்சியான துன்பங்களைச் செய்வார்கள்.

சிந்தனை - சிந்தித்தல்; சிந்திக்கும் மனத்தைக் குறித்தது. (ஊன்றி) நினைந்து உ(ம்)மை மறம் (-கொலை-கொல்லல்) வலிகிலராயினும் (-துணியாராயினும்) என மாற்றுக. இறல் - இறுதல் - முடிதல் - சாதல். செல்வம் பெறுவார் 'அருந்தவரேனும் அவர்க்கு' என்பதை இணைத்துச் சுருக்கி 'அருந்தவர்க்கேனும்' என்றார். இவ்வாறே, எதிர்ப்பவன் 'ஈசனாயினும் அவனுக்கும்' என்பதைச் சுருக்கி 'ஈசற்காயினும்' என, 'ஈசற்காயினும் ஈடழிவுற்றிறை - வாசிப்பாடறியாத மனத்தினன்' (நிந்தனைப் படலம் 25) என்பதிற் கூறுதல் காண்க. (21)

**புரியுந் தன்மக னரசெனிற் பூதல மெல்லாம்**
**விரியுஞ் சிந்தனைக் கோசலைக் குடைமையா மென்றால்**
**பரியு நின்குலப் புதல்வற்கு முனக்குமிப் பார்மேல்**
**உரிய தென்னவ ளுதவிய வொருபொரு ளல்லால் (22)**

**கொண்டுகூட்டு:** 'தன்மகன் அரசுபுரியும் என்னில், விரியும் சிந்தனைக் கோசலைக்கு, பூதலம் எல்லாம் உடைமை ஆகும். என்றால்— அவள் உதவிய ஒரு பொருள் அல்லால், பரியும் நின்குலப் புதல்வற்கும் உனக்கும் உரியது (அவளுடைய) இப் பார்மேல் என் (உளது)?

**பொருள்:** 'தன் மகன் அரசு செய்வானானால், கோசலைக்குப் பூமி முழுதும் உடைமையாம். அப்படியானால், அவள் மனம் வந்து கொடுக்கும் கொடை வகையாற் கிடைக்கும் ஒரே வகைப் பொருளல்லாமல், உன் மகனுக்கும் உனக்கும் சொந்தமாக உரியது (அவள் உடைமையாகிய) இந்தப் பூமியிலே யாது? (ஒன்றுமில்லை.)

விரியும் சிந்தை - (மகிழ்ச்சியால் விம்மிப்) பூரிக்கும் மனம். பரியும் - (அரசை யிழந்து) வருந்தும். குலப்புதல்வன் - (அரசாளும்) குலத்தையுடைய மகன்; சிறந்த மகன். (குலம் - சிறப்பு). 'தன் மகன் அரசு புரியுமெனில்' என்றும், 'அவள் உதவிய ஒரு பொருளல்லால் உன் புதல்வற்கும் உனக்கும் உரியது இப் பார்மேல் என்' என்றும் மாற்றுக.

'உடைமையாம், உடைமையாமென்றால்' என்பதை 'உடைமையாமென்றால்' எனச் சுருக்கினார். இது போல, நிந்தனைப்படலம் 66-ம் கவியில் 'கொன்று கோள் இழைத்தால், நீ நின் உயிர்விடுவாய், நீ நின் உயிர் விடில்' என்பதைக் 'கொன்று கோள் இழைத்தால் நீ நின் உயிர்விடில்' என்று குறுக்கியிருத்தல் காண்க. 'எரியும் சிந்தனை' என்ற பாடத்துக்கு(ப் பிறர் வாழ்வு காணப் பொறாமை கொண்டு) அழலும் மனம் என்று பொருள் கொள்க.

**பாட பேதம் :** எரியும் சிந்தனை. (22)

தூண்டு மின்னலும் வறுமையுந் தொடர்தரத் துயரால்
ஈண்டு வந்துனை யிரப்பவர்க் கிருநிதி யவளை
வேண்டி யீதியோ வெள்குதி யோவிம்ம னோயால்
மாண்டு போதியோ மறுத்தியோ வெங்ஙனம் வாழ்தி

கொண்டுகூட்டு : '(உன்பால் செல்லத்) தூண்டும் வறுமையும், இன்னலும் தொடர்தர, துயரால் ஈண்டு வந்து உன்னை இரப்பவர்க்கு, இருநிதி அவளை வேண்டி ஈதியோ? (அல்லது மாற்றாளிடம் இரக்க) வெள்குதியோ? விம்மல் நோயால், மாண்டு போதியோ? (இல்லை என) மறுத்தியோ? எங்ஙனம் வாழ்தி?

பொருள் : ' தம்மை உன்பாற் பொருள்வேண்டிச் செல்லும்படி செலுத்தும் தரித்திரமும் (அதனோடு சமவாய சம்பந்தமுடையதாய்* உடன் நிகழும்) துன்பமும் நீங்காமல் தள்ளிக் கொண்டு பின்தொடர அவ்வாறு தள்ளப்படுதலால் உண்டாம் புதுத் துன்பத்தோடு இங்கே வந்து உன் பொருளை நீ கொடுக்கும் நிலைமையிலிருந்த உன்னை இதற்கு முன் யாசித்ததுபோல யாசிப்பவர்க்கு நீ கொடுக்கக் கருதும் பொருளைக் கோசலையை இரந்து வாங்கிக் கொடுப்பாயோ? அவள் உன் மாற்றவளாதலால் அவள்பால் இரக்க வெட்கப்படுவாயோ? (இரக்கும் வெட்கம் ஒருபுறம் வருத்த, இரந்தாருக் கீயமாட்டா வருத்தம் ஒரு புறம் வருத்த, உண்டாகின்ற, இருதலைக்கொள்ளி எறும்பினது துன்பம் போன்ற) துன்பத்தாற் செத்துப்போவாயோ? ("சாதலின் இன்னாததில்லை; இனிததூஉம்—ஈதல் இயையாக் கடை" ஆதலால் இறத்தலினும் கொடியதான, இரந்தார்க்கு இல்லையென்னும்) மறுத்தலைச் செய்வாயோ? மறுக்குமா றன்றி, வாழுமா றில்லை யாதலால், எவ்வாறு வாழ்வாய்? (இறந்தே போவாய்!)

தூண்டுதல் - செலுத்தல். இன்னல், துயர், விம்மல், நோய், இன்னாதது ஆகியவை துன்ப மென்னும் ஒருபொருள் குறித்த பல சொற்கள். 'வறுமையும் இன்னலும்' எனற்பாலவை செய்யுளாதலால் 'இன்னலும் வறுமையும்' எனப்பட்டன. துயரால் - துயரோடு. இதுபோலப் 'பெண்டகையோடு' என்பது 'பெண்டகையால்' எனப் 'பண்டறியேன்' என்ற குறளில் வருதல் காண்க. இருநிதி - பெரும் பொருள். வேண்டல் - இரத்தல்; ('ஏற்றலே குறைகோள் பின்சென் றிரத்தலே வேண்டலும்பேர்' —சூடா.) வெள்குதல் - நாணுதல். இரப்பார் பலராய்ப் பல காலத்து வருவ ராதலால், அவர்க் கெல்லாம் கொடுத்தற்குத் திரளான திரவியம் வேண்டு மென்பது கருதி 'இருநிதி' என்றார். (23)

* சமவாய சம்பந்தம் - நீக்கமின்றி யிருப்பவற்றின் சம்பந்தம்.—ச. அ.

**சிந்தை செய்கையிற் றிகைத்தனை யினிச்சில நாளில்**
**தந்த மின்மையு மெளிமையு நிற்கொண்டு தவிர்க்க**
**உந்தை யுன்னையுன் கிளைஞர்மற் றுன்குலத் துள்ளோர்**
**வந்து காண்பதுன் மாற்றவள் செல்வமோ மதியாய் (24)**

கொண்டுகூட்டு : '(நீ) சிந்தையில் (திகைத்தனை ;) செய்கையில் *திகைத்தனை : (அந்நியர் கிடக்க) உ(ன் த)ந்தை, (உன் அன்)னை, உன் கிளைஞர், உன் குலத்து உள்ளோர், தம் தம் இன்மையும் எளிமையும் நின்னைக் கொண்டு தவிர்க்க, இனிச் சில நாளில் வந்து (உன்னை காண் பார்கள். அப்படிக்) காண்பது (எதைக் கருதி?) உன் (செல்வத்தையோ) மாற்றவள் செல்வத்தையோ? மதியாய்.*

**பொருள் :** '(இராமன் முடிசூடுதல் சம்பந்தமாக, நீ கருதியதும் தவறு; கருதியபடி செய்யத் துணிந்ததும் தவறு; ஆதலால்) நீ சிந்தித்தலிலும் திகைத்துவிட்டாய்; செய்தலிலும் திகைத்துவிட்டாய் : அந்நியரான இரவலர் கிடக்க; உன்னவ ரான உன் தந்தை உன் தாய் உன் சகோதரர் முதலிய உன் குடிப் பிறந்தார் உன் உறவினர் ஆனவர்கள் தங்கள் தங்கள் இல்லா மையையும் இல்லாமையால் ஏற்படும் ஏழைமையையும் உன்னைக் கொண்டு ஒழிக்க இன்னும் சில நாளில் வந்து உன்னைக் காண் பார்கள். அப்படிக் காண்பது உன் செல்வத்தைக் கருதியோ, உன் மாற்றாள் கோசலை செல்வத்தைக் கருதியோ? ஆலோசிப் பாயாக.

*சிந்தை - எண்ணம். இன்மை - இல்லாமை. எளிமை - ஏழைமை; தாழ்வு. உந்தை - உன் தந்தை. உன்னை - உன் அன்னை - உன் தாய். கிளைஞர் - உறவினர். குலம் - குடி. மதித்தல் - கருதுதல். இரப்பவர் உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத உணவு உடை முதலியவை இன்றி யிருத்தலைக் குறிக்க, அவர் திறத்தில் 'வறுமையும் இன்னலும்' என்றவள், எல்லா இன்றியமையாப் பொருள்களும் எதேட்டமாக உடையவராகிய கைகேயியின் இராச குடும்பத்தினரும் உறவினரும் சௌகரியத்துக்கு வேண்டிய வாகனங்கள் போன்ற சில பொருள்கள் இல்லாமையையும் அதனால் அவர்க்கு நேரும் தாழ்வையுங் குறிக்க, அவர் திறத்தில் 'வறுமை யும் இன்னலும்' என்னாது 'இன்மையும் எளிமையும்' என்றாள்.*

*இரவல ரெல்லாரும் வேண்டுவன ஒன்றுபோல ஊண் உடை முதலிய சில பொதுப் பொருள்களா யிருக்கக் கைகேயியின் தந்தை முதலியோர் விரும்புவன ஒன்றுபோ லில்லாமல், சிலர் தமக்குள்ள நாட்டோடு பக்கநாடு சேர்த்தல், சிலர்க்கு அதிகப் படை சேர்த்தல் முதலிய பலதிறப்பட்ட பொருள்களா யிருத்தல் குறிக்க, யாசகர் திறத்தில் எல்லாருக்கும் பொது வாக 'வறுமை' என்றாள்: அவளுடைய உறவினர் திறத்தில் பிரத்தியேக*

மான 'தம் தம் இன்மை' என்றாள். அவர்கள் வந்து இரப்பதாகவும் இவர்கள் வந்து காண்பதாகவும் கூறியதும் கவனிக்கத் தக்கது. (24)

**கெடுத்தொ ழிந்தனை யுனக்கரும் புதல்வனைக் கிளர்நீர்**
**உடுத்த பாரக முடையவ னொருமகற் கெனவே**
**கொடுத்த பேரர சவன்குலக் கோமைந்தர் தமக்கும்**
**அடுத்த தம்பிக்கு மாம்பிறர்க் காகுமோ வென்றாள் (25)**

கொண்டுகூட்டு : 'உனக்கு அரும் புதல்வனைக் கெடுத்து ஒழிந்தனை! கிளர்நீர் உடுத்த பாரகம் உடையவன் ஒரு மகற்கு எனவே கொடுத்த பேர் அரசு, (அவனுக்கும்) அவன் குலக் கோ மைந்தர் தமக்கும் அடுத்த தம்பிக்கும் ஆகும்; பிறர்க்கு ஆகுமோ?' என்றாள்.

பொருள் : 'உனது அருமைக் குமாரனை அரசடைய வொட்டாது தடுத்துக் கெடுத்து விட்டாய்! தசரத ராசன் தன் மகன் நால்வருள் இராமனாகிய ஒரு மகனுக்கென்றே கொடுத்த அரசு, அந்த மகனுக்கும் அவன் மக்களுக்கும் அவனை இடைவிடாமல் அடுத்திருக்கும் இலக்குமணனாகிய தம்பிக்கும் பிரயோசனம் ஆகும்; பரதன் முதலிய அந்நியர்க்குப் பிரயோசனம் ஆகுமோ?' என்றாள்.

கிளர்தல் - பிரகாசித்தல். நீர் - கடல். பாரகம் - பூமி. கோ - அரசன். கோ மைந்தர் - இராச குமாரர். (25)

இவ்வாறு மந்தரை கூறியதைக் கேட்ட, கைகேயியின் தூய மனமும் தீயதாகத் திரிந்தது.

### கவி கூறுதல்

**அரக்கர் பாவமு மல்லவ ரியற்றிய வறமும்**
**துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழி மடமான்**
**இரக்க மின்மையன் றேவின்றிவ் வுலகங்க ளிராமன்**
**பரக்குந் தொல்புக ழமுதினைப் பருகுகின் றதுவே (26)**

கொண்டுகூட்டு : அரக்கர் (இயற்றிய) பாவமும், அல்லவர் இயற்றிய அறமும் துரக்க, தூமொழி மடமான் நல் அருள் துறந்தனள். (அவளுக்கு) இரக்கம் இன்மை அன்றோ இன்று இவ் உலகங்கள் இராம(னது) பரக்கும் தொல் புகழ் அமுதினைப் பருகுகின்றது(க்குக் காரணம்).

பொருள் : இராவணாதி இராக்கதர்கள் செய்த தீவினையும் அவர் அல்லாதவர்கள் செய்த நல்வினையும் தூண்டக் கைகேயி தனக்கு இயல்பாக உள்ள இரக்கத்தைக் கைவிட்டாள். அவளுக்கு இரக்கமில்லாமை யன்றோ முற்காலத்தும் தற்காலத்

தும் பிற்காலத்தும் எல்லா உலகத்தினரும் உலகெல்லாம் பரவிய இராமனது பழம் புகழ் கூறுவதாகிய இராமாயண அமுதத்தைச் (செவி வாயால் மனவயிறு நிரம்ப) உண்ணுவதுக்குக் காரணம்!

துரத்தல் - தூண்டுதல். தூ - தூய்மை. மடம் - இளமை. தொல்- பழைய. 'உலகங்கள்' உலகங்களில் உள்ளாரையும், 'பருகுகின்றது' பருகுகின்றதுக்குக் காரணத்தையும் குறித்தன. இக் கவி, தெய்வம் சில சமயங்களில் தீமையினின்று நன்மை விளைவிப்பதைத் தெரிவிப்பதாய், மிக வெறுக்கப்பட்ட பொருள் மிக விரும்பப் பெற்ற பொருளுக்குக் காரணமா யிருந்ததை விளக்குவதாய், உண்மையை உள்ளவாறே உரைத்து உவப்பும் வியப்பும் ஒருங்கே நிகழ்விப்பதாய்ச் சுவை யுணர் வார் உள்ளத்தைச் சூறையாடித் தொண்டு கொள்வதாய் உள்ள நனியினிய அதி அற்புத கவியாம். (26)

### மந்தரை உபாயம் கூறல்

அவ்வாறு மனம் மாறி இரக்கம் நீங்கிய கைகேயி, மந்தரையை வாஞ்சித்து நோக்கி, 'என்மீது அன்புள்ளாய்! என் மகனுக்கும் இதம் செய்பவளா யிருக்கின்றாய்! அவன் மகுடம் வனையும் வகையை வழங்குவாயாக' என்றாள். எனவே, மந்தரை மகிழ்ந்து, 'என் தோழி சமர்த்தி! என் துணைவி சமர்த்தி!' என்று கைகேயியைப் புகழ்ந்து, பின்னும் தன் பெரு மகிழ்ச்சியை உணர்த்துவாளாய், அவள் பாதங்களில் விழுந்து, பணிந்துகொண்டு, 'என் சொற்படி நிற்பையேல், உலக முழுதும் உன் மகனுக்கே உரிமையாக்குவேன். நான் சொல்வதைக் கவனித்துக் கேள். தசரத சக்கரவர்த்தி சம்பராசுரனோடு சமர் செய்து சயிக்கும் தருணத்திற் சம்பவித்த சங்கடத்தை நீ தவிர்த்துச் சயமடையும்படி சகாயம்செய்த சமயத்தில், சக்கரவர்த்தி தந்த வரங்க ளிரண்டையும் அப்போது கொள்ளாது வைத்திருந்தாய். அவ்வரங்களை இப்போது கொள். அவற்றில் ஒன்றினால் அரசைக் கைப்பற்று. மற்றொன்றினால் இராமனை ஈரேழு வருடம் வனத்தில் வசிக்கச் செய். இதுவே (அரசைப் பெறுதற்கும் பெற்றதை இராமன் கவராமற் காத்தற்கும்) உபாயம்' என்றாள். உடனே கைகேயி, அவளை, உள்ளே உள்ள இருவர் உயிர்களும் நெருங்கிப் பொருந்தி ஒன்றாகச் செய்வாள் போல, இறுகத் தழுவி, வரிசை வரிசையான மணிமாலைகளையும் திரள் திரளான திரவியக் குவியல்களையும் வழங்கி, 'உலக முழுவதையும் என் ஒரு மகனுக்கு உதவினாய். அவனுக்கு இன்றளவும் நான் தாய்; இனித் தாய் நீயே; பரதன் தாய் நான்;

அரசன் தாய் நீ. எங்களுக்கு இதத்தை உரைத்தாய். பரதன் நாட்டிலே முடி சூடுதலும் இராமன் காட்டிலே குடியேறுதலும் ஆகச் செய்வேன்; அன்றேல், அரசன்முன் என் ஆவியைப் போகச் செய்வேன். நீ செல்வாயாக' என்றாள்.

### கைகேயி தன்னை அலங்கோலஞ் செய்துகொள்ளல்

**கூனி போனபின் குலமலர்க் குப்பைநின் றிழிந்தாள்**
**சோனை வார்குழற் கற்றையிற் சொருகிய மாலை**
**வான வார்மழை நுழைதரு மதிபிதிர்ப் பாள்போல்**
**தேன வாவுறு வண்டின மலமரச் சிதைத்தாள் (27)**

கொண்டுகூட்டு: கூனி போனபின் (கைகேயி) குலமலர்க் குப்பை நின்று இழிந்தாள்; சோனை வார் குழல் கற்றையில் சொருகிய மாலை (யை) வான வார் மழை நுழைதரும் மதி பிதிர்ப்பாள் போல், தேன் அவாவுறு வண்டு இனம் அலமரச் சிதைத்தாள்.

**பொருள்:** கூனி போனபின்பு (கைகேயி) சிறந்த மலர்க் குவியல்(களால் அமைத்த புஷ்பசயனத்தை) விட்டு இறங்கிக் கூந்தலிற் சொருகியிருந்த (வெண்மலர்) மாலையை, மேகத்தில் நுழைந்திருந்த சந்திரனைப் பேர்ப்பாள் போல, (அம்மாலையில்) தேனை விரும்பி யிருந்த வண்டுகள் சுழலும்படி, (பிடுங்கிச்) சிதைத் (தெறிந்)தாள்.

குலம் - சிறப்பு. குப்பை - குவியல். இழிந்தாள் - இறங்கினாள். சோனை வார் குழல் கற்றை (- தேனை) விடாமழை (போல, அணிந்திருக்கிற மலர் மாலையிலிருந்து) சொரிகின்ற கூந்தல் திரள். வான வார் மழை - ஆகாயத்தில் உள்ள நீர் (உண்ட) மேகம். (வார் - நீர்). அலமர - சுழல. (27)

**விளையும் தன்புகழ் வல்லியை வேரறுத் தென்னக்**
**கிளைகொண் மேகலை சிந்தினள் கிண்கிணி யோடும்**
**வளைது றந்தனண் மதியினின் மறுத்துடைப் பாள்போல்**
**அளக வாணுத லரும்பெறற் றிலகமு மழித்தாள் (28)**

கொண்டுகூட்டு: விளையும் தன் புகழ் வல்லியை வேர் அறுத்து என்ன, கிளைகொள் மேகலை சிந்தினள். கிண்கிணியோடு வளையும் துறந்தனள்; மதியினில் மறு(வைத்) துடைப்பாள் போல், அளகம் (அடுத்த) வாள்நுதல் பெறல் அரும் திலகமும் அழித்தாள்.

**பொருள்:** வளராநின்ற தனது புகழாகிய (வெண்மலர் பூத்த) கொடியை வேரோடும் அறுத்தெறிந்தாற் போல (வெண்

மணிகள் உள்ள) மேகலாபரணத்தை அறுத்துச் சிதறினள். காலில் அணிந்த சதங்கையுடன் கையிலணிந்த வளையலையும் கழற்றி நீக்கினள். பிறைச்சந்திர னிடத்துள்ள களங்கத்தைத் துடைத்தல் போல நெற்றியில் உள்ள திலகத்தைத் துடைத்து அழித்தாள்.

வல்லி - கொடி. மேகலை - ஏழு கோவை மணிகளாலாகிய இடைக் கட்டாகிய ஆபரணம்; ஏழு கோவைகளுடைமை பற்றிக் 'கிளை கொள் மேகலை' எனப்பட்டதுபோலும். கிண்கிணி - (கிண்கிணென ஒலிக்கும்) சதங்கை. அளகம் வாள் நுதல் - கூந்தல் (அடுத்து விளங்கும்) பிரகாச முடைய நெற்றி. பெறல் அரும் திலகம் - பெறுதற்கரிய பொட்டு ( - மிக அழகாக அமைந்த பொட்டு - அப்பொட்டுப் போல வேறு பொட்டுப் பல முறை இட்டுப் பார்த்தாலும் அமைதல் அருமை யென்றபடி). புகழ் வெண்மை யெனல் கவிமரபு. உரையில், வெண்மணிகள் வயிரங்களையும் முத்துக்களையும் குறித்தன; புகழ் வெண்மை யென்பதற் கியைய வெண் மலர் பூத்த கொடி யென்றும், வெண்மணிகள் உள்ள மேகலையென்றும் விவரிக்கப்பட்டன. (28)

**தாவின் மாமணிக் கலன் மற்றுந் தனித்தனி சிதறி**
**நாவி மென்குழல் நானிலந் தைவரப் பரப்பிக்**
**காவி யுண்டகண் ணஞ்சனங் கான்றிடக் கலுழாப்**
**பூவு திர்ந்ததோர் கொம்பெனப் புவிமிசைப் புரண்டாள் (29)**

கொண்டுகூட்டு : மற்றும், தா இல் மாமணிக் கலன் தனி தனி சிதறி, நாவி மென் குழல் நானிலம் தைவரப் பரப்பி, காவி உண்ட கண் அஞ்சனம் கான்றிடக் கலுழா, பூ உதிர்ந்தது ஓர் கொம்பு எனப் புவி மிசைப் புரண்டாள்.

பொருள் : நீக்கப்பட்ட மேகலை கிண்கிணி வளைகளாகிய மணியணிக ளல்லாமல் வேறுள்ள இரத்தினாபரணங்களையும் ஒன்றொன்றாகக் கழற்றிச் சிதறிக் கூந்தலை நிலத்தில் தோயும்படி விரித்துக் கண்கள் அஞ்சனத்தைக் கண்ணீரால் கரைத்துக் கக்கும்படி அழுது, பூக்கள் உதிர்க்கப்பட்ட கொம்பு போலத் தரையிலே புரண்டு கிடந்தாள்.

தா இல் மா மணி கலன் - குற்றம் இல்லாத பெரிய இரத்தினங்களா லாகிய ஆபரணங்கள். நாவி மென் குழல் - கத்தூரியால் வாசனை யேற் றப்பட்ட மெல்லிய கூந்தல். நானிலம் - நால் நிலம் - குறிஞ்சி முல்லை மருதம் நெய்தலென்னும் நிலங்கள்; இங்கே நிலமாத்திரையாய்த் தரையை உணர்த்திற்று. காவி உண்ட கண் - நீலோற்பலத்தை வென்ற கண்கள். 'உண்டற் குரிய அல்லாப் பொருளை - உண்டன போலக் கூறலும் மரபே'

என்பதனுற் காவியை வென்ற கண் என்ற பொருள்படக் 'காவி உண்ட கண்' என்ருர். 'நீலோற்பல மலர் போன்ற மையுண்ட கண்' என்றும் பொருள் கூறுவர். கான்றிட - கக்க. கலுழா - அழுது. (29)

**நவ்வி வீழ்ந்தென நாடக மயில்துயின் றென்னக்**
**கவ்வை கூர்தரச் சனகியாங் கடிகமழ் கமலத்**
**தவ்வை நீங்குமென் றயோத்திவந் தடைந்தவம் மடந்தை**
**தவ்வை யாமெனக் கிடந்தனள் கைகயன் றனையை (30)**

கொண்டுகூட்டு : (அயோத்தி மக்கள்) கவ்வை கூர்தர, "சானகி யாம் கடிகமழ் கமலத்து அவ்வை நீங்கும்" என்று 'அயோத்தி வந்து அடைந்த தவ்வை யாம் அம்மடந்தை' என, கைகயன் தனையை நவ்வி வீழ்ந்தென நாடக மயில் துயின்றென்னக் கிடந்தனள்.

பொருள் : அயோத்தி நகரத்துள்ளார் துன்பம் மீதூரச் '"சீதாதேவியாகிய சீதேவி காட்டுக்கு இராமனுடன் நீங்கு வாள்; அவள் தானத்தில் நாம் இருப்போம்" என்று அயோத்தி நகரத்தில் வந்துசேர்ந்த மூதேவி யென்று தான் கொண்ட கோலத் தைக் கண்டோர் சொல்லும்படி, கைகேயி, மான் கீழே விழுந்து கிடந்தாற் போலவும் மயில் தூங்குதலுற்ருற் போலவும் கிடந்தாள்.

நவ்வி - மான். வீழ்ந்தென - விழுந்தாற்போல. நாடகம் - ஆடுதல். துயின்றென்ன - தூங்கிஞற்போல. கவ்வை - துன்பம். கடி - வாசனை. அவ்வை - தாய். கமலத்து அவ்வை - சீதேவி. நீங்கும் - நீங்குவாள். தவ்வை - தமக்கை. தனையை - மகள்.

இப்பாட்டிலும் இதற்கு முந்திய மூன்று பாட்டுகளிலும் கைகேயி தசரதனேடு இணக்கமில் பிணக்கத்துக்கு யத்தனஞ் செய்து முடித்த ஊடற்கோலக் காட்சியை, நிகழ்ந்த முறையே நம் கண்ணெதிர் காட்டி ஞற்போல வருணித்திருக்கும் வருணனை, மனமகிழ்ச்சியை மிக விளைப்ப தாம். அவ்வருணனையில், கூந்தலுட் சொருகியிருந்த மாலையைப் பிடுங்குதலுக்கு மேகத்துள் நுழைந்திருந்த சந்திரனை வெளிப்படுத்த லும், கலன்களைக் கழித்த கைகேயிக்குப் பூக்களை நீக்கிய பூங்கொம்பும், தரையிற் கிடந்த அத்தையலுக்குக் கிடைகொண்ட மானுடன் துயில் கின்ற மயிலும் மிகப் பொருத்தமாகவும் தொடர்பாகவும் வரவர ஏற்றமாக வும் உவமானங்கள் கூறி அவை யாவற்றுக்கும் சிறந்த தலையலங்கார மாகச் 'சனகியாம் கடிகமழ் கமலத் - தவ்வை நீங்குமென் றயோத்தி வந் தடைந்த அம் மடந்தை - தவ்வையா மெனக் கிடந்தனள் கைகயன் தனையை' என்ற உவமை கூறி முடித்த முடிபு நெஞ்சுள் நெடிது நீங் காது நின்று நிலவி அளப்பருங் களிப்பினை யளிப்பதுவாம். (30)

# 3. கைகேயி சூழ்வினைப் படலம்

இராமனுக்கு முடிசூட்டுதலைத் தடுக்கக், கைகேயி தீதாக ஆலோசித்த தீயசெயலைக் கூறுவது. அடையின்றியே சூழ்தல் துராலோசனையையும் வினை தீச்செயலையும் குறித்தன.

### கைகேயி வரம் வேண்டல்

அரசர்கள் தொழுது தொடர்ந்து மருங்குகளில் நெருங்கி வரத் தசரதன், நடுநிசியிலே கைகேயி மாளிகைக்குச் சென்றான். வாசலில் மன்னர்கள் வணங்கி நிற்க, ஏவற் பெண்கள் பின்வர, அவளிடம் போனான். போனவன், அவள் அலங்கோலமாகக் கிடக்கும் நிலைமையை நோக்கி, யாது நிகழ்ந்ததென்று சங்கித்துத் துன்புற்றுச் சோர்வடைந்து, மானை யெடுக்கும் ஆனை போல அவளை வாரி யெடுத்தான். அவள், தன்னை எடுத்த கையைத் தடுத்துத் தள்ளிவிட்டு மின்னல் நுடங்கி விழுதல் போல மண்ணில் துவண்டு விழுந்தாள். ஒரு பேச்சுமின்றிப் பெருமூச்செறிந்தாள். அரசன், 'யாது நடந்தது? சொல். உன்னை இகழ்ந்தவர் இறந்தவராவர். சொன்ன பின் என் வார்த்தையைச் செயலிற் காண்பாய்' என்றான். 'உனக்கு என்னிடத்தில் அன்புண்டோ? உண்டாயின், அன்று தருவேனென்றவைகளை இன்று தருவாயாக' என்றாள். அவள் கருத்தை அறிந்து, 'இவ்வளவு தானா! இதற்கா இத்தனை கோபம்!' என்று சிரித்து, 'நீ வேண்டியவைகளைக் கேள். விருப்புடன் அளிப்பேன். இஃது உண்மை. உன் மகன் இராமன் ஆணை' என்றான். 'சம்பராசுர யுத்தத்தில் உனக்கு நான் சாரத்தியம் செய்ததற்காக நீ உவந்து தேவர் சான்றாகத் தந்த வரங்களிரண்டையும் தருவாயாக' என்றாள். அவள் வஞ்சனையை அறியாமல், 'வாக்களித்தபடி பெறுதற்கா இவ்வளவு வருத்தம்? தருவேன் : பெறுவாய் : என் பொறுப்பு நீங்க இப்பொழுதே கேள்' என்றான். 'ஒரு வரத்தால் பரதன் நாடாளலும், மறு வரத்தால் இராமன் காடாளலும் வேண்டும்' என்றாள்.

### தசரதன் துன்பம்

கைகேயியின் நீண்ட கொடிய நாக்கு நாகம் வழங்கிய வாக்கு விடத்தால் உண்டாகிய சோக தாபத்தால் தசரதன் உடம்பு முழுதும் தபிக்கப்பட்டு வேகமடங்கிய யானை போல

விழுந்தான். யாவராலும் சொல்லொணுத துன்பமுற்று, மன வேதனை வளர, உடம்பு வெப்பம் மிகுந்து உலைத் தீக்காற்றுப் போலப் பெருமூச்சுவிட்டான். நா வறண்டது. உயிர் ஓட லுற்றது. மனம் வாட்டமடைந்தது. துன்பம் மேலிட்டது. யாது செய்யத் தக்கதென்று தெரியாமல், பொறி கலங்கினுன். இருந்தான், எழுந்தான், நின்றுன், விழுந்தான், புரண்டான். மூச்சடங்கி அசைவற்றுச் சித்திரம் போன்றுன். பாவி (கைகேயி)யைப் பற்றி எற்றிக் கொல்ல எண்ணினுன்.

## கைகேயி, 'வரம் கொடாவிடில் மாள்வே' னெனல்

'இவள் பெண்ணென்பதை மறந்து பெண்கொலை செய்யும் பெரும் பழிக் காளாகப் பார்த்தேனே' யென்று நாணங் கொண்டான். துக்க வெப்பம் மிக்குப் பெருக, நெடுமூச்செறிந்து, அங்கும் இங்கும் அலைந்து வருந்தினுன். அவன் பட்டபாட்டைக் கண்டு தேவர்கள் பதைபதைத்தார்கள். ஆயினும், கைகேயி சிறிதுங் கலங்கினுளல்லள்; அவளை நோக்கி 'நீ புத்தி மயக்கத் தாலோ, பொல்லதார் போதனையாலோ, இவ்வரங்களைக் கேட்டாய்? என் ஆணை: உண்மையுரை' என்றுன். 'புத்தி மயங்கவு மில்லை; பொல்லார் போதிக்கவு மில்லை: நீ கொடுப்பதாக ஒப்புக் கொண்ட வரங்களைக் கொடுத்தாற் கொள்வேன். மறுத்தால், வாக்கு மாறிய வசையை உன்னிடம் வைத்து என் உயிரை உன்னெதிரே மாய்த்துக்கொள்வேன்' என்றுள்.

## தசரதன் வருந்தல்

இந்த வார்த்தைகளைக் கேட்கவே, தாசரதி யன்றி வேறுயிரில்லாத சக்கரவர்த்தி மயங்கித் தியங்கி, 'ஆ கொடியாளே!' என்று ஆவி சோர்ந்து தரையில் விழுந்தான். 'உண்மையை ஒழித்தல் வேண்டும் அல்லது இராமனை இழத்தல் வேண்டும் என்று விதித்த அறம் கொடிது! இப்படிப்பட்ட தரும சங்கடத்துக்குக் காரணமான உண்மை இறந்தொழிவதாக! இவ்வுலக முழுதும் பெண்ணென்னும் பெயரே யில்லையாம்படி எல்லாப் பெண்களையும் கொன்று தொலைத்து,—வீரரை யெல்லாம் வென்று வீராதி வீரனு யுயர்ந்திருந்த நான், வீரராகிய மேன் மக்கள் வரிசையினின்று, பெண்கொலை காரணமாக, வீழ்ச்சி யுற்றுக் கீழ்மக்களோடு வைத்தெண்ணப்படுவேனுக' என்றெண்ணினுன்.

### தசரதன் கைகேயி காலில் விழுந்து வேண்டல்

பின்பு, அவ்வாறு செய்தல் தகாது என்று முடிவு செய்து, அம் முடிவு செய்யும்படி நேர்ந்ததனு லுண்டாகிய கோபத்தால் கைகளைப் புடைத்துப் பற்களைக் கடித்தான். கோப மிகுதியால் ஆயாச மடைந்து திரும்பவும் சோர்ந்து வீழ்ந்தான். பின்பு தெளிந்து, கோபித்தலினும் பொறுத்தலே நல்லதென்று கோபம் விண்டு பொறுமை கொண்டு, இவளைக் கொன்றடையும் பயனினும் இரந்தடையும் பயன் சிறந்த தென்று துணிந்து எழுந்தான்.

இராசர்கூட்டம் மேலும் மேலும் நெருங்கி வந்து 'நாம் முந்தி வணங்குவோம்' 'நாம் முந்தி வணங்குவோம்' என்று முடி படியப் பணிகின்ற அடியிணையையுடைய சக்கரவர்த்தி, கைகேயி (யான ஒரு பெண்) கால்களில் விழுந்தான். 'மூத்தோனுகிய இராமனிருக்க, இளையோனுகிய பரதன் இராச்சியத்தை யேற்றுக் கொள்ளான். அவன் ஏற்றுக் கொண்டாலும், உலகம் ஒப்புக் கொள்ளாது. நீ உலகத்தார் மதிக்கும் புகழைப் பெறுதலை விட்டு அவர்கள் பழிக்கும் பழியை உறுதலாற் பயன் யாது? இராசரிகத்தை, இராமன், தானுக விரும்பாமல், யான் கொடுக்க, மறுக்கமாட்டாமல் ஏற்றான். ஆதலால், நீ கேட்டால், அவன் தானே உன் மகனுக்கு அரசை உவந்து கொடுப்பான்' என்று பின்னும் கூறுவான் :

**கண்ணே வேண்டு மென்னினு மீயக் கடவேனென்**
**உண்ணே ராவி வேண்டினு மின்றே யுனதன்றே**
**பெண்ணே வண்மைக் கைகயன் மானே பெறுவாயேல்**
**மண்ணே கொண்ணீ மற்றைய தொன்றும் மறவென்றான். (31)**

கொண்டுகூட்டு : 'பெண்ணே, கண்ணே வேண்டும் என்னினும், ஈயக் கடவேன், (நீ) என் உள்நேர் ஆவி வேண்டினும், வண்மைக் கைகயன்மானே, (அது) இன்றே உனது அன்றே! பெறு (தற்கு விரும்பு) வாயேல், மண்ணே கொள். நீ (கேட்ட) மற்றையது ஒன்று மற' என்றான்.

பொருள் : 'நீ கேட்கும் என் அரசச் செல்வத்திற் சிறந்தது என் உடல்; உடலிற் சிறந்தது தலை; தலையிற் சிறந்தது கண் : அப்படிப்பட்ட கண்ணையே நீ வேண்டு மென்றாலும் கொடுக்கத் தவறேன். கண்ணினும் சிறந்த உயிரையே வேண்டினுலும் அது இப்போதே உன்னுடையதே என்னும்படி தந்துவிடுவேன்.

கண்ணையே யன்றி உயிரையுமே தரச் சித்தனுகவுள்ள யான் கேவலம் மண்ணைக் கொடுக்க மறுக்கேனென்பது கூறவேண்டிய தில்லை. ஆனுல் "மண்ணை உன் மகன் கொள்ளான்; கொண்டாலும் உலகம் ஒப்பாது" என்று யான் கூறிய உண்மையை உணராமல் மண்ணைப் பெறுதற்கு விரும்புவா யானுல், மண்ணை மட்டும் பெற்றுக்கொள்: நீ கேட்ட மற்றென்றை மறந்துவிடு' என்றுன்.

ஈயக்கடவேன் - ஈதல் கடக்கமாட்டேன் - ஈதல் தவறேன். கடவேன் என்பது இங்குக் கடமை யுடையேனென்று பொருள்படாமல் தவறேன் என்று பொருள்பட நின்றது. (கடவார் - தப்பார் - தவருர் ;—மணி மேகலை). உள் - (உடம்பின்) உள். நேர் - நுண்ணிய - சூக்குமமான. (நேர்மை - நுண்மை—ஐங்குறு). உள் நேர் ஆவி - (உடம்பின் வெளிப் புறத்தில் தூலமாகவுள்ள முன் சொன்ன கண் போலன்றி உடம்பின்) உட்புறத்தில் சூக்குமமாகவுள்ள உயிர். இன்று - இப்போது—ச. அ. அன்று, ஓ: அசைகள்; அல்லவா என்றும் பொருள்பட நின்றன. வண்மை - கொடை. மானே - (மான் போன்ற) மகளே. மற்றைய தொன்றும் என்பதில் உம்மை இசைநிறை.

'பெறுவாயேல்' என்பதற்கு மேற்கூறிய பொருளன்றிக், 'கொடைத் தொழில் படைத்த கைகயன் மகளாகிய நீ அவனைப் போலக் கொடுத்தற் ரெழிலைச் செய்யாது ஏற்றற் ரெழிலை மேற்கொள்வாயானுல்' என்ற பொருள்பட 'வண்மைக் கைகயன் மானே பெறுவாயேல்' என்று னென்றலுமாம். இராமனைக் காட்டுக் கனுப்புவதான பொறுக்க முடியாத கொடுந்துன்பத்தை விளைத்த இரண்டாம் வரத்தை வாயாற் கூற மாட்டாமையால் 'மற்றைய தொன்று' என்று விவரிக்காது தசரதன் கூறியதாக நடந்ததை நடந்தவாறு நயம்படக் கூறிய இயற்கை நிகழ்ச்சி வருணனை இனிது நோக்கத் தக்கது. (31)

## தசரதன் பல கூறி மன்றுடல்

'ஒருகால் வாயால் தந்தேனென்றதை இனிமேல் மறுக்க மாட்டேன்; நீ கேட்டதைப் பெற்றுக்கொண்டதாகவே வைத்துக் கொள். அதனை நான் உன்பால் இரக்கின்றேன். தன்னைத் தாழ்ந்து வணங்கி இரந்தால், பேயும் ஈயும்: ஆதலால் (கணவ னுகிய) நான் தாழ்ந்து வீழ்ந்து இரப்பதை (மனைவியாகிய) நீ தந்தால் தவருமோ?' என்றுன். அவள், தான் பிடித்த பிடியைச் சிறிதும் விடாளாய், 'உண்மைக் கொருவனுகிய நீயே கொடுத்ததை இல்லை யென்பாயானுல், உண்மையைக் காப் பதற்கு இனி யார் உளர்?' என்றுள்.

நெருப்பு வீசிய வெம்மை தாக்கப்பட்டார் போலக் கைகேயி கூறிய வார்த்தை கேட்ட தசரதன், ஆவி வெந்து, விஷாக்கினியே பெண் வடிவான தென்று நினைந்து, திரும்பவும் இரந்து வேண்டுவோனாய், 'நிலமெல்லாம் உன் வசமாகத் தந்தேன். என் மகன், என் கண், என் உயிர் எனக்குப் போல எல்லார்க்கும் நல்லவன் நாடு கடவாதிருக்கும்படி இரங்கியருள்; யான் என் சுற்றத்தோடு முற்றும் அற்று முடிவடையும்படியுள்ள என் முன்னை வினைப்பயனை நினைந்து நைந்து நொந்துகொண்டிருக்கின்றேன். இராமன் என் கண்ணெதிர் நில்லாது நீங்குவானாஜல், யான் பிழைத்திருக்கமாட்டேன். என் உயிர் உனக்கு அடைக்கலம்' என்றான்.

இராசராசன் இன்சொற் கூறி இரந்ததற்கு இணங்காமல் மரம் போல இரங்காத மனத்தினளான கைகேயி, 'கொடுத்த வரத்தைக் கொள்ளாதே யென்பது அதருமமே யன்றித் தருமமாமோ?' என்றாள். இவ்வார்த்தை கேட்டுச் சக்கரவர்த்தி 'இராமன் நீங்க, என்னுயிர் நீங்கும்' என்று பேரிடி விழப் பெற்று விழுந்த பெரு மலைபோலத் தரையிடை விழுந்தான். அவ்வாறு அவன் உடல் தரையில் விழ, மனம் துன்பக் கடலில் வீழ்ந்து ஆழ்ந்து வருந்த, அக்கடற்குக் கரை காணாதவனானான்.

கொடுஞ்சொற் கூர் வாளால் தன் நெஞ்சைப் பிளந்தவளது மனத்தின் இழிவை நினைந்து புழுங்கி அவளை நோக்கிப் பின்னும் கூறுகின்றான்: 'இறக்கும் புருடர்க்கு முன் இறந்து உடன் கட்டை யேறிப் புகழ்பெற்ற மாதரல்லாமல் புருடனைக் கொன்று பழி பூண்ட பூவையர் இன்றுகாறும் இலர். இனி, உளர் என்னும்படி, நீ என்னைக் கொல்வாயோ! கொடியாளே! நீ கேட்டது குற்றமான தென்றும் முறையற்ற தென்றும் அதருமமான தென்றும், அறிகின்றாயில்லை. யான் படும் கடுந் துன்பங் கண்டு "ஆ!" என்று இரங்குகின்றாயில்லை. உன் மனத்தில் இரக்கத்தை அறவே ஒழித்தாய். சொல் லம்பால் என்னைக் கொன்றாய். இனி, "இவள் புருடனைக் கொன்ற பொல்லாத பாவி: பெண் கொலை பாவம் என்று பாராமல் இவளைக் கொல்வோம்" என்று உலகத்தாரால் உயிர் வாங்கப் படப் போகின்றாய்.'

### கைகேயி இறந்திடுவே னெனல்

'மூன்றுலகுகளிலும் உள்ள வீரர்களை யெல்லாம் வென்ற எனக்கு ஒரு பெண்ணால் முடிவு நேர்ந்ததே!' என்று எண்ணினான். எண்ணினதன்றித் தன்னை வேதனைப்படுத்தும் துன்பங்களை வாய்விட்டுச் சொல்லிக் கைகேயியைத் திரும்பவும் இரந்தான். மேலும் மேலும் மிகுந்து வளர்ந்த அந்தக் கடிய கொடிய துன்பங்களால் உயிர் உண்டோ இல்லையோ என்னும் படி மயக்க மடைந்தான். இடையிடையே தெளிவுற்றான். தெளிவுற்றபோதெல்லாம் தெளிவுடன் துன்பமும் தோன்ற வருந்தி உயிர் போகமாட்டாமல் புரண்டான். அப்படிப் புரண்ட சமயங்களில், கைகேயி, 'உனது முன்னோனை சிபிச் சக்கர வர்த்தி ஒரு புறுவைக் காப்பதாகக் கூறிய வாக்கைக் காக்கத் தன் உடலை யரிந்து கொடுத்தானன்றே? அப்படிப்பட்டவன் பின்னோனை நீ கொடுக்க ஒப்புக் கொண்டதைக் கொடுக்க நோவுறுதல் தகுதியோ? நோவதனால் ஆவது யாது? நான் கேட்ட வரங்களைக் கொடுக்கவில்லையானால், இப்போதே இறந்து விடுவேன்' என்றாள்.

### தசரதன் மூர்ச்சித்தல்

அப்போது தசரதன், 'இவள் எரியாது கொல்லும் தீ. யான் உடன்படாவிடில், இறந்துவிடுவாள்' என்று நினைந்து, 'என் மகன் வனம் செல்ல வரம் தந்தேன். அதனால் நான் செத்தேன். நீயும் உன் மகனும் இவ்வுலகம் உள்ளளவும் பழிவெள்ளத்தைக் கடக்கமாட்டீர்கள்' என்றான். இவ்வார்த்தைகள் சொல்லி முடியு முன், கொடிய துன்பம் கூரிய வாள் போல நெஞ்சைப் பிளக்கத் தசரதன் உணர்வு நீங்கிச் செயலற்றுக் கிடந்தான். காரியசித்தி பெற்றதனாற் களித்த சிந்தையினளாய் அயர்ந்து தூங்குவாளான கைகேயியும் உணர்வும் செயலும் நீங்கிக் கிடந்தாள். (இவ்வாறு ஒருவருக்குத் துக்கமும் மற்றொருவருக்குக் களிப்புமான வேற்று மைப்பட்ட இரண்டு காரணங்களால் இருவரும் உணர்வும் செய லும் நீங்குதலாகிய ஒற்றுமைப்பட்ட ஒரு காரியம் நிகழ்ந்தது ஆச்சரியம்.)

### இரவு கழிதல்

**சேணு லாவிய நாளெ லாமுயி ரொன்று போல்வன செய்துபின்**
**ஏணு லாவிய தோளி னானிட ரெய்த வொன்று மிரங்கிலா**
**வாணி லாநகை மாத ராள்செயல் கண்டு மைந்தர்மு னிற்கவும்**
**நாணி னாளென வேகி னாணளிர் கங்கு லாகிய நங்கையே (32)**

கொண்டுகூட்டு: சேண் உலாவிய நாள் எல்லாம் (இருவர்) உயிர் (களும்) ஒன்று போல்வன (என்னும்படி எதையும் மனமொத்துச்) செய்து, (அதன்) பின் (இப்போது) ஏண் உலாவிய தோளினான் இடர் எய்த, ஒன்றும் இரங்கிலா வாள் நிலா நகை மாதராள் செயல் கண்டு, மைந்தர் முன் நிற்கவும் நாணினாள் என, நளிர் கங்குலாகிய நங்கை ஏகினாள்.

பொருள்: (இதன் முன் கல்யாணமான - நெடு நாளுக்கு முந்திய - ,) தூரம் (ஆன காலந் தொட்டு இன்றுவரை) சென்ற சாலநீண்ட காலம் முழுவதும் இருவருயிர்களும் ஒன்றுபோல் வன என்னும்படி எந்தக் காரியத்தையும் ஒருவரே நினைந்து செய்தாற்போல மனம் ஒத்து இருவரும் செய்து, அந்த நீண்ட காலத்துக்குப் பின்பு இப்போது நாயகன் தான் வேண்டுமென்று கொண்ட வரத்தால் மகத்தான துன்பம் அடைய(க் கண்டு அத் துன்பத்தைத் தான் 'வேண்டாம்' என்ற ஒரு வார்த்தையால் நீக்கக்கூடியவளாயிருந்தும் அவ்வாறு செய்தற்குச்) சிறிதும் இரக்கங்கொள்ளாத கைகேயியின் செய்கையைக் கண்டு (இந்த ஒரு மாதின் அடாத செய்கையால் அவளைச் சேர்ந்த பெண்பால ரெல்லாருக்கும் அவமானம் ஏற்பட்டது. 'இவள் செய்ததைப் பார்! பெண்பாலார் துரோகிகள், இரக்கமற்றவர்' என்று தன்னை நோக்கி ஆண்பாலார் சொல்வாரே யென்று அவரோடு வார்த்தை யாடல் கிடக்க, அவரெதிரே சும்மாதான் எவ்வாறு நிற்போ மென்று) ஆடவர் முன் நிற்கவும் நாணினாள் போல இராத்திரி யாகிய பெண் சென்றனள் (விடிந்தது என்றபடி).

சேண் - தூரம். உலாவுதல் - மெல்ல நடத்தல். 'உலாவிய' என்பது முதலடியில் சென்ற என்றும், இரண்டாமடியில் பொருந்திய என்றும் பொருள் தந்து நின்றது. வாள் நிலாம் நகை - ஒளி விளங்கும் பல். நளிர் - குளிர். நளிர் கங்குல் - குளிர்ந்த இரவு. (32)

### கோழி கூவுதல்

**எண்ட ருங்கடை சென்ற யாம மியம்பு கின்ற வேழையால்**
**வண்டு தங்கிய தொங்கன் மார்பன் மயங்கி விம்மிய வாறெலாம்**
**கண்டு நெஞ்சு கலங்கி யஞ்சிறை யான காமர் துணைக்கரங்**
**கொண்டு தம்வயி றெற்றி யெற்றி விளிப்ப போன்றன கோழியே**

கொண்டுகூட்டு : எண் தரும் (சாமங்களிலே) கடை சென்ற யாமம் இயம்புகின்றன (வான) கோழிகள் வண்டு தங்கிய தொங்கல் மார்பன், ஏழையால் மயங்கி விம்மியவாறு எல்லாம் கண்டு, நெஞ்சு கலங்கி, அம் சிறை ஆன காமர் துணைக்கரம் கொண்டு, தம் வயிறு எற்றி எற்றி விளிப்பபோன்றன.

பொருள் : (இரவில் முதலாம் சாமம் இரண்டாம் சாமம் மூன்றும் சாமம் நான்காம் சாமம் என்று) எண்ணுகின்ற (சாமங்களில்) இறுதியாகச் சென்ற நான்காம் சாமத்தைத் தெரிவிக்கின்றவைகளான கோழிகள், தசரதன் கைகேயியால் மயங்கி வருந்திய வகை முழுவதும் கண்டு மனங் கலங்கிச் சிறகுகளான கையால் வயிற்றில் மாறி மாறி அடித்துக்கொண்டு ('எல்லாரும் வாருங்கள் ! இந்த அநியாயத்தைப் பாருங்கள் !' என்று கூவி) அழைப்பவைகள் போன்றன.

எண் தரும், 'எண்ணிடும்' 'எண்ணுறும்' என்பனபோல, எண்ணும் என்று பொருள்படுவது. யாமம் - சாமம். இயம்புதல் - ஒலித்தல். தொங்கல் - மாலை. ஏழை - பெண். அம் சிறை - அழகிய சிறகு. காமர் - அழகு. (33)

### பறவைகள் ஒலித்தல்

**தோய்க யத்து மரத்து மென்சிறை துள்ளி மீதெழு புள்ளெலாந்**
**தேய்கை யொத்த மருங்குன் மாதர் சிலம்பி னின்று சிலம்புவ**
**கேக யத்தர சன்ப யந்த விடத்தை யின்னதோர் கேடுசூழ்**
**மாக யத்தியை யுட்கொ தித்து மனத்து வைவன போன்றவே**

கொண்டுகூட்டு : தோய் கயத்தும் மரத்தும் மெல்சிறை துள்ளி மீது எழும் புள் எல்லாம், தேய்கை ஒத்த மருங்குல் மாதர் சிலம்பின் நின்று சிலம்புவ, கேகயத்து அரசன் பயந்த விடத்தை இன்னது ஓர் கேடுசூழ் மா கயத்தியை உள் கொதித்து, (அஞ்சி,) மனத்துள் வைவன போன்ற.

பொருள் : தடாகங்களிலும் மரங்களிலும் தங்கித் தூங்கி விழித்து மெல்லிய சிறகுகளின் உதவியினால் துள்ளி மேல் எழுந்த பறவைக ளெல்லாம் மாதர்கள் பாதச் சிலம்பு போல மெல்லென ஒலிப்பவைகள், புருடன் இறக்கும்படியான கேடு சூழ்ந்த மிக்க தீழ்மைக் குணமுள்ளவளான கைகேயியை மனத்தினுள்ளே கோபித்து (வெளிப்படக் கோபித்துத் திட்டினால், புருடனைக் கொன்றவள் தம்மைக் கொல்லாது விடுவாளா வென்று பயந்து) மனத்தினுள்ளே திட்டுவன போன்றன.

தோய் கயம் - (மக்கள்) குளிக்கின்ற தடாகம். தேய்கை ஒத்த -

தேய்தல் பொருந்திய. சிலம்பின் - சிலம்புபோல. சிலம்புவ - ஒலிப்பன. பயந்த - பெற்ற. இன்னது ஓர் கேடு - இப்படிப்பட்டதாகிய ஒப்பற்ற கெடுதி. கயம் - கீழ்மைக் குணம் - இழிவான தன்மை.

இனிய பாற்கடலில் விடம் பிறந்தது போல, நல்ல கேகய ராச குடும்பத்தில் கைகேயி பிறந்தா ளென்று குறிக்கக் 'கேகயத்தரசன் பயந்த விடத்தை' யென்றுர் போலும். (34)

### நட்சத்திரங்கள் மறைதல்

**சிரித்த பங்கய மொத்த செங்க ணிராம னைத்திரு மாலையக்**
**கரிக்க ரம்பொரு கைத்த லத்துயர் காப்பு நாணணி தற்குமுன்**
**வரித்த தண்கதிர் முத்த தாகியிம் மண்ண னைத்து நிழற்றமேல்**
**வரித்த பந்தல் பிரித்த தாமென மீனெ ளித்தன வானமே (35)**

கொண்டுகூட்டு: சிரித்த பங்கயம் ஒத்த செங்கண் இராமனை—திருமாலை—கரிக்கரம் பொரு அக் கைத்தலத்து உயர் காப்பு நாண் அணிதற்கு முன், வரித்த தண்கதிர் முத்த தாகி, இம் மண் அனைத்தும் நிழற்ற, மேல் விரித்த பந்தல் பிரித்தது ஆம் என மீன்(கள்) வானத்தில் ஒளித்தன.

பொருள்: மலர்ந்த செந்தாமரை மலர் போன்ற சிவந்த கண்களையுடைய இராமனை முடிசூட்டுதற்கு முதற் சடங்காக அவனுக்குக் காப்புக் கயிறு கட்டுதற்கு முன்பு (இட்ட - முத்துச் சரங்கள் அலங்காரமாகத் தொங்கவிட்ட - பந்தல்போல, நட்சத்திர வரிசைகள்) முத்துச் சரங்கள் போன்று பூமி முழுதும் ஒளி செய்யப் பூமிக்கு மேலாக வித்தாரமாக இட்ட வானப் பந்தல் பிரிக்கப்பட்டது போலு மென்னும்படி நட்சத்திரங்கள் வானத்தில் மறைந்தன.

சிரித்த பங்கயம் - (அரும்பாயிருந்த தன்மை நீங்கி) மலர்ந்த செந்தாமரை மலர். சிரித்த என்பது மலர்ந்த என்ற பொருளைக் குறிப்பால் உணர்த்தியது. திருமாலை - திருமாலின் அவதாரமானவனை. கரி - யானை. கரம் - கை. பொரு - ஒத்த. வரித்த - கட்டிய. ஆகி - ஒத்து. ('ஆள்வாரிலிமா டாவேனோ' என்பதில் ஆதல் ஒத்தலென வருதல் காண்க.) 'வரித்த முத்து' என்பதனால் கோத்துக் கட்டிய முத்துச் சரங்கள் குறிக்கப் பட்டன. நிழற்றல் - ஒளிசெய்தல். பிரித்தது ஆம் - பிரிக்கப்பட்டது போலும். மீன் - நட்சத்திரம்.

மலர்ந்த தாமரையை மனோபாவனையால் 'சிரித்த பங்கயம்' என்ற கவித்திறம் இரசிகரா யுள்ளார்க்கு மிக்க மகிழ்ச்சி செய்வதாம். இந்தப் பேருலகம் முழுதையும் மூடிய ஆகாயத்தையே பந்தலாகவும், நக்ஷத்திர வரிசைகளை அந்தப் பந்தலில் அலங்காரமாத் தூக்கிய முத்துச்சரங்களாக

வும் கூறி, உதய காலத்தில் ஆகாயத்தில் நக்ஷத்திரங்கள் ஒளிகுன்றி மறைவதை இட்ட பந்தர் பிரிக்கப்படும்போது அதன் அலங்காரங்கள் அவிழ்த்து அகற்றப்பட்டொழிதல் புலப்பட 'விரித்த பந்தல் பிரித்ததாமென மீனொளித்தன வானமே' என்று ஓசை நயமும் பொருள் நயமும் ஒருங்கமையக் கற்பனுசக்தி விளங்கக் கூறிய கவிசாதுரியம் கற்ருேர் கருத்துக்கு விநோதமும் விம்மிதமும் விளைத்து அளப்பருங் களிப்பை அளிப்பதாம். (35)

### மாதர் விழித்தல்

இராமன் முடிசூடும் நாள் வந்த தென்பதை நகரமாந்தர் தெரியப் பேரிகைகள் முழக்கப்பட்டன. அம்முழக்கம் மேக முழக்கமாக, அது கேட்டு மகிழ்ந்து எழும் மயில்கள் போல, மாதர்கள் கண் மலர்ந்து எழுந்தார்கள்.

### அல்லி மலர் குவிதல்

சாய டங்க நலங்க லந்து
 தயங்கு தன்குல நன்மையும்
போய டங்க நெடுங்கொ டும்பழி
 கொண்ட ரும்புகழ் சிந்துமத்
தீய டங்கிய சிந்தை யாள்செயல்
 கண்டு சீரிய நங்கைமார்
வாய டங்கின வென்ன வந்து
 குவித்த வண்குமு தங்களே (36)

**கொண்டுகூட்டு :** (தனது) சாய் அடங்க, நலம் கலந்து தயங்கு தன் குல நன்மையும் (அதனேடு) போய் அடங்க, நெடும் கொடும் பழி (கைக்) கொண்டு, அரும்புகழ் சிந்தும் அத் தீ அடங்கிய சிந்தையாள் செயல் கண்டு, சீரிய நங்கைமார் வாய் அடங்கின என்ன வண் குமுதங்கள் வந்து குவிந்த.

**பொருள் :** தனக்கு இருந்த மென்மைத் தன்மை அடங்கலும் அடங்கவும், தன்குல நன்மையும் அதனேடுகூட அடங்கவும் தனக்கில்லா திருந்த பழியைக் கைக்கொண்டு, இருந்த புகழை வீசி யெறிந்து தீமை முழுதும் தங்கும் இடமென வந்தடங்கிய சிந்தையினளான கைகேயியின் செய்கையைக் கண்டு, ('இந்த ஒரு பெண்ணின் தீச்செயலால் பெண்ணுகப் பிறந்தவர்க்கெல்லாம் இழிவு வந்தது; இனி நாம் பெருமையாகப் பேச வாய் திறத்தலாகா'தென்று கருதிய) மாதர்கள் வாய்கள் ஒடுங்கினவை போல அல்லி மலர்கள் குவிதலுற்றன.

சாய் - மென்மை ; சாயல் : ஈறுதொக்கது. சாயல் - மென்மை—பரிபா. 'போய் அடங்க' 'வந்து குவிந்த' என்ற தொடர்களில் 'போய்' 'வந்து' என்பவை யிரண்டும் தமக்கெனச் சிறந்த பொருளின்றிச் செய்யுளோசை நிறைத்து நின்றன. (36)

### மாதர் பள்ளி நீங்கல்

மன்மத பாணமும் நிலவும் தென்றலும் தேகத்திற் பட்டு மோகத்தை விளைக்க வருந்தும் மாதர்களின் செவித்துளையில் பண் கனிந்த பாடல்கள் நுழைதல், விரக வேதனையை மிகுவித்தலால், பாம்பு நுழைதல் போன்றது. இராமன் முடிசூடும் நாளுக்கு முந்திய இரவு அத் திருநாளை விரைவிற் காணவொட்டாது ஊழி போல நீடித்திருக்கிறதென்று வருந்திய ஆடவர்கள், 'கண்ணும் கருத்தும் களிக்கும் நாள் இந்நாள்' என்றெழுந்தார்கள். இராமன் மகுடம் புனையும் வைபவத்தைக் காணும் ஆசையால் தூங்க மாட்டாமல் கண்மூடிப் பொய்த்தூக்கந் தூங்கிய மாதர்கள் பள்ளியினின்றெழுந்தார்கள்.

### தீபங்கள் ஒளி மழுங்கல்

**வைய மேழுமொ ரேழு மாருயி ரோடு கூடவ ழங்குமம்**
**மெய்யன் வீரருள் வீரன் மாமகன் மேல்வி ளைந்ததோர் காதலால்**
**நைய நைய நலம்பு லன்க ளவிந்த டங்கி நடுங்குவான்**
**தெய்வ மேனி படைத்த சேயொளி போன்ம ழுங்கின தீபமே**

கொண்டுகூட்டு : வையம் ஏழும், ஒர் ஏழும் ஆருயிரோடு கூட வழங்கும் அம் மெய்யன்—வீரருள் வீரன்—மாமகன்மேல் விளைந்தது ஓர் காதலால் (பிரிவு ஆற்றாது), நைய, நைய, நல் ஐம் புலன்கள் அவிந்து அடங்கி நடுங்குவான் (ஆன தசரதனது) தெய்வமேனி படைத்த சேய் ஒளி (மழுங்கினது)போல, தீபங்கள் (விடிதலால்) மழுங்கின.

பொருள் : உலக முழுவதையும் தன் அருமையான உயிருடன் உதவிய சத்தியவிரதனும், வீராதிவீரனும், மகன்மேல் உள்ள முதிர்ந்த வாஞ்சையினால் அவன் வனம் செல்ல நேரும் பிரிவாற்றாமையால் மிகுதியாக வருந்த ஐம்புலன்களும் ஒடுங்கி அடங்கி நடுங்குவானுமான தசரதனது தெய்வத் திருமேனி படைத்திருந்த சிவந்த ஒளி துன்பத்தால் மழுங்கினது போலத் தீபங்கள் தம் சிவந்த ஒளி விடிதலால் மழுங்கின.

விளைதல் - முதிர்தல் (விளைந்த - முதிர்ந்த.—புற. நா.) சேயொளி - ஒளி.

விடியற்காலத்து விளக்கொளி மழுங்குதலைக் கதையொடு பொருந்தக் கதாநாயகனது பிரிவாற்றுமையால் மழுக்கமடைந்த அவன் தந்தை மேனி யொளிக்கு உவமித்த நயம் உவத்தற் குரியது.

இவ்வாறுகக் கங்குல் கழிதலையும், கோழி கூவுதலையும், பறவைகள் பள்ளி நீங்கிப் பறந் தொலித்தலையும், வானத்து மீன்கள் மறைதலையும், முரசு முழங்கலையும், குமுதம் குவிதலையும், பண்கனிந்த பாடல்கள் பாடப்படுதலையும், மின்னுரும் ஆடவரும் விழித்தெழுதலையும், விளக் கொளி மழுக்கமுறலையும், வேறு பிறவற்றையும் வியப்பும் நயப்பும் மிகுந்து விளையப் புனைந்து புகன்று விடியற்கால வருணனை செய்கின்ற சொன்னயம், பொருணயம், தொனிநயம், முதலிய பன்னயங்களும் துன்னிய நனியினிய ரசமயமான செவ்விய திவ்விய கவிகளை வேறெந்த நூலினும் இவ்வளவு தொடர்பாக ஒரிடத்திற் காணலரிது. (37)

### இராமன் முடிசூடும் நாளென்று எல்லாரும் களித்தல்

சூரியன், தன் வழித்தோன்றலான தசரதன் உயிர் ஒடுங் கும்படி கொடுமை செய்த கைகேயியின்மீது கோபங்கொண்டு சிவந்தான் போலச் சிவந்து தோன்றினன். தோன்றவே, மகா தேவன் பிடித்த வில்லை ஒடித்த பேராண்மை படைத்த சீராமன் முடிசூடும் திருவிழாவைக் காணலா மெனும் ஆசை வளர்தலாற் பொலிவுற்ற மாதர் முகம் போலத் தாமரைகள் மலர்ந்தன. இந் நாள் இராமன் முடிசூடும் நாளென்று அயோத்தி நகரத்தா ரனை வரும் சமுத்திரம் முழங்கி யெழுதல் போலக் களிப்பு முழக்கஞ் செய்தெழுந்து பெருங்கூட்டமாகக் கூடினர்கள்.

**மாதர்கள் கற்பின் மிக்கார் கோசலை மனத்தை யொத்தார்**
**வேதியர் வதிட்ட ளுெத்தார் வேறுள மகளி ரெல்லாஞ்**
**சீதையை யொத்தா ரன்னுள் திருவினை யொத்தா ளவ்வூர்ச்**
**சாதுகை மாந்த ரெல்லாந் தசரதன் றன்னை யொத்தார் (38)**

கொண்டுகூட்டு: அ(ந்த) ஊர்ச் சாதுகை மாந்தர் எல்லாம் (மகிழ் வில்) தசரதன் தன்னை ஒத்தார்; வேதியர் வதிட்டன் ஒத்தார்; கற்பின் மிக்கார் மாதர்கள் கோசலை மனத்தை ஒத்தார்; வேறு உள்ள மகளிர் எல்லாம் சீதையை ஒத்தார்; அன்னுள் திருவினை ஒத்தாள்.

பொருள்: அப்படிக் கூடிய அந்த நகரத்து (ஆண்மக்க ளுள் இராமனுக்கு இளையோராயுள்ளா ரெல்லாரும் அவன் முடி சூடுதலை யெண்ணி, மகிழ்தலிலே, அவன் தம்பிமாரை ஒத்தார் கள்; அந்த மகிழ்வில் மூத்தோரான) சாந்த சீலமுடைய மாந்த ரெல்லாரும் தசரதனை ஒத்தார்கள்; மறையோர் எல்லாரும்

வசிட்டனை ஒத்தார்கள்; (முந்திய) மாதர்கள், (தத்தம் குமாரர்கள் முடிசூட்டப் பெற்றார் போன்று) கோசலையை ஒத்தார்கள்; மற்றைய (இளைய) மாதர்கள் தங்கள் தங்கள் புருஷர் முடிசூட்டப் பெற்றார் போன்று) சீதையை ஒத்தார்கள்; சீதை இலக்குமி தேவியை ஒத்தாள்.

கோசலை மனத்தை ஒத்தார் - (தாயாகிய) கோசலையின் மனத்தினை ஒத்த மனத்தினரானார். வதிட்டன் - வசிட்டன். சாது - சாந்தம் ச. அ. கை - ஒழுக்கம் (புறப். வெண். மாலை) - சீலம். சாதுகை மாந்தர் - சாந்த சீலமுடைய மனிதர்.

உரையில், இளையோர் இராமன் தம்பியரை ஒத்தாரென்றது, இப் பாட்டுக்கு முந்திய பாட்டின் கருத்து. ஆடவருள் முதியோரைத் தசரதனுக்கும் இளையோரைத் தம்பியருக்கும் ஒப்பிட்டவாறு பெண்டிருள் முதியோரைக் கோசலைக்கும் இளையோரைச் சீதைக்கும் ஒப்பிட்டா ரென்று கொண்டு பொருள் கூறப்பட்டது. வேதியருள் மூத்தோர் இளையோரெனப் பகுக்காது வெறுமனே வேதியர் என்றது அவருள் இளையோர் முதியோர் எல்லோரும் ஒன்று போலப் பூசித்தற் குரியராதல் பற்றி.

'சாதுகை மாந்தர்' என்பதன் பொருள் பற்றிப் பல வித்துவான்கள் தம்முள் மாறுபட்டுப் பலவாறு விரிவாகக் கூறியிருப்பது சிலகாலத்துக்கு முன் வெளிப்பட்ட 'செந்தமிழ்'த் தொகுதி 21-ல் காணலாம். இராமன் முடிசூடுதல் இராசலக்குமியை மணத்த லாதலால், அந்த மணத்தால் அவ் விராசலக்குமி மகிழ்தல் போலச் சீதை மகிழ்ந்தா ளென்பார், 'அன்னாள் திருவினை ஒத்தாள்' என்றார். 'அற்புதன் திருவைச் சேரும் அருமணம்' என இராமன் முடிசூடுதலை இப்படலம் 73-ம் பாட்டிற் கூறுதல் காண்க. (38)

## தெருவிலே சனங்கள் திரண்டு நிற்றல்

தங்கள் தங்கள் நாடுகள் சனங்க ளின்றி வெறுமையாகப், பல தேசத் தரசர்கள், தத்தம் பரிசனங்கள் தொடர, அமிழ்தம் உண்ணத் திரளும் தேவர்கள் போல, இராமன் முடிசூடலைக் காணத் திரண்டு வந்தார்கள்.

**பாகியல் பவளச் செவ்வாய்ப் பணைமுலைப் பரவை யல்குல்**
**தோகையர் குழாமு மைந்தர் சும்மையுந் துவன்றி யெங்கும்**
**ஏகுமி னேகு மென்றென் றிடையிடை நிற்ற லல்லால்**
**போகில மீள கில்லா பொன்னகர் வீதி யெல்லாம் (39)**

கொண்டுகூட்டு: பொன் நகர் வீதி எல்லாம் பாகு இயல் பவளச் செவ்வாய் பணை முலைப் பரவை அல்குல் தோகையர் குழாமும் மைந்தர்

சும்மையும் எங்கும் துவன்றி, 'ஏகுமின், ஏகும்' என்று என்று இடை இடை நிற்றல் அல்லால், போகில, மீளகில்லா.

பொருள்: தெருக்க ளெல்லாவற்றிலும் மாதர் கூட்டமும் மைந்தர் கூட்டமும் எங்கும் நெருங்கி, அதனால் புடை பெயர இடமில்லாமல், 'போங்கள், போங்கள்' என்று சொல்லிக் கொண்டு இடையிடையே நிற்ற லல்லாமல் செல்லவு மாட்டில, திரும்பவு மாட்டில வாயின. (சன நெருக்கத்தால் போக்கு வர வில்லை யென்றபடி).

பாகு - வெல்லப் பாகு. இயலல் - பொருந்தல். பாகு இயல் பவளம் செவ்வாய் - வெல்லப் பாகு (போலும் ஊறல்) பொருந்திய பவளம் (உண்டாயின் அது) போலும் செவ்வாய். பணைத்தல் - பருத்தல். சும்மை - கூட்டம். துவன்றி - நெருங்கி. குழாமும் சும்மையும் போகில மீளகில்லா எனக் கூட்டுக. (39)

**வேந்தரே பெரிதென் பாரும் வீரரே பெரிதென் பாரும்**
**மாந்தரே பெரிதென் பாரு மகளிரே பெரிதென் பாரும்**
**போந்ததே பெரிதென் பாரும் புகுவதே பெரிதென் பாரும்**
**தேர்ந்ததே தேரி னல்லால் யாவரே தெரியக் கண்டார் (40)**

கொண்டுகூட்டு: (அந்தக் கூட்டத்தில்) 'வேந்தர் (கூட்டமே) பெரிது' என்பாரும், 'வீரரே பெரிது' என்பாரும், 'மாந்தரே பெரிது' என்பாரும், 'மகளிரே பெரிது' என்பாரும், 'போந்ததே பெரிது' என் பாரும், 'புகுவதே பெரிது' என்பாரும், (உள்ளபடி) தேரின், தேர்ந்ததே: அல்லால், தெரியக் கண்டார் யாவர்?

பொருள்: இராமன் முடிசூடுதலைக் காணுதற்குற்ற கூட்டங்களில் வேந்தர் கூட்டமே அதிகமென்று சொல்வார் சிலரும், அவரோடு வந்த வீரர் கூட்டமே மிகுதியென்று சொல் வார் வேறு சிலரும், ஆடவர் கூட்டமே அதிகமென்று சொல் வார் மற்றுஞ் சிலரும், பெண்கள் கூட்டமே பெரிதென்று சொல் வார் பின்னும் சிலரும், வந்த கூட்டமே அதிகமென்று சொல்வார் இன்னும் சிலரும், வரப்போகிற கூட்டமே அதிகமென்று சொல் வார் பெயர்த்தும் சிலரும் ஆகியவர்கள், தாம் கண்ட கூட்டத்தை உள்ளபடி அறிந்தாரானால், அறிந்தது, அவர்கள் அறிந்த அளவே; அல்லாமல் முழுவதும் மன்று; முழுவதும் அறிந்து கொள்ளும்படி முழுவதையும் பார்த்தவர் யாவர்? (ஒருவருமிலர்).

வேந்தர் வீரர் முதலியவை ஆகுபெயர்களாய் அவ்வவ் வினத்தின் கூட்டத்தைக் குறித்தன. போந்தது - வந்தது - வந்த கூட்டம். தேரின் தேர்ந்ததேயென மாற்றுக. (40)

### எல்லாரும் முடிசூட்டு மண்டபம் அடைதல்

சந்திரர் பலரென்று சொல்லும்படி வெண்கொற்றக் குடைகள் விளங்க, பலபல அன்னங்கள் திரண்டாற்போலச் சாமரைகள் நெருங்க, இந்திரர் எண்ணிறந்தவ ரென்னும்படி இராசரெல்லாம் முடிசூட்டு மண்டபத்தை அடைந்தார்கள். தங்கள் தங்கள் தலைமகன் திருமணத்தைச் சிறப்பிப்பார் போல, இராமன் பூமிதேவியை மணக்கும் மங்கல விழாவைச் சிறப்பிக்க, மறையவ ரெல்லாம் வந்தார்கள்.

அந்த விழாவைக் காணவந்த மண்ணவர் நெருங்கி மண்ணை நிறைத்தார்கள்; விண்ணவர் திரண்டு விண்ணை நிறைத்தார்கள்; மங்கலச் சங்கங்களும் முரசுகளும் முழங்கி எல்லாருடைய காதுகளையும் நிறைத்தன; எல்லாரும் வாரியிறைத்த பொன்மழைகள் விண்ணையும் மண்ணையும் கடலையும் நிறைத்தன.

### சுமந்திரனைக் கைகேயி, 'இராமனைக் கூட்டிவா' எனல்

மன்னர்களின் உடலொளிகள் விளக்கொளிகளை மறைத்தன. அவர்கள் மகுட ஒளி வான சோதிகளை மறைத்தன. மாதர்களின் ஆபரண ஒளி இமையாத தேவர் கண்களை இமைக்கச் செய்து மறைத்தன.

வசிட்டன் முடிசூட்டுக்கு வேண்டிய மங்கலப் பொருள்களுடன் வந்தான். அபிடேகத்துக்கு உரிய புண்ணிய தீர்த்த நீர்கள் கொண்டுவந்து சேர்க்கப்பட்டன. சிங்காதனம் அலங்கரிக்கப் பெற்றது. சோதிடர் முகூர்த்த சமயம் நெருங்கியதெனத் தெரிவிக்க, வசிட்டன் தசரதனை அழைத்துவரும்படி சுமந்திரனை ஏவ, அவன் சென்று அரச மாளிகையில் தசரதனைக் காணுனுய்க் கைகேயி மாளிகையி னுள்ளானென்று கேட்டறிந்து, அங்கே போய், மாதர்பாற் சொல்லி அனுப்பக் கைகேயி வந்து, 'இராமனைக் கூட்டிவருக' என்றுள்.

### இராமனைச் சனங்கள் சூழ்தல்

சுமந்திரன் இராமனை அடைந்து, 'கைகேயி அன்னை உன்னை வரச் சொன்னுள். மகுடம் சூட வருவாயாக' என்றுன். உடனே இராமன் மன்னர் திரண்டு தொடர்ந்துவரத் தேரேறிச் சென்றுன்.

**திருமணி மகுடஞ் சூடச் சேவகன் செல்கின் றனென்**
**றொருவரி னொருவர் முந்தக் காதலோ டுவகை யுந்த [றாய்ப்**
**இருகையு மிரைத்து மொய்த்தா ரின்னுயிர் யார்க்கு மொன்**
**பொருவருந் தேரிற் செல்லப் புறத்திடைக் கண்டார் போல்வார்**

**கொண்டுகூட்டு :** 'சேவகன் திருமணி மகுடம் சூடச் செல்கின்றான்' என்று (அதைக் காணக்) காதலோடு உவகை உந்த, ஒருவரின் ஒருவர் முந்த, இருகையும் இரைத்து மொய்த்தார்; இன் உயிர் யார்க்கும் ஒன்றாய், பொருவு அருந் தேரில் செல்ல, புறத்திடை கண்டார் போல்வார்.

**பொருள் :** அயோத்திநகர மாந்தர்கள் இராமன் அழகிய மணிமுடி அணிதற்குச் செல்கின்றா னென்று அதனைக் காண எழுந்த ஆசையும் அவ் ஆசை நிறைவேறு மென்னும் மகிழ்ச்சியும் பிடித்துத் தள்ள, ஒருவர்க்கொருவர் முற்பட விரைந்து செல்ல அவனுக்கு இரு பக்கமும் களிப்பு முழக்கஞ் செய்து நெருங்கினார்கள்; இனிமையான உயிர், எல்லார்க்கும் பலவாய் உடம்புகளுக் குள்ளே யிருந்த தன்மை நீங்கி ஒன்றாகி உடம்புக்கு வெளியே ஒப்பற்ற தேர்மீது செல்லக் கண்டா ரொத்தார்கள்.

உந்தல் - தள்ளல். கை - பக்கம்—ஐங்குறு. இரு கையும் - (இராமனுக்கு வலமும் இடமுமான) இரு பக்கமும். சனங்கள் தங்கள் உயிர் போல இராமனை நேசித்தார்க ளென்பது கருத்து. அதை விளக்கிக் கூறியிருக்கிற கவித்துவ முறை கழிபெருங் களி விளைப்பதா யுள்ளது. (41)

இராமன் கைகேயி சொற்படி காட்டுக்குச் செல்லும் முன், மாதர் தோள்களாகிய மூங்கிற் காட்டூடே செல்வான்போல, அம் மாதர் கூட்டம் மொய்த்துச் சூழச் சென்றான். இராமனை உபசரிக்கப் பொற்சுண்ணமும் பூவும் சந்தனக்குழம்பும் சிந்த வந்த மாதர் வளையும் உடையும் நாணும் சிந்தினார்கள்.

**அங்கண னவனி காத்தற் காமிவ னென்ன லாமோ**
**நங்கணன் பிலனென் றுள்ளந் தள்ளுற நடுங்கி நைவார்**
**செங்கணுங் கரிய கோல மேனியுந் தேரு மாகி**
**எங்கணுந் தோன்று கின்றா னெனைவரோ விராம னென்பார்**

**கொண்டுகூட்டு :** 'அம் கண்ணன் இவன், அவனி, காத்தற்கு ஆம் (- ஆவான்) என்னல் ஆகுமோ? நம் கண் அன்பிலன்' என்று உள்ளம் தள்ளுற நடுங்கி நைவார், 'செங்கண்ணும் கரிய கோல மேனியும் தேரும் ஆகி எங்கணும் தோன்றுகின்றான். (ஆதலால்) இராமன் எனை வரோ?' என்பார்.

**பொருள் :** 'அழகிய கண்ணுளனாகிய இவன் பூமியைக்

காக்கத் தக்கவ னென்று சொல்லல் பொருந்துமோ? பொருந்தாது; ஏனெனில், நம்மிடத்து அன்பில்லாருய் நம்மைக் காவாரு யிருக்கின்ருன்' என்று மனம் தடுமாற நடுங்கி நைவாரான மாதர் சிலர் 'இராமன் சிவந்த கண்ணும் கரிய திருமேனியும் தேரும் உடையவருகி எங்குப் பார்த்தாலும் அங்கெல்லாம் காணப்படுகின்ருன். ஆதலால் இராமன் ஒருவருயில்லன்; இராமருக உள்ளார் எத்தனை பேரோ?' என்ருர்கள்.

ஆம் - ஆவான் - தக்கவன். தள்ளல் - தடுமாறல். கோலம் - அழகு. எனைவர் - எத்தனை பேர். (உ - ம். 'நும் மனைவியர்தாம் எனைவர்'.—சிந்தா. கேமசரி. 132—ச. அ.) எனைவர் - எவர்—பெருங்கதை. 'தோன்றுகின்ருர்' என்ற பாடங்கொண்டு, 'எனைவர்' என்பதன் பொருள் எவர் என்று கொண்டால், இறுதியடி, '(இராம உருவினர்) எங்கும் தோன்றுகின்ருர்: (இவருள்) எவர் (உண்மை) இராமர்' என்று சொல்வார்க ளென்னும் பொருளுடையதாம். மையல் மிகுந்த மாதர் கண்ணுக்கு இராமனது உருவம் எங்கும் தோன்றும் இயற்கை யுண்மை பற்றி இவ்வாறு நயம்படக் கூறினர். (42)

### எல்லோரும் இராமனுக்கு வாழ்த்து இயம்பல்

மின்ேைடு கூடி உலாவுகின்ற மேகம் போல, மார்பில் முந்நூல் இலங்க, தேர்மீது செல்லுகின்ற இராமனைக் கண்டாரெல்லாரும் அவனை நோக்கி, 'உன்னல் இவ்வுலகம் துன்பத்தினின்று நீங்கிப் பிழைத்தது. ஊழிகாலம் வாழ்வாயாக. எங்கள் ஆயுள் நாள்களெல்லாம் உனக்கே ஆகுக. உனக்கே எங்கள் நல்வினைகள் பயன்படுவனவாக. உன் விழிகளை நிகரத் தாமரையும், மேனியை நேர மேகமும், என்ன புண்ணியஞ் செய்தனவோ! எங்களை ஆள உன்னைத் தந்த தசரதனுக்கு யாங்கள் செய்யத் தக்க கைம்மாறு யாது! உன்னைக் காணுந்தோறும், அன்பன்றி வேறு காரணம் ஒன்றும் இன்றி, எங்கள் கண்கள் இன்பநீர் பொழிகின்றன' என்ருர்கள்.

பலர், 'இந்த மணிவடங்களையும் பொற்குவியல்களையும் குதிரைகளையும் யானைகளையும் ஏற்றுக்கொண்டு ஏழைகளுக்கு ஈவாயாக' என்று கொடுத்தார்கள். இவ்வாறு இராமனைக் கண்டவர்கள் செய்யாநிற்க, அவன் வருகையை எதிர்பார்த்திருந்தோர், அதனைச் சிறப்பிக்கத் தம் வாயிலின் எதிரே தெருவிலே பொன்னையும் மணியையும் பொழிந்து நின்ருர்கள்.

### இராமன் கைகேயி மாளிகையை அடைதல்

'இவனை வளர்த்தவள் கோசலையன்று, கைகேயியே; அவளுக்கு இவன் மணிமுடி வனைதலாலாம் மகிழ்ச்சி வார்த்தைக் கடங்காது. இனிப் பாவமும் துன்பமும் வேரற்றுப் பார் விட்டு விலகி யொழிந்துவிடும்; இவ்விராச்சியச் செல்வம் ஊருணி நீர் போல எல்லார்க்கும் பொதுவாம்' என்று சனங்கள் களிகூர்ந்து கூறு நிற்க, இராமன், கைகேயி, தசரதனுடன் அரச மாளிகையிலிருந்து தன்னை வரச் சொன்னு ளென்றெண்ணி, அங்கே சென்று, அவ் விருவரையுங் காணுனய்க் கைகேயி மாளிகையை **அடைந்தான்.**

### இராமன்முன் கைகேயி எதிர்ப்படல்

**ஆயன நிகழும் வேலை யண்ணலு மயர்ந்து தேருத்**
**தூயவ னிருந்த சூழ றுருவினன் வருத னோக்கி**
**நாயக னுரையான் வாயா னுனிது பகர்வ னென்னுத்**
**தாயென நினைவான் முன்னே கூற்றெனத் தமியள் வந்தாள்**

**கொண்டுகூட்டு :** ஆயன நிகழும் வேலை, அண்ணல் அயர்ந்து தேருத், தூயவன் இருந்த சூழல் துருவினன் வருதல் நோக்கி, 'நாயகன் வாயால் உரையான். இது நான் பகர்வன்' என்னுத் 'தாய்' என நினைவான் முன்னே 'கூற்று' எனத் தமியள் வந்தாள்.

**பொருள் :** இராமன், தசரதன் வழக்கமாக இருக்குமிடத்தில் இல்லாமையால் சிறிது சோர்வுற்றுப் பின்பு தேறித் தசரதன் வேறெங்குள்ளானென்று அவன் அப்போது இருக்குமிடத்தைத் தேடிவருதலைக் கைகேயி கண்டு, 'அரசன் "பரதன் நாடாள்வான், நீ காடேகு" என்று வாய்விட்டுச் சொல்ல மாட்டான். இதனை நானே கூறுவே' னென்று தன்னைத் தாயென்று கருதுவான் எதிரே எமன் போலத் தனியளாய் வந்தாள்.

ஆயன - அத்தன்மையன (ஆன நிகழ்ச்சிகள்). வேலை - சமயம். அயர்ந்து - சோர்ந்து. தேரு - தேறி. தூயவன் - பரிசுத்தன்; தசரதனைக் குறித்தது. சூழல் - இடம். தமி - தனிமை.

உயிர்களுக்குத் தம்மை ஊட்டி வளர்க்கும் தாயினும் அருளுடையாரும், தம்மைக் கொன் றொழிக்கும் கூற்றுவனினும் கொடுமையுடையாரும் இல்லை. ஆதலால், தாய் கூற்றுவன் போலாதல் கொடுமையினும் கொடுமையாய் வியப்பினும் வியப்பா மென்பது புலப்படவும், இனிய மண மாலை கொடிய விடப் பாம்பாக மாறினுற் போலக் கைகேயியின் தூய மனம் தீய

மனமாக மாறியுள்ள தன்மையை விளக்கவும் 'தாய் என நினைவான் முன்னே கூற்றெனத் தமியள் வந்தாள்' என இனிது கூறினர். (43)

### கைகேயி கூறுதல்

இராமன், தன் முன் வந்த கைகேயியை, 'மேயப் போன தாயை மாலையில் வரக் கண்ட கன்று போலக் களி துளும்பக் கண்டு, நெற்றி நிலத்திற் படிய வணங்கி யெழுந்து, மரியாதை யாக வாய்புதைத்து, வத்திரத்தை மடக்கிக்கொண்டு பணிவாக நின்றான். அவனை நோக்கிக் 'கொன்றுழல் கூற்ற மென்னும் பேரின்றிக் கொடுமை பூண்டாள்' ஆகிய கைகேயி, 'உன் தந்தை இன்று எனக்குச் சொன்னதும் நான் உனக்குச் சொல் வதும் ஆன ஒரு செய்தி உண்டு' என்று கூறினள். அப்போது, இராமன், அவளை நோக்கி, 'கட்டளையிட்டது என் தந்தையாக, அதனைத் தெரிவிப்பது என் தாயானல், நான் உய்தி அடைந் தேன். பிறந்ததனலாய பயன் பெற்றார் என் போல எவரு மிலர். யான் செய்த தவப் பயனை இன்று பெற்றேன். இதனி னும் நன்மை வேறில்லை. எனக்குத் தந்தையும் தாயும் நீரே. கட்டளைப்படி செய்யக் காத்திருக்கின்றேன். பணித் தருள்க' என்றான். அவள், '"இந் நில வுலக முழுவதையும் பரதனே ஆள்வான். நீ சடைதரித்துத் தவம்பூண்டு காட்டில் வாழ்ந்து பதினான்கு ஆண்டு கழித்து வரவேண்டும்" என்பது அரசன் கட்டளை' என்றாள்.

### இராமன் முகப் பொலிவு

**இப்பொழு தெம்ம னோரா லியம்புதற் கெளிதே யாரும்**
**செப்பருங் குணத்தி ராமன் திருமுகச் செவ்வி நோக்கில்**
**ஒப்பதே முன்பு பின்பவ் வாசக முணரக் கேட்ட**
**அப்பொழு தலர்ந்த செந்தா மரையினை வென்ற தம்மா (44)**

கொண்டுகூட்டு: யாரும் செப்பு(தற்கு) அரும் குணத்து இராமன் திருமுகச் செவ்வி எம்மனோரால், இப்பொழுது இயம்புதற்கு எளிதே? நோக்கில், முன்பு, பின்பு, அலர்ந்த செந்தாமரையினை ஒப்பது. அவ் வாசக(த்தை) உணரக் கேட்ட அப்பொழுது, (முகப்பொலிவு அந்தமலரை) வென்றது. அம்மா!

**பொருள்:** யாவராலும் கூறுதற் கரிய குணங்களை யுடைய இராமனது திருமுகப் பொலிவு, (அதனை நேராகப் பாராதவராக வும் நெடுங்காலம் கழிந்தபின் கேட்டல் மட்டும் உடையராகவும்

உள்ள) எம்போலியரால் இக் காலத்தில் சொல்லுதற் கெளி யதோ ! (அக்காலத்தில் அந்த முகப்பொலிவைப் பலமுறை பார்க்கப் பாக்கியம் படைத்தவர்கள், அதன் தன்மையை) ஆராய்ந்து பார்த்தால், (அவர்களுக்கு அது, 'பரதன் நாடாள் வான், நீ காடேகு' என்று கைகேயி கூறிய வசனத்தைக் கேட்ட தற்கு) முன்னும் பின்னும் மலர்ந்த செந்தாமரை மலரை ஒத்திருந்தது ; அவ் வசனத்தை மனம் உணரக் கேட்ட தற் சமயத்தில் அம்மனம் கிளர்ச்சி அடைய, அது காரணமாக, அம் முகப் பொலிவு வீறுற்று அம் மலரை வெற்றிகொண்டது. (இந்த அரிய நிகழ்ச்சி) வியப்பானது.

எம்மனோர் - எம் அன்னோர் - எம்மைப் போன்றவர். எளிதே யென் பதில் உள்ள ஏகாரம் எதிர்மறைப் பொருட்டு. அப்பொழுது - தற்சமயத் தில். அம்மா : அதிசயச் சொல். திருமுகச் செவ்வி இயம்புதற் கெளிதே, நோக்கில், முன்பு பின்பு அலர்ந்த செந்தா மரையினை ஒப்பதே, அப் பொழுது வென்றதெனக் கூட்டுக.

இராமன் கைகேயி கூறியதைக் கேட்டதற்கு முன்னும் பின்னும் அவன் முகம் தாமரை மலரை ஒத்திருந்தது ; அவன் அவள் கூறியதைக் கேட்ட சமயத்தில் அவன் முகம் தாமரை மலரை வென்ற தென்றதற்கியைய அடுத்த பாட்டில் 'உருளுடைச் சகடம் பூண்ட உடையவன் உய்த்தகா ரேறு-அருளுடை ஒருவன் நீக்க அப்பிணி அவிழ்ந்த தொத்தான்' என வரு தல் காண்க. 'இப்பாட்டில் 'திருமுகச் செவ்வி நோக்கில், ஒப்பதே முன்பு பின்பு அவ் வாசகம் உணரக் கேட்ட—அப்பொழுதலர்ந்த செந்தாமரை யினை வென்ற தம்மா' என்ற பகுதிக்கு, முந்திய உரைகாரர் (-சோ. சு.) 'திருமுகப் பொலிவைப் பார்க்கில், முன்பு தாமரை மலரை ஒத்திருந்தது ; இந்த வார்த்தையைக் கேட்ட பின்னர் அன்றலர்ந்த செந்தாமரை மலரை வெற்றி கொண்டது, அம்மா ! இது ஓர் வியப்பு!' எனவும், (—திரு. ச.) 'திருமுகத்தின் அழகினைப் பார்க்கில், முன்னும் பின்னும் அது தாமரை மலரினை உவமையிற் பொருந்துவதாயினும், அம் மொழியை அறியக் கேட்ட அப்பொழுது நாளலர்ந்த செந்தாமரை மலரை யொத்திருந்தது. இதனை, "சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை—ஒத்திருந்த முகத்தினை" எனப் பிற் கூறுதலானும் அறிக' எனவும் உரை வரைந்துள்ளார்கள்.

இப் பகுதிக்குப் பின்வருமாறும் பொருள் கொள்ளலாம் :

(ஆராய்ந்து) பார்த்தால், (இராமன்) திருமுகத் தழகு அன்றலர்ந்த செந்தாமரை மலரை ஒப்பதோ, (எனின், அன்று, மற்றென் னெனின், 'பரதன் நாடாள்வான், நீ காடேகு' என்று கைகேயி கூறின) வசனத் தைக் கேட்ட அப்பொழுது, (அதற்கு) முன்பு, பின்பு (ஆகிய மூன்று காலத்திலும் அந்த மலர் ஒப்பாகாதபடி உயர்ந்து அதனை) வென்றது. இது வியப்பானது. இப் பொருள் கொள்ளுங்கால், 'எளிதே' யென்பதில்

உள்ள ஏகாரம் போல 'ஒப்பதே' என்பதிலுள்ள ஏகாரமும் எதிர்மறைப் பொரு ளுடையதாகக் கொள்ளுதலும் 'திருமுகச் செவ்வி, நோக்கில், அலர்ந்த செந்தாமரையினை ஒப்பதே வாசகம் கேட்ட அப்பொழுது முன்பு பின்பு வென்றது' எனக் கூட்டுதலும் வேண்டும். (44)

இராமன், 'இன்றே வனம் போகின்றேன்' எனல்

**மன்னவன் பணியன் றாகி னும்பணி மறுப்ப னோவென்**
**பின்னவன் பெற்ற செல்வ மடியனேன் பெற்ற தன்றோ**
**என்னினி யுறுதி யப்பா லிப்பணி தலைமேற் கொண்டேன்**
**மின்னொளிர் கான மின்றே போகின்றேன் விடையுங் கொண்**
**டேன் (45)**

**கொண்டுகூட்டு :** (இராமன் அவளை நோக்கி), 'நும் பணி மன்னவன் பணி அன்று ஆகில் (அதனை) மறுப்பனோ! என் பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றது அன்றோ! அப்பால், இனி (அடையத்தகு) உறுதி என்? இப் பணி தலைமேல் கொண்டேன் ஆகி இன்றே மின் ஒளிர் கானம் போகின்றேன். விடையும் கொண்டேன்' (என்றான்).

**பொருள் :** கைகேயி கூறியதைக் கேட்ட இராமன் அவளை நோக்கி, 'நீர் பணிப்பது அரசன் கட்டளை யல்லவாயினும் யான் அதனைச் செய்ய மறுப்பேனோ! என் தம்பி பரதன் பெற்ற செல்வம் அடியேன் பெற்றதல்லவா! இக்கட்டளையைப் பெற்ற பின்பு, இனிமேல் இக் கட்டளையினும் மேலானதாக அடையத் தக்க நன்மை யாது? இக் கட்டளையை என் தலை மேற் சுமந்தேனாகி இன்றே காட்டுக்குப் போகின்றேன். (போம்படி உமது கட்டளை பெற்றதனால் உமது) விடையும் பெற்றுக் கொண்டேனானேன்' (என்றான்).

பணி - கட்டளை. என் - யாது? இனி - இதன் மேல். மின் ஒளிர் கானம் - (தன்மீது தங்கியமேகத்தின்) மின் ஒளி செய்கின்ற வனம்.

'இராமனை அழைத்துக் காட்டுக்குப் போகச் சொல்' என்று தசரதன் கட்டளை யிடாதிருக்கவும் கைகேயி தானாகவே பணித்தது, 'மன்னவன் பணி அன்று; ஆகில் நும் பணி' என, இராமனது மெய்யே பேசும் நா நிகழ்ந்த உண்மையை உணர்த்தி நின்றதோ எனவும்; 'என் பின்னவனான பரதன் பெறுவது நீ கொடுக்கும் அரசச் செல்வ மன்று; நான் பெற்ற தவச் செல்வமே யாகும்' என்பதை, 'பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றதன்றோ' என, நிகழ இருக்கும் உண்மையை உணர்த்தி நிற்கின்றதோ எனவும், தொனிப் பொருள் அமைந்திருத்தல் ஊன்றி உணரலாகும். (45)

# 4. நகர் நீங்கு படலம்

**இராமன் அயோத்தி நகரினின்று நீங்கியதைக் கூறுவது**

கைகேயியை நோக்கிக் 'கானம் இன்றே போகின்றேன், விடையும் கொண்டேன்' என்று கூறிய இராமன், தசரதனை நேரிற் கண்டு விடை பெற்றால், அவன் வருத்தம் அதிகப்படு மென்று, அவன் வைகிய திக்கு நோக்கித் தெண்டம் செய்து விட்டுக் கோசலை மாளிகையை அடைந்தான். மகுடம் வனைந்து மன்னர்க் குரிய சின்னங்களுடன் அவன் வருவானென்று, மனத் துள் நினைத்து மகிழ் மீக்கூர எதிர்பார்த்திருந்த அவள் எதிரே, அவன் குடை பிடிப்பார், சாமரம் வீசுவார் முதலிய பரிசன ரொருவருமின்றித் தோன்றாத் துணைகளாக விதி அழைத்துக் கொண்டு முன் செல்லத் தருமம் வருந்திப் பின்தொடரத் தன்னந்தனியனாய் நடந்து வந்து தாள் பணியக் கண்டு, அவள் திகைப்புற்று, 'முடிசூட இடையூறு எதுவேனும் உளதாயதோ?' என்றாள். அவன் கூப்பிய கையனாய், 'உன் ஆசைப் புதல்வன், எல்லா நற் குணங்களும் நிரம்பியவன், என் அருமைத் தம்பி பரதனே முடி சூடுகின்றான்' என்றான்.

**கோசலை, 'முறை அல்ல வாயினும் குறைவில்லை' எனல்**

முறைமை யன்றென்ப தொன்றுண்டு மும்மையின்
நிறைகு ணத்தவ னின்னினு நல்லனால்
குறைவி லன்னெனக் கூறினள் நால்வர்க்கும்
மறுவி லன்பினில் வேற்றுமை மாற்றினாள். (46)

**கொண்டுகூட்டு:** நால்வர்க்கும் மறுவில் அன்பினில் வேற்றுமை மாற்றினாள், 'முறைமை அன்று என்பது ஒன்று உண்டு; அவன் நின்னினும் மும்மையின் நிறை குணத்தவன்; நல்லன்; குறைவிலன்;' எனக் கூறினள்.

**பொருள்:** 'மூத்தோனிருக்க இளையோன் முடி சூடுதல் முறை யன்று என்று கூறும் ஒரு வார்த்தை உண்டு: அதுவே யன்றி அவன் உன்னிடத்துள்ள நற்குணங்களினும் மும்மடங் குக்கு அதிகமான நற்குணங்களுடையவன்; நல்லவன்; அர சாள்வார்க்கு வேண்டிய வேறு குணம் எதுவும் குறைவில்லவன்' என்றாள் கோசலை.

ஒன்று, ஒரு வார்த்தை யென்ற பொருள் குறித்தது. கைகேயி சூழ்வினைப் படலம் 105-ம் பாட்டில் '"மகனே ஒரு வார்த்தை உண்டு;

(அது) உன் தந்தை உனக்கு உரைப்பதாகிய தொரு வார்த்தை '' யென்றுள்' என்று பொருள்படும். ' " ஒன்றுனக் குந்தை மைந்த உரைப்பதோர் உரையுண் '' டென்றுள்' என்பதிலும், நிந்தனைப் படலம் 66-ம் பாட்டில் ' ஒன்று கேள் ' என்பதிலும், ' ஒன்று ' ஒரு வார்த்தை யெனப் பொருள்பட வருதல் காண்க. மும்மை - மூன்று. அது ' மும்மையின் நிறை குணத்தவன் ' என்பதில் ' மும் மடங்கு ' எனப் பொருள் பட நின்றது. மும்மையின் - மூன்று மடங்கினைக் காட்டிலும் அதிகமாக. காட்சிப் படலம் 19-ம் பாட்டில் ' மும்மடங்கு பொலியும் முகத்தினன் ' என வருதல் காண்க.

' பரதனே துங்கமாம் முடி சூடுகின்றுன் ' என்று கோசலை கேட்டபோது, ' தன் மகன் முடியை இழக்கின்றுன்; அம் முடியைத் தன் மாற்றவள் மகன் பெறுகின்றுன் ' என்று சிறிதும் வருந்துதல் இல்லாமல் ' (பரதன்) நின்னினும் நல்லனுல் ; (அரசாளும் தகுதி) குறைவிலன் ' என்று அவள் கூறியதற்குக் காரணம் அறிவிப்பாராய் ' நால்வர்க்கும் - மறுஇல் அன்பினில் வேற்றுமை மாற்றினுள்' என்றுர். கோசலையின் மன நலம், அவளை நோக்கிப் பரதன், 'இராமனுல், குகன் உடன்பிறந்தானுகக் கொள்ளப்பட்டவன்' என்று கூறின மாத்திரையே, அவள் 'நைவீரல்லீர் மைந்தீர்......நீங்கள் ஐவீரும் ' எனக் குகனை உள்ளிட்டு ஐவர்க்கும் தாய்மை பாராட்டியதாகக் கம்பர் வேரூ ரிடத்திற் கூறியிருப்பது இங்கே கூறியதைச் சேர்த்துச் சிந்திப்பதனுல் விளங்கும்.

பாட பேதம் : ஒன்றுண்ட தல்லது : நல்லனேர். (46)

### கோசலா ராம சம்வாதம்

கோசலை, இராமனை நோக்கி, 'அரசன் ஆணை கடவாமையே உனக்கு அறமாம் ; உன் தம்பிக்கு அரசை அன்புடன் அளித்து அவனேடு கூடி ஊழி வாழி' என்றுள். அவன், அது கேட்டு, மிக மகிழ்வுற்று, 'அன்னையே, என் ஐயன் என்னை நன்னெறி உய்த்தற்கு அருளிய ஆணை மற்றென்றுண்டு' என்றுன். 'அது யாது ?' என, ' " வனத்தில் மாதவரோடு பதினன்காண்டு வாழ்ந்து மீண்டு வருவாயாக '' என்று பணித்தான் ' என்றுன். எனவே, அச் சொல் நெருப்புப் போலச் செவிக்குள் ஏறத், தேங்கித் திகைத்து, ஏங்கி இளைத்து, விம்மி வெதும்பி, வெய்துயிர்த்து விழுந்து புலம்புவாளானுள். 'அரசன் உன்னை "மகுடம் சூடு" என்றது வஞ்சமோ ! அது வஞ்ச மன்றுயினும், நஞ்சமே ! அதனுல் நான் செத்தே போவேன். " நீ வனம் செல்வாய் " என்றது கேட்க, என் மனம் அஞ்சுகின்றது ; மிகவும் அஞ்சுகின்றது !' என்றுள். மனம்புழுங்கி வருந்தினுள். ' ஆ ! அரசன் அருள் இருந்தவாறு நன்று ! நன்று !' என்று நகைத்

தாள். இப்பெருந் துன்பத்தைக் கண்டு நின்ற இராமனைப் பார்த்து, 'வனம் செல்வது என்று?' என்றாள். 'மன்னன் கோபிக்க என்ன குற்றம் செய்தாய்?' என்றாள். 'தருமம் என் மட்டில் இல்லையோ! என் ஆவி அழிய, யான் என்ன தீவினை செய்தேனோ!' என்றாள். கன்று பிரிந்த கறவை போலக் கதறிக் கலங்கினாள்.

இவ்வாறு வருந்திக் கிடந்த கோசலையை இராமன் இரு கையாலும் ஏந்தி யெடுத்து எழச்செய்து, 'மெய்யனாகிய நம் வேந்தனைப் பொய்யனாகச் செய்யலாமோ?' என்று அவளைத் தேற்றுவானாய், நன்மையும் உண்மையும் பொதிந்தனவும், அச் சமயத்துக்கு அமைந்தனவும், அவள் ஏற்றுக்கொள்ளுதற் கியைந்தனவுமான இன்சொற்களை மென்மையாக வற்புறுத்தி அவள் தேறுமாறு கூறி, 'என் அருமைத் தம்பியை அரசச் செல்வம் அடையச் செய்து, என் அன்பு மிக்க தந்தையை மறந் தும் பொய் புகலாத வாய்மையாளனாக்கி, வனத்தில் மாதவ ருடன் தவஞ்செய்யும் வாழ்வையும் பெற்றேன். பிறந்ததனாற் பெறும் பேறு பிறிது யாது? உலக மெல்லாம் ஒருங்கே ஒழிந்தா லும் அரசனாணை கடக்க அடியேனாலாகுமோ? ஆதலால் நீ வருந்துதல் தவிர்ந்திடுக' என்றான். அவள், 'அப்படியானால் அரசன் ஆணைக்கு மாறாக, நீ வனம் செல்ல வேண்டா மென்று நான் சொல்லவில்லை; நீ வனம் செல்வா யென்று கேட்டவுடனே, தானே இறந் தொழியா திருக்கின்ற என் வல்லுயிரை மாய்த் தகற்றாது வைத்திருக்கும் வன்மனம் படைத்த என்னையும் நீ காட்டுக்குச் செல்லும்போது கூட்டிச் செல்வாயாக' என்றாள்.

### இராமன் சுமித்திரையிடம் ஏகல்

அவன், 'என்னைப் பிரிந்து வருந்தும் அரசனைத் தேற்றாமல், என்னுடன் காட்டுக்கு வருவது தருமமாகுமா, ஆகாதென்பதை அறிகின்றா யில்லை. என் தம்பி இராச்சிய பாரத்தை ஏற்ற பின், அரசன் தவஞ் செய்ய வனஞ் செல்லும்போது, அவனுடன் சென்று, அவனுக்கு உதவி செய்யும் துணைவியாகி நோன்புகள் செய்வாயாக. முன் விசுவாமித்திர முனியுடன் வனம் சென்று, பல வித்தைகளும் நல்ல பேறுகளும் பெற்று வந்தது போல, இப்போதும் வனஞ்சென்று பல நலங்கள் படைத்தவனாய்ப் பதினாலாண்டுகள் பதினாலு நாள்களாகக் கழிய விரைவாய் வருவேன்; பார்ப்பாய்' என்றான். எனவே, அவள், 'வேண்டு

மாகுல், பரதன் அரசாள்க. நான் அரசனை வணங்கி யிரந்து இராமன் காட்டுக்குச் செல்லாமல் தடுப்பேன்' என்று தனக்குத் தானே கூறிக்கொண்டு புறப்பட்டாள். புறப்பட்டவளை இராமன் வணங்கி அவளையும் அரசனையும் வருத்தம் மாற்ற வல்லவள் சுமித்திரை யென்று அவள் மாளிகைக்குச் சென்ருன்.

### கோசலை தசரதன் நிலைகண்டு அலறல்

கோசலை கைகேயியின் மாளிகைக்குப் போய், அரசன் கிடந்த இடம் அடைந்து, உயிர் அழிய, உடல் விழுதல் போல, அவன் விழுந்து கிடந்த தரையிலே தானும் விழுந்தாள். விழுந்தவள், அவனை நோக்கி, 'அரசர்க்கரசே! ஆதித்தன் போல அனைத்துலகும் செல்லும் ஆழியாய்! பலமில்லாதேன் பலமே! தரித்திரன் பெற்ற தனமே! தரையிலுள்ளார் தவப் பேறே! செல்வத்தின் செல்வமே! கல்வியின் கல்வியே! மறைகளின் நிலைக்களமே! அருளின் உறைவிடமே! என்றும் பிரியாத நீயும் இராமனும் பிரிதற்கு ஏது யாது? பிரிவது தகுதியோ? முறையோ? மதியோ? விதியோ? இதனுல் உன் அடியேங்களான அவனும் யானும் அடையும் நிலையை அறியாமை யேனே? கலங்கிக் கதறுகின்ற தமியேனுக்கு ஒன்றும் உரைக்கின்ருயில்லை! இது அழகோ!' என்று கூறியும், அவன் வாய் திறவாமையைக் கண்டு, 'ஐயோ! ஒளிமிகுந்த உடல் பொலிவிழந் திருக்கின்றது. உன்னுதற் கரிய கொடிய நோயைத் தான் உற்றிருக்கின்ருனயினும் அதனை உணரும் உணர் வொழிந்திருக்கின்ருன். அதனுல் அந்நோய் இன்னதென்னச் சொல்லா திருக்கின்ருன். அது யாதென்று என்னுல் அறிய முடியவில்லை. மகனே! மன்னன் நிலையைப் பார்க்க வருவாயாக!' என்று அலறினள். அந்த ஓசை கேட்டவுடனே, அரசரும் முனிவரும் அச்சமயத்துக் கொவ்வாத அவ்வோசைக்குக் காரணம் யாதென அறியும்படி வசிட்டனை வேண்ட, அவன் சென்று அரசன் நிலைமையைக் கண்டான்.

### வசிட்டன் ஆராய்தல்

இறந்தா னல்லன் னரச னிறவா தொழிவா னல்லன்
மறந்தா னுணர்வென் றுன்னு வன்கே கயர்கோன் மங்கை
துறந்தா டுயரந் தன்னைத் துறவா தொழிவா ளிவளே
பிறந்தார் பெயருந் தன்மை பிறரா லறிதற் கெளிதோ (47)

**கொண்டுகூட்டு :** 'அரசன் இறந்தான் அல்லன்; (இனி) இறவாது ஒழிவானும் அல்லன்; உணர்வு (நீங்கி) மற(தி யடை)ந்தான்' என்று உன்னு, 'துயரம் தன்னை வன் கேகயர்கோன் மங்கை துறந்தாள்; இவள் (கோசலை) துறவாது ஒழிவாள். (ஒத்த குலத்துப்) பிறந்தார் (இவ்வாறு) பெயருந்தன்மை பிறரால் அறிதற்கு எளிதோ?'

**பொருள் :** 'அரசன் இப்போது, செத்தான் போலத் தோன்றினும், உண்மையாகச் செத்தா னல்லன்; ஆயினும், இனிச் சாவாதிருப்பானு மல்லன்; (ஏன் செத்தான் போலத் தோன்றுகின்ற னென்றால்,) நினைவு நீங்கி மறதி அடைந்திருக்கின்றான்; என்று ஆராய்ச்சியோடு நினைந்து தெரிந்து, 'துன்பத்தைக் கைகேயி துறந்திருக்கின்றாள்: அதனை அகற்றும்படி போதிக்கினும் கோசலை அகற்றா திருப்பாள். (இவ்விருவர் போல, ஒத்த குலங்களில் ஒரு தன்மையினராகப்) பிறந்தோர் (இருவரில் ஒருவர் இயல்பு மாறாதிருக்க மற்றொருவர் இயல்பு) மாறுதல் (எதனாலென்று அவர்கள் அறியலாமே யன்றி) மற்றவர்களால் அறிதற் கெளிய தன்று! (என்று வசிட்டன் எண்ணினான்.)

உன்னல் - ஆராய்வாக நினைதல்.—ச. அ. 'இவள்' கோசலையைக் குறித்தது. பெயர்தல் - பிறழ்தல்.—புற. நா.; நிலை நீங்கல்—இ. அ. (47)

### தசரதன் தெரிதல்

துன்பத்துள் மூழ்கி யிருக்கும் கோசலை அரசனது துன்பத்தின் காரணத்தைச் சொல்ல வல்லளாயில்லை யென்று வசிட்டன் எண்ணிக் கைகேயியை நோக்கி, 'அன்னையே, அரசன் அயர்வுக்குக் காரணம் யாது?' என, அவள் தன்னால் நடந்த செய்தியைத் தெரிவித்தாள். உடனே, முனிவன் அரசனைக் கையாலெடுத்து, இருக்கச்செய்து, 'கல்வி யறிவுடையாய்! சோர்தல் வேண்டாம். கைகேயி, தான் பெற்ற அரசைத் தானே உன் காதற் புதல்வனுக்குக் கனிந்து கொடுப்பாள்' என்று கூறி அவன் மீது குளிர்ந்த பனி நீர் தோய்ந்த காற்று வீசச்செய்து, அவன் சோகம் நீங்க இன்சொற் கூற, அவன் ஒருவாறு தெளிந்து, 'இராமா, இராமா' என்று சொல்வானாய்ச் சிறிது உயிர் பெற்றான். முனிவன், 'கைகேயி அரசை அளிப்பாள்; இராமன் அரசாள்வான்; அவன் ஆளானேல், நாங்கள் வாழ்வேமோ? நீ சாவாதே!' என்றான். அரசன், 'முனிவர் கோவே! நான் சாகுஞ் சமயத்தில், இராமனை முடி சூட்டி வனமேகாவாறு செய்து என் வாய்மைக்கும் பழுது வாராமற் காப்பாயாக' என்றான். முனிவன் கைகேயியை நோக்கி, 'உன்

மகன் இராமனுக்கு அரசும் உன் கணவன் தசரதனுக்கு உயிரும் உதவிப் புகழ் பூண்பாயாக' என்றான். அவள் அழுது கொண்டு, 'அரசன், தன் சொற்றவறினால், "என்னுயிரை மாய்த்துக் கொள்வே" னென்று சொன்ன, என் சொற் றவறாமல் இறந்தே தீருவேன்' என்றாள். முனிவன், 'மூத் தோனைக் காட்டுக்கோட்டி இளையோனுக்கு முடி சூட்டல் முறை யன்றென்றும், உலகம் ஒப்பாதென்றும், மணவாளன் மடிவா னென்றும், பழியொழியா தென்றும், பாவம் மேவு மென்றும் பார்க்கின்றாயில்லை! கெடுதியாகப் பிடித்த பிடி விடுகிறாயில்லை! புண்ணுக்குள்ளே புகுகின்ற வெந்தீயோ, விடமோ வென்னும் கொடிய சொற்களைக் கூறுகின்றாய்; கணவன் உயிர் பிரியும் கடுந்துன்பங் கண்டும் கடுகளவும் இரங்காத கன்னெஞ்சுடைய நீ, பெண்ணேயோ! பேயேயோ! உயிரையும் புகழையும் ஒருங்கே ஒழிக்கும் உன்னை ஒத்த தீயோர், உலகத்தில் ஒருவரு மில்லை. மகனை, "வனம் போ" வென்று மன்னவன் தன் வாயாற் கூறுமுன் உன் வாயாற் கூறினாய்; மாளா வன்பழிக் காளானாய்' என்றான். அதுகேட்ட அரசன் கைகேயியை நோக்கி, 'என்னுயிரைக் காட்டுக்குப் போகும்படி நீ ஏவினாயோ? அவன் போயினானோ?' என்று பின்னும் கூறுவான்.

### தசரதன் கைகேயியைக் கடிதல்

**கண்டே னெஞ்சங் கனிவாய்க் கனிவாய் விடநா னெடுநாள்**
**உண்டே னதனா னீயென் னுயிரை முதலோ டுண்டாய்**
**பண்டே யெரிமுன் னுன்னைப் பாவீ தேவி யாகக்**
**கொண்டே னல்லேன் வேறோர் கூற்றந் தேடிக் கொண்டேன்**

கொண்டுகூட்டு: 'பாவீ! நான் (உன்னை) நெஞ்சம் கனிவாய்க் கண்டேன்; (உன்) கனிவாய் விடத்தை (அமுதென்று) நெடுநாள் உண்டேன்; அதனால் நீ என் உயிரை முதலோடு உண்டாய்; பண்டு எரிமுன்னே உன்னைத் தேவி ஆகக் கொண்டேன் அல்லேன்; (மற்று யாதாகக் கொண்டேன் எனில்) வேறு ஓர் கூற்றம் (ஆக நான்) தேடிக் கொண்டேன்.

பொருள்: 'பாவீ! நான் உன்னை மனங்கனிந்து கண் குளிரக் கண்டேன்; கண்டு, உன் கனி போன்ற வாய் ஊறலாகிய விடத்தை அமிழ்தமென்று நெடுநாளாக உண்டேன்; அதனால் நீ என்னுயிரை அடியோடு சமூலமாக உண்டாய்; யான் உன்னைக் கலியாணஞ் செய்த முன்னாளில் மணவேள்வித் தீயின் முன்னே

உன்னை மனைவியாகக் கொண்டேனல்லேன்; மற்று யாதாகக் கொண்டே னென்றால், இறுதிக் காலத்தில் என்னைத் தான் தேடிக் கொள்ளும் கூற்றிருக்கவும் அது போதா தென்று வேறொரு கூற்றாக நான் தேடிக்கொண்டேன்.

முதல் - அடி. பண்டு - முன். கூற்றம் - இயமன். (48)

**விழிக்குங் கண்வே றில்லா வெங்கா னென்கான் முளையைச்**
**சுழிக்கும் வினையா லேகச் சூழ்வா யென்னைப் போழ்வாய்**
**பழிக்குந் நாணாய் மாணாப் பாவி யினியென் பலவுன்**
**கழுத்தின் னாணுன் மகற்குக் காப்பின் னாணா மென்றான் (49)**

கொண்டுகூட்டு: 'விழிக்கும் கண் வேறு இல்லா என் கான் முளையை, வெம் கான் ஏகச் சுழிக்கும் வினையால் சூழ்வாய்; (அதனால்) என்னைப் போழ்வாய்; பழிக்கு நாணாய்; இனிப் பல (பேசி) என்? மாணாப் பாவி, உன் கழுத்தின் நாண் உன் மகற்குக் காப்பின் நாண் ஆகும்' என்றான்.

**பொருள்:** '(தன்னை - இராமனை - யன்றிக்) காணுங் கண் வேறில்லாத என்னுடைய மகனைக் கொடுமையான காட்டில் ஏகும்படி, துராலோசனை செய்தாய்; அதனால் என் னுயிரைப் பிளந்தாய்; பழியடைதற்கு நாணாய்; இனிப் பல பேசி என் பயன்? யான் இறந்தபோது களையப்படும் தாலியாகிய உன் கழுத்துக் கயிறு உன் மகனுக்குக் காப்புக் கயிறாம்' என்றான் தசரதன்.

கான் - காடு. கான்முளை - மகன். சுழி - கபடம்; சுழித்தல்-மறைத் தல்—ச. அ. சுழிக்கும் வினை - மறைக்கும் செயல்-(பரதனை முடி சூட்டல். இராமனைக் காட்டுக் கனுப்பல் ஆக இரண்டு வரங்கள் வேண்டுமென்று துவக்கத்திலேயே நேராகக் கூறாமல், 'வரங்களைப் பெற்றுக்கொள்'ளென்ற பின் 'அவை இவை' யெனக் கூறிய) கபடத் தொழில். போழ்தல் - பிளத்தல். மாணாமை - மாட்சிமைப் படாமை. இனி என் பல - இனிப் பல (பேசி) என் (பலன்). காப்புக் கயிறு - (முடிசூடுதற்கு முதற் சடங் காகக் கையிற் கட்டும்) இரட்சாபந்தனம்.

'விழிக்கும் கண்வேறில்லா' என்ற தொடரை வெங்கானுக்கு விசேடணமாகக் கொண்டு 'தீவினை வசத்தால் ஏகதேசமாகத் தன்பால் வந்தார் கண்க ளன்றி வேறு மக்கள் கண்க ளில்லாத (குடி வாழ்க்கையற்ற) கொடிய காடு' என்றும் பொருள் கொள்ளலாம். 'சுழிக்கும்' என்பதற்குச் 'சுற்றிவாங்கும்' என்றும் 'வினை' என்பதற்கு 'ஊழ்வினை' என்றும் பொருள்கொண்டு, 'சுழிக்கும் வினையால்' என்பதற்கு '(அபாயமான நீர்ச்சுழி போன்ற தன்னுள்ளே என்னை யிழுத்து)ச் சுற்றி வாங்கும் என் ஊழ்வினை காரணமாக' என்றும் உரை கூறலாம்.

தசரதன் கைகேயியை நோக்கி, 'உன்னைப் பாவி! தேவியாகக் கொண்டேனல்லேன்; வேறோர் கூற்றம் தேடிக் கொண்டேன்' என்றதும் 'உன் - கழுத்தின் நாண் உன்மகற்குக் காப்பின் நாணும்' என்றதும், அவனது ஆற்றொணு மனக் கொதிப்பை ஒரு முறை கேட்டார், என்றும் மறவாதபடி மனதில் அழுந்தும்படி பதிவிப்பனவாய்ச் சோகச்சுவை துளும்புவனவாய்ச் சொன்னயம், பொருள் நயம், தொனி நயம் ஒருசேர அமைந்தனவா யிருத்தல் நோக்கத்தக்கது.

இவ் விரண்டு பாட்டுக்களின் இறுதியிலுள்ள இனிய கருத்துக்கள் கம்பர் மனத்தே தோன்ற, அவர் அவைகளை அமைத்துக் கடையடிகள் ஆக்கிக்கொண்டு ஏனையடிகளை இனிது நிரப்பியிருக்கும் கவிமுறை கவனிக்கத் தக்கது. இவ்வாறே கம்பர் கவிகள் பலவற்றிலும் வேறு உயர்ந்த கவிஞர்கள் சிறந்தனவாக இயற்றியுள்ள செய்யுள்களிலும் தலைமையான கருத்துக்கள் முடிமணி போலப் பெரும்பாலும் இறுதியடி களில் அமைக்கப் பெற்றிருத்தல் அறியத்தக்கது. (49)

### தசரதனும் கோசலையும் வருந்தல்

தசரதன், வசிட்டனை நோக்கிக் கைகேயியைச் சுட்டிக் காட்டி, 'இவளை வெறுத்துவிட்டேன். இனி இவள் என் மனைவி யில்லை. பரதனை மகனுகக் கருதேன். அவன் என் ஈமக் கடன் இயற்றுதற் குரியனுகான்' என்றுன். பின்பு, அதுவரை தான் பாராதிருந்த கோசலையைப் பார்த்து, 'என்னைக் கண்டால், என் துன்பம் அதிகமா மென்று என்னைக் காணுது சென்றவன் உன்னையும் பார்க்க வில்லையோ?' என்றுன். அதன் பின், அவள் இராமன் பிரிவால் அடைந்த துயரத்தைத் தானிருக்கும் துன்ப நிலை கண்டு நீங்கித் தன் பொருட்டு வருந்துகின்றுளென் றறிந்து, அவள் வருத்தத்தைக் குறித்து வருந்துவானுயினன். அதைக் கண்டு, அவள், எல்லாம் மாற்றவளாகிய கைகேயி செய்கையே யென்றும் கணவன் இவ்வாறு மென்று எதிர் பாராமல் அவளுக்கு வரங் கொடுத்துவிட்டு வருந்துகின்று னென்றும் தெரிந்து, அவனைத் தேற்றுவாளாய் 'இராமன் மீண்டு வருவான்' என்று தேறுதல் வார்த்தை செப்பினுளாயினும், மனத்தினுள்ளே மகன் திரும்பி வருவானுனல், மன்னன், வார்த்தை பொய்த்து வன்பழி அடைவானென்று வருந்தினுள்; 'மன்ன! வாய்மையைக் காக்க மகனைக் காட்டுக் கனுப்ப வரம் அளித்த மாண்புடைய நீ அம் மாண்புக்கு மாறுக மகன் பொருட்டு, வருந்தினுல் உயர்ந்தோர் ஒப்பா ராதலால், அவ் வருத்தம் பொருத்தமற்றதென அதனை அகற்றுவாயாக'; என்றுள்.

### கோசலை துன்பம்

**போவா தொழியா னென்றாள் புதல்வன் றன்னைக் கணவன்**
**சாவா தொழியா னென்றென் றுள்ளந் தள்ளுற் றயர்வாள்**
**காவா யென்றாண் மகனைக் கணவன் புகழுக் கழிவாள்**
**ஆவா வுயர்கோ சலையா மன்ன மென்னுற் றனளே (50)**

**கொண்டுகூட்டு :** உயர் கோசலையாம் அன்னம், 'புதல்வன் போவது ஒழியான்' என்றாள்; (அதனால்) 'கணவன் சாவாது ஒழியான்' என்று என்று உள்ளம் தள்ளுற்று அயர்வாள்; மகனை '(உன் தந்தையைக்) காவாய்' என்றாள்; (காப்பானாயின்) கணவன் புகழுக்கு அழிவாள்: (இவ்வாறு கோசலை) ஆ! ஆ! என் உற்றனள்!

**பொருள் :** கற்பில் உயர்ந்த கோசலை மகனைக் குறித்துக் கருதி அவன் காட்டுக்குப் போகாதிரா னென்றெண்ணினாள்; அதனால் கணவன் இறவாதிரா னென்றெண்ணி யெண்ணி மனம் தடுமாறி மயங்கினாள்; மகனை (மனத்துள்ளே எதிர்முகமாக்கி) 'மகனே! நீ காட்டுக்குச் செல்லாமல் உன் தந்தையைக் காப்பாயாக' என்று மனத்துள்ளே கூறினாள்; அவன் அவ்வாறு செய்தால் கணவன் புகழுக்கு அழிவு வருமே யென்றெண்ணி வருந்தினாள்: (இவ்வாறாக ஒருபுறம் மகன் நிலைமை வருத்தாநிற்க, மற்றொருபுறம் கணவன் நிலைமை வருத்தா நிற்க, இருதலைக் கொள்ளி எறும்பு) போலக் கோசலை, ஆ! ஆ! என்ன கொடிய துன்பம் அடைந்தாள்! அந்தோ!

**என்றாள்** - என்று கருதினாள்; ('"அன்றறிவா" மென்னா தறம் செய்க'-**குறள்**). என்று என்று - என்று எண்ணி, என்று எண்ணி - என்று பல முறை யெண்ணி. தள்ளல் - தடுமாறல்—**ச. அ.** அழிதல் - வருந்தல்—**மணிமே.** 'மனம் அழிந்தாள்' என்பார், 'அழிந்தாள்' என்று சுருங்கக் கூறினார். 'உள்ளம் அழிய' எனப் பதிற்றுப்பத்து 13-ல் வருதல் காண்க. ஆ: இரக்கக் குறிப்பு—**சிந்தா.** ஆ ஆ, என்ற அடுக்கு மிகுந்த இரக்கத்தைக் குறித்தது. (50)

### தசரதன் புலம்பல்

**கண்ணுந் நீரா யுயிரு மொழுகக் கழியா நின்றேன்**
**எண்ணுந் நீர்நான் மறையோ ரெரிமுன் னின்மேற் சொரிய**
**மண்ணுந் நீராய் வந்த புனலை மகனே வினையேற்**
**குண்ணுந் நீரா யுதவி யுயர்கா னடைவா யென்றான் (51)**

**கொண்டுகூட்டு :** 'கண் நீராய் (ஒழுக) உயிரும் (நீராய்) (ஒழுக, (நான்) கழியா நின்றேன்; எண்ணும் நீர் (மை) நான்மறையோர் (வேள்வி)

எரிமுன் நின் மேல் சொரிய மண்ணும் நீராய் வந்த புனலே, மகனே, வினையேற்கு, (சாகும் சமயத்து) உண்ணும் நீராய் உதவி உயர்கான் அடைவாய்' என்றான்.

பொருள் : 'என் கண்கள் (கண்) நீராகக் கரைந்து ஒழுக, உயிரும் நீர்போல உருகி ஒழுக, யான் குறைந்து இறந்து போகின்றேன் ; வேதியர் உனக்கு முடிசூட்டும் சடங்குக்காக வளர்த்த வேள்வித் தீமுன் உன்மேல் அபிடேகம் செய்யப் பொழியும் மஞ்சன நீராகக் கொண்டுவரப்பட்டிருக்கிற தீர்த்த நீரைத் தீவினையேனுக்குச் சாகும் சமயத்தில் உண்டாகியிருக்கின்ற தாகத்துக்குக் குடிக்கும் நீராகக் கொடுத்துவிட்டு நீ காட்டுக்குச் செல்வாயாக' என்றான் தசரதன்.

கழிதல் - இறத்தல். எண்ணும் - மதிக்கும். நீர்-தன்மை. மண்ணல் - கழுவல். மண்ணும்நீர் - மஞ்சனநீர்—சிந்தா. உயர்கான் - (மரங்கள்) உயர்(ந்து வளர்)ந்த வனம்.

இப்போது தசரதன், எதிரில் இல்லாத இராமனைக் கருத்திலே நினைந்து, எதிர்முகமாக்கி, 'நின்மேற் சொரிய - மண்ணும் நீராய்வந்த புனலே மகனே வினையேற் - குண்ணும் நீராய் உதவி உயர்கான் அடைவாய்' என்று இராமனை விரும்பிக் கூறியது, மேலே (49-ம்பாட்டில்) 'உன் கழுத்தின் நாண் உன்மகற்குக் காப்பின் நாண் ஆம்' என்று எதிரில் இருந்த கைகேயியை வெறுத்துக் கூறியதனோடு ஒப்பிடற்குரியது. இவ்வாறு கூறியவற்றுள் முன்னதில், சுப சமயத்துக் குதவும் பொருளை அசுப சமயத்தில் உதவும்படியும் ; பின்னதில், அதற்கு மாறாக, அமங்கலமான பொருளை மங்கலமான பொருளாக உபயோகிக்கும்படியும், வியப்பும் நயப்பும் உண்டாகக் கூறியிருத்தல் காண்க. 'மங்கலம்' என்னும் மறு பெயருடையதாய்க், கணவன் உயிர்வாழுங் காலத்தில் மங்கலப் பொருளாயிருக்கும் 'தாலி' அவன் இறந்த காலத்தில் களையப்படும் அமங்கலப் பொருளாதலால் கூறவேண்டியதில்லை. (51)

தசரதன், இராமனை எண்ணிப் 'பொன்னின்மிக்க பொன்னே! புகழின் மேம்பட்ட புகழே! உண்மையின் உயர்ந்த உண்மையே! உன்னை முடிசூட்டி நாடாளச் செய்வேனென்று சடைபூட்டிக் காடேகச் செய்தேன் ! என்னை விருத்தப்பருவத்தே வெறுத்துக் கைவிட்டு விலகத் துணிந்தாய் ! உன்னாற் கைவிடப்பட்ட பின் உயிர் வாழ்வை வேண்டேன், வேண்டவே வேண்டேன். நீ கானம் புகுமுன் நான் வானம் புகுவேன். நீ என்னைப் பிரிதலைப் பொறுத்தல் போல, நான் உன்னைப் பிரிதலைப் பொறுக்கவிடாமல் நெக்குவிட்டுருகும் நெஞ்சும் எளிதே ! உயிர் பிரிதற் கேற்ற உடம்பும் உடையேன். நீ காட்டிலே காலந்தள்ள,

நான் நாட்டிலே கைகேயி காண, நாணமின்றி, வாழ்வேனுனல், என் தன்மையை என்னென்னலாம்! நீ மணக்கோலம் பூண்டு சீதா சமேதனுய் நாட்டுக்குவரக்கண்ட கண்களால், தவக்கோலம் தாங்கிக் காட்டுக்குப் போகக் காணமாட்டேன். என் உயிரே! உன்னைப் பெற்ற யான், உன் அருமை அறிவேன்.

**அள்ளற் பள்ளப் புனல்சூ ழகன்மா நிலமும் மரசும்**
**கொள்ளக் குறையா நிதியின் குவையும் முதலா மெவையும்**
**கள்ளக் கைகே சிக்கே யுதவிப் புகழ்கைக் கொண்ட**
**வள்ளற் றனமென் னுயிரை மாய்க்கும் மாய்க்கு மென்ருன்(52)**

கொண்டுகூட்டு : 'அள்ளற் பள்ளப் புனல்சூழ் அகல்மா நிலமும் அரசும், கொள்ளக் குறையா நிதியின் குவை முதலாம் எவையும், கள்ளக் கைகேசிக்கே உதவிப் புகழ் கைக்கொண்ட வள்ளல்தனம், என் உயிரை மாய்க்கும் மாய்க்கும்' என்ருன்.

பொருள் : 'கடல் சூழ்ந்த விசாலமான பூமியையும் அரசாட்சியையும் (எவரெவர் எவ்வளவெவ்வளவு கொள்வாராறுலும், அவரெல்லாம் கொள்ளக்) கொள்ளக் குறைவு படாத(தாம்படி மிகுத்த) திரவியக் குவியல்கள் முதலான யாவற்றையும் வஞ்சகமுடைய கைகேயிக்கே கொடுத்துப் புகழைக் கைக்கொண்ட உன் உதார குணம் என் உயிரை ஒழித்துவிடும், ஒழித்தேவிடும்' என்ருன் (தயரதன்).

அள்ளல் - (அடியில்) சேறு (உள்ள). புனல் - கடல்—புறப். வெண். மாலை. கடற்கடவுளாகிய வருணனுக்குப் 'புனல்வேந்தன்' என்னும் பெயருண்மை காண்க. அகன் - அகன்ற—ச. அ. குவை - கூட்டம். வள்ளல் - வண்மை. தனம் - தன்மை.

இத் துணைப் பெருஞ் செல்வத்தோடு கூடிய இராச்சியத்தை நல்லோர்க்குக் கொடுத்தலும் அருமையானது; அவ்வாருக, வஞ்சகியான ஒரு தீயாளுக்குக் கொடுத்தது அருமையினும் அருமை யென்பான், 'கள்ளக் கைகேசிக்கே உதவி' என்ருன் என்க. பெருங் கொடையாளரா யுள்ளார் தம்பால் வேண்டுவார் வேண்டிய பெரு மதிப்புள்ள பொருள்கள், ஒன்ருே பலவோ உதவுவர். அப் பொருள்கள் அனைத்தும் அடங்கிய அரசச் செல்வம் அடங்கலும் அளித்த அரிய பெரிய தியாகத்தை நினைந்து, 'இப்படிப்பட்ட தியாகபுத்தி யுடையானை எவ்வாறு பிரிந்திருப்பேன், பிரிந்தால், இறந்தே போவே' னென்பான், 'வள்ளற்றனம் என் னுயிரை மாய்க்கும் மாய்க்கும்' என்ருன் என்க.

பாட பேதம் : அகனுனிலமும். (52)

தசரதன் இராமன் சௌரியத்தை நினைந்து, 'மூன்றுலகங்

களினும் உள்ள வீரருள், யார் உன் போல் வெற்றி பெற்று விளங்கினர்! அரச ரனைவரையும் வென்ற பரசுராமன் அறைகூவ, மலைபோலச் சலியாமல் எதிர் நின்று வென்ற உன்னைப் பிரிந்து யார் தாம் உயிர் வாழ்வார்!' என்றான்.

**கேட்டே யிருந்தே னெனினுங் கிளர்வா னின்றே யடைய**
**மாட்டே னாகி லன்றோ வன்கண் ணென்கண் மைந்தா**
**காட்டே யுறைவாய் நீயிக் கைகே சியையுங் கண்டிந்**
**நாட்டே யுறைவே னென்றா னன்றென் றன்மை யென்றான் (53)**

கொண்டுகூட்டு : 'மைந்தா, (நீ வனஞ் செல்வதைக்) கேட்டேயும் இருந்தேன்; எனினும், (யான்) இன்றே கிளர் வான் அடையமாட்டேன் ஆகில் அன்றோ, என்கண் வன்கண்(மை உளது)! நீ காட்டே உறைவாய் (ஆக,) நான் இக் கைகேசியையும் கண்டு இந் நாட்டே உறைவேன் என்றால் என் தன்மை நன்று! (நன்று!)' என்றான்.

பொருள் : 'மகனே! நீ வனம் செல்வதைக் கேட்டவுடனே, யான் இறந்திருக்க வேண்டும்; அப்படி இறவாமல் அதைக் கேட்டேனாகியும், உயிரோடு இருக்கின்றேன்; இது பிழையே; என்றாலும், யான் இனித் தாமதியாமல் இப்போதே உயிரை விட்டு விண்ணுலகம் சேராவிட்டாலன்றோ, என்னிடம் கொடுமை உண்டு என்று நீ கூறலாம்; நீ அவ்வாறு கூறுதற் கிடமின்றி இறந்து விடுவேன். நீ காட்டில் வசிப்பாயாக, நான் இந்தக் கொடிய கைகேயியையும் கண்டுகொண்டு நாட்டில் வாழ்ந்தேனானால், என் தன்மை நன்றாயிருக்குமே!' என்றான் தசரதன்.

கிளர்தல் - பிரகாசித்தல். இன்று - இப்பொழுது. வன்கண் - கொடுமை. முத லிரண் டடிகளுக்கு 'மைந்தனே! கேட்டபொழுதே உயிர்விடாதிருந்தேனானாலும், விளங்கும் விண்ணுலகினை யிப்பொழுதாயினு மடைய மாட்டேனானால், கைகேயியினிடத்தல்ல என்னிடத்தல்லவா கொடுமை!' என்பது முந்திய உரை.—சோ. சு. (53)

'நீ பிரிந்தால், உன்னை அருந்தவங்கள் புரிந்தடைந்த மலர் மகளும் நில மகளும் வாழார்; யான் பிழைத்திரேன்; இருந்தால், கைகேயிக்கு ஒப்பாகேனோ? நீ பொன்னணி புனைந்து, மணிமுடி வனைந்து, அரியணை அமர்ந்து, கொற்ற வெண்குடைக் கீழ்க் கொலு வீற்றிருக்கக் கண்டு குதூகலிக்க விரும்பிய யான், நீ மரவுரி உடுத்துச் சடைமுடி தரித்தல் காண உயிரொடு மிருப்பனோ!' என்று தசரதன் புலம்பினான்.

### தசரதனுக்குத் தேறு மொழி கூறல்

அவனை, 'வருந்தாதை ; இராமனை இன்று போகாவாறு புரிவேன்' என்று வசிட்டன் கூறினான். அரசன், 'என் மெய் பொய்யாமல், இராமன் நாட்டில் இருத்தல் இயலுமோ!' என்று மயங்கித் தன்னை மறந்தான். அவன் இறந்தானோ வென்று ஐய மெய்தித் துன்புற்று 'மெய்க்கு மெய்யே! வேந்தர்க்கு வேந்தே! நீ உன் உயிரைச் சாவாது காவாமல் இவ்வாறு வருந்தினால், மண்ணில் வாழ்வா ரெல்லாம் வருந்துவார்கள். ஆதலால் வருந்தாதே. மகன் வந்தாலும் வருவான்' என்று கூறி, அவன் திருமுகத்தையும் தேகத்தையும் தடவிக் கொண்டிருந்த கோசலையை நோக்கி, அவன், 'நம் ஐயன் வருவானோ! வருவானோ!' என்றான். பின்பு, 'இரக்கமில்லாத கைகேயி என் வரங்கொண்டு என்னுயிர் கொண்டாள். அது கிடக்க, அவள், வேண்டுமானால், தனக்கும் தன் மகனுக்கும் நாட்டைப் பெற்றுக்கொள்ளலாமேயன்றி நம் மகனைக் காட்டுக்குச் செல்லச் சொல்லலாமோ! அப்படியும் சொன்னாளே! சொன்னாளே!' என்று பின்னும் சொல்வான். 'கோசலையே! நான் கூறுவதைக் கேள். இராமன் போகாதிரான். யான் சாகாதிரேன். சாதல் தவறாதென்பதற்குத் தவசி யொருவனுடைய சாபமுண்டு' என்று அச் சாப வரலாற்றைச் சொல்வானானான் :—

### சலபோசன முனிவன் தசரதனுக்கிட்ட சாபம்

'முன், ஒருநாள், வேட்டையாடும் வேட்கையோடு காட்டிலேகிச் சிங்கங்களையும் யானைகளையும் தேடித் திரிந்தேன். அவை யொன்றும் அகப்படாமையால், அவை தண்ணீர் குடிக்க வரும் நதிக்கரையிலே, அவற்றின் வரவை யெதிர்பார்த்து, எய்தற்கு அம்பு பூட்டிய வில்லேந்திய கையனாய், ஒரு மறைவிடம் போய்ப் பதிவிருந்தேன். அப்போது ஒரு சிறுவன், தானே துணையாகத் தவஞ் செய்யும் தன் அந்தகத் தாய் தந்தையர்க்குத் தண்ணீர் மொண்டு கொண்டுபோக வந்ததை நான் காணவில்லை. அவன் குடத்தில் நீர் முகக்கும் ஓசை கேட்டு, அது யானை நீர் குடிக்கும் ஒலி யென்று அத்தொனி பிறந்த இடம் குறித்து அம்பை விட்டேன். அவன் அலறி விழுந்தான். அக்குரல் ஆனைக் குரலன்று, ஆட்குர லென்று தெரிந்து வருந்தி விரைந்தோடி அவன் விழுந்த இடத்தை அடைந்தேன் ; மிக்க துக்கத்துடன் "ஐயா, நீ யார்?" என்றேன்.

' " நான் சலபோசன முனிவன் மகன். என் பேர் சுரோசனன். இரு கண்ணுமிழந்த என் தாய் தந்தையர்க்குத் தண்ணீர் கொண்டு போக வந்தேன். அது முடியவில்லை; என்னை யானை யென்று தெரியாமல் எய்தாய். வருந்ாதே, இது விதியின் செயல், தாகம் மிகுதியாகவுள்ள என் தந்தைக்கு நீ நீர் கொண்டு போய்க் கொடுத்து, ' " உன் மகன் இறந்தான்; இறக்கும் போது உங்களைத் தொழுதான் " ' என்று கூறுவாயாக" என்று சொல்லி யிறந்தான்.

' நீர்க்குச் சென்ற மகன் நெடுநேரம் வராமையால், நீர் வேட்கை மறந்து அவன் வரவு வேட்கை கொண்டிருந்த முனிவன், யான் நீர் கொண்டு நெருங்கினபோது, " நீ இவ்வளவு நேரம் ஏன் வரவில்லை யென்று நாங்கள் வருந்தினோம். தழுவிக் கொள்ள அருகே வருவாய்" என்றான். " நான் ஓர் அரசன். இருப்பது அயோத்தி. இருளிலே யானை யெய்யப் பதிவிருந்தேன். உன் மகன் நீர்மொள்ளும் ஓசை கேட்டு எய்தேனேயன்றி அவனைக் கண்டேனில்லை. அவன் சாகுங் குரல் கேட்டு ஓடிப்போய்ப் பார்த்தேன்; அவன் தன் வரலாறு கூறி வானடைந்தான். யான் தெரியாது செய்த பெரிய பிழையைப் பொறுத்தருள்வாயாக" என்று கீழ் விழுந்து தாள் பணிந்தேன்.

**வீழ்ந்தா ரயர்ந்தார் புரண்டார் விழிபோ யிற்றின் றென்றார்**
**ஆழ்ந்தார் துன்பக் கடலு ளையா வையா வென்றார்**
**போழ்ந்தாய் நெஞ்சை யென்றார் பொன்னு டதனிற் போய்நீ**
**வாழ்ந்தே யிருப்பத் தரியேம் வந்தேம் வந்தே மென்றார் (54)**

கொண்டுகூட்டு: '(மகன் இறந்தான் என்றதும் அவர்கள்) வீழ்ந்தார்; அயர்ந்தார்; புரண்டார்; " விழிபோயிற்று இன்று " என்றார்; துன்பக் கடலுள் ஆழ்ந்தார். " ஐயா, ஐயா " என்றார். " நெஞ்சைப் போழ்ந்தாய் " என்றார். " நீ பொன்னுடு அதனில் போய் வாழ்ந்தே இருப்பத் தரியேம்; வந்தேம்; வந்தேம் " என்றார்.

பொருள்: ' மகன் வானடைந்தா னென்று கேட்டவுடனே அவர்கள் கீழே விழுந்தார்கள்; மயக்கம் அடைந்தார்கள்; சிறிது தெளிந்து புரண்டார்கள்; " (இதுவரை நாங்கள் கண் ணிழக்கவில்லை; நீ கண்ணாக வாழ்ந்தோம்; எங்கள்) கண் போனது இன்று தான் !" என்றார்கள்; துன்பக் கடலுள் அமிழ்ந்தார்கள்; " எங்கள் நெஞ்சைப் பிளந்தாய் !" என்றார்கள். " நீ விண்ணுலகிற் போய் வாழ்ந்திருக்க நாங்கள் இங்கே தங்கேம்! இப்பொழுதே உன்னிடம் வந்தேம்! வந்து விட்டேம் !" என்றார்கள்.

அயர்தல் - மயங்கல்—பரிபா. போழ்தல் - பிளத்தல். உதவிசெய்த லின்றிக் கெடுதிசெய்துகொண்டிருந்த ஒரு மகனை இழத்தற்கே, எவருதவி யும் வேண்டா நிலையிலுள்ள பல மக்களுடைய பெற்றோரும் வருந்துவர்; அவ்வாறாக, உபசாரமாக வன்றி, உண்மையாகவே கண்போல உதவியா யிருந்த ஒரே மகனை இழந்த கண்ணில்லாப் பெற்றோர் அடையும் துயரம் கூறுதற் கெளிய தன்று. அது இத்தகைய தென்று கண்ணெதிர் கண்டாற் போலத் தெரியும்படி காட்டும் இப் பாட்டுக்கு 'விழிபோயிற்று இன்று' என்ற ஈடும் எடுப்பு மில்லாத இரக்கமான பகுதி விழியே போன்றிருத்தல் வியந்து பாராட்டற் குரியது.

'நான், இவ்வாறு வருந்தியவர்களை வணங்கி, "யானே இன்று முதல் உம் புதல்வன். நீங்கள் இட்ட கட்டளைகளை இயற்றுவேன். சோராதீர்கள்; துன்புறுதீர்கள்" என்றேன். எனவே, "கண்மணி போன்ற மகனை இழந்த பின்னும் உயிர் வாழ்வை விரும்பி உண்ண எண்ணி மண்ணிலிருந்தேமானால் உலகோர் எங்களை இகழ்ந்து யாதுதான் சொல்லார்! யாங்கள் இறப்பேம். எங்களைப் போல நீயும் மகன் பிரிவால் இறப்பாய்" என்று உயிர் துறந்தார்கள்.

'"மகன் பிரிவால் இறப்பாய்" என்ற சாபத்தைக் கேட்டு நான் சிறிதும் வருந்தினே னில்லை. நெடுங்காலம் பிள்ளை யில்லை யென்று வருந்தியிருந்த எனக்குப் பிரிவதற்கேனும் பிள்ளை பிறக்குமென்று பெருமகிழ்ச்சி யடைந்து இங்கே திரும்பி வந்தேன். அந்த முனிவன் சாபம் தவறு தாதலால், இராமன் வன மேகுதலும் அவன் பிரிவால் யான் இறத்தலும் திண்ணம்' என்று கூறித் தசரதன், தன் உயிர் பிரிதலுக்கு வருந்தாது, மகன் பிரிதலுக்கு வருந்தி மயக்க மடைந்தான். கோசலையும் திகைத்து உணர்வொடுங்கி மயங்கினாள். வசிட்டன், இருவர் நிலையுங் கண்டு, விதியின் விளைவென்று வருந்தி அவ்விடம் விட்டு அரசர் கூடியிருந்த இடத்தை அடைந்தான்.

### அயோத்தியர் புலம்பல்

தம்மிடம் வந்த வசிட்ட முனியை, அரசர்கள், அழுகுரற்குக் காரணம் யாதென, அவன், 'அரசனிடம் கைகேயி இரண்டு வரங் கொண்டாள். அவற்றால் இராமன் காடேகவும் பரதன் அர சாகவும் பெற்றாள்' என்றான்.

அதுகேட்ட அரசரும் அந்தணரும் தசரதனைப் போல வருந் தினார்கள். காற்றடித்துக் கண்ணீர்* சிந்தி, வண்டுகள், ஒலிக்க

---

* கள் நீர் - தேன்.

மலர்களை உதிர்த்துப் பூமியில் விழுந்து புரளும் பூங்கொடிகள் போல, மாதர்கள் பெருமூச் செறிந்து, விழிநீர் சொரிந்து, அலறி அழுது, அணிகளைச் சிதறி, விழுந்து புரண்டார்கள். அந் நகரத்தாருள்ளே பலர், 'அரசன் அருள் நீங்கி அறத்தைக் காவாமற் கைவிட்டான்; ஆதலால் நாமும் அறத்தைக் கை விடுவே' மென்று வருந்தி மண்ணில் விழுந்து அறற்றினர்கள்: வேறு பலர், 'தசரதனை "இராமனுக்குத் காடு கொடு" என்று கேட்ட கைகேயியும் அவளை அவ்வாறு கேட்கச் சொன்ன கூனி யும் போன்ற கொடியார் உலகந் தோன்றிய நாள் தொட்டு இன்றுகாறும் இல' ரென்றார்; மற்றும் பலர், 'இராமன் வனம் போதல் கேட்டும் மாளாத நம்மினும் வன்மை யுடையா ரில்லை' யென்றார்: மறித்தும் பலர், 'இராமனோடு நாமும் வனம் புகுவேம், அன்றேல் எரி புகுவே' மென்றார்: பின்னும் பலர், 'கோசலை பிழைப்பாளோ! இலக்குவன் பொறுப்பானோ!' வென்றார்: பெயர்த்தும் பலர், 'இராமன் மகுடம் புனைதலைக் காணமல் வனம் புகுதலைக்காண எங்கள் கண்கள் என்ன பாவம் செய்தனவோ!' வென்றார்.

பெற்றுடைய மண்ணவளுக் கீந்து பிறந்துலகம்
முற்றுடைய கோவைப் பிரியாது மொய்த்தீண்டி
உற்றுறைதும் யாரு முறையவே சின்னாளில்
புற்றுடைய காடெல்லா நாடாகிப் போமென்பார் (55)

கொண்டுகூட்டு: (தந்தையிடம் தான்) பெற்று உடைய மண்ணை அவளுக்கு ஈந்தும், (தலைமகனாகப்) பிறந்து உலகம் முற்றும் உடைய கோவை, யாரும் பிரியாது மொய்த்து ஈண்டி, (வனத்தை) உற்று உறை தும்: உறையவே, 'சில் நாளில் புற்று உடைய காடு எல்லாம் நாடு ஆகிப் போம்' என்பார்.

பொருள்: 'தந்தையாகிய தசரதன் கொடுக்கத் தான் பெற்றுத் தனக்கு உரியதா யிருந்த பூமியைக் கைகேயிக்குக் கொடுத்து விட்டா னாயினும், தசரதனுக்குத் தலைமகனாகப் பிறந்து (அதனால், சேட்ட புத்திர பாரம்பரியப் பாத்திய மென்ற பிறப் புரிமையால், வேறொருவருக்கும் பாத்தியப் படாமல், தந்தையாயினும் தாயாயினும் பிறர்க்குக் கொடுக்க லாகாததாய், வேறெவர்க்கும் பொதுவாயில்லாமல், தான் ஒருவனுக்கே சொந்த மான) உலக முழுவதையும் உடைய இராமனை நாம் எல்லாரும் நெருங்கிக் கூடி அவனுடன் வனத்தை அடைந்து வசிப்போம்: அவ்வாறு வசிக்கவே, சில நாளில் இப்போது மனித சஞ்சார

மில்லாத, பாம்புப் புற்றுக்களை மிகுதியாக உடைய காடு முழுதும் (நம்மால் ஆக்கப்பெற்ற நெல் வயல்கள் வளைந்த நெடு நகர்கள் மலிந்த) நாடாகிப் போம் (கைகேயி பெற்ற நாடெல்லாம் காடாகிப்போம்)' என்றுார்கள் பலர்.

'ஈந்தும்' என்ற பாடம் இல்லையாயின், 'ஈந்து' என்பதன் பின் 'உம்மை' தொக்கதாகக் கொள்க. இந்நூலில் 'உம்மை' சில இடங்களில் தொக்கு வருதலும் சில இடங்களில் இசைநிறையாக மிக்குவருதலும் காணலாம். யாரும் – (நாம்) எல்லாரும். 'பிறந்துலகம் முற்றுடைய கோ' என்பதன் பொருள், கிளைகண்டு நீங்கு படலத்திற் பரதன் இராமனை நோக்கிப் 'பிறந்து நீயுடைப் பிரிவில் தொல்பதம்' என்பதனால் நன்கு விளங்குதல் காண்க.

'புற்றுடைய காடு' என்றதனால், அக் காடுகளில் உயிர்களுக்கு அபாயம் விளைக்கும் பாம்புகளுண்மை குறிப்பித்தார். அக் குறிப்பால், அப் பாம்புகள் போலப் பிராணாபாயமான புலி முதலிய துட்ட மிருகங்களுண்மையும் உய்த்துக்கொண் டுணரவைத்தார். (55)

என்னே நிருப ரியற்கை யிருந்தவா
தன்னே ரிலாத தலைமகற்குத் தாரணியை
முன்னே கொடுத்து முறைதிறம்பத் தம்பிக்குப்
பின்னே கொடுத்தாற் பிழையாதோ மெய்யென்பார் (56)

கொண்டுகூட்டு : 'நிருபர் இயற்கை இருந்தாவ(று) என்னே! தன்நேர் இலாத தலைமகற்குத் தாரணியை முன் கொடுத்து, பின், முறை திறம்பத் தம்பிக்குக் கொடுத்தால், மெய் பிழையாதோ!' என்பார்.

பொருள் : 'அரசர் தன்மை இருந்தவாறு என்னே! முதற் குமாரனுக்குப் பூமியை முன்பு கொடுத்துவிட்டுப் பின்பு, கொடுத்ததைத் திரும்ப வாங்கும் குற்றமேயன்றி அந்தப் பூமி தலைமகற் குரிமையாம் குல முறையும் பிறழ அதனை அவன் தம்பிக்குக் கொடுத்தால், உண்மை தவறாதோ!' என்றுார் பலர்.

'இருந்தவா' 'இருந்தவாறு' என்பதன் விகாரம். நிருபர் – அரசர். '"வேண்டியபோது இரண்டு வரங்கள் தருவே" னென்று தசரதன் கைகேயிக்கு வாக்களித்திருந்தான். அவைகளை அவள் வேண்டுமுன், இராமனுக்கு நாட்டைக் கொடுத்தான். கொடுத்தபின், அவள் தனக்குத் தந்திருந்த வரங்களுள் ஒன்றை நிறைவேற்ற, அந்த நாட்டையே கேட்டால், எவ்வாறு கொடுக்கலாம்? எவரும் தம் பொருள்களுள் ஈந்தவை போக எஞ்சிய பொருளை ஈதலே முறையாம்; ஒருவர்க்குக் கொடுத்த பொருளைத் திரும்ப வாங்குதலும் அப்படி வாங்கியதை வேறொருவர்க்குக் கொடுத்தலும் முறையாகா. இதற்கு மாறாகத் தசரதன் செய்திருக்கின்றான். ஆதலால், பொதுமக்கள் தருமம் வேறு, அரசர் தருமம் வேறு போலும்!

இத்தகைய தருமத்தையுடைய இராச ரியல்பை என்னென்பேம்! இராமனுக்குக் கொடுத்ததை வாங்கித் தந்து தனக்குக் கொடுத்த வரத்தை நிறைவேற்றச் சொல்லிய கைகேயி சொற்படி செய்யாமை, உண்மை தவறுதலாகாது; ஆகுமென்றால், கிரமமாக உரியவனான மூத்த மகனுக்கு இராச்சியத்தை முன்பு கொடுத்துப் பின்பு அவ்விராச்சியத்தை அக்கிரமமாக இளையமகனுக்குக் கொடுப்பது அந்த உண்மை தவறுதலினும் அதிகமாக உண்மை தவறுதலாகாதோ!' இத்தகைய விரிந்த கருத்துக்கள் இனிது விளங்க இப்பாட்டிற் சுருக்கமாகக் கூறியிருக்கும் நயம் கொண்டாடுதற்குரியது. (56)

பாட பேதம்: தனிமகற்கு*.

### இலக்குமணன் கோபித்து எழுல்

கைகேயி தசரதனை இராமனுக்குக் கொடுத்த நாட்டை மீட்டுத் தனக்குக் கொடுத்து அவனைக் காட்டுக் கோட்டச் செய்தாளென்று கேட்ட மாத்திரையே, இலக்குமணன் கோபித்துக் கொதித்துக் குதித்து எழுந்து உலகத்தை ஒருமிக்க ஒழிவிக்கும் ஊழிமேகம் போன்று, விழிகளினின்று மின்னல் போல வெகுளித் தீ வெளிப்பட, மூக்கிலிருந்து அவ்வூழி மேகத்தை அலைக்கும் ஊழிக் காற்றுப் போல நெடுமூச்சுப் பெருங்காற்று வீச, மெய்யினின்று மழைநீர் போல வியர்நீர் பெருக, 'சிங்கக்குட்டிக்கிடும் ஊனை நாய்க்குட்டிக் கூட்டப் புகுதல் போல இராமனுக்குரிய இராச்சியத்தைப் பரதனுக்குக் கொடுக்கக் கைகேயி முயன்றாளே!' என்று கர்ச்சித்துப் பெரிய இடிபோலப் பேரொலி பிறக்கக் கைகொட்டிச் சிரித்தான். வாளை அரையின் பக்கத்திலே கட்டி, வில்லைக் கையி லேந்தி, அம்புக்கூட்டை முதுகில் தொடுத்து, மெய்யில் கவசத்தை அணிந்து, வீரகண்டை ஒலிக்க, வில் நாண் இடிக்க, இராம னொருவன் தவிர எவரையும் எதிர்க்கும் எண்ணத்தோடு போர்க்குப் புறப்பட்டான்.

புவிப்பாவை பரங்கெடப் போரில் வந்தாரை யெல்லாம்
அவிப்பானு மவித்தவ ராக்கையை யண்ட முற்றக்
குவிப்பானு மெனக்கொரு கோவினைக் கொற்ற மௌலி
கவிப்பானு நின்றே னிதுகாக்குநர் காக்க வென்றான் (57)

கொண்டுகூட்டு: 'போரில் வந்தாரை எல்லாம், புவிப்பாவை பரம் கெடக் (கொன்று) அவிப்பானும், அவித்தவர் ஆக்கையை அண்டம் முற்றக் குவிப்பானும், எனக்கு ஒரு கோவினை (இராமனை)க் கொற்ற மௌலி கவிப்பானும் (ஆகி) நின்றேன்; இது காக்குநர் காக்க!' என்றான்.

---

* தனி - ஒப்பில்லாத

**பொருள் :** 'போரில் எதிர்த்து வந்தவ ரெல்லாரையும் கொன்று அழிப்பானும், அழிக்கப்பட்டவர் உடல்களை உலகம் முழுதும் வெற்றிடமில்லை யென்னும்படி குவிப்பானும், எனக்கு ஏக நாயகனுன இராமன் சிரத்தில் என் வெற்றியினுற் கிடைத்த முடியைக் கவிப்பானும் ஆகி நின்றேன் : இதனைத் தடுப்பார் எல்லீரும், வல்லீரேல், தடுப்பீராக !' என்ருன் இலக்குமணன்.

பரம் - பாரம். அவித்தல் - அழித்தல். 'அவித்து அவர்' எனப் பிரித்துக்கொண்டு பொருள்கூறலும் உண்டு. இராமன் ஒருவ னன்றித் தனக்குத் தலைவ ரெவருமில ரென்பதைப் புலப்படுத்த 'ஒரு கோ' என்ருன். (57)

**பாட பேதம் :** போருவந்தோரை : கோனினை.

## இராம இலக்குமண சம்வாதம்

இலக்குமணன், இவ்வாறு எல்லாரையும் போருக் கழைத்துப் பாற்கடற்கண் மந்தரமலை சுழன்றது போல அயோத்தி நகரிலே சுற்றித் திரிந்தான். அப்போது, மாற்றவள் செய்த வன் செயலுக்கு வருந்தித் தேற்றத் தெளியாது தியங்கிச் சோர்ந் திருந்த சுமத்திரையின் பக்கத்திருந்து தேற்றிக்கொண்டிருந்த இராமன், அண்டம் பிளந்தாற் போல அதிரும் இலக்குமணன் வில் நாண் ஒலியைச் செவியுற்ருன். செவியுற்றவன், கரிய மேனியில் அணிந்திருந்த கனகாபரணங்கள் மின்னல் செய்ய, காற்ருல் மோதப்பட்டுக் கனன்று கதித் தெழுங் கனல் போன்ற தம்பி கோபத்தைத் தணித்தற்குக் குளிர்ந்த சொல்மாரி வழங்கா நின்று, வானமேகம் பூமிமீது உலாவுதல் போலச் சென்று, 'என் ஐய ! இமையளவும் கோபித் தறியாத நீ போர்க்கோலம் பூண்ட காரணம் யாது ?' என்ருன். இலக்குமணன், 'மெய்ந்நெறிக்கு விரோதமாகக் குல முறையைக் கெடுத்து, உனக்குரிய அரசை வஞ்சனையாற் கவர்ந்த கொடியா ளெதிரே உனக்கு முடிசூட்டக் கருதியுள்ளேன். தடை செய்வார் தேவரேயாயினும் அவர்களை அழித்து உனக்கு அரசாட்சி அளிக்கின்றேன். கொள்வாயாக !' என்ருன். இராமன், 'நடுவுநிலைமையினின்று விலகாத நன் னெறிக்கும் உன்னறிவுக்கும் எத்தகைய வேறுபாடும் இன்றே. அவ்வாருகவும், உன்பால், அறம் குறைந்திட, முறை பிறழ்ந்திட, முனிவு பிறந்த தென்னே ?' என்ருன். இலக்குமணன், நகைத்து, 'உன் தந்தை உனக்குத் தந்த உன் நாட்டை உன் பகை கவர்ந்துகொண்டு உன்னைக் காட்டுக் கோட்டும்போது, எனக்குக் கோபம் உண்டாகாதாலுல், அது எப்போதுதான் உண்டாகு

வதோ? உன்பால் உள்ளன்பில்லார் உன்னைக் காட்டில் ஓட்ட, அதனைத் தடுத்தற்கு ஒன்றுஞ் செய்யாமல் உடலைப் பூமிக்கு ஒரு பாரமாகப் பயனின்றித் தாங்கியிருந்து உயிரை ஓம்புவேனே! என் கண்ணெதிரே இராச்சியத்தை உனக்கு ஈந்து, பின்பு, இல்லை யென்ற இராசன் படும் பாட்டை இதோ, பார்ப்பாயாக!' என்றான். இராமன், 'அரசாட்சி துன்பம் அளிப்பதென் றெண்ணி அதனை விரும்பாத யான், அவ்வா றெண்ணாத அரசன் "அதனை ஏற்றுக்கொள்" என்றபோது ஏற்றுக் கொண்டேன். எங்களில் யானே குற்றமுடையேன். (இராச்சி யத்தை நான் ஏற்றிலேனேல், இராசன் அதனை எனக்கடுத்த தம்பியாகிய பரதனுக்கீந்திருப்பான். யான் ஏற்றதனால் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் யாவும் நிகழ்ந்திரா)' என்று பின்னும் கூறுவான்:

**நதியின் பிழையன்று நறும்புன லின்மை யற்றே**
**பதியின் பிழையன்று பயந்து நமைப் புரந்தாள்**
**மதியின் பிழையன்று மகன்பிழை யன்று மைந்த**
**விதியின் பிழைநீ யிதற்கென்கொல் வெகுண்ட தென்றான் (58)**

கொண்டுகூட்டு: 'நறும் புனல் இன்மை நதியின் பிழை அன்று; அற்றே (யான் வனமேக இயைந்தது) பதியின் பிழை அன்று; நம்மைப் பயந்து புரந்தாள் மதியின் பிழை அன்று; (அவளுடைய) மகன் பிழை அன்று; (வேறு யார் குற்றம் எனின்) மைந்த, விதியின் பிழை; இதற்கு நீ வெகுண்டது என்கொல்?' என்றான்.

பொருள்: 'எப்போதும் நீருள்ள ஆற்றில் ஒருபோது நீர் இல்லாமை அந்த ஆற்றின் குற்றமன்று; அது போலவே அரசன் (எப்போதும் என்னைப் பிரிதற்கு மனமில்லாதவன், இப்போது யான் பிரிந்து வனம் ஏக மனம் இயைந்தது, அவன்) குற்ற மன்று; அவனை அதற்கு இயையச் செய்தது நம்மைப் பெற்று வளர்த்துப் பேணினவள் ஆகிய கைகேயி அன்னையின் அறிவின் குற்றமன்று; (அவள் ஆருக்காக அவ்வாறு இயையச் செய்தாளோ, அந்த அவளுடைய) மகன் பரதன் குற்றமுமன்று; (மற்று யான் வனமேகுங் குற்றந்தான் யார் குற்றமோ வெனின்,) விதியின் குற்றமே; இந்த விதியின் குற்றத்துக்கு அவர்களைக் கோபித்ததேனோ?' என்றான் இராமன்.

*நறுமை* - நன்மை. *அற்றே* - அதுபோலவே - (காஞ்சிப்பு. நாட்டுப்.) 'வறுமையுற்றுழியும்' என்ற 33-ம் பாட்டில் 'அற்றே' 'அதுபோலவே' என்னும் பொருளில் வருதல் காண்க. பதி - அரசன். பயந்து - ஈன்று. உண்மையாக, இராமனைச் கோசலையும் இலக்குமணனைச் சுமித்திரையும்

ஈன்றூராக விருக்கவேயும், முன்னவன் பின்னவனை நோக்கிக் கைகேயியை 'நமைப் பயந்து புரந்தாள்' என்றது உபசாரம். மைந்தன் – இளைஞன்- பிங்கல. 925. இராமன் இலக்குமணனைத் 'தம்பி' என்னுது 'மைந்த' என்றது, முன்னவனுக்குப் பின்னவன்பா லுள்ள அன்பு, தமையனுக்குத் தம்பிபா லுள்ள அன்பினும் சிறந்ததாய்த் தந்தைக்கு மைந்தன்பா.லுள்ள அன்பு போன்றது என்பதைப் புலப்படுத்தியதுமாம்.

இந்தப் பாட்டு,—இராமன், தான் காட்டிற்குச் செல்வதற்கு மூல கார ணம் விதியா யிருக்க, அதன்மீது சினம் செலுத்தாமல், அதனால் ஆட்டப் பட்டு அதன் வயத்தினராய் அதன் கட்டளையை நிறைவேற்றுவா ராகிய கைகேயி முதலியோரைச்சினத்தல், எய்தாரைநோவாமல் அம்பைநோதல் போல, அறிவுடைமை யாகா தென்றும், அவ்விதியை நோதலும், குற்றம் செய்து சட்டப்படி தண்டிக்கப்பட்டா னொருவன் தன்னால் யாதொரு தீங் கும் செய்யவொண்ணாத அச்சட்டத்தை நோதல் போலப் பயனற்ற செயலா மென்றும் உணர்ந்து இலக்குமணன் சினமாறும்படி அவன் உள்ளம் கொள்ளக் கூறியதாகக் கொள்ள உள்ளபொருள் பொதிந்ததாய்,—ஆற்றின் ஈரமின்மை அதன் பிழையென்று அதனை வெறுக்க லாகா ததுபோலக் கைகேயி முதலாயினோர் இராமனைக் காட்டுக்குச் செலுத்தும் ஈரமின்மை அவர்கள் பிழை யென்று அவர்களை வெறுக்க லாகா தென்பதில் ஒன்றுக் கொன்று ஒன்றுபட்ட ஒற்றுமையுடைய உவமான உவமேயங்கள் உள்ள தாய்,—ஊன்றி உணருவார் உள்ளத்துள்ளே உணருந்தோறும் உணருந் தோறும் உவட்டா உவகை உவட்டெடுக்க ஊறுமா றுள்ள உயர்நய முடையதா யுள்ளமை உய்த்துணர்தற் குரியது.

பாட பேதம் : நறும்பெயல் : இதற்கென்னை. (58)

எல்லாம் விதியின் செயலென்று இராமன் கூறக் கேட்ட இலக்குமணன், 'துருத்தியால் ஊதப்பெற்ற உலைத்தீப் போல என் மனத்துள் மூண்டெழும் கோபத்தை யான் எங்ஙனம் ஆற்றுவேன்? உனக்குத் தீங்கு சூழ்ந்தவளுடைய மதிக்கு மேல் மதியாகவும் நீ விதந்து கூறிய விதிக்கு மேல் விதியாகவு முள்ளது என் விற்றொழி லென்பதை நீ பார்ப்பாய்!' என்றான். இராமன், 'சுருதி பயின்ற நாவினாற் சொல்லத் தகாத சொற் களைச் சொல்லுகின்றாய். தாய் தந்தையரைக் கோபித்தல் தக்க தன்று' என்றான். இளையவன், 'எனக்குத் தாயும் நீ, தந்தையும் நீ, தலைவனும் நீயே, பிறரில்லை; அவர்கள் படும் பாட்டைப் பார்!' என்றான். இராகவன், 'என் தந்தை தந்த வரத்தால் அரசைப் பெறுபவன் பரதன்; தவத்தைப் பெறுபவன் நான். எனக்கு இதனினும் நல்லது இல்லை' என்றான்.

**ஆன்ருன் பகர்வான் பகரையவிவ் வைய மெங்கும்**
**தோன்ரு நெறிவாழ் துணைத்தம் பியைப் போர்தொலைத்தோ**
**சான்ருர் புகழ்நற் றனித்தாதையை வாகை கொண்டோ**
**ஈன்ருளை வென்ரே வினியிக்கதந் தீர்வ தென்ருன் (59)**

கொண்டுகூட்டு : ஆன்ருன் பகர்வான், 'இவ் வையம் எங்கும் தோன்ருத நெறியில் வாழ்கின்ற துணைத் தம்பியைப் போர் தொலைத்தோ, சான்ருர் புகழ் நல்ல தனித் தாதையை வாகை கொண்டோ, ஈன்ருளை வென்ரே, இக்கதம் இனித் தீர்வது? ஐய, பகர்!' என்ருன்.

பொருள் : இராமன் பின்னும் கூறுவானுய், 'இந்த உலகத்திலே எங்கும் காணப்படாத சிறந்த நெறியில் ஒழுகி வாழ்கின்ற, எனக்கு உதவியாக உள்ள, என் தம்பி பரதனை வென்ரே, பெரியோர் புகழ்கின்ற நல்ல ஒப்பற்ற தந்தையைச் செயித்தோ, பெற்றவளை வெற்றிகொண்டோ, (யான் இதுவரை கூறியதனுல் தீராத) இந்தக் கோபம் இனிமேல் தீர்வது? ஐயா, சொல்லாய்!' என்ருன்.

ஆன்ருன் - (அறிவு நற்குண முதலியவற்ருல்) நிறைந்தவன்—பத்துப் பா.; அமைந்தவன்—மணிமேகலை; (இலக்குமணன் படபடப்புக்கு எதிரிடையான) அமைதியுடையவன். துணை - உதவி. 'போர் தொலைத்தல்' 'வாகைகொள்ளல்' என்ற இரண்டு தொடர்களும் 'வெல்லல்' என்னும் பொருளுடையன. கதம் - கோபம்.

'துணைத்தம்பியை' என்பதற்கு 'உன்னைப் போல எனக்குத் துணையான தம்பியாகிய பரதனை' என்று பொருள் கொள்ளலாம். 'தம்பி' இலக்குமணனுக்கு மூத்த பரதனைக் குறித்தலால், இராமன் தம்பியென்று பொருள் கூறப்பட்டது. 'வையமையல் தோன்ரு நெறி' என்று பாடம் கொண்டால் '(உலகப் பற்று விட்டுக் கடவுட் பற்றுடையனுய்) உலக மயக்கம் தோன்ருத (பத்தி) நெறி' யெனப் பொருள் கூறலாம்.

பாட பேதம் : பினுமைய விவ் வைய மையல்; புகழுந் தவத்தாதையை வாதை கொண்டோ.* (59)

**செல்லுஞ் சொல்வல்லா னெதிர்தம்பியுந் தெவ்வர் சொல்லும்**
**சொல்லுஞ் சுமந்தே னிருதோளெனச் சோம்பி ஞேங்கும்**
**கல்லுஞ் சுமந்தேன் கணைப்புட்டிலுங் கட்ட மைந்த**
**வில்லுஞ் சுமக்கப் பிறந்தேன் வெகுண்டென்னை யென்ருன்(60)**

---

* 'துன்பப்படுத்தல்' 'துன்பஞ்செய்தல்' எனல் போல 'வாதைப்படுத்தல்' 'வாதை செய்தல்' என்பது மரபு : 'வெற்றி கொள்ளல்' 'செயங்கொள்ளல்' போல 'வாகை கொள்ள'லும் மரபு. 'வாதைகொள்ளல்' என்ற வழக்கமில்லை. 'தாதை'க்கு 'வாதை' பிராசமா யிருப்பது பற்றி 'வாகை' என்ற பூர்வ பாடம் பிரதி செய்வோரால் 'வாதை' என மயங்கி எழுதப்பட்டது போலும்.

கொண்டுகூட்டு : செல்லும் சொல் வல்லான் ( - இராமன்) எதிர், தம்பி, 'தெவ்வர் சொல்லும் (பழிச்) சொல் சுமந்தேன்; இருதோள் எனச் சோம்பின் ஓங்கும் கல் சுமந்தேன் ; கணைப் புட்டிலும் கட்டு அமைந்த வில்லும் சுமக்கப் பிறந்தேன் ; (நான்) வெகுண்டு என்னை ?' என்றான்.

பொருள் : இராமன் கூறியதற்கு எதிராக, இலக்குமணன், ' ('' இராமனைக் காட்டுக் கோட்டுவாரைத் தடுக்க யாதொன்றும் செய்தானில்லை '' யென்று) பகைவர் பழித்துச் சொல்லும் பழிச் சொல்லைச் சுமந்தேன் ; தோள்க ளென்று பெயர் படைத்த தோள்களுக் குரிய போர்த்தொழில் செய்து வளராமல் சோம்ப லால் வளர்ந்த மலைகளைச் சுமந்தேன் ; அம்மட்டோ டமையா மல், போர் செய்தற்கு உபயோக மில்லாத அம்புக் கூட்டையும் வில்லையும் வீணே சுமக்கப் பிறந்தேன் ; இவ்வாறாகப் போர்த் தொழில் செய்யப்பெறாத நான் கோபித் தென்ன பயன் ' என்றான்.

சொல்லும் சொல் - குறித்த பயனைப் பயந்தே விடுவதன்றிப் பழுது படாத சொல். 'தோளென' என்பதில் உள்ள ' என ' என்பது ' அழுக்கா றென ஒருபாவி ' என்ற குறளில் வரும் ' என ' என்பது போல ' என்று சொல்லப்பட்ட' என்னும் பொருளுடைய இடைச்சொல்.

பாட பேதம் : சோம்பி ஓங்கும். (60)

இராமன், ' யான் தந்தை சொல்லைக் கடக்கலாகாது ; நீ என் சொல்லைக் கடக்கலாமோ ? ' என்றான். எனவே, இலக்கு மணன் கோபத்தை நீக்கி, எதிர்மறுத்துக் கூறுவதை நிறுத்திக் கடவுள் கட்டளைக்குக் கட்டுப்பட்டுக் கரைகடவா தடங்கி நிற்கும் கடல் போல, அமைதியுற்று நின்றான்.

### சுமத்திரையை இராமன் தேற்றல்

இராமன், தம்பியை அன்போடு தழுவி அழைத்துக்கொண்டு சுமத்திரை மாளிகைக்குத் திரும்பிச் சென்றான்.

தனது இரண்டு கண்கள் போன்ற தன் அருமை மைந்தரிரு வரும் காட்டுக்குச் செல்லச் சித்தமாய் வரக் கண்டு, சுமித்திரை துன்பம் பொறுக்க மாட்டாமல், கீழே விழுந்து சோர்ந்து கிடந் தாள். அவளை இராமன், ஓடிச்சென்று தூக்கி யெடுத்து, 'அன் னாய் ! அரசனைப் பொய்யனாக்க என்னால் இயலாது. காடு சென்று கடிது திரும்புவேன். யான் காட்டிடத்துச் சென்றாலும், கடலிடத்துச் சென்றாலும் என்னை வருத்த வல்லார் எவரும் இல்லார். நீ வருந்தாதே !' யென்று தேற்றிக்கொண்டிருந்தான்.

### தாதியர் மரவுரி கொணர்தல்

அச்சமயத்தில், கைகேயி கொடுத்த மரவுரி கொண்டு அவள் பணிப் பெண்கள் வந்தார்கள். அவர்கள் கார்மேக வண்ணனைக் காணுந்தோறுங் கார் மேகம் போலக் கண்கள் நீர் பொழிய, நெஞ்சு அழிய, 'மற்றையோர் வருத்தங் கண்டு இரங்காத வன் மனத்தினுள் வழங்கிய மரவுரிகள் வந்திருக்கின்றன' என்றார்கள்.

### இலக்குமணன் தன்னை இகழ்ந்துகொள்ளல்

வாணித்தில வெண்ணகை யார்களை வள்ள றம்பி
யாணர்திரு நாடிழப் பித்தவ ரீந்த வெல்லாம்
பூணப்பிறந் தானுநின் றனதைப் போர்வி லோடும்
காணப்பிறந் தேனுநின் றேனவை காட்டு மென்றான் (61)

கொண்டுகூட்டு: வள்ளல் தம்பி, வாள் நித்தில வெள் நகையார்களை (நோக்கி), 'யாணர் திருநாடு இழப்பித்தவர் ஈந்த எல்லாம் பூணப் பிறந்தானும் நின்றான்; போர் வில்லோடு அதைக் காணப் பிறந்தேனும் நின்றேன்; அவை காட்டும்!' என்றான்.

பொருள்: அப்போது இலக்குமணன், அப் பெண்களை நோக்கித் 'தன்னை நாடிழக்கச் செய்த கொடியவள் கொடுத்தவை எவை யென்றாலும் அவற்றை யெல்லாம் பொறுமையுடன் ஏற்றுப் பூணுதற்குப் பிறந்தவனும் நின்றான்; அவன் நாடிழவாமற் காக்க உதவாமற் போன வில்லோடு, அவைகளை அவன் பூணுவதைக் காணப் பிறந்த யானும் நின்றேன்; அவைகளைக் காட்டுங்கள்!' என்றான்.

வாள் நித்தில வெள்நகையார் – ஒளியுடைய முத்தை யொத்த வெண்மையான பற்களையுடையார். யாணர் –புதுவருவாய். 'பூணப்பிறந்தான்' என்றது, வேறு தக்க காரியங்கள் எதுவும் செய்தற்காக வன்றி இந்த அவமானத்தை அடையவே சென்ம மெடுத்தா னென்று இராமனது பொறுமையை நொந்து கூறியது. 'வில்லோடு காணப் பிறந்தேன்' என்றது இந் நிலைமையை இராமன் அடையாமற் காத்தற்குப் பயன்படாத வில்லையுந் தன்னையும் நொந்து கூறியது. 'நின்றான்' 'நின்றேன்' என்பவை, இராம லக்குமணர் முறையே பூணுதல் காணுதலன்றி வேறு செயலின்றி வாளா நின்றதைக் குறிப்பாக உணர்த்தின. 'பூணப் பிறந்தானும் நின்றான்,' 'காணப் பிறந்தேனும் நின்றேன்' என்ற எள்ளலும் இரங்கலும் ஒருங்கே குறிப்பித்த சொற்றொடர்ச் சுவை, சிந்திக்கச் சிந்திக்கத் தெவிட்டாத தேன் போன்று தித்தித்துச் சிந்தைக்கினிமை செய்கின்றது.

பாட பேதம்: வெண்ணகை யார்தர: இழந் தீந்தவர்: நின்றுனவை. (61)

### இராமன் சிற்றன்னையிடம் விடை வேண்டல்

இராமன், அந்த ஏவல் மகளிர் கொடுத்த மரவுரியை விருப்புடன் வேண்டிக்கொண்டு, சுமித்திரையை நோக்கி, 'எம்பெருமாட்டி, துன்பு நீங்கி "ஏகுக" என அருளினால், அதுவே வழித்துணையாம்' என்று அவள் பாதங்களில் பணிந்தான்.

### சுமத்திரை தன் மகனுக்குச் சொன்ன நன்மதி

ஆகாத தன்றாலுனக் கவ்வன மிவ்வ யோத்தி
மாகாத லிராமனம் மன்னவன் வைய மீந்தும்
போகாவுயிர்த் தாயர்நம் பூங்குழற் சீதை யென்றே
யேகா யினியிவ்வயி னிற்றலு மேத மென்றாள் (62)

கொண்டுகூட்டு: '(இராமனுக்கு ஆம்) அவ்வனம் உனக்கு ஆகாததன்று; (அது) இவ் வயோத்தி(யேயாம்). மாகாதல் இராமன், வையம் (பரதனுக்கு) ஈந்தும் நம் மன்னவன் (ஆன தசரதனும்). பூங்குழல் நம் சீதை, போகா உயிர்த்தாயர்(ஆம்): என்றே ஏகாய். இவ்வயின் இனி நிற்றலும் ஏதம்' என்றாள்.

பொருள்: (அப்போது, 'ஏகுக' என்னும் தன் சொல்லே துணையா மென்ற இராமனுக்குச் சுமித்திரை, சொற்றுணையிலும் எத்துணையோ சிறந்த நற்றுணையாகத் தன் உயிரினு மினிய அரும் பெறற் புதல்வனையே அளிப்பாளாய்' இலக்குமணனை நோக்கி,) 'இராமனுக்கு ஆகும் வனம் உனக்கு ஆகும்; அது அயோத்தியேயாம்: இராமன், மன்னவனாகிய தசரதனும்: சீதை தாயாம்: என்று கருதி வனத்துக்கு இராமனுடன் ஏகுவாயாக. இனி இவ்விடத்தில் தாமதித்து நிற்றலே குற்றமாம்' என்றாள்.

'ஆகாதது', 'அன்று' என்ற இரண்டு எதிர்மறைகள் இணைந்து 'ஆகும்' என்ற ஓர் உடன்பாட்டுப் பொருளை உணர்த்தின. ஆல் அசை. அவ்வனம் என்பதில் உள்ள அகரச் சுட்டு, வனம் தூரத்தில் உள்ள தென்பதை உணர்த்தி நின்றது. மா காதல் இராமன் - (எல்லாரிடத்தும்) பேரன்புடைய இராமன்; இலக்குமியின் காதலையுடைய இராமன். வையம் ஈந்தும் நம் மன்னவன் - பூமியை (இராமனுக்குக் கொடாமற் பரதனுக்கு)க் கொடுத்தானாயினும் நமக்கு அரச(னா யிருத்தலினின்றும் நீங்காதவ)னாகிய தசரதன். போகாத உயிர்த் தாயர் - (கணவன் இறத்தல் கண்டும்) போகாத உயிரையுடைய (மூன்று) தாய்மார் (சேர்ந்தாலொற் போன்ற தாய்). வயின் - இடம். ஏதம் - குற்றம். 'இராம னம் மன்னவன்' என்பதை 'இராமன் அம் மன்னவன்' எனப் பிரித்தால், அகரச் சுட்டு, பலரறி சுட்டாம்.

சீதை வனஞ் செல்வதாக இதுவரை கூறப்படவில்லை யாயினும், அவள் இராமனைப் பிரிந்து வாழாள், அவனுடன் வனஞ் சென்றே தீர்வா ளென்ற துணிவினால், 'அவளைத் தாய்போலக் கருதிப் பேணுவாயாக' வென்று அவள் மனநிலையை நன்குணர்ந்த சுமத்திரை சொன்னா ளென்க. இவ்வாறு மேல் 'நானும் சீதையும் ஆருளரெனினுளம்' என்னும் இலக்கு மணன் கூற்றுள்ளும் காண்க.

இப்பாட்டின் மூலமான வான்மீகி சுலோகத்துக்குப் பலவகையாகப் பொருள் கூறுதலுண்டு. அச் சுலோகத்தின் முதல் மூன்றடிகளே அவ் வாறு பல பொருள் கூறுதற் கிடந்தந்து நிற்பன. ஈற்றடிக்குப் பொருள் வேறுபாடில்லை. மூலத்தின் முதல் மூன்றடிகளின் முக்கியார்த்தங்கள் முழுதும் மொழி பெயர்ப்பின் முதல் மூன்றடிகளில் (முன் பின் மாறி) உள்ளன வென்பதை இரண்டையும் ஒத்திட்டுப் பார்த்துத் தெரிந்து கொள்க. மேலே கூறிய பல பொருள்கள், மூலத்துக்குப் போலவே மொழி பெயர்ப்புக்கும் பொருந்தியிருத்தல் காணலாம். ஷெ சுலோகத்துக்குப் பிரம்மஸ்ரீ மஹா மஹோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி சாமிநாதைய ரவர்கள், பிரம்மஸ்ரீ திரு. நாராயணையங்காரவர்கள், ராசஸ்ரீ மே. சொ. சுப்பிரமணியக் கவிராயரவர்கள் ஆகிய இவர்கள் வாயிலாகக் கிடைத்த பொருள்களினின்று தெரிந்தெடுத்து வேண்டிய வேறுபாடு செய்யப் பெற்றவை பின்வருவன. அப்பொருள்கள் மூலத்தோடு (எனவே, மொழி பெயர்ப்பினோடும்) பொருந்துமாறு தெரிந்துகொள்ளுதற்கு, மூல சுலோகத்தின் முதல் மூன்றடிகளே வேண்டுவன வாதலின், அவற்றை மட்டும் தமிழில் எழுதித் தருகின்றேன் :—

ராமம் தசரதம் வித்தி
மாம் வித்தி ஜனகாத்மஜாம்
அயோத்தியாம் அடவீம் வித்தி

இதன் வெளிப்படைப் பொருள் : 'இராமனைத் தசரதனாகக் கருது; சீதையை யானாகக் கருது; காட்டை அயோத்தியாகக் கருது.'

குறிப்புப் பொருள்கள் :

(1) 'இராமனைத் தந்தைபோல நன்மை செய்வானாகவும், சீதையைத் தாய்போல அன்புள்ளவளாகவும், காட்டை அயோத்திபோல வசிக்கத் தக்கதாகவும் கருது.'

(2) 'சீதையையும் ராமனையும், தாயும் தந்தையுமாகக் கொண்டு பூசித்துப் போற்றுவாயாக. அவர்கள் உறையும் மேன்மை பற்றிக் காட்டை அயோத்தியாக மதித்து வாழ்வாயாக.'

இயல்பான இவ் விரு பொருள்களுள் ஒன்றேனும் இரண்டுமேனும் வான்மீகி கருத்தா யிருந்திருக்கலாம். பின்வரும் பிற பொருள்க ளெல் லாம், உரைகாரர் மதி வன்மையாலும் புலமைத் திறமையாலும் உய்த்துக் கொண்டுரைத்த ஆரோபித அருத்தங்கள் போலும்; (அதாவது,—அப்

பொருள்கள், குகப்படலம் 65-ம் பாட்டில் 'சுற்றத்தார் தேவரொடும் தொழ நின்ற கோசலையைத் தொழுது நோக்கி - "வெற்றித்தார்க் குரிசில்! இவர் ஆர்?" என்று குகன் வினவ, "வேந்தர்வைகும் - முற்றத்தான் முதற் றேவி, மூன்றுலகும் ஈன்றானை முன் ஈன்றானைப் - பெற்ற(வள்)"' என்பதில் உள்ள 'வேந்தர் வைகும் முற்றத்தான் முதல் தேவியாதலால், சுற்றத் தார் தொழுகின்றார்கள்; மூன்று உலகும் ஈன்றானை முன் ஈன்றானைப் பெற்றவளாதலால், தேவர் தொழுகின்றார்கள்' என்ற (கம்பர் நிச்சயமாகக் கருதிய) குறிப்புப் பொருள் போன்றன வல்ல: மற்று, மாரீசன் வதைப் படலத்தில், சூர்ப்பநகை இராவணனை நோக்கிக் கூறும், 'இந்திரன் சசியைப் பெற்றான்; இருமூன்று வதனத் தோன்தன் - தந்தையும் உமையைப் பெற்றான்; தாமரைச் செங்கணானும் - செந்திரு மகளைப் பெற்றான்; சீதையைப் பெற்றாய் நீயும்:—அந்தரம் பார்க்கின், நன்மை அவர்க்கில்லை உனக்கே ஐயா!' என்ற பாட்டில் 'நன்மை அவர்க்கில்லை உனக்கே' என்பதற்கு 'நன்மை அவர்க்கு (உண்டு) உனக்கு இல்லை' என்று கூறப்படுகின்ற—சூர்ப்பநகை நினையாததும் கம்பர் கருதியதோ கருதாததோ வென்று சந்தேகிக்கத்தக்கதுமான—குறிப்புப் பொருள் போன்றன,—என்பதாம்.)

உயர்ந்தோரது வாக்கியங்கள், அவர்கள் உணர்த்தக் கருதிய ஒண் பொருளை நன்குணர்த்துதலோடு, வேறு விழுமிய பொருள்களும் பயக்கு மென்பதற்கு, மேற்குறித்த சுலோகம், சிறந்ததோ ருதாரணமாதல் காண்க.

(3) 'இராமனைத் திருமாலாகவும், சீதையைத் திருமகளாகவும் வனத்தை வைகுண்டமாகவும் கருது.' 'இராமனைத் திருமாலாக' என்ப தற்குப் பொருந்த, 'இராமனம் மன்னவன் வைய மீந்தும்' என்ற கம்பர் பாட்டுப் பகுதியை 'இராமன் வையம் ஈந்தும் அ மன்னவன்' எனப் பிரித்துப் பொருத்தி, 'இராமன்; (திருமாலின் அவதார புருடனா யிருத்தலே யன்றி, அத்திருமால் உயிர்கள் உய்ந்து கடைத்தேறித் தன் திருவடியடைதற்குச் சாதனங்களான தநு கரண புவன போகங்க ளடங்கிய உலகத்தை நான்முகனைக் கொண்டு படைப்பித்து அவ்வுயிர் களுக்குக் கொடுத்ததுபோலத், தசரதன் தனக்குக் கொடுத்த) உலகத் தை(ப் பரதனுக்கு)க் கொடுத்தும் திருமாலாகிய இறைவனாகவும்' எனப் பொருள் கொள்ளலாம். (அ - விட்டுணு—சு, அ. மன்னவன் - எப்பொருட் கும் இறைவன்—சு. அ.) 'சீதையைத் திருமகளாகவும்' என்பதனோ டியையச் 'சீதை போகா உயிர்த் தாயர்' என்பதற்குச் 'சீதை, (அழிந்து போகும் உன் உடலுக்குத் தாயான என்னினும் சிறந்த தாயாய்' அழிந்து) போகாத (உன்) உயிர்க்குத் தாய் ஆன திருமகள்' எனப் பொருள் கூறலாம். இப்பொருள் கொள்ளுமிடத்துத் 'தாயர்' ஒருமை குறித்த மரியாதைப் பன்மையாம்.

(4) '(உன் பிதாவான) தசரதனை யிறந்தவனாகவும், (உன் தாயான)

என்னை இறவாது தந்தையிடம் உள்ள மகளாகவும் (அதாவது கணவனுக்கு மனையாளா யுடனிறவாமலும் மகனுக்குத் தாயா யுடனுறையாமலும் அகன்றமையால் என்பதாம்), இவ் வயோத்தி நகரத்தைக் காடாகவும் கருது.'

(1), (2), (3) ஆகிய பொருள்கள் இராமனைப் பற்றுதற்கும் (4)-ம் பொருள் அயோத்தியை விடுதற்கும் உபாயமாகக் கூறியனவாகக் கொள்ளலாம்.

(5) 'தசரதன் இறப்பது திண்ணமாதலால், இராமனே தசரதன் தானத்தில் அரசனுவா னென்றும், தசரதன் சாவால் நானும் மற்றுமுள்ள உன் தாய்மாரும் அரசியராயுள்ள தன்மையை இழப்பே மாதலால், சீதையே அரசியாவா ளென்றும், அரசு புரிதற்குரிய நாடில்லையே யென்றெண்ணுமல், "இராம னிருந்த இடம் அயோத்தி" என்றவாறு அவன் வசித்தற் கிடமானதனுல் காடே நாடாமென்றும் தெரிந்துகொள்.' ('புற்றுடைய காடெல்லாம் நாடாகிப் போமென்ருர்'—இந்நூல் 55-ம் பாட்டு).

(6) 'தசரதன், தான் ஆண்ட மண்ணுலகை விட்டு விண்ணுலகுக்குப் போய்விடுதலால், அவனை விட்டு விலகி இராமனைச் சேர்ந்த இராச்சிய லக்குமியாகச் சீதையையும் அவ் விலக்குமியின் நாயகனுக இராமனையும் கருது. அந்த இராச்சிய லக்குமியின் நிலைக்களமான (அதாவது சீதை இராமனுடன் வாழு மிடமான காடு பிற அரசர் யுத்தஞ் செய்து வெல்ல இயலாத தா(ய் அயோத்தியா) மென்று கருது.' (அயோத்தி - யுத்தத்தால் வென்று அடையக் கூடாதது).

சுமித்திரை தான் அறியாமலே வருவ தறிவிப்பவளாய்க் குறிப்பித்ததாகக் கொள்ள உள்ளது இனி வரும் ஏழாம் பொருள்.

(7) 'இராமன் தசரதன் தன்மையன் என்றும் (அதாவது தசரதன் மண்ணைவிட்டு விண்ணுறுதல் போல இராமன் நாட்டைவிட்டுக் காட்டை அடைவான் என்றும், அவன் பெண்டாட்டி பரதந்திரனுய்க் கைகேயி சொற் கேட்டுத் துன்புற்றது போல இவனும் சீதை சொற் கேட்டு மாய மான் பின்சென்று மனைவியைப் பிரிந்து வருந்துவா னென்றும்); சீதை என் தன்மைய ளென்றும் (அதாவது என்னுல் நீ நாட்டை விட்டுக் காட்டுக்குச் செல்வது போல அவளால் காட்டைவிட்டுக் கடலுக்குச் செல்வா யென்றும்); ஆரணியம் அயோத்தியின் தன்மையது என்றும் (அதாவது நீங்கள் மூவரும் வாழ்ந்த அயோத்தி நீங்கள் காடு செல்வதால் உங்களைப் பிரிந்து பாழ்படுதல் போல நீங்கள் வாழ்ந்த காடு, நீங்கள் இலங்கையை அடைதலால் உங்களைப் பிரிந்து வெறிதா மென்றும்) தெரிந்துகொள்.' (62)

சுமித்திரை இலக்குமணனை நோக்கிப் பின்னுங் கூறுவாள் : 'நீ இவன் தம்பி போலன்றி, அடியார் போலப் பணிவிடை செய்: இவன் அயோத்திக்குத் திரும்பி வருவானுனல், நீயும் வா : அன்றேல், அவனுக்கு முன், உயிர்விடு.'

### இலக்குமணன் எதிர்மறுத்தல்

இருவரும் அவளைத் தொழுது விடை பெற்று மரவுரி உடுத்துப் புறப்பட்டார்கள். தம்பியும் தன்னைப் போலச் சீரை தரித்ததைக் கண்டு, இராமன் அவனை நோக்கி, 'யான் சொல்வதை மறுக்காமற் கேள். தந்தையுந் தாயரும் முன்னைய நிலையினரல்லர்; என்னைப் பிரிந்து துன்புற்றிருக்கின்றனர். உன்னையும் பிரிந்து அதிகத் துன்பம் அடையாமல், நீ, எனக்காக, அவர்களுக்கு உதவியா யிரு' என்றான். இலக்குமணன், 'நீ இந்தக் கொடிய வார்த்தை கூறும்படி நான் உனக்குச் செய்த குற்றம் யாது?' என்று பின்னும் கூறுவான்.

நீருள வெனினுள மீனு நீலமும்
பாருள வெனினுள யாவும் பார்ப்புறின்
நாருள தனுவுளாய் நானுஞ் சீதையும்
ஆருள ரெனினுளே மருளு வாயென்றான் (63)

கொண்டுகூட்டு: 'நார் உள தனு உளாய், பார்ப்புறின், நீர் உள(து) எனின் மீனும் நீலமும் உள; பார் உள(து) எனின் யாவும் உள; நானும் சீதையும் ஆர் உளர் எனின் (உயிரோடு) உளேம்? அருளுவாய்' என்றான்.

பொருள்: 'நீருண்டேல் அன்றோ மீனும் நீல மலரும் உயிரோடு உள்ளனவாம்; அந்நீருக்கு நிலைக்களமாய்த் தமக்கு ஆதாரமான பூமி யிருந்தால் அன்றோ, அதனால் தாங்கப் பெற்றிருக்கின்ற சராசரப் பொருள்கள் எல்லாம் இருப்பனவாம்; யானும் சீதையும் யார் பிரியாமல் இருந்தால் உயிரோடு இருப்பேம்? அவன் நீ யன்றோ? எங்களுக்கு நீ பிரிதல் உயிர் பிரித லன்றோ? கூறுவாயாக' என்றான்.

'நீர் உளது' 'பார் உளது' என்பன துவ்விகுதி கெட்டு நின்றன. 'நீர் (இடங்கள்) உள,' 'பார் (இடங்கள்) உள' என்றுமாம். பார்ப்புறின்- (ஆலோசித்துப்) பார்த்தால். நார் - நாண். அருளுதல் - சொல்லுதல். —ச. அ. 'நீரும் பாரும்' இராமனுக்கு உவமானங்களாகவும், 'யாவும்' இலக்குமணன் சீதை யிருவருக்கும் பொதுவான உவமானமாகவும், மீனும் நீலமும் முறையே இலக்குமணனுக்கும் சீதைக்கும் சிறப்பான உவமானங்களாகவுங் கொள்ளலாம். இதற்குப் பொருத்தமாக 'நானும் சீதையும்' 'மீனும் நீலமும்' வரிசையாக வருதலையும், இதனடியிற் கூறப்படும் உவமேயப் பொருள்களிடையே உள்ள வேற்றுமைகள் உவமானப் பொருள்களிடையே உள்ள வேற்றுமைகளோடொத்திருத்தலையும் கண்டு கொள்க. அவ் வேற்றுமைகள் வருமாறு:—மீன் கெட்ட நாற்றமுடைமை,

(தன் இனத்தில் சுருமீன் போன்ற வலிய மீன்களுடைமையால்) வன்மை, தூய்மையின்மை முதலிய தன்மைகளால் வெறுக்கப்படுவது; நீல மலர் நறு நாற்றம், மென்மை, தூய்மை முதலியவைகளால் விரும்பப்படுவது: மீன், நீல மலரினும் நெடுங்காலம் நீருடன் கூடியிருப்பது: நீரைப் பிரிந்தால் நீல மலர் வாடிப் பட்டுவிடும் நேர அளவினும் குறைந்த நேர அளவில் மீன் இறந்து பட்டுவிடுவது. (63)

இலக்குமணன், இராமனை நோக்கிப் பின்னும் கூறுவான்: 'உலகத்தோ ரெல்லோரும் உயிர் குலைந்து நடுங்கும்படி, உன்னைக் காட்டுக்கேகச் சொல்லி, உன்னைப் பிரிந்து உயிர் தரித்திருக்கும் தந்தைக்கு மைந்தனென்பதற்குத் தக்க கொடுஞ் சொற் கூறினுய்! இக்கூற்று, உன்னைக் காட்டுக் கோட்டல் கேட்டு எனக் குண்டான கோபத்தைத், 'தணிப்பாயாக' வென்று நீ ஆணையாற் கூறிய கூற்றினுங் கொடுங் கூற்று.'

**செய்துடைச் செல்வமோ யாதுந் தீர்ந்தெனைக்**
**கைதுடைத் தேகவுங் கடவை யோவையா**
**நெய்துடைத் தடையலர் நேய மாதர்கண்**
**மைதுடைத் துறைபுகும் வயங்கொள் வேலினுய் (64)**

கொண்டுகூட்டு: 'ஐயா, நெய் துடைத்து, அடையலர் (உடைய) நேய மாதர் கண் மை துடைத்து, உறை புகும் வயம் கொள் வேலினுய்! செய்து உடைய செல்வம் யாதும் தீர்ந்து (கான் போகக் கடமைப்பட்டாய் எனினும்) என்னைக் கைதுடைத்து ஏகவும், கடவையோ?'

பொருள்: 'ஐயனே, துரு ஏருமல் நெய் தடவப்பட்டுப் பகைவர் நெஞ்சுட் பாய்ந்து உயிரைப் போக்கி அதனுல் அவர்களுடைய அன்புடைய பெண்டிர் கண்ணி லிட்ட அஞ்சனத்தை அவர்கள் கணவ ரிறந்ததற் கிரங்கி யழுங் கண்ணீரால் கரையச் செய்து நீக்கி, மாறிக் கொல்லுதற்கு வேறு பகைவ ரில்லாமையால் மீண்டு உறையுட் புகுகின்ற வெற்றி பொருந்திய வேலாயுதத்தை யுடையவனே! உன் முன்னேரால் உண்டாக்கப்பட்டு நீ பிறப்புரிமையால் உடைய செல்வப் பொருள்கள் எவ்வெவைகளோ, அவ்வவற்றுள் ஒன்று மொழியாமல் எதனையுங் கைவிட்டுப் போய்விடும்படி தசரதனது ஆணையாற் கடமைப்பட்டிருக்கின்றுயென்றுலும் என்னைக் கைவிட்டுப் போகவும் அவன் ஆணையால் கடமைப்பட்டிருக்கின்றுயோ?

இப்பாட்டின் முதலிரண்டடிக்கு 'நீ பரசுராமனை வென்றமையால் உனக்கே யுரியதாக நீ சுயார்ச்சிதமாகப் படைத்த செல்வத்தைப் பிறர் சொற்படி இழக்கவேண்டு மென்பது நியாயமில்லை; ஆனுல் உன்னிட்டப்

படி செய்யலா மாணுலும் செய்துடைச் செல்வ மாகாமல் இயற்கையான் அமைந்த உடைமையாகிய என்னை யிழத்தல் எவ்வாறு இயலும்!' என்ற பொருள் பிரம்மஶ்ரீ திரு. நாராயணையங்காரவர்கள் தெரிவித்தது.

செய்து - உண்டாக்கி ('செய்கபொருளை' என்ற குறளுரை பார்க்க). உடை - உடைய என்பதன் விகாரம். கை, துடைத்து, என்ற இரண்டு சொற்களாலாய தொடர், ஒரு சொல் நீர்மையதாய், 'அறவே நீக்கி' யென்ற பொருள்பட நின்றது. அசுத்தப் பொருளைக் கைப்பற்றி யிருந்து பின்பு நீக்கிஞர், நீக்கப்பட்ட பொருள் சற்றேனும் ஒட்டியுள்ளதை நீக்கக், கை துடைத்து, அப்பொருளை அறவே நீக்குதல் போல, 'என்னை வெறுத்து முற்றும் நீக்கி' யென்பான் 'எனைக் கைதுடைத்து' என்றுனென்க. கடவையோ - கடப்பாடாக உடையையோ. கவி, இலக்குமணனைச் சொல்விக்கக் கருதியது முற்றும் முன்னிரண்டடியோடு சொல்லப்பட்டு முடிந்துவிடவே, பின்னிரண்டடிகளை இனிது நிரப்பிய நயம் பெரிதும் பாராட்டற்பாலது. இவ்விரண்டடிகளை அலங்கரிக்கும் வேல் வருணனை வெகு விசித்திரமானது.

**பாட பேதம் :** எமைக் கைதுடைத்து : மறங்கொள் வேலிஞய்.

(64)

### வசிட்டன் அறிவு கலங்குதல்

மேற் கூறியவாறு இலக்குமணன் கூற, இராமன் மறுமொழி கூறமாட்டாஞய், அவன் முகத்தை நோக்கி, அவன் துன்ப மிகுதியைக் கண்டு, தானும் துன்புகூர்ந்து, கண்ணீர் சோர்ந்து நிலத்திற் பெருக, நிற்கும்போது, இராச சபையிலிருந்து வசிட்டன் வந்தான். வந்தவன் அவர்கள் வதனத்தை நோக்கி அவர்கள் மனக்கருத்தை யுணர்ந்து, மரவுரி வனைந்திருத்தலை யுங் கண்டு மிக்க துக்கமுற்று அறிவு கலங்கிஞன்.

வாழ்வினை முதலிய மங்க லத்துநாள்
தாழ்வினை யதுவரச் சீரை சாத்திஞன்
சூழ்வினை நான்முகத் தொருவன் சூழினும்
ஊழ்வினை யொருவரா லொழிக்கற் பாலதோ (65)

**கொண்டுகூட்டு :** '(அரச) வாழ்வினுக்கு நுதலிய மங்கல நாளில் தாழ்வினை வர, சீரை சாத்திஞன் : சூழ்வினை நான்முகத்து ஒருவன் சூழினும், ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கல் பாலதோ?

**பொருள் :** 'இராமன், மகுடம் புனையும் அரச வாழ்க்கைக் குக் குறித்த சுபதினத்திலேதானே, வாழ்வுபோய்த் தாழ்வுறுதற் குரிய போகூழ் வினைப்பயன் வந்தடைய, நாட்டு வாழ்க்கை

வீட்டுக் காட்டு வாழ்க்கை பற்றிப் பொன்னுடையைக் களைந்து மரவுரியைப் புனைந்தான்: (தமக்கு வரற்பாலதாய ஊழ்வினைப் பயனை வாராமல் தடுத்தற்குத் தக்க தோர்) உபாயத்தைத் தமக்குத் துணையாகப் பிரமதேவனே ஆலோசித்துச் செய் தாலும், அந்த ஊழ்வினைப் பயன் யாவர் ஒருவராலும் ஒழிக்கப் படுந் தன்மையதோ?

'வாழ்வினுக்கு' எனற்பாலது எதுகை நோக்கி உருபுமயக்கமாய் 'வாழ்வினை' எனப்பட்டது. நுதலல் - குறித்தல். சீரை - மரவுரி. சூழ்வு - உபாயம். ஊழ் - விதி. இந்தப் பாட்டு அடுத்த பாட்டில் வரும் 'என்றான்' என்பதனோடு முடிகின்றது. 'என்றான்' என்பதன் எழுவாய் இதன் முந்திய பாட்டுக்களிற் கூறப்பட்டிருக்கிற வசிட்டன்.

இப்பாட்டின் பின் னிரண்டடி 'ஊழிற் பெருவலி யாவுள' என்னுங் குறட் கருத்தைத் தழுவியது. ஆலோசனையாளருள் சாதாரணரான ஒரு முகத்தின ரெவரு மொழிய, விசேடமானவனாய் நான்கு முகங்களுடைய ஒருவனே சூழ்ந்தாலு மென்பார் 'நான்முகத்தொருவன் சூழினும்' என்றா ரெனலாம். அதனினும் அதிகப் பொருத்தமாக, விதியை விதிப்போனாய் 'விதி' யென்னும் பெயருடையானான பிரமனே விதியை மாற்றுதற்குச் சூழ்ந்தாலு மென்பார் 'நான்முகத் தொருவன் சூழினும்' என்றா ரெனலாம்.

பாட பேதம்: மங்க லத்தினான்: ஒருவற் சூழினும் (65)

**வெவ்வினை யவடர விளைந்த தேயுமன்**
**றிவ்வினை யிவன்வயி னெய்தற் பாற்றுமன்**
**றெவ்வினை விளைந்ததோ வேவ ரெண்ணமோ**
**செவ்விதென் றொருமுறை தெரியும் பின்னென்றான் (66)**

கொண்டுகூட்டு: 'இவ்வினை, வெவ்வினை (யுடை)யவள் தர விளைந்ததும் அன்று; இவன் வயின் எய்தல் பாற்றும் அன்று; எவ் வினை விளைந்ததோ? ஏவர் எண்ணமோ? (மற்று) ஒரு முறை(யில்) செவ்விது என்று பின் தெரியும் என்றான்.

பொருள்: இராமன் காட்டுக்குப் போகும்படியான இந்த வினை, முன் எப்போதும் நற்செய லுடையாளாய் இப்போது கொடிய செயலுடையாளாகத் தோன்றும் கைகேயி விளைவிக்க விளைந்தது மன்று; புண்ணிய புருடனான இந்த இராமனிடம் அடையற்பாலதுமன்று; இவ்விருவரும் உத்தரவாதிக ளல்லாத வேறு எந்த வினையின் விளைவோ? தேவர்களுள் யாவர் கருதியதோ? (இது, இப்போது நிகழ்ந்த ஒருவகையில், தீயதாகத் தெரியப்பட்டாலும், இனி நிகழும் மற்று) ஒருவகையில் நல்ல தென்று பின்பு தெரியப்படும்' என்று எண்ணினான் வசிட்டன்.

வயின் - இடம். செவ்விது - செம்மையானது - நல்லது. முறை - வகை. —புறப். வெண். மாலை. என்றான், என்று கூறினானென்ற பொருள் பயவாது, என்றெண்ணினான் என்ற பொருள்பட நின்றது. எனல், என்று கருதல் என்ற பொருளில் 'உள்ளத்தா லுள்ளலும்' என்ற குறளில் வருதல் காண்க. இயற்கையாகக் கைகேயி இக் கொடுவினையிழைக்கும் இயல்பினளல்லள். அவளைக் கருவியாகக் கொண்டு இது செய்யப்பட்டிருக்கிறது. தீயாருக்குத் தண்டனையாகச் செய்தற்குரிய இது மிகவும் நல்லவனான இராமன் திறத்திற் செய்யப்படுதற் குரியதன்று. இது இவ்வுலகில் நிகழ்தற் கேதுவாக, அவ்வுலகில் யாது நிகழ்ந்ததோ? இங்கேயுள்ளாரெவருடைய எண்ணத்தாலும் இது நிகழ்ந்ததில்லை. இங்கே இது நிகழும்படி அங்கே யாவர் சங்கற்பித்தாரோ? தீமையாகத் தோன்றும் இது நன்மைக் கேதுவான தென்று பின் காரிய நிகழ்ச்சியில் தெரியப்படுமென்று,

*அலைகடல் நடுவண் ஓர் அனந்தன் மீமிசை*
*மலையென விழிதுயில் வளரும் மாமுகில்*
*கொலைதொழில் அரக்கர்தம் கொடுமை தீர்ப்பனென்*
*றுலைவுறும் அமரருக் குரைத்த வாய்மையை*

முன் 'மனத்திலெண்ணினான்' ஆன வசிட்டன் இப்போது மனத்திலெண்ணினானென்று இப்பாட்டின் கருத்தை விரித்துரைக்கலாம். (திருஅவதாரப் படலம் 5, 6-ம் பாட்டுக்களைப் பார்க்க.) (66)

### வசிட்ட ராம சம்வாதம்

மேற்கூறியவாறு எண்ணிய வசிட்டன், இராமனை அணுகி 'நீ காடு செல்வையேல், அரசன் வாழான்' என்றான். இராமன், 'அரச னாணைப்படி நடத்தல் என் கடன்; அவன் சோகப்படல் துடைத்தல் உன் கடன்' என்றான். முனிவன், 'அரசன் உன்னிடம் "காட்டுக்குச்செல்" லென்று சொல்லவில்லை; "சொல்லேவ" னென்று ஆலோசனையின்றிக் கைகேயியிடம் சொன்னதுண்டு' என்றான். இராகவன், 'என் தந்தை தந்த வரப்படி செய்யும்படி என் அன்னை என்னை ஏவினாள். அந்த ஏவலை யான் சிரமேலேற்றுக்கொண்டேன். தரும சாட்சியாயுள்ள நீ தடுக்கலாமோ?' என்றான். வசிட்டன் மாறுகூற மார்க்கமின்றி வாளாநின்று கண்ணீர் வார்த்துக்கொண்டிருந்தான். அவனை வணங்கி இராமன் அரசமாளிகை முற்றத்தை அடைந்தான்.

### இராமனைக் கண்டவர்களின் அவலம்

மரவுரி உடுத்து இளையவன் தொடரவந்த இராமனைக் கண்ட தாயர் முதலிய மாதர்முகங்கள் தாமரை மலர்களாகக் கண்கள் அம் மலர்களின் மேல் மொய்க்கும் வண்டுகளாக, அவ்

வண்டுகளைக் கைகளா லறைந்து ஓட்டுவார் போலவும் 'இக் கொடிய காட்சியைக் காணும் பாவத்தைச் செய்தீர்களே' யென்று கோபித்துத் தண்டிப்பார் போலவும் கண்கள்மீது கையா லறைந்தார்கள். சிலர், உயிர் சலனமுற்று நிலையில் நிற்கப் பெறுராய்க் கண்டார், 'இவர்க்கு உயிர் இப்போது போய்விடும், இப்போது போனது, இப்போது திரும்பியது' என்று சொல்லும் படியானுர். துக்கத்தாற் சாம்பிய மாதர் வதனங்கள், அவை களுக்குத் தோற்றிருந்த சந்திரனுக்குத் தோற்றன. அளவிறந் தலறி அழுத அவர்களுடைய குரலை முன் தோல்வியுற் றிருந்த குழலோசை வென்றது. அரண்மனை மாதர்களெல்லாம் கொடு மையான காடோ குமரருக்கு உறைவிடமான தென்று அழுவா ராய் வாய்திறந்த வண்ணமா யிருந்ததனுல், (வண்டுகள் உள் ளிருந் தொலியா நிற்பப்) பகற் காலத்தில் மலர்ந்த செவ்வல் லிப்பூ நிறைந்த தடாகத்தை ஒத்தது அரச மாளிகை. அங் கிருந்த மாதர் கண்ணீர் மழை, தன மலைமேல் விழுந்து பெருகிப் பூமியில் ஆருய் ஓடியது.

இராசக்கிருக முன்றிலை எய்திய இராமன், தன்னை அங்கு நின்று தாயர் தொடர்ந்து பின்வர, அவர்களிடம் யாது சொல்வ தென் றறியாருய்த் தன் மாளிகை நோக்கிச் சென்றுன். அவ் வாறு செல்வதைக் கண்டோர், 'செம்பொன் முடிசூடுதற்குத் தேர்மீது சென்ற தெருவிலேதானே, மரவுரி யுடுத்துத் தரைமிசை நடக்கக் கண்டும் பிளந்திடாத நமது நெஞ்சினும் வலியது ஒழிந்திடாத உயிர்' என்பாரும்,—'நாடாள மகுடம்முடித்து வருவதைக் காண விரும்பிய கண்களால் காடேக மரவுரி யுடுத் துச் செல்வதைப் பார்க்கும்படி, பெண் கொடுமை புரிந்த இந்த நாட்டிலே, கண்கொடு பிறந்தது கட்டத்துக்கே!' என்பாரும்,— 'காட்டுக்குப் புறப்படக் கண்டு தடுத்திடாமலும் கூடச் செல்லா மலும் உள்ள நம் அன்பு அழகிது!' என்பாரும்,—'தானும் மர வுரியுடுத்து இலக்குமணன் ஒருவனே, துன்பம் உருவெடுத்துத் தொடர்ந்தாற் போலத் தொடர்ந்து செல்லுகின்றுன். இப் பெரு நாட்டில் இவன் ஒருவன் தானே இராமனுக்கு உறவு!' என் பாரும்,—'அங்கவீனனுன ஒரு மகனெழிய மற்றுப் பல மக்கள் குறைவற்றவராக வுடையவர் அந்த ஒரு மைந்தனுக்குத் தீங்கு நேர்ந்தால் அதைத் தடுத்தற்கு உயிரையுங் கொடுக்க முந்தும் இந்த உலகிலே, அரச ரனைவரையும் வென்ற பரசுராமனை வென்ற சம்பூரணனுன மகன் காடு செல்லாதபடி காவாமல் தன்

வார்த்தை பொய்யாதபடி காக்கும் மன்னர்மன்னன் மனம் வன்மையான இரும்பே!' என்பாரு மாயினர்.

திக்கு நோக்கிய தீவினைப் பயனெனச் சிந்தை
நெக்கு நோக்குவோர் நல்வினைப் பயனென நேர்வோர்
பக்க நோக்கலென் பருவர லின்பமென் றிரண்டும்
ஒக்க நோக்கிய யோகரு மருந்துய ருழந்தார் (67)

கொண்டுகூட்டு: தீவினைப் பயன் (தாமிருக்கும்) திக்கு நோக்கிய என, சிந்தை நெக்கு நோக்குவோரும், நல்வினைப்பயன் (திக்கு நோக்கிய) என நேர்வோரும் (ஆனவர்) பக்கம், நோக்கல் என்? இன்பம் பருவரல் என்று இரண்டையும் ஒக்க நோக்கிய யோகரும் அருந் துயர் உழந்தார்.

பொருள்: தீவினைப் பயன்கள் தம்மை நாடி அடையத் தாமிருக்கும் திசையை நோக்கின என்று அவை வருங் குறிகளா லறிந்து மனம் நெக்குடைந்து அப் பயன்கள் தம்மை அடைய வருதலை வெறுத்து நோக்குவோர்களும், நல்வினைப் பயன்கள் தம்மை நாடி அடையத் தாமிருக்கும் திசையை நோக்கின என்று அவற்றை விரும்பி எதிர்கொண்டு வரவேற்றுச் சந்திப்போர்களு மான இரு திறத்தவர்கள்பால் இராமன் காடேகல் பற்றித் துன் பம் மிகுதலைப் பார்ப்பானேன்? இன்பம் துன்பம் இரண்டையும் ஒருநிகராகக் கருதும் யோகியரும் பொறுத்தற்கு அரிய துன்பத் தினால் வருந்தினர்கள்.

'திக்கு நோக்கிய' என்பதை 'தீவினைப்பயன்' 'நல்வினைப்பயன்' என்ற இரண்டுடனும் இயைத்துத் 'தீவினைப்பயன் திக்கு நோக்கிய என' என்றும் 'நல்வினைப்பயன் திக்கு நோக்கிய என' என்றும் கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளப்பட்டது காண்க.

> பல்ஆவுள் உய்த்து விடினும் குழக்கன்று
> வல்லதாம் தாய்நாடிக் கோடலை—தொல்லைப்
> பழவினையும் அன்ன தகைத்தே தற்செய்த
> கிழவனை நாடிக் கொளற்கு

என்பது பற்றி வினைப் பயன்கள் வினை செய்தார் இருந்த திசையை நோக்கின என்று கூறப்பட்டதென்க. (67)

மேற்கூறிய பயனை விரும்பாத் யோகியர் துன்புற்ற தன்றி இராமன் வனம் சேர்தலால் இராவணாதியர் அழிந்து துன்பந் தொலையும் பயனடைபவரான தேவர்களும், 'யாங்கள் எப் பயனும் எய்தா தொழியினு மொழிக, இத்துன்பத்தை ஆற்றேம், இராமன் வனம் ஏகானாக' வென்று விரும்புமாறு, அவன் வனம் செல்லக் கண்டார் துக்கம் உச்ச நிலையை யுற்றது. இராமன்

பிரிவால் உயிர் பிரியும் தசரதன் போல, ஆவி நீங்குவது போன்றது அயோத்தி மாநகரம்.

### இராமன் சீதைக்கு நடந்ததை அறிவித்தல்

எல்லாருக்கும் ஓருயிர் போன்ற இராமன் சீதை யிருந்த இடத்தை அடைந்தான். அவனை மரவுரி யுடையானைகப் பார்க்கவே, சீதை திடுக்கிட் டெழுந்தாள். அவளை மாமிமார் தழுவிக் கொண்டு அழுதார்கள். அவள், கண்ணீர் பெருக, நாயகனை நோக்கி, 'இது அரசன் ஆணையோ? இதன் காரணம் யாது?' என, அவன், 'என் தம்பி அரசாள்வான். யான் இருமுதுகுரவரும் இட்ட கட்டளையை ஏற்று வனம் போய்வருவேன். வருந்தாதே!' என்றான்.

### சீதை வருந்தல்

நாய கன்வன நண்ண லுற் றனென்றும்
மேய மண்ணிழந் தானென்றும் விம்மிலாள்
நீவ ருந்தலை நீங்குவென் யானென்ற
தீய வெஞ்சொல் செவிசுட விம்மினாள் (68)

கொண்டுகூட்டு: (சீதை, தன்) நாயகன் வனம் நண்ண லுற்றான் என்றும், மேய மண் இழந்தான் என்றும் விம்மிலாள்: 'நீ வருந்தலை; யான் நீங்குவேன்' என்ற தீய வெம்சொல் செவி(யைச்) சுட விம்மினாள்.

பொருள்; (சீதை வருந்தினாள்;) ஆனால் தன் பிராண நாயகன் காட்டுக்குச் செல்லலுற்றா னென்றும், தசரதன் கொடுக்க, அவன் அடைந்த பூமி அரசாட்சியை இழந்தானென்றும் வருந்தினாளில்லை; வேறு எக்காரணம் பற்றி வருந்தினாளெனில், 'நீ வருந்தாதொழி, நான் பிரிந்தேகுவேன்' என்ற கொடிய சொல் செவியைச் சுட்டாற்போல வருத்த வருந்தினாள் (என்பது).

விம்மல் - வருந்தல். (விம்முறவு - வருத்தம்—சிந்தா.) வருந்தலை - வருந்துவாயல்லை—வருந்தாதே.

பாட பேதம்: மண்ணிழந் தானென்றும் விம்மலள்: செவிசுடத் தேம்புவாள். (௬8)

துறந்து போ * மெனச் சொற்றசொற் றேறுமே
உறைந்த பாற்கடற் சேர்க்கை யுடனெரீஇ
அறந்தி றம்புமென் றைய னயோத்தியிற்
பிறந்த பின்பும் பிரியல ளாயினாள் (69)

* போம்: போவம் என்பதன் தொகுத்தல். கந்த புராணம், முதனாட் பானு

**கொண்டு கூட்டு:** ஐயன், அறம் திறம்பும் என்று, (திருமகளுந் தானும்) உறைந்த பாற்கடற் சேர்க்கையை உடன் ஒருவி, (தான்) அயோத்தியில் பிறந்த பின்பும் பிரியலள் ஆயினுள் (ஆய சீதை, தன்னை அவன்) 'துறந்து போம்' எனச் சொற்ற சொல் தேறுமே!

**பொருள்:** திருமால், 'நாம் இப்போது பூமியில் அவதாரஞ் செய்யாவிட்டால் தருமம் நிலை குலைவுற்று மாறுபட்டுவிடு' மென்று திருவுளங்கொண்டு திருமகளும் தானும் வைகிய திருப் பாற் கடற் படுக்கையை விரைவில் நீங்கி வந்து அயோத்தியில் அவதரித்த பின்பு, முன்போலப் பிரியாதிருக்கும் பொருட்டே தானும் பூமியில் அவதரிப்பாளாய் மிதிலையிலே தோன்றி அவனை மணந்து பிரியாளாயினுள்) ஆகிய சீதை, 'அவதார நிமித்தம் முன்பு பிரிந்தது நியாயமே, இப்போது பிரிதற்கு யாது நியாய மிருக்கின்றது?' என்றெண்ணி, அவன் தன்னை) 'விட்டுப் போவே' னென்று சொன்ன சொல்லுக்குப் பொருள் இன்ன தென்று தெளிந்தாளில்லை.

துறந்துபோ(வ)ம் - நீங்கிப்போவேன் - சொற்ற - சொன்ன. தேறும்- தெளிவாள். 'தேறும்' செய்யுமென் முற்று. 'தேறுமே' என்பதில் உள்ள ஏகாரம் எதிர்மறை. - சேக்கை - படுக்கை.

கிடைத்த பிரதிக ளெல்லாவற்றினும் 'துறந்து போமென' என்ற பாடமே உள்ளது. இஃது உள்ள இடத்தைத் 'துறந்து போவென்யான்' என்று பாடமிருப்பின் பொருள் சிறக்கும்: போவேன் என்று பொருள் படும் 'போதென' 'போகென' என்பவற்றுள் ஒரு பாடமாயிருப்பின், அடுத்தபடியாகப் பொருள் சிறக்கும். ஒருகால் இந்த இரண்டிலொன்று பூர்வ பாடமாயிருந்து, அது அருமையான பிரயோகமானது பற்றி, அதன் பொருளறியாத எழுதுவோரால் 'போமென' என்று திரித்தெழு தப்பட்டிருக்கலாம். எவ்வாருயினும் பழைய ஏடுகள் தேடிப் பார்த்து உண்மைப் பாடம் காணவேண்டிய இடங்களுள் இஃது ஒன்று. போம் என்பதற்குப் போவேன் என அச்சிடப்பட்டுள்ள ஒரு பிரதியில் பொருள் எழுதப்பட்டிருக்கிறது—சோ. சு.: ஆயின், அதற்கு இலக்கணமாவது மேற்கோளாவது காட்டப்படவில்லை.

**பாட பேதம்:** தேறுமோ: பிரிவிலள். (69)

---

கோபன் யுத்தப் படலத்தில் 23-ம் பாட்டில் 'முற்ப கற்புரி தவப்பய னிஃதென மொழிமோ—கற்பி ஞற்றலென் றுரைத்துமோ கழறுவ தெவையே' என்றும், க. ரா. மாரீசன் வதைப் படலத்தில் 'சாமரமுரலும்' என்ற பாட்டில் யாம் உரை வழங்குவம்' என்பது 'யாம் உரை வழங்கும்' என வருதலுங் காண்க.

அன்ன தன்மைய ளையனு மன்னையும்
சொன்ன செய்யத் துணிந்தது தூயதே
என்னை யென்னை யிருத்தியென் றானெனா
உன்ன வுன்ன வுயிருமி ழாநின்றாள் (70)

கொண்டுகூட்டு: அன்ன தன்மையள், '(என் நாயகன்) ஐயனும் அன்னையும் சொன்னவற்றைச் செய்யத் துணிந்தது தூயதே. என்னை? என்னை (யுடன் வராமல்) "இருத்தி" யென்றான்!' எனா, உன்ன, உன்ன உயிரை உமிழாநின்றாள்.

பொருள்: அத் தன்மை யுடையவளான சீதை, 'என் நாயகன் நாட்டைத் துறக்கும்படியும் காட்டில் வசிக்கும்படியும் தந்தையும் தாயும் பணித்தவைகளைச் செய்ய நிச்சயித்தது களங் கமற்றதே; என்னைப் "பிரிவை"யென்றது அவ்வாறு களங்க மற்ற தன்று; எப்படி என்னைத் தன்னொடு வராமல் "இருப்பா யாக" வென்றான்!' என்று நினைக்க நினைக்க வருத்தம் மிகுந்து உயிரைப் போக்காநின்றாள் (ஒத்தாள்).

சொன்ன - சொன்னவை. தூயது - களங்கமற்றது. என்னை - எப்படி. உன்ன உன்ன என்ற அடுக்கு விடாது பலமுறை நினைக்க என்ற பொருளை நயம்படப் படுத்தி நின்றது. உயிருக்குச் சுவாச மென்றும், உமிழ்தலுக்குக் காலுதல் (- வீசுதல் - எறிதல்) என்றும் பொருளுண்மை யின், 'உயிருமிழா நின்றாள்' என்பதற்கு நெடுமூச்செறியா நின்றா ளென்றும் பொருள் கூறுவர்.—திரு. ச. (70)

இராமன் காரணந் தெரிவித்தல்

*இராமன், தான் சீதையை 'நீ இங்கிருப்பாயாக' என்றதற் காக அவள் வாய்விட்டுச் சொல்லாமல் மனத்துள் வருந்தி நினைந்தவைகளை யெல்லாம் குறிப்பா லுணர்ந்துகொண்டு, 'இருப்பாயாக' வென்றதற்குக் காரணந் தெரிவிப்பானாய், 'இரவினும் வெப்பொழியாத பாலைவனத்துப் பருக்கைக் கற்கள் சுட்டமுத்தலைப் பூவினும் மெல்லிய உன் பொன்னடிகள் பொறுக்கமாட்டா' என்றான்.*

*சீதை, 'பாலை வெப்பம் பெரி தன்று' எனல்*

பரிவி கந்த மனத்தொடு பற்றிலா
தொருவு கின்றனை யூழி யருக்கனும்
எரியு மென்ப தியாண்டைய தீண்டுநின்
பிரிவி னுஞ்சுடு மோபெருங் காடென்றாள் (71)

கொண்டுகூட்டு: '(நீ) பரிவு இகந்த மனத்தொடு பற்றில்லாது ஒருவுகின்றனே. ஊழி அருக்கனும், எரியும் என்பது யாண்டையது? பெருங் காடு, ஈண்டு நின் பிரிவினும் சுடுமோ' என்றாள்.

பொருள்: 'நீ அன்பு நீங்கிய மனத்துடன் என்னிடத்துச் சிறிதும் பற்றில்லாத என்னை நீக்குகின்றாய். நீ சொல்லிய காட்டினும் எத்துணையோ உக்கிரமான ஊழி காலத்துச் சூரியனும் சுடுமென்பது எவ்விடத்துள்ளது? (யான் உன்னைப் பிரியாத இடத்துச் சுடுவதில்லை. அவ்வாறாக, அந்தச் சூரியனினும் எவ்வளவோ தாழ்ந்த சூடுள்ள) காடு, இங்கே (யான்) உன்னைப் பிரிந்திருத்தலினும் அதிகமாகச் சுடுமோ?' என்றாள் சீதை.

பரிவு - அன்பு. இகத்தல் - நீங்கல். பற்று - தொடர்பு. ஒருவுதல்-நீங்குதல்; நீக்குதல் (ஒரிஇ - நீக்கி.—பத்துப்பா.) ஊழி - உலக முடிவுகாலம். அருக்கன் - சூரியன். 'யாண்டையது' என்பதை 'நம்பத்தக்கதன்று' என்று பொருள்படும் பரிகாசக் குறிப்புச் சொல்லாகவும் கொள்ளலாம். 'பிரிவினும் சுடுமோ பெருங்காடு' என்ற நனி இனிய கவிச்சுவை கனிந்த வாக்கியத்தில், அருவப் பொருளாகிய பிரிவை உருவப்பொருளாகிய பாலை வனத்தினுடனும் அப்பிரிவினால் உள்ளத்துள்ளே உண்டாம் துன்ப உணர்ச்சியை அவ்வனத்தினால் உடற்புறத்தே உண்டாகும் சூட்டுணர்ச்சியுடனும் உவமித்துச் சுரத்தின் தொழிலாகிய சுடுதலைப் பிரிவுக்கு ஏற்றி, ஏற்றிய இடத்தே, பெருஞ்சூடு செய்வது சுரமன்று பிரிவெனப் பிரிவைப் பெருமைப் படுத்தி ஆச்சரியமும் ஆனந்தமும் ஒருங்கே உண்டாக்கிய நுண்ணறிவு நோன்மை, நுணுகி நோக்கி நுகரத் தக்கது. (71)

## சீதை காடு செல்லச் சித்தமாதல்

மேலே கூறியவாறு சீதை கூறியதை இராமன் கேட்டு, அவள் உள்ளத்துள்ளே உள்ள கருத்தை ஊகித் துணர்ந்து, கவலையுற்றுத் ததும்பிய கண்ணீரைத் தடுத்து, 'இவளை யிட்டுச் செல்வோமா, விட்டுச் செல்வோமா, யாது செய்வோ' மென்றெண்ணிக்கொண் டிருக்கும்போது, அவள் மாளிகைக்குள்ளே போய் மரவுரியெடுத் துடுத்து, அவன் எண்ணுதல் முடியுமுன் விரைந்து வந்து அவன் கையைப் பிடித்து நின்றாள். அவள் செயலைக் கண்டவர் யாவரும் துன்பம் பொறுக்க மாட்டாராய்ச் சோர்ந்து வீழ்ந்தார்கள்; இறந்தாரல்லர்; இறவாத காரணம் அவர்கள் இன்னும் பூமியில் இருக்கவேண்டிய நாள்கள் இறவாமையே. ஊழின்படி உயிரோ டிருத்தற்பாலார் உலக முடிவுகால முற்றிலும் உயிரொழியா ரன்றோ! தாயரும், தமக்கை தங்கையரும், சகிமாரும் தழலில் வீழ்ந்தார் போன்றார்கள்.

அப்போது இராமன் சீதையை நோக்கி, 'முல்லை யரும்பும் மூத்தும் தனித்தனியாக வன்றி ஒன்றுசேர்ந் தெதிர்ப்பினும் அவைகளை எளிதில் வெல்லும் பல்லினாய்! எங்களொடு நீ வருதலால் விளையுந் துன்பத்தைச் சிறிதும் சிந்திக்கின்றா யில்லை. அளவற்ற துன்பத்துக்கு எங்களை ஆளாக்குவாய்' என்றான். எனவே, அவள் சினந்து, 'என்னுடைய தொடர் பொன்றுதான் உனக்குத் துன்பமானது! என்னை நீக்கி யொழித்த பின், எல்லாம் இன்பம் போலும்!' என்றாள். அவன் மறுமொழி சொல்லானாய்த் தெரு வழியே செல்வானானான்.

சீதா ராம லக்குமணர் தெருவிலே சென்ற காட்சி

சீரை சுற்றித் திருமகள் பின்செல
மூரி விற்கை யிளையவன் முன்செலக்
காரை யொத்தவன் போம்படி கண்டவவ்
வூரை யுற்ற துணர்த்தவு மொண்ணுமோ (72)

கொண்டுகூட்டு: சீரை சுற்றித் திருமகள் பின் செல, மூரி விற் கை இளையவன் முன் செலக், காரை யொத்தவன் (நடந்து) போம்படி கண்ட அவ் ஊ(ரா)ரை உற்ற து(ன்பத்தையு)ணர்த்தவும் ஒண்ணுமோ ?

பொருள்: மரவுரி உடுத்துச் சீதை பின்னே செல்லா நிற்க, வில்லேந்திய கையினனாய் இலக்குமணன் முன்னே செல்லா நிற்க, இராமன் (நடுவே நடந்து காட்டுக்குச்) செல்லக் கண்ட அயோத்தி நகரத்தாரை அடைந்த துன்பத்தை (நாம் உணரவும் பிறர்) உணரும்படி எடுத்துக் கூறவும் இயலுமோ?

மூரி - வலி; பெருமையுமாம். 'ஊர்' ஆகு பெயராய் ஊராரை உணர்த்தியது. மூவரும் மரவுரி புனைந்து செல்கின்றாராதலால், அதற்குப் பொருத்தமாகச் 'சீரைசுற்றி இளையவன் முன்செலச்' 'சீரை சுற்றிக் காரை யொத்தவன் போம்படி' யெனக் கூட்டிப் பொருள் கொள்க.

'காரை ஒத்தவன் முன்செல, திருமகள் பின்செல, (அவர்களுக்குப் பின்) இளையவன் போம்படி' என்று கொண்டுகூட்டிப் பொருள் கூறுவாருமுளர். எல்லாச் செல்வங்களையும் தானுடையாளா யிருத்த லன்றித் தன் அருள் பெற்றாரெவருமே அவைகளை யுடையராகச் செய்யும் சீதாதேவியாகிய சீதாப்பிராட்டி, மேன்மையான பொன்னுடை பட்டாடை யில்லாராயினும் தாழ்மையான பருத்திப் பரும்புடைவை யுடைய ஏழைமாதெவளும் உடுக்காத எவ்விலையும் இல்லாத மரவுரி யுடுத்தது பெரு வியப்புக்கும் பேரிரக்கத்துக்கும் காரணம் மென்னுமாறு 'சீரை சுற்றிய சீதைபின் சென்றிட' என்னாது 'சீரைசுற்றித் திருமகள் பின்செல' என்றார்.

'விற்கை இளையவன்' என்று இலக்குமணன் வில்லேந்திச் சென்றதை வெளிப்படையாகக் கூறிக் 'காரை ஒத்தவன்' என இராமன் வில்லேந்திச் சென்றதைக் குறிப்பாகக் கூறினாரெனலாம். மேகத்தை நிறத்தா லன்றி வில்லுடைமையாலும் இராமன் ஒத்திருந்ததனால் சாய்ந்து கிடக்கும் அறப் பயிரும், தயங்கி நிற்கும் நல்லுயிர்களும் வளர்ந் தோங்குமாறு எழுந்து போன இராமனது பயன்படு செயல் கருதிக் 'காரை ஒத்தவன்' என்றார் எனலுமாம்.

உற்ற துன்பம் என்ற இரண்டு சொற்களைச் சொல்ல வேண்டிய இடத்தே, துன்பம் என்ற சொல்லைச் சொல்லாமல் விட்டுவிட்டு, உற்றது என்ற ஒரு சொல்லை மட்டும் சொல்லி, அந்த உற்றது என்பது, அது நிறுவப் பெற்ற இடத்தின் ஆற்றலால், கருதற் கரிய கடுந்துன்ப மென்று சிறப்பாகப் பொருள்படச் செய்து சொற்சுருக்கமும் பொருட் பெருக்கமும் ஒருங்கமைத்த அருங் கவித்திறம் வியந்து நயந்து மெச்சத் தக்கது.

தசரதன் கைகேயி இருவர் தவிர, அவன் மனைவிய ரனைவரும், சுற்றம் முற்றும், வசிட்டனுள்பட மந்திரி புரோகிதராதி இராசாங்கத்தின ரெல்லாரும், மற்றும் அயோத்தி மாநகரத்துள்ள ஆடவர் பெண்டி ரடங்கலும் கண்டு கரையற்ற துயரத்தை அடைய, மரவுரி உடுத்து இலக்குமணன் சீதை இருவரும் முன்னும் பின்னுமாக நடக்க இராமன் அயோத்தி மாநகர வீதி வழியே காட்டுக்குச் செல்லும் காட்சியை, மற்றைப் படங்கள் போலக் காலகதியிற் சீரணித் தழிதலும் கிழிந்தொழிதலு மில்லாத பாட்டுப் படத்தில் வழிவழி வரும் வாசகர் மனக்கண்கள் தம் மெதிரே கண்டாற் போலக் கண்டு களிபெருங் களிகொள்ள என்றும் நின்று நிலவுமாறு தீவிய (இனிய) காவிய ஓவியகாரரான கம்பர் இனிது சித்திரித்திருக்கும் சித்திரம் பலமுறை பார்த்துப் பாராட்டற்பாலது. (72)

### இராமன் முதலியோர் காட்டுக் கேகல்

இராமனுடன் தாமும் வனம் போகத் துணிந்தமையால் எல்லாரும் அழுதலை விட்டு அமைதியாக அவன் பின் சென்றார்கள். தசரதனது மாளிகை முற்றத்தை அடைந்தபோது இராமன், கூட வந்த தாயாரைக் கும்பிட்டு, 'அரசன் சோகத்தை ஆற்றுங்கள்' என்றான். அவர்கள் துக்கமேலீட்டாற் சோர்வு மீதூர்ந்து துளங்குத லுற்று நாத் தழுதழுப்ப அழுதழுது மூவரையும் ஆசீர்வதித்துத் 'தேவர்களே! இம் மூவர்களையும் பாதுகாவல் செய்து காட்டில் வாழும் காலம் கழிந்த பின் மீண்டும் எங்கள் மாட்டு நல்குமின்கள்!' என்றார்கள். இராமன் தாயரிடம் அரிதாகப் புறவிடை பெற்று எதிரே நின்ற வசிட்டனைக் கைகூப்பிச் சீதா லக்குமணருடன் தேரேறிக் காட்டுக்குச் சென்றான்.

---

# 5. தைலமாட்டுப் படலம்

**இறந்த தசரதன் உடம்பைப் பரத சத்துருக்கர் வரும் வரை எண்ணெயி லிட்டு வைத்ததைக் கூறுவது***

ஏவிய குரிசில்பின் யாவ ரேகிலார்
மாவிய ருனையம் மன்னை நீங்கலாத்
தேவிய ரொழிந்தனர் தெய்வ மாநகர்
ஓவிய மொழிந்தன வுயிரி லாமையால் (73)

**கொண்டுகூட்டு :** (தந்தை) ஏவிய குரிசில் பின் ஏகிலார் யாவர்? மா இயல் தானை அம் மன்னை நீங்கலாகத் தேவியர் ஒழிந்தனர்; தெய்வ மா நகர் ஓவியம், உயிரிலாமையால் ஒழிந்தன.

**பொருள் :** இராமன் பின் ஏகாதவர் யாவர்? மூர்ச்சித்துக் கிடந்த தசரத ராசனைப் பிரியாத கோசலை முதலிய தேவியர் ஏகுதல் ஒழிந்தனர்; உயிரில்லாததனுல் சித்திரங்களும் ஏகுதல் ஒழிந்தன.

ஏவிய - (தசரதனுல் காட்டுக் கேகும்படி) கட்டளை யிடப்பட்ட. குரிசில் (- பெருமையிற் சிறந்தோன்), இராமனைக் குறித்தது. மா இயல்தானை - பெருமை பொருந்திய சேனை(யை யுடைய). ஓவியம்-சித்திரம். அயோத்தி நகர மாந்தர் ஒரு சில ரொழிய அனைவரும் இராமனைப் பின் ருெடர்ந்து காட்டுக் கேகின ரென்பதை, அவ்வாறே கூருமல், 'இராமன் பின் யாவர் ஏகிலர்?' என ஒரு வினு எழுப்பி, அதற்கு விடையாக, சரமதசையிலிருந்த தசரதனைப் பிரிய வொண்ணுமையால் தேவியர்களும், உயிரில்லாமையால் ஓவியங்களும் ஏகா திருந்தமை கூறி, ஏகச்.சாத்தியமுடையாரா யிருந்தா ரெல்லாரும் ஏகின ரென்று கொள்ளக் கூறிய கவிசாதுரியம் கவனிக்கத் தக்கது.

**பாட பேதம் :** யாரும் ஏகினர். (73)

## இரவு வர இருளடைதல்

சூரியன், 'இராமன் காட்டுக் கேகுவதை யான் காண மாட்டே' னென்று ஓடி ஒளிப்பான் போல, அத்தமன கிரியிற் சென்று மறைந்தான். எருமைகளும் பசுக்களும் இல்லினை நோக்கிச் செல்லுவனவாயின. இராமனுக்குற்ற கட்ட தசையைக் கண்டு மாதர் முகங்கள் வாடலுற்றது போல, வனச மலர்கள் மூடலுற்றன. மந்தரையின் வஞ்ச வார்த்தை

* தைலம் - எண்ணெய். ஆட்டுதல் - முழுகுவித்தல்.

யால் இருளடைந்த கைகேயியின் நெஞ்சம் போல, மண்ணும் விண்ணும், இரவு வர, இருளடைந்தன. விண் மீன்களோடு விளங்கலுற்ற வானம், கண் ணுயிரம் பொலியும் இந்திரனது கரிய மேனியை ஒத்தது.

### இராமன் சுமந்திரனைத் திரும்பிப் போகச் சொல்லல்

இராமன், அயோத்தியினின்று இரண்டு யோசனை தூரம் சென்று இருடிய ராச்சிரமத்திலே இறங்கி இருந்தான். அப்போது அவனிருந்த இடத்தைச் சூழ்ந்து நெடுந் தூரம் சனங்கள் மொய்த்திருந்தனர். அவர்க ளெல்லாரும் உறங்க லுற்றபோது, இராமன் சுமந்திரனை நோக்கி, 'அன்புமிக்க இவர்களை அயோத்திக்குத் திரும்பச் செய்தல் ஆகாதது. அவ்வாறு செய்யாமல் யான் வனத்துக் கேகுவதும் கொடுமை யானது. நீ அயோத்திக்குத் தேரைத் திருப்பிச் செலுத்துவா யாஞல், அது சென்ற தடங் கண்டு யான் அங்கே திரும்பிப் போய்விட்டே னென்று அவர்கள் திரும்புவார்கள். இது யான் உன்பால் வேண்டிக்கொள்வது' என்ருன்.

### சுமந்திரன் மறுத்துச் சொல்லல்

'என் உயிர் போலும் உன்னை நீங்கிச் சென்று நீ வனஞ் சென்றது காரணமாக, அயோத்தியில் நிகழும் துக்கச் செயல் களைக் காண்பேஞல், உனது சிறிய தாயினும் தீய விதியினும் தீயேனுவேன்' என்று கூறிப் பின்னும் கூறுகின்ருன்.

தேவியு மிளவலுந் தொடரச் செல்வனைப்
பூவியற் கானகம் புகவுய்த்தே னென்கோ
கோவினை யுடன்கொடு குறுகினே னென்கோ
யாவது கூறுகே னிரும்பி னெஞ்சினேன் (74)

கொண்டுகூட்டு: (யான் தசரதனிடம்) "தேவியும் இளவலும் தொடரச், செல்வனைப் பூ இயல் கானகம் புக உய்த்தேன்" என்கோ? "கோவினை (என்) உடன் கொண்டு குறுகினேன்" என்கோ? இரும்பின் நெஞ்சினேன் யாவது கூறுகேன்?' (என்ருன்.)

பொருள்: 'யான் தசரதனிடத்தில் "சீதாதேவியும் இளைய பெருமாளும் பின்தொடர்ந்து செல்ல, இராமபிரானைக் காட்டுக்குள்ளே போகவிட்டு வந்தே" னென்று சொல்லுவேனே? "அவனை என்னுடன் கூட்டிக்கொண்டு வந்தே" னென்று கூறுவேனே? யாது செப்புவேன்?' என்ருன் சுமந்திரன்.

இளவல் - தம்பி. செல்வன் - (தசரதனுக்கு) மகன். பூ இயல் - பூக்கள் பொருந்திய. உய்த்தேன் - அனுப்பினேன்; செலுத்தினேன். என்கோ - என்பேனே. கூறுகேன் - சொல்வேன். இரும்பின் நெஞ்சினேன் - இரும்பு போல (வன்மையுடைய) நெஞ்சுடையேன். '"இராமனை நாட்டுக்கு இட்டு வந்தே" னென்றது, "காட்டுக்குள் விட்டு வந்தே" னென்று எவ்வாறு கூறுவேன்?' என்பது கருத்து. (74)

சுமந்திரன், இராமனை நோக்கி, '"மென்மையான பூவின் பரப்பிலும் மிதிக்கப் பெருத மெல்லடிகளையுடைய சீதையையும் இராம லக்குமணரையும் வன்மையான பரற்கற்களை யுடைய பாரிலே நடந்து செல்ல விட்டு, நான் தேரிலே அமர்ந்து வந்தே" னென்று செப்புவேனே? அரசன் உயிர் மீளும்படி உன்னை "அழைத்து வந்தே" னென்னுமல், அவன் உயிர் மாளும்படி உன்னை "விடுத்து வந்தே" னென்பேனே?' என்றும், பின்னும் பலவாருகவும் துன்பு கூர்ந்து சொல்லி, இராம னடியில் விழுந்து, சோக மிகுதி தாங்க மாட்டாமற் புரண்டான்.

### இராமன் சுமந்திரனைத் தேற்றி யனுப்பல்

இராமன் அவனை எடுத்துத் தழுவிக் கண்ணீர் துடைத்துப் பக்கத்தில் இருத்தி, 'பூமியிலே பிறந்தோரா யுள்ளார்க்கு வரும் நன்மை தீமை யாவும் முன்னை வினைப் பயனுக முறை தவருது வருவனவா மென்பதை உணர்ந்த உள்ளத்தினுய்! நமக்கு வரற்பாலதாகிய பழி வந்தால், அது முறையாக வந்த தென்று கருதாமல், நீ துன்பம் உறலாமோ?' என்று பின்னுங் கூறுகின்ருன்.

முன்புநின் றிசைநிறீஇ முடிவு முற்றிய
பின்புநின் றுறுதியைப் பயக்கும் பேரறம்
இன்பம்வந் துறுமெனி னினிய தாயிடைத்
துன்பம்வந் துறுமெனிற் றுறக்க லாகுமோ (75)

கொண்டுகூட்டு: 'பேர் அறம், முன்பு நின்று இசை நிறுவி, முடிவு முற்றிய பின்பு (உதவியாக) நின்று, உறுதியைப் பயக்கும். இடையிலே இன்பம் வந்து உறும் எனின் (அறத்தை) இனியதாய்(க் கொண்டு), துன்பம் வந்து உறும் எனின், (அதனைத்) துறக்கல் ஆகுமோ?

பொருள்: 'தருமமானது, நல்லவை யாவற்றுக்கும் முன்பு (முதலாவதாக) நின்று, தன்னை மேற்கொண்டாரது புகழை நிலை நிற்கச் செய்து, அவர்களுடைய இறுதிக் காலம் (மரண காலம்

வந்து) முடிந்த பின்பு மறுமையிலும் உதவியாக நின்று ஆன்ம லாபத்தை அளிக்கும். (அந்தத் தருமத்தின் முடிவாக எய்தும் நற்பயன் எய்துதற்கு முன்) இடையிலே இன்பம் வருமானால் அத்தருமத்தை இனியதாகக் கொண்டு துன்பம் வருமானால் அதனைத் தள்ளிவிடலாமோ ?

இசை - கீர்த்தி. நிறுவி ( - நிறுத்தி) நிறீஇ என வந்தது. முடிவு - சாவு. உறுதி - ஆன்ம லாபம்; நல்லது—சிந்தா. பயக்கும் - கொடுக்கும். பெருமை (யுடைய) அறம் பேரற மெனலாயிற்று. 'துன்பம்' என்பதன் முன்னுள்ள 'இடை' யை 'இன்பம்' என்பதன் முன் கூட்டிப் பொருள் கொள்ளப்பட்டது. துறக்கல் - விட்டுவிடுதல். (75)

நிறப்பெரும் படைக்கல நிறத்தி னேருற
மறப்பயன் விளக்குறும் வன்மை யன்றரோ
இறப்பினுந் திருவெலா மிழப்ப வெய்தினுந்
துறப்பில ரறமெனல் சூர ராதலே (76)

கொண்டுகூட்டு: '(ஒருவர்) சூரர் ஆதல், (பகைவரது) நிறமான பெரும் படைக்கலம் (தம்) நிறத்தின் நேர் உற, மறப் பயன் விளக்குறும் வன்மை(யால்) அன்று; இறப்பினும், திரு எல்லாம் இழப்ப எய்தினும், "(இவர்) அறம் துறப்பு இலா(தவ)ர்" என(லா)ல் (என்க)' (என்றான்).

பொருள்: 'ஒருவர் சூர ரென்று சொல்லுவதற் குரிய ராதல், அவர்களை எதிர்த்தோரது பளபளப்பான பெரிய ஆயுதம் தம் நெஞ்சுக்கு நேராக வந்தபோது (அதற்கு அஞ்சிச் சிறிதும் சலியாத) தைரியத்தைத் தருகின்ற ஆற்ற லுடைமையா லன்று; (மற்றெதனா லெனில்,) இறக்கும்படி நேர்ந்தாலும், செல்வ மெல்லாம் இழக்கும்படி நேர்ந்தாலும் "இவர் தரு மத்தைக் கைவிடாதவ" ரென்று சொல்லப் பெறுதலால் என்க' என்றான் இராமன்.

முதலாவது நிறம் ஒளியையும் இரண்டாவது நிறம் நெஞ்சையும் குறித்தன. படைக்கலம் - ஆயுதம். மறம் - தீரம். பயன் - பலன். மறப் பயன் - தீரத்தினாலாம் பலன்; தைரியம். அரோ: அசை. திரு - செல்வம். துறப்பு - கைவிடல்.

யுத்தவீரரினும் தருமவீரர் சிறந்தவ ரென்பது விளங்க யுத்தவீரர் உயிரிழத்தற் கஞ்சா ரென்றும், தருமவீரர் அதுவே யன்றி எல்லாச் செல்வத்தையும் இழத்தற்கும் அஞ்சா ரென்றும் கூறினார். உயிரையே யிழக்க ஒருப்படுவார்க்கு, அவ்வுயி ரிருந்தா லன்றிப் பயன்படாத செல்வ மனைத்தையும் இழத்தற் கொருப்படல் அரிதோ வெனில், அரிதே: எதனா லரிதெனில்,—நெருப்புக்குட்பட்டவர், நித்திரை செய்தல் கூடுமாயினும்,

தரித்திரத்துக் குட்பட்டவர் தூங்குதல் சாத்திய மன்றென்ற பொருள் புலப்பட,

> நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்
> யாதொன்றும் கண்பா டரிது

என்று வள்ளுவர் கூறியவாறு, எந்நாளும் செல்வத்தை அறியாத வறியாருக்கே கொடுந் துன்பம் விளைக்கும் வறுமையை, ஒருகால் செல்வமுடையராயிருந்தார் அச் செல்வ மனைத்தையும் இழந்து அடைவாராகுல், மிகப் பெரிய கொடிய துன்பத்தை அடைவா ராதலால், அவர்கள், ஆருயிர் துறத்தல் அரும்பொருள் துறத்தல் ஆகிய இரண்டி லொன்று செய்தே தீரக் கடவதாகிய யாதாயினு மோர் ஆபத்தை அடையும்படி நேர்ந்த போது, எல்லாச் செல்வத்தையும் இழந்து உயிரோ டிருத்தலினும் இறந்து விடுதலே சிறந்த செயலென்று கொள்வதனு லென்க. எத்தனையோ செல்வர்கள் முழுச் செல்வமும் இழக்க நேர்ந்தபோது உயிர் துறந்தது பலரறிந்தது. இறத்தலினும் எல்லாச் செல்வத்தையும் ஒருங் கிழத்தல் கொடிதென்றுணர்தற்கு முதற்கண் 'இறப்பினும்' என்று பின்னர்த் 'திரு எலாம் இழப்ப எய்தினும்' என்றுர். செல்வத்தில் ஒரு பகுதியை இழந்தவர் எஞ்சிய பகுதி கொண்டு இனிது வாழ்தல் இயலு மென்பதை விலக்கத், 'திரு எலாம் இழப்ப எய்தினும்' என்றுர். அன்றி உடம்பு நிலைக்கவும் மானங்காக்கவும் இன்றியமையாத சிற்றளவு உள்ள செல்வ முடையார்க்கும் அஃதில்லார்க்கும் உள்ள வேற்றுமை உயிருள்ள உடலுக்கும் அஃதில்லாத உடலுக்கும் உள்ள வேற்றுமை போலப் பிரதானமானது. அச்சிற்றளவுச் செல்வ னொருவனுக்கும் மிக்க பெருஞ் செல்வ னொருவனுக்கும் (என்பானேன், அகண்ட பூமண்டலாதிபதி - சார்வபௌமன் - ஏகசக்ரேசுவர னென்னும்படி 'மல்லல்நெடும் புவியனைத்தும் பொது நீக்கித் தனிபுரக்கும் மன்ன' னுக்குமே) உள்ள வேற்றுமை அப்பிரதானமே யன்றி முக்கியாமிசத்தில் வேற்றுமையே யன்றென்ற மெய்ம்மை விளங்கவும் 'திருவினை இழப்ப எய்தினும்' என்னுது 'திரு எலாம் இழப்ப எய்தினும்' என்ருரென்க. இவ்வாருக, இப்பாட்டு மிக ஆழ்ந்த விழுப் பொரு ளுடைமை உள்ளூன்றி ஒர்ந்து ஊகித் துணர்ந்து உவத்தற் குரியது.

பாட பேதம்: சூரராவதே. (76)

பின்னும் இராமன் சுமந்திரனை நோக்கி, 'யான் உன் சொற்படி நகர்க்குத் திரும்புவேனுல், என்றும் அறம் திறம்பாத எங்கள் இராச வமிசம் என்னுல் தருமம் தப்பிய தென்ற பழியை அடைவே னுவேன். அறத்தைக் காக்கத் தன் அரும் புதல்வனை ஆரணியத்துக்கு அனுப்பினு னென்பது அரசனுக்கு மாண்பாம். அவன் ஆணைப்படி யான் வனம் சேர்தல் எனக்கு மேன்மையாம். நீ முதற்கண் வசிட்டனை அடைந்து, அவனுக்கு என் வந்தனம் வழங்கி, கைகேயி அன்னையால் துன்பம் விளைந்த

தென்று யான் சிறிதும் கருதிலே னென்பதையும், என்பால் வைத்த அருளைப் பரதன்பால் வைத்தலாகிய வரத்தை வேண்டினே னென்பதையும் கூறி, அவனுடன் அரசனிடம் சென்று அவன் துன்பத்தை ஆற்றி, யான் ஈரேழு வருடங் கழித்துத் திரும்பிவந்து திருவடிகளைச் சேவிப்பே னென்று செப்பி வசிட்டன் வார்த்தையால் அவன் மனம் தேறும்படி செய். பின்பு, அன்னையர் மூவர்க்கும் என்னுடைய வணக்கத்தை இயம்பு' என்ருன்.

சுமந்திரன், 'உன் ஆணைப்படி செய்தலே யான் செய்யத் தக்க செயல்' என்று இராமனுக்குக் கூறிச் சீதையை, அவள் சொல்லக் கருதுவதைத் தெரியக் கருதி, நோக்கினன். அவள், 'அரசருக்கும் அத்தையர்க்கும் என் வணக்கத்தைக் கூறி, என் தங்கையர்க்கு என் கிளிப்பிள்ளையைப் பேணும்படி சொல் வாயாக' என்ருள். இது கேட்ட சுமந்திரன், இராமனுட னிருத்தலால் யாதுந் துன்ப மறியாளாய்க் கிளிப்பிள்ளையை மறவாதவள், ஏதேனுந் தீங்கு நேர்ந்துவிட்டால், எவ்வா ருற்றுவா ளென்று வருந்தினன். இராமன் தடுத்தும் வருந்துத லொழியமாட்டாஞய் விம்மினன். பின்பு உண்மையாக அவ் வருத்தம் நீங்கிலனுயினும், நீங்கினன் போன்று, 'விடை தருக' வென்று இராமனைத் தொழுது, இலக்குமணனை நோக்கி, 'நீ கூறுவது யாது?' என்ருன். அவன், 'எம்பிரானுக்குக் கொடுத்த இராச்சியத்தை மீட்டு வேருெருத்திக்குக் கொடுத்த வேந்தன் மெய்யனே! அவனை வேந்த னெனலாமோ! தன் தலைமகன் காட்டில் இலை காய் தின்று காலந் தள்ளத் தான் நாட்டில் இராச போசனம் அருந்தி இனிது வாழ்தல் வல்லமைதா னென்று அவனுக்குக் கூறு. "இராமனை இராச்சியத்தை இழப்பித்தாரை வென்று அவனை இராசனுகச் செய்திலாமையால் அவனுடன் பிறந்திலேன். அந்த அரசை அபகரித்து ஆளுகின்ற உன் னுடனும் பிறந்திலேன். உன்னைச் சார்ந்த சத்துருக்கனுக்கும் உடன் பிறந்தே னல்லேன். ஆகவே, என்னையன்றி என்னுடன் பிறந்தார் யாரும் இல்லாத யான் சுகமாயிருக்கிறேன்" என்று பரதனுக்குச் சொல்லு' என்றபோது, இராமன், 'தகுதியில்லாத வற்றைச் சாற்ருதே' யென்று தடுக்கத் தடையுண்டு தத்த ளிக்கும் நெஞ்சினனுய்த் தாழ்ந்து நின்ருன். சுமந்திரன் தேரி லேறி, யாரு மறியா வண்ணம் தேரைச் செலுத்திக்கொண்டு அயோத்திக்குச் சென்ருன்.

### இராமன் இரவி லேகுதல்

தையறன் கற்புந்தன் றகவுந் தம்பியும்
மையறு கருணையு முணர்வும் வாய்மையும்
செய்யதன் வில்லுமே சேம மாகக்கொண்
டையனு மேகினு னல்லி னுப்பணே (77)

கொண்டுகூட்டு : தையல் தன் கற்பும், தன் தகவும், மை அறு கருணையும், உணர்வும், வாய்மையும், செய்ய தன் வில்லும், தம்பியும் சேமமாகக் கொண்டு ஐயன் அல்லின் நாப்பண் ஏகினுன்.

பொருள் : சானகியின் கற்பும், தனது சால்பு, இரக்கம், அறிவு, மெய்ம்மை ஆகியவைகளும், தன் கைவில்லும், தம்பியும் காவலாக, இராமன், நடு ராத்திரியிலே செல்வாளுயினுன்.

‘ உருவப் பொருளாகிய இளையபெருமாளும் வில்லும் தனக்குப் புறக் காவலாக நிற்றல் போல, அருவப் பொருளாகிய கற்பும் நடுநிலையும் சீவ கருணையும் மெய்யுணர்ச்சியும் சத்தியமும் அகக் காவலாக நிற்றலாற் சேமமாகக்கொண்டு என்றுர்.’ (77)

### சந்திரோதயம்

பொய்வினைக் குதவும் வாழ்க்கை யரக்கரைப் பொருந்தி யன்று
செய்வினைக் குதவு நட்பாற் செல்பவர்த் தடுத்த லேய்க்கும் [ர்
மைவிளக் கீதே யென்ன வயங்கிருள் துரக்க வானம்
கைவிளக் கெடுத்த தென்ன வந்தது கடவுட் டிங்கள் (78)

கொண்டுகூட்டு : பொய் வினைக்கு உதவும் வாழ்க்கை அரக்கரைப் பொருந்தி, அன்றுர் செய்(யும் தீ) வினைக்கு உதவும் நட்பால், (அவரை அழிக்கச்) செல்பவரைத் தடுத்தல் ஏய்க்கும், மை ‘ ஈது விளக்கே ’ என்ன, வயங்கு இருள் துரக்க, வானம் கைவிளக்கு எடுத்தது என்ன, கடவுள் திங்கள் வந்தது.

பொருள் : மெய்க்குச் சார்பான தர்ம காரியங்களுக்குப் பயன்படாமல் பொய்க்குச் சார்பான அதர்ம காரியங்களுக்குப் பயன்படுகின்ற வாழ்க்கையை யுடைய இராக்கதரைத் துணை யாகச் சேர்ந்து, அவர் செய்யும் தீய காரியங்களுக்கு உதவி செய்து வரும் உறவுடைமையினுல், அவ் இராக்கதரை அழிக்கச் செல்பவர் ஆகிய இராம லக்குமணர்களை வழி தெளிவாகத் தெரிந்து செல்லாதபடி தடைசெய்வது போன்ற இருளை ஓட்ட, வானம் (ஆகியமாது) கைவிளக் கேந்தியது போலச் சந்திரன் உதயமானது.

வினை - காரியம்—ச. அ. நட்பு - உறவு—ச. அ. மை ஈது விளக்கே என்ன வயங்கு இருள் - அஞ்சனமானது (தன்னோடு ஒப்பிட்டால்) ஈது (இந்த இருள்) விளக்கே யென்று சொல்லும்படி (மிகக் கருமையாக) விளங்குகின்ற இருள். துரக்க - அகற்ற. கடவுள் திங்கள் - தெய்வத் தன்மையுடைய சந்திரன். இந்தப் பாட்டிற் 'செல்பவர்' என்பதை இதற்கு முந்திய பாட்டிற் 'போயினன்' என்ற இராமனையும் அவனுடன் போயின இலக்குமணனையுங் குறித்ததாகவும், 'ஏய்க்கும்' என்பதை 'இருள்' என்பது கொண்டு முடிகிற பெயரெச்சமாகவுங் கொண்டு இங்கே உரை எழுதப்பட்டது. முந்திய உரைகாரர் (—சோ. சு.) 'செல்பவர்' என் பதைத் 'தீத்தொழில் செய்யச் செல்வோருக்குப் பற்றுக்கோடாகச் செல் வோர்' என்றும் 'ஏய்க்கும்' என்பதை வினைமுற்றாகவும் 'வந்தது' என்பதற்குப் பயனிலையாகவுங் கொண்டார்.

பாட பேதம் : மைவிளக் கியதே யன்ன. (78)

மருமத்துத் தன்னை யூன்று மறக்கொடும் பாவந் தீர்க்கும்
உருமொத்த சிலையி னோரை யொருப்படுத் துதவி நின்ற
கருமத்தின் விளைவை யுன்னிக் களிப்பொடு காண வந்த
தருமத்தின் வதன மென்னப் பொலிந்தது தனிவெண் டிங்கள்

கொண்டுகூட்டு : மருமத்தில் தன்னை ஊன்றும் மறக்கொடும் பாவத்தைத் தீர்க்கும் உரும் ஒத்த சிலையினோரை (வனம் போம்படி) ஒருப்படுத்து உதவி நின்ற (தனது நற்) கருமத்தின் விளைவை, உன்னிக் களிப்பொடு காண வந்த தரும (தேவதையின்) வதனம் என்னத் தனி வெண் திங்கள் பொலிந்தது.

பொருள் : பாவத்தை அறவே ஒழியச் செய்யும் வில்லாள ராகிய இராம லக்குமணரைப் பாவிகளாகிய அரக்கரை அழிக்கக் காட்டுக்கு வரும்படி அவர்கள் மனம் உடம்படச் செய்து உப கரித்துத் தனக்குத் துணையாக நின்ற தனது நல்வினைப் பயனை நினைந்து (அப்படி வந்தவர்களைக்) களிப்புடன் காணவந்த தரும தேவதையின் முகம் போலச் சந்திரன் விளங்கியது.

மருமத்து - (தரும தேவதையின்) நெஞ்சில். தன்னை ஊன்றும் - (பாவம்) தன்னைப் பதியச்செய்யும். மறம் - வன்மை. உரும் - இடி. சிலை - வில். ஒருப்படுத்து - உடம்படச் செய்து; மனம் ஒன்றுபடச் செய்து. தனி - ஒப்பில்லாத. (79)

அஞ்சனக் குன்ற மன்ன வழகனு மழகன் றன்மேல்
எஞ்சலில் பொன்போர்த் தன்ன விளவலு மிந்து வென்பான்
வெஞ்சிலைப் புருவத் தாடன் மெல்லடிக் கேற்ப வெண்ணூல்
பஞ்சிடைப் படுத்தா லென்ன வெண்ணிலாப் பரப்பப் போனார்

கொண்டுகூட்டு: வெஞ்சிலைப் புருவத்தாள் தன் மெல்லடிக்கு ஏற்ப, வெள் நூல் பஞ்சை இடைப் படுத்தால் என்ன, இந்து என்பான், வெண்ணிலா(வைத் தரையிடை)ப்பரப்ப, (அவளுடன்) அஞ்சனக் குன்றம் அன்ன அழகனும், அழகன் தன்மேல் எஞ்சலில் பொன் போர்த்து அன்ன இளவலும் போனார்.

பொருள்: சீதையின் மென்மையான பாதங்களுக்கு ஏற்ற தாகப் பஞ்சைப் பரப்பினாற் போலச் சந்திரன் நிலாவைத் தரை யிடையே பரப்ப, அவளுடன் இராமனும் இலக்குமணனும் போனார்கள்.

எஞ்சல் இல் - (மாற்றுக்) குறைதல் இல்லாத. பொன் போர்த்தன்ன- பொன் போர்த்தாற் போன்ற இளவல் - தம்பி. வெம் சிலை புருவத்தாள் - கொடிய வில்லையொத்த புருவத்தையுடைய சீதை. வெள் நூல் பஞ்சு இடை படுத்தால் என்ன - வெண்மையான நூல் (உண்டாவதற்குக் காரணப் பொருளாகிய) பஞ்சை(த் தரை) யிடையே பரப்பினாற் போல. கரிய நிற முடைய இராமனைப் பொன்னிறமுடைய இலக்குமணன் பின்தொடர்ந்து சென்றது கொண்டு 'அழகன் தன்மேல் எஞ்சலில் பொன் போர்த்தன்ன இளவலும்' என்றார். (80)

பூமேல் மிதிப்பினும் பொறுத சீதையின் மெல்லிய பாதங் கள், கடினமான கற்கள் மிகுந்த காட்டிலே, வலிய ஆண்சிங்கம் போன்ற இராமனது கடுநடையைத் தொடர்ந்து நடந்தன வென் றால், அவ்வாறு செய்ய அவளுக்கு ஆற்றலளித்த அன்பினும் அதிகமாக வலி யளிப்ப தொன்று உண்டோ! இராமன், சூரியோ தய மாகுமுன் இரண்டு யோசனைத் தூரம் சென்றான்.

### தசரதன் மரணக் காட்சி

இதற்கிடையே, இராமனிடம் விடைப்பெற்றுப் போன சுமந் திரன், ஆறு நாழிகை யளவில் அயோத்தியை அடைந்து, வசிட் டனைக் கண்டு வணங்கினான். அவன், நிகழ்ந்தன யாவற்றையுங் கேட்டு, நெடுமூச் செறிந்து, வருந்தி, 'இனித் தசரதன் இறந்தா' னென்று கூறிவிட்டுச் சுமந்திரனுடன் தசரத னிருந்த மாளிகைக் குச் சென்றான். சுமந்திரன் திரும்பி வந்தா னென்று சொல்லக் கேட்ட தசரதன், இராமனும் உடன் வந்தா னென் றெண்ணி, மயக்கந் தெளிந்து, கண்களை விழித்துப் பார்த்து, வசிட்டனைக் கண்டு, 'இராமன் வந்தானோ?' என்றான்.

**இல்லையென் றுரைக்க மாட்டா னேங்கினன் முனிவ னின்றான்**
**நல்லவன் முகமே நம்பி நடந்தன னென்னு மாற்றம்**
**சொல்லலு மரசன் சோர்ந்தான் றுயருறு முனிவ னுனிவ்**
**வல்லல்காண் கில்லே னென்னு வாங்குநின் றகலப் போனான்**

கொண்டுகூட்டு : 'இல்லை' என்று உரைக்க மாட்டானாய் ஏங்கின னாகி முனிவன் நின்றான். நல்லவன் முகம், 'நம்பி நடந்தனன்' என்னும் மாற்றம் சொல்லலும், அரசன் சோர்ந்தான். (அதனால்) துயர்உறு முனிவன், 'நான் இவ் வல்லல் காண்கில்லேன்' என்று ஆங்கு நின்று அகலப்போனான்.

பொருள் : இல்லை யென்று சொல்லமாட்டானாய்க் கவலைப் பட்டவனாகி, வசிட்டன், மறுமொழி கூறாமல் வாளா நின்றான். அவன் வாய்திறவாதிருந்தும் அவன் முகம், 'இராமன் வர வில்லை, போய்விட்டா' னென்ற மறுமாற்றத்தைச் சொல்லினது போலக் காட்டினவுடனே, தசரதன் மீண்டும் சோர்ந்து மூர்ச்சை அடைந்தான். அதனால் துன்பம் மிகுந்த வசிட்டன், 'நான் இந்த அல்லற்பாட்டைக் காணச் சகிக்க மாட்டேன்' என்று சொல்லி, அவ்விடத்தினின்று தூரமாகப் போனான்.

உரைக்கல் ஆற்றான்-சொல்லுதற்கு வலிமையில்லான் (ஆய்). ஏங்கல்-கவலைப்படல்—ச. அ. நம்பி - ஆடவரிற் சிறந்தோன் - புருடோத்தமன் : இராமனைச் சுட்டியது. நடத்தல் - செல்லல்—ச. அ. மாற்றம் - சொல். துயர் உறும் - துன்பம் மிகும். காண்கிலேன் - காணமாட்டேன்.

ஓர் உரையாசிரியர் (—திரு. ச.) 'நல்லவன்' என்பதற்குத் தேர்ப் பாகனை சுமந்திர னென்று பொருள் கொண்டார். அப்பொருள் கொள்ளு தற்கு, முனிவன் மறுமொழி கூறமாட்டாமல் வாளாநிற்க, அரசன், நிகழ்ந்த உண்மையைச் சுமந்திரனாற் றெரியக் கருதி, அவனை நோக்க, அந்த 'நல்லவன் முகமே நம்பி நடந்தன னென்னும் மாற்றம்—சொல்ல லும், அரசன் சோர்ந்தான்' எனக் கொள்ளுதல் பொருந்தும். மேற்கூறிய பொருள் கொள்ளுதற்கு, மேலும் பொருத்தமாக, இதற் கடுத்த பாட்டில் 'நாயகன் பின்னுந் தன்தேர்ப் பாகனை நோக்கி' என வருவதுளது.

பாட பேதம் : நடந்திலன் : ஆண்டுநின்று. (81)

**நாயகன் பின்னுந் தன்றேர்ப் பாகனை நோக்கி நம்பி**
**சேயனோ வணிய னோவென் றுரைத்தலுந் தேர்வ லானும்**
**வேயுயர் கானந் தானுந் தம்பியு மிதிலைப் பொன்னும்**
**போயின னென்று னென்ற போழ்தத்தே யாவி போனான் (82)**

கொண்டுகூட்டு : நாயகன் பின்னும் தன் தேர்ப் பாகனை நோக்கி, 'நம்பி சேயனோ? அணியனோ? என்று உரைத்தலும், தேர்வலான்,

'தானும் தம்பியும் மிதிலைப் பொன்னும் வேய் உயர் கானம் போயினன்' என்றான், என்ற போழ்தே ஆவி போனான்.

பொருள் : சோர்ந்த அரசன் தன் மகன் நிலைமையை அறியும் ஆவலால் திரும்பவும் மயக்கம் தெளிந்து, தன் தேர்ப்பாகனாகிய சுமந்திரனை நோக்கி(த் தன் மகன் சிறிது தூரமே சென்றிருந்தால், திரும்பி வரலாமே யென்னும் ஆசை உண்டாக, அதனைப் பூர்த்தி செய்யக் கருதி,) 'இராமன் தூரத்தில் உள்ளானோ? சமீபத்தில் உள்ளானோ?' என்று கேட்க, தேர்ப்பாகன், 'இராமனும் இலக்குமணனும் சீதையும் வனம் சென்றார்கள்' என்றான். என்ற போதே (இனி, ஆசை அறவே யொழிந்ததென் றெண்ணி) அரசன் உயிர்விட்டான்.

சேய்மை - தூரம். அணிமை - சமீபம். வேய் உயர் கானம் - மூங்கில் ஓங்கிய காடு. பொன் - இலக்குமி; சீதையை உணர்த்தியது. அரசன் ஆசை அறவே அறுமளவும் ஆவியை அகலாது, தடுத்து நிறுத்தி வைத்திருந்தா னாதலால், 'ஆவி போனான்' என்பதில் உள்ள 'போனான்' என்னும் தன்வினை 'போக்கினான்' என்னும் பிறவினைப் பொருள் தந்து நின்றது. கம்பராமாயணத்தில் தன்வினை சில இடங்களிற் பிறவினைகளாகப் பிரயோகிக்கப்பட்டிருத்தல் இதற்கு முன் காட்டப்பட்டிருக்கிறது. 'தானும் தேரும் பாகனும் வந்தென் நலன் உண்டான்' என்பதிற் போலத் 'தானும் தம்பியும் மிதிலைப்பொன்னும் போயினன்' என்பதிற் பல எழுவாய்கள், அவற்றுள்ளே தலைமையான ஓர் ஒருமை எழுவாயின் பயனிலை கொண்டு முடித்திருத்தல் கவனிக்கத் தக்கது.

சகிக்க முடியாத தசரதன் துன்பம், கைகேயி சூழ்வினைப் படலத்தில் 'நாகமெனுங்கொடியாள்' என்ற 11-ம் பாட்டில் தொடங்கப்பட்டு, இராமன் வனம் போந் துன்பத்தோடு விரவி மூன்று குறைந்த நானூறு பாட்டுக்களால் வருணிக்கப்பட்டு, இப்பாட்டில் அவன் மரணத்தோடு முடிக்கப்படுகின்றது. அந்த மரணம், இதனினும் மிகுந்த துன்ப மில்லை யென்னுந் துன்பத்தை வாசகர்கள் மனத்தே உண்டாக்கிய 'போழ்தே' அவர்கள் 'ஆ! நாம் "இவ் அல்லல் காண்கில்லே" மென்னும்படியான தசரதனது ஆற்றொணாத் துன்பம், அவன் உயிரோடு முடிவடைந்தது!; அவன் இனித் துன்புறுதல் இல்லை' யென்றெண்ணி ஒருவாறான அமைதியை அடையச் செய்கின்றது. ஏனையோர் துன்பம் இன்னும் 26 பாட்டுக்களால் இப்படலத்தின் இறுதி யளவும் வருணிக்கப்பட்டிருக்கின்றது.

வான்மீகத்தில் சுமந்திரன் வனத்திலிருந்து திரும்பிவந்து தசரதனைக் காண்பதிலிருந்து தசரதன் மரணமடைவதற் கிடையே சோகமயமான பல நிகழ்ச்சிகள் கூறப்பட்டிருக்கின்றன. சலபோசன முனிவன் சாப வரலாறு கூட அப்பொழுது கூறப்பட்டிருக்கிறது. கம்பர், கூறவேண்டிய நிகழ்ச்சிகளை யெல்லாம் முன்னரே கூறி, இராமனை வனத்திற் செலுத்தி

விட்டுத் திரும்பிய சுமந்திரனைக் கண்டபின் தசரதன் அதிக நேரம் வாழ்ந்திராமல், 'கானம்—போயினன்' என்று கூறக் கேட்ட கணத்திலேயே 'ஆவி போனா' னென்று முடித்திருக்கும் நாடகத்திறன் வியந்து போற்றற்குரியது. தசரதன் சோக வருணனையில் 'என்ற போழ்தத்தே ஆவி போனான்' என்றது சிகரமாய்த் திகழ்கின்றது. இன்னும், தசரதன் ஆவி பிரிந்ததை அடுத்த பாட்டிற்குக்கூடக் கொண்டுசெல்லாமல், சுமந்திரன் 'போயினன்' என்று கூறும் அதே பாட்டில் அதே அடியில் வைத்து முடித்திருப்பதும் ஊன்றி உணரத் தக்கது. '(இராமன்) போயினன்' என்று தொடங்கும் அந்த அடி '(தசரதன்) போனான்' என்பதுடன் முடிகின்றது கவனிக்கத் தக்கது.

துன்பத்தை, மேற்கொண்டு வருணித்தால், வாசகர் மனம் தாங்க மாட்டா தென்ற வரையறை வந்தவுடனே, கவி, வேண்டுமென்றே, அதனை வருணியாமல் நிறுத்திக்கொள்கின்றார். 'வேண்டுமென்றே' யென்ற தெதனா லெனின், தசரத னிறந்தபின், வசிட்டனால் அயோத்திக்கு வரும்படி தூதனுப்பப்பட்ட பரதன் வருதலும் துன்புறுதலும் ஈமக்கட னியற்றலுமாகிய துன்பச் செய்திகள் இயல்பாகத் தொடர்ந்து கூறற்குரியனவாயிருக்க, அவைகளை அவ்வாறு கூறாமல் இடை நிறுத்தியிருக்கிறா ராதலா லென்க.

சோக வருணனையை நெடிது துய்த்துச் சோர்வடைந் துள்ளார்க்குச் சோர்வு தவிர்ந்து கிளர்ச்சியுண்டாகும் வண்ணம் அடுத்த மூன்று படலங்களிற் களிப்பு விளைக்கும் காட்சிகளையும் நிகழ்ச்சிகளையும் இனிது வருணித்துச் சொல்கின்றார். சோக நிகழ்ச்சிகளுக் கிடையே களிப்பு நிகழ்ச்சிகளைக் கூறும் இம்முறை, ஆங்கில மகாகவியாகிய ஷேக்ஸ்பியரது நாடகங்கள் முதலிய சிறந்த கிரந்தங்களில் அவல நிகழ்ச்சிகளுக் கிடையே ஆசிய நிகழ்ச்சிகள் வருதலை நினைவுகூரச் செய்கின்றது.

கம்பர், மேலே குறித்த மூன்று படலங்களில் தாம் கிளர்வித்த மனக் கிளர்ச்சியால் வாசகர் மனம் அவலச்சுவையை மீட்டும் அநுபவித்தற் கேற்ற அளவு ஆற்றலடைதலும், அப் படலங்களுக் கடுத்த பள்ளியடைப் படலத்தில், முன் இடை நிறுத்திய வரலாறாகிய பரதன் வந்து துன்புறலும் ஈமக் கட னியற்றலுமாகிய துக்கச் செய்திகளை யெடுத்துத் தொடுத்து விரித்து முடித்துவிடுகின்றான்.

பாட பேதம்: 'தேர்வலானும்' என்ற விடத்தில் 'அனையான் செய்ய'. (82)

தசரதனுக்குச் சுவாசம் ஓடாமையைக் கண்டு, மூக்கில் விரல் வைத்துப் பார்த்துச் சுவாசித்தல் நின்றுவிட்டது தெரிந்து, நாடித் துடிப்புள்ளதோ வென்று பார்த்து, அதுவும் அடங்கினதை அறிந்து, உயிர் போய்விட்ட துணர்ந்த கோசலாதேவி, வேனிற் காலத்து வெயிலி லகப்பட்ட மென்புழுப் போலத்

துன்புறத் துடித்து, விண்ணமிழ்தத்தை யிழந்த விண்ணவர் போல விம்மி, நன்மணி யிழந்த நாகம் போல நைந்து, ஆண் துணையைப் பிரிந்த அன்றிற் பேடை போல அலறி அழுவா ளானாள்.

### கோசலை புலம்பல்

தானே தானே தஞ்சமி லாதான் றகவில்லான்
போனான் போனா னெங்களை நீத்திப் பொழுதென்னா
வானீர் சுண்டி மண்ணற வற்றி மறுகுற்ற
மீனே யென்ன மெய்தடு மாறி விழுகின்றாள் (83)

கொண்டுகூட்டு: '(ஒரு) தஞ்சமும் (- தாழ்வும்) இல்லாதான் (ஆன தசரதன்,) தகவு (- கிருபை) இல்லான் (ஆகி), எங்களை நீத்துத் தான்தானே (- தானாகவே) இப்பொழுது (செத்துப்) போனான்! (அந்தோ) போனான்!' என்னா (கோசலை), வான் நீர் சுண்டி, மண் அறவற்றி, (அதனால்) மறுகுற்ற மீன் என்ன, மெய் தடுமாறி விழுகின்றாள்.

பொருள்: 'எல்லாச் செல்வமும் படைத்து ஒரு தாழ்வும் இல்லாதவனான தசரதன், தன்னையே பற்றுக்கோடாக வுடைய எங்கள்பால் கிருபை யில்லாதவனாகி, எங்களைக் கைவிட்டு (நோய் முதலிய சாவுக்கு ஏது யாதுமின்றித்) தான் தானே (தன் சாவுக்குத் தானே காரணனாய், உயிரை விட்டு) இப்போது செத்துப் போய் விட்டான்! அந்தோ! செத்துப் போய் விட்டான்!' என்று அலறி அழுவாளாகிக் கோசலையானவள், நீர் நிலைகளில் சுத்தமான மேல் நீர் வற்றிக் கீழேயுள்ள அசுத்தமான சேற்று மண்ணின் நீரும் முழுதும் வற்றி யதனால் வருந்தி மறுகலுற்ற மீன் போல மெய் தள்ளாடி (வேந்தன் மேனியின் மேல்) விழுந்தாள்.

தஞ்சம் - தாழ்வு—சூடா. நிக. தகவு - கிருபை—ஷை. நீத்தல் - துறத்தல் - நீக்கல். வால் - சுத்தம். [ 'வால் (- தூய) வெண் சுண்ணம்' —மணிமேகலை.]

தசரதன் தானாகவே உயிர்விட்டா னன்றி, நோய் முதலிய எக் காரணத்தாலும் இறந்தில னென்பாள், 'தானே தானே போனா' னென்றாள். அவன் இறந்த துக்கத்தையும் இனி மீளா னென்ற ஏக்கத்தையும் உணர்த்தப் 'போனான் போனா' னென்று அடுக்கிக் கூறி அழுதாள்.

கம்பர் அவ்வவ் வமயங்களில் தாம் கூற எடுத்துக்கொண்ட விடயங்களுக் கேற்ற சந்தமுடைய பாவினத்தைக் கையாளும் சாதுரியம் கம்பராமாயணத்தில் எங்கும் காணலாம். ஒரு சில உதாரணங்களாகக்

கைகேயி சூழ்வினைப் படலத்தில் 'சேணுலாவிய' என்பது முதலிய கவிகளையும், கிளை கண்டு நீங்கு படலத்தில் 'நந்தா விளக்கனைய' முதலியவைகளையும், சூளாமணிப் படலத்தில் 'வீவாய் நீயிவண்' ஆதியவற்றையுங் காண்க. இங்கே 'தானே தானே' என்ற கலித்துறையும் அதனை அடுத்து வருவனவும் இறந்தார்க் கிரங்கி ஏங்கிப் புலம்பலுக்குப் பொருத்தமா யிருத்தல் கவனிக்கத் தக்கது. குளங்கள் கால்வாய்கள் முதலிய நீர்த் துறைகளில் நீர் வற்றியபின் மீன்கள் சேற்றுட் புதைந்து கிடந்து சேற்றின் ஈரமே தாரகமாக உயிர் நீங்காதிருப்பதைக் கண்டுள்ளோர், 'நீர் சுண்டி மண் அறவற்றி மறுகுற்ற மீன்' என்றது இயற்கை நிகழ்ச்சியை நுணுகி நோக்கி நுவன்ற தென்பதை அறிவர். (83)

பாட பேதம்: தகைவில்லான்.

ஒன்ருே நன்ஞட் டுய்க்குவ ரிந்நாட் டுயிர்காப்பா
ரன்றே மக்கட் பெற்றுயிர் வாழ்வார்க் கவமுண்டே
இன்றே வந்தீண் டஞ்ச லெனுதெம் மகனென்பான்
கொன்ருனந்தோ தந்தையை யென்ருள் குலேகின்ருள் (84)

கொண்டுகூட்டு: (கோசலை,) 'ஒன்ருே? நல்நாட்டு உய்க்குவர்; இந் நாட்டில் உயிர் காப்பார்; மக்களைப் பெற்று உயிர் வாழ்வார்க்கு அவம் உண்டே? எம் மகன் என்பான் ஈண்டு இன்றே வந்து (தந்தையை) "அஞ்சல்" எனுது கொன்ருன் அந்தோ!' என்ருள்; குலைகின்ருள்.

பொருள்: '(புத்திரரைப் பெற்ருேர் அடையும் பயன்) ஒன்ருே? (ஒன்றன்று, பல. புத்திரர், தம்மைப் பெற்ருேரைப் 'புத்' என்னும் நரகத்திற் சேர்வதினின்றும் நீக்கிச்) சுவர்க்கத்திற் சேர்ப்பார்கள். அம்மட்டோ, இவ் வுலகத்தில் பெற்ருேர் இருக்கு மளவும் அவர்கள் உயிரைப் பேணிக் காப்பாற்றுவார்கள். ஆதலால் புத்திரரைப் பெற்று வாழ்வார்க்கு இம்மை மறுமை யிரண்டில் எதிலும் கெடுதி யில்லை. (இப் பெற்றிமற்றைப் பெற்ருேரெல்லார்க்கும் உளதாக, எங்கள் மட்டில் இலதாயிற்று. உண்மையில் எங்கள் மகனு யில்லாமல், பெயர் மட்டில்) எங்கள் மகனென்று சொல்லப்படுவானுன இராமன் இங்கே யிப்பொழுதே வந்து தந்தையைப் "பயப்படாதே!" யென்று உயிர் விடாதிருக்கச் செய்யும்படி கூருமற் கொன்ருன் அந்தோ!' என்ருள்; (அறிவு) குலைந்தாள் கோசலை.

ஒன்ருே, ஓர் எண்ணிடைச்சொல். 'பொய்படும் ஒன்ருே' என்ற குறள் உரை பார்க்க. உய்க்குவர் - செலுத்துவர். நன்ஞடு - சுவர்க்கத்தைக் குறித்தது. அன்றே: அசை; தேற்றமாகவும் கொள்ளலாம். அவம் - கேடு. உண்டே: இல்லை; ஏகாரம் எதிர்மறை. இன்று - இப்போது.

ஈண்டு - இங்கு. நன்மையும் தீமையும் உள்ள மண்ணுலகம்போ லன்றி, விண்ணுலகம் நன்மை மட்டும் உளதாதல் பற்றி அதனை நன்னுடென்றுர் போலும். இங்கே நன்மை தீமை முறையே சுக துக்கங்களைக் குறித்தன வாகக் கொள்ளல் வேண்டும். இவ் வுலகை நோக்க, அவ்வுலகம் நல்ல தென்று அதனை 'நன்னுடு' என்ருரெனலுமாம். 'தன்னெடு சுமித்திரை முதலாயினேரையும் உளப்படுத்திப் பன்மை தோன்ற "எம் மகன்" என்றமையால் இது மரபுவழாநிலை'.

பாட பேதம் : கொன்று னன்றே. (84)

நோயும் மின்றி நோன்கதிர் வாள்வே லிவையின்றி
மாயுஞ் செய்கை மக்களி ஞகி மறமன்னன்
காயும் புள்ளிக் கற்கட நாகங் கனிவாழை
வேயும் போன்று னென்று மயங்கி விழுகின்ருள் (85)

கொண்டுகூட்டு : 'வறமன்னன் மாயும் செய்கை, நோயால் இன்றி, (பகைவர் வீசிய) நோன்கதிர் வாள் வேல் இவை(களால்) இன்றி, மக்களினலாகி, காயும் புள்ளிக் கற்கட(க)ம், நாகம், கனிவாழை, வேய் போன்ருன்' என்று மயங்கி விழுகின்ருள்.

பொருள் : 'தசரதன், சாகும் செயல், நோயால் இல்லாமல், பகைவர் வீசிய வாள் வேல்களா லில்லாமல், மக்களினலே ஆகி, தத்தம் சந்ததி காரணமாக இறக்கும் நண்டு, நாகம், வாழை, மூங்கில்களை ஒத்தான்' என்று புலம்பி மயங்கி விழுந் தாள் கோசலை.

நோன் கதிர் வாள் - வலிமையும் ஒளியும் உடைய வாள். மறம் - வீரம். காயும் புள்ளிக் கற்கட(க)ம் - பிரகாசிக்கின்ற புள்ளிகளை யுடைய நண்டு. கற்கடகமும் எனற்பாலது செய்யுள்விகாரமாய்க் கற்கடமெனக் ககரமும் எண்ணும்மையும் தொக்கது. நாகம் வாழை யிரண்டிலும் எண் ணும்மை தொக்கது. வேய் - மூங்கில். புள்ளிக்கு நண்டென்பதும் பொருள்; அப்பொருள் கொண்டால், 'புள்ளிக்கற்கடகம்' ஒருபொருட் பன்மொழியாம்.

மேலே தசரதன் இறந்ததற்குக் காரணம் மகன் என ஒருமையாக உரைத்தவள், இங்கே 'மாயுஞ்செய்கை மக்களின் ஆகி' என்று பன்மை யாகப் பகர்ந்தது, கைகேயி பரதன் நாடாளுதற் கிடையூருக இராமன் நாட்டில் இராமற் காட்டிற் செல்லும்படி செய்தமையால், இரண்டு மக் களும் அரசன் மரணத்துக்கு ஏதுவா யிருந்தா ரென்பது கருதி யென்க. வாழையும்* மூங்கிலும் காய்த்தல் காரணமாக இறத்தலைக் கண்டவர் பலர் உளர்; ஆயினும் நண்டும் நாகமும் குஞ்சு அல்லது முட்டைகளை

* மெல்லிய வாழைக்குத் தானீன்ற காய் கூற்றம்'—நான்மணிக்கடிகை.

ஈனுதலால் இறத்தலைக் கண்டவரெவரு மிலர்: ஆதலால், மாண்ட தசரதனுக்கு, வாழையும் மூங்கிலும் பிரத்தியட்ச உவமானமாகவும், நண்டும் நாகமும் ஐதிக உவமானமாகவும் கொள்ளல் தகுதி. தாந்தாம் பெற்ற சந்ததி காரணமாகச் சாகும் தாவரங்களான வாழை மூங்கில் போலப் பிராணிகளான நண்டும் நாகமுமில்லை யாயினும், அப்படிப்பட்ட வேறு பிராணிக ளில்லாம லில்லை. இதற்கோ ருதாரணமாக, முட்டையாகப் பிறந்து, புழுவாக மாறித் தன்னுடம்பில் உற்பத்தியாம் ஒருவகைச் சத்தினுல் தான் தன்னுடம்பைச் சுற்றித் தெற்றிய முட்டை வடிவமான பட்டு நூற்கூட்டுக்குள் உறைந்து, இறுதியாக இறகுடைப் பூச்சியாய், அக்கூட்டினின்று வெளிப்பட்டுப் பறக்கும் பட்டுப் பூச்சியைக் கூறலாம். இப்பூச்சிகளுள் ஆண் பெண்ணைப் புணர்ந்தவுடன், மத்திரிதேவியை மேவிய பாண்டு போல, மாண்டு போகின்றது. பெண்ணும் முட்டையிடு மட்டுமே உயிரோ டிருக்கின்றது. இந்த இயற்கை நிகழ்ச்சிகள், ஒவ்வோ ருயிரும் அதது பயன்படல் முடியுமளவும் உயிர்வாழ்ந்து, இனிப் பயன்படுதல் இல்லை யென்னும் எல்லையை எய்தியவுடன் இறக்கக் கடவ தென்பது தமது கருத்தெனக் கடவுள் கற்பிக்கக் கருதிக் காட்டும் காட்டுக்கள் போலும். (காட்டு - திருட்டாந்தம்).

**பாட பேதம் :** மாயுஞ் செல்வ மக்களி ஞலோ. (85)

## மற்றைத் தேவியர் துயரம்

*மேகத்தினிடத்தே மின்னல் துடித்தல்போலத் தசரதன் மார்பினிடத்தே துடிக்கின்ற கோசலை, 'அட கைகேயீ! உன் மதி வன்மையால் மன்னை வசப்படுத்திக் கொண்டாய்! வரங்கள் கருவியாக உன் கருத்தை முடித்துவிட்டாய்! ஐயா! அரசே! வானுட்டைக் கவர்ந்த சம்பராசுரனைக் கொன்று அந்நாட்டை அந்நாள் அமரருக்கு அளித்தாய்! இந்நாள் அன்னுர்க்கு இனிய விருந்தானுய்! உன் அரசச் செல்வத்தினும் அதிகமான செல்வம் யாதுளதென்று அங்கே சென்றுய்'? என்று இவ்வாறு புலம்பியழச் சுமித்திரையும் அழு தரற்றி வருந்த, அரசமாளிகை ஊழி வந்துற்றது போல மிக உலைந்து நிலைகுலைந்த சமயத்திலே, மற்றைத் தேவிமாரும் வந்து மறுகி அலறி அழுதார்கள். ஆயினும், அவர்கள், பிரதானமான தேவியர் மூவர்கள் போலன்றிப் பிள்ளை யில்லாராதலால், தம் ஒரே பற்றுயிருந்த மன்னன் இறந்தபின் மண்ணுலகில் வாழ்தலை வெறுத்து, அவனுடன் விண்ணுலகில் வாழத் துணிந்த ஏதுவால், மிக்க துக்கம் உற்றிலர்.*

*மனித சரீரம், அதனைப் பெற்றுன் அதனைக் கருவியாகக் கொண்டு செய்தற் குரிய கடமைகளைச் செய்து, பிறவியை நீக்கி,*

முத்தியை அடைவதற்கு, ஈசுவரன் அளித்ததன்றே; மனித சரீரங்களுள் உத்தமமாகப் பயன் படுத்தப்பட்ட தசரதனது சரீரம், அவன் பிறவிப் பெருங்கடல் கடந்து முத்திக் கரையேறச் செய்த மரக்கலமாக, அதனை அவன் பின்செல்லத் துணிந்த தேவியர், தாமும் பிறவிக் கடல் கடந்து முத்திக் கரையேறு தற்குச் சாதனமாகப் பற்றி, விட்டிடாதிருந்தார்.

### வசிட்டன் மனங் கலங்குதல்

தசரதன் இறந்தா னென்று சுமந்திரன் சொல்லக் கேட்டு வந்த வசிட்டன், விதியின் செயலை நினைந்து, நடுக் கடலில் மரக் கலம் உடையக் கண்டு யாது செய்வதென்று தெரியா தயரும் மீகாமனைப் போல மனங் கலங்கி வருந்தினன்.*

### தசரதன் சரீரம் தயிலத்தி லிடப்படல்

**செய்யக் கடவ செயற்குரிய சிறுவ ரீண்டை யாரல்லர்**
**எய்தக் கடவ பொருளெய்தா திகவா வென்ன வியல்பென்ன**
**மையற் கொடியாண் மகனீண்டு வந்தான் முடித்து மற்றென் [னத்**
**தையற் கடலிற் கிடந்தவனைத் தயிலக் கடலின் றலையுய்த்தான்**

கொண்டுகூட்டு: (வசிட்டன்.) ‘செய்யக் கடவ செயற்கு உரிய சிறுவர் ஈண்டையார் அல்லர்; எய்தக் கடவ பொருள் எய்தாது இகவா, (விதியின் தன்மை) என்ன இயல்பு’ என்ன, மையற் கொடியாள் மகன் ஈண்டு வந்தால், (ஈமக்கடன்களை) முடித்தும்’ என்னத் தையல் கடலிற் கிடந்தவனைத் தயிலக் கடலின். தலை உய்த்தான்.

பொருள்: ‘இறந்த தசரதனுக்குச் செய்யக் கடவனவான ஈமக்கடன்களைச் செய்தற்குரிய பிள்ளைகள் இவ்விடத்தில் உள்ளா ரல்லர்; (மக்கள் பக்கத்தில் இருக்கும்போ தாயினும் அகன்று சென்ற அவர்கள் திரும்பி வந்தபோ தாயினும் நிகழாததாய் அவர்கள் இல்லாத இப்போது நிகழ்ந்துவிட்டதான இந்தத் தசரத மரணம் போல, விரும்பத்தகாதவை யாயினும்) சம்ப வித்தே தீரவேண்டியனவாகிய காரியங்கள் சம்பவியாம லொழியா; (விதியினது இத்தகைய தன்மை) என்ன தன்மை’ யென்றும், (தீயதை நல்லதென்று மயங்கும்) மயக்கத்தை யுடைய கொடிய கைகேயியின் மகன் பரதன் இங்கே வந்தால், (அப்போது மேற்கூறிய அந்திய கிரியைகளை அவனைக்கொண்டு

* இக்கருத்தை யுள்ளடக்கிய பாட்டை 86-ம் பாட்டின் குறிப்பிற் காண்க.

செய்வித்து) முடிப்போ' மென்றும் (சுமந்திரன் முதலியோர்க்குச்) சொல்லிப் பெண்ணின் வெள்ளத்திடைக் கிடந்த தசரதனை எடுத்து எண்ணெய் வெள்ளத்திடையிட்டான் வசிட்டன்.

செய்யக்கடவ - செய்து தீரவேண்டியவை. ஈண்டையார் - இவ்விடத்தினர். எய்தல் - சம்பவித்தல்—ச. அ. பொருள் - காரியம்—ச. அ. ('எண்ணிய பொருளெலா மினிது முற்றுக' எனப் பரசுராமப் படலம் 40-ம் பாட்டில் கருதலுங் காண்க). இயல்பு - தன்மை. முடித்தும் - முடிப்போம். தலை - இடம். உய்த்தான் - சேர்த்தான்.

இப்பாட்டின் இறுதி யடியிற் பெண்கள் மிகுதியையும் எண்ணெய் மிகுதியையும் கடல் என்ற சொல்லால் உணர்த்தித் தசரதனை ஒரு கடலினின்றெடுத்து மற்றொரு கடலி லிட்டதாக நயம்பட உரைத்த கவி சாதுரியம், கண்டு களிக்கத்தக்கது. இப் பாட்டுக்கு முந்திய பாட்டாக, யான் பார்த்த அச்சிட்ட பிரதிகளில் இல்லாத, ஒரு பாட்டுத், திருவாளர் கவிராச ஈசுரமூர்த்தியா பிள்ளையவர்கள் ஏட்டுப் பிரதியிலிருக்கின்றது. அதன் கருத்து மேலே கதைத் தொடர்ச்சிப் பகுதியில் எடுத்தாளப்பட்டிருக்கின்றது. அப்பாட்டு வருமாறு:—

வந்த முனியவ் வரங்கொடுத்து மகனை நீத்த வன்கண்மை
யெந்தை தீர்த்தா னெனவுள்ளத் தெண்ணி யெண்ணி யிரங்குவான்
உந்து கடலிற் பெருங்கலமொன் றுடையா நிற்கத் தனிநாய்கன்
நைந்து நீங்கச் செயலோரா மீகா மனைப்போ னைவுற்றான்

பாட பேதம்: கடனின் றெடுத்தவனை (86)

## சூரியோதய வருணனை

மீனீர் வேலை முரசியம்ப
விண்ணோ ரேத்த மண்ணி றைஞ்சத்
தூநீ ரொளிவாள் புடையிலங்கச்
சுடர்த்தே ரேறித் தோன்றினான்
வானே புக்கா னரும்புதல்வன்
மக்க ளகன்றார் வருமளவும்
யானே காப்ப னிவ்வுலகை
யென்பான் போல வெறிகதிரோன் (87)

கொண்டுகூட்டு: '(என்) அரும் புதல்வன் வான் புக்கான்; (அவன்) மக்கள் அகன்றார்; (அவர்கள்) வரும் அளவும் யானே இ(ந்த) உலகைக் காப்பன்' என்பான் போல, எறி கதிரோன், மீன் நீர் வேலை முரசு இயம்ப, விண்ணோர் ஏத்த, மண்(ணவர்) இறைஞ்சத், தூ நீர்(மை) ஒளிவாள் புடை இலங்கச், சுடர்த் தேர் ஏறித் தோன்றினான்.

பொருள்: 'என் அருமந்த மைந்தன், தசரதன், இறந்

தான் ; என் மரபில் உதித்த இராமன் முதலிய அவன் மக்கள் (காட்டிற்கும் வேற்று நாட்டிற்குமாகத்) தூரமாகச் சென்றிருக்கின்றார்கள் ; (இச்சமயத்தில் இராச்சியத்தைக் காத்தற்குரியார் என்னை யன்றி யாருமில்லை ; ஆதலால்,) அந்த மக்கள் வந்து சேரும் வரை யானே இவ்வுலகத்தைக் காப்பேன்' என்று கூறி (அயோத்தியை நோக்கிப் புறப்படலா)ன்ன் போலச் சூரியன், கடல் முரசு முழங்க, விண்ணவர் துதிக்க, மண்ணவர் வணங்கத் தன் ஒளி வாள் பக்கத்திலே விளங்கத் தேர் மீது ஏறித் தோன்றினான்.

மீன் நீர் வேலை முரசு - மீன்களையும் நீரையும் உடைய கடலாகிய பேரிகை. இயம்ப - ஒலிக்க. மண், மண்ணிலுள்ளார்க்கு ஆகுபெயர். ஏத்த - துதிக்க. இறைஞ்ச - வணங்க. தூநீர் ஒளிவாள் - பரிசுத்தத் தன்மையுடைய கிரணமாகிய வாள். புடை - பக்கம்; அருகு. சுடர் - ஒளி. அரும்புதல்வன் - அருமையான மகன் - தசரதன். தசரதன் சூரிய வமிசத்தினனாதலின், அவனைச் சூரியன் தன் மகனென்றாகக் கூறினார். எறிதல் - (ஒளி) வீசுதல். திரை எறிகடலை 'எறிகடல்' என்றாற் போல, ஒளி எறிகதிரோனை 'எறிகதிரோன்' என்றார்.

அரசர், வாள் புடை விளங்க, முரசு முழங்கச் சனங்கள் துதித்து வணங்க, ரதாரூடராய் உலா வரல் போல, 'யானே காப்பன் இவ்வுலகை யென்பான் போல'த் தேரில் எழுந்து வான வீதியில் உலா வரலுற்ற உதய சூரியனுக்கு, வாள் (- ஒளி) புடை விளங்கலையும் கடல் முழங்கலையும் சந்தியாவந்தனஞ் செய்வார் தோத்திரித்து நமக்கரித்தலையும் அரசச் சின்னங்களாகக் கூறினார். இப்பாட்டு, அதி கம்பீரமும் மிக்க இனிமையும் ஒருங்குடைய பாட்டுக்களு ளொன்றென்று கவிச்சுவை யுணரவல்லார் கண்டு களித்துச் சுவைத்துச் சுகிப்ப ரென்பதில் ஐயமில்லை. 'உலகம் உவப்ப வலன் ஏர்புதிரிதரு பலர்புகழ் ஞாயிறு கடற் கண்டாங்கு' என்ற திருமுருகாற்றுப்படை அடிகளை இவ்வுதய வருணனை ஒத்திருத்தல் காண்க. (87)

### வனஞ்சென்ற சனங்கள் திரும்பிவரல்

இராமனுடன் வனஞ் சென்றிருந்த சனங்கள், அவனுக்குற்றதை உன்னி, மெத்தவும் விம்மி, நைந்து நொந்து, அவன் ஞாபகமே யாகித் தம்மை மறந்து உறங்கி, அவன் பிரிந்து சென்றதைத் தெரிந்திடாராய்க் கிடந்தார்கள். விடிந்தவுடன் எழுந்து, அவன் இருந்த இட மடைந்து, அவனைக் காணமல் திடுக்கிட்டுத் தியங்கித் தேம்பி, 'அந்தோ! துன்பத்தால் நெடு நேரம் மூடாதிருந்த கண்கள் மூடி நம்மைக் கெடுத்தன!' வென்று விம்மி, அழுது விழுந்தார்கள்; புரண்டார்கள்; எழுந்தார்கள் ; மீண்டும் விழுந்தார்கள் ; திரும்ப எழுந்து திக்கெல்

லாம் ஓடினார்கள் ; தேடினார்கள் ; 'நம்மைத் துக்கக் கடலுள் விட்டுச் சென்றான் !' என்றார்கள் ; 'அவன் செய்கை கொடிது ! கொடிது !' என்றார்கள் ; 'அவன் செல்லுவதாகச் சொல்லிய தண்டகவனம் இந்த உலகத்திலே தானே உள்ளது ; அதனை அறிவு துணையாக, நாடித் தேடி அடைவோம் ; தேர் சென்ற வழியே செல்வோம்' என்றார்கள் ; அவ்வாறு செல்வாராகித் தேர் குறித்துச் சென்ற திசை, ஊர் குறித்துச் சென்றதே யென்று தெரிந்து செத்துப்போன சீவன் திரும்பி வரப்பெற்றார் போன்று, 'இனி, யாரும் அஞ்சாதீர்கள்! இராமன் அயோத்திக் குத் திரும்பிப் போயிருக்கிறான் !' என்று இடியோடு கூடிய மேகம் பேரோசை யுடைய கடலோடு ஒன்று சேர்ந்து பெரு முழக்கஞ் செய்தாற் போல, ஆரவாரித்தார்கள் : வாளரவு கடித்து மாளலுற்றார் மருந்து குடித்து மீளலுற்றார் போன்றார் கள் ; உலக முடிவுகாலத்திற் கரைகடந்து படர்ந்த கடல் சிருட்டி காலத்தில் திரும்பிவந்து தன் இடத்துக்குள் அடங்குதல் போல, நகர்கடந்து வனமடைந்த சனங்கள் திரும்பிவந்து நகர்க்குள் அமர்ந்தார்கள்.

### சனங்கள் தசரதன் சாவைத் தெரிதல்

அமர்ந்தவர்கள், அரசன் இறந்தமை அறிந்து தாமிறந்தார் போன்றார்கள். இராமன் நகர் திரும்பினா னல்ல னென்பதையும் தெரிந்தார்கள். அப்போது, அவர்கள் அடைந்த ஆற்றொணாத அவத்தை ஆராலும் அறிவித்தற் கரிதா யிருந்தது. அவ்வளவு பேரவத்தை அடைந்தவர்கள் ஏன் இறந்தாரில்லை யெனில், யாரி யார் எவ்வெக்காலத்தில் இறத்தற்பால ரென விதி நியமித்திருக் கிற காலாவதிகள் உள்ளன அன்றோ, அந்த அவதிகள் எய்தா மையால் இறந்தில ரென்க. அவர்கள் மாண்டுபோன மன்னனுக் கும் உதவாராய், வனம்போன மைந்தர்க்கும் உதவாராய், வருந் துவாராயினர். திரும்பக் காடு செல்லச் சிந்தித்த அவர்களை நோக்கி, வசிட்டன், 'நகரத்தீரே! இராமன், தான் நாட்டிலிருந் தால், தசரதன் சத்தியம் தவறினவனாகும் பழிப்பை ஒழித்து, அறத்தை நிறுத்த நாடு நீங்கிக் காடு சேர்ந்தான். அதற்கு நீங் கள் பரிந்து வருந்தல் தகுந்த தன்று' என்று தேறுதல் வார்த்தை கள் செப்பி, அவர்களை அயோத்தி நகரத்திலே அமரும்படி ஆஞ் ஞாபித்தான். அவர்கள், வடவாமுகாக்கினிக் கஞ்சிக் கரை கட வாத கடல் போல, அவன் ஆணைக் கஞ்சி அயோத்தி நகரத் தெல்லை கடவாராய் அந்நகரத்திலே அமர்ந்தார்கள்.

---

# 6. கங்கைப் படலம்

காட்டிலே சென்ற இராமன் கங்கைக்கரை யடைந்ததும்,
அங்கு நடந்ததும் கங்கை கடந்ததும் கூறுவது

### சீதா ராம லக்குமணர் வழிச் செல்லல்

**வெய்யோனொளி தன்மேனியின் விரிசோதியின் மறையப்**
**பொய்யோவெனு மிடையாளொடு மிளையானொடும் போனான்**
**மையோமர கதமோமறி கடலோமழை முகிலோ**
**ஐயோவிவன் வடிவென்பதோ ரழியாவழ குடையான் (88)**

கொண்டுகூட்டு: இவன் வடிவு, மையோ! மரகதமோ! மறி கடலோ! மழை முகிலோ! ஐயோ! இவன் ஓர் அழியா அழகு உடையான். தன் மேனியின் (நின்று) விரி(யும்) சோதியில் வெய்யோன் ஒளி மறைய, பொய்யோ எனும் இடையாளொடும் இளையானொடும் போனான்.

பொருள்: இவன் திருமேனி, அஞ்சனமோ! மரகதமோ! கடலோ! மேகமோ! என்னும்படி ஆச்சரியமா யிருக்கின்றது! இவன் ஒப்பற்றதும், என்றும் ஒருபடித்தா யுள்ளதுமான அழகை யுடையான். இவனுடைய திருமேனியி னின்று பரவும் ஒளியிலே சூரியன் ஒளி (அச்சூரியன் ஒளிமுன் விளக்கொளி மழுங்கல் போல, நாணி ஒளித்தாற் போன்று), ஒளிக்கப் பொய்யோ என்னும்படி சிறுத்த இடையாளான சீதாதேவியுடனும் இளையபெருமாளுடனும் வனத்திலே சென்றான்.

மை - (கண்ணி லிடும்) அஞ்சனம். மறிகடல் - (அலைகள்) மடங்குங் கடல். மழைமுகில் - மழை(யை யுட்கொண்ட சூல்) மேகம். வடிவு - உடம்பு. அஞ்சன முதலியவை இராமன் உடம்பின் வண்ணத்துக்குவமை. அழியா-கெடாத. ஓர் - ஒப்பற்ற. இராமனது அழகு, அரச வாழ்க்கைக் காலத் திருந்தபடியே துறவு வாழ்க்கை யுற்றபோதும் குன்றாமல் ஒருபடித்தா யிருந்த தென்பது குறிக்க, 'அழியா அழகு' என்றார்.

'ஐயோ! அகலல்குல் சூழ்வருதற் காழித்தேர்—வெய்யோற் கனேக நாள் வேண்டுமே" என்பதிற் போல, 'ஐயோ' என்பது, இங்கே அதிசயங் குறித்தது; 'ஐயோ! இறந்தான்' என்பதிற் போல, இரக்கங் குறித்த தன்று. 'ஐயோ' என்பதைப் 'போனான்' என்பதனோடு புணர்த்து 'ஐயோ காட்டிற் சென்றான்' என்றும் உரை யுள்ளது—சோ. சு. இது கடுங் கொண்டுகூட்டு. அன்றி, இதற்கு முந்திய படலத்தில் 82-ம் பாட்டின் உரையின்கீழ் விவரித்திருக்கிறபடி, நீடித்த துக்க வருணனையை, வாசகர் மனச் சோர்வுறாமைப் பொருட்டு, இடை நிறுத்திய கவி, இப் பாட்டையும் இதனை யடுத்து வரும் ஐந்து பாட்டுக்களையும் துக்கத்தை நீக்குவன

வாகவும் சந்தோடத்தை ஆக்குவனவாகவும் 'பன்னந்துகள்' என்று தொடங்கும் இதன் ஏழாம் பாட்டில் 'உளம் மகிழ்ந்தனர்' என மகிழ்வு நிகழ்ச்சி கூறுதற்குத் தோற்றுவாயாகவும் கூறியுள்ளாராதலால் 'ஐயோ' என்பதற்கு, எவ்வாற்ருனும், இங்கே இரக்கப் பொருள் கொள்ளல் பொருத்தமற்றதா யிருக்கின்றது.

இந்தப் பாட்டின் சந்தம், சுந்தரமூர்த்தி நாயனுர் முன்முதற் பாடிய 'பித்தாபிறை' யென்னும் தேவாரப் பாடற் சந்தமாகவும், 'சிவசங்கர சிவசங்கர ஹரமேஹர துரிதம்' என்பதை யிறுதி யடியாக வுடைய சுலோகச் சந்தமாகவும் இருப்பதனேடு, கவி விரித்துரைக்க எடுத்துக் கொண்ட குதூகல விடயத்துக்குப் பொருத்தமான உற்சாக மூட்டும் இசையுடையதாயிருத்தல் குறிக்கத்தக்கது. (88)

### மருத நில வருணனே

**அளியன்னதொ ரற்றுன்னய குழலாள்கட லமிழ்தின்**
**தெளியன்னதொர் மொழியாணிறை தவமன்னதொர் செயலாள்**
**வெளியன்னதொ ரிடையாளொடும் விடையன்னதொர் நடை [யான்**
**களியன்னமு மடவன்னமு நடமாடுவ கண்டான் (89)**

கொண்டுகூட்டு: *அளி அன்ன அறல் துன்னிய ஓர் குழலாளும், கடல் அமிழ்தின் தெளி அன்னது ஓர் மொழியாளும், நிறை (யானது) தவம் அன்னது ஓர் செயலாளும், வெளி அன்னது ஓர் இடையாளுமான சீதையொடு விடை அன்னது ஓர் நடையான் களி அன்னமும் மட அன்னமும் நடம் ஆடுவ கண்டான்.*

**பொருள்:** வண்டுகளே ஒத்ததாய்க் கருமணல் நெருங்கிய தன்மையுடைய கூந்தலே யுடையாளும், அமிழ்தத்தின் சாரமான தெளிவை ஒத்த இனிய சொல்லே யுடையாளும், தவம்போன்ற தான ஒழுக்கமாகக் கற்பை யுடையாளும் ஆகாயத்தை ஒத்த (எனவே இல்லே யெனும்படி நுண்ணியதான) இடையினே யுடையாளுமான சீதையுடனே, இடபம் போன்ற பெருமித நடையுடையானுன இராமன், பேடை பக்கத் திருத்தலால் களிக்கின்ற ஆண் அன்னமும் இளமை யுடைய பெண் அன்னமும் உல்லாசமாக உலாவுதலே உவப்புடனே நோக்கினுன்.

*அளி* - வண்டு. *ஓர்குழலாள்* - *(வண்டு, கருமண லன்றி வேறு)* ஒப்பற்ற கூந்தலினுள். இவ்வாறே பின்வரும் ஓர் என்பவைகளுக்கும் பொருள் கொள்க. *அறல்* - கருமணல். *அமிழ்தின் தெளி* - அமிழ்தத்தினுடைய *(அதி ருசியான பாகமாகிய)* தெளிவு. செயல் - ஒழுக்கம்—ச. அ. '*அளி அறல் அன்னதொர் துன்னிய குழலாள்*' என்று கூட்டியும் பொருள்

கூறலாம். மாதருக்குக் கற்பொழுக்கம், மாதவர்க்குத் தவவொழுக்கம் போல்வதென்பது புலப்பட, 'நிறை தவமன்னதொர் செயலாள்' என்றார்.

பாட பேதம்: விளையாடுதல் கண்டான். (89)

அஞ்சம்பையு மையன்றன தலகம்பையு மளவா
நஞ்சங்களை வெலலாகிய நயனங்களை யுடையாள்
துஞ்சுங்களி வரிவண்டுகள் குழலின்படி சுழலும்
கஞ்சங்களை மஞ்சன்கழ னகுகின்றது கண்டாள்

கொண்டுகூட்டு: அஞ்சு அம்பையும், ஐயன் தனது அலகு அம்பையும் அளவா, நஞ்சங்களை வெல்லலாகிய நயனங்களையுடையாள் (ஆன சானகி) களி துஞ்சும் வரி வண்டுகள் குழலின்படி (வருவதும் போவது மாகிச்) சுழலும் கஞ்சங்களை மஞ்சன் கழல் நகுகின்றது கண்டாள்.

பொருள்: ஐந்து என்னும் எண்ணுள்ள மன்மத பாணங்களையும், எண்ணற்ற இராம பாணங்களையும் இவ்வளவு கூர்மை யுடையன வென அளந்து, அவற்றினும் மிக்க கூர்மையுடையன வாய் விடத்தை வெற்றி கொள்ளச் சமைந்த விழிகளை யுடையா ளான சானகி, தாமரை மலர்களை இராமனது பாதங்கள் தமக் கொப்பான அழகில்லாதன வென அவமதித்துச் சிரிக்கின்றது போல அழகு மிகுந்து விளங்குவதை உவந்து நோக்கினாள்.

'நஞ்சங்களை' யென்பதில் கள் அசை—சிந்தா. களி துஞ்சும் வரி வண்டுகள் குழலின்படி சுழலும் கஞ்சங்கள்-களிப்புத் தங்கிய பாட்டினை(ப் பாடுதல்) உடைய வண்டுகள் (தேனை நாடி, நெய்) குழல் போல (வருவதும் போவதுமாய்)ச் சுழலப்பெற்ற தாமரை மலர்கள். 'குழலின் மிசை சுழல' என்ற பாடத்துக்குச் '(சீதையின்) கூந்தல்மேலே சுழலா நிற்க' எனப் பொருள் கொள்க. கழல் - பாதம். நகுதல் - சிரித்தல். மஞ்சன்: மைந்தன் என்பதன் போலி.

பாட பேதம்: குழலின் மிசை சுழல. (90)

தொளைகட்டிய கிளைமுட்டிய சுருதிச்சுவை யமுதின்
கிளைகட்டிய கருவிக்கிள ரிசையிற்பசை நறவின்
விளைகட்டியின் மதுரித்தெழு கிளவிக்கிளி விழிபோல்
களைகட்டவர் தளைவிட்டெறி குவளைத்தொகை கண்டான்

கொண்டுகூட்டு: தொளை கட்டிய கிளை முட்டிய சுருதிச் சுவை அமுதின், கிளை கட்டிய கருவிக் கிளர் இசையின், பசை நறவின் விளை கட்டியின், மதுரித்து எழு கிளவிக் கிளி (சீதையின்) விழிபோல், (வயல் களில்) களை கட்டவர் தளை விட்டெறி குவளைத் தொகை கண்டான்.

பொருள்: வேய்ங்குழலின் இசை யமுதத்தினும், வீணை

**கானத்தினும், தேனில் விளைந்த கற்கண்டுக் கட்டியினும் அதிக இனிப்பாகத் தித்திக்கின்ற சொல்லினை யுடைய சீதையின் கண்கள் போல, வயல்களில் களை பிடுங்குவோர் பிடுங்கி வரப்பில் விட்டெறிந்த நீலமலர்க் கூட்டத்தை இராமன் கண்டான்.**

தொளைகட்டிய கிளைமுட்டிய சுருதிச்சுவை அமுதின் - துளைகள் தோண்டி(த் துளைத்து உண்டாக்கி)ய வேய்ங்குழலில் நிரம்பிய இசையாகிய சுவையுடைய அமுதத்தைக் காட்டிலும். (கட்டிய - தோண்டின. கிளை - மூங்கில். சுருதி - இசை). கிளைகட்டிய கருவி கிளர் இசையின் - நரம்பு கட்டப்பட்ட (வீணையாகிய இசைக்) கருவியில் எழுகின்ற இசையைக் காட்டிலும். (கிளை - வீணை நரம்பு.—மணிமேகலை). பசை நறவின் விளைகட்டியின் - பசையான ( - ஒட்டுந் தன்மையுள்ள) தேனில் விளைந்த (கற்கண்டுக்) கட்டியைக் காட்டிலும். கிளவி கிளி - சொல்லை யுடைய கிளி போல்வாளாகிய சீதை. களைகட்டவர் - களை களைந்தவர். தளை - வரப்பு (என்று வழங்கும் வரம்பு); வயல். தளை விட்டெறி - வயல்களினின்று விட்டெறிகின்ற; வரப்பில் விட்டெறிகின்ற. குவளை - நீலமலர். 'கிளவிக்கிளர் விழிபோல்' என்ற பாடத்தில் 'கிளவி' கிளவியை யுடையாளெனப் பொருள்பட்டுச் சீதையைக் குறிக்கும். 'உரை செய்தல்' உரை கட்டுதல் (ச. அ.) என வருதல் போலத் 'தொளை செய்த', 'தொளை கட்டிய' என வந்ததாகவுங் கொள்ளலாம்.

இப் பாட்டு, ஈற்றடியின் இறுதிச் சீரொழிய, எல்லா அடிகளும் 'தனனத்தன தனனத்தன தனனத்தன தனன' என்ற சந்தக் குழிப்புக்குப் பொருத்தமாக அமைந்திருத்தல் கவனிக்கத் தக்கது..

**பாட பேதம்:** கிளவிக்கிளர் விழிபோல். **(91)**

**அருப்பேந்திய கலசத்துணை யமுதேந்திய மதமா**
**மருப்பேந்திய வெனலாமுலை மழையேந்திய குழலாள்**
**கருப்பேந்திர முதலாயின கண்டா ளிடர்காணுள்**
**பொருப்பேந்திய தோளானொடு விளையாடினள் போனாள் (92)**

**கொண்டுகூட்டு:** அரும்பு ஏந்திய, அமுத கலசத்துணை ஏந்திய மதமா மருப்பு ஏந்திய எனலாம் முலையும், மழை ஏந்திய (தெனலாங்,) குழலு முடையாள் கரும்பு ஏந்திரம் முதலாயின கண்டாள்; இடர் காணுள் பொருப்பு ஏந்திய தோளானொடு விளையாடினள் போனாள்.

**பொருள்:** அரும்பை ஏந்தின, அமுத கலசத் துணையை ஏந்தின, மதயானைக் கொம்பை ஏந்தின என்று சொல்லலாம் தனங்களையும், மேகத்தை ஏந்திய தென்னலாம் கூந்தலையும் உடையாளான சானகி, கரும்பாலை முதலானவைகளைக் கண்டு, (அந்த இனிய காட்சிகள் அளித்த களிப்பினால் முந்திய)

துன்பத்தைச் சிறிதும் காணுமல், மலைகளை யேந்திய என்னலாம் தோள்களை யுடையானுன இராமனுடன் வழி நடக்கும் வருத்தம் தோன்ருமல் விளையாடிக்கொண்டு சென்ருள்.

அருப்பு கருப்பு என்பவை, அரும்பு கரும்பு என்பவைகளின் விகாரம். யமன், இயமன் எமன் ஏமனென வருதல் போல, யந்திரம், இயந்திரம் எந்திரம் ஏந்திரமென வரும். 'மருப்பேந்திய' என்பதன் பின்னுள்ள 'எனலாம்' என்பது அருப்பேந்திய எனலாம், அமுதேந்திய எனலாம், மழையேந்திய எனலாம், பொருப்பேந்திய எனலாம் எனப் பொருத்திப் பொருள் கொள்ளுதற் கியைபா யிருக்கின்றது. இப் பாட்டில் 'ஏந்திய' என்ற சொல் புணர்க்கப்பட்ட பொருள்களெல்லாம், தனபாரம், அளக பாரம், புயபாரம் என விதந் தோதப்பட்ட பொருள்களின் உவமானங் களாயிருத்தல் குறித்தற் குரியது. 'ஏந்திளமுலையாளே' என இதற்கடுத்த வனம்புகு படலத்தில் வருவது இங்கே ஞாபகத்துக்கு வருகின்றது.

வனம் செல்லும் இராமன் இப்போது கங்காதீரத்தைச் சமீபிக்கின்ருனுதலால் அந்த நதியினுல் வளம்படுத்தப்பட்டுள்ள மருதநிலத் தூடு செல்கின்ருன். அந்த நிலத்தின் புற எல்லையில் இராமன் 'களியன்னமும் மடவன்னமும் நடமாடுவ கண்டான்', நடுப் பகுதியிற் சீதை 'கஞ்சங் களை மஞ்சள் கழல் நகுகின்றது கண்டாள்', ஊர்க்கடுத்த வயல்களுள்ள பாகத்தில் இராமன் சீதையின் கண்கள் போலக் 'களைகட்டவர் தளைவிட் டெறி குவளைத்தொகை கண்டான்'; இப்பால், சீதை, ஊர்க்கு அதிகச் சமீபமான இடத்தில் வயல்களி லிருந்து கொண்டுவந்த கரும்புகளை ஆட் டும் 'கருப்பேந்திர முதலாயின கண்டாள்' என்றதனுல் அன்னம், தாமரை, நீலம் ஆகிய மருதநிலத்து இயற்கைப் பொருள்களும், கரும் பேந்திர முதலிய அந்நிலத்துச் செயற்கைப் பொருள்களுங் கொண்டு மருதநில வருணனை இனிது செய்திருப்பது கருதி மகிழத் தக்கது. (92)

இராமனுதியோர், தடாகங்களையும், மணற் குன்றுகளையும், சோலைகளையும், நந்தனவனங்களையும் கண்டார்கள். கால்வாய் களிற் பாய்ந்து நீந்தி, உழக்கித் திளைத்துக் கரை யேறிய எருமைகள், நெற் பைங்கதிர்களை அவற்றின் பால் கடைவாயில் ஒழுக, மேய்வதையும், நான்கு திக்கும் மீன் குதிக்க, மாதர்கள் நீராடுவதையும் கண்டுகொண்டு களித்துச் சென்று கங்கைக் கரையை அடைந்தார்கள்.

### இராமனை முனிவர்கள் உபசரித்தல்

அங்கே, தபோதனர்கள், இராமன் தங்களை அடைந்தது பரமபதமே தங்கள் தவப் பயனுகத் தங்கள்பால் வந்ததென்று களிகூர்ந்து அவனைக் காண நாடினுர்கள், ஓடினுர்கள், கூடினுர்

கள், ஆடினுர்கள், பாடினுர்கள், அமிழ்தை உண்பார்கள் போல அவனைக் கண்டார்கள். நீண்ட காலம் நீங்கி நெடுந்தூரம் போயிருந்த மக்களைத் தேடிக்கொண் டிருந்தவர்கள் திடீரெனக் கண்டு கொண்டாற் போலக் களிகூர்ந்து அவனைத் தம் இருப் பிடத்துக் கழைத்துப் போனுர்கள்.

பொழியுங் கண்ணிற் புதுப்புன லாட்டினர்
மொழியு மின்சொலின் மொய்ம்மலர் சூட்டினர்
அழிவி லன்பெனு மாரமிழ் தூட்டினர்
வழியில் வந்த வருத்தத்தை வாட்டினர் (93)

கொண்டுகூட்டு: (முனிவர்கள்) கண்ணிற் பொழியும் புதுப்புனல் ஆட்டினர்; மொழியும் இன்சொலின் மொய்ம்மலர் சூட்டினர்; அழிவு இல் அன்பு எனும் ஆர் அமிழ்து ஊட்டினர்; வழியில் வந்த வருத்தத்தை வாட்டினர்.

பொருள்: முனிவர்கள், இராமனுக்கு அபிடேகமாகச் சந்தோடத்தால் சொரியும் ஆனந்தக் கண்ணீ ராட்டினுர்கள்; உபசரித்துக் கூறும் இன்சொல் மலர் மாலை சூட்டினுர்கள்; அன்பமிழ் தூட்டினுர்கள்; வழியில் நடந்து வந்த வருத்தத்தை வாட்டினுர்கள்.

மிதிலைக் காட்சிப் படலம் 70-ம் பாட்டில் 'பாம்பாகிய தாம்பு' என்பது 'பாம்பின் தாம்பு' என இன் சாரியை பெற்று வந்தது போல, இங்கே 'இன் சொலாகிய மலர்' என்பது 'இன்சொலின் மலர்' என வந்தது. அழிவு - கேடு; குற்றம். ஆரமிழ்து - (பெறுதற்கு) அருமை யான அமிழ்தம். வாட்டினுர் - குறைத்தார். வாடுதல் - குறைதல்— சிலப்.

இராமனைக் கண்டு முனிவர் களித்தது போல, இப் பாட்டைக் கண்டு வாசகர் களிப்பரென்பதில் ஐயமில்லை. இது ஏனைய தமிழ்ப் பாட்டுக்கள் போல அடிதொறும் எதுகையும் மோனையும் இயைந்திருப்பதே யல்லாமல், ஆங்கிலப் பாட்டுக்கள் போல, எல்லா அடிகளின் இறுதியிலும் இயைபு அமைய யாக்கப் பெற்றது நோக்கத் தக்கது. (93)

கங்கைநீ ராடல்

கன்னி நீக்கருங் கங்கையுங் கைதொழாப்
பன்னி நீக்கரும் பாதகம் பாருளோர்
என்னி னீக்குவர் யானுமின் றெற்றந்த
உன்னி னீக்கின னுய்ந்தனென் யானென்றுள் (94)

கொண்டுகூட்டு : (இராமன் சீதையோடு முங்கிய பொழுது) கன்னி நீக்கு அருங் கங்கை கை தொழா, 'பார் உள்ளோர் பன்னி நீக்(குதற்)கரும் பாதகம் என்னின் (முழுகுதலின்) நீக்(கப் பெறு)குவர் : யானும் இன்று என்னைத் தந்த உன்னின் நீக்கினன் உய்ந்தனன்' என்ருள்.

பொருள் : (இராமன் சீதை கையைப் பிடித்துக்கொண்டு கங்கையில் முங்கிய பொழுது) கங்காதேவி, கைகூப்பித் தொழுது, 'உலகத் துள்ளோர் தம் பாவத்தை என்னிடை முழுகுதலினுல் நீக்கப் பெறுவார்கள் ; யானும் (யான் ஏற்றுக் கொண்ட அவர்கள் பாவத்தை என்னிடை முழுகிய) உன்னுல் நீக்கப்பெற்று உய்ந்தேன்' என்ருள்.

கன்னி நீக்கருங் கங்கை-கன்னித் தன்மை நீங்குதல் இல்லாத கங்கா தேவி. கைதொழா - கை தொழுது - அஞ்சலித்து. பன்னி நீக்கரும் பாதகம் - (எவ்வாறு நீக்கலா மென்று) ஆராய்ந்து நீக்குதற் கருமையான பாவம். பன்னுதல் - ஆராய்தல்.—சிந்தா., பெருங். பன்னி யென்பது துக்கு வாழ்த்தி என்றும் பொருள் கூறுவர். உய்ந்தனன்-ஈடேறினேன் - கடைத்தேறினேன். கங்கை, திருமால் 'திருவடியிற் ருேன்றினமையால் எற்றந்த உன்னி னெனவும், அவர்கள் பாதகத்தை யேற்றுப் புண்ணியந் தந்தமையால் (யான்) மேற்கொண்ட அவர்கள் பாதகத்தை நீக்கின னெனவுங் கூறிஞள்'.—சோ. சு. (94)

கங்கையின் வெண்ணிற நுரை விளங்கும் அலையின்மீதே சீதையுடன் தோன்றிய இராமன், திருப்பாற்கடலிலே, திருப் பள்ளி யெழுச்சிச் சமயத்திலே, இலக்குமியுடன் விளங்கும் விட்டுணு ஒத்தான். சீதை, தன் இடைக்கு நாணுவன போலக் கொடிகள் நுடங்க, நடைக் கொடுங்கின போல அன்னங்கள் ஒதுங்க, பாதத்துக்குப் பயந் தொளிப்பன போலத் தாமரை மலர்கள் நீருள் முழுக, கண்களைக் கண்டு வெருண்டன போலக் கயல் மீன்கள் தாவ நீராடினுள். அவளுக்குச் சேடிய ரில்லாத குறையை நோக்கிக் கங்காதேவி சேடி போல அவளைத் திரைக் கரத்தினுல் நீராட்டுவாள் போன்ருள்.

செய்ய தாமரைத் தாள்பண்டு தீண்டலால்
வெய்ய பாதகந் தீர்த்து விளங்குவாள்
ஐயன் மேனி யெலாமளைந் தாலினி
வைய மாநர கத்திடை வைகுமே (95)

கொண்டுகூட்டு: பண்டு (திருமாலின்) செய்ய தாமரைத் தாளைத் தீண்டலால், வெய்ய பாதகந் தீர்த்து விளங்குவாள் (இப்போது, அந்த)

ஐயன் மேனி யெல்லாம் அளைந்(த)தால், வையம், (கங்கையைச் சிந்திப்பினுமே பாவந் தீருமாதலால்) இனி மாநரகத்திடை வைகுமே ! (வைகாது).

பொருள் : முன்பு திருமாலின் பாதங்களை மட்டும் பரிசிக்கப் பெற்றதனால், பாவங்களை ஒழித்து விளங்கிய கங்கை, இப்போது, அந்த இறைவனது திருமேனி முழுதுமே தீண்டப் பெற்றதனால், உலகத்தார் (அந் நதியில் ஆடுதல் கிடக்க, அதனைக் காணுதல் கிடக்க, கூறுதல் கிடக்க, அதனைச் சிந்தித்தாலும் பாவமெல்லாந் தீர்ந்துவிடுவா ராதலால், இங்குள்ளாரேயன்றி நரகிலுள்ளாரும் அதனை நினைந்து பாவ மொழிந்து) இனிமேல் நரகத்திலே தங்குதல் இல்லையாம்.

அளைதல் - தீண்டுதல் ; கலத்தல்—ச. அ. வைகுதல் - தங்குதல். தைலமாட்டுப் படலம் 53-ம் பாட்டில், ‘ நடந்ததெனின் ’ என்பது ‘ நடந்தெனின் ’ எனத் தொக்கு நின்றது போல, இந்தப் பாட்டில் ‘ அளைந்ததால் ’ என்பது ‘ அளைந்தால் ’ எனத் தொக்கு நின்றது.

பாட பேதம் : விளங்கினள் : அளைந்தாள். (95)

## இராம குகர் சந்திப்பு

இராமன், கங்கையில் நீராடிய பின்பு, கடவுள் வணக்கம் செய்து, முனிவரிட்ட விருந் தருந்தினன். அப்போது, செருப்புத் தாங்கிய பெருத்த பாதங்களும், அவற்றின் மேலிட்ட வீர கண்டையும், சல்லடந் தரித்த தொடைகளும், சூழப் புலிவால்கள் தொங்கவிடப்பட்டுத் துலங்கும் தோலுடை சுற்றிய அரையும், அவ்வரையில் இறுகக் கட்டிய வாளும், பனஞ் சிரும்பு போலத் தொங்கும் மயிர்களையுடைய முன்கையும், அக் கையிற் பிடித்த வில்லும், பல்லுகள் தொடுக்கப்பட்டது போன்ற சோதி மாலையணியப்பட்டுக் கறுத்த பருத்த பாறை நேரும் மார்பும், கோப காரண மின்றிச் சுபாவத்திலேயே கோபத்தீக் கொப்புளிக்கப் பாம்பு போல நடுக்கம் விளையப் பார்க்கும் பார்வையும், நெற்கதிர் போல நெரிந்த புருவமும், சிரித்தலற்ற சீற்றத் தோற்ற முள்ள முகமும், காரிருட் கற்றை ஒத்த கரிய தலைமயிரும், எண்ணெயுண்ட இருண்ட மேனியும், இயமனும் அஞ்சும் இடிக் குரலும் உடையனாய், ஆறுகளுள் ஆழம் அதிகமான கங்கை போல மக்களுள் மிக்க நெட்டுடலினனாய், அடுத்து நாய் தொடர, தொடுத்துக் கொம்பு, கொட்டு, பம்பை, துத்தரி முதலிய வாத்தியங்களை முழக்கிக்கொண்டு இடிக்கும் கார்மேகம் போலக் கருநிறமுடைய பரிவாரம் புடைசூழ, ஆயிரந் தோணிகளுக் கதிபதியும் கங்கைக்

கரையிலுள்ள சிருங்கிபேரநகருக் கிறைவனுமான வேடர் கோமான், குகனென்பான், தேனும் மீனும் காணிக்கைப் பொருள்களாகக் கைக்கொண்டு, இராமனைக் காண வந்தான்.

வந்தவன், கூடவந்த கூட்டத்தைத் தூரத்தே நிறுத்தி, வில்லையும் வாளையும் நீக்கி, அன்பு நிறைந்த மனத்தினனாய், இராமன் இருந்த ஆச்சிரமத்தை அணுகினான். அணுகிக் கூவி விளிக்கத் தொடங்குமுன், இலக்குமணன் அவனை அடுத்து 'நீ யார்?' என, அன்புடன் பணிந்து, 'நின் திருவடி தொழுதற்கு வந்தேன்; அடியேன் ஓடம் விடும் வேடன்' என்றான்.

இலக்குமணன், குகனை 'இங்கே இரு' என்று அமர்த்தி விட்டு, இராமனைத் தொழுது, 'தோகை மிகவுள்ள சுற்றத்தின னும், தூய மனத்தினனும், தாய்போலும் அன்பினனும், கங் கைப் படவுகளுக்குத் தலைவனுமான குகனென்பவன் உன்னைக் காண வந்திருக்கின்றான்' என்றான். இராமன் 'அவனை அழை' யென, இளையவன் வரச் சொல்லக் குகன், அன்பு மிகுந்து விரைந்து புகுந்து, இராமனை யிரு கண்ணுங் குளிரக் கண்டு மனங் கனிந்து, மண்ணில் விழுந்து பணிந்து எழுந்து, உடம்பு குனிந்து வணங்கி வாய்புதைத்து நின்றான். 'இருப்பாயாக' என்று இராமன் பணிக்கவும், இரானாய்த் 'தேவரீர் திருவமுது செய்தற்குச் சிறந்தனவாகத் தெரிந்தெடுத்துத் தேனும் மீனும் கொண்டுவந்திருக்கின்றேன், திருவுள்ளம் யாதோ?' என, இராகவன் முனிவரை நோக்கி முறுவலித்துக்கொண்டு மொழி வானாய், 'அப்பா! அப் பொருள்கள் உனக்கு என்பாலுள்ள அன்பு மிகுதியை வெளிப்படுத்துகின்றன வாதலால், அவைகள் தேவாமிர்தத்தினும் சிறந்தனவே; என்போலியர்க்கு அன்பால் அளிப்பன யாவையும் தூயவையேயாம். அவைகளை அங்கீ கரித்து அருந்தினேனென்றே கொள். நாங்கள் இன்று இங்கே யிருந்து நாளைக்குக் கங்கையைக் கடப்பேம். நீ உன் னூர்க்குப் போய் உன் உறவினருடன் உவந்திருந்து நாளை விடியப் படவு களுடன் வருவாயாக' என்றான்.

அப்போது, குகன், 'இக் கோலத்துடன் உன்னைக் கண்ட கண்களைத் தோண்டித் தூரத்தே யெறிந்திலேன்; நீ துன்பத் துறைதல் தெரிந்தும் உயிர் துறந்திலேன். ஆயினும் என் ஊர்க்குச் செல்லக் கருதி உன்னைப் பிரியேன்; என்னாலான ஏவற் றொழில் செய்துகொண்டிருப்பேன்' என்றான். அதைக் கேட்டு, இராமன், சீதா லக்குமணரை நோக்கி, 'இவன் பேராத பேரன்

புடையவன் !' என்று கூறி, அவனைக் கருணை நிறைந்த கண்களால் நோக்கி, 'எனக்கு இனிய பொருள்கள் யாவற்றினும் இனியஞன நீ எங்களோடிருப்பாயாக' என்ருன். எனவே, குகன் மீண்டும் வீழ்ந்து தாழ்ந்து தொழு தெழுந்து, தன் சேனையை மாதவப் பள்ளியைச் சூழவும் நின்று காவல் செய்யப் பணித்து, வில்லையும் அம்பையும் கைகளிற் பிடித்து, வாளை அரைக்கச்சிற் கட்டி, இராமனைச் சேவித்து நின்ருன்.*

### குகனுக்கு இலக்குமணன் கூறல்

**திருநகர் தீர்ந்த வண்ண மிளையவ தெரித்தி யென்னப்**
**பருவர றம்பிகூறப் பரிந்தவன் பையு ளெய்தி**
**இருகணீ ரருவி சோரக் குகனுமாண் டிருந்தா னென்னே**
**பெருநிலக் கிழத்தி நோற்றும் பெற்றிலள் போலு மென்ரு (96)**

கொண்டுகூட்டு : 'இளையவ, திருநகர் (நாம்) தீர்ந்த வண்ணம் (இவனுக்குத்) தெரித்தி' என்னத் தம்பி (அந்தப்) பருவரல் கூற, 'பெரு நிலக்கிழத்தி நோற்று (இராமனை அடைந்து)ம், என்னே! (அவன் ஆளும் பாக்கியத்தைப்) பெற்றிலள் என்ரு, பரிந்தவன் (ஆகிப்) பையுள் எய்தி, இரு கண்ணீர் அருவி (போலச்) சோர, குகன் ஆண்டு இருந்தான்.

பொருள் : 'தம்பீ! அயோத்தியினின்றும் நாம் நீங்கிய வகையை இவனுக்குத் தெரிவிப்பாயாக' என்று இராமன் செப்ப, இலக்குமணன் அந்தத் துன்பச் செய்தியைச் சொல்ல, 'பூமிதேவி தவஞ்செய்து தனக்கு அரசஞக இராமனை அடைந்தும், யாது காரணத்தினலோ, அவன் தன்னை ஆளும் பாக்கியத்தைப் பெற்ருளில்லை!' என்று இரங்கினவனுகித் துன்பமடைந்து இரண்டு கண்களி னின்றும் கண்ணீர் அருவி போல வடிய, குகன், அந்த ஆசிரமத்திலே இருந்தான்.

தீர்ந்த - நீங்கிய. தெரித்தி - தெரியச் செய்வாய். பருவரல் - துன்பம்; முன்பின் தொடர்ச்சியால் துன்பமான செய்தி யென்று பொருள் கொள்ள நின்றது. பரிதல் - இரங்குதல். பரிந்தவன் - (இராமன் அரசாளும் பாக்கியத்தைப் பெருத பூமிதேவியின் பொருட்டு) இரங்கினவன்

---

* பின்வரும் பாட்டு ஸ்ரீ கவிராச ஈசுரமூர்த்தியா பிள்ளையவர்கள் ஏட்டுப் பிரதியிலுள்ளது.

அடிதொழு துவகை தூண்டி யமைத்தன ளுளி யென்னத்
துடியுடைச் சேனைவெள்ளம் பள்ளியைக் சூழ வேவி
வடிசிலை பிடித்து வாளும் வீக்கிவா யம்பு பற்றி
இடியுடை மேகமென்ன விணையடி ஏத்தி நின்ருன்.

(ஆகி); (இராமன் பால்) அன்பு அதிகப்பட்டவன் (ஆகி)—ஐங்குறு. பையுள் - துன்பம். போலும் : அசை. (96)

### அத்தமனம்

அப்போது, வாளாற் பகை யிருளை ஓட்டித் திக்குவிசயஞ் செய்து, உலக மெல்லாம் ஏக சக்கரம் செலுத்தி, ஒளி பரப்பி, உலகத்தோர் சிந்தித்து வந்திக்க, அவர்கள் உள்ளத் துறைந்து மாய்ந்த சூரன் எனச் சூரியன் அத்தமித்தான்.* இராமன் சந்தியா வந்தனம் செய்து சீதையுடன் தரையில் விரித்த புல்லுப் பாய்மீது படுத்திருந்தான். இலக்குமணன் விடியு மளவும் விழி யிமையாமல் வில்லேந்திக் காத்து நின்றான். குகன் அவர்கள் நிலைமையை நோக்கிக் கண்ணீர் சோர அருவி வீழும் குன்று போல நின்றான்.

### உதயம்

**துறக்கமே முதலவாய தூயன யாவை யேனும்**
**மறக்குமா நினைய லம்மா வரம்பில தோற்று மாக்கள் [ளுள்**
**இறக்குமா றிதுவென் பான்போன் முன்னை நா ளிறந்தான் பின்**
**பிறக்குமா றிதுவென் பான்போற் பிறந்தனன் பிறவா**
**வெய்யோன்**

கொண்டுகூட்டு : பிறவா வெய்யோன், வரம்புஇல (வாகித்) தோற்றும் மாக்கள், இறக்கும் ஆறுஇது என்பான் போல், முன்னை நாள் (மாலையில், இறந்தான்; (அவர்கள்) பிறக்கும் ஆறு இது என்பான் போல், பின் நாள் (காலையில்) பிறந்தனன். (வீடு பெற முயல்வோர்) துறக்கமே முதல வாய தூயன யாவையேனும், மறக்குமாறு நினையல் அம்மா!

பொருள் : சூரியன் மனிதர்கள் மாயும் விதம் இது போல் வது என்று தெரிவிப்பான் போல முதல்நாள் மாலையில் மாய்ந் தான் (மறைந்தான்); அவர்கள் தோன்றும் (பிறக்கும்) விதம் இது போல்வது என்று தெரிவிப்பான் போல மறுநாள் காலையில் தோன்றினான் (உதித்தான்).

துறக்கம் - சுவர்க்கம் - தேவலோகம். முதல ஆய - முதலியனவான. 'மறக்குமாறு', 'மறக்குமா' வென ஈறு தொக்கது. நினையல் - நினைக. அம்மா : அதிசயச் சொல். துறக்கமே முதல ஆய தூயன யாவையேனும்

---

* வாள் - வாளாயுதம் ; ஒளி. சக்கரம் - ஆக்கினைசக்கரம் ; தேர்ச்சக்கரம். ஒளி - புகழ் ; வெயில். சிந்திக்க – மதிக்க ; தியானிக்க. மாய்ந்த - இறந்த ; மறைந்த. சூரன் - வீரன் ; சூரியன்.

மறக்குமா நினையல் - (பிறப்பை யொழித்து வீடு பெற முயல்வோரெல் லாம், நரகத்தை நோக்க, மிகவும் விரும்பத் தக்கனவாகத் தோன்றும்) சுவர்க்க முதலியனவான பரிசுத்தமான பதவிகள் யாவையாயினும் (அவைகள் வீட்டை நோக்க மிகவும் வெறுக்கத் தக்கன வாதலால் அவை களைப் பெற வேண்டுமென்ற ஆசையை) மறந்துவிடும்படி சிந்தனை செய்க. வரம்பு இல - அளவில்லாதன (ஆகி). தோற்றும் - காணப்படும். மாக்கள் - மனிதர்.

'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' என்பதில் 'பிறவா' என்பது 'பிறந்ததனால் பெறுதற்குரிய நல்ல பேற்றைப் பெறாத' என்று பொருள் படுதலை ஒருவா ரெுப்ப, இங்கே 'பிறவா வெய்யோன்' என்றது தன் னைப்போலப் பிறப் பெய்திய ஏனைய உயிர்கள் போலப் பிறப்பாலாம் சுக துக்கங்களை அநுபவியாத சூரியன் என்ற பொருள்பட நின்றது. (97)

## குகன் வேண்டல்

விடியற்காலமாகத் தினகரனாகிய செஞ்ஞாயிற்றைக் கண்டு சேற்றுத் தாமரைகள் மலரா நிற்க, காகுத்தனாகிய கருஞாயிற் றைக் கண்டு மைதிலியின் வதன கமலம் மலர்ந்தது. இராமன் காலைக் கடன்களை முடித்துக்கொண்டு, குகனைப் படவுகள் கொண்டுவரச் சொன்னான். அப்போது, அவன், அருவி பொழியுங் கண்ணனாய், இராகவனது திருவடிகளைப் பிரியமாட் டாத பேரன்பினனாய், வணக்கஞ் செய்து தன் உள்ளக் கருத்தை உணர்த்துவானாய், 'ஐயா! யாங்கள் உள்வேறு புறம்வேறான பொய்யொழுக்க மில்லேம்; உனது வனவாச விரதத்துக்குப் பொருந்துவதாக யாங்கள் வாழும் இடம் வனமாகவே யிருக் கிறது. யாங்கள் எளியே மெனினும் இன்றியமையாத எப் பொருளும் குறைவில்லேம்; மாற்றாரை வெல்லும் வலியுடையேம்; தேவரீர் ஏவிய குற்றேவல்களைச் செய்யு முறைப்படியே செய் வேம்; அடியேங்களை உறவினர் போலக் கருதி எங்களூரில் நெடும் பொழு திருந் தருள்வாயாக. எங்கள்பால் தினையுண்டு; தேனுண்டு; உனக்குத் துணையாக எங்கள் உயிர்கள் உண்டு. விளையாடச் சோலை யுண்டு. நீராடக் கங்கை யுண்டு. எளியேனுயி ருள்ளளவும் எங்களூரில் இனிதிருந் தருள்வாயாக. எனது குடிலுக்கு ஏகுவாயாக!' என்றான். என்றது கேட்டு, இராமன், அகத்துள் அருள் நிறைந்தவனாகி, அவ் வருள்* பொங்கி யெழுந்து புறத்தே போந்தாற் போலப் புன்னகை புரிந்து, 'யாங்கள் புண்ணிய தீர்த்தங்க ளாடிப் புனித முனிவர்களைப்

* அருள் வெண்ணிற மென்பது கவிமரபு.

போற்றி யருள் பெற்றுச் சிலநாளில் திரும்பி வருவோம்' என்ருன். அவன் கருத்தை யறிந்து குகன் கடிது சென்று படவுகளைக் கொண்டு வந்தான். இராமன் முனிவர்பால் விடைபெற்றுச் சீதா லக்குமணருடன் படவேறிக் குகன் செலுத்தச் சென்ருன். அந்தப் படவு, துழாவுகின்ற துடுப்புக்கோல்கள் கால்களாக, நண்டு நடத்தல் போல நதியிலே சென்று, கரையை அணுகியது. கரையை அடைந்த இராமன், 'சித்திரகூடத்திற்குச் செல்லும் வழியைச் சொல்' லெனக் குகன், 'கடைப்பட்ட நாயேன் கருத்திலுள்ள தொன்று கூறுவேன்; கேட்டருள்' என்று கூறுவாருய், 'தேவரீருடன் செல்லப் பெறுவேனேல், இருளினும் வழி காட்ட வல்லேன், இனிய கனிகளும், காய்களும், தேனும் எங்கிருந்தும் கொண்டுவந்து கொடுக்கமாட்டுவேன், தங்குதற்குத் தக்க சாலை சமைப்பேன், ஒரு கணமும் பிரிவுறுதற்காற்றேன். திருவுள்ளமானல், சேனையையும் உடன்கொண்டு வருவேன். ஒரு பொழுதும் திருவடிகளைப் பிரியேன். பகைவர் வருவாராணல், எதிர்த்து வெல்வேன். வெல்வே னல்லேனுயின் எல்லாருக்கும் முன்னுக என்னுவி விடுவேன். உன்னைப் பிரியாமல் உடன் செல்வேன்' என்ருன்.

### இராமன் குகனைத் தேற்றி விடை பெறுதல்

அன்னவ னுரைகேளா வமலனு முரைநேர்வான்
என்னுயி ரனையாய்நீ யிளவலு னிளையானிந்
நன்னுத லவணின்கே ணளிர்கட னிலமெல்லாம்
உன்னுடை யதுநானுன் றொழிலுரி மையினுள்ளேன் (98)

கொண்டுகூட்டு: அன்னவன் உரைகேளா, அமலன் உரை நேர்வான் (ஆகி), 'நீ என் உயிரனையாய்: (என்) இளவல் உன் இளையான்: இந் நல் நுதல் நின் கேள்: (எனக்குரிய) நளிர்கடல் நில மெல்லாம் உன்னுடையது: நான் உன்(ஞல் நியமிக்கப்பட்ட) தொழில் (செய்யும்) உரிமையின் உள்ளேன்' (என்ருன்).

பொருள்: அவன் சொன்னது கேட்டு, இராமன் விடையளிப்பாஞகி, 'நீ என் உயிர் போல்வாய்: என் தம்பி உன் தம்பி: இந் நங்கை உன் பந்து: என் ஆள்கைக் குரிய பெரிய கடல் சூழ்ந்த நில உலக முழுவதும் உன்னுடையது: யான் உன்னல் நியமிக்கப்பட்ட தொழில் செய்யும் கடப்பாடுடையேன்' என்ருன்.

உரிமை - கடமை ('தத்தம துரிமைதன்னைத் தவாநெறி தலைக்

கொண்டாற்ற'—கந்தபு. பட்டா. 14 ச. அ.) நல் நுதலவள் - நல்ல நெற்றியை உடையவள் - சீதை. கேள் - உறவாக வுள்ளாள் - ஐங்குறு. நளிர் - பெருமை ; குளிர்ச்சி. (98)

துன்புள தெனினன்றே சுகமுள ததுவன்றிப்
பின்புள திடைமன்னும் பிரிவுள தெனவுன்னேல்
முன்புள மொருநால்வே முடிவுள தெனவுன்று
அன்புள வினி நாமோ ரைவர்க ளுளரானேம் (99)

கொண்டுகூட்டு: '(முன்பு) துன்பு உளது எனின் அன்றே (பின்பு) சுகம் உளது (ஆகும்); அதுவன்றி, (பிரிவால் இப்போது துன்ப முண்டாம்; இன்பமோ) பின்பு (கூடுங்காலத்து) உளது (ஆகும்). (இவற்றிற்கு) இடை(யில்) மன்னும் பிரிவு உளது என உன்னேல்; (உன்னைச் சேரும்) முன்பு ஒரு நால்வேம் உளம். இனி முடிவு உளது என உன்னு அன்பு உள்ள(வர்களாய்) நாம் ஓர் ஐவர்கள் உளரானேம்.'

பொருள்: '(வெயிலில் நின்று லல்லவா நிழலருமை தெரியும்; அதுபோல, முன்பு) துன்பம் உண்டான தென்று லல்லவா, (பின்பு) சுகம் உண்டாம்; என்று நினைப்ப தல்லாமல், இப்போது பிரிதலால் துன்பமே உண்டாகின்றது; இன்பமோ பின்பு திரும்பக் கூடுங்காலத்திலேதானே உளதாம் என்று நினைத்து, இப்போதைய பிரிதலுக்கும் நெடுங்காலத்துக்குப் பிந்திய கூடுதலுக்கும் மத்தியில் மிகவும் நீடித்த பிரிவுள்ள தென்று நினையாதே; உன்னைச் சேரும் முன்பு, (தசரத குமாரரேம்) நால்வரா யிருந்தேம். இப்போது முடிவுள்ள தென்று நினைக்க வொண்ணுத அன்புடையேமாய்ச் சகோதரர்களாக நாம் ஐவர்க ளுள்ளாரானேம்'.

மன்னும் - மிகவும் — பரிபா., சிந்தா. இனி - இப்போது. 'அன்புள' என்ற பாடத்துக்கு 'அன்புளது' என்பது துவ்விகுதி கெட்டு நின்றதாகக் கொண்டு, அன்பு (உனக்கும் எங்களுக்கும்) உள்ளது என்று பொருள் கொள்ளலாம். அல்லது, துவ்விகுதி வருவியாமல் இருக்கிறபடியே கொண்டு, (உனக்கு எங்கள்பாலும் எங்களுக்கு உன்பாலும் ஏற்பட்டிருக்கிற) அன்புகள் (நிலையாக) இருக்கின்றன என்று பொருள் கொள்ளலாம். இதற்குச் சில பாட்டுக்களுக்கு முந்திய 'தேனுள' என்ற பாட்டில் 'உள' என்பது துவ்விகுதி தொக்கு வந்துள்ளது காண்க.

அரசியற் படலம் 10-ம் பாட்டில் 'ஒருவேன் உள் உளை ஆகில் உய்தியால், இருவேம் உள்ளிருவே மிருந்திலேம்' என்றும் சூர்ப்பநகைப் படலத்தில் 140-ம் பாட்டில் 'ஒருமூவேம் கலந்த காலை' என்றும், 'ஒருவேன்' 'இருவேம்' 'மூவேம்' என்றுற் போல, இப்பாட்டில் 'நால்வேம்' என்றது கவனிக்கத் தக்கது. (99)

'எனக்குத் துணையாக வருதற்கு உன் தம்பி இலக்குமணன் இருக்கின்றான். அவ னிருக்கும்போது யான் துன்புறும்படி யான பகை யாதும் இன்றாம். நீயே, நான்; நானே நீ. என் சொற் கடவாமல் ஊருக்குப் போவாயாக' என்று இராமன் குகனைத் தேற்றிப் பின்னும் கூறுவான்.

அங்குள கிளைகாவற் கமைதியி னுளனும்பி
இங்குள கிளைகாவற் கியாருள ருரைசெய்யாய்
உன்கிளை யெனதன்றோ வுறுதுய ருறலாமோ
என்கிளை யிதுகாவென் னேவலி னினிதென்றான் (100)

கொண்டுகூட்டு: 'அங்கு உள கிளை காவற்கு உம்பி அமைதியின் உளன். இங்கு உள கிளை காவற்கு (உன்னையன்றி) யார் உளர்? உரை செய்யாய்! உன் கிளை எனது அன்றோ? உறுதுயர் உறலாமோ? என் கிளை இதை என் ஏவலின் இனிது கா' என்றான்.

பொருள்: 'அயோத்தியிலுள்ள நம்முடைய சுற்றத்தாரைக் காத்தற்கு உன் தம்பி பரதன் பொருத்தமா யிருக்கின்றான். இங்கே யுள்ள நம்முடைய சுற்றத்தாரைக் காத்தற்கு உன்னையன்றி யாரே உள்ளார்? சொல்லாய்! உன் சுற்றத்தார் என் சுற்றத்தாரல்லவா? (நீ என்னுடன் வந்தால், இவர்கள் காப்பாரில்லாமல்) மிக்க துன்ப முறலாமோ? இங்கே யுள்ளாராய என் சுற்றத்தாரை என் ஆணையின்படி இனிது காப்பாயாக' என்றான் இராமன்.

உம்பி - உன் தம்பி. உறு துயர் - மிக்க துன்பம். (100)

இராமனது ஆணைப்படி நடத்தலும் அவனைப் பிரிதலின் வருத்தமும் கடவானாக குகன் விடை கொண்டான். இராமன் சீதா லக்குமணருடன் வனத்திலே தூரமான இடம் அடைய நடை கொண்டான்.

---

# 7. வனம் புகு படலம்

வனத்துக்குப் புறப்பட்டு வழிச்சென்று கங்கையினது தென்கரையினை எய்திய இராமன் அப்பாலுள்ள ஆரணியத்தினுள்ளே பிரவேசித்ததைக் கூறுவது

### இராமன் சீதைக்கு வனத்தின் எழில் காட்டல்

அப்போது இளவேனிற் பருவமாயிருந்தது. அது, தோற்றத்தில் ஈரமுடைமையும் உண்மையில் ஈரமின்மையு முடைய பொதுமாதர் மனம் போலத் தனக்கு முந்திய பனிக்காலத்தின் ஈரமுடைய தென்று சொல்லுதற்கு மில்லாமல், பிந்திய முதிர் வேனிற் பருவத்தின் வறட்சியுடைய தென்று சொல்லுதற்கு மில்லாமல், இரண்டுக்கும் இடைப்பட்ட பொதுத் தன்மையுடையதா யிருந்தது. அப்படி யிருந்தது, தானுள்ள இடத்திலே, தெய்விக ராமன் எய்தியதாலே, தனக்குரியதினும் மிகுதியான தன்மை யுடையதாகி, நீர் காலும் கார்கால ஆரம்பம் போலத் தோன்றியது: அன்றி, வெயில் நிலவு போலக் குளிர, மரங்கள் குளிர் நிழல் கொடுக்க, மேகம் பனித்துளி போல மழைத்துளி தூற்ற, மலர்களுள் நுழைந்து மதுமணமளைந்த மந்தமாருதம் வந்து வீசிட, மயில் நடமாட, வழி யினிதாக, இராமன் வனத்திலே சென்றான். அப்போது, அவன், சீதையை நோக்கி, 'கரிய கூந்தலை யுடைய கலாப மயிலே! மஞ்சள் வண்ணமான கொன்றை மலர்க் குவியலின்மேல் தம்பலப் பூச்சிகள் தங்குதல், பைம்பொற் பணியிற் பதித்த பதுமராக மணிகள் போல்வதைப் பார்ப்பாயாக; மாந்தளிர் போல வாய்ந்த மேனியாய்! காந்தள் மலர்கள் ஏந்தும் இதழைக் கோதுதற்கு அந்த மலர்களில் அமர்ந்த கிளிகள் உன் கைக் கிளி யொப்பதைக் காண்பாயாக: எழுதரிய எழிலுடையாய்! காந்தளரும்பைப் பாம்பென்று மயங்கி மயில் கவ்வ, அதைக் கண்டு முல்லைக் கொடிகள் முறுவலிப்பது போல, அக்கொடிகளின் அரும்புகள் விளங்குவதை நோக்குவாய்: அகிற் புகை யூட்டிய அளக பாரத்தினாய்! கரை யருகுள்ள மலர்கள் நிறைந்த மரக் கொம்புகள் காற்றால் அலைந்து நீர்க்குள் முழுகி யெழுதல், அங்கமனைத்தும் ஆபரண மணிந்த மங்கைமார்கள் நீராடுதல் நேராதலைப் பாராய்: கள்ளுண்டு மயங்கிக் கண் மூடிக் காணமாட்டாத குருடர் போன்ற ஆண்வண்டுகள், பாடிக் கொண்டு பறக்கும் பெண்வண்டுகள் கண்ணுகைப் பாட்டோசை கோலாக, காது கையாக, ஓசைக்கோல் பற்றி ஆசைப்பாடுற்றுத்

தொடர்ந்து பறந்து போவதைப் பார்ப்பாயாக: வனத்தின் தரையே சித்திர மெழுதும் பத்திரமாகப் - பலநிறப் பூக்களும் அரும்புகளும் நிறைந்த கொம்புகள் அடர்ந்து கொடிகள் படர்ந்த நெடிய மரங்கள், வன்ன மயில்கள், மாங் குயில்கள், மடமான்கள் முதலானவை அவ்வவற்றின் சித்திரங்களாக, - வனம் சித்திரத் திரை ஒத்திருப்பதைக் காண்பாயாக!' என்று வனத்தின் வனப்பைக் காட்டிக்கொண்டு வழிச்செல்லும் போது மலை ஒன்றை எதிர் கண்டு, 'இது மாதவர் வாழிடம்' என்றான்.

### பரத்துவாசன் தவக் கோலம்

அப்போது, அந்த மலைக்கண் வாழும் பரத்துவாசன், இராமனைக் கண்டு, இதயம் பூரித்து, 'யான் செய்த தவப்பயன் எய்திய' தென்று, எதிர்கொண்டு வரவேற்க வந்தான்.

குடையின னிமிர்கோலன் குண்டிகை யினன்மூரிச்
சடையின னுரிமானின் சருமனன் மரநாரின்
உடையினன் மயிர்நாலு முருவின னெறிபேணும்
நடையினன் மறைநாலு நடநவி றருநாவான் (101)

கொண்டுகூட்டு: (அந்த முனிவன்,) குடையினன்; நிமிர் கோலன்; குண்டிகையினன்; மூரிச் சடையினன்; உரிமானின் சருமன்; நல் மரநாரின் உடையினன்; மயிர் நாலும் உருவினன்; (தவ)நெறி பேணும் நடையினன்; மறை நாலும் நடம் நவில்தரும் நாவான்.

பொருள்: அந்த முனிவன், குடை தண்டு கமண்டலம் ஏந்தியோனும், சடை மான்தோல் மரவுரி யாடை தரித்தோனும், அங்க மெங்கும் உரோமங்கள் தொங்கும் மேனியோனும், தவ நெறியைப் பேணும் ஒழுக்கத்தோனும், நான்கு வேதங்களும் நடனமிடும் நாவினோனுமாகத் தோன்றினான்.

நிமிர்தல் - நீளல். கோல் - ஊன்றுகோல். நிமிர்கோல், முன் பின் தொடர்ச்சியால், முனிவர்க்குரிய தண்டினை யுணர்த்தியது. குண்டிகை - கமண்டலம். மூரி - பெருமை. உரி(த்த) மானின் சருமன் (- தோலை யுடையவன்). மரநாரின்உடை - மரவுரி. நாலுதல் - தொங்குதல். நெறி - (முனிவர்க் குரிய தவ) நெறி. பேணும் - காக்கும். நடை - ஒழுக்கம். நவிலுதல் - பயிலுதல். முனிவர், சௌளஞ் செய்து மயிர் கழியாமையால், மயிர் வளர்ந்து அங்கமெங்குந் தொங்கப் பெற்றவ ரென்பது விளங்க, 'மயிர் நாலும் உருவினன்' என்றார். இப் பாட்டிலே, பூர்வகாலத்தில் இருடியரா யிருந்தார் எவ்வாறு தோன்றினா ரென்பதை நம் கண்

ணெதிர் காட்டினுற் போலத் தவக்கோல வருணனை நன்கு செய்திருப்பது நயந்து பாராட்டத் தக்கது. (101)

### பரத்துவாசன் இராமனுக்கு விருந்திடல்

அந்த முனிவன் இராமனைத் தன் இருப்பிடத்துக் கிட்டுச் சென்று, விருந்து அருந்துவித்து, 'இந்த இடம், கங்கை, யமுனை, சரசுவதி யாகிய மூன்று திவ்ய நதிகள் சேரும் சங்கமத் தலமாய்த் திரிவேணி சங்க மென்னும் சிறப்பு நாமம் படைத்த தாதலால், இங்கே தங்கி யினிது வாழ்வாயாக' என்றான். இராமன் 'இவ்விடம், அயோத்திக் கருகாகவுள்ள தாதலால், யாவரும் இங்கு வருவர்; தூரமான இடத்துக் கேகுதல் நல்லது' என்று சொல்ல, முனிவன் தன் வேண்டுகோளை வற்புறுத்தாதாய், 'இதற்குப் பதின்காவத தூரத்துக் கப்பால், சித்திரகூட பருவதம் இருக்கின்றது; அங்கே செல்லுக' என்றான்.

### சித்திரகூடத்திற்கு இராமன் செல்லல்

இராமன் அம் முனிவனை வணங்கி, விடைபெற்று, வழிச் செல்லா நிற்கையிலே, காளிந்தி நதியைக் கண்டான். அதனைக் கடக்க, இலக்குமணன் மூங்கிற் கழைகளைக் கொடிகள் கொண்டு கட்டிச் செய்த தெப்பத்தில் இராமன் சீதையுடன் ஏறியிருக்க, அதனைத் தள்ளிக்கொண்டு நீந்திச் சென்று கரைசேர்த்தான். பின்பு, அவர் மூவரும் பல காவதம் சென்றபோது, விண்ணுட்ட வரும் அண்ணாத்தல் செய்து மேல்நோக்கிக் கண்டுவியந்து வணங்கும் படியான உயர்ச்சியும் மகத்துவமும் ஒருங்குடைய சித்திரகூட சிகரம் தெரியலுற்றது.

---

## 8. சித்திரகூடப் படலம்

***இராமன் சீதைக்குச் சித்திரகூட மலைவளங் காட்டிச் சென்று அந்த மலையிலே இலக்குமணன் சமைத்த சாலையிலே தங்கித் தவஞ் செய்ததைச் சாற்றுவது***

### சித்திரகூட மலைவளம்

இராமன், சீதைக்கு, வழி நடக்கும் போதே மலைவளங் கூறுவானாய், 'உடைவாளும் வடிவேலும் ஒன்றுகூடினாற் போல ஒளியும் கூர்மையும் ஒருங்குடைய கண்ணினாய்! இந்த மலையும் இதன்மீது படிந்திருக்கும் சூல்மேகமும் வேற்றுமை தெரியாதன வாய் விளங்குதலை நோக்குவாயாக. மலை யாடுகள் மரகத மணிகள் மலிந்து * வயங்கும் † வளாகங்கள் ‡ மீது வாவிச் § செல்லும் போது, அம் மணிகளின் பச்சொளி பரவப்பட்டுப் பகலவ $ னுடைய பச்சைக் குதிரைகள் ஒப்பத் திகழ்வதைப் பார்ப்பாயாக' என்றான்.

**வடங்கொள் பூண்முலை மடமயி லேமதக் கதமா**
**அடங்கு பேழ்வயிற் றரவுரி யமைதொறுந் தொடக்கித்**
**தடங்க டோறுநின் றுடுவ தண்டலை யயோத்தி**
**நுடங்கு மாளிகைத் துகிற்கொடி நிகர்ப்பன நோக்காய் (102)**

கொண்டுகூட்டு : 'வடங்கொள் பூண் முலை மட மயிலே! மதக் கதமா அடங்கும் பேழ் வயிற்று அரவு உரி அமை(கள்)தோறும் தொடக்கித் தடங்கள் தோறும் நின்று ஆடுவ, தண்டலை அயோத்தி மாளிகையில் நுடங்கும் துகிற்கொடி நிகர்ப்பன நோக்காய்!

பொருள் : 'இரத்தின வடங்களைக் கொண்ட மாலை ஆகிய ஆபரணத்தை அணிந்த தனங்களை யுடையாய்! ஆனைகள் அடங்கும்படியான பெரிய வயிற்றினை யுடைய மலைப் பாம்புகளின் தோல்கள் மூங்கில்கள்தோறும் தொடக்குண்டு நாம் செல்லும் வழி யெல்லாம் காற்றால் அசைபவைகள் அயோத்தி நகரத்து மாளிகைகளில் அசைகின்ற சேலைக் கொடிகள் போல் பறப்பவற்றைப் பார்ப்பாயாக!

மதக் கத மா - மதத்தினையும் கோபத்தினையும் உடைய யானை. பேழ் - பெருமை. உரி - தோல். அமை - மூங்கில். தடம் - வழி. தண்டலை -

---

* மலிந்து - மிகுந்து. † வயங்கும் - விளங்குகின்ற. ‡ வளாகம் - இடம். § வாவி - தாவி. $ பகலவன் - சூரியன்.

சோலை. நுடங்குதல் - அசைதல்.—பத்துப்பா. 'அயோத்தி (நகரத்து) மாளிகை(யில்) நுடங்கும் துகிற்கொடி' யெனக் கூட்டிக்கொள்க.

பாட பேதம் : மழை மதமா. (102)

சீல மின்னதென் றருந்ததிக் கருளிய திருவே
நீல வண்டினம் படிந்தெழ வளைந்துட னிமிர்வ
சோலை வேங்கையின் கொம்பர்கள் பொன்மலர் தூவிக்
காலி னிற்றொழு தெழுவன நிகர்ப்பன காணாய் (103)

கொண்டுகூட்டு : 'சீலம் இன்னது என்று அருந்ததிக்கு அருளிய திருவே! நீல வண்டினம் படிந்து எழ, வளைந்து, உடன் நிமிர்வ(னவாகிய) சோலை வேங்கையின் கொம்பர்கள், பொன் மலர் தூவி (உன்) காலினில் தொழுது எழுவன நிகர்ப்பன காணாய்!

பொருள் : 'சிறந்த கற்பின் ஒழுக்கம் இப்படிப்பட்ட தென்று (ஒழுகிக் காட்டிக் கற்பிற் சிறந்த) அருந்ததிக்குக் கற்பித்தருள்செய்த இலக்குமீ! நீல நிறமுடைய வண்டுக்கூட்டம் தம் மேற் படிந்து எழ, (படிந்தபோது தாம் பூமியைத் தொட) வளைந்து, (எழுந்தபோது தாமும்) உடனே எழுவனவாகிய வேங்கை மரக் கொம்புகள் (அவ்வாறு வளைந்து நிமிரும் அசைவினால், தமது மஞ்சள் வண்ணமான மலர்களை உதிர்க்கா நின்று, அருச்சனைத் திரவியமாகப்) பொன் மலர்களைத் தூவிப் பூமியிற் படிந்து உன் காலில் விழுந்து பணிந்து எழுந்திடுகின்றவை போல்பவைகளைப் பார்ப்பாயாக!' என்றான் இராமன்.

'உடனிமிர்வ' என்பதை 'உடன் நிமிர்வ' என்று சந்தி பிரித்தலன்றி 'உடல் நிமிர்வ' என்றும் பிரிக்கலாம். 'காலினிற்றொழுது' என்பதை 'நின் காலில் தொழுது' என்றும் 'காலில் (விழுந்து) நின்(னைத்) தொழுது' என்றும் கொள்ளலாம். (103)

'வேடுவர் தினைப்புனங் காக்க வைத்திருக்கும் பறைகளைச் சில குரங்குகள் அடித்து முழக்குவதையும், மா, பலா, வாழைகளில் வேறு சில குரங்குகள் பழங்கள் பறிப்பதையும், கிழங்குகளெடுக்கப் பன்றிகள் மண் பறிப்பதையும், உயர்ந்த மரக் கொம்புகளில் தொடுக்கப்பட்டுத் தொங்கும் ஊஞ்சல்களில் வேடுவ மகளிர் பாடுதலையும், அவர் பாட்டுக் கேட்டு அவர் மாட்டுக் கேகயப்*புள் விரைவொடு வருதலையும், மலையின் உச்சியில் மத்தியான சூரியன் வயங்குதல், மலைமுடியில் வயிர முடியைக் கவித்ததை நிகர்ப்பதையும், நிறையப் பூத்த முருக்க

* கேகயம் - குயில்.

விருக்கம் நெருக்கமாக விருக்கு மிடத்தில், காடு தீப்பட் டெரிவது போலக் காணப்படுவதையும் கண்ணுறுவாயாக!' என்று இராமன் சீதைக்கு மலைவளங் காட்டிக்கொண்டு வழிச் செல்லும் போது, அங்குள்ள முனிவர்கள் எதிர்கொள்ள, வணங்கி, அவர் களுக்கு விருந்தானன்.

### இலக்குமணன் சாலை சமைத்தல்

அங்கே, இலக்குமணன், மூங்கில்களை வெட்டி, குறிய துண்டு கொண்டு தூண் நட்டு, நெடிய துண்டு கொண்டு முகட் டிலும் நாற்புறங்களிலும் விட்ட மிட்டுக் கிளைகளை வளைகளாகவும் வரிச்சுகளாகவும் விரிச்சுக் கொடிகளைக் கயிறுகளாகக் கொண்டு அவைகளை விலகாமற் கட்டி, மேலே தேக்கிலை பரப்பி, அதன் மேல் நாணற் புல்லாற் கூரை வேய்ந்து, மூங்கில்களைக் கொண்டே சூழவும் சுவர்கள் போக்கி, அவைகளைக் குழைத்த மண் கொண்டு மறைத்து, நீர் தெளித்து மெழுகித் தாசரதி தங்கு வதற்குச் சாலை சமைத்தான். அவ்வாறே மைதிலி வைகுதற்கு மற்றொரு சாலை வகுத்து, அதன் சுவர்களைக் குங்குமக் குழம்பு போன்ற செக்கச் சிவந்த சேற்றினால் தீற்றி, ஆற்றிலே பொறுக் கிய பொன்னும் மணியும் பதித்து, மென் மயிற்பீலியால் விதானம் அமைத்து, அடித் தளத்திற் புதுப்பூச் சிதறி அழகும் இனிமையும் அமையச் சமைத்தான். அச் சாலையில் இராமன் சீதையுடன் குடிபுகுந்தான்.

### அங்கு இராமன் தவஞ்செய்து வைகல்

அந்தச் சாலை, மாயை நீங்கியவர் மன மென்றும், மாமறை யென்றும், திருப்பாற்கட லென்றும், சீவைகுந்த மென்றும் செப்பலாம்படி யிருந்தது. அவை யெல்லாவற்றினும் சிறந்த தாக, அரும்பெற லன்பார்ந்த இலக்குமணன் இதயத்தில் விருப் புடனிருக்குதல் போல, இராமன் அச் சாலையில் இருந்தான். இருந்தவன், 'சீதையின் மெல்லிய பதங்கள் கல்லிடை நடந்தன, இலக்குமணனது மேன்மையான கைகள் தாழ்மையான வேலை செய்து சாலை சமைத்தன' வென்றெண்ணி, இளையவனை நோக்கி, 'இந்தத் தொழில் என்று கற்றாய்?' என்று கூறிக் கண்ணீர் சொரிந்து கொண்டு, 'சக்கரவர்த்தியின் ஆணைப்படி நடந்து புகழ் பெற்றே னென்பதிற் பயன் யாது! அதனால் உனக்கு நீடித்த துன்பஞ் செய்தே னானேன்' என்றான். இளைய

வன், தமையனுக்குச் செய்யும் பணிவிடை தனக்கு இன்பமா யிருக்க, அதனைத் துன்ப மென்றதற்காக வருந்தி, ‘உன் துன் பத்துக்கு அடிப்பட்ட காரணம் நீ தசரதற்கு மூத்த மகனுகப் பிறந்தது’ என்று கூறித் தமையனது தற்கால தசைக்கு வருந்த, இராமன், அவன் வருத்தத்தைத் தவிர்ப்பதற்குப் பொருத்தமான போத மொழி புகல்வானுய், ‘இருக்கும் பொருளை இழப்பது பற்றிப் பயந்து சோகித்தலும், இருந்த பொருளை யிழந்தது குறித்துத் துயர்ந்து* சோகித்தலும் செல்வர்க்குண்டு. துக்க பய சோக காரணமான சொத்தில்லாத் வறியார்க்கு, அவ் விரு வகைத் துன்பமும் இல்லாமையாகிய எல்லையில்லாத இன்பத் துடன், வறுமை வழியாக மறுமை யின்பம் வாய்ப்பதையும் சேர்த்துச் சிந்திப்பாயாக,’† என்று கூறித் தேறுமாறு செய் தான். செய்த பின்பு, தேவியும் தம்பியும் சிசுருடை செய்யச் செய்யதவம் செய்து வைகினுன்.‡

---

* துயர்தல் - துன்புறுதல்.

† இங்கே ‘ஒட்டகம் ஊசித் துவாரத்தூடு போகுதல் கூடுமாயினும், செல்வர் சுவர்க்க வாசலுள்ளே செல்லார்’ என்ற ஏசுநாதர் ஞானபோதம் ஞாபகத்துக்கு வரு கின்றது.

‡ வைகினுன் - வசித்தான்.

# 9. பள்ளி அடைப் படலம்

தைலமாட்டுப் படலத்திற் கூறியவாறு,
தைலத்தி லிடப்பட்டிருந்த தசரதன் சரீரத்தை ஈமப்பள்ளியில்
அடைவித்ததைக் கூறுவது *

### பரத சத்துருக்கர் அயோத்திக்கு வரல்

வசிட்டன் ஆணைப்படி சென்ற தூதுவர் பரதனிடத்துத் திருமுகங் கொடுக்க, அவன் படித்துப் பார்த்து, இராமனைக் காணும் பேரவா பிடர்பிடித் துந்த † நாளுங் ‡ கோளும் § நிமித்தமும் $ பாராமல், விரைவாகச் சத்துருக்கனோடு புறப் பட்டுச் சேனை சூழ, வாத்தியங்களின் ஒலி மறையவர் வாழ்த் தொலியில் மறைய, அயோத்தியை நோக்கிச் சென்றான். அவனும் அவனுடன் சென்றவர்க ளெல்லாரும், தாம் நீங்கி யிருந்த அயோத்தியை விரைவில் அடையும் விருப்பினராய்த் தேவலோகத்தினின்று பூமிக்கு வந்த தேவர் திரும்ப விரைந்து தேவலோகஞ் செல்வார் போல, வேகமாப் போனார்கள். காடுகளும் மலைகளும் கடந்து கோசல நாட்டை அடைந்தார்கள்.

### கோசல நாட்டின் பாழுற்ற நிலை

அங்கே பழங்களும் மலர்களும் பறிப்பாரின்றி மண்மிசை உதிர்ந்து வாளா §§ கிடக்கும் சோலைகளையும் முதிர்ந்த நெற் கதிர் அரிவாரின்றிச் சாய்ந்து முளைத்த வயல்களையும் பரதன் பார்த்தான்.

---

* ஈமம் - விறகு. 'ஈமம் ஏறு இயல்புடையவர் - உடன்கட்டையேறுதமகளிர்'—**பெருங்.** பள்ளி - இடம். 'பளிக்கறைப்பள்ளி - பளிங்கறையிடம்'—**மணிமே.** இப் படலம் 130-ம் பாட்டில் 'தீக்கலம் (ஈமப்பள்ளி) திருத்திச் செல்வனை வெய்தி னேற்றினர்' என வருதல் காண்க. 'அடை' அடைவித்த லென்று பிறவினைப் பொருள்படப் பிரயோகிக்கப்பட்டிருக்கும் முதனிலைத் தொழிற் பெயர். பரதன் அரண்மனையை அடைந்து நடந்த செய்தியை யுணர்த்தலின் இப் படலத்துக்கு இப் பெய ரிடப்பட்ட தென்றனர் ஒருரைகாரர்.—**திரு. ச.** மற்றொருவர் (**வை. மு. கோ.**) இதனைப் 'பள்ளி படைப் படலம்' என்று கொண்டு 'இறந்த உடலை எரிக்குமாறு ஈம விறகினா லியன்ற படுக்கையிற் கிடத்தல்' என்றார். பள்ளிபடை, பள்ளிப்படை என்றும் கல்வெட்டில் காணப்படுகின்றது. இதனுள் 'ப்ப' கூட்டெழுத்தில் 'ய' வாகப் படிக்கப்பட்டதன் தவறு 'பள்ளி யடை' என்று வழங்கலாயிற்று என்பர்.

† உந்த - தள்ள. ‡ நாள் - நட்சத்திரம். § கோள் - கிரகம். $ நிமித்தம் - சகுனம். §§ வாளா - வீணாக.

அலர்ந்த பைங்கூ ழகன்குளக் கீழன
மலர்ந்த வாயிற் புனல் வழுங் காமையால்
உலர்ந்த வன்கண் ணுலோபர் கடைத்தலைப்
புலர்ந்து நிற்கும் பரிசிலர் போலவே (104)

கொண்டுகூட்டு : வன்கண் உலோபர் கடைத்தலையில் புலர்ந்து நிற்கும் பரிசிலர் போல, அலர்ந்த பைங்கூழ், அகன் குள (மடை)க் கீழன (ஆயினும்,) மலர்ந்த (வரப்பு மடை) வாயில் புனல் வழுங்காமையால் உலர்ந்த.

பொருள் : இரக்கமற்ற உலோபிகள் வீட்டுத் தலைவாசலில் (அவ் வீட்டுள்ளே பொருள் நிறைய விருந்தும் அவ் வுலோபி களால் ஒன்றும் உதவப்பெருமையால்) வாடி நிற்கும் யாசகர் போல, நெற் பயிர்கள், நீர் நிரம்பின குளத்தின் மடை அடியி லுள்ளனவாய் அமைந்திருந்தும், நீர் பாய்தற்குத் திறந் திருக்கின்ற வரப்பு மடை வாயில் நீர் பாய்ச்சுவார் பாய்ச்சாத தனுல் நீர் செல்லப் பெருமையால் வாடியிருந்தன.

அலர்ந்த - விரிந்த. பை - பசுமை. கூழ் - பயிர். அலர்ந்த பைங் கூழ் - (வயல் முழுதும் நிறைந்து) பரந்த பசுமையான (நெற்) பயிர். அகன் குளம் - அகன்ற குளம். கீழன - (குளத்தின் மடை) அடியி லுள்ளன. மலர்ந்த - விரிந்த - திறந்த. மலர்ந்தவாய் - (உண்ணுதற்குத் திறந்த வாய் போல, நீரை உட்கொள்ளத்) திறந்த (வரப்பு மடை) வாய். புனல் - நீர். வழுங்கல் - செல்லல்—மணிமேகலை. வழுங்கலுக்குக் கொடுத்த லென்ற பொருள் கொண்டு, 'புனல் வழுங்காமையால்' என் பதற்கு '(நீர் பாய்ச்சுவோர் பாய்ச்சி நீர் கொடாமையா' லென்றும் பொருள் செய்யலாம். உலர்ந்த - வாடின. வன்கண் - இரக்க மின்மை. கடைத்தலை - தலைவாயில். புலர்தல் : வாடுதல். பரிசிலர் - இரப்போர்.

குளம் உலோபர் வீட்டுக்கும், குளத்தில் நிறைந்த நீர் அவ்வீட்டுள் நிரம்பிய செல்வத்துக்கும், உலோபர் நீர் பாய்ச்சிகளுக்கும், உலோபரது இரக்க மின்மை (தசரதன் இறந்ததனுலும் இராமன் வனம் சென்றத னுலும் ஏற்பட்ட) நீர்பாய்ச்சிகளினது சிரத்தை யின்மைக்கும், குளத்தின் (மடை) அடியில் நிற்கும் நெற்பயிர் உலோபர் வீட்டுத் தலைவாசலில் நிற்கும் யாசகர்க்கும், பயிர்கள் நீர் பெறுதற்குத் திறந்திருக்கிற வரப்பு மடைவாய் யாசகர் பொருள் பெறுதற்கு விரித்திருக்கிற கைக்கும், நீர் வழுங்காமை பொருள் வழுங்காமைக்கும் உவமை : வாடி நிற்றல் பயிர்க்கும் யாசகர்க்கும் பொது. (104)

சுருங்கச் சொன்னுல், கோசல நாடு உயிர் நீங்கிய உடலை ஒத்திருந்தது. அதனை நோக்கின பரதன், துன்புற்றுத் திகைத்து நின்று, அந் நிலைமைக்குக் காரணம் யாதென்று

தெரியானுய்ச் சத்துருக்கனை நோக்கி, 'யாம் இனிக் கேட்டுத் தெரிவதாக வுள்ள தீது யாதோ நேர்ந்திருக்கின்றது' என்று கூறி நெடுமூச்சு விட்டான். பின்பு, அயோத்தி நகரை அணுகி அதனை நோக்கினுன்.

### அயோத்தியின் அலங்கோலம்

அண்ட முற்றுந் திரிந்தயர்ந் தாயமு
துண்டு போதியென் றெண்கதிர்ச் செல்வனை
விண்டொ டர்ந்து விலக்குவ போன்றன
கண்டி லன்கொடி யின்நெடுங் கானமே (105)

கொண்டுகூட்டு : '(சூரியனே!) அண்டம் முற்றும் திரிந்து அயர்ந்தாய்; அமுது உண்டு போதி' என்று, ஒண் கதிர்ச் செல்வனை, விண்(ணிற் சென்று) தொடர்ந்து, விலக்குவ போன்றன (வாகிய) கொடியின் நெடுங்கானம் கண்டிலன்.

பொருள் : 'சூரியனே! அண்ட கோள முழுதிலும் சஞ்சரித்துத் தளர்ந்து விட்டாய்; இந் நகரிலே தங்கி அமுதுண்டு தளர்வு தீர்த்துக்கொண்டு போவாயாக' என்று, சூரியனை, அவன் செல்லும் விண்ணிற் போய்த் தொடர்ந்து அவன் இளைப்பாருது போதலை விலக்குவன போல் அசைவனவாய் எப்போதும் உயர்த்தப்பட்டுள்ளனவான கொடிகளின் பெருங் கூட்டத்தை அயோத்தியிலே பரதன் கண்டானில்லை.

அமுது உண்டு - சோறு புசித்து; நீர் குடித்து. கொடியின் நெடும் கானம் - கொடிகளின் பெருங் கூட்டம்; காடு என்னும் பொருளுடைய 'கானம்' மிகுதியை உணர்த்தியது. (105)

பரதன், 'பொருள்கள் வேண்டுவோர் வாங்கிக்கொண்டு போங்கள்' என்று எப்போதும் இரவலரை அழைக்க முழக்கும் கொடை முரசொலித்தலைக் கேட்டானில்லை. சங்கீத வித்துவான்களும், சாகித்திய வித்துவான்களும் யானை குதிரை முதலிய பரிசுகளைப் பெற்று வரிசை வரிசையாகச் செல்வதைக் கண்டிலன். பசுக்கள் முதலிய பல தானங்கள் வாங்கிப் பலபல பகுதிகளாகப் பார்ப்பார் போவதையும் பார்த்தா னில்லை. நீரில்லாத ஆறுகள் போலத் தெருக்கள் சனமில்லா திருக்கக் கண்டான். 'இளையவ! இது தசரத சக்கரவர்த்தியின் நகர் தானே! இந் நகர் எல்லாச் செல்வங்களோடும் சீதேவி நீங்கிய திருப்பாற்கடல்போ லிருப்பானேன்?' என்றுன்.

### பரதன் அறிதல்

பின்பு தசரதனது அரண்மனையை அடைந்து, அவனிருக்கு மிடமெல்லாந் தேடிக் காணுனய்த் திகைத்துக்கொண் டிருக்கும் போது ஒரு தாதி வந்து, 'அன்னை உங்களை அழைத்துவரச் சொன்னுள்; வாருங்கள்' எனச், சென்று, கைகேயியைக் கண்டு வணங்கினுன். அவள், 'தாய் தந்தையரும் தங்கை யரும் சேமமோ?' எனப் பரதன் 'ஆம்' என்ருன். அதன் பின், 'சக்கரவர்த்தியைக் கண்டு தாள் தொழ விரும்புகின்றேன்; எங்கிருக்கின்ருன்?' என்ருன். அவள், 'அவன் விண் ணுற்ருன்' என்று வெட்டினுற் போலச் செப்பினுள். அந்த வார்த்தை அவன் காதில் விழுந்ததும், இடி விழுந்த மரம் விழுந்தாற் போலக் கீழே விழுந்து உணர்வும் உயிர்ப்பும் ஒழிந்து கிடந்தான். பின்பு, பிரக்கினை வரப்பெற்று, அருவி பொழியும் கண்ணனுய்ச் 'செவியிலே தீயை வைத்தாற் போலத் தீய சொல்லை, நீ ஒருத்தி தவிர, எவராயினும் இவ்வாறு வருந்தாது சொல்லுதற்கு எண்ணவுமாட்டார்களே!' என்று சீறிக் கூறி எழுந்து, ஏங்கி இரங்கித் திரும்பவும் விழுந்து, விம்மி வெய்துயிர்த்து, அலறி அழுது, 'ஐயா! நீ யிறக்கலாமோ! அது அறத்தையும் அருளையும் அழித்த தன்ருே! யாரைப் பிரிந்தாலும் பிரியாத இராமனை யெவ்வாறு பிரிந்தாய்! இந்த உலகில் இரவலரை இனிய நண்பினராக இனிதேற்று அவரெல்லாருக்கும் இட்ட பூர்த்தி செய்து உவந்திருந்தாய். அந்த உலகில் இரவலர் இல்லையே. அங் கேன் சென்ருய்! உனது குளிர்ந்த குடை நிழற்கீழ் இருந்தா ரெல்லாரும் வருந்தா நிற்க, அவர்களை நீ கைவிட்டுக் கற்பக நிழலைக் காதலிக்க லாமோ?' என்று இவ்வாறு பலவாறு புலம்பினுன். பின்பு கைகேயியை நோக்கி, 'என் தமையனும், தலைவனும், தந்தையும், தாயும் ஒருவனுன இராமனைத் தொழுதா லன்றி என் துன்பம் ஒழியாது' என்ருன்.

அப்போது, அவள், 'சீதை இலக்குமணனுடன் இராமன் வனத்தில் இருக்கின்ருன்' என்ருள். அது கேட்டு, அவன், நெருப்புண்டவன் போல வருத்த மடைந்து, 'இன்னமும் துன் பச் செய்திகள் எத்தனை கேட்க இருக்கின்றனவோ!' என்று ஏங்கிப் பொருமி, 'வனம் போன காரணம் யாது?' என, 'மன்னவன் வாக்கினுல் வழங்கி யிருந்த வரங்க ளிரண்டில் ஒன்ருல் இராமனைக் காட்டிற் போக்கினேன்; மற்ருென்ருல்

உன்னை மன்னவ னாக்கினேன்' என்றாள். எனவே, அத் தீய சொற்கள் செவியுறாமல் தடுக்கக் கைகள் காதுகளை மூடின; கடுஞ் சினம் மூண்டது; புருவங்கள் குனித்தன; கண்கள் கோபத் தீயையும் மூக்குப் பெருமூச்சுக் காற்றையும் வீசின; கன்னம் துடித்தது; வாய் மடித்தது; மண் பிளக்குமாறு கைகள் அடித்தன.

பரதன், தன் தாயைக் கோபித்தல்

கொடியவெங் கோபத்தாற் கொதித்த கோளரி
கடியவ டாயெனக் கருது கின்றிலன்
நெடியவன் முனியுமென் றஞ்சி நின்றனன்
இடியுரு வனையவெம் மொழியி யம்புவான் (106)

கொண்டுகூட்டு: கொடிய வெங் கோபத்தால் கொதித்த கோளரி, கடியவள் (கைகேயி) தாய் எனக் கருதுகின்றிலன், நெடியவன் முனியும் என்று அஞ்சி(க் கொல்லாமல்) நின்றனன், (அவளை நோக்கி,) இடி உரும் அனைய வெம் மொழி இயம்புவான்.

பொருள்: கொடிய கடிய கோபத்தாற் கொதிப்புண்ட சிங்கம் போன்ற பரதன், கடியவளான கைகேயி தாயாயிருக் கின்றா ளென்று (சற்றேனும் தாட்சணியத்துடன்) கருதானாய் (அவளைக்கொல்ல உன்னிக் கொன்றுவிட்டால்,) இராமன் கோபிப்பானே யென்று, கொல்லுதற்கு அஞ்சிக் கொல்லாமல் தடைப்பட்டு நின்று அவளை நோக்கி, இடியை ஒத்த கடிய சொற்கள் கூறுவானானான்.

கோளரி - சிங்கம்: கோள் (- வலி) அரி (- சிங்கம்) எனப் பிரித்து வலியுடைய சிங்க மென்றும் பொருள் செய்யலாம். முனிதல் - சினத்தல்; வெறுத்தல். உரும் - இடி. இடி உரும் - இடிக்கின்ற இடி.

பரதனது ராம பத்தியே அவன் தாயைக் கொல்ல நினைத்ததற்கும் கொல்லாது தடைப்படுதற்கும் காரணமா யிருந்தது கவனிக்கத் தக்கது. இராமன் திறத்தில் அவனுக்கிருந்த ஆழ்ந்த அன்பின் அளவு இங்கே இனிதாகத் திருட்டாந்த முகத்தால் தெளிவிக்கப்பட் டிருத்தல் சிந்தனை செய்யத்தக்கது. (106)

மாண்டன னெந்தையென் றம்முன் மாதவம்
பூண்டன னின்கொடும் புணர்ப்பி னாலென்றால்
கீண்டிலன் வாயது கேட்டு நின்றயான்
ஆண்டன னேயன்றோ வரசை யாசையால் (107)

கொண்டுகூட்டு : (பரதன் கைகேயியை நோக்கி,) ‘நின் கொடும் புணர்ப்பினால் “எந்தை மாண்டனன் ; என் தம்முன் மாதவம் பூண்டனன்” என்றால், (உன்) வாயைக் கீண்டிலன் ; அது கேட்டு நின்ற யான் ஆசையால் அரசை ஆண்டனனே அன்றோ !

பொருள் : (பரதன், கைகேயியை நோக்கி,) ‘உன் கொடிய சூழ்ச்சியால் “என் தந்தை இறந்துபட்டான், என் தமையன் தவசியானான்” என்று கூறினாய் என்றால், அவ்வாறு கூறிய உன் வாயைக் கிழியேனாய் அதைக் கேட்டுச் சும்மா நின்ற யான் ஆசையோடு அரசை ஆண்டேனேயாவே னன்றோ !’ என்றான்.

எந்தை - என் தந்தை. தம்முன் - தமையன். புணர்ப்பு - சூழ்ச்சி. கீளுதல் - கிழித்தல். (107)

பரதன், கைகேயியை நோக்கி, ‘நீ உண்மையில் தாயா யில்லை, பெயர் மாத்திரையே தாயா யிருக்கிறாய் ; ஆதலால், உன்னைக் கொல்லத் தடை யில்லாத யான் உன்னைக் கொன்று விடாததனால் நீ உயிரோ டிருக்கின்றாய். உன்னைக் கொல்லவில்லை யாயினும் என்னையேனும் கொல்லாமல் யான் உயிரோடிருக் கின்றேன். இருவரும் கொலையுண்ணா துயிரோடிருத்தற்குக் காரணம் இரு கொலைகளையும் இராமன் வெறுப்பா னென்பதே’ என்றான்.

நோயி ரல்லீர் நுங்கண வன்றன் னுயிருண்டீர்
பேயீ ரேநீ ரின்ன மிருக்கப் பெறுவீரே
மாயீர் மாயா வன்பழி தந்தீர் முலைதந்தீர்
தாயீ ரேநீ ரின்னு மெனக்கென் றருவீரே (108)

கொண்டுகூட்டு : ‘(நீர்) நும் கணவன் உயிர் உண்டீர் ; நோயீர் அல்லீர் ! நீர் இன்னம் இருக்கப் பெறுவீர் ; பேயீரே ! மாயீர் ! (எனக்கு) மாயா வன்பழி தந்தீர் ! முலை தந்தீர் (ஆதலின்) தாயீரே ! இன்னும் நீர் எனக்கு என் தரு(தற்குச் சாவாது வாழ்)வீர் !

பொருள் : ‘(நோய் உயிரை உண்ணும் ; அதுபோல,) நீர் உம் கணவ னுயிரை யுண்டீர் ! (ஆயின், நோய், தான் உண்ட உயிர் வாழ்ந்த உடம்போடு தானும் மாண்டு போம் : நீரோ அவ்வாறு மாளா திருக்கின்றீர் : ஆதலால் ; நீர்) நோயல்லீர் ! (நோய் போலப் பேயும் உயிருண்ணும் ; ஆனால், பேய் நோய்போ லன்றித் தன்னாற் கொல்லப்பட்டார் இறந்த பின், தான் இறவா திருக்கும் ; அதுபோல, நீர் உம் கணவனைக் கொன்றபின்) உயிர்வாழப் பெற்றிருக்கின்றீர், ஆதலால் நீர் பேயீரே ! (உருவத்தாற் பெண்ணாய்ச் செயலாற் பேயேயான நீர் இதுவரை

செய்த கொடுமை போதா தென்று இன்னும் அதிகக் கொடுமை செய்தற்கு நீண்ட ஆயுளுடையீராய்) மாய்வீ ரல்லீர்! (நீர் என் பொருட்டு என் தமையனைக் காட்டுக்கோட்டி என் தந்தையை இறக்கச் செய்ததனுல் நீர் மாய்ந்த பின்னும் எனக்கு) மாயாத வன் பழியைத் தந்தீர்! (பகைவர் தரலாகாத பழியைத் தந்த நீர் என்னை யீன்று எனக்கு) முலைப்பா லளித்தீ ராதலால் தாயெனக் கடவீரா யிருக்கின்றீர்! (எனக்குத் தமையன் காடுறை துன்பமும் தந்தை இறந்த துன்பமும் தந்த நீர்) இன்னமும் என்ன துன்பந் தருதற்கு(ச் சாவாது) இருக்கின்றீர்!

மாயா வன்பழி, தசரத னிறந்ததையும் இராமன் வனஞ் சென்றதையும் பற்றியது. 'நோயீரல்லீர்' என்பதற்கு 'விசன முடையவராகக் காணப்படவில்லை' என்று உரை உளது.—சோ. சு. (108)

இறந்தான் றந்தை யீந்த வரத்துக் கிழிவென்று
அறந்தா னீதென் றன்னவன் மைந்த னரசெல்லாந்
துறந்தான் றாயின் சூழ்ச்சியின் ஞால மவனோடும்
பிறந்தா னுண்டா னென்னுமி தென்னுற் பெறலாமே (109)

கொண்டுகூட்டு: 'ஈந்த வரத்துக்கு (அதன்படி செய்யாமை) இழிவு என்று தந்தை இறந்தான்; ஈது அறந்தான் என்று அன்னவன் மைந்தன் அரசெல்லாந் துறந்தான்; தாயின் சூழ்ச்சியின் ஞால(த்தை) அவனோடும் பிறந்தான் ஆண்டான் என்னும் இது என்னுற் பெறலாமே! (ஆகாது)'

பொருள்: 'கைகேயியின் வஞ்சனையால் மயங்கித் தான் கொடுத்த வரத்துக்கு விரோதமாக அந்த வரப்படி செய்யாமை இழி வென்று கருதி, (அவ் வரப்படி இராமனைக் காட்டுக் கனுப்ப ஒப்புக்கொண்டு, அது பொறுக்க மாட்டாமல்) தசரதன் இறந்தான்; அரசன் ஆணைப்படி செய்யும் இது தரும மென்று இராமன் அரசு முழுதும் துறந்தான்; தாயின் வஞ்சனையாற் கிடைத்த பூமியைப் பரதன் ஆள்வானு னென்னும் இந்தப் பழி யான் அடைய மாட்டேன். இப் பழி என்னுல் அடையலாகாதது' என்றுன் பரதன்.

'ஈது', அரச னுணைப்படி அரசு துறத்தலைக் குறித்தது, 'இது', முன் பின் தொடர்ச்சியால் இப்பழி யென்று பொருள்பட நின்றது. ஏகாரம் எதிர்மறை. 'இப்படிப்பட்ட, அறமுறை திறம்பாத, தரும மூர்த்திகளான தந்தை தமையனை யுடைய எனக்கும் இவ் விழிபழிக்கும் எவ்வளவு தூரம்!' என்பான் 'இதென்னுற் பெறலாமே!' என்றுன். பரதன், தசரதராமர்களைத் 'தசரதன்' 'இராமன்' என்னுமல் 'தந்தை' 'அன்னவன் மைந்தன்'

என்றதும், தன்னைப் 'பரதன்' அல்லது 'யான்' என்னுமல் 'அவனோடும் பிறந்தான்' என்றதும் இதனை வலியுறுத்தும். (109)

பரதன், 'தன் வரத்தால் தசரதன் சாவா னென்று தெரிந்தும், அந்த வசையை யேற்றுக் கொள்வாளாய், இவள் வரங் கொண்டது, என் பொருட்டென் றெண்ணி, இராமன் வனஞ் சென்றான்; அப்படி யெண்ணாது சென்றிருந்தா னானால், அரசன் இறந்த அன்றே திரும்பி யிருப்பான்; அவன் திரும்பாதது யான் அரசாள்வே னென்றெண்ணி யன்றோ! இவள் கேட்ட வரங் காரணமாகச் சக்கரவர்த்தி என்னைப்பற்றி யெண்ணிய வெண்ணம் யாதாயினும் ஆகுக, இராமன் தனக்குப் பணி செய்யும் யான் தீது நினைந்தே னென்று சிந்திக்கும்படி செய்ததினும் இவள் எனக்குச் செய்யும் பெருங் கேடு யாதிருக்கின்றது! என் தமையன் காட்டிலே கையே கலமாக இலையே உணவாக வருந்தி அருந்திக் காலந் தள்ளா நிற்க, யான் நாட்டிலே செம்பொற் கலத்திலே செந்நெற் சோற்றை நறுநெய் யொழுக நுகர்ந்து இனிது வாழ்கின்றே னென்று இந்த உலகோர் எண்ணுரோ! அவர்கள் அவ்வாறு நினையுமாறு, யான் இறவாமல் உயிரோ டிருக்கின்றேனே!' என்றான்.

வில்லார் தோளான் மேவினன் வெங்கா னகமென்ன
நல்லா னன்றே துஞ்சின னஞ்சே யனையாளைக்
கொல்லேன் மாயேன் வன்பழி யாலே குறைவற்றேன்
அல்லே னோயா னன்புடை யார்போ லழுகின்றேன் (110)

கொண்டுகூட்டு: 'வில்லார் தோளான் வெங்கானகம் மேவினன் என்ன, நல்லான் அன்றே துஞ்சினன்! நஞ்சு அனையாளைக் கொல்லேன், யான் மாயேன், வன் பழியாலே குறைவற்றேன் அல்லேனோ! அன்பு உடையார் போல் அழுகின்றேன்!

பொருள்: 'இராமன் கொடிய காட்டிலே சென்றா னென்று கேட்டு, அதைப் பொறுக்கமாட்டாதாய்க் கேட்ட அப்போதே சக்கரவர்த்தி இறந்தான்! அவனைக் கொன்ற விடம்போன்ற வளைக் கொல்கிலேன், யானும் சாகிலேன், கொடும் பழியுடைமையிற் குறைவற் றிருக்கின்றே னன்றோ! அப்படியிருந்தும் அன்புடையார் போல அழுகின்றேன்! (இது வேடமென் றன்றோ உலகம் எண்ணும்!)

வில் ஆர் தோளான் - வில் தங்கிய தோளை யுடையவன் - இராமன். நல்லான் - உத்தமன்; அறிஞன்; தசரதனை யுணர்த்தியது. துஞ்சினன்- இறந்தான். (110)

**பாரோர் கொள்ளார் யானுயிர் பேணிப் பழிபூணேன்**
**தீரா தொன்று ணும்பழி யூரிற் றிருநில்லாள்**
**ஆரோ டெண்ணிற் றுருரை தந்தா ரறமெல்லாம்**
**வேரோ டுங்கே டாக முடித்தென் விளைவித்தாய் (111)**

கொண்டுகூட்டு: '(யான் அரசனுவதைப்) பாரோர் கொள்ளார்; உயிர்பேணி யான், (தம்பி யாள்கின்ருன் என்னும்) பழி பூணேன்; (அப்) பழி ஒன்ருயினும் தீராது; ஊரில் திரு நில்லாள்; (இதைச் செய்ய நீ) எண்ணிற்று ஆரோடு? ஆர் உரை தந்தார்? அறமெல்லாம் வேரோடும் கேடு ஆக முடித்து என் விளைவித்தாய்!

பொருள்: 'யான் அரசனுவதை உலகோர் ஒப்புக்கொள்ளார்; அரசச் செல்வத்தோடு வாழும் உயிர்வாழ்க்கையை விரும்பி, யான் தமைய னிருக்கத் தம்பி ஆள்கிரு னென்னும் பழி பூண மாட்டேன்; யான் ஆள்வேனுல் அதனுலாகும் பழி எதனுலும் தீராதாகும்; அன்றி இந் நகரத்திலே இலக்குமி தங்கமாட்டாள்; (இவ்வா றெல்லாமாக, இந்தக் கொடிய பழிக்கும் கேட்டுக்கு மிடமான செய்கையைச் செய்ய, நீ) ஆலோசித்தது ஆரோடு? இதைச் செய்யும்படி ஆர் உனக்குப் புத்தி சொன்னுர்? அனைத் தறமும் அடியோ டழியும்படி செய்து என்ன பெருங் கேடு விளையச் செய்துவிட்டாய்!

எண்ணிற்று - எண்ணியது. உரை தந்தார் - உரைத்தார். முடித்து - அழித்து. என் - என்ன: யாது.

பாட பேதம்: ஒன்ருே துன்பமிவ்வூரில்: ஆருரை தந்தாய். (111)

**கொன்றே னுனென் றந்தையை மற்றுன் கொலைவாயால்**
**ஒன்ருே கானத் தண்ணலை யுய்த்தே னுலகாள்வான்**
**நின்றே னென்ரு னின்பிழை யுண்டோ பழியுண்டோ**
**என்றே னுந்தா னென்பழி மாயு மிடமுண்டே (112)**

கொண்டுகூட்டு: '(உன் செய்கைக்கு இணங்கி) என் தந்தையை நான் கொன்றேன்! (அது) ஒன்ருே, மற்று உன் கொலை வாயால் அண்ணலைக் கானத்து உய்த்தேன்! உலகு ஆள்வான் நின்றேன்! என்ருல், (அது என்பிழையும் பழியுமன்றி) நின் பிழை உண்டோ? பழி உண்டோ? என்றேனுந்தான் என் பழி மாயும் இடம் உண்டே! (இல்லை.)

பொருள்: '(இராமனைக் காட்டுக்கோட்டி இராசனைக் கொன்ருயென்று தெரிந்தவுடனே இறந்திருத்தற்பாலேன், இறவா திருக்கின்றேன், ஆகவே உன் கொடிய செயல்களை யான் ஒப்புக் கொண்டேனுகி) என் தந்தையை யானே கொன்றே னுனேன்! அது ஒன்றுதானே, உன் கணவன் கொலைக்குக் காரணமான

உன் வாயைக் கருவியாகக் கொண்டு, என் தலைவனைக் காட்டுக் கனுப்பினேனும் ஆனேன்! அப்படி அனுப்பி அரசை ஆள விருக்கின்றேன்! ஆனால், அது என் பிழையன்றி உன் பிழை யாமாறு இல்லை; என் பழி யன்றி உன் பழியாமாறும் இல்லை. எக்காலத்தேனும் என் பழி யொழியும் வழி யில்லை!

ஒன்றோ : எண்ணிடைச் சொல் ('பொய்படும் ஒன்றோ' என்ற குறள் உரை பார்க்க).

பாட பேதம் : உய்த்தே யுலகாள்வான் : என்புகழ் மாயும். (112)

கண்ணு லேயென் செய்வினை யின்னுஞ் சிலகாண்பார்
மண்ணோர் பாரா தெள்ளுவர் வாளா பழிபூண்டாய்
உண்ணு நஞ்சங் கொல்கில தென்னு முரையுண்டென்
றெண்ணு நின்றே னன்றி யிரேனென் னுயிரோடே (113)

கொண்டுகூட்டு : 'என் செய்வினை இன்னும் சில மண்ணோர் கண்ணுலே காண்பார்; (நான் தவமியற்றலைப்) பாராது (இருக்கும்வரை)'எள்ளுவர்; (நீ) வாளா பழிபூண்டாய்! "உண்ணு நஞ்சு கொல்கிலது" என்னும் உரை உண்டு என்று எண்ணு நின்றேன், அன்றி என் உயிரோடு இரேன்.

பொருள் : '(இதுவரை உலகோர் கண்டது யான் உயிரோடிருத்தலையே.) என் செயல்கள் இன்னும் சில யான் அரசாள்வதற் கெதிரா யிருப்பவற்றை மண்ணோர் கண்ணுலே காண்பார்; (அவை பின்பு–அடுத்த பாட்டிற்–கூறுமாறு இல்வாழ்க்கை துறத்தலும் தவம் இயற்றலுமாம். அவர்கள் அவற்றைப்) பாராமல் இருக்கும் வரையே என்னை இகழ்வார்; பார்த்த பின் இகழார் : நீ எனக்காகப் பெற்ற அரசை யான் ஆளே னுதலால், பயனின்றிப் பழிக் காளானாய்! இராச்சியத்தை யான் ஏற்றுக் கொண்டாலன்றி, எனக்குப் பழியில்லை; ஏனெனில், "உண்ணுத நஞ்சு கொல்லாது" என்ற உரை யுண்டென் றெண்ணு கின்றேன். (இதுவே யான் இறவா திருத்தற்கு நியாயம்.) அல்லாவிட்டால் யான் இறந்துவிடுவேன்.

எள்ளுதல் - இகழ்தல். வாளா - வீணுக. இராவணன் வதைப் படலம் 220-ம் பாட்டில் 'உண்ணுதே உயிர் உண்ணு தொருநஞ்சு' என வருதல் காண்க.

பாட பேதம் : சிலர்காண்பார். (113)

ஏன்றுன் பாவிக் கும்பி வயிற்றி னிடைவைகித்
தோன்றுந் தீராப் பாதக மற்றென் றுயர்தீரச்
சான்றுந் தானே நல்லற மாகத் தகைஞாலம்
மூன்றுங் காண மாதவம் யானே முயல்கின்றேன் (114)

கொண்டுகூட்டு : 'உன் பாவிக் கும்பி வயிற்றின் இடை (யான்) ஏன்றுவைகித் தோன்றுந் தீராப் பாதகம் அற்று, என் துயர் தீர நல் லறந்தானே சான்று ஆகத், தகை ஞாலம் மூன்றும் காண, யான் மாதவம் முயல்கின்றேன்.

பொருள் : 'உன்னுடைய நரகம் போன்ற வயிற்றினிடத்தே நான் இசைந்து தங்கியிருந்து பிறந்த தொலையாத பாவம் தொலைந்து, அந்தப் பாவ பலனுன என் துன்பமும் ஒழியத் தரும தேவதையே சாட்சியாக, மூன்றுலகத்தோரும் காணும்படி நான் தவம் செய்வேன்.

ஏன்று - இசைந்து. கும்பி - நரகம். 'பாவிக்கும்பிவயிறு' என்பதற்கு 'பாவியாகிய நினது நரகினை ஒக்கும் வயிறு' என்றும் 'பாவியான கும்பி போன்ற வயிறு' என்றும் உரைகள் உள: பாவிகளை(த் தன்னிடத்து) உடைய நரகம் போன்ற வயிறு என்றும் பொருள் கூறலாம் போலும். 'சான்றும்' என்பதில் 'உம்மை இசைநிறை. 'நல் அறம் தானே சான்று ஆகி' எனக் கூட்டுக. தகை ஞாலம் மூன்றும் - தகுதி யுடைய மூன்றுலகமும் - மூன்றுலகத்தினும் உள்ள தக்கோரெல்லாரும். தவம் முயலல் - தவம் செய்தல். (114)

சிறந்தார் சொல்லு நல்லுரை சொன்னேன் செயலெல்லாம்
மறந்தாய் செய்தா யாகுதி மாயா வுயிர்தன்னைத்
துறந்தா யாகிற் றூயையு மாதி யுலகத்தே
பிறந்தா யாதி யீதல தில்லை பிறிதென்றான் (115)

கொண்டுகூட்டு : 'சிறந்தார் சொல்லும் நல்லுரை சொன்னேன். மாயா (திருக்கின்ற) உயிரைத் துறந்தாய் ஆகில், (கொடிய) செயல் எல்லாம் மறந்தாய் (ஆகிச்) செய்தாய் ஆகுதி; தூயையும் ஆகுதி; உலகத்தே பிறந்தாய் ஆகுதி! (உனக்கு என் ஆலோசனை) ஈது அல்லது பிறிது இல்லை' என்றான்.

பொருள் : 'அறிவிற் சிறந்தார் சொல்லும் நல்ல வசனங்களைச் சொன்னேன். நீ மாய்த்திருத்தற் குரியதாய் மாயா திருக்கின்ற உன் உயிரை இப்போதேனும் விட்டுவிடுவாயானுல், நீ செய்த கொடிய செயல்கள் எல்லாவற்றையும் தன் நினைவின்றி மறந்து செய்தாய் (ஆகக் கருதப்பட்டு உலகத்தோரால் மன்னிக்கப்பட்டவள்) ஆவாய்; அன்றிப் பாவம் நீங்கிப் பரிசுத்தையு மாவாய்; உலகத்திலே பிறந்ததனுல் அடைதற்குரிய பயனை அடைந்தவளு மாவாய்; (யான் உனக்குச் சொல்லக்கூடிய நல்ல ஆலோசனை) இதுவே யன்றி வேறு எதுவும் இல்லை' என்றான் பரதன்.

ஆதி - ஆகுதி - ஆவாய். துறந்தாய் - விட்டாய். தூயை - பரிசுத்த முடையாய். (115)

பரதன் கோசலையைத் தொழுது கூறல்

பரதன் மேற்கூறியவாறு கூறி, 'இனி இப் பாவி பக்கத்தி லிரேன், கோசலையைத் தொழுவேன்' என்று சொல்லிப் போய், அவளைக் கண்டு, மண்ணில் விழுந்து வணங்கி, அழுது, அவள் பாதங்களைப் பற்றிக்கொண்டு புலம்புவானாய்,—

'என் தந்தை எந்த உலகத்தில் இருக்கின்றான்? என் தமை யன் எங்கே? யான் இந்தத் துன்பத்தைக் காணவோ இங்கு வந் தேன்! என் ஐயன் பூமியை விட்டுப் போகலாமோ? போகாமற் றடுத்துப் பிடித்துக்கொண்டீ ரில்லை! தவறிப்போயினீர்! கொடி யாள் வயிற்றிற் பிறந்த கொடியேன் உயிரை நீக்கித் துயரைப் போக்குவேன்! மாசற்ற சூரிய வமிசம், பரதனென் றொரு பாவி பிறந்த பழியைப் படைத்தது! சக்கரவர்த்தி வான மடைந்தத னாலும் தலைமகன் கான மடைந்ததனாலும் இந் நாட்டினர் இரண்டு கண்களையும் இழந்தார் போல ஏங்குகின்றார்!' என்றான்.

பரதனுக்குக் கோசலையின் வாழ்த்து

கோசலை பரதன் துன்பத்தைப் பார்த்து, மாசற்ற மனத் தினனென்று தெளிந்து மனம் நெகிழ்ந்து, 'கைகேயி செய்த கபடத்தை அறியாய் போலும்!' என்றாள். அது கேட்டு, அவன் அளவற்ற துயரத்தை யடைந்து, 'அடியேன் அதனை அறிந்தவ னாயின், பொய்யன், புரட்டன், புறங்கூறியவன், குடியன், கள்வன், கொலைஞன், தூர்த்தன், இரப்போர் பொருளை அடித்துப் பறித்தவன், தாய் பசித்திருக்கத் தான் புசித்திருந்தவன், அடைக்கலப் பொருளை அபகரித்திட்டவன், நன்றி மறந்தவன் என்ற இவர்கள் அடையும் நரகை அடைவேனாக!'* என்றான். இந்தச் சூளுரையைக் கேட்ட கோசலை, பிரிந்து போன இராமன் திரும்பி வரக் கண்டாள் போன்று, அவனை அழுது, தழுவி, 'உன் குலத் துதித்த உயர்ந்தோர் ஒருவரும் உன்னை ஒத்தார் இல்லை! நீ நீடு வாழ்க!' என்று மனங்குளிர வாழ்த்தினாள்.

வசிட்டன் வருகை

அவன், அவள் பாதங்களிலே மீண்டும் வீழ்ந்து தாழ்ந்து, விம்மி அழுதுகொண் டிருக்கும்போது, வசிட்டன் வந்தான்.

* இந்தச் சூளுரையை எட்டடி நிலைமண்டில ஆசிரியப்பாவாகப் படிக்கலாம்.

அவனைப் பரதன் அடி தொழுது அழுது, 'என் தந்தை எங்கு சென்றான்?' என்றான். முனிவன், யாது விடை கூறுவ தென்று அறியானாய், அழுது, அவனைக் கட்டி அணைத்தான்; அப்பால், 'உன் தந்தைக்கு ஈமக்கடன் இயற்றும் நாள் எய்தியது' என்றான். பரதன் கோசலை யிடத்து விடைபெற்று, முனிவனுடன் புறப்பட்டுச் சென்று, தந்தை சரீரத்தைக் கண்டு, கலங்கி அழுது, விழுந்து புரண்டெழுந்து, எண்ணெயால் ஆட்டப்பட்டிருந்தானைக் கண்ணீரா லாட்டினான். அவனை ஒரு விமானத்திலேற்றி யீமக்கிரியை யியற்றக் கொண்டு போனார்கள்.

### தசரதன் சரீர தகனம்

அப்போது அயோத்தி மாநகர மெங்கும் பேரிகைகளிடிக்கச் சங்கங்கள் முழங்கியது, அந்த நகரம் மாதர் போல மார்பிலடித்து வாய்விட்டழுவது போன்றிருந்தது. மன்னவ னுடலைக் கொண்டு சென்ற விமானம், மன்ன னன்றி மற்றுப் பற்றற்ற மக்கட்பேறில்லாத மனைவிய ரனைவரும் உடன்வரச் சதுரங்க சேனை புடைசூழச் சென்று சரையுநதிக் கரையை அடைந்தது. செய்தற்குரிய ஈமக் கிரியைகள் செய்யப்பட்ட பின், தசரதன் சரீரம் ஈமப் பள்ளியில்* ஏற்றப்பட்டது.

அருகே யிருந்தார் கூறியவாறு பரதன் தந்தைக்குச் செய்யுஞ் சடங்கு செய்யத் தொடங்கும் போது, வசிட்டன் வந்து 'உன் தந்தை உன்னைத் துறந்தான்' என, அவன் இடி விழுந்தவன் போன்று ஏங்கி, 'என் குலத்தவர் யாவரே என்னைப் போலப் பிரேத பூசனைப் பேறிழந்தார்! யான் அவத்த னாயினேன்? இதுவோ என் அன்னை எனக்குச் செய்த நன்றி என்று வருந்தினான். சத்துருக்கனாற் சடங்குகள் முற்றுவிக்கப்பட்டன. இலை மறைய, மலர் நிறைய மலர்ந்த செந்தாமரைத் தடாகத்துள்ளே திரளான அன்னங்கள் சென்றாற் போலத் தேவியர்கள் தீக்குளித்தார்கள்.

எல்லாரும் அரண்மனைக்குத் திரும்பினார்கள். கருமத்துக்குரிய பத்து நாட்களும் கழிந்தபோது, பரதன்பால், வசிட்டன் வந்தான். அப்போது, மந்திரிகள் மன்ன னின்றி யிருத்தல் மரபன் றென்று, அக் குறையை நீக்குங் கருத்தினராய்க் கோசல நாட்டறிஞர் கூட்டத்துடன் பரதனைக் கண்டு தங் கருத்தைத் தெரிவித்தற்கு வந்தார்கள்.

---

* விறகுப் படுக்கை.

# 10. ஆற்றுப் படலம்

## காட்டுக்குத் துறவியாகச் சென்ற இராமனை நாட்டுக்கு அரசனாக அழைத்துவரப் பரதன் சென்ற வழியில் நிகழ்ந்த சரிதங் கூறுவது *

### பரதனை வசிட்டனுதியர் வேண்டல்

மந்திரி முதலியோர் பரதனை அடைந்து வணங்கினர். அப்போது முதன் மந்திரி சுமந்திரன் பரதனுட னிருந்த வசிட்டனை நோக்க, அவன், அந்த நோக்கத்தால் அவர்கள் வந்த நோக்கத்தை, வாக்கினுல் தெரிவிக்க வேண்டாமலே, தெரிந்து கொண்டு, பரதனை நோக்கி, 'இவர்க ளெல்லாரும் வந்த காரியம் நீ நிருபனுகி நீதிசெலுத்த வேண்டுமென்பது. அது நீ செய்தல் அவசியம்' என்ருன்.

வள்ளுறு வயிரவா ளரசில் வையகம்
நள்ளுறு கதிரிலாப் பகலு நாளொடும்
தெள்ளுறு மதியிலா விரவுந் தேவுடன்
உள்ளுறை யுயிரிலா வுடலு மொக்குமே (116)

கொண்டுகூட்டு : 'வள் உறு வயிர வாள் அரசில் வையகம், நள் உறு கதிர் இலாப் பகலும், நாளொடு தெள்ளுறு மதி இலா இரவும் தேவுடன் உள் உறை உயிர் இலா உடலும் ஒக்கும்.'

பொருள் : 'அரசனில்லாத நாடு, சூரியன் இல்லாத பகலையும், நட்சத்திரங்களுடன் சந்திரன் இல்லாத இரவையும், இறைவனுடன் உயிரில்லாத உடலையும் ஒக்கும்' என்ருன் வசிட்டன்.

வள் - கூர்மை. வயிரம் - வலி. வையகம் - உலகம் - நாடு. நள் - நடு. கதிர் - சூரியன். நள் உறு கதிர் - (சூரிய மத்திய சித்தாந்தப்படி எல்லாக் கிரகங்களும் தன்னைச் சூழ) நடுவில் உறுகின்ற சூரியன். தெள்ளுறுதல் - தெளிதல். தெள்ளுறு மதி - தெளிவான (- தெளிவான கண்ணுடி போல நன்கு விளங்குகின்ற) சந்திரன். தேவு - தெய்வம்.

பாட பேதம் : நாடொறும் : தேர்வரும். (116)

'தேவருலகத்தேனும் அசுர ருலகத்தேனும் மற்றும் ஏவருலகத்தேனும் இராசன் இல்லாமையைக் கண்டிலேம். நரபதி

---

* ஆறு - வழி.

யில்லாத நாடு, மாலுமி யில்லாத மரக்கலம். உன் தந்தை யிறந்தான். தமையன் துறந்தான். அவர் பின் அரசை ஆளுதற் குரியவன் நீயே. அன்றியும், அரசு, உன் தாய் பெற்றதாய் உனக்கு உரியதாயுள்ளது. ஆதலால் இராச்சிய பாரத்தை நீ ஏற்றுக்கொள்ளும்படி யாங்க ளெல்லேங்களும் வேண்டுகின்றேம்' என்றான் வசிட்டன். அது கேட்ட பரதன், விடமுண்ணும்படி வேண்டப்பட்டான் போல, உடம்பு நடுங்கி, உயிர் ஒடுங்கி, நாக்குத் தடுமாற வாக்குக் குளறக் கூறுவானுனன்.

### பரதன், 'முறையன்று' எனல்

'மூன்றுலகுக்கும் முதல்வனுக முறை செலுத்தி ஆளுதற் குரிய முன்னே னிருக்கவும், என்னை முடி சூடும்படி சான்றோர் சாற்றுதலால், அதருமம் தருமமாகி, என்னை யீன்றாளின் கொடிய செய்கை குற்றமற்ற தாகின்றது. இது, இன்னும் இரண்டு யுகங்கள் இறந்தபின் எய்தற்பாலதாகிய கலியின் இராசரிகம் இப்போதே எய்தியதோ வென எண்ணச் செய்கின்றது. இன் றளவும், மூத்தோ னிருக்க, இளையோன் முடிசூடிய துண்டோ! அப்படிச் செய்வது அறமன்று; அறமே யாயினும் அதற்கு யான் இசையேன்' என்றான். எனவே எல்லோரும் அகம் மிக மகிழ்ந்து, 'தம்பியருள் உன்னை ஒப்பார் ஒருவரும் இல்லை' என்று கூறி, 'நின் புகழ் என்றும் நின்று நிலவுக!' என்று வாழ்த்தினர்கள்.

### இராமனை அழைக்கப் பரதன் வனம் ஏகல்

பரதன், சத்துருக்கனைத் தருவித்து, 'நம் அண்ணனை அரசனுகை அழைத்துவரப் போகின்றே மென்று முரசறைவித்து, அதற்குச் சேனையை நம்முடன் புறப்படுவதற்குச் சித்தமாகும் படி செய்வாயாக!' என்றான். விடத்தினுல் உயிர் நீங்கியிருந்த உடல் அமிழ்தத்தினுல் உயிர் மீளப் பெற்றாற் போல, இராமன் பிரிவால் உயிர் பிரிந்தார் போன்றிருந்த அயோத்தி நகர மாந்தர் கள், அச் செய்தியால் உயிர்த் தெழுந்தார்கள்.

பரதன் இராமனை முடிசூட்ட அழைத்துவரப் போகின்று னென்ற செய்தி சந்திரன் போலச், சேனை சந்திரோதயங் கண்ட சமுத்திரம் போன்று, ஆரவாரித் தெழுந்து படர்ந்து மண்ணை மறைத்தது; அதன் கொடிகள் பரந்து விண்ணை மறைத்தன; அதன் தூள்கள் பறந்து கண்ணை மறைத்தன. அளவற்ற அந்தச் சேனையைத் தாங்குதற்கு ஆற்றலுடையதான பூமியைப் பூமக

ளென நாமகரணம் செய்து மெல்லியல் * என்றோர் அறிவில் மெல்லியர் போலும் !

இராமன் காடுறைதலால், மாதர்கள் ஆபரணங்கள் கழித்தவ ராய்ப் பூ உதிர்ந்த கொம்புகள் போன்றனர் ; தீட்டிய மை அழிக் கப்பட்ட அவர்களுடைய கண்கள், ஊட்டிய விடம் கழுவப்பட்ட வேல்களை ஒத்தன ; அறிவில்லார் கூட்டத்தில் வாய் திறவாத அறிவாளர்போல, வாத்தியங்கள் ஒலியாமலிருந்தன. இயல்பாக எப்போதும் அளவற்ற சன சஞ்சாரமுள்ள அயோத்தி நகர வீதி கள், அந்நகரத்துச் சனங்களுடன் சைநியம் வெளிப்பட்டபோது குறுமுனி குடித்த கடல் போல வெறுமையா யிருந்தன. சேனை யும் சனங்களும் சென்ற வழிகள் ஆள்வழக்கு மிக்க அத் தெருக் களை ஒத்தன.

சேனை முன் செல்லப் பரதன், மரவுரி உடுத்துத் துக்கம் மிக்கவனுய்ச் சத்துருக்கனுடன் தேர்மீது சென்றான். தாய்மாரும் சுற்றத்தாரும் மந்திரிகளும் மாதவரும் மறையவரும் சென்றார் கள். எல்லாரோடும் கூனியும் கூட வரக்கண்ட சத்துருக்கன் கோபித்துக் கொல்லப் பற்றியபோது, பரதன் பார்த்து, 'இவள் எல்லாத் துன்பங்களுக்கும் ஏதுவா யிருந்தா ளென்றாலும், இவ ளைக் கொல்லாது விடு ; இவளைக் கொல்லுதல் கிடக்க, கோபித் தலுமே இராமன் வெறுப்பதாம். இவளையும் கூட்டிக்கொண்டு செல்வோம்' என்று கூறிச் சென்றான். அவன், இராமன் தங்கிய சோலையிலே தங்கிக் கண்ணீர் அருவியாகப் பெருகி வடிய, இலை காய் கனி கிழங் கெதுவும் தொடானுய், இராமன் இருந்த புல் லாசனத்தின் பக்கத்திலே புழுதியிலே யிருந்தான். அவ்விடத்தி லிருந்து இராமன் பாதசாரியாய்ச் சென்றா னென்று, தானும் வாகன மேறானுய், ஆனைகளும் குதிரைகளும் தேர்களும் சிவிகை களும் தொடர்ந்து வர, நடந்து போனான்.

---

* மெல்லியல் - மென்மையான தன்மையை யுடையவள் - வன்மை யில்லாத வள் - பெண். மெல்லியர் - மென்மையுடையவர் - வன்மையில்லாதவர்.

# 11. குகப் படலம்

## குகன் பரதனைச் சந்தித்ததும் அப்போது நிகழ்ந்ததும் கூறுவது

### பரதன் கங்கைக் கரையை அடைதல்

இராமன் காடு சென்றது கருதி ஏங்கி இன்ன லெய்தி இளைத் திருந்த பரதனைப் பார்த்த மக்கள் பரிதாபப்பட்டா ரென்பா னேன், அவனைக் கண்ட மாக்களும் மரங்களும் இரங்கு மென் னும்படி அவன் துன்பமே ஒருரு வெடுத்தாற்போலும் தோற்ற முடையானாய், வழி நடந்து கங்கைக் கரையை அடைந்தான். அவனைத் தொடர்ந்து படர்ந்த சேனை கங்கையில் இறங்கி நீரருந் தியபோது, அந்த ஆறு கடலுக்குச் செல்லப் போதிய நீரில்லாத படி குறைந்த தென்னும்படி சேனைப் பெருக்கம் இருந்தது.

### குகன் கோபித்துக் கூறல்

அப்படிப்பட்ட பெருஞ் சேனையைக் கண்ட குகன், அது இராமனைத் துரத்தத் தொடர்ந்த தென்று கருதிக் கோபங் கொண்டு, போர்வில் போலப் புருவவில், வளையச், செந் நெருப் பெனக் கண்கள் சிவக்கப் புயற்காற்றுப் போல நாசி நெடுமூச்சு வீச, வாய் இறுக மடித்துக் கடிக்கப், போர் கிடைத்த தென்று புயங்கள் பூரிக்க, அப்படையை இகழ்ந்த குறிப்புத் தோன்றக் கோப நகை நகைத்துக் கூற்றுவன் பல உருக் கொண்டாற் போல வும் பூமியிலுள்ள புலிகளெல்லாம் ஓரிடத்தே திரண்டாற் போலவு முள்ள தன் படைஞரை நோக்கி, 'அதோ தோன்றுகின்ற சேனை எலிக் கூட்டம், நான் பாம்பு' என்று கூறித் தன் படை புடை சூழப் புறப்பட்டுக் கங்கையின் தென்கரைக்கண் வந்தான். வந்த வன் அந்தப் படைவீரரைப் பார்த்து, 'யான் அந்தச் சேனை யைத் தொலைக்கத் துணிந்தேன்; தோணியோட்டுந் தொழிலை நீங்கள் நிறுத்தி, அவர்கள் எனக்குத் தப்பி இங்கே வந்தால், கொல்லுங்கள்' என்று பின்னுங் கூறுவான்: 'என் ஆருயிர் நாயகன் இராமன் ஆளும் அரசை வஞ்சனையாற் கவர்ந்த மன்னன் வந்தான்; அவனைக் கொல்ல அவாவி என் அம்புகள் துடிக்கின்றன, விட்டுவிட்டால், பாயாமற் பழுதுபடா; அவனும் அவன் சேனையும் என் கையை விட்டுத் தப்பிப் போய்விட்டால், "சீ! குகன் ஒரு நாய்!" என்று உலகம் என்னை இகழும்.'

**ஆழ நெடுந்திரை யாறு கடந்திவர் போவாரோ**
**வேழ நெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ**
**தோழமை யென்றவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ**
**ஏழமை வேட னிறந்தில னென்றெனை யேசாரோ (117)**

கொண்டுகூட்டு : 'இவர்(கள்) ஆழ நெடுந்திரை ஆறு கடந்து போவாரோ? வேழ நெடும் படை கண்டு, விலங்கிடும் வில்லாளோ (யான்)? அவர் (என்னைத்) "தோழமை" என்று, சொல்லிய சொல், ஒரு சொல் அன்றோ? "ஏழமை வேடன் (இவர்களைத் தடுத்திலனேனும்) இறந்திலன்" என்று என்னை ஏசாரோ?

பொருள் : 'என் அனுமதி யின்றி இவர்கள் இந்த ஆற்றைக் கடந்து போய்விடுவார்களோ? (அது ஒரு நாளும் ஆகாது; மற்றவர்கள் பார்த்துப் பயப்படும் பேருரு வுடைய) யானைப் படையைப் பார்த்துப் பயந்து ஒதுங்கிப் போகும் வில்லாளியோ யான்? (இல்லை யென்று சொல்லவும் வேண்டுமோ;) மகராசனை அவர் மிக ஏழையான என்னைத் தோழன் என்று (மனத்துட் கொண்டதே யன்றி, அருமையாக வாய்விட்டுச்) சொல்லிய அன்பான சொல் (யான் உயிரையுங் கொடுத்துப் போற்றுதற்குரிய) ஒப்பற்ற சொல்லன்றோ? (அதனை யொத்த அருமையான சொல் ஒன்றுமில்லை; யான் பரதனையும் படையையும் தடுக்காமல் விடுப்பேனானால்,) "இந்த ஏழை வேடன் (தடுக்க முடியவில்லை யானாலும் அந்த முயற்சியைச் செய்து) செத்தாவது போனானில்லையே!" என்று உலகத்தார் என்னை இகழாரோ? (இகழவே செய்வார்).

விலங்குதல் - விலகுதல். வில் ஆள் - வில்வீரன். நட்பு, பகை, உறவு என்பவை முறையே நண்பன், பகைவன், உறவினனை உணர்த்தல் போலத் தோழமை தோழனை உணர்த்தியது. ஏழைமை - எளிமை; அறியாமை.

பாட பேதம் - ஆழநெடும் புனல் கங்கை. (117)

**முன்னவ னென்று நினைந்திலன் மொய்புலி யன்னானோர்**
**பின்னவ னின்றன னென்றில னன்னவை பேசானேல்**
**என்னிவ னென்னை யிகழ்ந்ததிவ் வெல்லை கடந்தன்றோ**
**மன்னவர் நெஞ்சினில் வேடர் விடுஞ்சரம் வாயாவோ (118)**

கொண்டுகூட்டு : '(பரதன், இராமனை) முன்னவன் என்று நினைந்திலன்; ஓர் பின்னவன் மொய் புலி அன்னான் (தமையனுக்குத் துணை) நின்றனன் என்றிலன். அன்னவை பேசானேல், என்னை இவன் இகழ்ந்தது 'என்? (இகழ்வது) இந்த எல்லை கடந்து அன்றோ? வேடர் விடுஞ்சரம் மன்னவர் நெஞ்சினில் வாயாவோ?

பொருள் : '(இந்தப் பரதன், தான் துரத்தப் புறப்பட்ட இராமன் தனக்குத்) தமைய னென்பதைக் கருதினு னில்லை; (அப்படிக் கருதவில்லை யாயினும், தன்னைப் போன்ற மற்றும்) ஒரு தம்பி, வலிமையுடைய புலியை நிகர்ப்பவன், அந்தத் தமையனுக்குத் துணையாக நிற்கின்ருனென்பதையும் நினைந்தா னில்லை; அவ்விரண்டையும் எண்ணு னுயின் (ஆகுக; அவர் களுக்குத் துணையாக உள்ள) என்னை இவன் ஒரு பொருளாகக் கருதாமல் இகழ்ந்தது எப்படி? எனது காவலுக் குட்பட்ட இந்த எல்லையைத் தாண்டி யன்ருே என்னை யிகழலாம்! (ஒருகால் என் அம்பு தன்னைத் தையா தென்றும், அதனுல் இவ் வெல்லையை எளிதாகக் கடக்கலா மென்றும் எண்ணினுன் போலும். ஓகோ!) வேடர்கள் விடும் அம்பு வேந்தர்கள் நெஞ்சில் பாயா வென் றெண்ணினுனே? அவை பாயாமல் தப்புமோ? (தப்பா.)

மொய் புலி - நெருங்கிய புலி; இராமன் ஒரு புலியாக, அவனுக்கு நெருங்கிய துணையான புலி. அன்னவை - அவைகள் - அவ்விருவர் (வீரத்) தன்மைகள். பேசல் (மனத்துள்ளே) பேசல் - கருதுதல். பேச லென்னும் வாயின் செயல் மனத்தின் செயலாகக் கூறப்பட்டது. பேசுத லென்றது கருதுதலை; இதனைச் 'செவிகைப்ப' என்று (389-ம் குறளில்) கூறியதற்குப் பரிமேலழகர் கூறியதனுற் காண்க. எவன் (-எப்படி) என் பது இடையிற் குறைந்து என் என நின்றது. வாயாவோ - தப்புமோ; (வாய்த்த - தப்பாத.—சிந்தா.) 'வாய்ப்ப', சேர என்ற பொருளிற் பரி பாடலில் வருதல் கொண்டு, வாயாவோ என்பதற்குச் சேராவோ என்றும் பொருள் கூறலாம். (118)

அருந்தவ மென்றுணை யாள விவன்புவி யாள்வானே
மருந்தெனி னன்றுயிர் வண்புகழ் கொண்டுபின் மாயேனே
பொருந்திய கேண்மை யுகந்தவர் தம்மொடு போகாதே
இருந்தது நன்று கழிக்குவெ னென்கட னின்றேடே (119)

கொண்டுகூட்டு: 'என் துணை அருந் தவம் ஆள, இவன் புவி ஆள்வானே? உயிர் மருந்து எனின் அன்று: வண்புகழ் கொண்டு பின் மாயேனே? (என்னொடு) பொருந்திய கேண்மை உகந்தவர் தம்மொடு போகாது (இங்கு) இருந்தது நன்று. (அவருக்கு) என் கடன் இன்றேடே கழிக்குவென்'.

பொருள் : 'எனக்குத் துணைவனுன இராமன் அருந்தவம் செய்யாநிற்க, இவன் அரசு செய்வானே? (இவனேடு போர் புரிந்து இவனை அரசு செய்ய விடேன். போர்புரிதலில் உயிர் போய்விடலாமே,) உயிர் மருந்து அன்ருே என்ருல், (அது

மற்றவர்களுக்கு மருந்து, எனக்கு மருந்து) அன்று: (போர் புரிந்து பூதவுடம்பைக் கொடுத்து அதற்கு மாருகப்) புகழ் உடம்பைப் பெற்று அதன் பின்பு சாகேனே? (பின்புதான் சாவேன், முன்பு சாகேன்). என்னெடு பொருந்திய உறவை விரும்பியவரோடு கூடப் போகாமல், இங்கே யான் தங்கி யிருந்தது நன்மை ஆயிற்று. (அவரைத் துரத்தப் புகுந்த பரதனுடன் போர்புரிந்து அவனை வெல்லவாவது, வெல்ல முடியா விட்டால், உயிரை விடவாவது செய்து, அவர் என்னைத் தோழ னென்று கொண்டதனுல் அவருக்கு நான் பட்டுள்ள) என் கடனை இன்றே செலுத்திக் கழித்துவிடுவேன்'.

துணை, ஆகுபெயராய்த் துணையானவனை உணர்த்தியது. கேண்மை- உறவு.—ஐங்குறு. கடன் கழித்தல் - செயற்பாலாதாகிய முறையைச் செய்து கழித்தல்.—ச. அ.

பாட பேதம்: உயர் வண்புகழ் கொண்டுயிர் மாயேனே. (119)

'மன்னரா யுள்ளார்க்கு, மற்றைய மாந்தருக்குப் போலன்றி, பாவ புண்ணியம், பழி புகழ், பகை நட்பு என்ற பேதங்கள் இல்லைப் போலும்! இருந்தால், பரதன் இராமன் திறத்தில் இவ்வாறு செய்வானே! அவன் செய்யக் கருதியது, அவனும் அவன் சேனையும் என் கைக் ககப்படாமல் தப்பி, உயிர்கொண்டு கங்கையைக் கடந்தா லன்றே முடியும்! தன்னை நாட்டினை ஆளவைத்த தமையனைக் காட்டினும் வாழ வொட்டாமல் துரத்த வந்தவனையும் படையையும் தொலைத்து நாட்டை மீட்டுக் கொடுத்தது வேட்டுவர் கூட்ட மென்னும் மேன்மையை மேவுவே மாக!' என்று வேடரை நோக்கிக் கூறிநின்ருன்.

### பரதன் குகனைப் பார்க்கச் செல்லல்

அப்போது, சுமந்திரன், பரதனை நோக்கிக் 'கங்கையின் கரைக ளிரண்டுக்கும் காவலன், எண்ணிறந்த தோணிகளுக்கு எசமானன், மிக்க வில்வீரன், வேடருக்கு வேந்தன், இராமனுக்கு இட்டன், அளவற்ற அன்புடையான் ஆகிய குகன் நின்னைக் காணுங் கருத்தினனுய் நிற்கின்ருன்' என்ருன். எனவே, பரதன், குகன்பால் அன்புகூர்ந்து 'இராமனுக்குத் தோழனுனல், அவன் என்னைக் காண வருமுன் அவனை நானே போய்க் காண்பேன்' என்று எழுந்து, அன்பு முன் செல்லத் தம்பி பின் செல்லச் சென்று, கங்கைக் கரையை அடைந்து நின்ருன். நின்றவனைக் குகன் நோக்க அவன் தேக நிலைமையைக் கண்டு திடுக்கிட்டான்.

**பரதன் தோற்றம்**

**வற்கலையி னுடையானை மாசடைந்த மெய்யானை**
**நற்கலையின் மதியென்ன நகையிழந்த முகத்தானைக்**
**கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான்**
**விற்கையினின் றிடைவீழ விம்முற்று நின்றொழிந்தான் (120)**

கொண்டுகூட்டு : வற்கலையின் உடையானை, மாசு அடைந்த மெய் யானை, நற்கலை இல் மதி என்ன நகை இழந்த முகத்தானை, கல்(லும்) கனியக் கனிகின்ற துயரானைக் (குகன்) கண்ணுற்றான்: வில் கையி னின்று இடைவீழ, விம்முற்று நின்று ஒழிந்தான்.

பொருள் : மரவுரி ஆடை உடையானும், அழுக் கடைந்த உடலினனும், பதினாறு கலைகளும் இல்லாத (பிரகாச மின்றி வடி வம் மாத்திரம் காணப்படுகின்ற) சந்திரன் போல மகிழ்ச்சியற்று ஒளி யிழந்த முகத்தானும், உணர்ச்சி யில்லாத கல்லும் கனியும் படி கனியும் துன்பத்தானுமான பரதனைக் குகன் பார்த்தான்; பார்த்த மாத்திரையே, அவனறியாமலே அவனுடைய வில்லுக் கையினின்று நழுவி நிலத்தில் விழ, விம்மி மெய்ம் மறந்து நின்று செயல் ஒழிந்தான்.

வற்கலை - மரவுரி. இல் - இல்லாத. நகை யென்பது இங்கே அதன் மகிழ்ச்சி, ஒளி யென்னும் இரு பொருள்களையும் ஒருங்கே உணர்த்தி நின் றது காண்க. இடை, நிலத்திடை யென்றும், ஒழிந்தான், செயலொழிந்தா னென்றும் பொருள் கொள்ளும்படி நின்றன.

இதன் முன் பரதன் தேக நிலைமையைக் கண்டு குகன் திடுக்கிட்டா னென்ற கவி, அவன் திடுக்கிட்ட காரணத்தை விவரிப்பாராய், அத் தேக நிலைமையை இந்தப் பாட்டில் வருணித்திருக்கும் முறை, மிக்க இனிமை பயக்கின்றது. அவர், சிறிது தூரத்தே நின்ற பரதனைக் குகன் கண்ட போது, அவன் எதிர்பார்த்திராத மரவுரித் தோற்றம், அவன் மனத்தைத் தாக்கி அவன் கவனத்தை ஈர்த்தது; அடுத்து, அதனை உடுத்திருந்த உடம்பு கட்புலனாகி அது மாசு படிந்து அம் மாசு நீக்கப்படா திருந்தது அவன் கவனத்தைக் கவர்ந்தது; அவன் அவ் விபரீதங்களுக்குக் காரணம் யாது எனப் பரதன் முகத்தை நோக்க, அது பொலி விழந்ததாய் ஆழ்ந்த அகன்ற அளவு கடந்த துன்பத்தைக் காட்டியது; அத் துன்பம், சேதன ரான மக்கள் மனத்து மிக்க இரக்கம் விளைக்கும்படி யிருந்த தென்பா னேன், அசேதனமான கல்லும் கரைந் துருகும்படி யிருந்தது என விரித்துப் பொருள் கொள்ளும்படி பரதனது தேகத் தோற்ற வருணனை செய்திருப்பது சிந்தித்துக் களிகூரத் தக்கது.

கோபங் கொண்டிருந்த குகன் மன நிலையை மரவுரி உடை மாறச் செய்ததும், அம்மாறுதலா லுண்டாகிய புதிய மன உணர்ச்சியை முதற்

கண் மாசடைந்த மேனியும், அடுத்து நகை யிழந்த முகமும், இறுதியாக அம்முகம் காட்டின கல்லையும் கனிவிக்கும் கழி பெருந் துன்பமும் படிப்படியாக உயர்த்தி உச்ச நிலை யுறச் செய்ததும் அந் நிலையை அடையவே குகன் இறுகப் பிடித்திருந்த வில் அவன் மெய் சோர்ந்து கை சோர அவனறியாமலே நெகிழ்ந்து நழுவி நிலத்தில் விழுந்ததும், இவ்வாறாகக் குகன் கொண்டிருந்த கருத்துக்கு முற்றும் மாறாய் அவன் எதிர்பாராத காட்சி அவனை மெய்ம் மறந்து, நினை விழந்து, செய லொழிந்து, தம் பித்து நிற்கச் செய்ததும் நம் கண்ணெதிரே கண்டாற்போலக் கூறியிருக்கும் அதிசய கவி சாதுரியம் நம் அகத்தைவிட் டகலாத ஆனந்தம் விளைப்பதா யிருக்கின்றது. (120)

### குகன் பரிசனங்களுக்குக் கூறல்

**நம்பியுமென் னாயகனை யொக்கின்றா னயனின்றான்**
**தம்பியையு மொக்கின்றான் றவவேடந் தலைநின்றான்**
**துன்பமொரு முடிவில்லை திசைநோக்கித் தொழுகின்றான்**
**எம்பெருமான் பின்பிறந்தா ரிழைப்பரோ பிழைப்பென்றான்**

கொண்டுகூட்டு : (குகன் தன் பரிவாரத்தாரை நோக்கி) நம்பி என் நாயகனை ஒக்கின்றான்; அயல் நின்றான் தம்பியை ஒக்கின்றான்; தவ வேடம் தலை நின்றான் ; துன்பம் ஒரு முடிவு இல்லை ; திசை நோக்கித் தொழுகின்றான் ; எம்பெருமான் பின் பிறந்தார் பிழைப்பு இழைப்பரோ !' என்றான்.

**பொருள் :** (நினைவு நீங்கி நின்ற குகன், நினைவு மீளப் பெற்ற போது, தன் பரிவாரத்தாரை நோக்கி,) 'பரதன், என் நாயகன் இராமனை ஒத்திருக்கின்றான் ; பக்கத்தில் நிற்கின்ற சத்துருக்கன், இராமன் தம்பி இலக்குமணனை ஒத்திருக்கின்றான்; பரதன் தவ வேடம் மேற்கொண் டிருக்கின்றான் ; அவன் துன்பத்துக்கு எல்லையில்லை ; இராமன் சென்ற திக்கு நோக்கித் தெண்டனிடுகின்றான் ; (எம்பிரான் இராமசுவாமிக்குப் பரமபத்தனை பரதனை விரோதி யென்று தவறாக எண்ணி அபராதம் செய்தேன் ,) எம்பிரான் தம்பிமார் பிழைபாடு புரிவாரோ !' என்றான்.

நம்பி - புருடோத்தமன் - ஆடவரிற் சிறந்தோன். நாயகன் - எசமானன். 'அயல் நின்றான் தம்பியையும்' என்பதில் உம்மையைப் பிரித்துக் கூட்டி 'அயல் நின்றானும் தம்பியை' எனக் கொள்க. உம்மைகளில் முந்தியது எதிரது தழீஇயது ; பிந்தியது இறந்தது தழீஇயது. தலை நிற்றல் - மேற்கொள்ளல். மந்திரப் படலம் 69-ம் பாட்டில் 'தலை நின்றான்' மேற்கொண்டா னென்ற பொருள்பட வருதல் காண்க. இழைத்தல் - செய்தல்.

பாட பேதம் : நம்பியிவன் : பிழையென்னா. (121)

### குக பரதர் சந்திப்பு

**வந்தெதிரே தொழுதானை வணங்கினன் மலரிருந்த**
**அந்தணனுந் தனைவணங்கு மவனுமவ னடிவீழ்ந்தான்**
**தந்தையினுங் களிகூரத் தழுவினன் றகவுடையோர்**
**சிந்தையினுஞ் சென்னியினும் வீற்றிருக்குஞ் சீர்த்தியான்(122)**

கொண்டுகூட்டு : (குகன்) வந்து எதிரே தொழுதானை (பரதனை) வணங்கினன். மலர் இருந்த அந்தணனும் தனை வணங்கும் அவனும் (பரதனும்) அவன் (குகன்) அடிவீழ்ந்தான். தகவுடையோர் சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்கும் சீர்த்தியான் (குகன்) தந்தையினும் களி கூர (ப் பரதனை)த் தழுவினன்.

**பொருள் :** குகன், வந்து, எதிரே கைகூப்பித் தொழுத பரதனைக் காலில் விழுந்து வணங்கினன். பிரமதேவனும் அடி பணியும் பெருமையுடைய பரதனும் குகன் காலில் விழுந்தான். பெரியோர் சிந்தையுள்ளும் சென்னிமீதும் வீற்றிருக்கும்படி மேம்பட்ட பெரும் புகழ் படைத்தவனாகிய குகன் தன் தந்தையைத் தழுவுதலில் தனக் குண்டாம் களிப்பினும் அதிகமான களிப்புண்டாகப் பரதனைத் தழுவினன்.

தந்தை மகனைத் தழுவுதல் போலக் குகன் பரதனைத் தழுவினனெனப் பொருள் கொள்ளல் குகனுடைய அகங்காரமற்ற பணி வுடைமையோடு பொருந்தாது. வேடனைச் சக்கரவர்த்தி குமாரன் காலில் விழுந்து வணங்கல் தகுதியன்றெனக் கொண்டு முந்திய உரைகளிற் பரதன் குகன் காலில் விழுந்தானென்று கூறப்படவில்லை. இப்பாட்டின் கருத்தை ஊன்றி நோக்கினல் மேலே எழுதிய பொருள் புலப்படும். இதை, அடுத்த பாட்டில் வரும் ' தழுவின புளினர் வேந்தன் ' என்பது வலியுறுத்து கின்றது. முந்திய உரைகாரர் தாம் இப்பாட்டுக்குச் செய்த உரைக்கு முரணாதபடி ' தழுவின ' என்பதற்கு அதன் வழக்கமான செம்பொருளல்லாத ' தழுவப்பட்ட ' என்று இடர்ப்பட்டுப் பொருள் கூறினர்.

வேந்தர் குலத்தினனான பரதன், வேடர் குலத்தவனான குகனை அடி பணிதல் தகாத தன்று (தக்கதே) என உய்த்துணர வைப்பாராய்ப் பிராமணர் தலைவனா யிருத்த லன்றித் தேவதேவரான மூவருள்ளேயே ஒருவனாயுள்ள ' மலர் இருந்த அந்தணனும் தலைவணங்கும் அவனும் ' எனப் பரதனை விசேடித்தா ரென்க. மூத்த வேட்டுவக் குகன் காலில் இளைய கோப்பரதன் வீழ்ந்தது வேளாண்குலத்து முதிய அப்பமூர்த்தி காலில் விப்பிரகுலத்துப் பிள்ளைப் பருவச் சம்பந்தமூர்த்தி வீழ்ந்தது போலத் தக்க செயலேயா மென்க. (பெரிய புராணம் திருநாவுக்கரசு நாயனர் புராணம் 397-ம் பாட்டைப் பார்க்க.) (122)

**தழுவின புளினர் வேந்தன் றுமரைச் செங்க ணுனை**
**எழுவினு முயர்ந்த தோளா யெய்திய தென்னை யென்ன**
**முழுதுல களித்த தந்தை முந்தையோர் முறையி னின்றும்**
**வழுவின னதனை நீக்க மன்னனைக் கொணர்வா னென்றுன்**

கொண்டுகூட்டு: தழுவின புளினர் வேந்தன், தாமரைச் செங்கண்ணனை, 'எழுவினும் உயர்ந்த தோளாய், எய்தியது என்னை?' என்ன, 'முழுது உலகு அளித்த தந்தை முந்தையோர் முறையின் நின்றும் வழுவினன்; அதனை நீக்க, மன்னனைக் கொணர்வான்' என்றுன்.

பொருள்: பரதனைத் தழுவின குகன், அவனை 'வந்த காரியம் யாது?' என வினவ, அதற்கு விடையாகப் பரதன், 'சக்கரவர்த்தி, முன்னேர் முறையி னின்றும் விலகினுன்; அந்தக் குறையை நீக்குதற்கு இராமனை அழைத்துக்கொண்டு போக' என்றுன்.

புளினர் - வேடர். எழு - தூண். முந்தையோர் முறை, மூத்தவனுக்கு முடிசூட்டுதலைக் குறித்தது. வழுவினன் என்றது மூத்த இராமனிருக்க இளைய பரதனுக்கு இராச்சியத்தை அளித்ததைக் குறித்தது. கொணர்வான் - கொண்டுபோம்படி. பரதன் தசரதனை 'எந்தை' யென்றுனென்றுல், சகோதர ஞகக்கொண்ட குகனை வேறுபடுத்துக் கூறினுவானென்பதை விலக்கத் 'தந்தை' யென்று னென்றுர். இராமன் விபீடணனேடு சகோதர உரிமை பாராட்டிப் பேசும்போது அவனிடம் (விபீடணன் அடைக்கலப் படலம்-146) தசரதனை 'எந்தை' யென்னுது (இந்தப் பாட்டிற்போலப் பொதுவாகத் 'தந்தை'யும் என்னுது) 'உந்தை' யென்றதைக் காண்க.

பாட பேதம்: கொணர்வான் வந்தேன். (123)

**கேட்டனன் கிராதர் வேந்தன் கிளர்ந்தெழு முயிரஞகி**
**மீட்டுமண் ணதனில் வீழ்ந்தான் விம்மின னுவகை வீங்கத்**
**தீட்டரு மேனி மைந்தன் சேவடிக் கமலப் பூவிற்**
**பூட்டிய கையன் பொய்யி லுள்ளத்தன் புகல லுற்றுன் (124)**

கொண்டுகூட்டு: கிராதர் வேந்தன் கேட்டனன்; (மகிழ்ச்சியால்) கிளர்ந்து எழும் உயிரன் ஆகிப் (பரதனை மகாத்துமா என்று) மீட்டும் மண்ணில் வீழ்ந்தான்; உவகை வீங்க விம்மினன்; தீட்டு அரும் மேனி மைந்தன் சேவடிக் கமலப் பூவில் பூட்டிய கையன் பொய் இல் உள்ளத்தன் புகலல் உற்றுன்.

பொருள்: குகன், (பரதன் இராமனை முடிசூட்ட அழைக்க வந்ததாகக் கூறியதைக்) கேட்டான்; உடனே, மகிழ்ச்சியினுல், ஓங்கிக் கதிக்கும் உயிரினஞகி, (முன் பரதனை உறவுடைமை

பற்றி வணங்கியவன் இப்போது அவன் பரம பரித்தியாகியான மகாத்துமா வென்று உணர்ந்து, அந்த முறையில் வணங்கும் வணக்கமாகத் திரும்பவும் அவனை) மண்ணில் விழுந்து வணங்கினான்; உவகை மிக, உடம்பு பூரித்தான்; பரதன் பாதங்களில் பூட்டப்பட்ட கையினனாய் உண்மையே உள்ள உள்ளத்தினனாய் உரைக்கின்றான்.

கிளர்தல் - உயர்தல். மீட்டும் - திரும்பவும். விம்முதல் - பருத்தல். —புறப். வெண். வீங்குதல் - மிகுதல்.—புறநா. தீட்டு அரும் மேனி - (சித்திரத்தில்) எழுதுதற்கரிய (அழகுடைய) தேகம். இதற் கடுத்த இரண்டு பாட்டுக்களிற் குகன் பரதனைப் புகழ்தல், அவன் உள்ளத்தில் உணர்ந்ததை உணர்ந்தபடியே உரைத்த தன்றி மிகைப்படுத்துக் கூறிய தன்றென்பதை உணர்த்தப் பூர்வ பீடிகையாகப் 'பொய்இல் உள்ளத்தன்' என்றது குறித்துக்கொள்ளத் தக்கது. (124)

**தாயுரை கொண்டு தாதை யுதவிய தரணி தன்னைத்**
**தீவினை யென்ன நீத்துச் சிந்தனை முகத்திற் றேக்கிப்**
**போயினை யென்ற போழ்து புகழினோய் தன்மை கண்டால்**
**ஆயிர மிராமர் நின்கே ழாவரோ தெரியி லம்மா (125)**

கொண்டுகூட்டு: '(உன்) தாயின் உரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னைத் தீவினை என்ன நீத்து, சிந்தனை முகத்தில் தேக்கிப் போயினை; என்றபோது, புகழினோய் (உன்) தன்மையை (அறிஞர்) கண்டால், (அவர்) தெரியில், ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ! அம்மா!

பொருள்: 'உனக்கு இராச்சியத்தை அளிக்கும்படி வரங் கேட்ட உன் தாயின் வார்த்தையை அங்கீகரித்துக் கொண்டு உன் தந்தை கொடுத்த பூமியைப் பாவமான தென்று வெறுத்துக் கைவிட் டொழித்து (அப்படி விட்டொழித்தது உலகத்தார் ஒப்புக் கொண்ட வேட மன்று, உண்மையே என்பது விளங்க, அகத்தே உள்ள) கவலை அகங் கொள்ளாமல் வெளிப்பட்டு முகத்தே நிறைத்துவிட்டாயானாய்; அப்படி யானபோது, அந்த நிலையில் உன் இயல்பை அறிஞர் கண்டால், (அவர் அதனை ஆராய்வார்,) ஆராய்ந்தால் அவர்களுடைய அபிப்பிராயத்தில் ஆயிரம் இராமர் உனக்கு ஒப்பாவாரோ! அம்மா! (உன் தன்மை ஆச்சரியமானது.)

தாதை - பிதா. தரணி - பூமி. தீவினை - பாவம். நீத்து - துறந்து. சிந்தனை - கவலை. தேக்கல் - நிறைதல்.—பிங்கல. 2228. கேழ் - ஒப்பு —ஷெ 3428. 'என்றால்' ஆனால் எனப் பொருள்படல் போல, 'என்ற'

'ஆன' எனப் பொருள்பட்டது. தெரியில் - ஆராய்ந்தால். செத்துப் போனுன் என்பதிற் போலத் தேக்கிப் போயினை யென்பதில் 'போ' ஏன்பது துணிபுப் பொரு ளுணர்த்தும் துணைவினையாக வந்தது.

புகழிேனுய் தன்மை - புகழுடைய உனது இயல்பு. வாலி வதைப் படலம் 117-ம் பாட்டில் 'முறையிலோயை' என்பது முறையில்லாத உன்னை யெனப் பொருள்பட வருதல் காண்க. நிந்தனைப் படலம் 'ஒன்றுகேள்' என்ற 66-ம் பாட்டில் 'கொன்றுகோள் இழைத்தால் நீ நின் உயிர்விடில்' என்பதில் 'கோள் இழைத்தால்' என்பதற்குப் பின் 'நீ உயிர்விடுவாய்' என்பது சுருக்கங் கருதிக் கூருமல் விடப்பட்டது போலக் 'கண்டால்' என்பதன் பின் 'கண்டவர் ஆராய்வார்' என்பது விடப்பட்டது காண்க.

'அம்மா' என்ற அதிசயக் குறிப்புச் சொல், தாயோ தந்தையோ இருவரி லொருவர் கொடுத்தாலும் ஏற்றுக்கொண்டு ஆளுதற் குரிய பூமியை இரு முது குரவரும் இணைந்து கொடுத்திருந்தும் பரதன் விலக் கினமையும் உத்தம குணத்தினனுன இராமன் ஒருவன் போல ஆயிர ருளராஞலும் அவரனைவரும் பரதனை ஒவ்வாமையும் ஆச்சரியமென்பதை யுணர்த்தி நின்றது. இந்தப் பாட்டும் இதற் கடுத்ததும் அருமையினும் அருமையானவை. இவைகளின் அருமையின் அளவு, இவைகளிற் பரதனைப் புகழ்ந்த முறையினும் சிறந்த முறையிற் புகழ்தல் இயலா தென்பதை உணர்வதன் அளவேயாம். (125)

**என்புகழ் கின்ற தேழை யெயினனே னிரவி யென்பான்**
**தன்புகழ்க் கற்றை மற்றை யொளிகளைத் தவிர்க்கு மாபோல்**
**மன்புகழ்ப் பெருமை நுங்கள் மரபினேர் புகழை யெல்லாம்**
**உன்புக ழாக்கிக் கொண்டா யுயர்குணத் துரவுத் தோளாய்**

கொண்டுகூட்டு: உயர் குணத்து உரவுத் தோளாய்! ஏழை எயினனேன் (உன்னைப்) புகழ்கின்றது என்? இரவி என்பான் தன்புகழ்க் கற்றை (யால்) மற்றை ஒளிகளைத் தவிர்க்குமாறுபோல், மண்புகழ்ப் பெருமை நுங்கள் மரபினேர் புகழையெல்லாம், உன்புகழ் ஆக்கிக் கொண்டாய்.'

பொருள்: 'ஏழை வேடனுன நான் இராசாதி ராசனுன உன்னைப் புகழ்வது எப்படி! சூரியன் தன் ஒளியால் மற்றைய வான சோதிகளின் ஒளிகளைத் தன்னெளியாக்கி அவைகளைப் பார்ப்போர் கண்ணுக்குப் புலப்படாமற் போக்கும் விதம் போல, நீ உன் புகழால் உங்கள் குலத்தினேர் புகழ்க ளெல்லாவற்றையும் உன் புகழாக்கி அவைகள் தோன்ருமற் போக்கினுய்!' என்ருன்.

என் - எப்படி (இதற்கு முந்திய 118-ம் பாட்டுரையைப் பார்க்க). ஏழை எயினனேன் - (கேவலம்) எளியவனும் (ஈன) வேடனுமாகிய யான்.

இரவி யென்பான் - சூரியனென்று சொல்லப்படுவான். 'இல்வாழ்வா னென்பான்' என்ற குறளுரையில் 'என்பான்' என்பது 'என்று சொல்லப்படுவான்' என்று பொருள் கூறப்பட்டிருத்தல் காண்க. 'கற்றை - கிரணக் கூட்டம். (உ - ம்.) "கண்ணிற் கடைத்தீ உக நெற்றியிற் கற்றை நாற"—இராமா. நகர்நீங், 116'—ச. அ. புகழ்க் கற்றை-('இருளை விழுங்கும் ஒளி, பனியைப் பருகும் வெயி லென்னும் ஒளி'யென்று புகழப்படும்) புகழையுடைய ஒளிகளின் தொகுதி. 'தவிர்க்குமாறு,' 'தவிர்க்குமா' என ஈறு தொக்கது. தவிர்க்குமாறு - போக்கும் விதம். தவிர்தல் - போதல்—சிந்தா. 2542 உரை. மன் - நிலைபெற்ற. 'புகழ்ப்பெருமை,' பெருங்கதை (204-ம் பக்கம் 10 வரியில்) 'புகழதுபெருமை' யென வருதல் காண்க. நுங்கள் - உங்கள். மரபு - வமிசம் - குலம். உரவு-வலிமை. செய்யுளாதலால், கற்றையால் எனற்பாலது கற்றை யென்றும், பெருமையையுடைய எனற்பாலது பெருமை யென்றும் தொக்கு நின்றன.

மன்புகழ்ப் பெருமை நுங்கள் மரபினோர் - (நிலையாத செல்வப் பெருமை சேனைப் பெருமை முதலிய பெருமைகளைப் பெருமையாகக் கொள்ளாமல்) நிலையான புகழ்ப் பெருமை(யே பெருமையாக) உடைய உங்கள் குலத்தவர்கள். மன்புகழ்ப் பெருமை என்பதற்கு நிலைத்த புகழையும் பெருமையையும் உடைய என்றும் நிலைத்த புகழ் மிகுதியையுடைய என்றும் பொருள் கொள்ளலாம். குகன் பரத னொருவனுடன் பேசுகின்றானயினும் பக்கத்து நின்ற சத்துருக்கனையும் தான் முன்னமே பழகியுள்ள இராம லக்குமணரையும் உளப்படுத்து 'நுங்கள் மரபினோ' ரென்றான். உயர் குணத் துரவுத் தோளாய் - உயர்ந்த குணத்தினை யுடைய வலிமை பொருந்திய தோளினாய். உயர் குணம் உள நலத்தையும் உரவுத் தோள் உடல் நலத்தையும் குறிப்பித்தன. இரண்டும் புகழ் ஈட்டுதற் கேதுவானவை.

இப்பாட்டின் முன்னிரண்டடிகள் உவமானத்தையும் பின்னிரண்டடிகள் உவமேயத்தையும் உட்கொண்டுள்ளன. உவமானத்திற் கூறிய 'சூரியன் ஒளியால்' என்பதைக் கொண்டு உவமேயத்திற் கூறாத, அவ்வொளிக்கு ஒப்பான, 'உன் புகழால்' என்பதும், உவமேயத்திற் கூறிய 'உன் புகழாக்கி' என்பதனால் உவமானத்திற் கூறாத 'தன் ஒளி ஆக்கி' என்பதும், உவமானத்திற் கூறிய (தோன்றாமற் போக்குத லென்னும் பொருளுடைய) 'தவிர்த்தல்' என்பதனால் உவமேயத்திற் கூறாத 'தோன்றாமற் போக்குதல்' என்பதும் வருவித்துப் பொருள் கூறப்பட்டிருப்பது காண்க.

குகன், ஏனைய இராச குலங்கள் யாவற்றினும் புகழ் மிக்கது பரதன் குலமென்பது குறிக்கப் 'புகழ்ப் பெருமை நுங்கள் மரபு' என்றானென்றும், அப்படிப் புகழ் சிறந்த குலத்திலே தோன்றினோரெல்லாருடைய புகழ்க ளெல்லாவற்றையும் தன்னு ளடக்கும்படியான மாபெரும் புகழ் படைத்தோன் பரதனென்பது கருதிக் குகன் அவன் உள்ளக்கிடையை அறிந்த பின் அவனை முதலாவதாக (இதற்கு முந்திய பாட்டில்) விளிக்கும் போது வேறு கூறி விளியாமற் 'புகழினோய்!' என விளித்தா னென்றும்,

அவ்விளியினுல் அப்புகழின் மேம்பாடு இவ்வளவு சிறந்ததென (இப்பாட்டில்) விதந்து கூறுதற்குத் தோற்றுவாய் செய்தானென்றும் உய்த்துணர வைத்திருத்தல் நோக்கி நுகர்தற் குரியது.

ஏகனுன பரதனது புகழுடம்பு ஏகமான சூரியனுக்கும், அனேகரான அவன் முன்னேர் புகழுடம்புகள் அனேகமான ஏனைய வான சோதிகளுக்கும், பரதனது புகழ் சூரியனது ஒளிக்கும், அவன் முன்னேரது புகழ்களெல்லாம் சகல வான சோதிகளின் ஒளிக ளனைத்துக்கும், பரதன் புகழ் அவன் முன்னேர் புகழைத் தன்னுள்ளாக்கி அவைகள் தோன்ருமல் தான் மட்டும் விளங்குதல் சூரியன் ஒளி ஏனைய சோதிகளின் ஒளிகளைத் தன் மயமாக்கித் தான் தனியே பிரகாசித்தலுக்கும், பரதன் முன்னேர் புகழுடம்புகள் விளங்காமல் அவன் புகழுடம்பு பொலிதல் மற்றைய வான சோதிகள் மறையச் சூரியன் துலங்குதலுக்கும், பரதன் புகழுடம்பும் அவன் புகழும் அவன் முன்னேர் புகழுடம்புகளையும் அவர்களுடைய புகழ்களையும் துலங்காதனவாகச் செய்தனவே யன்றி இல்லாதனவாகச் செய்யாமை சூரியனும் அதன் ஒளியும் மற்றைய வான சோதிகளையும் அவற்றின் ஒளிகளையும் மறைவித்த தன்றி இல்லாதனவாகச் செய்யாமைக்கும், பரதன் புகழுடம்பு தோன்றுமுன் சென்ற அவன் முன்னேர் புகழுடம்புகள் விளங்கிய காலம், சூரியன் தோன்றுமுன் கழிந்த, மற்றைய வான சோதிகள் துலங்கிய இராக்காலத்துக்கும் பரதன் புகழுடம்பு விளங்கும் காலம், சூரியன் விளங்கும் பகற் காலத்துக்கும் ஒப்பு. இவ்வாருக உவமான உவமேயங்களின் ஒற்றுமைகள், ஊன்றி நோக்க நோக்க, மேன் மேல் விளங்கிப் படிப்படியாக அதிகப்படும் ஆனந்தத்தை விளைவித்துப் பரவசப்படும்படி கம்பர் இக்கவியை இயற்றி யிருத்தல், அவரெதிரே மற்றெல்லாக் கவிஞர்களும் சூரியன் முன் ஏனைய சோதிகள் போல்வா ரென்னும் உவமையை நம் உள்ளத்தே உதிப்பிக்கின்றது.

பாட பேதம் : மன்புகழ் பெருமை.* (126)

### பரதன் பதைபதைத்தல்

மேற்கூறியவாறு குகன் பரதனை மனமாரப் புகழ்ந்து அவனுக்கும் பேரன்புடையானுன். அவனுக்கு ஆர்தாம் அன்பு செய்யார்? அவனுடைய அருங் குணத்தாலன்ருே, அன்பில் ஈடுபடும் இயல்புடைய இராமன் எவரினும் அவனை இனியனுகக் கொண்டு அவன்பாற் கழிபெருங் காதல் பூண்டான். அவன் இராமன் சென்ற தென்றிசை நோக்கிக் கும்பிட்டுக்கொண்டு, 'நம் தமையன் எங்கே தங்கி யிருந்தான்?' என்று கேட்கக் குகன், 'அதனைக் காட்டுவேன். கூட வருவாய்' என்று சென்ருன். பரதனும் சென்று இராமன் படுத்திருந்த இடத்தைப்

* அரசர் புகழும் பெருமையை யுடைய

பார்த்தான். பார்க்கவே பதைபதைத்துப் பாரில் விழுந்து துன்பக் கடலுள் அழுந்திக் கண்ணீர் சொரிந்தான்.

இயன்றதென் பொருட்டி ஞலிவ் விடருனக் கென்ற போழ்தும்
அயின்றனை கிழங்குங் காயு மமிர்தென வரிய புல்லில்
துயின்றனை யெனவு மாவி துறந்திலென் சுடருங் காசு
குயின்றுயர் மகுடஞ் சூடுஞ் செல்வமுங் கொள்வென் யானே

கொண்டுகூட்டு : '(அண்ணு !) என் பொருட்டினுல் இந்த இடர் உனக்கு இயன்றது என்ற போழ்து, (உயிர்விடேனுயினும் குகன்,) "காயுங் கிழங்கும் அமிர்து என அயின்றனை; அரிய புல்லில் துயின் றனை" எனவும் ஆவி துறந்திலென்; யான், சுடருங் காசு குயின்று உயர் மகுடஞ் சூடும் செல்வமும் கொள்வென் (போலும் !)'

பொருள் : 'அண்ணு ! என் தாய், என் நிமித்தத்தால் காட் டில் காலந்தள்ளும் இந்தத் துன்பம் உனக்கு ஏற்பட்ட தென்று சொன்னபோது (யான் உயிர் விட்டிருக்கக் கடவேன்; அப்போது உயிர் விடவில்லை யாயினும், இப்போது குகன்) "காய்களையும் கிழங்குகளையும் நீ அமிர்தம் போல எண்ணி அருந்தினுய், கண்படை கொள்ளல் கட்டமான புல்லிலே படுத்துக் கண் வளர்ந்தாய்," என்று சொல்லவும் உயிர் விட்டிலேன்; அப்படிப் பட்ட வன்னெஞ்சுடைய யான் இனிப் பிரகாசிக்கும் இரத்தினங் கள் இழைக்கப்பட்ட விலை உயர்ந்த கிரீடத்தைச் சூடும் அரசச் செல்வத்தையும் ஏற்றுக் கொள்வேன் போலும் !' என்று தன்னைத் தான் வெறுத்துக் கூறினுன் பரதன்.

'விளங்கும் இரத்தினம் அழுத்தி உயர்ந்த கிரீடம் சூடும் செல்வத்தை யும் கொள்ள நின்றேன் (ஆதலால்) உயிர் விடேன்' என்பர்.—சோ. சு.

இயன்றது - ஏன்றது - ஏற்பட்டது. அயின்றனை - தின்றுய். துயின் றனை - தூங்கினுய். துறந்திலென் - விட்டிலேன். சுடரும் - பிரகாசிக்கும். குயின்று - பதிக்கப்பட்டு. 'என்றபோழ்தும்' 'எனவும்' என்பவைகளில் முந்திய உம்மை எதிரது தழீஇயது; பிந்தியது இறந்தது தழீஇயது. 'என்றபோழ்தும்' என்பதற்கு 'எனவும்' என்றும், 'எனவும்' என்ப தற்கு 'என்றபோழ்தும்' என்றும் பொருள் கூறுதல் பொருத்தமாயிருத் தல் காண்க. (127)

இலக்குமணனது காவலைப் பரதன் அறிதல்

மேற்கூறியவாறு கூறிய பின்பு, பரதன், குகனை நோக்கி 'நம் தமையன் படுத்திருந்த இடம் இதுவானுல், நம் தம்பி இராப்பொழுதைப் போக்கிய தெங்கே?' என்ருன்.

**அல்லையாண் டமைந்த மேனி யழகனு மவளுந் துஞ்ச
வில்லையூன் றியகை யோடும் வெய்துயிர்ப் போடும் வீரன்
கல்லையாண் டுயர்ந்த தோளாய் கண்கணீர் சொரியக் கங்குல்
எல்லைகாண் பளவு நின்று னிமைப்பில னயன மென்றுன் (128)**

கொண்டுகூட்டு : 'கல்லை ஆண்டு உயர்ந்த தோளாய்! அல்லை ஆண்டு அமைந்த மேனி அழகனும் அவளும் துஞ்ச, வீரன், வில்லை ஊன்றிய கையோடும், வெய்து உயிர்ப்போடும் கண்கள் நீர் சொரியக், கங்குல் எல்லை காண்பளவும், (காத்து) நயனம் இமைப்பிலன் நின்றுன்' என்றுன்.

பொருள் : 'இராமனும் சீதையும் உறங்க, இலக்குமணன் (அவசியம் நேர்ந்த போது உபயோகிக்கக் கருதிப் பிடித்திருந்த) வில்லை நிற்றற்குத் துணையாக நிலத்தில் ஊன்றிய கையினனுய் இராமனுக்கு நேர்ந்த நிலைமையை நினைந்து துன்புகூர்ந்து விடுகின்ற பெருமூச்சினனுய் அத் துன்ப மிகுதியால் கண்கள் கண்ணீர் பொழியாநிற்க, இராக்காலத்தின் எல்லையாகிய விடியலைக் காணுமட்டும் காவல் செய்து கண்கள் இமைகொட்டாமல் நிலையிலேயே நின்றுன்' என்றுன் குகன்.

அல்லை ஆண்டு அமைந்த மேனி - இருளை(க் கோபித்துப் போர் செய்து வென்று அடிமையாக்கி) ஆண்டு (அதன் பின்பு கோபம் நீங்கி) அமைதியுற்ற உடம்பு. அழகு - இராமம்—சூடா. அழகன் - இராமன். துஞ்ச - உறங்க. வெய்துயிர்ப்பு - பெருமூச்சு. கல் - மலை. கல்லை ஆண்டு என்பதற்கு அல்லை ஆண்டு என்பதற்குப் போலப் பொருள் செய்துகொள்க. 'நின்றுன்' என்றதனுல் படுக்காமையும் 'நயனம் இமைப்பிலன்' என்றதனுல் சிறிதும் தூங்காமையும் சொல்லாமற் சொன்னுன். 'காண்பு என்னுந் தொழிற்பெயர் எச்சத்தில் வந்தது.' இப்பாட்டில் இலக்குமணனது எல்லை யில்லாத இராமபத்தி தொழிற்பட்ட முறைமையை மிகவும் இனிமை பயப்பக் கவி கூறியது கண்டு களிக்கத் தக்கது. (128)

### பரதன், தன் அடிமையை வெறுத்தல்

**என்பத்தைக் கேட்ட மைந்த னிராமனுக் கிளையா ரென்று
முன்பொத்த தோற்றத் தேமுள் யானென்று முடிவி லாத
துன்பத்துக் கேது வானே னவனது துடைக்க நின்றுன்
அன்பத்துக் கெல்லை யுண்டே யழகிதென் னடிமை யென்றுன் (129)**

கொண்டுகூட்டு : என்பதைக் கேட்ட மைந்தன், 'இராமனுக்கு இளையார் என்று, முன்பு (பிறப்பு) ஒத்த தோற்றத்தே(மான எம்) முள்,

யான் என்றும் முடிவில்லாத துன்பத்துக்கு ஏதுவானேன். அவன் அது துடைக்க நின்றான்; (அவனுடைய) அன்புக்கு எல்லை உண்டே! என் அடிமை அழகிது!' என்றான்.

பொருள்: (மேற்கூறியவாறு குகன்) கூறியதைக் கேட்ட பரதன், 'இராமனுக்குத் தம்பிமாராய் (இப்போது செய்தொழில் வேற்றுமையாற் சிறப்பு ஒவ்வாதேமும்) முன்பு பிறப்பால் ஒத்தே (முமான எம்)முள்ளே, யான் இராமனுக்கு என்றும் முடிவில் லாத துன்பத்துக்குக் காரண மானேன். அவன் அத் துன் பத்தை நீக்க அமைந்து நின்றான். அவனுடைய அன்புக்கு எல்லை இல்லை. அவன் அன்பு அவ்வளவு சிறந்ததாக, என் அடிமைத் தொழில் இருந்தவாறு நன்று யிருந்தது!' என்றான்.

> பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
> செய்தொழில் வேற்றுமை யான்

என்ற குறட் கருத்தை இப்பாட்டுத் தழுவியது. செய்யுளாதலால், 'என் பதை' 'என்பத்தை' எனவும் 'அன்பதுக்கு' 'அன்பத்துக்கு' எனவும் தகரம் விரிக்கப்பட்டு வந்தன. 'அன்பத்துக்கு அத்துச்சாரியை' என்றும் கூறுவர். இளையா ரென்று - இளையாராகி. நீ சொன்னயென்றால் என்பது நீ சொன்னயானால் எனவும், இராம னென்றவன் என்பது இராமனானவன் எனவும் பொருள்படல் போல, இளையாரென்று என்பது இளையாராய் எனப் பொருள்பட நின்றது. 'இளையா ரென்று' என்பதற்கு 'இளையா ரென்று சொல்லப்பட்டு' என்றும் பொருள் கொள்ளலாம். தோற்றம் - பிறப்பு. எல்லையுண்டே என்பதில் ஏகாரம் எதிர்மறை. அழகிது - நன்று யிருந்தது! (இகழ்தற்குரியது என்றபடி).

பாட பேதம்: இளையா ரென்ற: துடைத்து நின்றான். (129)

### குகன் தோணிகள் கொணரல்

பின்பு, அன்றிரவில், பரதன், இராமன் தங்கிய இடத்திலே தானும் தங்கிப் புழுதியிலே படுத்திருந்து பொழுதைப் போக்கி னான். அவன் குகனை நோக்கி, 'எங்களைக் கங்கையைக் கடந்து கரையேறச் செய்வாயானால், அது, எங்களை, இராமனை அடை யாமையாகிய துன்பக் கடலி னின்று கடத்தி அவனை அடைத லாகிய இன்பக் கரையி லேற்றியதாம்' என்றான். குகன் 'நன்' றென்று தோணிகளைத் தருவித்தான்.

அந்தத் தோணிகள், சிவபிரான் வீற்றிருக்கும் கயிலைமலை போன்றும், அவன் வில்லாக வளைத்த மேருகிரி போன்றும், அவன் நண்பனான குபேரனது விமானம் 'நாம் ஏகமா யிருந்த தனானன்றே அநேகமான இவைகளை ஒவ்வாமே நானுற்றேம்'

என்று, அது தீரப் பல உருவெடுத்தாற் போன்றும், பெருமையும் அழகும் பொருந்தி யிருந்தன. அவைகள் பெரிய கங்கா நதியும் இடம் பற்று தென்னும்படி நெருங்கி நின்றன; இக்கரையிலுள்ளாரை அக்கரையிலும் அக்கரையிலுள்ளாரை இக்கரையிலும் கொண்டு சேர்த்தலால், மண்ணுலகத் துள்ளாரை விண்ணுலகத்தும் அவ்வுலகத் துள்ளாரை இவ்வுலகத்தும் சேர்க்கும் இருவினை நிகரென விருந்தன.

### சேனை தோணி ஏறிச் செல்லல்

பரதன் ஆணைப்படி, சுமந்திரன் சேனையைத் தோணிகளிலேற்றிச் செல்லச் செய்தபோது, அது, ஆறு கடலிற் செல்லுதலுக்கு மாறாகக் கடல் ஆற்றிற் சென்ற தென்னும்படி யிருந்தது. களிறுகள், பிளிறிக் கொண்டு கங்கை யாற்றில் இறங்கிய போது, இடியுடைய மேகங்கள் கடலிடையே படிவன வொத்தன. அவைகள் துதிக்கைகளை உயர்த்துக் கொண்டு கங்கையில் நீந்திச் சென்ற காட்சி, பாய்மரத்தோடு கடலிற் செல்லும் மரக்கலங்களின் தோற்றம் போன்றது.

சேனை யேறிய தோணிகள் போகும் வேகத்தால் தள்ளுண்டு அக்கரை நோக்கிச் சென்ற நீரினால், கங்கையும், இராமனைக் காணும் ஆசையால் தென்றிசை நோக்கிச் சென்றது போன்றது. மாதர் ஏறிய தோணிகள், இருபக்கத்துத் துடுப்புக்களும் இரண்டு கால்களாகச் செல்பவை, அம் மாதர் பாதந் தீண்டலுற்றதனால் உயிர் பெற்று நடப்பன ஒத்தன.

### பரதன் முதலியோர் தோணி யேறிச் செல்லல்

தன்னன தம்பியுந் தாயர் மூவரும்
சொன்னதேர் வலவனுந் தூய தோழனும்
துன்னின ரேறலுந் துழா துடுப்பெனும்
நன்னயக் காலினு னடத்தன் மேயினான் (130)

கொண்டுகூட்டு: தன்னை அன்ன தம்பியும் தாயர் மூவரும் சொன்ன தேர்வலவனும் தூய தோழனும் (தோணியில்) துன்னினர் ஏறலும், (அவர்களோடு) துழாவுந் துடுப்பெனும் நல் நயக் காலினால் நடத்தல் மேயினான்.

பொருள்: பரதன், தன் தம்பி சத்துருக்கனும், தாய்மார் கோசலை, கைகேயி, சுமித்திரை யென்பார் மூவரும், மந்திரி

சுமந்திரனும், தோழன் குகனும் தான் ஏறிய தோணியில் ஏறின வுடனே, அவர்களோடு கங்கை யாற்றிற் செல்வானாயினன்.

தன்னன - தன்னை அன்ன - தன்னை ஒத்த. தேர்வலான், சுமந்திர னைச் சுட்டியது. தோழன், குகனைக் குறித்தது. துழாதுடுப்பு, வினைத் தொகை நிலைத்தொடர்; துழாவும் துடுப்பென விரியும். துழாவுதல் - தண்டு வலித்தல். தோணியிற் சென்றான் என்பதைத் துடுப்பெனும் காலி னால் நடந்தான் என்று கூறிய நயம் கவனிக்கத் தக்கது. இவ்வாறே 'பிறர் காலால் இயங்கும் மாது'* என்று சிவிகை யேறிச் சென்ற மாயை யைச் சிவப்பிரகாசர் கூறியது, இக்கருத்துத் தூண்டக் கூறியது போலும்.

இந்தப் பாட்டும் இதன் பின் வரும் ஏழு பாட்டுக்களும் அடங்கிய பகுதி கம்பர் கவித் திறத்தைக் காட்டும் சிறந்த பகுதிகளுள்ளே சிறந்த வற்றுள் ஒன்றென்பதைக் கற்றாரனைவரும் ஒரு மனமாக ஒப்புக்கொள்வர். இப்பகுதியே எப்பகுதியினுஞ் சிறந்ததென்பாரும் உளர்.

இப்பகுதியில் அடங்கிய 'சுற்றத்தார்' முதலிய ஆறு பாட்டுக்களிற் கூறப்பட்டுள்ள மிக்க விருப்பும் வியப்பும் விளைக்கும் கருத்துத் தொகுதி கம்பசிருட்டியோ, வான்மீகி கூறியுள்ளதோ வென்று யான் விசாரித்த போது, இதன் மூலம் வான்மீக ராமாயணத்தில் 92-ம் சருக்கத்தில், பரத்து வாச முனிவனது வினாவுக்கு விடையாக, அவனுக்குப் பரதன் தாயார் மூவரையும் இன்னா ரின்னா ளெனக் கூறிய பகுதி யென்று தெரியலா னேன். அந்தப் பகுதியின் மொழிபெயர்ப்பு, பண்டித நடேச சாஸ்திரி யாராற் செய்யப்பட்டிருக்கிறபடி, 'பகவானே! எளியவ ராகவும், சோகத் தாலும் உபவாசத்தாலும் இளைத்தவராகவும் காணப்படுகின்ற தந்தையின் பட்டமகிஷியான கௌசலை யென்ற பேரையுடைய இவர், விஷ்ணுவை அதிதிதேவி பெற்றதுபோல், பராக்கிரமத்துடன் கூடியிருக்கும்படி சிங்கம் போற் செல்லும் நடை பொருந்திய மனிதப் புலியாகிய அந்த இராமனைப் பெற்றார். இக்கௌசலையாருடைய இடக்கையைப் பிடித்துக்கொண் டிருப்ப வரும், வருத்தமடைந்த மனத்தை யுடைமையாற் காட்டின் நடுவில் வாடிய பூக்களையுடைய கர்ணிகாரவிருக்ஷக் கிளை போன்றவருமான இத்தேவியின் குமாரர்தாம், 'அசுவிநீ தேவர்களை யொத்தவர்களும், வீரர்களும், உண் மையில் உறுதி கொண்டவர்களுமான லக்ஷ்மண சத்துருக்கனர்கள். எவ ருடைய காரணமாக, அவ்விரு புருஷப் புலிகளும் உயிர் மாய்தற்கொத்த ஆபத்தை இக் காட்டில் அடைந்திருக்கின்றார்களோ, புதல்வரை யிழந்த தசரத மன்னரும், சுவர்க்க மடைந்தாரோ, அப்படிப்பட்ட கோபகுண முள்ளவரும், திருத்தப்படாத புத்தியை யுடையவரும், கருவ மடைந்த வரும், கட்டழகியாகத் தம்மைக் கருதுபவரும், செல்வத்திற் பேராசை கொண்டவரும், பெருந்தன்மை யற்றவரும், பெருந்தன்மை யுடையவர்

* பிரபுலிங்கலீலை

போலத் தோன்றுபவரும், கொடியவரும், பாவத்திற் கருத்தூன்றியவரும், கைகேயி யென்ற பெயருடையவருமான இவரை எனது தாயாக அறிமின். இவரால்தான் எனக்குப் பெரிய விசனம் நேர்ந்ததென் றெண்ணுகிறேன் ;' என்பது. இரு கவிகள் கூற்றினும் இடமும் வினவியோனும் வேறுபடல் வெளிப்படையானது. ஏனைய வேறுபாடுகளையும் ஒற்றுமைகளையும், இருவர் கூற்றுக்களையும் ஊன்றி ஒப்புநோக்கி உய்த்துணர்ந்து கொள்க. (130)

### பரதன் குகனுக்கு அன்னையரை அறிவித்தல்

**சுற்றத்தார் தேவரொடுந் தொழநின்ற**
**கோசலையைத் தொழுது நோக்கி**
**வெற்றித்தார்க் குரிசிலிவ ராரென்று**
**குகன்வினவ வேந்தர் வைகும்**
**முற்றத்தான் முதற்றேவி மூன்றுலகு**
**மீன்றானை முன்னீன் றானைப்**
**பெற்றத்தாற் பெருஞ்செல்வம் யான்பிறத்த**
**லாற்றுறந்த பெரியா ளென்றான் (131)**

கொண்டுகூட்டு : (பரதனோடு வந்த) சுற்றத்தா(ரும்) தேவரும் தொழ(த் தோணியில்) நின்ற கோசலையைக் குகன் தொழுது நோக்கி, 'வெற்றித் தார்க் குரிசில் ! இவர் ஆர் ?' என்று வினவ, (பரதன்), 'வேந்தர் வைகும் முற்றத்தானின் முதல் தேவி ; மூன்றுலகும் ஈன்றானை முன் ஈன்றா(னாகிய இராம)னைப் பெற்றதால் பெரும் செல்வம், யான் பிறத்தலால் துறந்த பெரியாள் !' என்றான்.

**பொருள் : (பரதனோடு இராமனைக் காண வந்த) உறவினரும் (பரதன் இராமனைக் காணச் செல்வதைப் பார்க்க வந்த) தேவர்களும் தன்னை நோக்கிக் கும்பிடாநிற்கத் தோணியிலே நின்றுகொண்டிருந்த கோசலா தேவியைக் குகன், கும்பிட்டுக் கொண்டு பார்த்து, 'அரசே ! இவர் யார் ?' என்று கேட்கப் பரதன், 'கண்டு தொழச் சமயம் நோக்கிக் காத்துக்கொண்டு அரசர்கள் தங்கி யிருக்கப்பெற்ற முற்றத்தை யுடைய தசரத சக்கரவர்த்தியின் முதல் மனைவி ; மூன்று உலகங்களையும் பெற்த பிரமதேவனைப் பெற்ற ஸ்ரீமந் நாராயண மூர்த்தியாகிய இராமனைப் பெற்றதனால் அடைந்த செல்வத்தை, நான் ஒரு பாவி பிறந்ததனால் இழந்த பெருந் தகைமை உடையாள் !' என்றான்.**

தார் - மாலை. குரிசில், அண்மைவிளி. பெற்றதால், பெற்றத்தாலெனத் தகரம் விரிக்கப்பட்டு வந்தது. 'சுற்றத்தால்' என்னுங் குறளில் 'பெற்றத்தால்' என்பது பிரயோகிக்கப்பட்டிருப்பது காண்க. சாமானியரல்லாத உயர்ந்த அரசரான சுற்றத்தாரே யன்றித் தேவரும் தொழுது

கொண் டிருக்கும் ஒருவரைத் தெரிய விரும்புவோர், அவரைக் கைந் நீட்டிச் சுட்டிக் காட்டி 'இவர் யார்?' என்று கேட்டால் தகாத முறை யென்று கூருமற் கூறித் தக்க முறை இதுவென் றுணர்த்துவாராய்க் 'கோசலையைத் தொழுது நோக்கி.........இவர் ஆர்?' என்று குகன் வினவ, என்ருர்.

மேலும், 'இவர் ஆர்?' என்ற கேள்விக்குத் 'தசரதனுக்குத் தேவி' 'இராமனுக்குத் தாய்' என்ற விடைகள் இயல்பான விடைகளா யிருக்க, அவ் விடைகளை அவ்வாறு கூருது, அவற்றைக் கூறு முகத்தால் 'வேந்தர் வைகும் முற்றத்தான்' எனத் தசரதனைச் சிறப்பித்தும், 'முதற் றேவி' எனக் கோசலையை மேம்படுத்தியும், 'மூன்றுலகும் ஈன்ருனை முன் ஈன்ருள்' என இராமனை விதந்தும் கூறுவானேன் எனில்,—அக் கேள்வி கேட்ட சமயத்தில், கோசலா தேவியைச் சுற்றத்தாரும் தேவரும் தொழுத வண்ணமா யிருந்தன ராதலால், அத் தேவியைக் கைந் நீட்டிக் காட்ட லாற் சுட்டாது, கை கூப்பி நோக்குதலாற் சுட்டின குகன், 'சுற்றத்தார் தொழுவானேன்?' 'தேவர் தொழுவானேன்?' என்று தெரிய விரும்பினு னென்பது ஊகித்துணர்தற்பாலது. இவ்வாருகக், குகன், கேளாது கேட்ட கேள்விகளுக்கு விடைகளாகப் பரதன், 'அரசர் வணங்கும் சக்கர வர்த்தியாகிய தசரதனது பட்டமகிஷி யாதலாற், சுற்றத்தார் தொழு கின்ருர்கள்; மகா விட்டுணுவின் அவதாரமான இராமனைப் பெற்றவ ளாதலால், தேவர்கள் வந்தனை செய்கிருர்கள்' என்று தெரிவிக்க, அவ்வாறு விசேடித்துக் கூறினு னென்க.

இன்னும், 'இவர் ஆர்?' என்ற விஞவுக்குச் 'சக்கரவர்த்தியாகிய தசரதனுக்குப் பிரதம நாயகி, திருமாலாகிய இராமனுக்கு மாதா' என்று கூறியதன்மேல், இராமனைப் 'பெற்றதாற் பெறும், செல்வம் யான் பிறத்தலால் துறந்த பெரியாள்' என்று பரதன் ஏன் கூறினு னெனில், அவன் மேற்கூறிய விடைகளை அளிக்கும்போது, கோசலாதேவி முன் இருந்த ஆனந்த நிலையும் இப்போது உள்ள துக்க நிலையும் அவன் மனத்தில் இயல்பாகத் தோன்றி வருத்தம் செய்ய, 'ஐயோ! நான் ஒரு பாவி பிறவாதிருந்தால், இவ் அன்னையாருடைய ஆனந்த நிலை மாறி யிராதே!' என்ற எண்ணம் தோன்ற, அதனை அவசனுய் வெளியிட்டுக் கூறினு னென்க.

இனி, பரதன் தான் பிறந்ததனுல் கோசலாதேவி செல்வத்தை யிழந்தாளென்றது, தான் பிறக்கவில்லை யானுல், தனக்காகத் தன் தாய், தசரதன் இராமனுக்குக் கொடுத்த இராச்சியத்தைப் பிடுங்கிக்கொண்டு இராமனைக் காட்டுக்கு ஓட்டியிரா ளென்றும், அவள் அவ்வாறு செய்யா திருக்கவே, கோசலாதேவி தசரதன் இறவாதிருக்கும் மாங்கலியப் பாக்கி யத்தையும் இராமன் முடிசூடி யாளும் இராச்சியச் செல்வத்தையும் இழந்திரா ளென்பதையும் குறிப்பித்தது. (131)

என்றலுமே யடியின்மிசை நெடிதுவீழ்ந்
　　தழுவானை யிவன்யா ரென்று
கன்றுபிரி காராவின் றுயருடைய
　　கொடிவினவக் கழற்கான் மைந்தன்
இன்றுணைவ னிராகவனுக் கிலக்குவற்கு
　　மிளையவற்கு மெனக்கு மூத்தான்
குன்றனைய திருநெடுந்தோட் குகனென்பா
　　னிந்நின்ற குரிசி லென்றான் (132)

கொண்டுகூட்டு: (பரதன் கோசலையை இன்னாள்) என்றலும், (தன்) அடியின்மிசை வீழ்ந்து நெடிது அழுவானை, 'இவன் யார்?' என்று கன்று பிரிகாராவின் துயர் உடைய கொடி வினவக், கழல்கால் மைந்தன், 'இங்கு நின்ற(இ)வன் இராகவனுக்கு இன் துணைவன்; இலக்குவற்கும் இளையவற்கும் எனக்கும் மூத்தான்; குன்று அனைய திருநெடுந்தோள் குகன் என்பான் குரிசில்' என்றான்.

பொருள்: பரதன் கோசலா தேவியை இன்னாள் என்ற வுடனே, தன் அடியில் விழுந்து நெடும் பொழுது தொழுது கிடந்து அழுதுகொண்டிருந்த குகனை, 'இவன் யார்?' என்று கோசலாதேவி கேட்கப், பரதன், 'இவன், இராமனுக்குத் தம்பி; இலக்குமணனுக்கும் சத்துருக்கனுக்கும் எனக்கும் தமையன்; குகன் என்ற அரசன்' என்றான்.

நெடிது - நெடுநேரம். 'நெடிது வீழ்ந்து' என்பதற்குத் 'தீர்க்க தண்டஞ்செய்து' என்றும் பொருள் கொள்ளலாம். காரா - பெரிய பசு; காராம்பசு. கொடி, பூங்கொடி போன்ற கோசலையைக் குறித்தது. கழல் - வீரகண்டை. இந்நின்ற - இவ்விடத்து நின்ற. குரிசில் - தலைவன்; அரசன்.

ஒரு பெரியார் இன்னாரெனத் தெரிவிக்கப்பட்ட ஒருவர் அப் பெரியாரை வணங்குதல் முறையா மென்பதை 'என்றலுமே அடியின் மிசை நெடிது வீழ்ந்து' என்றதனால் உணர்த்தினார். 'கோசலாதேவியீரே! உமது கணவனார் காலஞ் சென்றாரே! மகனாரும் காட்டி லுறையும்படி விதி யிருந்ததே!' என்று ஒரு சக்கரவர்த்தினிபால் துக்கம் விசாரித்தல் அநாகரிக மென்பது கூறவேண்டுவ தில்லை. துன்புற்ற அன்பரைச் சந்தித்த அன்பர் இயல்பாக அழுதல் தம்மை யறியாமலே துக்கம் விசாரித்தலா மென்பது விளங்கக் குகன் துக்கங் கொண்டாடுதலை, 'அழுவானை' என்ற ஒரே சொல்லாற் சுருக்கமாகவும் துலக்கமாகவும் சூசிப்பித்த சொற் சாதுரியம் துதித்துக் கொண்டாடத் தக்கது.

　　அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
　　புன்கணீர் பூசல் தரும்

என்றவாறு, 'இவன் யார்?' என்ற கேள்வியில், 'இவன் இப்படி அழும்

அன்புடைமைக்குக் காரணம் யாது?' என்ற குறிப்பு வினு அடங்கி யுள்ளது. ஆகவே, பரதன் அக் காரணத்தை முதற்கண்ணே தெரிவித்து விடுவானுய் 'உன் புத்திரன்' என்று உணர்த்த 'இன் துணேவன் இராகவனுக்கு' என்முன். 'மூத்தான்' என்பது பின் வரப்பெற்றதனுல், 'துணேவன்' என்பது, தனக்குரிய 'சகோதரன்' என்ற பொருள் பயந்த மட்டில் நில்லாமல், 'இளய சகோதரன்' என்ற பொருளேக் குறிப் பித்தது. இராமன் குகனேத் தோழனுகவும் சகோதரனுகவும் ஒருங்கே கொண்டா னென்பதைத் 'தோழன்' 'சகோதரன்' என்ற இரு பொருளு முடைய 'துணேவன்' என்றதனுற் குறிப்பித்தான். பரதன், இலக்கு மணன் சத்துருக்கன் இருவருக்கும் மூத்தவனுயிருந்தும், தன்னே இறுதியில் வைத்துக் கூறிய விநயம் கொண்டாடத் தக்கது.

முற்பாட்டில், பரதன், கோசலாதேவியை இன்னுளெனக் கூறிய போது, 'கோசலே' யெனப் பெயர் கூருது விடுத்ததும், இப்பாட்டில், அவன் குகனே இன்னுனென்று கூறுங்கால், 'குகன் என்பான்' எனப் பெயர் கூறியதும், முறையே, தசரதன் குடும்பத்தா ரெல்லாருடைய பெயர்களேயும் குகன் முன்னரே அறிந்திருந்ததனுலும், குகனேப்பற்றிக் கோசலாதேவி இதுகாறும் ஒன்றும் அறியாதிருந்ததனுலும் என்பது கவனிக்கத் தக்கது. சுமித்திராதேவி கைகேயிதேவிகளே யின்னு ளின்னு ளெனக் கூறும் பிந்திய பாட்டுக்களில், அத் தேவிமார் பேர்கள், மேற் காட்டிய காரணத்தாற் கூறப்படா திருப்பதை நோக்குக. (132)

நைவீ ரலீர்மைந்தீ ரினித்துயரா
  ளுடிறந்து காடு நோக்கி
மெய்வீரர் பெயர்ந்ததுவு நலமாயிற்
  றுமன்றே விலங்கற் றிண்டோள்
கைவீரக் களிறனேய காளேயிவன்
  றன்ளுேடுங் கலந்து நீங்கள்
ஐவீரு மொருவீரா யகலிடத்தை
  நெடுங்கால மளித்தி ரென்ருள் (133)

கொண்டுகூட்டு: (கோசலே,) 'மைந்தீர்! இனித் துயரால் நைவீர் அல்லீர். மெய்வீரர் நாடு இறந்து காடுநோக்கிப் பெயர்ந்தது நலமா யிற்று. விலங்கல் திண்தோள் கைவீரக் களிறு அனேய காளே இவனேடு கலந்து, நீங்கள் ஐவீரும் ஒருவீராய், அகல் இடத்தை நெடுங்காலம் அளித்திர்?' என்ருள்.

பொருள்: கோசலாதேவி, பரத சத்துருக்கரை நோக்கிப் 'பிள்ளேகளே! இவனே உங்கள் சகோதரனுகப் பெற்றுள்ளீர்க ளாதலால், நீங்கள் இனிமேல், துன்பத்தால் வருந்தற்பாலீ ரல்லீர். இராம லக்குமணர் நாடு நீங்கிக் காடு சேர்ந்தது (என் மக்கள்

**நால்வரில் இருவரை இழக்கும்படி செய்த கேடு என்றிருந்தேன்; அஃது, அவ்வா றின்றி, நால்வரை ஐவராக்கிய) தன்மையா யிற்று. இவனோடு சேர்ந்து, நீங்கள் ஐந்து சகோதரரும் மன ஒற்றுமையால் ஒருவரே போன்று, விசாலமான பூமியை நெடுங் காலம் அரசாள்வீராக!' என்று ஆசீர்வதித்தாள்.**

நைவீரல்லீர் - வருந்துத லொழியுங்கள். மைந்தீர் - மைந்தரே. நாடு இறந்து - நாடு கடந்து. மெய்வீரர் - உண்மையை யுடைய வீரரான இராம லக்குமணர். ஆம், அன்று, ஏ, அசைகள். விலங்கல் திண்தோள் கை வீரக் களிறு அனைய காளை இவன் - மலை போலுந் திண்ணிய தோளை யுடையவனும், துதிக்கை யுடைய வீரம் பொருந்திய ஆண்யானை போன்ற வனும், காளைப் பருவ முடையவனுமான இந்தக் குகன். ஐவீரும் - நீங்கள் ஐந்துபேரும். ஒருவீராய் - ஒற்றுமையால் ஒருவரே போன்று. ஆய் - போன்று. அகலிடம் - பூமி. அளித்திர் - காவல் செய்யுங்கள்.

கோசலாதேவி, குகன் இராமனுக்குத் துணைவன் என்று தெரிந்த வுடனே, அந்நியன் தன்னவ னைது பற்றி இமைப் பொழுதும் ஒரு சிறி தும் திகைக்காமல், அவனைப் பெற்று நெடுங்காலம் வளர்த்த தாயின் தன்மை யுடையா ளாகித் ' தான் சக்கரவர்த்தினி, அவன் கேவலம் வேடர் தலைவன்' என்ற உயர்வு தாழ்வு ஓர் அணுவளவுந் தோன்றா தொழியத் தாய்மை பாராட்டி, அவன் அழுததற்கு ஆற்றுதலும் தொழுததற்கு வாழ்த்துதலும் செய்த சாதுரிய நிருவாகம் 'அரசரிற் பிறந்து பின் அரசரில் வளர்ந்து—அரசரிற் புகுந்து பேரரசியான' அத் தேவியினது உயர்ந்த பிறப்பு வளர்ப்பு முதலிய மேம்பாடுகளை உணர்த்துதல் ஊன்றி நோக்கி உவத்தற் குரியது.

இப் பாட்டும் இதற்கு முந்திய இரண்டு பாட்டுக்களும், கம்பர், அரசர் பலரோடும் அவர்களுடைய குடும்பத்தார் சுற்றத்தாரோடும் நீண்ட காலம் நெருங்கிப் பழகி, அவர்களுடைய பழக்க வழக்க ஒழுக்கம் அனைத்தும் நன்கறிந்தவ ரென்பதைக் குறிப்பனவாக இருத்தல் கவனிக் கத் தக்கது. (133)

**அறந்தானே யென்கின்ற வயனின்ற**
**டனைநோக்கி யைய வன்பின்**
**நிறைந்தாளை யுரையென்ன நெறிதிறம்பாத்**
**தன்மெய்யை நிற்ப தாக்கி**
**இறந்தான் றனிளந்தேவி யாவர்க்குந்**
**தொழுகுலமா மிராமன் பின்பு**
**பிறந்தானு முளனென்னப் பிரியாதான்**
**றனைப்பயந்த பெரியா ளென்றான் (134)**

**கொண்டுகூட்டு:** (கோசலையின்) அயல் நின்றாள்—அறந்தானே என்கின்ற (சுமித்திரை) தன்னை(க்குகன்) நோக்கி, 'ஐய, அன்பின் நிறைந்

தாளை (யாரென்று) உரை' என்ன, 'நெறிதிறம்பாத் தன் மெய்யை நிற்பது ஆக்கி இறந்தான் தன் இளந்தேவி; "யாவர்க்கும் தொழுகுலம் ஆகும் இராமன் பின்பு பிறந்தான் உளன்" என்னப் பிரியாதான் தன்னைப் பயந்த பெரியாள்' என்ருன்.

**பொருள் :** கோசலாதேவியின் பக்கத்தில் நின்ற, தருமமே அன்றி வேறல்லள் என்று சொல்லப்பட்ட—தருமம் உருவெடுத்தாற் போன்ற—சுமித்திராதேவியைக் குகன் நோக்கி, 'ஐயனே! அன்பு நிறைந்த இவளை இன்னுளென்று உரைப்பாயாக' எனப் பரதன், 'முறை தவருத் தனது உண்மையை நிலைநிறுத்தி அதற்காக மரணமடைந்த தசரதனது இளைய மனைவி, "இராமனுக்குத் தம்பி உண்டு" என்று சொல்லும்படி அவனைப் பிரியாத இலக்குமணனை ஈன்ற மகிமை யுடையாள்' என்ருன்.

யாவருக்கும் தொழுகுலம் ஆம் இராமன் - எல்லாருக்கும் (அவர்கள்) வணங்கும் குலதெய்வம் போன்ற இராமன். ஆம் - போலும். தொழுகுலம் - குலதெய்வம் : 'துலங்குகின் றேனடி யேனுடை யாயென் றொழுகுலமே.' (திருவாச. 6, 28)—த. அ.

தன் பர்த்தாவும் சக்கரவர்த்தியுமான தசரதனது ஆணையை அனுசரித்துக் கோசலாதேவி தன் குமாரன் இராமனைக் காட்டுக்குச் செல்ல விடை கொடுத்து விடுத்தாள். சுமித்திராதேவியோ அப்படிப்பட்ட ஆணை ஒன்றும் இல்லா திருக்கவும், அன்பினுல் தூண்டப்பட்டு, இராமனைக் காக்க அவனுக்குத் துணையாகத் தன் புத்திரன் இலக்குமணனைக் காட்டுக்கு மனம் உவந்து அனுப்பினுள். அவள் அத்தகைய அசாதாரண அறச் செயல் ஆற்றிய அரும் பெருந் தகையாளாதலை அறிவிக்க, அவளை 'அறந் தானே யென்கின்ற' என்ற அடைமொழியால் விசேடித்து மேம்படுத்திக் கூறினுர்.

தசரதனுக்கு மூன்ருந் தாரமான சுமித்திராதேவியை 'அயல் நின்ருள்' என்றதனுல், இரண்டாந் தாரமான கைகேயிதேவி கோசலாதேவிக்குப் பக்கத்தில் நில்லாமல், தான் செய்த கொடுமையை நினைவுகூர்ந்து தூரத்தில் விலகி நின்ருளென்பதை உய்த்துணரவைத்தார். குகன் தான் முன் அறியாத சுமித்திராதேவியை 'அன்பின் நிறைந்தாள்' என்றது, அத் தேவியினது அகத்தில் உள்ள பரிபூரணமான அன்பை அவள் முகம் அடுத்தது காட்டும் பளிங்குபோற் காட்டக் கண்டதனு லென்க.

கைகேயிதேவி, பரதன் நாடாளவும் இராமன் காடேகவும், தசரதன் பால் வரங்கள் கேட்கும்வரை அவனது சத்தியம் மாருதிருந்த தென்பது குறிக்க 'நெறிதிறம்பா மெய்' என்றும், அதனை அவன் என்றும் மாருததாகச் செய்தது குறிக்கத் 'தன்மெய்யை நிற்பதாக்கி' என்றும் கூறினுன். உண்மையைத் துறத்தலாதல் உயிரைத் துறத்தலாதல் இரண்டிலொன்று செய்தே தீரக்கடவதாக உற்ற தரும சங்கடமான சமயத்திலே உயிரினும் உண்மை ஓம்பற்குரியதென உய்த்துணர்ந்து உண்மையைக் காக்க

உயிரை நீத்த சத்திய விரதன் தசரத னென்பதை, 'மெய்யை நிற்ப தாக்கி இறந்தான்' என, நயம்பட உரைத்தான்.

இராமனைத் தனியாகப் பார்ப்போருக்கு, அவனுக்குச் சகோதர ருண்டோ இல்லையோ என்ற உணர்ச்சி இயல்பாக உண்டாகாது. அவனை இலக்குமணனுடன் காண்போருக்கோ, முகவடிவ ஒற்றுமை முதலியவை காரணமாக 'இருவரும் சகோதரர், இராமன் தனியாகப் பிறந்தவ னல்லன், தம்பி உடையவன்' என்ற நினைவு, அவர்களுடைய முயற்சி யின்றித் தானே தோன்றும். எப்போதும் இராமனைப் பிரியாமையா லன்றே, 'இளையவன், இராமாநுசன்*' என்பவை, பரதனையாதல் சத்து ருக்கனையாதல் உணர்த்தாமல், இலக்குமணனையே குறித்து வழங்கலுற்று அவனுக்குப் பெயராயின. இந்த விரிந்த கருத்துக்களை 'இராமன் பின்பு பிறந்தானும் உளன் என்னைப் பிரியாதான்' என்ற சுருங்கிய மொழி களால் இனிது விளங்கக் கூறிய நயம் பாராட்டற்பாலது. (134)

சுடுமயா னத்திடைதன் றுணையேகத்
தோன்றறுயர்க் கடலி னேகக்
கடுமையார் கானகத்துக் கருணையார்
கலியேகக் கழற்கான் மாயன்
நெடுமையா லன்றளந்த வுலகெல்லாந்
தன்மனத்தே நினைந்து செய்யும்
கொடுமையா லளந்தாளை யாரிவரென்
றுரையென்னக் குரிசில் கூறும் (135)

கொண்டுகூட்டு : தன் துணை சுடுமயானத்திடை ஏக, தோன்றல் துயர்க்கடலின் ஏக, கருணை ஆர்கலி கடுமையார் கானகத்து ஏக, அன்று மாயன் கழற்கால் நெடுமையால் அளந்த உலகு எல்லாம், தன் மனத்தே நினைந்து செய்யும் கொடுமையால் அளந்தாளை(க் குகன்), 'இவர் யார் என்று உரை!' என்னக் குரிசில் கூறும்.

பொருள் : தன் உயிர்த் துணையான கணவன் உயிரற்ற பிணங்களைச் சுடும் சுடுகாட்டை அடையவும், தன் புத்திரன் துன்பக் கடலில் முழுகவும், கருணைக் கடலான இராமன் கடின மான கற்களும் முட்களும் மிகுந்த காட்டிற் செல்லவும், அக் காலத்தில் நெடுமால் திருவடி நெடுமையால் அளந்த உலகங்கள் அனைத்தையும் இக்காலத்தில் தான் செய்த கொடுமை (நெடுமை) யால் அளந்த கைகேயியை, 'இவர் யார் என்று கூறு!' எனக் குகன் வேண்டப் பரதன் கூறுவான்.

துணை - கணவன்.—சிலப். வாழ்க்கைத் துணை, துணை யெனச் சுருக்கிக் கூறப்பட்டது. தோன்றல் - மகன். கடுமை - கொடுமை;

* இராம அநுசன் - இராமன் தம்பி.

வன்மை. ஆர்கலி - சமுத்திரம். கருணை ஆர்கலி - கிருபா சமுத்திரமான இராமன். கழல் - வீரகண்டை. கைகேயி செய்த கொடுமை, அறியாது செய்த தன்று; ஆராய்ந்து துணிந்து அறிவொடு கூடிச் செய்த தென்பது குறிக்கத் 'தன் மனத்தே நினைந்து செய்யும் கொடுமை' என்றார்.

திரிவிக்கிரமாவதார மெடுத்து ஈரடியால் மூன்றுலகங்களையும் அளந்த காலத்தில், திருமாலின் பாதம் பரவாத இடம் எங்குமில்லை; (எங்கும் எல்லாராலும் உணரப்பட்டதனால்) கைகேயியின் கொடுமை பரவாத இடமும் எங்குமில்லை என்ற கருத்து இனிது விளங்க, 'மாயன் நெடுமையால் அளந்த உலகெல்லாம் கொடுமையால் அளந்தாள்' என்று கூறிய கவி சாதுரியம் கண்டு களிக்கத் தக்கது.

திருமாலும் கைகேயியும் வரங் கேட்ட போது மெல்லியராகக் காணப் பட்டனர்; வரங்களும் எளியனவாகத் தோன்றின; கொடுத்த வரங்களை நிறைவேற்றும்படி வற்புறுத்திய காலத்தில் இருவரும் வன்மை காட்டினர்; வரங்களின் வன்மையும் வெளியாயின; திருமாலின் வன்மை நெடுமை யாகவும் கைகேயியின் வன்மை கொடுமையாகவும் உருக் கொண்டன; அந்த நெடுமையும் கொடுமையும் வரங் கொடுத்தாரை மண் வாழ்க்கை யைத் துறக்கச் செய்தன என்று உவமான உவமேயங்களின் ஒற்றுமை நயத்தை ஊன்றி உணர்ந்து உவகை உறுக.

ஸ்ரீ ச. சோமசுந்தர பாரதியவர்கள் இயற்றியுள்ள 'தசரதன் குறையும் கைகேயி நிறையும்' என்ற நூலைப்பற்றி யான் அவர்களுக் கெழுதியதும் அவர்கள் அந் நூலோடு வெளியிட்டிருப்பதுமான கடிதத் தில் இப்பாட்டு அவர்கள் நூலின் உட்கோளுக்குப் பொருத்தமாகக் கைகே யிக்கு அநுகூலமாக ஒருவாற்றாற் பொருள்கோடற் கிடந்தருவதா யுள்ள தென்று யான் விரித்து விளக்கியிருக்கும் பகுதி இங்கே எடுத்துக் கூறுதற் குரியது. அது, 'கைகேயி, நிலையில்லாத பூத உடம் பழிந்து அது காரணமாக நிலையான புகழுடம்பைத் தசரதன் அடையச் செய்தா ளெனவும், தன் மகன் தன்னால் உற்ற துன்பத்தினால் அவனுடைய உத்தம குணங்கள் வெளிப்பட்டு விளங்கச் செய்தா ளெனவும், இராமனை வனத் துக் கனுப்பியதனால் அவன் பிரதாபம் பெருகச் செய்தா ளெனவும், மாவலி யின் ஆட்சியிலிருந்த மண்ணையும் விண்ணையும் ஈரடியாற் கொண்டு மூன்றாம் அடிக் கிடமாக அம் மாவலியை யாக்கிக் கொண்ட திருமாலின் நெடுமை தோற்றத்தில் கொடுமையாயும், உண்மையில் அவன் திரு வடியை அடைந்த எல்லா முத்தர்களையும் போல அம் மாவலி அவனுக் குரியன யாவற்றையும் தியாகஞ் செய்தா லன்றி யடையொணாத அத்திரு வடிக் கீழ் அவனை அவ்வாறு தியாகஞ் செய்யச் செய்து இருத்தின அருளாயும் இருப்பது போலத் திருமாலின் நெடுமையுடனுவமிக்கப் பெற்ற கைகேயியின் கொடுமையும் தோற்றத்திற் கொடுமையாயும் உண் மையில் அருளாயும் இருப்பதா மெனவும்' கொள்ளலா மென்பது.

பாட பேதம்: நின்றளந்த: தன்மனத்தா னினைத்துச் செய்த. (135)

படரெலாம் படைத்தாளைப் பழிவளர்க்குஞ்
செவிலியைத்தன் பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலங் கிடந்தேற்கு
முயிர்ப்பாரங் குறைந்து தேய
உடரெலா முயிரிலா வெனத்தோன்று
முலகத்தே யொருத்தி யன்றே
இடரிலா முகத்தாளை யறிந்திலையே
லிந்நின்ற ளென்னை யீன்றாள் (136)

கொண்டுகூட்டு : ‘படரெல்லாம் படைத்தாள், பழிவளர்க்கும் செவிலி, தன் பாழ்த்த பாவிக் குடரிலே நெடுங் காலம் கிடந்தேற்கும் உயிர்ப் பாரம் குறைந்து தேய, உடர் எல்லாம் உயிர் இல்லா(தன) எனத் தோன்றும் உலகத்தே, இடர் இல்லா முகத்தாள் ஒருத்தியே, (அவளை) அறிந்திலையேல், இங்கு நின்றாள் என்னை ஈன்றாள்.

பொருள் : ‘துன்பங்க ளெல்லாவற்றையும் உண்டாக்கிய வள், பழிச்சொல் ஆன குழந்தைக்கு வளர்ப்புத் தாயானவள், தன் பாழான பாதகக் குடலிலே நீடித்த காலம் கிடந்த எனக்குங் கூட உடம்பு மெலிந்து தேய்ந்து போம்படியாக, மேற் கூறிய துன்பங்கள் காரணமாக எல்லாருடைய உடல்களும் உயிரில்லா தவை போலக் காணப்படுகின்ற உலகத்திலே துக்கமில்லாத முகத்தாள் ஒருத்தியே, அந்த ஒருத்தியை (இன்னு ளென எளி தாக ஊகித் தறியலாம்,) அறிந்திலையாயின், (சொல்கின்றேன்,) இங்கு நிற்கின்றவள் என்னைப் பெற்றவள்.’

படர் - துன்பம். செவிலி - வளர்ப்புத் தாய். பாழ்த்த - பாழையுடைய; பாழான. பாழ் - அழிவு; கெடுதி. உயிர்ப் பாரம் - உயிருக்குப் பார மான தேகம். இடர் - துன்பம். உடல் குடல் என்பன உடர் குடர் என விகாரப்பட்டன. இராமனைக் காட்டுக்கு அனுப்பித் தசரதனை இறக்கச் செய்ததனால், உலகத்தா ரெல்லாருக்கும் உண்டான துன்பங்க ளனைத்துக் கும் காரணமாயுள்ளா ளென்பான் ‘படரெலாம் படைத்தாள்’ என்றான்.

‘தான் செய்தது கொடுமை’ யென்று தெளிந்து, ‘இக் கொடுமையைச் செய்தேனே!’ என்று இரங்கிப் பச்சாத்தாபப்படா திருக்கின்றாள்; ஆதலால் அக் கொடுமையால் உண்டான பழியைத் தன் நடக்கையால் தணியாமல் வளர்ப்பாளா யிருக்கிறாள் என்பான் ‘பழி வளர்க்கும் செவிலி’ என்றான். பழிக்கு வளர்த்த தாய் என்றதனால், துன்பத்துக்குப் பெற்ற தாய் என் பதை உய்த்துணர வைத்தான். உலகத்தாருக்குத் துன்பம், கைகேயி வாயில் (இராமனைக் காட்டுக்குப் போகச் சொல்லியபோது) பிறந்தது; கைகேயிக்குப் பழிச் சொல், உலகத்தார் வாயில் (‘பாவி இப்படிச் சொல் வாளா!’ என்ற போது) பிறந்தது; மேலே கூறியவாறு கைகேயின் பின்

நடக்கை, அப் பழிச் சொல்லை வளர்ப்பதாயிற்று: ஆதலால் உலகத்தாருடைய துன்பத்துக்குப் பெற்ற தாயாகவும், பழிச் சொல்லுக்கு வளர்த்த தாயாகவும் கைகேயியைக் கூறியது பொருத்தமா யிருத்தல் காண்க.

'இக்கொடியாளுடைய கொடிய வயிற்றில் நெடுங்காலம் கொடுமை நன்கு ஊறித் தோயும்படி அழுந்திக் கிடந்த யானே இவள் கொடுமையைப் பொறுக்க முடியாமல் உடம்பு மெலிந்து தேய்ந்தே னென்றால், ஏனையோர் எவ்வாறு சகிப்பார், எவ்வளவு இளைப்பார் என்று ஊகித்தறிதி' என்பான் 'பாழ்த்த பாவிக் - குடரிலே நெடுங்காலம் கிடந்தேற்கும் உயிர்ப்பாரம் குறைந்து தேய' என்றான். 'ஒருநாலு பேர் சுமக்கும் மூட்டை - நான் - ஒருவனே சுமப்பன் இந்த உடல் மாயக் கூட்டை' என்றவாறு எல்லா உயிர்களுக்குமே சுமையான உடல், துன்பம் உற்ற உயிர்களுக்கு விசேடமாகச் சுமையா யிருக்கு மென்பது விளங்கத் துக்கம் மிக்க பரதன், உடலை 'உயிர்ப்பாரம், என்றது இயல்பானது. எல்லாருக்கும் உயிர் போன்ற இராமன் பிரிந்து போனதனால், எல்லாரும் உயிர் பிரிந்து இறந்தார் போன்று ரென்பான், 'உடரெலாம் உயிரிலா எனத்தோன்றும்' என்றான்.

உலகத்திலே மற்றெல்லாரும், இராமன் பிரிவாலும் தசரதன் சாவாலும் துக்கமுற்றவர்கள்; கைகேயி ஒருத்திமட்டும் துக்கமுறாதவள் என்பான், 'உலகத்தே ஒருத்தியன்றே இடர் இலா முகத்தாள்' என்றான்.

இவ்வாறாகப் பரதன் கைகேயியைக் குகனுக்குத் தெரிவித்த முறையிற் காணப்படும் கம்பர் கவித்துவ கௌசலம் * நுணுகி நோக்கி நுகரத் தக்கது.

பாட பேதம்: அறிந்திலையோ (136)

## தோணி கரையை அடைதல்

என்னக் கேட்டவ் விரக்க மிலாளையும்
தன்னற் கையிற் றொழுதனன் றாயென
அன்னப் பேடை சிறையில தாய்க்கரை
துன்னிற் றென்னவும் வந்தது தோணியே (137)

கொண்டுகூட்டு: என்னக் கேட்டு, அந்த இரக்கம் இல்லாளையும் (குகன்) தாய் எனத் தன் நற்கையின் தொழுதனன். அன்னப் பேடை சிறை இலதாய்க் கரை துன்னிற்று என்னத், தோணி (கரைக்கு) வந்தது.

பொருள்: என்று சொல்லக் கேட்டு, அந்த இரக்க மில்லாத கைகேயியையும் குகன் தாய் என்று கருதிக் கும்பிட்டான்; ஒரு பெட்டை யன்னம் சிறகுக ளில்லாததாய்க் கரை சேர்ந்தது போலத் தோணி கரைக்கு வந்தது.

---

* சாமார்த்தியம்

'இரக்கமிலாளையும் - தன்நற்கையிற் றெழுதனன் தாயென' என்ற தனுல், குகன் கோசலாதேவியைத் தொழுததைக் கூறியதுபோலச் சுமித் திராதேவியைத் தொழுததைச் சொல்லாமலே உணர்த்தியதும்,—'அன்னை யும் பிதாவும் முன் அறி தெய்வம்,' 'தாயிற் சிறந்தொரு கோயிலும் இல்லை' ஆதலால், எத்துணைக் குற்றங் குறைகளை யுடையா ளெனினும் தாயை போற்றுதல் விலக்கொணுக் கடமை என்பதை விளக்கியதும் கவனிக்கத் தக்கவை. உருவம், கதி இரண்டினும் தோணி அன்னத்தை ஒத்தல் நோக்கற்பாலது.

இங்கே கைகேயியை இரக்கமிலாள் என்றது,—அத் தேவியின் இரக்க மின்மையைப் பற்றி மந்தரை சூழ்ச்சிப் படலத்தில் அதிசாதுரியமாகவும் உண்மையாகவும் கூறப்பட்ட, 'இராக்கதர்கள் செய்த தீவினையும் அவ ரல் லார்கள் எல்லாரும் செய்த நல்வினையும் தூண்டக் கைகேயிதேவி, (தனக்கு இயல்பாக உள்ள) இரக்கத்தைக் கைவிட்டாள்; அவள் இரங்கா மையன்ரே, இன்றளவும் இனியும் எல்லா உலகத்தினரும் இராம கதா மிர்தத்தை (செவி வாயால் மனவயிறு நிரம்ப) உண்டு கொண்டிருப் பதற்குக் காரணம்' என்ற கருத்துள்ள நனி யினிய கவியை ஞாபக முறுத்துகின்றது. அக் கவி வருமாறு :—

அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும்
துரக்க, நல் அருள் துறந்தனள் தூமொழி மடமான் :
இரக்க மின்மையன் ரே, இன்றிவ் உலகங்கள் இராமன்
பரக்கும் தொல்புகழ் அமுதினைப் பருகுகின் றதுவே (137)

எல்லாரும் தோணியி னின்றும் இறங்கி இராமனிருந்த இடத்தை நோக்கிச் சென்றனர். குகனும் கூடச்சென்ருன். பல காதங்கள் கடந்த பின், பரதன் பரத்துவாச முனிவனது ஆச்சிர மத்தை அணுகினுன். அம் முனிவன், மற்றும் உள்ள முனிவர்க ளுடன், பரதனை எதிர்கொண்டு இனிது வரவேற்ருன்.

—

# 12. கிளைகண்டு நீங்கு படலம்

பரதன் முதலிய உறவினர் காட்டிலிருந்த இராமனைக் கண்டு பிரிந்து அயோத்திக்குத் திரும்பியதைக் கூறுவது *

### பரதனுதியர்க்குப் பரத்துவாசன் விருந்து

பல முனிவருடன் எதிர்கொண்டு வரவேற்ற பரத்துவாச முனிவரனைப் பரதன் பாதம் வணங்கினுன். முனிவன் ஆசி வழங்கினுன். பின்பு, 'உன் தந்தை உனக்கு ஈந்த இராச்சியத்தைப் பொன்னுடை புனைந்து மணிமுடி வனைந்து அரசனுகி அயோத்தியி லிருந்து ஆளாமல், மரவுரி யுடுத்துச் சடைமுடி தரித்துத் தவசியாகிக் காட்டுக்கு வருவானேன்.?' என்ருன். பரதன், கோபங் கொண்டு 'எனக்குத் தகாததைச் சொன்னுய்' என, முனிவன் 'உனக்குத் தகாததைச் செய்தாய்' என, 'என் முன்னவனுன இராமன் ஆளற்பாலதாகிய இராச்சியத்தை அவன் பின்னவனுன யான் முறை பிறழ்ந்து ஆள்வே னல்லேன். அவன் ஆளானுயின், அவனுடன் யானும் காட்டிலேதானே காலங் கழிப்பேன்' என்ருன். அது கேட்ட முனிவர ரனைவரும் ஆச்சரியமும் ஆனந்தமும் அடைந்தார்கள். பரத்துவாசன் பரதனையும் அவனுடன் வந்தாரையும் தன்னுடைய ஆச்சிரமத்துக்கு அழைத்துக்கொண்டு போனுன். அங்கே தன் தவ மகிமையால் தேவலோகத்தைத் தருவித்து, அரசர் முதல் அடிமைகள் இறுதியாக, ஆனையாதி அனைத்து மிருகங்களும் உள்படத் தத்தந் தரத்துக்குத் தக்கதாகத் தேவபோகம் நுகரச் செய்தான். பரதனே, காயும் கிழங்குமே உண்டு புழுதியே படுக்கையாகப் பொழுது போக்கினுன்.

### இலக்குமணன் யுத்தத்துக்கு எத்தனித்தல்

எல்லாரும் மறுநாள் புறப்பட்டு வழிச்சென்று சித்திரகூட பருவதத்தைச் சேர்ந்தார்கள். சேனையால் எழுந்த புழுதியும் ஓசையும் புலப்பட, இலக்குமணன், உயர்ந்ததோர் குன்றின் உச்சியேறிப் பார்த்துப் பரதன் இராமன்மேற் படை யெடுத்து வந்தானென்று கோபங் கொண்டு, கீழே குதித்து, விரைந்து சென்று, இராமனை அடைந்து, 'பரதன் உன்னை மதியாமற் படையெடுத்து வந்தான்' என்று கூறி, விரைவாக வீரகண்டை அணிந்து, கவசம் பூண்டு, வில்லும் அம்பருத்தூணியும் தாங்கி,

* கிளை - உறவினர்.

'அவனையும் சேனையையும் அழித்து, அவர்கள் மண்ணை நீங்கலால் மண்மகள் முதுகாற்றவும் விண்ணை அடைதலால் விண்மகள் முதுகுளுக்கவும் செய்து மீளுவேன்; விடை தருக' என்ருன். இராமன், 'இலக்குமணு! உன் வீரத்துக்கு இது பெரிதன்று; ஆயினும், ஒன்று சொல்லுதற்குள்ளது: அதனைக் கேள். நம் குலத்தோன்றல்கள் அறநெறி தவறியவர் எவருமிலர். (பின்பு பிறக்கும் பரதன் செயல்களை முன்பு தெரிந்து அவைகளையே விதிகளாக வேதங்கள் விதித்தன போலும் என்னும்படி) வேத விதிகளெல்லாம் பரதன் செயல்களாக வுள்ளன. உனக்கு என் மீதுள்ள வாஞ்சை மிகுதியால் அவனை நீ உள்ளபடி அறிந்தா யில்லை. அவன் என்பால் அன்பால் வருவா னென்றும் அரசு தருவானென்றும் கருதாமல் போர்புரிவா னென்று புகலுதல் ஆழ்ந்த அறிவுக் கடாதது. யான் கூறுவதன் உண்மையை நீ அவன் செயலிற் காண்பாய்' என்ருன்.' அப்போது, பரதன், சேனையைப் பின்னே நிறுத்திவிட்டுத் தம்பியுடன் வந்தான்.

### பரதனை இராமன் பார்த்தல்

தொழுதுயர் கையினன் றுவண்ட மேனியன்
அழுதழி கண்ணின னவல மீதென
எழுதிய படிவமொத் தெய்து வான்றனை
முழுதுணர் சிந்தையான் முடிய நோக்கினுன் (138)

கொண்டுகூட்டு: தொழுது உயர் கையினன், துவண்ட மேனியன், அழுதுஅழி கண்ணினன், அவலம் ஈது என எழுதிய படிவம் ஒத்துத் தன்னை எய்துவானை முழுது உணர் சிந்தையான் முடிய நோக்கினுன்.

பொருள்: உச்சிமேற் கூப்பித் தொழுது அதனுல் மேலாக உயர்த்தப்பட்ட கையினனுய் (அன்னத்தைத் தவிர்த்துக் காய் கிழங்குகளைப் புசித்து மெலிந்து) தளர்ந்த உடம்பினனுய், இடைவிடாமல் அழுது பொலிவு அழிந்த கண்ணினனுய்த் துன்பம் இதுதா னென்று கண்டோர் சொல்லும்படி சித்திரம் வல்லான் சித்திரித்த சித்திர உருவத்தை ஒத்துத் தன்னை அடைவானுன பரதனை இராமன் முடி தொடுத்து அடி முடியப் பார்த்தான்.

அவலம் - துன்பம். எழுதல் - சித்திர மெழுதல். படிவம் - வடிவம்.

கண்ணுற் காணு 'முன்னமே மனத்தால் பரதன் இப்படி யிருப்பா னென்பதைத் தெரிந்தவ னென்பார் 'முழுதுணர் சிந்தையான்' என்ருர்.

அவ்வாறு அகத்தே மனக் கண்ணுற் கண்டபடியே புறத்தேயும் முழுதும் இருப்பதை முகக் கண்ணுற் காண்பானுனென்பார் 'முடிய நோக்கினுன்' என்ருர். (138)

இலக்குமணன் கழிவிரக்கம்

எல்லொடுங் கியமுகத் திளவ னின்றனன்
மல்லொடுங் கியபுயத் தவனை வைதெழும்
சொல்லொடுஞ் சினத்தொடு முணர்வு சோர்தர
வில்லொடுங் கண்ண நீர் நிலத்து வீழவே (139)

கொண்டுகூட்டு: மல் ஒடுங்கிய புயத்தவனை வைது எழும் சொல்லொடும் சினத்தொடும் உணர்வு சோர்தர, (நழுவிய) வில்லொடும் கண்ண நீர் நிலத்து வீழ, இளவல், எல் ஒடுங்கிய முகத்(தொடு) நின்றனன்.

பொருள்: (அப்படி வந்த பரதனை இராமன் இலக்குமணனுக்குக் காட்டிப் 'பரதன் போர்க்கோலத்தைப் பார்!' எனப் பார்த்து,) தவம் மேற்கொண்டமையால் மற்போர் செய்யப்படாமல் ஒடுங்கிய தோளையுடைய பரதனை வைது எழுந்த சொல்லும் அதற்குக் காரணமான கோபமும் அதனைக் கொண்ட உணர்வும் நீங்கத் தானறியாமலே, தன் கையினின்று நழுவிய வில்லும் அதனோடு, 'பரதன் திறத்தில் என்ன அபராதஞ் செய்தே'னென்று கழிவிரக்கத்தாற் பொங்கிப் பெருகிய கண்ணீரும் பூமியில் விழ, இலக்குமணன், முன் வீராவேசத்தாற் பொலிந்த பொலிவொடுங்கிய முகத்தோடு பொருமி நின்ருன்.

எல் - விளக்கம்.—மணிமேகலை. 'முகத்தொடு' 'முகத்து' என ஒடு உருபு தொக்குநின்றது, 'முளரியந்தடத் தகன்றனவே' (நைடதம்) என்பதில் 'தடத்து' உருபு தொக்கு நின்றது போல. கைவளை சோர்தல் என்பதிற் போல, உணர்வு சோர்தல் என்பதில், சோர்தல் நீங்கற் பொருட்டு. கண்ண நீர் - கண்ணிடத்தனவான கண்ணீர்த் துளிகள். கண்ண, குறிப்புப் பெயரெச்சம். கண்ண என்பதின் இறுதியில் உள்ள அகரம் சாரியையாகவும் கொள்ளலாம். 'பூணூல்' 'பூணநூல்' (திருவிளையாடற் புராணம்) என வருதல் போலக் 'கண்ணீர்' 'கண்ணநீர்' என வந்ததெனலுமாம்.

பாடபேதம்: கண்ணினீர். (139)

பரதன் இராமன் முன் ஏகல்

கோதறத் தவஞ்செய்து குறிப்பி னெய்திய
நாதனைப் பிரிந்தன ணலத்தி னீங்கினுள்
வேதனைத் திருமகள் மெலிகின் ருள்விடு
தூதெனப் பரதனுந் தொழுது முன் சென்ருன் (140)

**கொண்டுகூட்டு:** கோது அறத் தவம் செய்து, குறிப்பின் எய்திய நாதனைப் பிரிந்தனள், நலத்தின் நீங்கினாள், வேதனை(யினால்) மெலிகின்றாள் (ஆன) திருமகள் விடு(த்த) தூது எனப் பரதன் (இராமன்) முன் தொழுது சென்றான்.

**பொருள்:** தவம் செய்தற்கண் இயல்பாக நேரும் குற்றங்கள் நேராதபடி சிரத்தையோடு காத்து, அந்தக் குற்றங்கள் நீங்க, இவனே தனக்கு நாயகனாக வேண்டுமென்ற குறிப்புடன் தவஞ்செய்து, குறிப்புப்படி தவப்பயனாக அடைந்த நாயகனைத் தவம் முற்றுப் பெறாத குறையினால் பிரிந்து, அதனால் அவனை அடைந்திருந்த காலத்துப் பெற்ற நன்மைகளி னின்று நீங்கி அதனால் உண்டாகிய துன்பத்தினால் மெலிவாளான இராச்சிய இலக்குமி அழைத்து வரும்படி அனுப்பின தூதன் போலப் பரதன் இராமன் முன் சென்றான்.

கோது - குற்றம். அற - நீங்க. குறிப்பு - கருத்து—சூடா. ' ஆல், ஆன ' என்ற சொற்கள் வருவித்து வேதனையால் மெலிகின்றாளான திருமகள் எனக் கூட்டுக. உருபு தொக்க ' நலத்து நீங்கினாள் ' என்ற பாடத்தினும் உருபுவிரிந்த ' நலத்தினீங்கினாள் ' என்ற பாடம் தெளிவு பற்றிச் சிறந்ததாகக் கொள்ளப்பட்டது. பரதன் தோன்றினமை முந்திய பாட்டுக்களிற் கூறப்பட்டுவிட்டதனால் ' தோன்றினான் ' என்ற பாடம், மோனை நயமுடையதாயினும் கூறியது கூறலாய்ச் சிறந்ததா யில்லை யெனத் தள்ளப்பட்டது.

பாட பேதம்: நலத்து நீங்கினாள்: தொழுது தோன்றினான். (140)

## தசரதன் இறந்ததை இராமன் அறிதல்

இராமன் முன் சென்ற பரதன், இறந்த தந்தையை எதிர் கண்டாற் போல, அவனைக் கண்டு, 'அறத்தை மறந்தாய்' அருளைத் துறந்தாய்! முறையைக் கடந்தாய்!' என்று சொல்லிக் கொண்டு பாதங்களில் விழுந்து பணிந்தான். பணிந்து, உயிர் இருக்கின்றதோ இல்லையோ வென்னும்படி ஒடுங்கிக் கிடந்தவனை இராமன் உற்றுப் பார்த்து உள்ளம் உருகி ஒழுகவிட்ட கண்ணீராறு, அவன் சடைமுடி நிறைந்து ததும்பி வழிந்தது (நீலவானி னின்று வீழ்ந்து சங்கரன் சடாமகுடம் நிரம்பிப் பொங்கி வழிந்த கங்கையாறு போன்றது). இராமன் பரதனை வாரியெடுத்து வருத்தம் தீர மார்போடணைத்து, அருட் பெருங் கடவுள் அறப் பெருங் கடவுளை ஆலிங்கனஞ் செய்தல் போலத் தழுவினான். தழுவி, அவன் தவ வேடத்தைப் பார்த்துத், துன்புமீக்கூர்ந்து தந்தை தைரியமா யிருக்கிறானோ?' என்று வினவினான்.

பரதன், 'உன் பிரிவென்னும் பிணியினுல், என்னைப் பெற்ற கொடியாள் வரமென்னுங் கூற்றினுல், உயிரை நீத்து உண்மையைக் காத்து உம்பருலகுற்ருன்' என்ருன். எனவே, இராமன் மனம் சுழலக் கண் சுழல, மண்ணில் விழுந்து மயக்க முற்ருன்.

### இராமன் புலம்பல்

மயக்கமுற்றவன் சிறிது நேரம் சென்றபின், தெளிந்து பொருமிப் புலம்புவானுனன்: 'வாடா விளக்குப் போலக் குன்ருப் புகழுடையாய்! சகத்தி லுள்ளார்க்குத் தந்தையே! தருமத்துக்குத் தாயே! சத்துருக்களுக்குச் சிங்கமே! எந்தையே! இறந்தாயே! இனி உண்மைக்கு யாரிருக்கின்ருர்கள்! கலைக் கோட்டு முனி கருணையைப் பெற்று, யாகஞ் செய்து, என்னைப் பெற்றதனுல் நீ பெற்ற பேறு, இனிய உயிரை இழத்தலோ! "முதுமையால் இளைத்தேன், இனிப் பூபாரந் தாங்ககில்லேன், நீ ஏற்றுக்கொள்" என்ற உன் ஆணைப்படி யான் உலகாள ஒப்புக்கொண்டேன். ஒப்புக்கொள்ளா திருந்தேனேல், நீ ஆண்டுகொண்டிருப்பாய். ஒப்புக்கொண்டு உன் உயிர்க்குக் கூற்றுவன் நானே ஆனேன். நான் பூபாரம் தாங்கி, நீ அப் பாரம் நீங்கி, இளைப்பாறியவாறு, இதுவோ! யான் அரசு செய்ய, நீ "தவசு செய்வே" னென்றது, இந்த முடிவுக்கோ! அந்தோ! உலகை ஆள்வே னென்று, உலகுக்குத் துன்பம் தந்தேன்! இங்கே சாவேனே யன்றி அங்கே வாரேன்! வருவது, ஆர் முகத்தே விழிக்க?

**தேனடைந்த சோலைத் திருநாடு கைவிட்டுக்**
**கானடைந்தே னென்னத் தரியாது காவலநீ**
**வானடைந்தா யின்ன மிருந்தேனுன் வாழ்வுகந்தே**
**ஊனடைந்த தெவ்வ ருயிரடைந்த வொள்வேலோய் (141)**

கொண்டுகூட்டு: 'ஊன் அடைந்த தெவ்வர் உயிர் அடைந்த ஒள் வேலோய்! (நான்) தேன் அடைந்த சோலைத் திருநாடு கைவிட்டுக் கான் அடைந்தேன் என்னத் தரியாது, காவல, நீ வான் அடைந்தாய்! நான் வாழ்வு உகந்து இன்னம் இருந்தேன்!

பொருள்: 'நான் நாட்டைவிட்டுக் காட்டை அடைந்தே னென்று சொல்லக் கேட்டு அதைச் சகிக்கமாட்டாமல், நீ இறந் தாய்! நானே, நீ செத்தா யென்று தெரிந்தும் சாவாமல் உயிரோடு இருக்கின்றேன். (உன் அன்பு எங்கே! என் அன்பு எங்கே!)

தேன் அடைந்த (பூ நிறைந்த) சோலை (சூழ்ந்த) திருநாடு. ஊன்...... வேலோய்-பகைவரது உடம்பை அடைந்த உயிரை(க் கவர்ந்து) அடைந்த ஒள்ளிய வேலாயுதத்தை யுடையோனே. இதன் முன் 'மாண்டு மடிவதல்லால்' என்றவாறு உயிரைப் போக்கிவிடாத தனது மன வன்மையை நினைந்து வருந்தி 'இன்னம் இருக்கின்றேன் வாழ்வுகந்தே!' என்றான்.

இந்தக் கவி; கழிபே ருவகை விளக்கும் கவிகளுள் ஒன்று. கதைப் பகுதிகள் பலவற்றுள் இரண்டையோ, அதிகமானவற்றையோ, இயற்கையாக இயையுமாறு இயைத்து, இன்பஞ் செய்யும் கற்பனை அலங்காரம் சமற்காரம் முதலிய செயற்கைச் சிங்காரம் சிறிதுஞ் செய்யாமல், மன மகிழ்ச்சியை மிக விளைத்திடும் அதி அற்புத அபூர்வ கவி சாதுரியத்தைக் கம்பர் இக் கவியிலே காட்டி யிருக்கின்றார். இக் கவியில் அவர் செய்ததெல்லாம் இராமன் காடு சென்றானெனக் கேட்ட மாத்திரையே தசரதன் இறந்ததாகிய கதைப் பகுதியையும் அவன் இறந்தது கேட்ட இராமன் இறவாததாகிய கதைப் பகுதியையும் இயைத்ததே. ஆயின், அதனால் விளையும் ஆனந்தமோ, அளவற்றதாய், எத்தனை முறை அநுபவிப்பினும், புதுமை சிறிதுங் குறையாததா யுள்ளது. இவ்வானந்தம் ஏனைய கவிகளால் விளைகின்ற (கவிஞர்களும் கவிச்சுவை யுணரும் விற்பன்னரும் மட்டும் அநுபவிக்கும்) ஆனந்தமா யில்லாமல், எழுத்தறியாத இயற்கையறிவு மட்டு முடையவர்களும் அநுபவிக்கக் கூடியதோர் சிறப்புடைய ஆனந்தமா யிருப்பது சிந்திக்கத் தக்கது. கம்பராமாயணத்தில் இந்தக் கவியின் இனத்தைச் சேர்ந்த கவிகள் பலவற்றை ஆங்காங்குக் காணலாம்.* (141)

'இரவலர்க்கு ஈதலும், மானத்தை ஓம்பலும், போரிற் சலியாமையும், சத்தியம் தவறாமையும் முதலிய சிறந்த செயல்களெல்லாம் உன்னோடு தோன்றி உன்னுட னிருந்து இப்போது இல்லாமையால் அவைகளை யெல்லாம் உன்னுடன் கொண்டு போய் விட்டாயோ!' என்றும் பின்னும் பலவாறும் இயம்பிப் புலம்பியிருந்து வருந்தும் இராமனை இளைய சகோதரரும் ஏனைய மன்னரும் ஏந்தி யெடுத்துத் தாங்கினார்கள். பரத்துவாசன் முதலிய முனிவரும் மந்திரிமாரும் சேனைத் தலைவரும் வந்து சேர்ந்தார்கள்.

---

* அவற்றுள் ஒன்று வருமாறு:—

இராமன், வனவாச வருடம் பதினான்குங் கழிந்தும் வாராமையால், பரதன் எரிபுகத் தொடங்கிய சமயத்தில், சத்துருக்கனை 'நீ அரசு செய்' என்ற போது அவன் கூறியது:

கானாள நிலமகளைக் கைவிட்டுப் போனவனைக் காத்துப் பின்பு
போனானும் ஒருதம்பி, போனவர்கள் வரும்அவதி போயிற் றென்னா
ஆனாத உயிர்விடவென் றமைவானும் ஒருதம்பி, அயலே நாணா
தியானுமிவ் அரசாள்வென்; என்னே இவ் அரசாட்சி இனிதே அம்மா!

### வசிட்டன் இராமனைத் தேற்றல்

அப்போது வசிட்டன், இராமனைத் தேற்றுவானாய், அவனை நோக்கிக் கூறுவான் : 'உயிர்களுக்குப் பிறத்தல் போல இறத்தலும் இயற்கை. இயமனுக்கு இரக்க மென்பதில்லை. பிள்ளைகள் பிறந்தவுடன் இறந்துவிடுதலைப் பார்த்திருக்கின்றாய். அப்படி யிருக்க, அறுபதினாயிரம் ஆண்டு அரசாண்டவன் உயிர் நீங்குதற்கு வருந்தலாமோ? மும்மூர்த்திகளுமே கால எல்லையைக் கடக்க வல்ல ரல்லர். இன்னும் கேள் :

புண்ணிய நெய்யினிற் பொருவில் காலமாம்
திண்ணிய திரியினில் விதியென் றீயினில்
எண்ணிய விளக்கவை யிரண்டு மெஞ்சினால்
அண்ணலே யவிவதற் கையம் யாவதோ (142)

கொண்டுகூட்டு : 'அண்ணலே! புண்ணிய நெய்யினில் பொருஇல் காலமாம் திண்ணிய திரியினில் விதி என்(னும்) தீயினில் எண்ணிய விளக்கு, அவை இரண்டும் எஞ்சினால், அவிவதற்கு ஐயம் யாவதோ?'

பொருள் : 'புண்ணியமாகிய நெய்யினால் காலமாகிய திரியினால் விதியாகிய தீயினால் அந்த நெய்யும் திரியும் உள்ளவரை நிலைக்கும் விளக்குச் சுடர், அவை யிரண்டும் அற்றால், அணைந்து விடுதற்குச் சந்தேகம் யாதோ? (ஒன்றுமில்லையென்றபடி)'

பொருஇல் - ஒப்பில்லாத. திண்ணிய - திண்மை யுடைய. எண்ணுதல் - நிலைத்தல்—ச. அ. எஞ்சுதல் - ஒழிதல்.—புறப். வெண். அவிதல் - அணைதல். 'நறுநெய்' பிரதிபேதம். நறுமை - நல்ல மணம். நெகிழ்ச்சியான நெய்யோ டொப்பிடும் போது, திரி திண்மையான தென்பது குறிக்கத் திரிக்குத் திண்ணிய என்ற அடை கொடுத்தான்.

ஏனையோர் எய்தும் போகங்களினும் எத்துணையோ சிறந்த போகங்களை அவர்கள் வாழ்நாளினும் எத்துணையோ நீண்டகாலம் தசரதன் அனுபவித்து வந்தானாக, அப்போகங்களுக்குக் காரணமாயுள்ள, அவனது பூர்வ புண்ணியமும் அப்போகங்களை அனுபவித்துத் தீர்தற்குப் போதியதாக அமைந்த அவன் ஆயுட் காலமும் பேரளவினவே யாயினும், அளவற்றன வல்ல; அப் புண்ணியத் தளவும் காலத் தளவும் எவ்வளவோ அவ்வளவான வுடனே, அவன் ஆயுள் முடிந்தது இத் தன்மையதே யென, இக் கவியால் இனிது விளங்குதலால், பொதுவானதோ ருண்மையைப் போதிக்கும் இக் கவி இந்த இடத்தில் பொருத்தமா யிருத்தல் குறித்தற்குரியது.

பாட பேதம் : விதிதன் சிந்தையில் : ஐயம் ஆவதோ. (142)

### இராமன் ஈமக்கடன் இயற்றல்

பின்னும் வசிட்டன், 'நீ துன்புறுதலால் உன் தந்தை அடையும் பயனென்றுமில்லை. அவனுக்கு நன்மை பயக்கும் அந்திய கருமங்களைக் கண்ணீரொழுக்குதல் தவிர்த்துக் கைந்நீ ரொழுக்கிச் செய்வாயாக' என்றான். இராமன், நீராடி, அந்தக் கடன்களைச் செய்து முடித்துச் சீதை இருந்த இடம் சென்றான். அப்போது சேடியரின்றி வெளியே வந்த சீதையையும் அவ ளிருந்த சாலையையும் பரதன் பார்த்து அந்தபுர மகன்று இந்தப் புரையிலிருக்கும்படி விதி இருந்ததே யென்று மனம் வருந்தி, அவள் காலில் விழுந்து கதறி யழுதான். அவனை இராமன் எடுத்துத் தாங்கிச், சீதையை நோக்கி, என் பிரிவால் என் தந்தை யிறந்தான்' என்றான். உடனே, அவள், நெஞ்சு திடுக்கிட்டு, மெய்ந்நடுங்கி, நிற்கமாட்டாமல் கீழே யிருந்து நடுக்கந் தீரக் கைகளை மண்ணில் வைத்துக் கண்ணீர் பெருக வாய்விட்டுப் புலம்பி அழுதாள். கணவனுடனிருத்தலாற் காடே நாடாகக் கருதிக் களித்திருந்தவள் மாமன் மரணத்தாற் கவலைக் கடலிற் கால் வைத்தாள். அவளை இருடியர் பன்னியர், தாயர் போலத் தாங்கிச் சென்று, நீராட்டித் துக்க மாற்றித் தேற்றினார்கள்.

அப்போது தாய்மாரோடு சுமந்திரன் வந்தான். வரவே, இராமன், 'எந்தை எங்குள்ளான்!' என்று ஏங்கி அலறித் தாய்மார் காலில் விழுந்து கண்ணீர் பெருக்கினான். அவர்கள் அவனைத் தழுவிக்கொண்டு கதறியழுதார்கள். பின்பு சீதையைத் தழுவி யழுதார்கள். அரசரும், மந்திரிகளும், சேனைத் தலை வரும், அயோத்திநகர மாந்தரும் இராமனைக் கண்டு துக்க முற்றார்கள். சூரியன், தசரதனது குலத் தலைவனாதலால், அவ னிறந்ததற்குத் தானும் கருமம் செய்ய நீராடுவான் போல, மேலைக் கடலில் வீழ்ந்து அத்தமித்தான்.

### பரதன் இராமனை அரசேற்க வேண்டல்

மறுநாள் முனிவரும் உறவினரும் தம்பியரும் சூழவிருந்த இராமன், பரதனைப் பார்த்து, 'நம் தந்தை இறந்த பின் இராச்சியம் உன்னுடையதா யிருக்க, நீ மகுடம் தாங்காமல் தவ வேடம் தாங்குவானேன்?' என்றான். அவன், எழுந்து நின்று, கை கூப்பித் தொழுது, 'உலகம் ஒப்பாத வரத்தால் உனக்கு ஒவ்வாத நிலையில் உன்னை வைத்துச் சக்கரவர்த்தியைக் கொன்ற கொலைகாரி மகனான எனக்குத் தவம் பொருந்தாது தான்.

ஆயின், யான் சாதலுஞ் செய்யாமல், தவமுஞ் செய்யாமல், யாது செய்து நிந்தைக் கடலினின்று நீங்கிக் கரையேறுவேன்! கற்பு நீங்கிய மாதரொழுக்கமும், பிறர் அவமதித்தலைப் பொறுக்கும் பொறுமையற்ற தவசியர் தவமும், உயிர்களிடத் திரக்கமில்லாமல் தருமஞ் செய்வார் தருமமும் ஆகியவை அனைத்தும், மூத்தோனிருக்க முடிசூடுவான் அரசினும் அதிகமாகப் பழிக்கத் தக்கனவோ! நீ தலைமகனைப் பிறந்து உரிமையாக உடைய அரசைத் துறந்து துறவியானு யானல் யான் அறத்தைக் கொன்றாற் போல, அந்த அரசை ஆள்வேனே! நீ காடு சென்ற சமயம் பார்த்து நாடு கொள்ள நான் உன் பகைவனே! தந்தை செய்த தவறும் தாய் செய்த தீமையும் நீங்க, நீ நாட்டுக்கு வந்து, அரசு புரிவாயாக' என்றான். இராமன் பரதன் கருத்தோர்மையைக் கண்டு புகல்கின்றான் :—

### இராமன் பரதனை அரசாள ஆணை யிடல்

'எது இராசாக்கினையோ அதுவே முறை. தந்தை தாயரே முந்திய தெய்வம். இராசனே யன்றி எந்தையு மானவன், என் தாய் வரங் கொள்ள, அவ்வரப்படி அளித்த ஆணையைச் சிரமேற் கொண்டு செய்வே னானேன். அதனை உன் வேண்டுகோளுக் கிணங்கி ஒருவுதல் தருமமோ? யான் அரசாள்வேனேல், எந்தையைப் பொய்ய னென்னும் நிந்தையை எய்தச் செய்தவனாவேன். உன் தாயும் தந்தையும் ஒன்றுசேர்ந்து உனக்கு உதவிய இராச்சியம் உன்னுடையதே. ஆதலால், அதனை நீ ஆள்வாயாக' என்றான். பரதன், 'நீ தலைமக னாதலால் நீ ஆளுதற்குரிய இராச்சியம் நீ கூறியவாறு என்னதானால், இப்போது யான் அதனை உனக்குத் தந்தேன். அயோத்திக்கு வந்து ஆள்வாயாக' என்று இராமன் காலில் விழுந்து வேண்டினான். இராமன், 'உன் சொற்படி யான் அயோத்திக்கு வந்து அரசாளுதற்கு, அரசன் ஆணைப்படி யான் காட்டிற் கழிக்கக் கடவனவான பதினான்கு வருடங்களும் கழிந்துவிட்டனவோ? அவை கழியாதிருக்க, யான் நாட்டுக்கு வருவ தெங்ஙனம்? நாட்டுக்கு வாராமல் நாட்டை ஆளுமா றெவ்வாறு? நீ எனக்குக் கொடுத்த இராச்சியத்தை என் ஆணையால் என் வனவாச காலத்தில் நீ ஆள்வாயாக. அரசனிருக்கவும், அவ னாணை மறுத்தற் கஞ்சி, யான் அரசாள ஒப்புக்கொண்டதை நீ கருத்தில் இருத்தி, என் ஆணையை மறுக்காமல் ஏற்று இராச்சியத்தை ஆள்வாயாக' என்றான்.

### வசிட்டன் இராமனுக் கிட்ட ஆணை

அப்போது வசிட்டன், பரதனை விலக்கித் தான் இராமனுக்கு எதிர்முகமாகி, அவனை நோக்கித் 'தேகத்தை அளித்த குரவரினும்* ஞானத்தை அளித்த குரவர் சிறந்தவர். ஆதலால் முன்னவ ராணையினும் பின்னவ ராணை பேணற்பாலது; உனக்கு ஞானத் தந்தையாகிய நான் "அரசாள்வாயாக" என்று ஆணை அளிக்கின்றேன். இந்த ஆணை உந்தை† ஆணையிலும் உயர்ந்தது. அதனை அகற்றி இதனை இயற்றுதி' என்றான். இராமன் கும்பிட்டுக் கொண்டு மறுமொழி கூறுவானானான்.

### இராமன் மறுப்பு

சான்றவ ராகதன் குரவ ராகதாய்
போன்றவ ராகமெய்ப் புதல்வ ராகதான்
தேன்றரு மலருளான் சிறுவ செய்வனென்
றேன்றபி னவ்வுரை மறுக்கு மீட்டதோ (143)

கொண்டுகூட்டு: 'தேன்தரு மலர் உளான் சிறுவ! (ஒருவன் தான்) செய்வன் என்று ஏன்ற பின், (அதனை மாற்றச் சொல்வோர்) மெய்ப் புதல்வர் (ஆயினும்) ஆக, சான்றவர் (ஆயினும்) ஆக, தன் குரவர் (ஆயினும்) ஆக, தாய் போன்றவர் (ஆயினும்) ஆக; அவ்வுரை மறுக்கும் ஈட்டதோ?'

பொருள்: 'பிரம புத்திர! ஒருவன் ஒரு காரியத்தைச் செய்வேனென்று வாக்குக் கொடுத்து அதனைச் செய்தற்கு ஒப்புக்கொண்டதாக உரைத்த பின்பு, அந்த உரையை மாற்றும்படி சொல்வோர், அன்பு காரணமாக மறுக்க முடியாத தனது பிள்ளைகள் ஆயினும் ஆக, கீழ்ப்படியும் கடப்பாடு காரணமாக மறுக்கக் கூடாத பெரியோர் ஆயினும் ஆக, அப் பெரியோருள்ளும் தலைசிறந்த தன் குருவே ஆயினும் ஆக, தாய்க்கு ஒப்பாக (அப் பெரியோரினும் குருவினுமே சிறந்து 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்றவாறு தெய்வம் போல) உள்ளவர் ஆயினும் ஆக, அந்த உரை மறுக்கத் தக்கதோ?'

சான்றவர் - பெரியோர். ஆக - ஆகுக - ஆகட்டும். குரவன் - குரு. மெய்ப்புதல்வர் - சற்புத்திரர். (ஸத் - மெய். புத்திரர் - புதல்வர்) சற் புத்திரர்', 'மங்கலமென்ப' என்னுங் குறளில் வரும் 'நன்மக்கள்' என்பதற்குப் பரியாயச் சொல். (ஒருவன்) தான் 'செய்வனென்றேன்றபின்' எனக் கூட்டுக. வசிட்டன் பிரமனது மானச புத்திரருள் ஒருவனாதலால், 'தேன் தரு மலருளான் சிறுவ' என விளிக்கப்பட்டான். சிறுவன்—மகன்.

---

* குரவர் - தாய் தந்தையர் : குரு. †உந்தை - உன் தந்தை.

'மெய்ப்புதல்வர்' என்பதற்கு மாருகப் பொய்ப்புலேயர் என்ற பாடங் கொண்டால், இப்பாட்டுக்கு '(மேலான) சான்ருேர் குரவர் தாய்போன்றவர் (ஆகிய இவர்கள்) பாலாவது, (கீழான) புலேயர்பாலாவது (ஒருவன் தான் ஒரு காரியத்தைச்) "செய்வே" னென்று ஒப்புக்கொண்ட பின் அந்த வார்த்தை மறுக்கப்படுந் தகையதோ?' என்று பொருள் கொள்க.

பாட பேதம்: பொய்ப் புலேயர். (143)

பரதன் இராமன் பாதுகைகளைப் பெறல்

'என் தாய் தந்தையர், முன்பு கட்டளை யிட்டார்; நீ பின்பு கட்டளையிட்டாய்; அவ்இரண்டு கட்டளைகளுள்ளே, முந்தியதோ, பிந்தியதோ, எது, யான் செய்யக்கடவ தென, நீயே இயம்புவா யாக' என்ருன். வசிட்டன் மறுமொழி வழங்க மாட்டாஞய், வாளா மௌனமா யிருந்தான். அப்போது, இராமன், மீளவும் பரதனை நோக்கி, 'யான் உன்னை யாசிக்கின்றேன், என் ஆணைப் படி இராச்சியத்தை ஆள்வாயாக' என்று பரதன் கையைப் பற்றிக் கொண்டு பரிந்து வேண்டினுன். அவன், 'நீ பதினுன் காண்டு கழிந்த உடன் பாராள வாராயானுல், யான் எரிபுகுந் திறப்பேன் இது சத்தியம். உன்மீ தாணையிட்டு உரைக்கின்றேன்' என்ருன். இராமன், 'அப்படியே ஆக' என்ருன். பரதன், 'நின் திருவடி நிலேகளை அருளுக' என, இராமன் ஈந்தான்.

இராம பாதுகை அரசாளப் பரதன் தவமாளல்

பரதன், அவைகளைப் பெற்றுக் கிரீடமாகச் சூடி, வணங்கி விடைபெற்று, வசிட்டனும் தாயரும் மன்னரும் மந்திரியரும் முதலிய தன்னுடன் வந்தார் சகலரும் கூட வர, அயோத்திக்குத் திரும்பினுன். பரத்துவாசனும் அவனுடன் வந்த முனிவ ரனைவ ரொடும் தன் ஆச்சிரமத்துக்குச் சென்ருன். இராமன் விடை கொடுக்க, குகனும் தன்னூர்க்குப் போனுன்.

பரதன், அயோத்தி நகரத்துக்குள்ளே செல்லாமல், வெளியே உள்ள நந்திக் கிராமத்திலே வதிவானுய், இராமனது திருவடி நிலேகளே அரசு புரிவனவாகச் சிந்தையிற் கொண்டு, அரசாள் வானுகி, ஐம்பொறிகளை அடக்கி, இரவும் பகலும் இராமனை நினைந்து வருந்தி, இடையருது கண்ணீர் சொரிந்து, அவன் வரவை எதிர்பார்த்திருந்தான்.

அயோத்தியா காண்டம் முற்றுப்பெற்றது.

காண்டம் இரண்டுக்கு விருத்தம் 341.






# பாட்டு முதற்குறிப்பகராதி

[எண்—பக்கவெண்]

இராவ் சாகிப்

தமிழ்ப் பெருங்கவி முது பெரும் புலவர்

## வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள், G.B.V.C.

## இயற்றிய நூல்கள்

---

### I. ஆசிரியர் பதிப்பு

| | | | ரூ. | அ. | பை |
|---|---|---|---|---|---|
| 1. | சுவர்க்க நீக்கம் முதற்காண்டம் | ... | 0 | 12 | 0 |
| 2. | இந்து தேசத்துக் கால்நடைக்காரர் புஸ்தகம் | ... | (அச்சில்) | | |
| 3. | இந்தியாவில் கால்நடைகளுக்குக் காணுகிற அதிக பிராணாபாயமான வியாதிகளைப் பற்றிய புஸ்தகம் | ... | (அச்சில்) | | |
| 4. | கால்நடைகளுக்கு வியாதி வராமல் அம்மை குத்தலும் அதன் உபயோகங்களும் | ... | 0 | 1 | 0 |
| 5. | கல்வி விளக்கம் | ... | 1 | 0 | 0 |
| 6. | ஜான் மில்டனூர் சரித்திரம் | ... | 0 | 4 | 0 |

### II. சை. சி. நூ. ப. க. பதிப்பு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 7. | கோம்பி விருத்தம் 2-ம் பதிப்பு | ... | 0 | 8 | 0 |
| 8. | நெல்லைச் சிலேடை வெண்பா 2-ம் பதிப்பு | ... | 0 | 6 | 0 |
| 9. | இராமாயண உள்ளுறை பொருளும் தென்னிந்திய சாதி வரலாறும் 2-ம் பதிப்பு | ... | 0 | 8 | 0 |

### III. கு. அருணாசலக் கவுண்டர் பதிப்பு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 10. | சருவசன செபம் | ... | 0 | 1 | 0 |
| 11. | அகலிகை வெண்பா 2-ம் பதிப்பு | ... | 2 | 8 | 0 |
| 12. | தனிக்கவித் திரட்டு உரையுடன் | ... | 2 | 8 | 0 |
| 13. | கம்பராமாயண சாரம் | | | | |
| | 1. பாலகாண்டம் 2-ம் பதிப்பு | ... | 3 | 0 | 0 |
| | 2. அயோத்தியா காண்டம் 6-ம் பதிப்பு | ... | 3 | 0 | 0 |
| | 3. ஆரணிய காண்டம் 2-ம் பதிப்பு | ... | 3 | 0 | 0 |
| | 4. கிட்கிந்தா காண்டம் 2-ம் பதிப்பு | ... | 3 | 0 | 0 |
| | 5. சுந்தர காண்டம் 2-ம் பதிப்பு | ... | 3 | 0 | 0 |
| | 6. யுத்த காண்டம் முதற் பதிப்பு | ... | 7 | 0 | 0 |

---